உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



சேக்கிழார்சுவாமிகளருளிச்செய்த

திருத்தொண்டர்புராணமென்னும்

# பெரியபுராணம்

இரண்டாவதுகாண்டம்

இரண்டாம்பாகம்மூலமும்,

திருக்கைலாயபரம்பரைத் திருவண்ணாமலையாதீனம்

**ஸ்ரீமத் ஆறுமுகத்தம்பிரான்சுவாமிகள்**

ஏயர்கோன் கலிக்காமநாயனார் புராணத்தின்

௨௩௪ வது செய்யுள் வரையும்

இயற்றியபதவுரையும்.



திருக்கைலாய பரம்பரை - பொம்மபுரம்

ஸ்ரீ சிவஞான பாலையதேசிகசுவாமிக ளாதீனம்

சிதம்பரம்

**ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள்**

ஏயர்கோன் - கலிக்காம நாயனார் புராணம்

௨௩௫ வது செய்யுள் தொடங்கி

வெள்ளானைச்சருக்கம் வரையும் இயற்றிய

பதவுரையும்.

பையூர்க்கோட்டம்

பெருவாயல்

சுந்தரமுதலியாரவர்கள் குமாரர்

கிருஷ்ணசுவாமிமுதலியாரவர்களால்

சென்னை

ஸ்ரீநிகேதன அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

கலியுகாப்தம் - ௫௦௦௦ - க்கு விளம்பி௵

1898௵.

# அறிவிப்பு

. பெரியபுராணம் முதற்காண்டம் பாயிரந்தொடங்கிச் சண்டேசுரநா
ர் புராணம் வரையில் கக-நாயன்மார்புராணமும் சந்தானாசாரியரி
ருவராகிய கொற்றவன்குடி-உமாபதிசிவாசாரியாரருளிய சேக்கிழார்
மிகள் புராணமும் திருமுறைகண்டபுராணமும் நம்பியாண்டார்நம்பி
வந்தாதியும் (கூச) படஞ்சேர்த்துக் கட்டடஞ்செய்த காபி க-க்குவிலை
ா-சு, அணா-ச கட்டடமில்லாத காபி க-க்கு ரூபா - ரு, அணா-அ,
டமும் படமுமில்லாத காபி க-க்கு ரூபா-ச, அணா-அ.

2. ஷைபுராணம் முதற்காண்டம் இரண்டாம்பாகம் திருநாவுக்கரசுசுவா
ன் புராணமுதல் நமிநந்தியடிகள்புராணம் வரையில் எ - நாயன்மார்புரா
முமும் காரைக்காலம்மையார் அற்புதத்திருவந்தாதி உரையும் கூசு-படஞ்
ர்த்துக் கட்டடஞ்செய்த காபி க - க்கு விலை ரூபா - ங, கட்டட
ல்லாத காபி க - க்கு ரூபா - உ, அணா - கஉ, படமும் பயிண்டு
ில்லாத காபி க-க்கு ரூபா உ.

3. ஷைபுராணத்தில் இரண்டாவதுகாண்டம் முதற்பாகம் திருஞானசம்
பந்த சுவாமிகள் புராணம் படத்துடன் கட்டடஞ்செய்த காபி க-க்கு விலை
ரூபா-சு, அணா-அ, கட்டடமில்லாத காபி க-க்கு ரூபா-ரு, அணா-அ,
படமும் கட்டடமுமில்லாத காபி க-க்கு ரூபா-ச, அணா-அ.

4. ஷை புராணத்தில் இரண்டாங்காண்டம் இரண்டாம்பாகம் சச - நாய
ன்மார் புராணமும் கூச-படமுஞ் சேர்த்துக் கட்டடஞ் செய்த காபி க-
க்கு விலை ரூபா - ரு, அணா-அ, கட்டடமில்லாத காபிக-க்கு ரூபா ச-
அணா-உ, படமும் கட்டடமுமில்லாத காபி க-க்குவிலை ரூபா-ங- அணா-உ.

5. விவாக விதிவிளக்கவினாவிடை அணா-உ, பை - அ, சேக்கிழார் சுவாமி
கள் புராணம் திருமுறைகண்டபுராணம் பொழிப்புரை காபி க-க்குரூபா
அணா. சைவசமயாசாரியர் நால்வர் திருநக்ஷத்திரத்திலோதவேண்டிய
திருமுறையும் திருக் கயிலாய ஆதி உலா முழுதும். அணா-க பை ச.

6. நவக்கிரஹபடம் வர்ணம் இட்டாதது அணா-உ, சைவசமயாசாரியர் நா
ல்வர்படம் அணா-உ, சந்தானாசாரியர் படம்அணா- க. சப்தக்குரவர் படம்
அணா - க, பட்டணத்துச்சுவாமிகள் ஐக்கியபடம் அணா-க, மாணிக்கவாச
கசுவாமிகள் திருப்பெருந்துறையி லுபதேசபடம் அணா-க.

அச்சிட்டுவருகிற புத்தகங்கள்.—ஸ்ரீமீனாக்ஷியம்மன் பிள்ளைத்தமிழ்
உரை. ஸ்ரீகைலாய ஆதியுலா உரை. பொன்வண்ணத்தந்தாதி உரை.
சைவவிரதாதி.

---

இப்புத்தகங்கள் சென்னை கோமளீச்சுரன்பேட்டை நாகப்பமுதலி
யார் வீதி உஅ- வது கதவிலக்கமுள்ள வீட்டில் விற்கப்படும்.

பெருவாயல் - கிருஷ்ணசாமிமுதலியார்.

திருச்சிற்றம்பலம்.

# புராணஅட்டவணை.

# நான்காவது புத்தகப்படங்களின் அட்டவணை.

| படத்தின் எண். | படங்களின் அம்சங்கள். | பக்கம். |
|---|---|---|
| க | சிவபெருமானைத்தூதுவிட்டதாதெனச் சினந்தகலிக்காமர்க்குச்சூலைவிளைவித்தஃது சுந்தரனால்நீங்குமெனப்பெருமானுரைக்கக்கேட்ட வக்கலிக்காமர் உயிர்துரந்தது. | கஎசு |
| உ | கலிக்காமருயிர்பெற்றுச் சுந்தரரைவணங்க அவரும்பணிந்து நண்புற்றது. ... ... ... | கஎகூ |
| ரு | சுந்தரருக்குக் குண்டையூர்க்கிழாரளித்த நெற்குவையைப் பூதங்கள் பரவைமனைக்கண்சேர்த்தது ... ... | எ |
| ச | திருப்புன்கூர்ப்பெருமான் சுந்தரர்க்குச் செங்கல்லைப்பொன்னுக்கி யளித்தது ... ... ... | கஅ |
| டு | முதுகுன்றவாணரிடத்து - கஉ000 - பொன்பெறற சுந்தரர் அதன்மச்சமெடுத்துக்கொண்டு மணிமுத்தநதியிலிட்டது. ... | சக |
| சு | நம்பியாரூரர் பரவையாரைக்கமலாலயத திருப்படிமீதிருத்திப்பொன்னெடுத்தவர்பாற்சேர்த்தது. ... ... | சுஉ |
| எ | திருக்குருகாவூர்ப்பெருமான் சுந்தரர்க்காகதண்ணீர்ப்பந்தரமைத்துப் பொதிசோறு மளித்தது. ... ... | எஉ |
| அ | திருக்கச்சூர்நாதர் ஆரூர்நம்பிகட் கன்னமளித்தது. ... ... ... ... | அ௯ |
| கூ | அனிந்திதையார் ஞாயிறிலவதரித்துச் சங்கிலியாரென்னுந் திருநாமத்துட னொற்றியூரிற்கன்னிமாடத்திருந்தது. ... | க00 |
| க0 | நம்பியாரூரர் சங்கிலியார் தொண்டைநீக்கித் தமக்கு மணம்புரிவிக்கப்பெருமானிடத்தில் விண்ணப்பித்தது. .. | க0ரு |
| கக | தியாகப்பெருமான் சங்கிலியார்க்கும் சுந்தரர்க்கும் தூதுசென்று திருமணத்தைத் திரப்படுத்தியது. ... ... | கக0 |
| கஉ | திருவொற்றியூர்க்கோயின்மகிழடியிற் சுந்தரர் சங்கிலியார்க்குச் சூளுரைத்தது ... ... ... | ககச |
| கரு | ஆதிபுரியடியார் பெருமானுஞ்ஞைப்படி சுந்தரர்க்கும் சங்கிலியார்க்கும் திருமணம்புரிவித்தது ... ... | ககசு |
| கச | ஆரூரப்பெருமானைத்தரிசிக்க வொற்றியூரையகன்ற சுந்தரர்க்குவிழிமறைய வெண்பாக்கத்திலூன்றுகோல் பெற்றது. | கஉ0 |
| கடு | நம்பியாரூரர் வேண்டுகோட்படி கச்சியேகம்பர் இடக்கண்ணளித்தது. ... ... ... | கஉகூ |
| கசு | வன்றொண்டர் திருவாரூரில் வலக்கண்பெற்றுப் பரவைபிணக்கொழிக்கப் பரமன்பால் விண்ணப்பித்தது ... ... | கசப |
| கஎ | வன்றொண்டர் வேண்டுதலுக்கிசைந்து தியாகப்பெருமான் ஆதிசைவராய் பரவைதிருமாளிகைக்கு முதன்முறை தூது சென்றது. | கடுஉ |
| கஅ | தியாகப்பெருமான் தமது நிலைமையோடு தேவர்களும் முனிவர்களுஞ்சூழப் பரவைபால் மீண்டும் தூதுசென்றது. | கசுடு |
| ககூ | ஆரூரப்பெருமான் பரவைகொண்ட ஊடலைநீக்கச் சுந்தரர் பரவைநாச்சியார் திருமாளிகையிற்சென்றது. | கசுகூ |
| உ0 | திருமூலநாயனுர். ... ... ... ... ... | கஅக |
| உக | தண்டியடிகணாயனுர். ... ... ... ... ... | ககூச |
| உஉ | மூர்க்கநாயனுர். ... ... ... ... ... | உ0டு |
| உரு | சோமாசிமாறநாயனுர். ... ... ... ... ... | உக0 |
| உச | சாக்கியநாயனுர், சிறப்புலிநாயனுர். ... ... ... ... ... | உஉ0 |

## நான்காவது புத்தகப்படங்களின் அட்டவணை.



நான்காவது புத்தகப்படங்களின் அட்டவணைமுற்றிற்று.

# நான்காவது புத்தகத்தேவார அட்டவணை.

| பக்கம். | தலத்தின்நாமம். | பண். | தேவாரமுதலடி. |
|---|---|---|---|
| * எ | திருக்கோளிலி | நட்டராகம் | நீளநினைந்தடியேனுமைநித்தலுங்கைதொழுவேன் |
| கரு | திருநாட்டியத்தான்குடி | தக்கராகம் | பூணாணாவதோரரவங்கண்டஞ்சேன்புறங்காட்டாடல்கண்டிகழேன் |
| கசு | திருவலிவலம் | தக்கேசி | ஊனங்கத்துயிர்ப்பாயுயிர்க்கெல்லாமோங்காரத்துருவாகிநின்றானை |
| * கக | திருப்புகலூர் | கொல்லி | தம்மையேபுகழ்ந்திச்சைபேசினுஞ்சார்வினுந்தொண்டர்தருகிலாப் |
| உக | திருப்பனையூர் | சீகாமரம் | மாடமாளிகைகோபுரத்தொடுமண்டபம்வளரும்வளர்பொழிற் |
| உஉ | திருநன்னிலத்துப்பெருங்கோயி [ல் | பஞ்சமம் | தண்ணியல்வெம்மையினான்றலையிற்கடைதோறும்பலி |
| உரு | திருவீழிமிழலை | சீகாமரம் | விடங்கொண்மாமிடற்றீர்வெள்ளைச்சுருளொன்றிட்டுவிட்டகாதினீரென்று |
| உச | திருவாஞ்சியம் | பியந்தைக்காந்தாரம் | பொருவனார்புரிநூலர்புணர்முலையுமையவளோடு |
| உ௫ | திருநறையூர்ச்சித்தீச்சரம் | கவுசிகம் | நீரும்மலருநிலவுஞ்சடைமே |
| உசு | அரிசிற்கரைப்புத்தூர் | இந்தளம் | மலைக்குமகளஞ்சமதகரியையுரித்தெரித்தீர்வருமுப்புரங்கள் |
| ,, | திருவாவடுதுறை | தக்கேசி | மறையவனொருமாணிவந்தடையவாரமாயவனாருயிர்நிறுத்த |
| உஅ | திருவிடைமருதூர் | தக்கேசி | கழுதைகுங்குமந்தான்சுமந்தெய்த்தாற்கைப்பர்பாழ்புகழுற்றதுபோல |
| ,, | திருநாகேச்சரம் | பஞ்சமம் | பிறையணிவாணுதலாளுமையாளவள்பேழ்கணிக்க |
| உகூ | திருக்கலையநல்லூர் | தக்கராகம் | குருந்தைபமுலைமலர்க்குழல்கொண்டதவங்கண்டுகுறிப்பினொடுசென்றவடன்குணத் [து |
| ௩௦ | சோற்றுத்துறை | கவுசிகம் | அழனீரொழுகியனையசடையு |
| ௩உ | * திருமழபாடி | நட்டராகம் | பொன்னார்மேனியனேபுலித்தோலையரைக்கசைத்து |
| ௩ச | திருவானைக்கா | காந்தாரம் | மறைகளாயினநான்கும்மற்றுளபொருள்களுமெல்லாந் |
| ௩சு | * திருப்பாச்சிலாச்சிராமம் | தக்கராகம் | வைத்தனன்றனக்கேதலையுமெனாவுநெஞ்சமும்வஞ்சமொன்றின்றி |
| ௩௧ | திருப்பைஞ்ஞீலி | கொல்லி | காருலாவியநஞ்சையுண்டிருள்கண்டவெண்டலையோடுகொண் |
| ௪௦ | திருப்பாண்டிக்கொடுமுடி | பழம்பஞ்சுரம் | மற்றுப்பற்றெனக்கின்றிநின்திருப்பாதமேமனம்பாவித்தேன் |
| ௪௩ | திருவெஞ்சமாக்கூடல் | கொல்லிக் கவ்வாணம் | எறிக்குங்கதிர்வேயுதிர்முத்தமோடேலமிலவங்கந்தக்கோலமிஞ்சி |
| ௪ச | திருக்கற்குடி | நட்டராகம் | விடையாருங்கொடியாய்வெறியார்மலர்க்கொன்றையினாய் |
| ௪௫ | திருப்புறம்பயம் | கொல்லி | அங்கமோதியோராறைமேற்றளிநின்றுபோந்துவந்தினனம்பர் |
| ௪எ | திருக்கூடலையாற்றூர் | புறநீர்மை | வடிவுடைமழுவேந்திமதகரியுரிபோர்த்துப் |

# தேவாரஅட்டவணை.

| க்கம். | தலத்தின்நாமம். | பண். | தேவாரமுதலடி. |
|---|---|---|---|
| ௪௮ | திருமுதுகுன்றம் | கொல்லிக் கவ் வாணம் | நஞ்சிடையின்றுநாளையென்றும்மைநச்சுவார் |
| ௪௯ | நம்பியென்றதிருப்பதிகம் | தக்கேசி | மெய்யைமுற்றப்பொடிப்பூசியோர்நம்பிவேதநான்கும்விரித்தோதியோர்நம்பி |
| ௫௨ | கோயில் | வியாளக் குறிஞ் | மடித்தாடுமடிமைக்களன்றியேமனனேநீவாழுநாளுந் |
| ௫௩ | திருக்கருப்பறியலூர் | நட்டராகம் | சிம்மாந்துசிம்புளித்துச்சிந்தையினில்வைத்துகந்துதிறம்பாவண்ணங் |
| ௫௪ | திருப்பழமண்ணிப்படிக்கரை | ,, | முன்னவனெங்கள்பிரான்முதல்காண்பரிதாயபிரான் |
| ௫௫ | திருவாழ்கொளிபுத்தூர் | தக்கே [வாணம் | தலைக்கலன்றலைமேற்றரித்தானைத்தன்னையென்னைநினைக்கத்தருவானை [கோவைப் |
| ௫௬ | திருக்கானாட்டுமுள்ளூர் | கொல்லிக் கவ் | வள்வாயமதிமிளிரும்வளாசடையினானை மறையவனைவாய்மொழியை வானவர்தங் |
| ௫௭ | திருஎதிர்கொள்பாடி | இந்தளம் | மத்தயானையேறிமன்னர்சூழவருவீர்காள் |
| ,, | மூப்பதுமில்லை | நட்டராகம் | மூப்பதுமில்லைபிறப்பதுமில்லையிறப்பதில்லைச் |
| ௬௦ | திருமுதுகுன்றம் | ,, | பொன்செய்தமேனியினீர்புலித்தோலையரைக்கசைத்தீர் |
| ௬௧ | மேற்பதிகத்தைச்சேர்ந்த | தேவாரம் | ஏத்தாதிருந்தறியேனிமையோர்தனிநாயகனே |
| ௬௨ | திவாரூர் | நட்டராகம் | பாறுதாங்கியகாடரோபடுதலையரோமலைப்பாவையோர் |
| ௬௫ | திருநள்ளாறு | தக்கேசி | பூவில்வாசத்தைப்பொன்னினைமணியைப்புவியைக்காற்றினைப்புனலனல்வெளியைச் |
| ,, | திருக்கடவூர்மயானம் | பழம்பஞ்சரம் | மருவார்கொன்றைமதிசூடிமாணிக்கத்தின்மலைபோல |
| ௬௬ | திருக்கடவூர்வீரட்டம் | நட்டராகம் | பொடியார்மேனியனேபுரிநூலொருபால்பொருந்த |
| ௬௭ | திருவலம்புரம் | காந்தாரம் | எனக்கினித்தினைத்தனைப்புகலிடமறிந்தேன் |
| ௬௮ | திருநனிபள்ளி | பஞ்சமம் | ஆதியனாதிரையன்னயன்மாலறிசற்கரிய |
| ௬௯ | திருநின்றியூர் | தக்கேசி | அணிகொளாடையம்பூணணிமாலையமுதுசெய்தமுதம்பெறுதண்டி |
| ,, | திருநீடூர் | ,, | ஊர்வதோர்விடையொன்றுடையானையொண்ணுதற்றனிக்கண்ணுதலானை |
| ௭௦ | திருக்கோலக்கா | ,, | நாளுமின்னிசையாற்றமிழ்பரப்புஞானசம்பந்தனுக்குலகவர்முன் |
| ௭௩ | திருக்குருகாவூர் [நாவலூரும் | நட்டராகம் | இத்தனையாமாற்றமறிந்திலேனெம்பெருமான் |
| ௭௬ | திருவெண்ணெய்நல்லூரும் திரு | ,, | கோவலநான்முகன்வானவர்கோனுங்குற்றேவல்செய்ய |
| ௭௭ | திருக்கழுக்குன்றம் | நட்டபாடை | கொன்றுசெய்தகொடுமையாற்பலசொல்லவே |
| ௮௦ | திருக்கச்சூராலக்கோயில் | கொல்லிக் கவ் வாணம் | முதுவாயோரிகதறமுதுகாட்டெரிகொண்டாடன்முயல்வானே |

| | | | |
|---|---|---|---|
| ௮௪ | திருமேற்றளி | நட்டராகம் | நூந்தாவொண்சுடரே நுனையேநினைந்திருந்தேன் |
| ,, | திருவோணகாந்தன்றளி | இந்தளம் | நெய்யும்பாலுந்தயிருங்கொண்டுநித்தல்பூசனைசெய்யலுற்றால் |
| ௮௫ | திருக்கச்சியநேகதங்காபதம் | இந்தளம் | தேனெய்புரிந்துழல்செஞ்சடையெம்பெருமானதிடந்திகழைங்கணையக் |
| ௮௬ | திருவன்பார்த்தான் பனங்காட்டூர் | சீகாமரம் | விடையின்மேல்வருவானைவேதத்தின்பொருளானை |
| ௯௦ | திருக்காளத்தி | நட்டராகம் | செண்டாடும்விடையாய்சிவனேயென்செழுஞ்சுடரே |
| ,, | திருப்பருப்பதம் | நட்டபாடை | மானும்மனையினமும்மயிலினமுங்கலந்தெங்குந் |
| ௯௧ | திருக்கேதாரம் | ,, | வாழ்வாவதுமாயம்மிதுமண்ணாவதுதிண்ணம் |
| ௯௩ | திருவொற்றியூர் | குறிஞ்சி | பாட்டும்பாடிப்பரவித்திரிவா |
| ௧௨௦ | திருவாரூர் | பழம்பஞ்சுரம் | பத்திமையுமடிமையையுங்கைவிடுவான்பாவியேன் |
| ௧௨௧ | * திருவொற்றியூர் | தக்கேசி | அழுக்குமெய்கொடுன்றிருவடியடைந்தேனதுவுநான்படப்பாலதொன்றானால் |
| ௧௨௩ | திருமுல்லைவாயில் | ,, | திருவுமெய்ப்பொருளுஞ்செல்வமுமெனக்குன்சீருடைக்கழல்களென்றெண்ணி |
| ௧௨௫ | திருவெண்பாக்கம் | சீகாமரம் | பிழையுளனபொறுத்திடுவீரென்றடியேன்பிழைத்தக்காற் |
| ௧௨௭ | திருவாலங்காடு | பழம்பஞ்சுரம் | முத்தாமுத்திதரவல்லமுகிழ்மென்முலையாளுமைபங்கா |
| ௧௨௯ | திருவேகம்பம் | தக்கேசி | ஆலந்தானுகந்தமுதுசெய்தானையாதியையமராதொழுதேத்துஞ் |
| ௧௩௧ | திருவாரூர் | புறநீர்மை | அந்தியுநண்பகலுமஞ்சபதஞ்சொல்லி |
| ௧௩௨ | திருநெல்வாயில் அரத்துறை | இந்தளம் | கல்வாயகிலுங்கதிர்மாமணியுங்கலந்துந்திவருந்நிவவின்கரைமே |
| ௧௩௩ | திருவாவடுதுறை [குடியும் | தக்கேசி | கங்கைவாழ்சடையாய்கணநாதாகாலகாலனேகாமனுக்கனலே |
| ௧௩௫ | திருத்துருத்தியும் திருவேள்விக் | காந்தாரம் | மின்னுமாமேகங்கள்பொழிந்திழிந்தருவிவெடில்படக்கரையோடுதிரைகொணர்ந்தெ [ற்று |
| ௧௩௬ | திவாரூர்-பரவையுண் மண்டளி | பஞ்சமம் | தூவாயாதொண்டுசெய்வார்படுதுக்கங்கள் |
| ௧௩௭ | திருவாரூர் | கொல்லி | குருகுபாயக்கொழுங்கரு புகணெரிந்தசா |
| ௧௪௦ | ஷை ,, | செந்துருத்தி | மீளாவடிமையுமக்கேயா ளாய்ப்பிறரைவேண்டாதே |
| ௧௮௦ | திருப்புன்கூர் | தக்கேசி | அந்தணாளனுன்னடைக்கலம்புகுதவவனைக்காப்பதுகாரணமாக |
| ௧௯௩ | திருமந்திரமாலை | கலிவிருத்தம் | ஒன்றவன்றானேயிரண்டவனின்னரு |
| ௨௬௯ | திருமுகப்பாசுரம் | அகவல் | மதிமலிபுரிசைமாடக்கூடற் |
| ௨௮௦ | ஸ்ரீசிதம்பரம்-பொன்வண்ண | கலித்துறை | பொன்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமேனிபொலிந்திலங்கு |
| ௨௮௩ | திருநாகைக்காரோணம் | கொல்லிக் கவ்வாணம் | பத்தூர்புக்கிரந்துண்டுபலபதிகம்பாடிப்பாவையைாக்கிறிபேசிப்படிறாடித்திரிவீர் |
| ௨௯௨ | திருமறைக்காடு | காந்தாரம் | யாழைப்பழித்தன்னமொழிமங்கைமொருபங்கன் |
| ௨௯௩ | திருக்கோடிக்குழகர் | கொல்லி | கடிதாய்க்கடற்காற்றுவந்தேற்றக்கரைமேற் |
| ௨௯௬ | திருப்பூவணம் | இந்தளம் | திருவுடையார்திருமாலயனாலு [லைச்சில்லை |
| ௨௯௮ | கோத்திட்டையும்-கோவலும் | ,, | கோத்திட்டையுங்கோவலுகோயில்கொண்டீருமைக்கொண்டுழல்கின்றதோர்கோல் |
| ௩௦௦ | திருக்கேதீச்சுரம் | நட்டபாடை | நத்தார்படைஞானன்பசுவேறிநனைகவிழ்வாய் |

# தேவார அட்டவணை.



## தேவார அட்டவணை முற்றிற்று.

* இக்குறிதேவாரமுழுதும் அச்சிட்டிருக்கிறது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஏயர்கோன்கலிக்காமநாயனார்புராணம்.

உலகெலாமுணர்ந்தோதற்கரியவ
னிலவுலாவியநீர்மலிவேணிய
னலகில்சோதியனம்பலத்தாடுவான்
மலர்சிலம்படிவாழ்த்திவணங்குவாம்.

நீடு வண்புகழ்ச் சோழர்நீர் நாட்டிடை நிலவு
மாடு பொன்பொழி காவிரி வடகரைக் கீழ்பா
லாடு பூங்கொடி மாடநீ டியவணி நகர்தான்
பீடு தங்கிய திருப்பெரு மங்கலப் பெயர்த்தால்.

(இ-ள்) நீடுவண்புகழ்ச்சோழர்நீர்நாட்டிடைநிலவும் = மிக்கவளவிய புகழையுடைய சோழர்களது அரசுரிமைக்குரிய காவிரிநாட்டில்விளங்குகின்ற; மாடுபொன்பொழிகாவிரிவடகரைக்கீழ்பால் = கரையில் பொன்னை அலையாற்சொரிகின்ற அக்காவிரிவடகரையின் கிழக்குத்திக்கில்; ஆடுபூங்கொடிமாடநீடியவணிநகர் = அசைகின்றபொலிவினையுடைய கொடியாடைகள்கட்டிய மாடங்களுயர்ந்த அழகிய நகரமானது எப்பெயருடைத்தெனில்; பீடுதங்கியதிருப்பெருமங்கலப்பெயர்த்து = பெருமைபொருந்தியதிருப்பெருமங்கலமென்னும் பெயரையுடையது.—எ-று. தான்-ஆல்-அசை. (க)

இஞ்சி சூழ்வன வெந்திரப் பந்திசூழ் ஞாயின்
மஞ்சு சூழ்வன வரையென வுயர்மணி மாட
நஞ்சு சூழ்வன நயனியர் நளினமெல் லடிசெம்
பஞ்சு சூழ்வன காளையர் குஞ்சியின் பரப்பு.

(இ-ள்.) எந்திரப்பந்திசூழ்ஞாயிலிஞ்சிசூழ்வன = பொறிகளின் வரிசைசூழ்ந்தமதிலுறுப்புகள் மதிலைச்சூழ்ந்திருக்கின்றன; வரையெனவுயர்மணிமாடமஞ்சுசூழ்வன = மலையென்றுசொல்லும்படி உயர்ந்த அழகிய மாடங்களில் மேகங்கள் சூழ்ந்திருக்கின்றன; நஞ்சுசூழ்வனநயனியர்நளினமெல்லடிசெம்பஞ்சு = விடம் சூழ்ந்திருக்கின்ற விழிகளை யுடைய மகளிர்களது தாமரைமலர்போலும் மிருதுவாகிய பாதமும் அதிலூட்டிய செம்பஞ்சும்; காளையர்குஞ்சியின்பரப்புசூழ்வன = காளைப்பருவமுடைய ஆடவர்களது குடுமிகளில் சூழ்ந்திருக்கின்றன.—எ-று.

ஊடியமகளிரைக்காளையர் வணங்குங்கால் அவர் உதைத்தலின் அவர்காலும் அதிலூட்டிய பஞ்சும் அக்காளையர் குஞ்சியில் பதிதலால் மெல்லடிசெம்பஞ்சு சூழ்வன என்றார். மெல்லடிசெம்பஞ்சென்னும் உம்மைத்தொகை அல்வழிக்கணியல்பாயின. (உ)

விழவ றாதன விளங்கொளி மணிநெடு வீதி
முழவ றாதன மொய்குழ லியர்நட வரங்க
மழவ றாதன மங்கலம் பொலிமணி முன்றி
லுழவ றாதநல் வளத்தன வோங்கிருங் குடிகள்.

(இ-ள்.) விளங்கொளிமணிநெடுவீதிவிழவறாதன=விளக்கமான ஒளிவீசுகின்ற மணிமாலைகள்தூக்கிய நீண்டதிருவீதிகள் திருவிழாவைநீங்காதிருந்தன; மொய்குழலியர் நடவரங்கமுழவறாதன=மொய்த்தகேசபாரத்தையுடைய நாடகக்கணிகையர் நடஞ்செய்கின்ற சாலைகள் முழவொலியை நீங்காதிருந்தன;மங்கலம்பொலிமணிமுன்றில்மழவறாதன=மங்கலஞ்சிறந்த அழகியமுற்றங்கள் சிறாரைநீங்காதிருந்தன; ஓங்கிருங்குடிகளுழவறாதநல்வளத்தன=ஒழுக்கத்தாலுயர்ந்த மிக்ககுடிகள் உழவுதொழிலாலாகிய நீங்காத நல்லவளத்தையுடையன.—எ-று.

சதிக்கேற்ப அடிப்பதாதலின் ஈண்டுமுழவென்றது மத்தளியை. மழவு-ஆகுபெயர். மங்கலம்=ஆடல்பாடல் முதலியசிறப்பு. (௩)

நீரி னிற்பொலி சடைமுடி நெற்றிநாட் டத்துக்
காரி னிற்றிகழ் கண்டர்தங் காதலோர் குழுமிப்
பாரின் மிக்கதோர் பெருமையாற் பரமர்தாள் பரவுஞ்
சீரின் மிக்கது சிவபுரி யெனத்தகுஞ் சிறப்பால்.

(இ-ள்.) நீரினிற்பொலிசடைமுடி=கங்கைநீராற் பொலிவடைந்த சடைமுடியையும்; நெற்றிநாட்டத்துக்காரினிற்றிகழ்கண்டர்தங்காதலோர்குழுமி=நெற்றிக்கண்ணையும் மேகம்போலுங் கரிய கண்டத்தையுமுடைய சிவபிரானடியார்கள் நெருங்கி; பாரின்மிக்கதோர்பெருமையால்=நிலவுலகத்திற் சிறந்த பெருமையினால்; பரமர்தாள்பரவுஞ்சீரின்மிக்கது=அவர் திருவடிகளை வணங்குஞ் சிறப்பாலோங்கியது; சிவபுரியெனத்தகுஞ்சிறப்பால்=அது சிறப்பினாற் சிவபுரியென்று சொல்லுதற்குரியது.—எ-று. (௪)

இன்ன வாழ்பதி யதனிடை யேயர்கோக் குடிதான்
மன்னி நீடிய வளவர்சே னாபதிக் குடியாந்
தொன்மை மேவிய நிகழ்ச்சியா னிறைவது தூய
பொன்னி நாட்டுவே ளாண்மையி லுயர்ந்தபொற் பினதால்.

(இ-ள்.) இன்னவாழ்பதியதனிடை=இத்தன்மையாகிய சிறப்பையுடைய அத்திருப்பெருமங்கலத்தில்; ஏயர்கோக்குடி=ஏயர்களது தலைமைக்குடியானது; மன்னி நீடியவளவர்சேனாபதிக்குடியாம்=புகழால் நிலைபெற்றுயர்ந்த சோழர்களது சேனாபதியாதற்குரிய குடியென்னும்; தொன்மைமேவியநிகழ்ச்சியானிறைவது=பழமையுடைய வழக்கினாற்பொலிவது; தூயபொன்னிநாட்டுவேளாண்மையிலுயர்ந்தபொற்பினது = தூய்மைதங்கிய சோழநாட்டின்கண் வேளாண்மைத்தொழிலில் சிறந்த பொலிவுடையது.—எ-று. தான்-ஆல்-அசை.

கோக்குடி என்றதற்குத்தலைமைக்குடி என்றபொருள் "செற்றுத்தவிர்கலிக்காமன்குடியேயர் சீர்க்குடியே" என்னும் நம்பியாண்டார்நம்பிதிருவந்தாதியாற்காண்க. (௫)

அங்கண் மிக்கவக் குடியினி லவதரித் துள்ளார்
கங்கை வாழ்முடி யார்தொண்டர் கலிக்காம ரென்பார்

தங்க ளுயக ரடிபணி வாரடிச் சார்ந்து
பொங்கு காதலி னவர்பணி போற்றுதல் புரிந்தார்.

(இ-ள்.) அங்கண்மிக்க வக்குடியினில்=அத் திருப்பெருமங்கலத்தி லுயர்ந்த அவ்வேயர்குடியில்; அவதரித்துள்ளார்=அவதாரஞ்செய்தவரும்; கங்கைவாழ்முடியார் தொண்டர்=கங்கைநதியானது வாழ்கின்ற சடைமுடியையுடைய சிவபிரானடியருமாகிய; கலிக்காமரென்பார்=கலிக்காமநாயனாரென்பவர்; தங்களுயகரடிபணிவாரடிச்சார்ந்து=தங்கள்முதல்வராகிய சிவபிரான்திருவடிகளைவணங்கும் அடியார்களது திருவடியைச்சேர்ந்து; பொங்குகாதலினவர்பணிபோற்றுதல்புரிந்தார்=மிக்கபேரன்பினால் அவ்வடியார் கட்டளையிடும்பணிவிடைகளைப் பேணியொழுகினார்.—எ-று.

அவர்பணிபோற்றுதல்புரிந்தார் என்றதனால் இவர்சங்கமவழிபாடுசெய்யு மியல்புடையரென்று குறிப்பித்துநின்றது காண்க. (௬)

புதிய நாண்மதிச் சடைமுடி யார்திருப் புன்கூர்க்
கதிக மாயின திருப்பணி யனேகமுஞ் செய்து
நிதிய மாவன நீறுநந் தார்கழ லென்று
துதியி னாற்பர வித்தொழு தின்புறு கின்றார்.

(இ-ள்.) புதியநாண்மதிச்சடைமுடியார் திருப்புன்கூர்க்கு=அவர் புதிதாகிய இளம்பிறைமுடித்த சடைமுடியையுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும் திருப்புன்கூரென்னும்திருப்பதிக்கு; அதிகமாயினதிருப்பணியனேகமுஞ்செய்து=மேலான அனேகந்திருப்பணிகளையுஞ்செய்து; நிதியமாவனநீறுநந்தார்கழலென்று=நமக்குச்செல்வமாவன திருவெண்ணீற்றையணிந்த சிவபிரான் திருவடிகளேயென்று; துதியினாற்பரவித்தொழுதின்புறுகின்றார்=தோத்திரங்களினாற்றுதித்து வணங்கி இன்பமடைகின்றார். ()

நாவ லூர்மன்னர் நாதனைத் தூதுவிட் டதனுக்
கியாவ ரிச்செயல் புரிந்தன ரென்றவ ரிழிப்பத்
தேவர் தம்பிரா னவர்திறந் திருத்திய வதற்கு
மேவ வந்தவச் செயலினை விளம்புவா னுற்றேன்.

(இ-ள்.) நாவலூர்மன்னர்நாதனைத்தூதுவிட்டதனுக்கு=திருநாவலூரில் அவதரித்தமுதல்வராகிய நம்பியாரூரர் சிவபிரானைத்தூதனுப்பியதற்கு; யாவரிச்செயல்புரிந்தன ரென்றவரிழிப்ப=எவர் இச்செய்கையைச் செய்தனரென்று நம்பியாரூரரைக் குறைவாகக்கூற; தேவர்தம்பிரானவர்திறந்திருத்திய=தேவர்க்கு முதல்வராகிய சிவபிரான் அவர் கொள்கையைத் திருத்தும்படி; அதற்குமேவவந்தவச்செயலினை=அதற்கிசைய வந்த அச்சரிதத்தை; விளம்புவானுற்றேன்=சொல்லத்தொடங்கினேன்.—எ-று. (௮)

வேறு.

திருத்தொண்டத் தொகையருளித் திருநாவ லூராளி
கருத்தொன்று காதலினாற் கனகமதிற் றிருவாரூ
ரொருத்தர்கழன் முப்பொழுது முருகியவன் பொடுபணிந்து
பெருத்தெழுமெய் யன்பினாற் பிரியாதங் குறைபுநாள்.

(இ-ள்) திருத்தொண்டத்தொகையருளி=திருத்தொண்டத்தொகையை அருளிச்செய்து; திருநாவலூராளி=நம்பியாரூரர்; கருத்தொன்றுகாதலினால்=தம்திருவுளத்துதித்தபேரன்பினால்; கனகமதிற்றிருவாரூரொருத்தர்கழல்=பொன்மதில்

திருவாரூரின்கண் வீற்றிருந்தருளும் புற்றிடங்கொண்டார் திருவடிகளை; முப்பொழுது முருகியவன்பொடுபணிந்து = மூன்றுகாலமும் மனமுருகுதற் கேதுவான அன்போ டுவணங்கி; பெருத்தெழுமெய்யன்பினால்= மிக்கெழுகின்ற பேரன்பினால்; பிரியாதுங் குறையுநாள்=நீங்காமல் அத்திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் நாளில்,—எ-று. (௯)

தாளாண்மை யுழவுதொழிற் றன்மைவளந் தலைசிறந்த
வேளாளர் குண்டையூர்க் கிழவரொரு மேதக்கோர்
வாளார்வெண் மதியணிந்தார் மறையவனாய் வழக்கினில்வென்
றாளாகக் கொண்டவர்தா ளடைந்தன்பா லொழுகுவார்.

(இ-ள்.) தாளாண்மையுழவுதொழிற்றன்மை=முயற்சியோடுகூடிய உழவுத்தொ ழிலால் வாய்த்த; வளந்தலைசிறந்தவேளாளர்=வளம்மேம்பட்டவேளாளர்மரபினராகிய; குண்டையூர்க்கிழவரொருமேதக்கோர் = குண்டையூர்க்கிழாரொன்னும் சிறப்புடையவர்; வாளார்வெண்மதியணிந்தார்=ஒளிதங்கியவெள்ளிய இளம்பிறையை யணிந்த சிவபிரா ன்; மறையவனாய்வழக்கினில்வென்று=மறையவர்வேடங்கொண்டு வழக்கால்வென்று; ஆளாகக்கொண்டவர்தாளடைந்து=தடுத்தாட்கொண்ட நம்பியாரூரர் திருவடிகளை ய டைந்து; அன்பாலொழுகுவார்=அன்போடொழுகிவருவாராயினர்.—எ-று. (௧௦)

செந்நெல்லும் பொன்னன்ன செழும்பருப்புந் தீங்கரும்பி
னின்னல்ல வமுதுமுத லெண்ணில்பெரும் பலவளங்கண்
மன்னியசீர் வன்றொண்டர்க் கமுதாக வழுவாமற்
பன்னெடுநாள் பரவையார் மாளிகைக்குப் படிசமைத்தார்.

(இ-ள்.) செந்நெல்லும்பொன்னன்னசெழும்பருப்பும்=சம்பாநெல்லும் பொன் னிறமுடைய வளர்தங்கியபருப்பும்; தீங்கரும்பினின்னல்லவமுதுமுதல்=தித்திப்பான இனியகரும்பினது நல்லபாகுமுதலாக; எண்ணில்பெரும்பலவளங்கள் = அளவுபடாத பெரியபலவளங்களை; மன்னியசீர்வன்றொண்டர்க்கமுதாக = நிலைபெற்ற மிகு புகழு டைய நம்பியாரூரருக்குத் திருவமுதாகும்படி; வழுவாமற்பன்னெடுநாள் = தவறாமல் அனேகநாளாக; பரவையார்மாளிகைக்குப்படிசமைத்தார்=பரவைநாச்சியார் திருமா ளிகைக்குப் படித்தரம்கொடுத்துவந்தார்.—எ று. (௧௧)

ஆனசெய லன்பின்வரு மார்வத்தான் மகிழ்ந்தாற்ற
வானமுறை வழங்காமல் மாநிலத்து வளஞ்சுருங்கப்
போனகநெற் படிநிரம்ப வெடுப்பதற்குப் போதாமை
மானமழி கொள்கையினால் மனமயங்கி வருந்துவார்.

(இ-ள்.) ஆனசெயல்=அவ்வாறான பணிவிடையை; அன்பின்வருமார்வத்தால் =அன்புகாரணமாகவுதிக்கும் பெருவிருப்பால்; மகிழ்ந்தாற்ற=மனமகிழ்ந்து செய்ய; வானமுறைவழங்காமல்=மேகமானது மழைத்துளிகளைப்பெய்யாமல், மாநிலத்துவளஞ் சுருங்க=பெரியநிலவுலகின்கண் வளப்பங்குறைந்துவர; போனகநெற்படி=திருவமு திற்குரிய நென்முதலிய படித்தரங்களை; நிரம்பவெடுப்பதற்குப்போதாமை=குறைவி ன்றியெடுத்தற்கு வருவாய்க்குறைவுகாரணமாய்; மனமயங்கிவருந்துவார்=தம் உள்ளம் தடுங்கி அதனால்வருந்துவாராயினர்.—எ-று. (௧௨)

யது.

வன்றொண்டர் திருவாரூர் மாளிகைக்கு நெல்லெடுக்க
ன்றுடியே இன்றுகுறை யாகின்ற தென்செய்கே னெனநினைந்து

துன்றுபெருங் கவலையினாற் றுயரெய்தி யுண்ணாதே
யன்றிரவு துயில்கொள்ள வங்கணர்வந் தருள்புரிவார்.

(இ-ள்.) வன்றொண்டர்=நம்பியாரூரரது; திருவாரூர்மாளிகைக்குநெல்லெடுக்க=திருவாரூர்த்திருமாளிகைக்கு நெற்படியெடுக்க; இன்றுகுறையாகின்றது=இன்றைக்குக் குறைநேர்ந்தது; என்செய்கேனெனநினைந்து=இதற்குயான் என்செய்வேனென்று கருதிக்கொண்டு; துன்றுபெருங்கவலையினாற்றுயரெய்தி=அதனால்வரும் மிக்க ஆகுலத்தினால் துன்புற்று; உண்ணாதேயன்றிரவுதுயில்கொள்ள=உணவொழிந்து அந்நாளிரவில் உறங்க; அங்கணர்வந் தருள்புரிவார்=சிவபிரான் கனவின்கண் வந்து அருளிச்செய்வார் —எ-று. (கங)

ஆரூரன் றனக்குன்பா னெற்றந்தோ மென்றருளி
நீரூருஞ் சடைமுடியார் நிதிக்கோமான் றனையேவப்
பேரூர்மற் றதனெல்லை யடங்கவுநென் மலைநிறைந்து
காரூரு நெடுவிசும்புங் கரக்கநிறைந் தோங்கியதால்.

(இ-ள்.) ஆரூரன்றனக்கு=நம்பியாரூரன்பொருட்டு; உன்பானெற்றந்தோமென்றருளி=உன்னிடத்து நெல்லைக்கொடுத்தோமென் றருளிச்செய்து; நீரூருஞ்சடைமுடியார்=கங்கைநீர்பெருக்கெடுக்கும் சடைமுடியையுடையசிவபிரான்; நிதிக்கோமான்றனையேவ=குபேரனைநெற்கொடுக்கும்படி ஏவ அவனால்; பேரூர்மற்றதனெல்லையடங்கவும்=பெரிய ஊராகிய அக்குண்டையூரினெல்லைமுழுதும்; நென்மலைநிறைந்து=நென்மலையான துநிறையும்படி; காரூருநெடுவிசும்புங்கரக்க=மேகங்கள் சஞ்சரிக்கின்ற நெடிய வானமும்மறைய; நிறைந்தோங்கியது=உயர்ந்தோங்கியது.—எ-று.

விசும்பும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பு. (கச)

அவ்விரவு புலர்காலை யுணர்ந்தெழுவா ரதுகண்டே
யெவ்வுலகி னென்மலைதா னிதுவென்றே யதிசயித்துச்
செவ்வியபொன் மலைவளைத்தார் திருவருளின் செயல்போற்றிக்
கொவ்வைவாய்ப் பரவையார் கொழுநனையே தொழுதெழுவார்.

(இ-ள்.) அவ்விரவுபுலர்காலையுணர்ந்தெழுவார்=அன்றிரவு விடியுங்கால் துயில் நீத்தெழுகின்ற அக்குண்டையூர்க்கிழார்; அதுகண்டு=அந்நென்மலையைநோக்கி; எவ்வுலகினென்மலையிதுவென்று=எவ்வுலகின்கணுள்ள நென்மலையிதுவென்று; அதிசயித்து=வியப்புற்று; செவ்வியபொன்மலைவளைத்தார்=சிறப்புற்றமேருமலையை வில்லாகவளைத்த சிவபிரானது; திருவருளின்செயல்போற்றி = திருவருளின் வல்லபத்தைத் துதித்து; கொவ்வைவாய்ப்பரவையார்கொழுநனையே = கொவ்வைக்கனிபோலும் சிவந்த வாயையுடைய பரவைநாச்சியார் கணவராகிய நம்பியாரூரனையே; தொழுதெழுவார்=தொழுதெழுகின்றவராய்.—எ-று.

ஏ-தான்-அசை.

வேறு. (கரு)

நாவலூர் மன்னனார்க்கு நாயனா ரளித்தநெல்லிங்
கியாவரா லெடுக்கலாகு மிச்செய லவர்க்குச்சொல்லப்
போவன்யா னென்றுபோந்தார் புகுந்தவா றருளிச்செய்து
தேவர்கள் பெருமானேவ நம்பியு மெதிர்சென்றார்.

(இ-ள்) காவலூர்மன்னனார்க்கு=நம்பியாரூராருக்கு; நாயனாரளித்தநெல்=சிவ பிரான் கொடுத்தருளியநெல்; இங்கியாவராலெடுக்கலாகும்=இவ்விடத்து எவராலும் எடுக்கமுடியாது; இச்செயலவர்க்குச்சொல்ல=இச்செய்தியை அந்நம்பியாரூராருக்குத் தெரிவிக்க; போவன்யானென்றுபோந்தார்=யான்செல்வேனென்று சென்றார்; புகுந்த வாறருளிச்செய்து=இக்குண்டையூர்க் கிழார்க்கு நென்மலைகொடுத்த முறைமையை யருளிச்செய்து; தேவர்கள்பெருமானேவ=சிவபிரான்செல்லென்று ஏவ; நம்பியுமெதி ரேசென்றார்=நம்பியாரூராரும் அவரெதிரேவந்தருளினார் — எ-று.

இவ்விரண்டுங் குளகம்.    (௧௬)

குண்டையூர்க் கிழவர் தாமு மெதிர்கொண்டு கோதில்வாய்மைத்
தொண்டனார் பாதந்தன்னிற் றொழுதுவீழ்ந் தெழுந்துநின்று
பண்டெலா மடியேன்செய்த பணியெனக் கின்றுமுட்ட
வண்டர்தம் பிரானார்தாமே நென்மலை யளித்தாரென்று.

(இ-ள்) குண்டையூர்க்கிழவர்தாமுமெதிர்கொண்டு=குண்டையூர்க்கிழாரும் நம் பியாரூரரை எதிர்கொண்டு; கோதில்வாய்மைத்தொண்டனார்பாதந்தன்னில்=குற்ற மற்ற மெய்த்தொண்டராகிய அந்நம்பியாரூரர் திருவடிகளில்; தொழுதுவீழ்ந்தெழு ந்துநின்று=சாட்டாங்கமாகவணங்கி எழுந்துநின்று; பண்டெலாமடியேன்செய்த=முன் னெல்லா மடியேன்செய்த; பணியெனக்கின்றுமுட்ட=தொண்டானது அடியேனுக்கு இன்றுகுறைபட; அண்டர்தம்பிரானார்தாமே = அதையுணர்ந்துசிவபிரானே; நென் மலையளித்தாரென்று=நென்மலையைக் கொடுத்தாரென்று கூறி.—எ-று.    (௧௭)

மணிதரா லெடுக்குமெல்லைத் தன்றுநென் மலையினுக்க
மினியெனாற் செய்யலாகும் பணியன்றி தென்னக்கேட்டுப்
பணிமதி முடியாரன்றே பரிந்துமக் களித்தார்நெல்லென்
றினியன மொழிந்துதாமுங் குண்டையூ ரெய்தவந்தார்.

(இ-ள்) மணிதராலெடுக்குமெல்லைத் தன்றுநென்மலையினுக்கம்= [illegible] யினதுயர்ச்சி மனிதர்களாலெடுத்தற் குறைகதும அளவுடையதல்ல, இனியெனாற்செய் யலாகும்பணியன்றிது=மேல் இதை யெடுத்துத் திருமாளிகைக்கு அனுப்புதல் அடியே னாற் செய்யத்தக்க பணிவிடையல்ல; என்னக்கேட்டு=என்றுசொல்ல அதனைநம்பியாரூ ரர் கேட்டருளி, பணிமதிமுடியாரே=குளிர்ந்த இளம்பிறை சூடிய திருமுடியையு டைய சிவபிரானே; பரிந்துமக்களித்தார்நெல்லென்று=கருணைகூர்ந்து உமக்குநெல் லருளிச்செய்தாரென்று; இனியனமொழிந்து=இனியமொழிகளை எடுத்துக்கூறி; தாமு ங்குண்டையூரெய்தவந்தார்=நம்பியாரூரரும் குண்டையூர்க்கெழுந்தருளினார்.—எ-று.

அன்று-அசை-ஏகாரம்-தேற்றம்    இவ்விரண்டுங் குளகம்.    (௧௮)

விண்ணினை யளக்குநெல்லின் வெற்பினை நம்பிநோக்கி
யண்ணலைத் தொழுதுபோற்றி யதிசய மிகவுமெய்தி
யெண்ணில்சீர்ப் பரவையில்லத் திந்நெல்லை யெடுக்கவாளுந்
தண்ணில வணிந்தார்தாமே தரிலன்றி யொண்ணாதென்று.

(இ-ள்) விண்ணினையளக்குநெல்லின்வெற்பினை=வானினெல்லையை அளவுப டுத்தும் நென்மலையை; நம்பிநோக்கி=நம்பியாரூரர் பார்த்தருளி; அண்ணலைத்தொழுது போற்றி=சிவபிரானை வணங்கித்துதித்து; அதிசயமிகவுமெய்தி=மிகவும்வியப்பெய்தி;

எண்ணில்சீர்ப்பரவையில்லத்து=அளவுபடாத சிறப்பினையுடைய பரவைநாச்சியாரது மாளிகைக்கு; இந்நெல்லையெடுக்கவாளும்=இந்நெல்லை எடுத்துக்கொடுக்க ஆளையும்; தண்ணிலவணிந்தார்தாமேதரிலன்றி=குளிர்ந்த இளம்பிறையையணிந்த சிவபிரானே தந்தாலன்றி; ஒண்ணாதென்று=எடுத்தனுப்பக் கூடாதென்று கருதி.—எ-று. (ககூ)

வேறு

ஆளிட வேண்டிக்கொள்வா ரருகுதிருப் பதியான
கோளிலியிற் றம்பெருமான் கோயிலினை வந்தெய்தி
வாளன கண்மடவாள் வருந்தாமே யெனும்பதிக
மூளவருங் காதலுடன் முன்றொழுது பாடுதலும்.

(இ-ள்.) ஆளிடவேண்டிக்கொள்வார்=ஆள்கொடுக்கும்படி சிவபிரானைவேண்டிக்கொள்ளுங்கருத்துடையவராய்; அருகுதிருப்பதியானகோளிலியில்=அவ்வூருக்கருகிலிருக்கும் திருப்பதியாகிய திருக்கோளிலியில்; தம்பெருமான்கோயிலினை வந்தெய்தி=தம்பெருமானது திருக்கோயிலையடைந்து; வாளனகண்மடவாள்வருந்தாமேயெனும் பதிகம்=வாளனகண்மடவாள்வருந்தாமே என்னும் இரண்டாமடியையுடைய திருப்பதிகத்தை; மூளவருங்காதலுடன்=தம் திருவுள்ளத்து மிக்குவளரும் பெருவிருப்போடு; முன்றொழுதுபாடுதலும்=திருமுன்னேவணங்கிப் பாடியருளவும்.—எ-று. (உ௦)

## திருக்கோளிலி - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

நீளநினைந்தடியேனுமைநித்தலுங்கைதொழுவேன்
வாளனகண்மடவாளவள்வாடிவருந்தாமே
கோளிலியெம்பெருமான்குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றே
னாளிலையெம்பெருமானவையட்டித்தரப்பணியே. (க)

வண்டமருங்குழலாளுமைநங்கையோர்பங்குடையாய்
விண்டவர்தம்புரமூன்றெரிசெய்தவெம்வேதியனே
தெண்டிரைநீர்வயல்சூழ்திருக்கோளிலியெம்பெருமா
னண்டமதாயவனேயவையட்டித்தரப்பணியே. (உ)

பாதியோர்பெண்ணைவைத்தாய்படருஞ்சடைகங்கைவைத்தாய்
மாதர்நல்லார்வருத்தமதுநீயுமறிதியன்றே
கோதில்பொழில்புடைசூழ்குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றே
னாதியேயற்புதனேயவையட்டித்தரப்பணியே. (ங)

சொல்லுவதென்னுனைநான்றொண்டைவாயுமைநங்கையைநீ
புல்கியிடத்தில்வைத்தாய்க்கொருபூசல்செய்தாருளரோ
கொல்லைவளம்புறவிற்குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றே
னல்லல்களைந்தடியேற்கவையட்டித்தரப்பணியே. (ச)

முல்லைமுறுவலுமையொருபங்குடைமுக்கணனே
பல்லயர்வெண்டலையிற்பலிகொண்டுழல்பாசுபதா
கொல்லைவளம்புறவிற்றிருக்கோளிலியெம்பெருமா
னல்லல்களைந்தடியேற்கவையட்டித்தரப்பணியே. (ரு)

குரவமருங்குழலாளுமைநங்கையோர்பங்குடையாய்
பரவைபசிவருத்தமதுநீயுமறிதியன்றே
குரவமரும்பொழில்சூழ்குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றே
னரவமசைத்தவனேயவையட்டித்தரப்பணியே. (சு)

எம்பெருமானுனையேநினைந்தேத்துவனெப்பொழுதும்
வம்பமருங்குழலாளொருபாகமமர்ந்தவனே
செம்பொனின்மாளிகைசூழ்திருக்கோளிலியெம்பெருமா
னன்பதுவாயடியேற்கவையட்டித்தரப்பணியே. (எ)

அரக்கன்முடிகரங்களடர்த்திட்டவெம்மாதிபிரான்
பரக்குமரவல்குலாள்பரவையவள்வாடுகின்றாள்
குரக்கினங்கள்குதிகொள்குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றே
னிரக்கமதாயடியேற்கவையிட்டுத்தரப்பணியே. (அ)

பண்டையமால்பிரமன்பறந்துமிடந்துமயர்ந்துங்
கண்டிலராயவர்கள்கழல்காண்பரிதாயபிரான்
றெண்டிரைநீர்வயல்சூழ்திருக்கோளிலியெம்பெருமா
னண்டமதாயவனேயவையட்டித்தரப்பணியே. (கூ)

கொல்லைவளம்புறவிற்றிருக்கோளிலிமேயவனை
நல்லவர்தாம்பரவுந்திருநாவலவூரனவ
னெல்லிடவாட்கள்வேண்டிநினைந்தேத்தியபத்தும்வல்லா
ரல்லல்களைந்துலகினண்டவானுலகாள்பவரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

பகற்பொழுது கழிந்ததற்பின் பரவைமனை யளவன்றி
மிகப்பெருகு நெல்லுலகில் விளங்கியவா ரூர்நிறையப்
புகப்பெய்து தருவனநம் பூதங்க ளெனவிசும்பி
னிகர்ப்பரிய தொருவாக்கு நிகழ்ந்ததுநின் மலனருளால்.

(இ-ள்) பகற்பொழுதுகழிந்ததற்பின்=பகற்காலம் கழிந்ததன்மேல்; பரவைமனையளவன்றி=பரவையினது திருமாளிகையளவல்லாமல்; மிகப்பெருகுநெல்=அதிகமாக உயர்ந்திருக்கின்ற நெற்குவியலை; உலகில்விளங்கியவாரூர்நிறையப்புக = நிலவுலகின்கண் விளக்கமடைந்த திருவாரூரடங்கப்புகும்படி; பெய்துதருவனநம்பூதங்களென=நம்பூதங்கள் சேர்த்துக்கொடுப்பனவென்று; நின்மலனருளால்=சிவபிரான் திருவருளினால்; விசும்பினிகர்ப்பரியதொருவாக்குநிகழ்ந்தது=ஆகாயத்தின்கண் ஒப்பிடற்கரிய ஓர் அசரீரிவாக்குண்டாயது—எ-று. (உக)

தம்பிரா னருள்போற்றித் தரையின்மிசை விழுந்தெழுந்தே
யும்பரா லுணர்வரிய திருப்பாதந் தொழுதேத்திச்
செம்பொனேர் சடையாரைப் பிறபதியுந் தொழுதுபோய்
நம்பரா ரூரணைந்தார் நாவலூர் நாவலனார்.

## ௩.

குண்டையூரில் வேளாண்மரபில் கிழாரென்பவர் சுந்தரர் மேன்மையைக் கேள்வியுற்று நாடோறும் நெல்பருப்பு முதலியவைகளைப் பார்த்தங்களுக்கு அனுப்பி வருகிற நாளையில் மழையின்றி வளஞ்சுருங்க வன்றேண்டாக அனுப்ப நெல்போதாமையால் மனம் வருந்திப் புசியாமல் கவலையுடன் நித்திரை



செய்ய சிவபெருமானவர் சொற்பனத்திற்றோன்றி நெல் தந்தோமென்றருளிக் குபேரனுக்குக் கட்டளையிட, அவர் குண்டையூர்முழுதும் நெற்குவியலாயிருக்கச்செய்ய கிழார் விழித்தபின் கண்டு களிப்புடன் ஆளனுப்பச் சுந்தரருக்குத்தெரிவிக்க, சுந்தரர் கோளிலிநாதர்மீது பதிகமோதி ஆள்பெற்று அவர்களால் நெற்குவியலைத் திருவாரூரிற்சேர்ப்பித்தது.

(இ-ள்.) தம்பிரானருள்போற்றி=அதுகேட்ட நம்பியாரூரர் சிவபிரான்றிருவருளைத்துதித்து; தரையின்மிசைவிழுந்தெழுந்து=நிலமுறச்சாட்டாங்கமாகவணங்கி எழுந்து; உம்பராலுணர்வரியதிருப்பாதம்=தேவராலறிதற்கரிய திருவடிகளை; தொழுதேத்தி=வணங்கித்துதித்து; செம்பொன்னேர்சடையானை=சிவந்த பொன்போலு நிறமுள்ள சடையையுடைய சிவபிரானை; பிறபதியுந்தொழுதுபோய்=பிறதிருப்பதிகளிலும் வணங்கிச்சென்று; நாவலூர்நாவலனார்=திருநாவலூரிலவதரித்த வன்றொண்டப்பெருமான்; நம்பராரூரணைந்தார்=சிவபிரான் வீற்றிருந்தருளும் திருவாரூரையடைந்தார்-எ-று. ஏ-அசை. (உஉ)

பூங்கோயின் மகிழ்ந்தருளும் புராதனைப் புக்கிறைஞ்சி
நீங்காத பெருமகிழ்ச்சி யுடனேத்திப் புறம்போந்து
பாங்கானார் புடைசூழ்ந்து போற்றிசைக்கப் பரவையா
ரோங்குதிரு மாளிகையி னுள்ளணைந்தா ராரூரர்.

(இ-ள்.) பூங்கோயின்மகிழ்ந்தருளும்புராதனைப்புக்கிறைஞ்சி=பூங்கோயிலென்னும் ஆலயத்தில் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் சிவபிரானை உள்ளேபுகுந்து வணங்கி; நீங்காதபெருமகிழ்ச்சியுடனேத்திப்புறம்போந்து=குறையாத பெருமகிழ்ச்சியோடு துதித்துப் புறம்பேசென்று; பாங்கானார்புடைசூழ்ந்துபோற்றிசைக்க=தம்பரிசனங்களருகிற்சூழ்ந்துதுதிசெய்ய; பரவையாரோங்குதிருமாளிகையினுள்ளணைந்தாராரூரர்=பரவையாரதுயர்ந்த திருமாளிகையினுள்ளே நம்பியாரூரர் எழுந்தருளினர்.—எ-று. (உ௩)

கோவைவாய்ப் பரவையார் தாமகிழும் படிகூறி
மேவியவர் தம்மோடு மிகவின்புற் றிருந்ததற்பின்
சேவின்மே லுமையோடும் வருவார்தந் திருவருளி
னேவலினா லவ்விரவு பூதங்கண் மிக்கெழுந்து.

(இ-ள்.) கோவைவாய்ப்பரவையார்தாமகிழும்படிகூறி = கொவ்வைக் கனிபோலும் சிவந்தவாயையுடைய பரவையார் மகிழ்ச்சியடையும்படி நிகழ்ந்தசெய்தியைக்கூறி; மேவியவர்தம்மோடுமிகவின்புற்றிருந்ததற்பின்=அப்பரவையாரோடு மிகவும் இன்பமெய்தியிருந்தபின்; சேவின்மேலுமையோடும்வருவார்தம்=இடபத்தின்மேல் உமாதேவியாரோடு எழுந்தருளிவரும் சிவபிரானுடைய; திருவருளினேவலினாலவ்விரவு பூதங்கண்மிக்கெழுந்து=திருவருளினது ஏவுதலினால் அவ்விரவின்கண் பூதகணங்கள் திரண்டெழுந்து.—எ-று. (உ௪)

குண்டையூர் நென்மலையைக் குறட்பூதப் படைகவர்ந்து
வண்டுலாங் குழற்பரவை மாளிகையை நிறைவித்தே
யண்டர்பிரான் றிருவாரூ ரடங்கவுநென் மலையாக்கிக்
கண்டவரற் புதமெய்துங் காட்சிபெற வமைத்தனவால்.

(இ-ள்.) குண்டையூர்நென்மலையை=குண்டையூரின்கணுள்ள நென்மலையை; குறட்பூதப்படைகவர்ந்து=குறளுருவமான பூதகணங்கள் வாரிக்கொண்டு; வண்டுலாங்குழற்பரவைமாளிகையைநிறைவித்து=தேனுகைசையால் வண்டுகள்சூழ்கின்ற கேசபாரத்தையுடைய பரவையாரது திருமாளிகையை நிறைவித்து; அண்டர்பிரான்றிருவாரூரடங்கவுநென்மலையாக்கி=சிவபிரான் திருவாரூர்முழுதும் நென்மலைகளையுண்டாக்கி;

கண்டவரற்புதமெய்துங்காட்சிபெறவமைத்தன=பார்த்தவர்கள் அதிசயிக்கும் தோற்ற முண்டாதற் கேதுவாகச்சமைத்தன.—எ-று. ஏ ஆல்-அசை. இவ்விரண்டுங்குளகம். ()

அவ்விரவு புலர்காலை யாரூரில் வாழ்வார்கண்
டெவ்வுலகில் விளைந்தனநென் மலையிவையென் றதிசயித்து
நவ்விமதர்த் திருநோக்கி னங்கைபுகழ்ப் பரவையார்க்
கிவ்வுலகு வாழவரு நம்பியளித் தனவென்பார்.

(இ-ள்.) அவ்விரவுபுலர்காலையாரூரில்வாழ்வார்கண்டு=அன்றிரவு விடியுங்கால் திருவாரூரின்கண் வாழ்பவர்கள் அதைப்பார்த்து; எவ்வுலகில்விளைந்தனநென்மலையி வையென்றதிசயித்து=நென்மலைகளாகிய இவை எந்த ஊரில் விளைந்தன என்று வியப் பெய்தி; நவ்விமதர்த்திருநோக்கினங்கைபுகழ்ப்பரவையார்க்கு=இவைமானினது நோக் கம்போலும் மதர்த்த திருநோக்கினையுடைய மகளிரிற் சிறந்தபுகழமைந்த பரவையார் க்கு; இவ்வுலகுவாழவருநம்பியளித்தனவென்பார்=இவ்வுலகத்தார்வாழும்படி அவதரி த்த நம்பியாரூரர் அருளிச்செய்தன என்றுசொல்வர்.—எ-று. (உசு)

நீக்கரிய நெற்குன்று தனைநோக்கி நெறிபலவும்
போக்கரிதா யிடக்கண்டு மீண்டுந்தம் மில்புகுவார்
பாக்கியத்தின் றிருவடிவாம் பரவையார்க் கிந்நெல்லும்
போக்குமிட மரிதாகு மெனப்பலவும் புகல்கின்றார்.

(இ-ள்.) நீக்கரியநெற்குன்றுதனைநோக்கி=யாவராலும் எடுத்தற்கரிய நென்மலை களைப்பார்த்து; நெறிபலவும்போக்கரிதாயிடக்கண்டு=பலவழிகளிலும் செல்லுதல் அரி தாயிருப்பதைநோக்கி; மீண்டுந்தம்மில்புகுவார்=மீளவும் தம்மனையுள்ளே புகுவார்களா கியசிலர்; பாக்கியத்தின்றிருவடிவாம்பரவையார்க்கு=செல்வத்தினின்று மமைத்த திரு வுருவத்தையுடைய பரவைநாச்சியார்க்கு; இந்நெல்லும்போக்குமிடமரிதாகுமென= இந்தநெல்லும் வைக்குமிடம் அரிதாயிருக்குமென்று; பலவும்புகல்கின்றார்=பலமொழி களையும் சொல்கின்றார்.—எ-று. (உஎ)

வன்றொண்டர் தமக்களித்த நெற்கண்டு மகிழ்சிறப்பா
ரின்றுங்கண் மனையெல்லைக் குட்படுநெற் குன்றெல்லாம்
பொன்றங்கு மாளிகையிற் புகப்பெய்து கொள்கவென
வென்றிமுர சறைவித்தார் மிக்கபுகழ்ப் பரவையார்.

(இ-ள்) மிக்கபுகழ்ப்பரவையார்=மிகுபுகழையுடைய பரவைநாச்சியார்; வன் றொண்டர்தமக்களித்தநெற்கண்டுமகிழ்சிறப்பார்=நம்பியாரூரர் தமக்குக்கொடுத்த நெ ல்லைக்கண்டு மகிழ்ச்சிமீக்கூர்வாராய்; இன்றுங்கண்மனையெல்லைக்குட்படுநெற்குன்றெ ல்லாம்=இப்பொழுது உங்களுங்கள் வீட்டின் எல்லைக்கடங்கிய நெற்குவியல்களை யெ ல்லாம்; பொன்றங்குமாளிகையிற்புகப்பெய்துகொள்கவென = அழகமைந்த திருமாளி கையில் புகும்படி சேர்த்துக்கொள்ளுங்களென்று; வென்றிமுரசறைவித்தார்=வெற் றிதங்கிய முரசப்பறையை அடிப்பித்தார்.—எ-று. (உஅ)

அணியாரூர் மறுகதனி லாளியங்கப் பறையறைந்த
பணியாலே மனைநிறைத்துப் பாங்கெங்கு நெற்கூடு
கணியாமற் கட்டிநகர் களிகூரப் பரவையார்
மணியாரம் புனைமார்பின் வன்றொண்டர் தமைப்பணிந்தார்.

(இ-ள்.) அணியாரூர்மறுகதனில்=அழகிய திருவாரூர்த் திருவீதியில்; ஆளியுங்கப்பறையறைந்தபணியாலே=மனிதர்கள் சஞ்சரித்தற்கேதுவாகப் பரவையார் பறையறைவித்த கட்டளையினாலே; மனைநிறைத்து=தம்மாளிகைகளை நிறைத்துக்கொண்டு; பாங்கெங்குநெற்கூடுகணிபாமற்கட்டி=மனைப்புறம்பாயுள்ள எவ்விடங்களிலும் நெற்சேர்களை எண்ணிறந்தனவாகக் கட்டி; நகர்களிகூர=அந்நகரத்தார் மகிழ்ச்சிமேம்பட; பரவையார்மணியாரம்புனைமார்பின் வன்றொண்டர் தமைப்பணிந்தார்=பரவைநாச்சியார் மணிகளிழைத்த பதக்கத்தையணிந்த மார்பினையுடைய நம்பியாரூரரைவணங்கினார்.—எ-று. (உக)

நம்பியா ரூரார்திரு வாரூரி னயந்துறைநாட்
செம்பொற்புற் றிடங்கொண்டு வீற்றிருந்த செழுந்தேனைத்
தம்பெரிய விருப்பினொடுந் தாழ்ந்துணர்வி னற்பரவி
யிம்பருட னும்பர்களு மதிசயிப்ப வேத்தினார்.

(இ-ள்.) நம்பியாரூரார்திருவாரூரினயந்துறைநாள்=வன்றொண்டப் பெருமான் திருவாரூரின்கண் விரும்பி எழுந்தருளியிருக்கும் நாளில்; செம்பொற்புற்றிடங்கொண்டுவீற்றிருந்தசெழுந்தேனை=சிவந்த பொன்மயமான புற்றை இடமாகக்கொண்டு வீற்றிருந்தருளும் செவ்வியதேனை; தம்பெரியவிருப்பினொடுந்தாழ்ந்துணர்வினற்பரவி=தம்முளத்துதித்த பேரவாவோடு வணங்கித் தம் அறிவினாலுண்டு; இம்பருடனும்பர்களுமதிசயிப்பவேத்தினார்=மண்ணுலகத்தாரோடு விண்ணுலகத்தாரும் வியப்படையத் துதித்தார்.—எ-று. (கo)

குலவுபுகழ்க் கோட்புலியார் குறையிரந்து தம்பதிக்க
ணலகில்புக ழாரூர ரொழுந்தருள வடிவணங்கி
நிலவியவன் றொண்டரது விசைந்ததற்பி னேரிறைஞ்சிப்
பலர்புகழும் பண்பினார் மீண்டுந்தம் பதியணைந்தார்.

(இ-ள்.) குலவுபுகழ்க்கோட்புலியார் குறையிரந்து=விளங்கிய புகழையுடைய கோட்புலிநாயனார் தம் குறைகூறி; தம்பதிக்கணலகில்புகழாரூரரொழுந்தருளவடிவணங்கி=தம்மூரில் அடங்காதபுகழையுடைய நம்பியாரூரரொழுந்தருளும்படி அவர்திருவடிகளில்வணங்கி; நிலவியவன்றொண்டரதுவிசைந்ததற்பின்=மேன்மைமிக்க நம்பியாரூரர் அதற்குத்திருவுள்ள மிசைந்தபின்பு; நேரிறைஞ்சிப்பலர்புகழும்பண்பினார்=அவர்திருமுன்னேவணங்கிப்பலராலும் எடுத்துக்கூறும் நற்குணங்களையுடையகோட்புலிநாயனார்; மீண்டுந்தம்பதியணைந்தார்=திரும்பவும் தம்மூராகிய திருநாட்டியத்தான் குடியையடைந்தார்.—எ-று.

தங்குறைகூறுதலாவது:—தம்மூருக் கெழுந்தருள வேண்டுமென வேண்டிக்கொள்ளுதல். (கக)

வேறு.

தேவரொதுங்கத் திருத்தொண்டர் மிடையுஞ்செல்வத் திருவாரூர்க்
காவல்கொண்டு தனியாளுங் கடவுட்பெருமான் கழல்வணங்கி
நாவலூர ரருள்பெற்று நம்பர்பதிகள் பிறநண்ணிப்
பாவைபாகர் தமைப்பணிந்து பாடும்விருப்பிற் சென்றணைவார்.

(இ-ள்.) தேவரொதுங்கத்திருத்தொண்டர்மிடையும்=தேவர்கள் விலகும்படி அடியார்குழாங்கள் நெருங்கியிருக்கும்; செல்வத்திருவாரூர்க்காவல்கொண்டுதனியாளு

ம்=செல்வம் நிறைந்த திருவாரூரைக்காத்துத் தனியரசுசெய்யும்; கடவுட்பெருமான்கழ
ல்நாவலூரர்வணங்கியருள்பெற்று=தியாகப்பெருமானுடைய திருவடிகளில் நம்பியா
ரூரர்வணங்கித் திருவருள்பெற்று; நம்பர்பதிகள்பிறகண்ணி=சிவபிரான் வீற்றிருந்த
ருளும் பிறதிருப்பதிகளை யடைந்து; பாவைபாகர்தமைப்பணிந்து=அச்சிவபிரானை
வணங்கி; பாடும்விருப்பிற்சென்றணைவார்=திருப்பதிகம் பாடும் விருப்போடு செல்வா
ராயினார்.—எ-று. (௬௨)

மாலுமயனு முணர்வரியார் மகிழும்பதிகள் பலவணங்கி
ஞாலநிகழ்கோட் புலியார்தந் நாட்டியத்தான் குடிநண்ண
வேலும்வகையா லலங்கரித்தங் கவருமெதிர்கொண் டினிதிறைஞ்சிக்
கோலமணிமா ளிகையின்க ணார்வம்பெருகக் கொடுபுக்கார்.

(இ-ள்.) மாலுமயனுமுணர்வரியார்மகிழும்பதிகள்பலவணங்கி=திருமால் பிரம
ன் என்னுமிருவரும் அடியையும் முடியையும் அறிதற்கரிய சிவபிரான் வீற்றிருந்தருளு
ம் பலதிருப்பதிகளையும் வணங்கி; ஞாலநிகழ்கோட்புலியார்தம்=நிலவுலகத்தில் விளங்
கிய புகழையுடைய கோட்புலியார்வாழும்; நாட்டியத்தான்குடிநண்ண=திருநாட்டியத்
தான் குடியென்னும் ஊரையடைய; ஏலும்வகையாலலங்கரித்து=பொருந்தும்வண்ண
ம் அவ்வூரையலங்காரஞ்செய்து; அங்கவருமெதிர்கொண்டினிதிறைஞ்சி = கோட்புலி
நாயனாரும் நம்பியாரூரரை இனிதாக எதிர்கொண்டுவந்து வணங்கி; கோலமணிமாளி
கையின்கண்=அழகிய மணிமயமான திருமாளிகையின் கண்; ஆர்வம்பெருகக்கொடு
புக்கார்=விருப்பமீக்கூரக் கொண்டுசென்றார்.—எ-று. (௬௩)

தூயமணிப்பொற் றவிசிலெழுந் தருளியிருக்கத் தூநீராற்
சேயமலர்ச்சே வடிவிளக்கித் தெளித்துக்கொண்ட செழும்புனலான்
மேயசுடர்மா ளிகையெங்கும் விளங்கவீசி யுளங்களிப்ப
வேயசிறப்பி லர்ச்சனைக ளெல்லாமியல்பின் முறைபுரிவார்.

(இ-ள்.) தூயமணிப்பொ[illegible]சிலெழுந்தருளியிருக்க=தூய்மையுடைய மணிக
ளழுத்திய பொற்பீடத்தின்மேல் நம்பியாரூரர் வீற்றிருந்தருள; தூநீராற்சேயமலர்ச்சே
வடிவிளக்கி=செந்தாமரைமலர்போலும் சிவந்ததிருவடிகளைச்சுத்தமான நீரினாற்கழுவி;
தெளித்துக்கொண்டசெழும்புனலால்=சிரசில்புரோட்சித்துக் கொண்டகுளிர்ந்த நீரினா
ல்; மேயசுடர்மாளிகையெங்கும்விளங்கவீசியுளங்களிப்ப=ஒளிவிளங்கிய திருமாளிகை
முழுதும் விளக்கமாகத்தெளித்து நம்பியாரூரர் திருவுள்ளம் மகிழும்படி; ஏயசிறப்பில
ர்ச்சனைகளெல்லாமியல்பின்முறைபுரிவார்=இசைந்த சிறப்போடு பூசைவிதிகளையெல்
லாம் இயல்போடு முறையே செய்கின்ற அவர்.—எ-று. (௬௪)

பூந்தண்பனிநீர் கொடுசமைத்த பொருவில்விரைச்சந் தனமெனவே
வாய்ந்தவகிலி னறுஞ்சாந்து வாசநிறைமான் மதச்சேறு
தோய்ந்தபுகைநா வியினறுநெய் தூயபசுங்கர்ப் பூரமுத
லேய்ந்தவடைக்கா யமுதினைய வெண்ணின்மணிப்பா சனத்தேந்தி.

(இ-ள்.) பூந்தண்பனிநீர்கொடுசமைத்த=பொலிவுதங்கிய குளிர்ந்தபன்னீரால்
சமைத்த; பொருவில்விரைச்சந்தனமெனவேவாய்ந்த=ஒப்பற்ற வாசனைவீசும் சந்தனக்
குழம்புபோல வமைத்த; அகிலினறுஞ்சாந்து=அகிலினது நறுமணங்கமழுங் குழம்பும்;
வாசநிறைமான்மதச்சேறும்=மணம் நிறைந்த கத்தூரிக்குழம்பும்; தோய்ந்தபுகைநாவியி

னறுநெய்=புகைதோய்ந்தாற்போலும் நறுமணங்கமழும் நாவிநெய்யும்; தூயபசுங்கர்ப்பூரமுதலேய்ந்த=தூயவாகிய பச்சைக்கர்ப்பூரமும் முதலிய முகவாசங்கள் சேர்த்த; அடைக்காயமுது=தாம்பூலமும்; இனையவெண்ணின்மணிப்பாசனத்தேந்தி=இவை முதலிய பொருள்களை அளவுபடாத மணிகளிழைத்த தட்டுகளில் எடுத்துக்கொண்டு. எ-று.

வேறுவேறு திருப்பள்ளித் தாமப்பணிகண் மிகவெடுத்து
மாறிலாத மணித்திருவா பரணவருக்கம் பலதாங்கி
யீறில்விதத்துப் பரிவட்ட முழினிரைத்தே யெதிரிறைஞ்சி
யாறுபுனைந்தா ரடித்தொண்ட ரளவில்பூசை கொளவளித்தார்.

(இ-ள்) வேறுவேறுதிருப்பள்ளித்தாமப்பணிகள்மிகவெடுத்து=தனித்தனிதிருப்பள்ளித்தாமத்திற்குரிய பொருள்களை அதிகமாக எடுத்துக்கொண்டு; மாறிலாதமணித்திருவாபரணவருக்கம்பலதாங்கி=ஒப்பில்லாத இரத்தினாபரணங்களின் தொகுதிகள் பலவற்றையும் எடுத்துக்கொண்டு, ஈறில்விதத்துப்பரிவட்டமுழினிரைத்தேயெதிரிறைஞ்சி=எண்ணிறந்த வேறு பாட்டையுடைய பரிவட்டங்களையும் வரிசையாக வைத்து எதிரேவணங்கி, ஆறுபுனைந்தாரடித்தொண்டரளவில்பூசைகொளவளித்தார்=கங்கை நதியையணிந்த சடைமுடியையுடைய சிவபிரானடியாராகிய நம்பியாரூரர் அளவில்லாத பூசையை ஏற்றுக்கொள்ளும்படி செய்தார்.—எ-று. (கசு)

செங்கோலரச னருளுரிமைச் சேனாபதியாங் கோட்புலியார்
நங்கோமானை நாவலூர் நகரார்வேந்தை நண்பினாற்
றங்கோமனையிற் றிருவமுது செய்வித்திறைஞ்சித் தலைசிறந்த
பொங்கோதம்போற் பெருங்காதல் புரிந்தார்பின்னும் போற்றுவார்.

(இ-ள்.) செங்கோலரசனருளுரிமைச்சேனாபதியாங்கோட்புலியார் = செங்கோலேந்திய சோழராசனாலளிக்கப்பட்ட உரிமையையுடைய சேனாபதியாயிருக்கும் கோட்புலிநாயனார்; நங்கோமானைநாவலூர்நகரார்வேந்தை=நம்முடைய முதல்வனை திருநாவலூரரார்க் கிறைவனை; நண்பினாற்றங்கோ......யிற்றிருவமுதுசெய்வித்திறைஞ்சி =நண்புமிகுதியால் தமது அரண்மனையில் திருவமுதுசெய்யும்படி செய்துவணங்கி; பொங்கோதம்போல்=பிரவாகிக்கின்ற நீர்ப்பெருக்குப்போல்; தலைசிறந்தபெருங்காதல்புரிந்தார்=மிகச்சிறந்த பெருவிருப்புடையராய்; பின்னும்போற்றுவார்—பின்னுந் துதிப்பாராயினர்.—எ-று. (கஎ)

ஆனவிருப்பின் மற்றவர்தா மருமையான்முன் பெற்றெடுத்த
தேனார்கோதைச் சிங்கடியார் தமையுமவர்பின் றிருவுயிர்த்த
மானார்நோக்கின் வனப்பகையார் தமையுங்கொணர்ந்து வன்றொண்டர்
தூநாண்மலர்த்தாள் பணிவித்துத் தாமுந்தொழுது சொல்லுவார்.

(இ-ள்.) ஆனவிருப்பின்மற்றவர் = குறையாதபேரன்பால் அக்கோட்புலிநாயனார்; அருமையால்தாம்முன்பெற்றெடுத்த=அருமைப்பாட்டால் தாம் முன்னேபெற்றெடுத்த; தேனார்கோதைச்சிங்கடியார்தமையும் = தேன்பிலிற்றுகின்ற மாலையையணிந்த சிங்கடியாரென்னும் புதல்வியையும்; அவர்பின்றிருவுயிர்த்த=அவர்பின்னேபெற்றெடுத்த; மானார்நோக்கின்வனப்பகையார்தமையும்=மான்போலும் பார்வையையுடைய வனப்பகையாரென்னும் புதல்வியையும்; கொணர்ந்து=அழைத்துக்கொண்டுவந்து; வன்றொண்டர்தூநாண்மலர்த்தாள்பணிவித்து=நம்பியாரூரரது தூயபுதிதான தாமரை மல

ர்போலும் சிவந்ததிருவடிகளில் வணங்கும்படி செய்வித்து; தாமுந்தொழுதுசொல்லு வார்—தாமும்வணங்கிச் சொல்வாராயினர்.—எ-று. (௬அ)

அடியேன்பெற்ற மக்களிவ ரடிமையாகக் கொண்டருளிங்
கடிசேர்மலர்த்தா டொழுதுய்யக் கருணையளிக்க வேண்டுமெனத்
தொடிசேர் தளிர்க்கை யிவளெனக்குத் தூயமக்க ளெனக்கொண்டப்
படியேமகண்மை யாக்கொண்டார் பரவையார்தங் கொழுநனார்.

(இ-ள்.) அடியேன்பெற்றமக்களிவர்—அடியேன்பெற்ற புதல்விகளாகிய இவர் களை; அடிமையாகக்கொண்டருளி—அடிமையாக ஏற்றுக்கொண்டு; கடிசேர்மலர்த்தா டொழுதுய்ய—மணங்கமழ்கின்ற தாமரைமலர்போலும் சிவந்ததிருவடிகளை வணங்கி உய்யும்படி; கருணையளிக்கவேண்டுமென—கிருபைசெய்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க; தொடிசேர்தளிர்க்கையிவள்—வளையலணிந்த தளிர்போலும் மிருதுவானகைகளையுடைய இச்சிறுமிகள்; எனக்குத்தூயமக்களெனக்கொண்டு—எனக்குத்தூய புதல்விகளெனக்கருதிக்கொண்டு; அப்படியேமகண்மையாக்கொண்டார்—அவ்வாறே புதல்விகளாகக் கொண்டருளினார்; பரவையார்தங்கொழுநனார்—பரவைநாச்சியார்க்குக் காதலராகிய நம்பியாரூரர்.—எ-று. (௬௯)

கோதைசூழ்ந்த குழலாரைக் குறங்கின்வைத்துக் கொண்டிருந்து
காதனிறைந்த புதல்வியராங் கருத்துட்கசிவா லணைத்துச்சி
மீதுகண்ணீர் விழமோந்து வேண்டுவனவுங் கொடுத்தருளி
நாதர்கோயில் சென்றடைந்தார் நம்பிதம்பி ரான்றோழர்.

(இ-ள்) கோதைசூழ்ந்தகுழலாரை—மாலைசூழ்ந்த அளகத்தையுடைய அப்பெண்களை; குறங்கின்வைத்துக்கொண்டிருந்து— துடையின்மீது வைத்துக்கொண்டிருந்து; காதனிறைந்தபுதல்வியராங்கருத்துட்கசிவாலணைத்து—விருப்புநிறைந்த புத்திரிகளாங்கருத்திற் கேற்ற உளக்கசிவினாற்றழுவி; உச்சிமீதுகண்ணீர்விழமோந்து—கண்ணீர்சொரிய உச்சியைமோந்து; வேண்டுவனவுங்கொடுத்தருளி—அவர்விரும்பிய பொருள்களையும் அவர்கையிற்கொடுத்து; நாதர்கோயில்சென்றடைந்தார்—சிவபிரான் திருக்கோயிலையடைந்தார்; நம்பிதம்பிரான்றோழர்—தம்பிரான் றோழராகிய நம்பியாரூரர். ()

வென்றிவெள்ளே றுயர்த்தருளும் விமலர்திருக்கோ புரமிறைஞ்சி
யொன்றுமுள்ளத் தொடுமன்பா லுச்சிகுவித்த கரத்தோடுஞ்
சென்றுபுக்குப் பணிந்துதிருப் பதிகம்பூணு ணென்றெடுத்துக்
கொன்றைமுடியா ரருளுரிமை சிறப்பித்தார்கோட் புலியாரை.

(இ-ள்) வென்றிவெள்ளேறுயர்த்தருளும்—வெற்றிதங்கிய வெள்ளிய இடபத்தைக்கொடியாகக்கொண்டருளும்; விமலர்திருக்கோபுரமிறைஞ்சி—சிவபிரானது திருக்கோபுரத்தைத்தொழுது; ஒன்றுமுள்ளத்தொடும் — ஒருப்பட்ட திருவுள்ளத்தோடும்; அன்பாலுச்சிகுவித்தகரத்தோடும் — அன்பினாற் சிரசிற்குவித்த திருக்கரத்தோடும்; சென்றுபுக்குப்பணிந்து—எழுந்தருளி உள்ளேபுகுந்துவணங்கி; திருப்பதிகம்பூணுணென்றெடுத்து—பூணுணென்னும் முதலையுடைய திருப்பதிகத்தையெடுத்து; கொன்றைமுடியாரருளுரிமை—கொன்றைமலரைச்சூடிய திருமுடியையுடைய சிவபிரான் திருவருளினுரிமையைச் சிறப்பித்ததோடு;" சிறப்பித்தார்கோட்புலியாரை—கோட்புலிநாயனாரையும் கூடாமன்னரைக் கூட்டத்தில்வென்ற கொடிறன்கோட்புலிசென்னி எனச் சிறப்பித்தருளினார்.—எ-று.

கோட்புலிசென்னி என்றது பட்டப்பெயர்-சென்னிகோட்புலி எனற்பாலது கோட்புலிசென்னி என மாறிநின்றது. (சக)

சிறப்பித்தருளுந் திருக்கடைக்காப் பதனினிடைச்சிங் கடியாரைப்
பிறப்பித்தெடுத்த பிதாவாகத் தம்மைநினைந்த பெற்றியினன்
மறப்பில்வகைச்சிங் கடியப்ப னென்றேதம்மை வைத்தருளி
நிறப்பொற்புடைய விசைபாடி நிறைந்தவருள்பெற் றிறைஞ்சுவார்.

(இ-ள்.) சிறப்பித்தருளுந்திருக்கடைக்காப்பதனினிடை=அவ்வாறு சிறப்பித்துப்பாடியருளிய திருக்கடைக்காப்பில், சிங்கடியாரைப்பிறப்பித்தெடுத்தபிதாவாக= சிங்கடியாரென்னும் கோட்புலிநாயனார் புதல்வியைப்பெற்றெடுத்த பிதாவைப்போல; தம்மைநினைந்தபெற்றியினால்=தம்மைக்கருதிய முறைமையினால்; மறப்பில்வகைச்சிங்கடியப்பனென்று=சிவபிரானைமறவாத சிங்கடியப்பனென்று; தம்மைவைத்தருளி= தம்மைவைத்தருளி; நிறப்பொற்புடையவிசைபாடி=இனிமைக்குணத்தாற்சிறந்த திருப்பதிகத்தைப்பாடியருளி; நிறைந்தவருள்பெற்றிறைஞ்சுவார்=சிவபிரானது குறைவில்லாத திருவருளைப்பெற்று வணங்குவாராயினர்.—எ-று. (சஉ)

## திருநாட்டியத்தான்குடி-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

பூணாணவதோரரவங்கண்டஞ்சேன்புறங்காட்டாடல்கண்டிகழேன்
பேணீராகிலும்பெருமையையுணர்வன்பிறவேனாகிலுமறவேன்
காணீராகிலுங்காண்பனென்மனத்தாற்கருதீராகிலுங்கருதி
நாணேனும்மடிபாடுதலொழியேனாட்டியத்தான்குடிநம்பீ.

கூடாமன்னரைக்கூட்டத்துவென்றகொடிறன்கோட்புலிசென்னி
நாடார்தொல்புகழ்நாட்டியத்தான்குடிநம்பியைநாளும்மறவாச்
சேடார்பூங்குழற்சிங்கடியப்பன்றிருவாரூரனுரைத்த
பாடீராகிலும்பாடுமின்றொண்டீர்பாடநும்பாவம்பாறுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-ரத்தினகிரிநாதர். தேவியார்-மலர்மங்கை.

---

அங்குநின்று மெழுந்தருளி யளவிலன்பி னுண்மகிழச்
செங்கணுதலார் மேவுதிரு வலிவலத்தைச் சேர்ந்திறைஞ்சி
மங்கைபாகர் தமைப்பதிகம் வலிவலத்தைக் கண்டேனென்
றெங்குநிகழ்ந்த தமிழ்மாலை யெடுத்துத்தொடுத்த விசைபுனைவார்.

(இ-ள்.) அங்குநின்றுமெழுந்தருளி=அத்திருநாட்டியத்தான் குடியினின்று மெழுந்தருளி; அளவிலன்பினுண்மகிழ=அடங்காதபேரன்பினால் திருவுள்ளம்களிப்படைய; செங்கணுதலார்மேவு= சிவந்த நெற்றிக்கண்ணையுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும்; திருவலிவலத்தைச்சேர்ந்திறைஞ்சி=திருவலிவலத்தை யடைந்து வணங்கி; மங்கைபாகர்தமைப்பதிகம்வலிவலத்துக்கண்டேனென்று= உமாதேவிபாகராகிய சிவபிரானை வலிவலத்திற்கண்டேனென்னும் இறுதியையுடைய திருப்பதிகத்தை; எங்குநிக

ழ்ந்ததமிழ்மாலையெடுத்து=எவ்விடத்தும் புகழ்மிக்க தமிழ்மாலையாக எடுத்து; தொடுத்த விசைபுனைவார்=கூடிய இசையோடு சூட்டுவாராய்.—எ-று. (௩௩)

நன்றுமகிழுஞ் சம்பந்தர் நாவுக்கரசர் பாட்டுவந்தி
ரென்றுசிறப்பித் திறைஞ்சிமகிழ்ந் தேத்தியருள்பெற் றெழுந்தருளி
மன்றினிடையே நடம்புரிவார் மருவுபெருமைத் திருவாரூர்
சென்றுகுறுகிப் பூங்கோயிற் பெருமாள்செம்பொற் கழல்பணிந்து.

(இ-ள்.) நன்றுமகிழுஞ்சம்பந்தர்=மிகவும் மகிழ்தற்கேதுவான ஆளுடையபிள்ளையாரும்; நாவுக்கரசர்பாட்டுவந்தீர்=வாகீசமுனிவருமாகிய இவர்கள்திருப்பதிகத்தை மகிழ்ந்தீர்; என்றுசிறப்பித்திறைஞ்சிமகிழ்ந்தேத்தி = என்று அத்திருப்பதிகத்தில் சிறப்பித்துவணங்கி மகிழ்ச்சியடைந்து துதித்து; அருள்பெற்றெழுந்தருளி=திருவருளைப்பெற்று அங்குநின்றுமெழுந்தருளி;மன்றினிடையேநடம்புரிவார்மருவு=கனகசபையின்கண் திருத்தம்புரிகின்ற சிவபிரான் வீற்றிருந்தருளும்; பெருமைத்திருவாரூர்சென்றுகுறுகி= பெருமையுடைய திருவாரூரையடைந்து; பூங்கோயிற்பெருமாள்செம்பொற்கழல்பணிந்து=பூங்கோயிலின்கண்வாழும் சிவபிரானது சிவந்த பொன்னிறமான கழலையணிந்த திருவடிகளில் வணங்கி.—எ று. (௩௪)

## திருவலிவலம்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

ஊனங்கத்துயிர்ப்பாயுயிர்க்கெல்லாமோங்காரத்துருவாகிநின்றானை
வானங்கத்தவர்க்குமளப்பரியவள்ளலையடியார்கடம்முள்ளத்
தேனங்கத்தமுதாகியுள்ளூறுந்தேனைத்தினைத்தற்கினியானை
மானங்கைத்தலத்தேந்தவல்லானைவலிவலந்தனில்வந்துகண்டேனே.

நல்லிசைஞானசம்பந்தனுநாவிற்கரைசரும்பாடியநற்றமிழ்மாலை
சொல்லியவேசொல்லியேத்துகப்பானைத்தொண்டனேனறியாமையறிந்து
கல்லியன்மனத்தைக்கசிவித்துக்கழலடிகாட்டியென்கிளைதலையறுக்கும்
வல்லியல்வானவர்வணங்கநின்றானைவலிவலந்தனில்வந்துகண்டேனே.

கலிவலங்கெடவாரழலோம்புங்கற்றநான்மறைமுற்றனலோம்பும்
வலிவலந்தனில்வந்துகண்டேனெனமன்னுநாவலரூரன்வன்றொண்டன் [ய்
ஞொலிகொளின்னிசைச்செந்தமிழ்பத்துமுள்ளத்தாலுகந்தேத்தவல்லார்போ
மொலியில்வானுலகத்தவரோத்தவிரும்பிவிண்ணுலகெய்துவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மனத்துணைநாதர். தேவியார்-மாழையங்கண்ணி.

இறைஞ்சிப்போந்து பரவையார் திருமாளிகையி லெழுந்தருளி
நிறைந்தவிருப்பின் மேவுநா ணீடுசெல்வத் திருவாரூர்ப்
புறம்புநணிய கோயில்களும் பணிந்துபோற்றிப் புற்றிடமா
யுறைந்தபெருமான் கழல்பிரியா தோவாவின்ப முற்றிருந்தார்.

(இ-ள்.) இறைஞ்சிப்போந்து=வணங்கிச்சென்று; பரவையார்திருமாளிகையி லெழுந்தருளி=பரவைநாச்சியார் திருமாளிகையிலெழுந்தருளி; நிறைந்த விருப்பின்

மேவுநாள்=நிறைந்த பேரன்போடு வீற்றிருந்தருளும் நாளில்; நீடுசெல்வத்திருவாரூர்ப் புறம்புரணிய=மிக்க செல்வத்தையுடைய திருவாரூருக்குப் புறம்பேயிருக்கின்ற; கோயில்களும்பணிந்துபோற்றி=திருக்கோயில்களையும் வணங்கித் துதித்து; புற்றிடமாயுறைந்த பெருமான்கழல்பிரியாது=புற்றை யிடமாகக்கொண்டு வீற்றிருந்தருளும் சிவபிரானது திருவடிகளை நீங்காமல்; ஓவாவின்பமுற்றிருந்தார்=குறையாத பேரானந்தமுற்றிருந்தருளினர்.—எ-று. (ருங)

செறிபுன்சடையார் திருவாரூர்த் திருப்பங்குனியுத் திரத்திருநாள்
குறுகவர லும் பரவையார் கொடைக்குவிழாவிற் குறைவறுக்க
நிறையும்பொன்கொண் டணைவதற்கு நினைந்துநம்பி திருப்புகலூ
ரிறைவர்பாதம் பணியவெழுந் தருளிச்சென்றங் கெய்தினர்.

(இ-ள்.) செறிபுன்சடையார்=நெருக்கமான புல்லிய சடையையுடைய சிவபிரானது; திருவாரூர்த்திருப்பங்குனியுத்திரத்திருநாள்=திருவாரூரில் பங்குனியுத்திரத் திருநாள்; குறுகவரலும்=சமீபமாகவரவும்; பரவையார்கொடைக்குவிழாவிற்குறைவறுக்க=அத்திருவிழாவில் பரவையாரது ஈகைக்குப்பொருளின்மையால்வரும் குறைவை நீக்க; நிறையும்பொன்கொண்டணைவதற்குநம்பிநினைந்து=அதற்குவேண்டும் பொன்னைக் கொண்டுவர நம்பியாரூரர் கருதி; திருப்புகலூரிறைவர்பாதம்பணிய=திருப்புகலூரின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரான் திருவடிகளை வணங்கும்படி; எழுந்தருளிச்சென்றங்கெய்தினர்=எழுந்தருளிச்சென்று அத்திருப்புகலூரை யடைந்தார்.—எ-று. (ருச)

சென்றுவிரும்பித் திருப்புகலூர்த் தேவர்பெருமான் கோயின்மணி
முன்றிற்பணிந்து வலங்கொண்டு முதல்வர்முன்பு வீழ்ந்திறைஞ்சித்
தொன்றுமரபி னடித்தொண்டு தோய்ந்தவன்பிற் றுதித்தெழுந்து
நின்றுபதிக விசைபாடி நினைந்தகருத்து நிகழ்விப்பார்.

(இ-ள்.) சென்றுவிரும்பி=அவர் எழுந்தருளி விருப்பத்தோடு; திருப்புகலூர்த் தேவர்பெருமான்கோயில்=திருப்புகலூரின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரான் திருக்கோயிலிலுள்ள; மணிமுன்றில்பணிந்துவலங்கொண்டு=அழகிய திருமுன்றிலில் வணங்கி வலமாகவந்து; முதல்வர்முன்புவீழ்ந்திறைஞ்சி=சிவபிரான் திருமுன்னே வீழ்ந்து வணங்கி; தொன்றுமரபினடித்தொண்டுதோய்ந்தவன்பிற்றுதித்தெழுந்து=பழைய முறைமையையுடைய திருவடித்தொண்டமைந்த அன்பினால் துதிசெய்தெழுந்து; நின்று பதிகவிசைபாடி=அங்குநின்று திருப்பதிக இசையைப்பாடி; நினைந்தகருத்துநிகழ்விப்பார்=தம் உளத்து நிகழ்ந்த கருத்தைக் குறிப்பால் வெளிப்படுத்துவாராயினர்.—எ-று.

சிறிதுபொழுது கும்பிட்டுச் சிந்தைமுன்ன மங்கொழிய
வறிதுபுறம்போந் தருளியயன் மடத்திலணையார் வன்றொண்ட
ரறிவுகூர்ந்த வன்பருட னணிமுன்றிலினோ ரருகிருப்ப
மறிவண்கையா ரருளேயோ மலர்க்கண்டுயில்வந் தெய்தியதால்.

(இ-ள்.) வன்றொண்டர்=அவர்; சிறிதுபொழுதுகும்பிட்டு=அவ்விடத்துச் சிறிதுநேரம் நின்றுவணங்கி; சிந்தைமுன்னமங்கொழிய=தம் கருத்தானது முற்பட்டு அச்சிவபிரானிடத்து நின்றுவிட; வறிதுபுறம்போந்தருளி=தாம் தனியே புறம்பிற்சென்றருளி; அயன்மடத்திலணையார்=அருகிலுள்ள திருமடத்திற்செல்லாதவராய்; அறிவுகூர்ந்தவன்பருடன்=அறிவுமிக்க அடியார்களோடு; மணிமுன்றிலினோரருகிருப்ப=அழகிய திருமுற்றத்து ஓர்பக்கலிலிருக்க; மறிவண்கையாரருளேயோ=மான்கன்றையேந்திய

திருக்கரத்தையுடைய சிவபிரான் திருவருள்தானே; மலர்க்கண்டுயில்வந்தெய்தியது= அவர்க்கு மலர்போலுங் கண்களில் உறக்கம் வந்தது.—எ-று. ஆல்-அசை. (சஅ)

துயில்வந்தெய்தத் தம்பிரான் றோழராங்குத் திருப்பணிக்குப்
பயிலுஞ்சுடுமட் பலகைபல கொணர்வித்துயரம் பண்ணித்தே
னயிலுஞ்சுரும்பார் மலர்ச்சிகழி முடிமேலணியா வுத்தரிய
வெயிலுமிழியவெண் பட்டதன்மேல் விரித்துப்பள்ளி மேவினார்.

(இ-ள்) துயில்வந்தெய்த=நித்திரைவர; தம்பிரான்றோழர்=நம்பியாரூரர்; அங்குத்திருப்பணிக்குப்பயிலும்=அவ்விடத்துத் திருப்பணிக்காக வைத்திருக்கும்; சுடுமட்பலகைபலகொணர்வித்துயரம்பண்ணி=சுட்ட செங்கற்பலகை பலவற்றைக்கொண்டுவரும்படி செய்வித்துத் திருமுடிக்கு உயரமாக அடுக்கி; தேனயிலுஞ்சுரும்பார்மலர்ச்சிகழிமுடி=தேனை உண்ணாநிற்கும் வண்டுகள் ஆரவாரிக்கின்ற மலராலாகிய மாலைமுடியை; மேலணியா=அதன்மேல் வைத்து; அதன்மேல்=அம்மாலை முடியின்மேல்; உத்தரியவெயிலுமிழியவெண்பட்டுவிரித்து=உத்தரியமாகிய ஒளிவீசும் வெண்பட்டை விரித்து; பள்ளிமேவினார்=பள்ளிகொண்டருளினார்.—எ-று.

சிகழிமுடியென்றது=மாலையின்கற்றை, நாற்றுமுடியென்றாற்போலக்கொள்க. இனி இவ்வாறன்றி மட்பலகைகொணர்வித் துயரம்பண்ணி அதன்மேல் வெண்பட்டு விரித்து, சுரும்பார்மலர்ச்சிகழி முடிமேலணியா=திருமுடியை அதன்மேல் வைத்துப் பள்ளிமேவினார் என்றுரைத்தலுமொன்று. (சகூ)

சுற்றுமிருந்த தொண்டர்களுந் துயிலுமளவிற் றுணைமலர்க்கண்
பற்றுந்துயினீங் கிடப்பள்ளி யுணர்ந்தார்பரவை கேள்வனார்
வெற்றிவிடையா ரருளாலே வேமண்கல்லே விரிசுடர்ச்செம்
பொற்றிண்கனக மாக்கண்டு புகலூரிறைவ ரருள்போற்றி.

(இ-ள்.) சுற்றுமிருந்ததொண்டர்களுந்துயிலுமளவில்=நாற்புறமும் நெருங்கியிருந்த அடியார்களும் உறங்கும்போது; துணைமலர்க்கண்பற்றுந்துயினீங்கிட=மலர்போலும் இரண்டுகண்களிலும் சம்பந்தித்த நித்திரை நீங்க; பரவைகேள்வனார்பள்ளியுணர்ந்தார்=நம்பியாரூரர் துயிலெழுந்தார்; வெற்றிவிடையாரருளால்=அவர் வென்றிதங்கிய இடபத்தை வாகனமாகக்கொண்டருளும் சிவபிரான் திருவருளால்; வேமண்கல்லே=சுட்ட இட்டிகைகளே; விரிசுடர்ச்செம்பொற்றிண்கனகமாக்கண்டு=விரிந்த ஒளியைவீசும் சிவந்த மாற்றுயர்ந்த திண்ணிய பொன்னுகக்கண்டு; புகலூரிறைவரருள்போற்றி=திருப்புகலூரில் வீற்றிருந்தருளும் வர்த்தமானேசரது திருவருளைத்துதித்து.-எ-று. ஏ-அசை. (ருo)

தொண்டருணர மகிழ்ந்தெழுந்து துணைக்கைக்கமல முகைதலைமேற்
கொண்டுகோயி லுட்புக்குக் குறிப்பிலடங்காப் பேரன்பு
மண்டுகாத லுறவணங்கி வாய்த்தமதுர மொழிமாலை
பண்டங்கிசையிற் றம்மையே புகழ்ந்தென்றெடுத்துப் பாடினார்.

(இ-ள்.) தொண்டருணரமகிழ்ந்தெழுந்து=அடியார்களும் துயில்நீங்க மகிழ்ச்சிகொண்டெழுந்து; துணைக்கைக்கமலமுகைதலைமேற்கொண்டு=இருகரங்களாகிய தாமரைமுகுளங்களைச் சிரமேற்குவித்துக்கொண்டு; கோயிலுட்புக்கு=திருக்கோயிலினுள்ளே புகுந்து; குறிப்பிலடங்காப்பேரன்புமண்டு=மதிப்பிலடங்காப் பேரன்பு நிறைந்த; காதலுறவணங்கி=விருப்போடு நிலமுறச்சாட்டாங்கம் வணங்கி; வாய்த்தமதுரமொழி

மாலை=சிறந்த மதுரமொழிகளாலமைந்த திருப்பதிகமாலையை; பண்டங்கிசையில்=பண்ணமைந்த இசையோடு; தம்மையேபுகழ்ந்தென் றெடுத்துப்பாடினார்=தம்மையே புகழ்ந்தென்று முதலெடுத்துப்பாடியருளினார். —எ-று. இவ்விரண்டுங்குளகம். (ருக)

## திருப்புகலூர் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

தம்மையேபுகழ்ந் திச்சைபேசினுஞ் சார்வினுந்தொண்டர் தருகிலாப்
பொய்ம்மையாளரைப் பாடாதேயெந்தை புகலூர்பாடுமின் புலவீர்கா
ளிம்மையேதருஞ் சோறுங்கூறையு மேத்தலாமிடர் கெடலுமா
மம்மையேசிவ லோகமாள்வதற் கியாதுமையுற வில்லையே. (க)

மிடுக்கிலாதானை வீமனேவிறல் விசயனேவில்லுக் கிவனென்று
கொடுக்கிலாதானைப் பாரியேயென்று கூறினுங்கொடுப் பாரிலை
பொடிக்கொண்மேனியெம் புண்ணியன்புக லூரைப்பாடுமின் புலவீர்கா
ளடுக்குமேலம ருலகமாள்வதற் கியாதுமையுற வில்லையே. (உ)

காணியேற்பெரி துடையனேகற்று நல்லனேசுற்ற நன்கிளை
பேணியேவிருந் தோம்புமேயென்று பேசினுங்கொடுப் பாரிலை
பூணிபூண்டுழல் புட்சிலம்புதண் புகலூர்பாடுமின் புலவீர்கா
ளாணியாயம ருலகமாள்வதற் கியாதுமையுற வில்லையே. (ங)

நரைகள்போந்துமெய் தளர்ந்துமூத்துட னடுங்கிநிற்குமிக் கிழவனை
வரைகள்போற்றிற லோனேயென்று வாழ்த்தினுங் கொடுப்பாரிலை
புரைவெள்ளேறுடைப் புண்ணியன்புக லூரைப்பாடுமின் புலவீர்கா
ளரையனாயம ருலகமாள்வதற் கியாதுமையுற வில்லையே. (ச)

வஞ்சநெஞ்சனை மாசழக்கனைப் பாவியைவழக் கில்லியைப்
பஞ்சதுட்டனைச் சாதுவேயென்று பாடினுங்கொடுப் பாரிலை
பொன்செய்செஞ்சடைப் புண்ணியன்புக லூரைப்பாடுமின் புலவீர்கா
ணெஞ்சினோயறுந் துஞ்சபோவதற் கியாதுமையுற வில்லையே. (ரு)

நலமிலாதானை நல்லனேயென்று நரைத்தமாந்தனை யிளையனேயென்றுங்
குலமிலாதானைக் குலவனேயென்று கூறினுங்கொடுப் பாரிலை
புலமெலாம்வெறி கமழும்பூம்புக லூரைப்பாடுமின் புலவீர்கா
ளலமராதம ருலகமாள்வதற் கியாதுமையுற வில்லையே. (சா)

நோயனைத்தடந் தோளனேயென்று நொய்யமாந்தரை விழுமிய
தாயன்றோபுல வோர்க்கெலாமென்று சாற்றினுங்கொடுப் பாரிலை
போயுழன்றுகண் குழியாதேயெந்தை புகலூர்பாடுமின் புலவீர்கா
ளாயமின்றிப்போ யண்டமாள்வதற் கியாதுமையுற வில்லையே. (எ)

எள்விழுந்திடம் பார்க்குமாகிலு மீக்குமீகில னாகிலும்
வள்ளலேயெங்கண் மைந்தனேயென்று வாழ்த்தினுங்கொடுப் பாரிலை

புள்ளெலாஞ்சென்று சேரும்பூம்புக லூரைப்பாடுமின் புலவீர்கா
ள்ளப்பட்டமூங் தாதுபோவதற் கியாதுமையுற வில்லையே. (அ)

கற்றிலாதானைக் கற்றுநல்லனே காமதேனுவை யொக்குமே
முற்றிலாதானை முற்றனேயென்று மொழியினும்கொடுப் பாரிலை
பொத்திலாந்தைகள் பாட்டமூப்புக லூரைப்பாடுமின் புலவீர்கா
ளத்தனுயம ருலகமாள்வதற் கியாதுமையுற வில்லையே. (கூ)

தையலாருக்கோர் காமனேயென்றுஞ் சாலநல்லழ குடையனே
கையுலாவிய வேலனேயென்று கழறினுங்கொடுப் பாரிலை
பொய்கைவாவியின் மேதிபாய்புக லூரைப்பாடுமின் புலவீர்கா
ளையனுயம ருலகமாள்வதற் கியாதுமையுற வில்லையே. (௧0)

செறுவினிற்செழுங் கமலமோங்குதென் புகலூர்மேவிய செல்வனை
நறவம்பூம்பொழி னாவலூரன்வ னப்பகையப்பன் சடையன்றன்
சிறுவன்வன்றொண்ட னூரன்பாடிய பாடல்பத்திவை வல்லவ
ரறவனுரடிச் சென்றுசேர்வதற் கியாதுமையுற வில்லையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பதிகம்பாடித் திருக்கடைக்காப் பணிந்துபரவிப் புறம்புபோந்
தெதிரிலின்ப மிம்மையே தருவாரருள்பெற் றெழுந்தருளி
நிதியின்குவையு முடன்கொண்டு நிறையுநதியுங் குறைமதியும்
பொதியுஞ்சடையார் திருப்பனையூர் புகுவார்புரிநூன் மணிமார்பர்.

(இ-ள்.) பதிகம்பாடித்திருக்கடைக்காப்பணிந்து=திருப்பதிகம்பாடி அதில் திருக்கடைக்காப்பையுமமைத்து; பரவிப்புறம்புபோந்து=துதித்துப் புறம்பேசென்று; எதிரிலின்பமிம்மையேதருவாரருள்பெற்று=ஒப்பற்ற இன்பத்தை இம்மையேதரும் பிரானுரது திருவருளைப்பெற்று; எழுந்தருளி=அங்குநின்றும் புறப்பட்டு; நிதியின்குவையுமுடன்கொண்டு=பொற்குவைகளையும் தம்முடன் எடுத்துக்கொண்டு; நிறையுநதியுங்குறைமதியும்பொதியும்=நிறைந்த கங்கைநதியும் குறைந்த இளம்பிறையும் தங்கியிருக்கும்; சடையார்திருப்பனையூர்=சடைமுடியையுடைய சிவபிரானது திருப்பனையூரை; புரிநூன்மணிமார்பர்புகுவார்=முப்புரிநூலையணிந்த அழகிய திருமார்பினையுடைய நம்பியாரூரர் அடைவாராயினர்.—எ-று. (௫உ)

செய்யசடையார் திருப்பனையூர்ப் புறத்துத்திருக்கூத் தொடுங்காட்சி
யெய்தவருள வெதிர்சென்றங் கெழுந்தவிருப்பால் விழுந்திறைஞ்சி
யையராங்கிலாடுமோ வல்லாரவரோ யழகியரொன்
றுய்யவுலகு பெறும்பதிகம் பாடியருள்பெற் றுடன்போந்தார்.

(இ-ள்.) செய்யசடையார்=சிவந்த சடைமுடியையுடைய சிவபிரான்; திருப்பனையூர்ப்புறத்து=திருப்பனையூரின்கண்; திருக்கூத்தொடுங்காட்சியெய்தவருள=திருக்கூத்தொடுங் காட்சிகொடுத்தருள; எதிர்சென்றங்கெழுந்தவிருப்பால்விழுந்திறைஞ்சி=அத்திருப்பதியின் எதிரேசென்று தந்திருவுளத்துதித்த பெருவிருப்பால் நிலமுற விழுந்து சாட்டாங்கமாக வணங்கி; அய்யராங்கிலாடுமோவல்லாரவரேயழகியரொன்று=



பரவையாருக்கு பங்குனி உத்திரத்திருவிழாச்செலவிற்குப் பொருள்வேண்டித் திருப்புகலூரைப்பணிந்து பதிகமோதினபின் ஆலயத்திருப்பணிக்கு வருவித்த அங்குள்ள செங்கல்லை உயர்த்தித் தலையணையாகச்செய்து உத்தரீயத்தை அதன்மீது விரித்து நித்திரைசெய்து விழித்தெழுந்தபின், அக்கற்களெல்லாம் பொற்கற்களாகக்கண்டு திருவருளைச்சிந்தித்து ஆலயத்திற்சென்று பணிந்து திருவாரூரையடைந்தது.

பிரானார் அரங்கின்கண் ஆடுமாறு வல்லாரவரேயழகியரென்று தாமெடுத்த பதிகச்செய்யுளினிறுதியில் வைத்து; உய்யவுலகுபெறும்பதிகம்பாடி=உலகுய்தற்கேதுவாக விருக்குந் திருப்பதிகம்பாடி; அருள்பெற்றுடன்போந்தார்=சிவபிரான் திருவருள்பெற்று அடியார் கூட்டத்துடனே ஆலயத்தினின்றும் புறம்பே யெழுந்தருளினார்.—எ-று.(௫௩)

## திருப்பனையூர் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

மாடமாளிகை கோபுரத்தொடு மண்டபம்வளரும் வளர்பொழிற்
பாடல்வண்டறையும் பழனத்திருப்பனையூர்
தோடுபெய்தொரு காதினிற்குழை தூங்கத்தொண்டர்க டுள்ளிப்
பாடநின்றாடுமாறுவல்லா ரவரேயழகியரே.

வஞ்சிநுண்ணிடை மங்கைபங்கினர் மாதவர்வளரும் வளர்பொழிற்
பஞ்சின்மெல்லடியார் பயிலுந்திருப்பனையூர்
வஞ்சியும்வளர் நாவலூரன் வனப்பகையப்பன் வன்றொண்டன்
செஞ்சொற்கேட்டுகப்பா ரவரேயழகியரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சவுந்தரேசர், தேவியார்-பெரியநாயகி.

---

வளமல்கியசீர்த் திருப்பனையூர் வாழ்வாரேத்த வெழுந்தருளி
யளவில்செம்பொ னிட்டிகைக ளாண்மேனெருங்கி யணியாரூர்த்
தளவமுறுவற் பரவையார் தம்மாளிகையிற் புகத்தாமு
முளமன்னியதம் பெருமானார் தம்மைவணங்கி யுவந்தணைவார்.

(இ-ள்.) வளமல்கியசீர்த்திருப்பனையூர்=வளம் நிறைந்த சிறப்பினையுடைய திருப்பனையூரின்கண்; வாழ்வாரேத்தவெழுந்தருளி=வாழும் அடியார்கள் துதிசெய்ய அங்குநின்றும் எழுந்தருளி; அளவில்செம்பொனிட்டிகைகள்=மாற்றுயர்ந்த செம்பொன்னாலமைந்த இட்டிகைகள்; ஆண்மேனெருங்கி=சுமையாளின்மேலெடுக்கப்பட்டு; அணியாரூர்த்தளவமுறுவற்பரவையார்தம்மாளிகையிற்புக=அழகிய திருவாரூரின்கணுள்ள முல்லையரும்புபோலும் பற்களையுடைய பரவைநாச்சியார் திருமாளிகையிற்செல்ல; தாமுமுளமன்னியதம்பெருயானார்தம்மைவணங்கி=நாயனாரும் தம் திருவுள்ளத்து வீற்றிருந்தருளும் தம் முதல்வராகிய புற்றிடங்கொண்டாரை வணங்கி அவரது திருவருளைப் பெற்று; உவந்தணைவார்=மனமகிழ்ந்து பரவையார் திருமாளிகையிலெழுந்தருள்வாராயினார்.—எ-று.

செம்பொனிட்டிகை=பொற்செங்கல். மன்னுதல்=எக்காலத்தும் இடையறாதிருத்தல். நம்பியாரூரர் திருவுள்ளத்து அன்பின்வழித்தாயகலப்பால் நீங்காதிருத்தலின் மன்னிய என்றார். (௫௪)

வந்துபரவைப் பிராட்டியார் மகிழவைகி மருவுநா
ளந்தணாரூர் மருங்கணிய கோயில்பலவு மணைந்திறைஞ்சிச்
சிந்தைமகிழ விருப்பினொடுந் தெய்வப்பெருமா டிருவாரூர்
முந்திவணங்கி யினிதிருந்தார் முனைப்பாடியர்தங் காவலனார்.

(இ-ள்.) வந்துபரவைப்பிராட்டியார்மகிழவைகிமருவுநாள்=பரவையார் திருமாளிகையிற்புகுந்து அவர் மகிழும்படி அங்கு வீற்றிருந்தருளுநாளில்; அந்தணரூர் மருங்கு=அழகிய தட்பமுள்ள திருவாரூரினருகில்; அணியகோயில்பலவுமணைந்திறைஞ்சி=அணித்தாயுள்ள திருக்கோயில்கள் பலவற்றையும் சென்று வணங்கி, சிந்தைமகிழ்விருப்பினொடும்=திருவுள்ளமகிழப் பெருவிருப்பினோடும்; தெய்வப்பெருமான்றிருவாரூர்முந்திவணங்கி=தெய்வத்தன்மையுள்ள தியாகப்பெருமான் வீற்றிருந்தருளும் திருவாரூரையடைந்து வணங்கி: இனிதிருந்தார்முனைப்பாடியர்தங்காவலனார்=அங்கு பரவையார் திருமாளிகையில் வீற்றிருந்தருளினார் திருமுனைப்பாடிநாட்டிலுள்ளார்க்கு முதல்வராகிய நம்பியாரூரர்.—எ-று. (௫௫)

பலநாளமர்வார் பரமர்திரு வருளாலங்கு நின்றும்போய்ச்
சிலைமாமேரு வீரனார் திருநன்னிலத்துச் சென்றெய்தி
வலமாவந்து கோயிலினுள வணங்கிமகிழ்ந்து பாடினார்
தலமார்கின்ற தண்ணியல்வெம் மையினொன்னுந் தமிழ்மாலை.

(இ-ள்.) பலநாளமர்வார்=திருவாரூரில் பரவையார் திருமாளிகையில் பலதினம் வீற்றிருந்தருளும் நம்பியாரூரர்; பரமர்திருவருளாலங்குநின்றும்போய்=சிவபிரான் திருவருளால் அத்திருப்பதியினின்றும் நீங்கி; சிலைமாமேருவீரனார்=மேருமலையை வில்லாகவுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும்; திருநன்னிலத்துச்சென்றெய்தி=திருநன்னிலத்துப் பெருங்கோயிலையடைந்து; வலமாவந்துகோயிலினுள்வணங்கி=வலமாக வந்து திருக்கோயிலினுள் வணங்கி; தலமார்கின்றதண்ணியல்வெம்மையினொன்னுந் தமிழ்மாலை=நிலவுலகின்கண் விளங்கியிருக்கும் தண்ணியல் வெம்மையினொன்னுந் திருப்பதிகத்தை; மகிழ்ந்துபாடினார்=திருவுளமகிழ்ந்து பாடியருளினார்.—எ-று. (௫௬)

## திருநன்னிலத்துப்பெருங்கோயில்-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

தண்ணியல்வெம்மையினான்றலையிற்கடைதோறும்பலி
பண்ணியன்மென்மொழியாரிடக்கொண்டுழல்பண்டரங்கன்
புண்ணியநான்மறையோர்முறையாலடிபோற்றிசைப்ப
நண்ணியநன்னிலத்துப்பெருங்கோயினயந்தவனே.

கோடுயர்வெங்களிற்றுத்திகழ்கோச்செங்கணான்செய்கோயி
னாடியநன்னிலத்துப்பெருங்கோயினயந்தவனைச்
சேடியல்சிங்கிதந்தைசடையன்றிருவாரூரன்
பாடியபத்தும்வல்லார்புகுவார்பரலோகத்துள்ளே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பிரகேசுவரர், தேவியார்-பிரகேசுவரி.

---

பாடியங்கு வைகியபின் பரமர்வீழி மிழலையினி
னீடுமறையான் மேம்பட்ட வந்தணாளர் நிறைந்தீண்டி
நாடுமகிழ வவ்வளவு நடைக்காவணம்பா வாடையுடன்
மாடுகதலி பூகநிரை மல்கவணித்தோ ரணநிரைத்து.

(இ-ள்.) பாடியங்குவைகியபின்=திருப்பதிகம்பாடி அவர் அத்திருப்பதியில் வீற்றிருந்தருளியபின்; பரமர்வீழிமிழலையினில்=சிவபிரான் வீற்றிருந்தருளும் திருவீழி

மிழலையென்னுந் திருப்பதியில்; நீடுமறையான்மேம்பட்ட=உயர்ந்த வேதவொழுக்கத்தால் மேம்பட்ட; அந்தணாளர்நிறைந்தீண்டி=மறையவர்கள் சேர்ந்து நெருங்கி; நாடுமகிழ=அந்நாட்டுள்ளார் மகிழும்படி; அவ்வளவுநடைக்காவணம்பாவாடையுடன்=அவ்வூரெல்லைமுதல் நடைப்பந்தர் பாவாடையோடு; மாடுகதலிபூகநிரைமல்க=இருமருங்கும் வாழைகமுகள் வரிசையாக நெருங்க; மணித்தோரணநிரைத்து=அழகிய மகரதோரணங்களை வரிசையாகத்தூக்கி.—எ-று. (௫௭)

வந்துநம்பி தம்மையெதிர் கொண்டுபுக்கார் மற்றவருஞ்
சிந்தைமலர்ந்து திருவீழி மிழலையிறைஞ்சிச் சேண்விசும்பின்
முந்தையிழிந்த மொய்யொளிசேர் கோயிறன்னை முன்வணங்கிப்
பந்தமறுக்கு நம்பெருமான் பாதம்பரவிப் பணிகின்றார்.

(இ-ள்.) வந்துநம்பிதம்மையெதிர்கொண்டுபுக்கார்=நம்பியாரூரரிடைச்சென்று அவரை எதிர்கொண்டழைத்துச்சென்றார்கள்; மற்றவரும்=அந்நம்பியாரூரரும்; சிந்தைமலர்ந்துதிருவீழிமிழலையிறைஞ்சி=இதயமலர்ந்து திருவீழிமிழலையை வணங்கி; சேண்விசும்பின்முந்தையிழிந்த=உயர்ந்த விண்ணுலகினின்றுந் திருமால் ஆணையால் முன்னாளிறங்கிய; மொய்யொளிசேர்கோயிறன்னைமுன்வணங்கி=மிக்க ஒளியினையுடைய விமானக்கோயிலை முன்னே வணங்கி; பந்தமறுக்குநம்பெருமான்பாதம்பரவிப்பணிகின்றார்=ஆணவாதி பாசங்களின் தளைகளை நீக்கியருளுநம்முதல்வரது திருவடிகளைத் துதித்து வணங்குவாராயினார்.—எ-று. இவ்விரண்டுங் குளகம். (௫௮)

படங்கொளரவிற் றுயில்வோனும் பதுமத்தோனும் பரவரிய
விடங்கன் விண்ணோர் பெருமானை விரவும்புளக முடன்பரவி
யடங்கல்வீழி கொண்டிருந்தீ ரடியேனுக்கு மருளுமெனத்
தடங்கொள்செஞ்சொற் றமிழ்மாலை சாத்தியங்குச் சாருநாள்.

(இ-ள்.) படங்கொளரவிற்றுயில்வோனும்=அவர் படம்பொருந்திய சேடசயனத்திற் பள்ளிகொள்ளுந் திருமாலும்; பதுமத்தோனும்பரவரிய=தாமரைமலரில் வீற்றிருந்தருளும் பிரமனும் துதித்தற்கரிய; விடங்கன்விண்ணோர்பெருமானை=ஒளிவடிவாய் நிறைந்த திருமேனியையுடைய சிவபிரானை, விரவும்புளகமுடன்பரவி=திருமேனியிற்கலந்த உரோமாஞ்சிதங்களோடு துதித்து, அடங்கல்வீழிகொண்டிருந்தீரடியேனுக்குமருளுமென=அடங்கல்வீழிகொண்டீரடியேற்கு மருளுதிரோ வென்னுஞ் செய்யுளிறுதியையுடைய; தடங்கொள்செஞ்சொற்றமிழ்மாலைசாத்தி=பெருமைமிக்க செஞ்சொல்லாலாகிய திருப்பதிகமாலையைப்பாடி; அங்குச்சாருநாள்=அத்திருப்பதியில் வீற்றிருக்கும்நாளில்.—எ-று. (௫௯)

## திருவீழிமிழலை-பண்-சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

விடங்கொண்மாமிடற்றீர்வெள்ளைச்சுருளொன்றிட்டுவிட்டகாதினீரென்று
திடங்கொள்சிந்தையினார்கலிகாக்குந்திருமிழலை
மடங்கல்பூண்டவிமானமுமண்மிசைவந்திழிச்சியவானநாட்டையு
மடங்கல்வீழிகொண்டீரடியேற்குமருளுதிரே.

வேதவேதியர்வேதநீதியவோதுவார்விரிநீர்மிழலையு
ளாதிவீழிகொண்டீரடியேற்குமருளுமென்று

நாதகீதம்வண்டோதுவார்பொழிலுவலூரன்வன்றொண்டனற்றமிழ்
பாதமோதவல்லார்பரனோடுகூடுங்கவரே.

திருச்சிற்றம்பலம்.

வாசியறிந்து காசளிக்க வல்லமிழலை வாணர்பாற்
றேசுமிக்க திருவருண்முன் பெற்றுத்திருவாஞ் சியத்தடிகள்
பாசமறுத்தாட் கொள்ளுந்தாள் பணிந்துபொருவ னொன்னு
மாசில்பதிகம் பாடியமர்ந் தரிசிற்கரைப்புத் தூரணைந்தார்.

(இ-ள்.) வாசியறிந்துகாசளிக்கவல்ல மிழலைவாணர்பால்=அவர் காசளிக்குங்கால் இக்காசு வாசியுடைத்தென்பதையறிந்து ஆளுடையபிள்ளையாருக்குக் கொடுக்கவல்ல திருவீழிமிழலையையுடைய சிவபிரானிடத்து; தேசுமிக்கதிருவருண்முன்பெற்று= ஒளிமிக்க திருவருளை முன்னே பெற்று; திருவாஞ்சியத்தடிகள்=திருவாஞ்சியமென்னுந் திருப்பதியில் வீற்றிருந்தருளுஞ் சிவபிரானது; பாசமறுத்தாட்கொள்ளுந்தாள்பணிந்து=மலமாயாகன்மங்களை நீக்கிச் சார்ந்தாரை யடிமைக்கொண்டருளும் திருவடிகளை வணங்கி; பொருவனொன்னுமாசில்பதிகம்பாடியமர்ந்து=பொருவனொன்னு முதலையுடைய குற்றமற்ற திருப்பதிகம்பாடி வீற்றிருந்து; அரிசிற்கரைப்புத்தூரணைந்தார்= அரிசிற் கரைப்புத்தூரை யடைந்தருளினார்.—எ-று.

வாசியறிந்து காசளித்தல் என்பது-ஆளுடையபிள்ளையாருக்குப் பாடுந் தொண்டு ஒன்றுநோக்கி வாசிபடக் காசளித்த சரிதம். இதை அவர் புராணத்தாலுணர்க. மூர்ச்சாமோகம்-பிரக்ஞாமோகம் என்னும் இருவகை மறப்பை விளக்கும் அகவிருளாகிய அஞ்ஞானத்தை யோட்டும் அந்தரங்க ஒளியாதலின் தேசுமிக்க திருவருள் என்றார்.(சு0)

## திருவாஞ்சியம்-பண்-பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பொருவனார்புரிநூலர்புணர்முலையுமையவளோடு
மருவனார்மருவார்பால்வருவதுமில்லைநம்மடிக
டிருவனார்பணிந்தேத்துந்திருவாஞ்சியத்துறையு
மொருவனாரடியாரையூழ்வினைநலியவொட்டாரே.

செந்நெலங்கழனித்திகழ்திருவாஞ்சியத்துறையு
மின்னலங்கலஞ்சடையெம்மிறைவனதறைகழல்பரவும்
பொன்னலங்கலநன்மாடப்பொழிலணிநாவலூரன்
பன்னலங்கலநன்மாலைபாடுமின்பத்தருளீரே.

திருச்சிற்றம்பலம்.

---

செழுநீர்நறையூர் நிலவுதிருச் சித்தீச்சரமும் பணிந்தேத்தி
விழுநீர்மையினிற் பெருந்தொண்டர் விருப்பினோடு மெதிர்கொள்ள
மழுநீடிளமான் கரதலத்தி னுடையார்திருப்புத் தூர்வணங்கித்
தொழுநீர்மையினிற் றுதித்தேத்தித் தொண்டர்சூழ வுறையுநாள்.

(இ-ள்.) செழுநீர்நறையூர்நிலவு=அவர் குளிர்ந்த நீர் வளந்தங்கிய திருநறையூரின்கண் விளங்கும்; திருச்சித்தீச்சரமும்பணிந்தேத்தி=திருச்சித்தீச்சரமென்னும் திருப்பதியையும் வணங்கித்துதித்து; விழுநீர்மையினிற்பெருந்தொண்டர்=வணங்கிய பத்திமையினாற் பெரிய தொண்டர்கள்; விருப்பினோடுமெதிர்கொள்ள=பெருவிருப்போடும் எதிர்கொண்டுவர; மழுவோடிளமான்கரதலத்திலுடையார்=மழுவோடு மான்கன்றைத் திருக்கரத்திலேந்திய சிவபிரான் வீற்றிருந்தருளும்; திருப்புத்தூர்வணங்கி=திருப்புத்தூரை வணங்கி; தொழுநீர்மையினிற்றுதித்தேத்தி=வணங்கு மியல்போடு வணங்கித்துதித்து; தொண்டர்சூழவுறையுநாள்=அடியார்கள் தம்மைச்சூழும்படி வீற்றிருந்தருளும் நாளில்.—எ-று.

திருப்புத்தூரடைந்தாரொன்று முதற்செய்யுளினிறுதிக்கட்கூறித் திருச்சித்தீச்சரம் பணிந்தேத்தித் திருப்புத்தூர் வணங்கி யுறையுநாளென்று முடித்ததனால் அரிசிற்கரைப்புத்தூரின் ஓர்பாலுள்ளது திருநறையூர்ச் சித்தீச்சரமென்பது பெறும். (சுக)

## திருநறையூர்ச்சித்தீச்சரம்-பண்-கவுசிகம்.

திருச்சிற்றம்பலம்.

நீரும்மலருநிலவுஞ்சடைமே
லூரும்மரவம்முடையானிடமாம்
வாரும்மருவிமணிபொன்கொழித்துச்
சேருந்நறையூர்ச்சித்தீச்சரமே.

போரார்புரமெய்புனிதன்னமருஞ்
சீரார்நறையூர்ச்சித்தீச்சரத்தை
யாரூரன்சொல்லிவைவல்லவர்க
ளேராரிமையோருலகெய்துவரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சித்தநாதேசுரர், தேவியார்-அழகாம்பிகை.

---

புனிதனார்முன் புகழ்த்துணையார்க் கருளுந்திறமும் போற்றிசைத்து
முனிவர்போற்ற வெழுந்தருளி மூரிவெள்ளக் கங்கையினிற்
பனிவெண்டிங்க ளணிசடையார் பதிகள்பலவும் பணிந்துபோந்
தினியநினைவி லெய்தினா ரிறைவர்திருவா வடுதுறையில்.

(இ-ள்.) புனிதனார்முன்புகழ்த்துணையார்க்கருளுந்திறமும்போற்றிசைத்து=சிவபிரான் முன்னாளில் புகழ்த்துணைநாயனாருக்கு அத்திருப்புத்தூரில் படிக்காசு கொடுத்த கருணையையும் திருப்பதிகத்தில் துதித்து; முனிவர்போற்றவெழுந்தருளி=அடியார் குழாங்கள் துதிக்க அங்குநின்றும் எழுந்தருளி; மூரிவெள்ளக்கங்கையினில்=வலிய வெள்ளநீராகிய கங்கைநதியில்; பனிவெண்டிங்களணிசடையார்=குளிர்ந்த வெள்ளிய இளம்பிறையையணிந்த சடைமுடியையுடைய சிவபிரானது; பதிகள்பலவும்பணிந்துபோந்து=பல திருப்பதிகளையும் வணங்கிச்சென்று; இறைவர்திருவாவடுதுறையில்=அவர் வீற்றிருந்தருளும் திருவாவடுதுறையில்; இனியநினைவிலெய்தினார்=இனிய கருத்தோடு மடைந்தார்.—பதிகள் பிறபணிந்து... (சுஉ)

## அரிசிற்கரைப்புத்தூர் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

மலைக்குமகளஞ்சமதகரியையுரித்திட்டெரித்தீர்வருமுப்புரங்கள் [ழியீர்
சிலைக்குங்கொலைச்சேவுகந்தேற்றொழியீர் சில்பலிக்கில்டோறுஞ்செலவொ
கலைக்கொம்புக்கரிமருப்புமிடறிக்கலவம்மயிற்பீலியுங்காரகிலு
மலைக்கும்புனல்சேரரிசிற்றென்கரையழகார்திருப்புத்தூரழகனீரே.

அகத்தடிமைசெய்யுமந்தணன்றானரிசிற்புனல்கொண்டுவந்தாட்டுகின்றான்,
மிகத்தளர்வெய்திக்குடத்தையுநும்முடிமேல்விழுத்திட்டுநடுங்குதலும்
வகுத்தவனுக்குநித்தற்படியும்வருமென்றொருகாசினைநின்றநன்றிப்
புகழ்த்துணைக்கைபுகச்செய்துகந்தீர்பொழிலார்திருப்புத்தூர்ப்புனிதனீரே.

காரூர்மழைபெய்துபொழியருவிக்கழையோடகிலுந்திட்டிருகரையும்
போரூரின்புனல்சேரரிசிற்றென்கரைப்பொழிலார் திருப்புத்தூர்ப்புனிதர்த
ம்மை, யாரூரனருந்தமிழைந்தினொடைந்தழகாலுரைப்பார்களுங்கேட்பவ
ருஞ், சீரூர்தருதேவர்கணங்களொடுமிணங்கிச்சிவலோகமதெய்துவரே.

திருச்சிற்றம்பலம்.

---

விளங்குந்திருவா வடுதுறையின் மேயார்கோயில் புடைவலங்கொண்
டுளங்கொண்டுருகு மன்பினுட னுள்புக்கிறைஞ்சி யேத்துவார்
வளங்கொள்பதிக மறையவனென் றெடுத்துவளவன் செங்கணான்
றளங்கொள்பிறப்புஞ் சிறப்பித்துத் தமிழ்ச்சொன்மாலை சாத்தினார்.

(இ-ள்.) விளங்குந்திருவாவடுதுறையின்மேயார்=மகிமைவிளங்கிய திருவாவடு துறையின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரானது; கோயில்புடைவலங்கொண்டு=திரு க்கோயிலை வலமாகவந்து; உளங்கொண்டுருகுமன்பினுடன்=அவரைத் தியானித்து க்கொண்டு உருகாநின்ற பேரன்புடனே; உள்புக்கிறைஞ்சியேத்துவார்=ஆலயத்தினு ள்ளே புகுந்து வணங்கித்துதிக்கும் நம்பியாரூரர்; வளங்கொள்பதிகம்மறையவனென் றெடுத்து=சொல்வளம் நிறைந்த திருப்பதிகத்தை மறையவனென்று முதலிலெ டுத்து; வளவன்செங்கணான்=கோச்செங்கட்சோழனது; தளங்கொள் பிறப்புஞ்சிற ப்பித்து=விளக்கமான பிறப்பையுஞ் சிறப்பித்து; தமிழ்ச்சொன்மாலைசாத்தினார்=தமி ழ்ச்சொல்லாலாகிய திருப்பதிகமாலையை யணிந்தார்.—எ-று. (௬௯)

## திருவாவடுதுறை-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்

மறையவனொருமாணிவந்தடையவாரமாயவனருயிர்நிறுத்தக்
கறைகொள்வேலுடைக்காலனைக்காலாற்கடந்தகாரணங்கண்டுகண்டடியே
னிறைவனெம்பெருமானென்றெப்போதுமேத்தியேத்திநின்றஞ்சலிசெய்து
னறைகொள்சேவடிக்கன்பொடுமடைந்தேனாவடுதுறையாதியம்மானே.

தெருண்டவாயிடைநூல்கொண்டுசி[illegible]சிக்கெனவியற்
றச், சுருண்டசெஞ்சடையாயதுதன்னை ர்திருப்புத் தூர்வணங் ர்ச்சிகண்டடி
தொண்டர்குழ வுரை

யேன், புரண்டுவீழ்ந்துநின்பொன்மலர்ப்பாதம் போற்றிபோற்றியென்றன்பொடுபுலம்பி, யிருண்டெடன்மேல்வினைக்கஞ்சிவந்தடைந்தேனுவடுதுறையாதியம்மானே.

ஒக்கமுப்புரமோங்கெரிதூவவுன்னைமுன்னியமூவர் நின்சரணம்
புக்குமற்றவர்பொன்னுலகாளப்புகழினலருளியந்தமையறிந்து
மிக்கநின்கழலேதொழுதரற்றிவேதியாவாதிமூர்த்திநின்னரையில்
அக்கணிந்தவெம்மானுனையடைந்தேனுவடுதுறையாதியெம்மானே.

திருச்சிற்றம்பலம்.

---

சாத்தியங்கு வைகுநாட் டயங்குமன்ப ருடன்கூடப்
போர்த்துமிறைஞ்சி யருள்பெற்றுப் பெண்ணோர்பாகந் தண்ணலார்
தீர்த்தப்பொன்னித் தென்கரைமேற் றிகழும் பதிகள் பலபணிந்து
மூர்த்தியார்தம் மிடைமருதை யடைந்தார்முனைப்பா டித்தலைவர்.

(இ-ள்.) சாத்தியங்குவைகுநாள்=திருப்பதிகமாலையைச்சாத்தி அவ்விடத்து வீற்றிருந்தருளும் நாளில்; தயங்குமன்பருடன்கூட=விளங்கும் அடியாரோடுகூட; போர்த்துமிறைஞ்சியருள்பெற்று=மீண்டும் ஆலயத்திற்சென்று வணங்கிச் சிவபிரான் திருவருள்பெற்று; பெண்ணோர்பாகந்தண்ணலார்=உமாதேவியை ஒருகூற்றிலுடைய முதல்வர் வீற்றிருந்தருளும்; தீர்த்தப்பொன்னித்தென்கரைமேல்=காவிரிநதியின் தென்கரையில்; திகழும்பதிகள்பலபணிந்து=விளங்கியிருக்கும் பல திருப்பதிகளை வணங்கி; மூர்த்தியார்தம்மிடைமருதை=சிவபிரான் வீற்றிருந்தருளும் திருவிடைமருதாரை; அடைந்தார்முனைப்பாடித்தலைவர்=நம்பியாரூரரடைந்தார்.—எ-று.

காவிரிநதியுந் தீர்த்தங்களில் ஒன்றுதலின் தீர்த்தப்பொன்னி என்றார். (கூ௪)

மன்னுமருதி னமர்ந்தவரை வணங்கிமதுரச் சொன்மலர்கள்
பன்னிப்புனைந்து பணிந்தேத்திப் பரவிப்போந்து தொண்டருட
னந்நற்பதியி னிருந்தகல்வா ரரனார்திருநா கேச்சரத்தை
முன்னிப்புக்கு வலங்கொண்டு முதல்வர்திருத்தாள் வணங்கினார்.

(இ-ள்.) மன்னுமருதினமர்ந்தவரைவணங்கி=நிலைபெற்ற திருவிடைமருதூரின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரானை வணங்கி அவர்க்கு; மதுரச்சொன்மலர்கள்பன்னிப்புனைந்து=மதுரமாகிய சொன்மலர்களால் தொடுத்துப் பாமாலை சூட்டி; பணிந்தேத்திப்பரவிப்போந்து=நிலமுறவணங்கித் துதித்துச்சென்று; தொண்டருடனந்நற்பதியினிருந்தகல்வார்=திருக்கூட்டத்துடன் அத்திருப்பதியினின்றும் நீங்கும் நம்பியாரூரர்; அரனார்திருநாகேச்சரத்தை=சிவபிரான் வீற்றிருந்தருளும் திருநாகேச்சரமென்னும் திருப்பதியை; முன்னிப்புக்குவலங்கொண்டு=கருதித் திருக்கோயிலுக்குட்புகுந்து வலமாகவந்து; முதல்வர்திருத்தாள்வணங்கினார்=அங்கு சிவபிரான் திருவடிகளைவணங்கினார்.

பெருகும்பதிகம் பிறையணிவா னுதலாள்பாடிப் பெயர்ந்திறை
திருவின்மலியுஞ் சிவபுரத்துத் தேவர்பெருமான் கழல்வணங்கி
யுருகுஞ்சிந்தை யுடன்போந்தே யுமையோர்பாகர் தாமகிழ்ந்து
மருவும்பதிகள் பிறபணிந்து கலையநல்லூர் மருங்கணைந்தார்.

(இ-ள்.) பெருகும்பதிகம்பிறையணிவாணுதலாள்பாடிப்பெயர்ந்து=அவர் மேன்மைமிக்க பிறையணிவாணுதலாளென்னும் முதலையுடைய திருப்பதிகத்தைப் பாடியருளி அங்குநின்றும் நீங்கி; நிறைதிருவின்மலியும்=நிறைந்த செல்வத்தால் மிக்க; சிவபுரத்துத்தேவர்பெருமான்கழல்வணங்கி=சிவபுரத்தின்கண்வாழும் சிவபிரான் திருவடிகளை வணங்கி; உருகுஞ்சிந்தையுடன்போந்து=கனிந்துருகாநின்ற திருவுளத்தோடு அங்குநின்று மெழுந்தருளி; உமையோர்பாகர்தாமகிழ்ந்தமருவும்=அச்சிவபிரான் மகிழ்ந்து வீற்றிருந்தருளும்; பதிகள்பலபணிந்து=பலதிருப்பதிகளையும் வணங்கி; கலையநல்லூர்மருங்கணைந்தார்=திருக்கலையநல்லூரென்னுந்திருப்பதியையடைந்தார்.—எ-று. ஏ-அசை.

## திருவிடைமருதூர்-பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

கழுதைகுங்குமந்தான்சுமந்தெய்த்தாற்கைப்பர்பாழ்புகமற்றதுபோலப்
பழுதுநானுழன்றுளந்தடுமாறிப்படுசுழித்தலைப்பட்டனனெந்தா
யழுதுநீயிருந்தென்செய்திமனனேயங்கணாவரனேயெனமாட்டா
விழுதையெனுக்கோருய்வகையருளாயிடைமருதுறையெந்தைபிரானே.

அரைக்குஞ்சந்தனத்தோடகிலுந்தியவணஞ்சுமந்தார்த்திருபாலு
மிரைக்குங்காவிரித்தென்கரைதன்மேலிடைமருதுறையெந்தைபிரானை
யுரைக்குமூரனொளிதிகழ்மாலையுள்ளத்தாலுகந்தேத்தவல்லார்க
ணரைப்புமூப்பொடுநடலையுமின்றிநாதன்சேவடிநண்ணுவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாகேச்சரம்-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

பிறையணிவாணுதலாளுமையாளவள்பேழ்கணிக்க
நிறையணிநெஞ்சனுங்கநீலமால்விடமுண்டதென்னே
குறையணிகொல்லைமுல்லையளைந்துகுளிர்மாதவிமேற்
சிறையணிவண்டுகள்சேர்திருநாகேச்சரத்தானே.

கொங்கணைவண்டரற்றக்குயிலும்மயிலும்பயிலுந்
தெங்கணைபூம்பொழில்சூழ்திருநாகேச்சரத்தானை
வங்கமலிகடல்சூழ்வயனாவலவூரன்சொன்ன
பங்கமில்பாடல்வல்லாரவர்தம்வினைபற்றறுமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சண்பகாரணியர், தேவியார்-குன்றமுலைநாயகி.

---

செம்மைமறையோர் திருக்கலைய நல்லூரிறைவர் சேவடிக்கீழ்
மும்மைவணக்கம் பெறவிறைஞ்சி முன்புபரவித் தொழுதெழுவார்
கொம்மைமருவு குரும்பைமுலை யுமையாளென்னுந் திருப்பதிக
மெய்ம்மைப்புராணம் பலவுமிகச் சிறப்பித்திசையின் விளம்பினர்.

(இ-ள்.) செம்மைமறையோர்திருக்கலையநல்லூரிறைவர்சேவடிக்கீழ்=செப்பமாகிய மறையவர்கள்வாழும் திருக்கலையநல்லூரின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரான் திருவடிக்கீழ்; மும்மைவணக்கம்பெறவிறைஞ்சி=முக்கரணங்களும் ஒருமைப்படச் சிரமேற் கரங்கூப்பி; முன்புபரவித்தொழுதெழுவார்=திருமுன்னே நின்று துதித்து நிலமுறவணங்கி யெழுகின்ற நம்பியாரூரர்; கொம்மைமருவுகுரும்பைமுலையுமையாளென்னும்=குரும்பை முலைமலர்க்குழலியென்னுந் திருப்பதிகத்தை; மெய்ம்மைப்புராணம் பலவுமிகச்சிறப்பித்து=மெய்ம்மையான புராணங்களிற்கூறும் பல சரிதத்தையும் மிகவும் சிறப்பித்து; இசையின்விளம்பினர்=இசையோடு பாடியருளினர்.

புராணசரிதங்களாவன:—பார்ப்பதியார் திருமணம், சலந்தரனுடலம்பிளந்த சக்கரத்தைச் செங்கண்மாலுக்கீதல் முதலியன. முக்கரணங்கள்=மனம்வாக்குகாயம் - அவை புலன்வழித்தாய் இறைஞானமில்லாரை யீர்த்துத் தன் வசமாக்கும், இறைஞானமுடையார்க்குத் தன்வசமின்றி அவர்வசமாய் ஒருப்பட்டு நிற்குமாதலின்வணக்கம்பெற இறைஞ்சி என்றார்.

## திருக்கலையநல்லூர்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

குரும்பைமுலைமலர்க்குழலிகொண்டதவங்கண்டுகுறிப்பினொடுசென்றவடன்குணத்தினைநன்கறிந்து, விரும்புவரங்கொடுத்தவளைவேட்டருளிச்செய்தவிண்ணவர்கோன்கண்ணுதலோன்மேவியவூர்வினவி லருரும்பருகேசுரும்பருவவறுபதம்பண்பாடவணிமயில்கணட்டிமணிபொழில்சூழயலின், கரும்பருகேகருங்குவளைகண்வளருங்கழனிக் கமலங்கண்முகமலருங்கலையநல்லூர்காணே.

தண்புனலும்வெண்மதியுந்தாங்கியசெஞ்சடையன்றாமரையோன்றலைகலனக்காமரமுன்பாடி, யுண்பலிகொண்டுழல்பரமனுறையுமூர்நிறைநீர்மருகுபுனலரிசிலின்றென்கலையநல்லூரதனை, நண்புடையநன்சடையனிசைஞானிசிறுவனாவலர்கோனாரூரனுரைநவின்றுரைசெய், பண்பயிலும்பத்துமிவை பத்திசெய்துதித்தம்பாடவல்லாரல்லலொடுபாவமிலர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அமுதகலைநாதர், தேவியார்-அமுதவல்லியம்மை.

---

அங்குநின்று திருக்குடமூக் கணைந்துபணிந்து பாடிப்போய்
மங்கைபாகர் வலஞ்சுழியை மருவிப்பெருகு மன்புருகத்
தங்குகாத லுடன்வணங்கித் தமிழாற்பாசி யரசினுக்குத்
திங்கண்முடியா ரடியளித்த திருநல்லூரைச் சென்றணைந்தார்.

(இ-ள்.) அங்குநின்றுதிருக்குடமூக்கணைந்து=அவர் அத்திருப்பதியினின்றும் நீங்கித் திருக்குடந்தையையடைந்து; பணிந்துபாடிப்போய்=வணங்கித் திருப்பதிகம் பாடிச்சென்று; மங்கைபாகர்வலஞ்சுழியைமருவி=சிவபிரான் வீற்றிருந்தருளும் திருவலஞ்சுழியையடைந்து; பெருகுமன்புருக=மிக்க அன்பால் திருவுள்ளமுருக; தங்குகாதலுடன்வணங்கி=நிலைபெற்ற பேரன்போடுபணிந்து; தமிழாற்பாசி=திருப்பதிகத்தாற் றித்து; அரசினுக்குத்திங்கண்முடியாரடியளித்த=ஆண்டவரசுக்குச் சிவபிரான் திரு

வடிசூட்டிய; திருநல்லூரைச்சென்றணைந்தார்=திருநல்லூரென்னுந் திருப்பதியைய டைந்தார்.—எ-று.

அடியளித்தமை=“உன்னுடையநினைப்பதனைமுடிக்கின்றோமென்றவர்தஞ், சென்னிமிசைபாதமலர்சூட்டினான்சிவபெருமான்.” என்னும்திருநாவுக்கரசுநாயனார்புராணச்செய்யுளாலுணர்க. (௬அ)

நல்லூரிறைவர் கழல்போற்றி நவின்றுநடவு நம்பர்பதி
யெல்லாமிறைஞ்சி யேத்திப்போந் திசையாற்பரவுந் தம்முடைய
சொல்லூதியமா வணிந்தவர்தம் சோற்றுத்துறையின் மருங்கெய்தி
யல்லூர்கண்டர் கோயிலினு ளடைந்துவலங்கொண் டடிபணிவார்.

(இ-ள்.) நல்லூரிறைவர்கழல்போற்றிநவின்று=அவர் நல்லூரின்கண் வாழும் சிவபிரான் திருவடிகளைத்துதித்து; நடவுநம்பர்பதியெல்லாமிறைஞ்சியேத்திப்போந்து=அதனிடையிலுஞ் சிவபிரான் வீற்றிருந்தருளும் திருப்பதிகளெல்லாம் வணங்கித் துதித்துப்போய்; இசையாற்பரவுந்தம்முடையசொல்=இசையோடு வணங்குந் தம்முடைய திருப்பதிகத்தை; ஊதியமாவணிந்தவர்தம்=பொருளாக அணிந்த சிவபிரானது; சோற்றுத்துறையின் மருங்கெய்தி=திருச்சோற்றுத்துறையின்கணடைந்து; அல்லூர்கண்டர்கோயிலினுளடைந்து=நீலகண்டத்தையுடைய சிவபிரானெழுந்தருளியிருக்குந் திருக்கோயிலினுட்புகுந்து; வலங்கொண்டடிபணிவார்=வலமாகவந்து அவர் திருவடிகளைவணங்குவாராயினார்.—எ-று. (௬௯)

அழனீரொழுகி யனையவெனு மஞ்சொற்பதிக மெடுத்தருளிக்
கழனீடியவன் பினிற்போற்றுங் காதல்கூரப் பரவியபின்
கெழுநீர்மையினி லருள்பெற்றுப் போந்துபரவை யாரார்கேள்வர்
முழுநீறணிவா ரமர்ந்தபதி பலவும்பணிந்து முன்னுவார்.

(இ-ள்.) அழனீரொழுகியனையவெனும்=அவர் அழனீரொழுகியனைய என்னும் முதலையுடைய; அஞ்சொற்பதிகமெடுத்தருளி=அழகிய சொல்லாலமைந்த திருப்பதிகத்தைப்பாடியருளி; கழனீடியவன்பினிற்போற்றும்=திருவடிகளை மிக்க அன்பாற் றுதிசெய்யும்; காதல்கூரப்பரவியபின்=விருப்பானது மீக்கூரத்துதித்தபின்; கெழுநீர்மையினிலருள்பெற்றுப்போந்து=பொருந்து முறைமையால் திருவருள்பெற்று அங்கு நின்றும் புறப்பட்டு; பரவையார்கேள்வர்=நம்பியாரூரர்; முழுநீறணிவாரமர்ந்த=திருமேனிமுழுதும் திருவெண்ணீறணிந்த சிவபிரான் வீற்றிருந்தருளும்; பதிபலவும்பணிந்து முன்னுவார்=பல திருப்பதிகளையும் வணங்கிச்செல்வாராயினார்.—எ-று. (௭0)

## சோற்றுத்துறை-பண்-கவுசிகம்.

திருச்சிற்றம்பலம்.

அழனீரொழுகியனையசடையு
முழையீருரியும்முடையானிடமாங்
கழுநீர்முத்துங்கனகக்குவையுஞ்
சுழனீர்ப்பொன்னிச்சோற்றுத்துறையே.

சுற்றார்தருநீர்ச்சோற்றுத்துறையுண்
முற்றாமதிசேர்முதல்வன்பாதந்

தற்றொடியாரடிநாயூரன்
சொற்றுணிவைகற்றார்துன்பிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-தொலையாச்செல்வர், தேவியார்-ஒப்பிலாம்பிகை.

---

தேவர்பெருமான் கண்டியூர் பணிந்துதிருவை யாறதனை
மேவிவணங்கிப் பூந்துருத்தி விமலர்பாதந் தொழுதிறைஞ்சிச்
சேவில்வருவார் திருவாலம் பொழிலிற்சேர்ந்து தாழ்ந்திரவு
பாவுசயனத் தமர்ந்தருளிப் பள்ளிகொள்ளக் கனவின்கண்.

(இ-ள்.) தேவர்பெருமான்கண்டியூர்பணிந்து=தேவர்க்கு முதல்வராகிய சிவபிரான் வீற்றிருந்தருளும் திருக்கண்டியூரை வணங்கி; திருவையாறதனைமேவிவணங்கி=திருவையாற்றையடைந்து பணிந்து; பூந்துருத்திவிமலர்பாதந்தொழுதிறைஞ்சி=திருப்பூந்துருத்தியின்கண் வாழும் சிவபிரான் திருவடிகளை வணங்கித்துதித்து; சேவில்வருவார்திருவாலம்பொழிலிற்சேர்ந்துதாழ்ந்து=இடபவாகனத்திற் காட்சிகொடுத்தருளும் அப்பிரானார் வீற்றிருக்கும் திருவாலங்குடியிற்சென்று வணங்கி; இரவுமேவுசயனத்தமர்ந்தருளி=அன்றிரவுபொருந்திய சயனத்திலெழுந்தருளி; பள்ளிகொள்ளக்கனவின்கண்=பள்ளிகொள்ளுங்கால் அவர் கனவினிடத்து.—எ-று.　　(எக)

மழபாடியினில் வருதற்கு நினைக்கமறந்தா யோவென்று
குழகாகியதங் கோலமெதிர் காட்டியருளக் குறித்துணர்ந்து
நிழலார்சோலைக் கரைப்பொன்னி வடபாலேறி நெடுமாட
மழகார்வீதி மழபாடி யணைந்தார்நம்பி யாரூரர்.

(இ-ள்.) மழபாடியினில்வருதற்கு=திருமழபாடியில் நீ வருதற்கு; நினைக்கமறந்தாயோவென்று=நினைக்க மறந்தனையோவென்று; குழகாகியதங்கோலமெதிர்காட்டியருள=இளமையாகிய தந்திருக்கோலத்தைத் தரிசிப்பிக்க; குறித்துணர்ந்து=தரிசித்துணர்ந்து; நிழலார்சோலைக்கரைப்பொன்னிவடபாலேறி=நிழலார்ந்த சோலையினையுடைய காவிரிவடகரையிலேறி, நெடுமாடமழகார்வீதிமழபாடி=நீண்ட மாடங்களால் அழகுநிறைந்த வீதியையுடைய திருமழபாடியை; அணைந்தார்நம்பியாரூரர்=நம்பியாரூரரடைந்நார்.—எ-று. இவ்விரண்டுங்குளகம்.　　(எஉ)

அணைந்துதிருக்கோ புரமிறைஞ்சி யன்பர்சூழ வுடன்புகுந்து
பணங்கொளரவ மணிந்தார்முன் பணிந்துவீழ்ந்து பரங்கருணைக்
குணங்கொளருளின் றிறம்போற்றிக் கொண்டபுளகத் துடனுருகிப்
புணர்ந்தவிசையாற் றிருப்பதிகம் பொன்னார்மேனி யென்றெடுத்து.

(இ-ள்.) அணைந்துதிருக்கோபுரமிறைஞ்சி=அவர் அங்குச்சென்று திருக்கோபுரத்தை வணங்கி; அன்பர்சூழவுடன்புகுந்து=அடியார்கள் சூழ்ந்துவர அவருடன் ஆலயத்துட்புகுந்து; பணங்கொளரவமணிந்தார்முன்பணிந்துவீழ்ந்து=படந்தங்கிய பாம்பையணிந்த சிவபிரான்முன் வீழ்ந்து நிலமுறவணங்கி; பரங்கருணைக் குணங்கொளருளின்றிறம்போற்றி=பெருங்கருணையோடுகூடிய திருவருளின் பெருமையைத்துதித்து; கொண்டபுளகத்துடனுருகி=திருமேனியிற்கொண்ட புளகாங்கிதத்துடன் மனமுருகி; புணர்ந்தவிசையாற்றிருப்பதிகம்=கலந்த இசையோடு திருப்பதிகத்தை; பொன்னார்மேனியென்றெடுத்து=“பொன்னார்மேனியனே என முதலெடுத்து.—எ-று.　　(எ௩)

அன்னே யுன்னை யல்லாலியா னாரைநினைக்கே னெனவேத்தித்
தன்னேரில்லாப் பதிகமலர் சாத்தித்தொழுது புறம்பணைந்து
மன்னும்பதியிற் சிலநாள்கள் வைகித்தொண்ட ருடன்மகிழ்ந்து
பொன்னிக்கரையி னிருமருங்கும் பணிந்துமேல்பாற் போதுவார்.

(இ-ள்) அன்னேயுன்னையல்லாலியானாரைநினைக்கேனெனவேத்தி=அன்னேயுன்னையல்லாலியானாரைநினைக்கேனென இறுதியில் வைத்துத்துதித்து; தன்னேரில்லாப்பதிகமலர்சாத்தித்தொழுது=தனக்கு வேறொப்பில்லாத திருப்பதிகமாலையைச் சாத்தித்துதித்து; புறம்பணைந்து=ஆலயத்தின்புறம்பே யெழுந்தருளி; மன்னும்பதியிற்சிலநாள்கள்வைகி=நிலைபெற்ற அத்திருப்பதியிற் சிலநாள் எழுந்தருளியிருந்து; தொண்டருடன்மகிழ்ந்து=திருக்கூட்டத்தோடு மகிழ்ந்து; பொன்னிக்கரையினிருமருங்கும்பணிந்து=காவிரிக்கரையின் இருமருங்குமுள்ள திருப்பதிகளை வணங்கி; மேல்பாற்போதுவார்=கொங்கிற்செல்லுங் கருத்துடையராயினார். இவ்விரண்டுங்குளகம். (௭௬)

## திருமழபாடி - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பொன்னார்மேனியனே புலித்தோலையரைக்கசைத்து
மின்னார்செஞ்சடைமேன் மிளிர்கொன்றையணிந்தவனே
மன்னேமாமணியேமழபாடியுண்மாணிக்கமே
யன்னேயுன்னையல்லாலினியாரைநினைக்கேனே. (௧)

கீளார்கோவணமுந்திருநீறுமெய்ப்பூசியுன்றன்
றாளேவந்தடைந்தேன்றலைவாவெனையேன்றுகொணீ
வாளார்கண்ணிபங்காமழபாடியுண்மாணிக்கமே
கேளாநின்னையல்லாலினியாரைநினைக்கேனே. (௨)

எம்மானெம்மனையென்றனக்கெட்டனைச்சார்வாகா
ரிம்மாயப்பிறவிபிறந்தேயிறந்தெய்த்தொழிந்தேன்
மைம்மாம்பூம்பொழில்சூழ்மழபாடியுண்மாணிக்கமே
யெம்மானின்னையல்லாலினியாரைநினைக்கேனே. (௩)

பண்டேநின்னடியேனடியாரடியார்கட்கெல்லாந்
தொண்டேபூண்டொழிந்தேன்றொடராமைத்துரிசறுத்தேன்
வண்டார்பூம்பொழில்சூழ்மழபாடியுண்மாணிக்கமே
யண்டாநின்னையல்லாலினியாரைநினைக்கேனே. (௪)

கண்ணேயேழுலகுங்கருதாயவருத்தமுமாயப
பண்ணாரின்றமிழாய்ப்பரமாயபரஞ்சுடரோ
மண்ணார்பூம்பொழில்சூழ்மழபாடியுண்மாணிக்கமே
யண்ணாநின்னையல்லாலினியாரைநினைக்கேனே. (௫)

நாளார்வந்தணுகிநலியாமுனநின்றனக்கே
யாளாவந்தடைந்தேனடியேனையுமேன்றுகொணீ
மாளாநாளருளுமழபாடியுண்மாணிக்கமே
யாளாநுன்னையல்லாலினியாரைநினைக்கேனே. (௬)

சந்தாருங்குழையாய்சடைமேற்பிறைதாங்கிநல்ல
வெந்தார்வெண்பொடியாய்விடையேறியவித்தகனே
மைந்தார்சோலைகள்சூழ்மழபாடியுண்மாணிக்கமே
யெந்தாய்நின்னையல்லாலினியாரைநினைக்கேனே. (எ)

வெய்யவிரிசுடரோன்மிகுதேவர்கணங்களெல்லாஞ்
செய்யமலர்களிடமிகுசெம்மையுணின்றவனே
மையார்பூம்பொழில்சூழ்மழபாடியுண்மாணிக்கமே
யையாநின்னையல்லாலினியாரைநினைக்கேனே. (அ)

நெறியேநின்மலனேநெடுமாலயன்போற்றிசெய்யுங்
குறியேநீர்மையனேகொடியேரிடையாடலைவா
மறிசேரங்கையனேமழபாடியுண்மாணிக்கமே
யறிவேநின்னையல்லாலினியாரைநினைக்கேனே. (க)

ஏரார்முப்புரமுமெரியச்சிலைதொட்டவனை
வாரார்கொங்கையுடன்மழபாடியுண்மேயவனைச்
சீரார்நாவலர்கோனூரனுரைத்ததமிழ்
பாரோரேத்தவல்லார்பரலோகத்திருப்பாரே. (க0)

சுவாமிபெயர்-வச்சிரத்தம்பநாயகர், தேவியார்-அழகம்மை.

திருச்சிற்றம்பலம்.

செய்யசடையார் திருவானைக் காவிலணைந்து திருத்தொண்ட
ரெய்தமுன்வந் தெதிர்கொள்ள விறைஞ்சிக்கோயி லுடன்புகுந்தங்
கையர்கமலச் சேவடிக்கீ ழார்வம்பெருக வீழ்ந்தெழுந்து
மெய்யுமுகிழ்ப்பக் கண்பொழிநீர் வெள்ளம்பரப்பி விம்முவார்.

(இ-ள்.) செய்யசடையார்திருவானைக்காவிலணைந்து=அவர் பின் சிவந்த சடைமுடியையுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும் திருவானைக்காவென்னும் திருப்பதியிலடைந்து; திருத்தொண்டரெய்தமுன்வந்தெதிர்கொள்ள=அங்குள்ள திருத்தொண்டர்கள் பொருந்தும்வண்ணம் முன்னேவந்து தம்மை யெதிர்கொள்ள; இறைஞ்சிக்கோயிலுடன்புகுந்து=திருக்கோயிலை வணங்கி அவருடன் ஆலயத்திற்புகுந்து; அங்கையர்கமலச்சேவடிக்கீழ்=அவ்விடத்துச் சிவபிரானது தாமரைமலர்போலும் சிவந்த திருவடிக்கண்; ஆர்வம்பெருகவீழ்ந்தெழுந்து=பெருவிருப்பானது தம் திருவுள்ளத்து மிகவணங்கியெழுந்து; மெய்யுமுகிழ்ப்ப=திருமேனியும் மயிர்க்கூச்செறிய; கண்பொழிநீர்வெள்ளம்பரப்பிவிம்முவார்=பொழியாநின்ற ஆனந்தக்கண்ணீர் வெள்ளத்தைத் திருமேனியில் பரப்பி அழுவாராயினர்.—எ-று. (எ௫)

மறைகளாய நான்குமென மலர்ந்தசெஞ்சொற் றமிழ்ப்பதிக
நிறையுங்காத லுடனெடுத்து நிலவுமன்பர் தமைநோக்கி
யிறையும்பணிவா ரெம்மையுமா ளுடையாரொன்றென் றேத்துவா
ருறையூர்ச்சோழன் மணியாரஞ் சாத்துந்திறத்தை யுணர்ந்தருளி.

(இ-ள்.) மறைகளாயநான்குமெனமலர்ந்த=அவர் மறைகளாய நான்குமென்று முதலெடுக்கப்பட்ட; செஞ்சொற்றமிழ்ப்பதிகம்—இயற்சொல்லாலாகிய தமிழ்ப்பதிகத்தை; நிறையுங்காதலுடனெடுத்து=நிறைந்த பெருவிருப்போடு தொடங்கி, நிலவுமன் பர்தமைநோக்கி=விளங்கிய திருக்கூட்டத்தைப்பார்த்து; இறையும்பணிவார்=இறைப்பொழுதேனும் இவரை வணங்குகின்றவர்; எம்மையுமாளுடையாரென்றேத்துவார்=எம்மையுமாளுடையாரென்று செய்யுளிறுதிதோறும் வைத்துத் துதிப்பாராய்; உறையூர்ச்சோழன்=உறையூரிலிருந்த சோழராசனது; மணியாரஞ்சாத்துந்திறத்தையுணர்ந்தருளி=மணிகளழுத்தியபதக்கத்தைச் சிவபிரான் அணிந்துகொண்ட முறைமையைத் திருவுள்ளத்துக்கொண்டருளி.—எ-று. (௭௬)

வளவர்பெருமான் றிருவாரஞ் சாத்திக்கொண்டு வரும்பொன்னிக்
கிளருந்திரைநீர் மூழ்குதலும் வழுவிப்போகக் கேதமுற
வளவிறிருமஞ் சனக்குடத்து ளதுபுக்காட்ட வணிந்தருளித்
தளருமவனுக் கருள்புரிந்த தன்மைசிறக்கச்சாற்றினார்.

(இ-ள்.) வளவர்பெருமான் றிருவாரஞ் சாத்திக்கொண்டு=உறையூர்ச்சோழன் ஆரமணிந்துகொண்டு; வரும்பொன்னிக்கிளருந்திரைநீர்மூழ்குதலும்=பெருகிவராநின்ற காவிரியினது மேற்கொண்டெழும் திரையையுடைய நீரில் மூழ்கவும்; வழுவிப்போகக்கேதமுற=அவ்வாரம் நீரில் வழுவிவிட அதனால் அவன்துயருற; அளவிறிருமஞ்சனக்குடத்துளதுபுக்கு=அவ்வாரம் திருவருளால் மகிமைமிக்க திருமஞ்சனமெடுக்கும் திருக்குடத்துள்புகுந்து; ஆட்டவணிந்தருளி=திருமஞ்சனத்துடன் ஆட்டப்பட அதைச் சிவபிரான் அணிந்தருளி; தளருமவனுக்கு=வருந்துகின்ற அச்சோழனுக்கு; அருள்புரிந்த தன்மை=அருள்புரிந்த முறைமையை; சிறக்கச்சாற்றினார்=அத்திருப்பதிகத்தில் விளங்கப்பாடினார்.—எ-று. இவ்விரண்டுங்குளகம்.

உறையூர்ச்சோழன் விலையுயர்ந்த மணியாரஞ்சாத்திக்கொண்டு காவிரியில் நீராடுங்கால் அதுவழுவிப்போக அவன் துயருற்றுச் சிவபிரானே இதைக்கொள்கவென்று வேண்டிக்கொள்ள, அது சிவபிரான் திருவருளால் திருமஞ்சனக்குடத்துட்புகுந்து திருமஞ்சனமாட்டுங்கால் அச்சிவபிரானாற் றரிக்கப்பட்டது. அதனால் உறையூர்ச்சோழன் கேதம் நீங்கி யுய்ந்தனன். ஈது அவனுக்கருள்புரிந்த முறைமையென்க. (௭௭)

## திருவானைக்கா-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மறைகளாயினநான்கும்மற்றுளபொருள்களுமெல்லாந்
துறையுந்தோத்திரத்திறையுந்தொன்மையுநன்மையுமாய
வறையும்பூம்புனலானைக்காவுடையாதியைநாளு
மிறைவனென்றடிசேர்வாரெம்மையுமாளுடையாரே.

தாரமாகியபொன்னித்தண்டுறையாடிவிழுத்து
நீரினின்றடிபோற்றிநின்மலாகொள்ளெனவாங்கே
யாரங்கொண்டவெம்மானைக்காவுடையாதியைநாளு
மீரமுள்ளவர்நாளுமெம்மையுமாளுடையாரே.

ஆழியார்க்கருளானைக்காவுடையாதிபொன்னடியி
னீழலேசரணாகநின்றருள்கூரநினைந்து

வாழவல்லவன்றொண்டன்வண்டமிழ்மாலைவல்லார்போ
யேழுமாபிறப்பற்றுவெம்மையுமாளுடையாரே.

திருச்சிற்றம்பலம்.

---

சாற்றியங்குத் தங்குநாட் டயங்கும்பவளத் திருமேனி
நீற்றர்கோயி லெம்மருங்குஞ் சென்றுதாழ்ந்து நிறைவிருப்பாற்
போற்றியங்கு நின்றும்போய்ப் பொருவிலன்பர் மருவியதொண்
டாற்றும்பெருமைத் திருப்பாச்சி லாசிராமஞ் சென்றடைந்தார்.

(இ-ள்.) சாற்றியங்குத்தங்குநாள்=அவர் அவ்வாறு சிறப்பித்துப்பாடி அத்திருப்பதியில் வீற்றிருக்கும் நாளில்; தயங்கும்பவளத்திருமேனி=விளங்கிய பவளம்போலச் சிவந்த திருமேனியின்கண்; நீற்றர்கோயிலெம்மருங்குஞ்சென்றுதாழ்ந்து=திருவெண்ணீற்றை முழுதும் பூசிய சிவபிரான் வீற்றிருந்தருளும் திருவானைக்காவினருகிலுள்ள திருக்கோயில் முழுதுஞ்சென்று தாழ்ந்து; நிறைவிருப்பால்=நிறைந்த பெருவிருப்போடு; போற்றியங்குநின்றும்போய்=துதித்து அங்குநின்று மெழுந்தருளி; பொருவிலன்பர்மருவியதொண்டாற்றும்=ஒப்பற்ற அடியார்கள் தமக்குரிய திருத்தொண்டைச் செய்தொழுகும்; பெருமைத்திருப்பாச்சிலாச்சிராமம்=பெருமையினையுடைய திருப்பாச்சிலாச்சிராமமென்னும் திருப்பதியை; சென்றடைந்தார்=அடைந்தருளினார் —எ-று.

சென்றுதிருக்கோ புரமிறைஞ்சித் தேவர்மலிந்த திருந்துமணி
முன்றில்வலங்கொண்டுள்ளணைந்து முதல்வர்முன்னம்வீழ்ந்திறைஞ்சி
நன்றுபெருகும் பொருட்காத லயப்புப்பெருக நாதரெதிர்
நின்றுபரவி நினைந்தபொரு ளருளாதொழிய நேர்நின்று.

(இ-ள்.) சென்றுதிருக்கோபுரமிறைஞ்சி=அவர் அங்குச்சென்று திருக்கோபுரத்தை வணங்கி; தேவர்மலிந்ததிருந்துமணிமுன்றில்=தேவர்கள் நிறைந்திருக்கும் திருத்தமான அழகிய திருமுற்றத்தை; வலங்கொண்டுள்ளணைந்து=வலமாகவந்து உள்ளே புகுந்து; முதல்வர்முன்னம்வீழ்ந்திறைஞ்சி=சிவபிரான் திருமுன்னே சாட்டாங்கம் வணங்கி; நன்றுபெருகும்பொருட்காதலயப்புப்பெருக=பெரிதும்மிக்க பொருள் வேண்டுமென்கிற அவாவின் விளைவானது உதிக்க; நாதரெதிர்நின்றுபரவி=சிவபிரான் முன்னே நின்று துதித்து; நினைந்தபொருளருளாதொழியநேர்நின்று=தாம் கருதிய பொருளைச் சிவபிரான் கொடுக்காதொழியச் சந்நிதியினின்று —எ-று. (எகூ)

அன்புநீங்கா வச்சமுட னடுத்ததிருத்தோ ழமைப்பணியாற்
பொன்பெறாத திருவுள்ளம் புழுங்கவழுங்கிப் புறம்பொருபான்
முன்புநின்ற திருத்தொண்டர் முகப்பேமுறைப்பா டுடையார்போ
லென்புகரைந்து பிரானார்மற் றிலையோவென்ன வெடுக்கின்றார்.

(இ-ள்.) அன்புநீங்காவச்சமுடன்=தம் அன்புநீங்காத அச்சத்துடனே; அடுத்ததிருத்தோழமைப்பணியால்=தமக்கடுத்த தோழமையோடுகூடிய திருத்தொண்டால்; பொன்பெறாதிருவுள்ளம்புழுங்கவழுங்கி=பொன்னையடையாத காரணத்தால் தம் இதயம்புழுங்க அதனால் வருந்தி; புறம்பொருபால்முன்புநின்ற=புறத்தே ஒருபால் சந்நிதியில் நிற்கும்; திருத்தொண்டர்முகப்பே=திருத்தொண்டர் முன்னிலையில்; முறைப்பாடுடையார்போல்=முறைப்பாடு செய்பவர்போல; என்புகரைந்து=என்புருகி; பிரானா

ர்மற்றிலையோவென்னவெடுக்கின்றார்—பிறதிருப்பதியில் இவரல்லாமற் பிரானாரில்லை யோவென்று பொருள்படத் திருப்பதிகம் எடுக்கின்றாராயினார்.—எ-று. இவ்விரண்டுங் குளகம்.

சிவபிரான் ஒருவராயினும் பல திருப்பதியில் மூர்த்தி உபாதிபற்றி வேறுதலு முடைமையின் அது கருதிப் பிரானாரில்லையோவெனக் கொண்டனர் என்க. (௪0)

நித்தமுநீங்கா நிலைமையினீங்கி நிலத்திடைப் புலங்கெழுபிறப்பா
லுய்த்தகாரணத்தையுணர்ந்துநொந்தடிமை யொருமையாமெழுமையுமுண
ர்த்தி, யெத்தனையருளா தொழியினும்பிரானா ரிவரலாதில்லையே யென்பார்
வைத்தனன்றனக்கே தலையுமென்னாவு மெனவழுத்தினார்வழித்தொண்டர்.

(இ-ள்.) வழித்தொண்டர்—திருப்பதிகம் எடுக்குங்கால் நம்பியாரூரர்; நித்தமு நீங்காநிலைமையினீங்கி—தாம்திருக்கயிலையில் திருவணுக்கராய் எப்பொழுதும் சிவபிரா னைநீங்காதிருக்கும் நிலைமையினின்றும்நீங்கி; நிலத்திடைப்புலங்கெழுபிறப்பால்—நிலவு லகின்கண் புலத்தோடுகெழுமிய பிறப்பேதுவாக; உய்த்தகாரணத்தையுணர்ந்துநொ ந்து—சிவபிரானால் ஏவப்பட்ட ஏதுவையுணர்ந்து வருந்தி; அடிமையொருமையாமெ ழுமையுமுணர்த்தி—அடிமைக்கு ஒருப்பாடாம் தம்எழுபிறப்பையும் அப்பதிகத்தில் வைத்து; எத்தனையருளாதொழியினும்—எவ்வளவும்அருளாதுவிடினும்; பிரானாரிவரலா தில்லையோவென்பார்—இவரலாதில்லையோ பிரானுரொன்று இறுதியில் முடிக்கின்றவ ராய்; வைத்தனன்றனக்கேதலையுமென்னாவுமெனவழுத்தினர்—வைத்தன்றனக்கே தலை யுமென்னாவுமென்று முதலெடுத்துத்திருப்பதிகம்பாடினார்.—எ-று.

நித்தமுநீங்காநிலைமையினீங்கிஎன்றது:—திருக்கயிலையில் அணுக்கராயிருந்த நிலை மையைக்குறிப்பித்துநின்றது;உய்த்தகாரணத்தையுணர்ந்துஎன்றது:—கமலினிஅனிந்தி தைகாரணமாகச் சிவபிரானால் நிலவுலகத்தில் அனுப்பப்பட்டமை குறிப்பித்துநின்றது; அடிமையொருமையாமெழுமையுமுணர்த்தியென்றது:—எழுமைக்கும்அடிமையாம் அ ன்பின்ஒருமைப்பாட்டை யுணர்த்திநின்றது. (௪௧)

## திருப்பாச்சிலாச்சிராமம்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

வைத்தனன்றனக்கேதலையுமெனாவுநெஞ்சமும்வஞ்சமொன்றின்றி
யுய்த்தனன்றனக்கேதிருவடிக்கடிமையுாைத்தக்காலுபமனேயொக்கும்
பைத்தபாம்பார்த்தோர்கோவணத்தோடுபாச்சிலாச்சிராமத்தெம்பரமர்
பித்தரேயொத்தோர்நச்சிலராகிலிவரலாதில்லையோபிரானார். (௧)

அன்னையேயென்னேனத்தனேயென்னேனடிகளேயமையுமென்றிருந்தே
னென்னையுமொருவனுளனென்றுகருதியிறையிறைதிருவருள்காட்டா
யன்னமாம்பொய்கைசூழ்தருபாச்சிலாச்சிராமத்துறையடிகள்
பின்னையேயடியார்க்கருள்செய்வதாகிலிவரலாதில்லையோபிரானார். (௨)

உற்றபோதல்லாலுறுதியையுணரேனுள்ளமேயமையுமென்றிருந்தேன்
செற்றவர்புரமூன்றெரியெழச்செற்றசெஞ்சடைநஞ்சடைகண்ட
ரற்றவர்க்கருள்செய்பாச்சிலாச்சிராமத்தடிகடாமியாதுசொன்னாலும்
பெற்றபோதுவந்துபெறுவிடிலிகழிலிவரலாதில்லையோபிரானார். (௩)

நாச்சிலபேசிநமர்பிறரொன்றுநன்றுதீதென்கிலர் மற்றோர்
பூச்சிலைநெஞ்சேபொன்விளைகழனிபுள்ளினஞ்சிலம்புமாம்பொய்கைப்
பாச்சிலாச்சிராமத்தடிகளென்றிவர்தாம்பலரையுமாட்கொள்வர்பரிந்தோர்
பேச்சிலவொன்றைத்தரவிலராகிலிவரலாதில்லையோபிரானார். (௪)

வரிந்தவெஞ்சிலையாலந்தரத்தெயிலைவாட்டியவகையினரேனும்
புரிந்தவனாளேபுகழ்தக்கவடிமைபோகுநாள்வீழுநாளாகிப்
பரிந்தவர்க்கருள்செய்பாச்சிலாச்சிராமத்தடிகடாமியாதுசொன்னாலும்
பிரிந்திறைப்போதிற்போவதேயாகிலிவரலாதில்லையோபிரானார். (௫)

செடித்தவஞ்செய்வார்சென்றுழிச்செல்லேனறீவினைசெற்றிடுமென்று
அடித்தவமல்லாலாரையுமறியேனவதுமறிவரெம்மடிகள்
படைத்தலைச்சூலம்பற்றியகையர்பாச்சிலாச்சிராமத்தெம்பரமர்
பிடித்தவெண்ணீறேபூசுதலானுமிவரலாதில்லையோபிரானார். (௬)

கையதுகபாலங்காடுறைவாழ்க்கைகட்டங்கமேந்தியகையர்
மெய்யதுபுரிநூன்மிளிரும்புன்சடைமேல்வெண்டிங்கள்சூடியவிகிர்தர்
பையரவல்குற்பாவையராடும்பாச்சிலாச்சிராமத்தெம்பரமர்
மெய்யரேயொத்தோர்பொய்செய்வதாகிலிவரலாதில்லையோபிரானார். (௭)

நிணம்படுமுடலைநிலைமையென்றோராநெஞ்சமேதஞ்சமென்றிருந்தேன்
கணப்படிந்தேத்திக்கங்குலும்பகலுங்கருத்தினாற்கைதொழுதெழுவேன்
பணம்படுமரவம்பற்றியகையார்பாச்சிலாச்சிராமத்தெம்பரமர்
பிணம்படுகாட்டிலாடுவதாகிலிவரலாதில்லையோபிரானார். (௮)

குழைத்துவந்தோடிக்கூடுதிநெஞ்சேகுற்றேவனொடாறுஞ்செய்வா
னிழைத்தநாள்கடவாரன்பிலரேனுமெம்பெருமானென்றெப்போது
மழைத்தவர்க்கருள்செய்பாச்சிலாச்சிராமத்தடிகடாமியாதுசொன்னாலும்
பிழைத்ததுபொறுத்தொன்றீகிலராகிலிவரலாதில்லையோபிரானார். (௯)

துணிப்படுமுடையுஞ்சுண்ணவெண்ணீறுந்தோற்றமுஞ்சிந்தித்துக்காணின்
மணிப்படுகண்டனைவாயினாற்கூறிமனத்தினாற்றொண்டனேனினைவேன்
பணிப்படுமரவம்பற்றியகையர்பாச்சிலாச்சிராமத்தெம்பரமர்
பிணிப்படவாண்டுபணிப்பிலராகிலிவரலாதில்லையோபிரானார். (௧௦)

ஒருமையேயல்லேனெழுமையுமடியேனடியவர்க்கடியனுமானே
னுரிமையாலுரியேனுள்ளமுமுருகுமொண்மலர்ச்சேவடிகாட்டா
யருமையாம்புகழார்க்கருள்செயும்பாச்சிலாச்சிராமத்தெம்மடிகள்
பெருமைகள்பேசிச்சிறுமைகள்செய்யிலிவரலாதில்லையோபிரானார். (௧௧)

ஏசினவல்லவிகழ்ந்தனவல்லவெம்பெருமானென்றெப்போதும்
பாயினபுகழான்பாச்சிலாச்சிராமத்தடிகளையடிதொழப்பன்னாள்
வாயினாற்கூறிமனத்தினானினைவான்வளவயனாவலாரூரன்
பேசினபேச்சைப்பொறுத்திலராகிலிவரலாதில்லையோபிரானார். (௧௨)

---

திருச்சிற்றம்பலம்.

இவ்வகைபரவித் திருக்கடைக்காப்பு மேசினவல்லவென் றிசைப்ப
மெய்வகைவிரும்பு தப்பெருமானார் விழுநிதிக் குவையளித்தருள
மைவளர்கண்டர் கருணையேபரவி வணங்கியப் பதியிடைவைகி
யெவ்வகைமருங்கு மிறைவர்தம்பதிக ளிறைஞ்சியங் கிருந்தனர்சிலநாள்.

(இ-ள்.) இவ்வகைபரவி=அவர் இவ்வாறுரைத்து; திருக்கடைக்காப்புமேசினவல்லவென்றிசைப்ப=திருக்கடைக்காப்பையும் எசினவல்லவென்றுபாட; மெய்வகைவிரும்புதம்பெருமானார்=மெய்ப்பத்தியை விரும்புகின்ற தம்முடையமுதல்வர்; விழுநிதிக்குவையளித்தருள=விழுமியபொற்குவையைக்கொடுத்தருள; மைவளர்கண்டர்கருணையேபரவி=கருநிறந்தங்கியகண்டத்தையுடையஅச்சிவபிரான்திருக்கருணையையேதுதித்து; வணங்கியப்பதியிடைவைகி=வணங்கிக்கொண்டு அத்திருப்பதியி லிருந்தருளி; எவ்வகைமருங்குமிறைவர்தம்பதிகளிறைஞ்சி=அதனருகே எவ்விடத்துமுள்ள பிறதிருப்பதிகளையும்வணங்கி; அங்கிருந்தனர்சிலநாள்=அத்திருப்பதியில் சிலநாள் எழுந்தருளியிருந்தார்.—எ-று. (௮௨)

அப்பதிநீங்கி யருளினாற்போகி யாவிஞ் சாடுவார்நீடு
மெய்ப்பெயர்ப்பதியு மிருமருங்கிறைஞ்சி யிறைவர்பைஞ் ஞீலியையெய்திப்
பைப்பணியணிவார் கோபுரமிறைஞ்சிப் பாங்கமர்புடைவலங் கொண்டு
துப்புறழ்வேணி யாரகழ்றொழுவார் தோன்றுகங்காளரைக் கண்டார்.

(இ-ள்.) அப்பதிநீங்கியருளினாற்போகி=அத்திருப்பதியினின்றும்நீங்கித் திருவருளினாற்சென்று; ஆவிஞ்சாடுவார்நீடும்=சிவபிரான்வீற்றிருந்தருளும்; எப்பெயர்ப்பதியுமிருமருங்கிறைஞ்சி=இருபக்கத்துமுள்ள எல்லாத்திருப்பதிகளையும்வணங்கி; இறைவர்பைஞ்ஞீலியையெய்தி=திருப்பைஞ்ஞீலியையடைந்து; பைப்பணியணிவார் கோபுரமிறைஞ்சி=படந்தங்கியபாம்பை ஆரமாகஅணிந்திருக்கும்சிவபிரானது திருக்கோபுரத்தைவணங்கி; பாங்கமர்புடைவலங்கொண்டு=அருகிலுள்ளவீதியை வலமாகவந்து; துப்புறழ்வேணியார்கழற்றொழுவார்=பவளம்போலும்சிவந்தசடைமுடியையுடைய சிவபிரான்திருவடியைவணங்குகின்ற நம்பியாரூரர்; தோன்றுகங்காளரைக்கண்டார்=அங்குவீற்றிருந்தருளுங் கங்காளமூர்த்தியைத்தரிசித்தார்.—எ-று. ஈண்டுகங்காளர்=பிட்சாடனமூர்த்தி.

கண்டவர்கண்கள் காதனீர்வெள்ளம் பொழிதரக்கைகுவித் திறைஞ்சி
வண்டறைகுழலார் மனங்கவர்பலிக்கு வருந்திருவடிவுகண் டவர்கள்
கொண்டதோர்மயலால் வினவுகூற்றாகக் குலவுசொற்காருலா வியவென்
றண்டர்நாயகனைப் பரவியாரணிய விடங்கராமருந்தமிழ் புனைந்தார்.

(இ-ள்.) கண்டவர்கண்கள்காதனீர்வெள்ளம்பொழிதர=தரிசித்த நம்பியாரூரர் கண்களினின்றும் ஆனந்தக்கண்ணீர்சொரிதர; கைகுவித்திறைஞ்சி=கைகளைச் சிரசின்மேற்குவித்துவணங்கி; வண்டறைகுழலார்மனங்கவர்பலிக்குவருந்திருவடிவுகண்டு=வண்டுகள்ஒலிக்கின்ற கூந்தலையுடைய நைமிசாரணியமகளிர்கள் தம்முளத்தைக்கவர்கின்ற பிட்சாடனவடிவைக்கண்டு; அவர்கள்கொண்டதோர்மயலால்வினவுகூற்றாக=அம்மகளிர் தாங்கொண்டமயக்கத்தினாற் சிவபிரானை வினவுகின்ற உரையாக; குலவுசொற்காருலாவியவென்று=விளங்கும் திருப்பதிகத்தை காருலாவியவென்று முதலிலெடுத்து; அண்டர்நாயகனைப்பரவி=சிவபிரானைத்துதித்து; ஆரணியவிடங்கராமருந்தமிழ்புனைந்தார்=ஆரணியவிடங்கரென்னும் இறுதியையுடைய திருப்பதிகத்தைச்சாத்தினார்.—எ-று.

## திருப்பைஞ்ஞீலி - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

காருலாவியநஞ்சையுண்டிருள்கண்டவெண்டலையோடுகொண்
டூரெலாந்திரிந்தென்செய்வீர்பலியோரிடத்திலேகொள்ளுநீர்
பாரெலாம்பணிந்தும்மையேபரவிப்பணியும்பைஞ்ஞீலியீ
ராரமாவதுநாகமோசொலுமாரணீயவிடங்கரே.

அன்னஞ்சேர்வயல்சூழ்பைஞ்ஞீலியிலாரணீயவிடங்கரை
மின்னுநுண்ணிடைமங்கைமார்பலர்வேண்டிக்காதன்மொழிந்தசொன்
மன்னுதொல்புகழ்நாவலூரன்வன்றொண்டன்வாய்மொழிபாடல்பத்
துன்னியின்னிசைபாடுவாருமைகேள்வன்சேவடிசேர்வரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மெய்ஞ்ஞானநீலகண்டேசுவரர், தேவியார்-விசாலாட்சியம்மை.

---

பரவியப்பதிகத் திருக்கடைக்காப்புச் சாத்திமுன்பணிந்தருள் பெற்றுக்
கரவிலன்பர்கடங் கூட்டமுந்தொழுது கலந்தினிதிருந்துபோந் தருளி
விரவியவீங்கோய் மலைமுதலாக விமலர்தம்பதிபல வணங்கிக்
குரவலர்சோலை யணிதிருப்பாண்டிக் கொடுமுடியணைந்தனர் கொங்கில்.

(இ-ள்.) பரவியப்பதிகத் திருக்கடைக்காப்புச்சாத்தி=அவர் திருப்பதிகம்பாடி அத்திருப்பதிகத்தினிறுதியில் திருக்கடைக்காப்பணிந்து; முன்பணிந்தருள்பெற்று= பைஞ்ஞீலிநாதர் திருமுன்னே வணங்கி அவர் திருவருளைப்பெற்று; கரவிலன்பர்கடங் கூட்டமுந்தொழுது=மெய்யடியார் திருக்கூட்டத்தையும் வணங்கி; கலந்தினிதிருந்து போந்தருளி=அவர்களோடு அளவளாவி இனிதாக வீற்றிருந்து அங்குநின்று மெழுந்தருளி; விரவியவீங்கோய்மலைமுதலாக=அங்குள்ள திருவீங்கோய் மலைமுதலாக; விமலர் தம்பதிபலவணங்கி=சிவபிரான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளை வணங்கி; கொங்கிற்குரவலர்சோலையணி=கொங்குநாட்டின்கணுள்ள குராமரங்களலர்ந்திருக்குஞ் சோலைசூழ்ந்த; திருப்பாண்டிக்கொடுமுடியணைந்தனர்=திருப்பாண்டிக்கொடுமுடியை யடைந்தார்.—எ-று. (அ௫)

கொங்கினிற்பொன்னித் தென்கரைக்கறையூர்க் கொடுமுடிக்கோயின் முன்குறுகிச், சங்கவெண்குழையருழைவலஞ்செய்துசார்ந்தடியன்பினிற் றாழ்ந்து, பொங்கியவேட்கைபெருகிடத்தொழுதுபுனிதர்பொன்மேனியை நோக்கி, யிங்கிவர்தம்மைமறக்கவொண்ணுதென்றெழுந்தமெய்க்குறிப்பினி லெடுப்ப.

(இ-ள்.) கொங்கினிற்பொன்னித்தென்கரைக்கறையூர்=கொங்குநாட்டில் காவிரியின் தென்கரையிலுள்ள கறையூரில்; கொடுமுடிக்கோயின்முன்குறுகி=திருப்பாண்டிக்கொடுமுடி என்னும் திருக்கோயிலையடைந்து; சங்கவெண்குழையருழைவலஞ்செய்து=வெள்ளிய சங்கக்குழையையுடைய சிவபிரான் திருக்கோயிலை வலமாகவந்து; சார்ந்தடியன்பினிற்றாழ்ந்து=திருமுன்னே நின்று அவர் திருவடிகளை யன்பால் வணங்கி; பொங்கியவேட்கைபெருகிடத்தொழுது=மிக்க விருப்பானது மேம்படக் கைகுவித்து; புனிதர்பொன்மேனியைநோக்கி=சிவபிரான் திருமேனியைப்பார்த்து; இங்கிவர்

தம்மைமறக்கவொண்ணாதென்று=இவனை மறக்கக்கூடாதென்று; எழுந்தமெய்க்குறிப் பினிலெழுப்ப=திருவுள்ளத்துதித்த மெய்ம்மைக்குறிப்பினால் திருப்பதிகம்பாடத் தொடங்குங்கால்.—எ-று. (அகூ)

அண்ணலாரடிகண் மறக்கினுநாம வஞ்செழுத்தறியவெப் பொழுது
மெண்ணியநாவே யின்சுவைபெருக விடையறாதியம்புமென் றிதனைத்
திண்ணியவுணர்விற் கொள்பவர்மற்றுப் பற்றிலேனெனச்செழுந்தமிழா
னண்ணியவன்பிற் பிணிப்புறநவின்றார் நமச்சிவாயத்திருப் பதிகம்.

(இ-ள்.) அண்ணலாரடிகண்மறக்கினும்=சிவபிரான் திருவடிகளை நான் மறந்தாலும்; நாமவஞ்செழுத்தறிய=அவர் திருநாமமாகிய திருவஞ்செழுத்தைப் பிறர் கேட்கும்படி; எப்பொழுதுமெண்ணியநாவே=எக்காலமும் கணிக்கின்ற நாத்தானே; இன்சுவைபெருக=இனிய மதுரமுண்டாக; இடையறாதியம்புமென்று—நீங்காது கூறுமென்று; இதனைத்திண்ணியவுணர்விற்கொள்பவர்=இக்கருத்தைத் திட்பமாகத் தம் உணர்விற்கொள்ளும் நம்பியாரூரர்; மற்றுப்பற்றிலேனெனச்செழுந்தமிழால்=மற்றுப்பற்றிலேனென்று செழுந்தமிழினாலே; நண்ணியவன்பிற்பிணிப்புறநவின்றார்=தம் திருவுள்ளத்துதித்த பேரன்பால் இயைபுறும்படி பாடினார்; நமச்சிவாயத்திருப்பதிகம்=நமச்சிவாயத்திருப்பதிகத்தை —எ-று.

இவ்விரண்டுங்குளகம். எடுப்ப உணர்விற்கொள்பவர் என இயையும். (அ௭)

## திருப்பாண்டிக்கொடுமுடி-பண்-பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

மற்றுப்பற்றெனக் கின்றிநின்றிருப பாதமேமனம் பாவித்தேன்
பெற்றலும்பிறந் தேனினிப்பிற வாததன்மைவந் தெய்தினேன்
கற்றவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை யூரிற்பாண்டிக் கொடிமுடி
நற்றவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லுநாநமச்சி வாயவே. (க)

இட் டனும்மடியேத்துவாரிகழ்ந் திட்டநாண்மறந் திட்டநாள்
கெட்டநாளிவை யென்றலாற்கருதேன்கிளர்புனற்காவிரி
வட்டவாசிகை கொண்டடி தொழுதேத்துபாண்டிக்கொடுமுடி
நட்டவாவுனை நான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (உ)

ஓவுநாளுணர்வழியுநாளுயிர்போகுநாளுயர்பாடைமேற்
காவுநாளிவை யென்றலாற்கருதேன்கிளர்புனற்காவிரிப்
பாவுதண்புனல்வந் திழிபரஞ்சோதிபாண்டிக்கொடுமுடி
நாவலாவுனை நான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௩)

எல்லையில்புகழ் பிரானெந்தைதம்பிரானென்பொன்மாமணி
கல்லையுந்திவளம் பொழிந்திழிகாவிரியதன்வாய்க்கரை
நல்லவர்தொழு தேத்துஞ்சீர்க்கறையூரிற்பாண்டிக்கொடுமுடி
வல்லவாவுனை நான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (ச)

அஞ்சினார்க்கரணாதியென் றடியேனுநான்மிகவஞ்சினே
னஞ்சலென் றடித்தொண்டனேற்கருணல்கினாய்க்கழிகின்றதென்

பஞ்சின்மெல்லடிப்பாவைமார்குடைந்தாடுபாண்டிக்கொடுமுடி
நஞ்சணிகண்டநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௫)

எடுவானிளந்திங்கள்சூடினையென்பின்கொல்புலித்தோலின்மே
லாடுபாம்பதரைக்கசைத்தவழகனேயந்தண்காவிரிப்
பாடுதண்புனல்வந்திழிபரஞ்சோதிபாண்டிக்கொடுமுடிச்
சேடனேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௬)

விரும்பிநின்மலர்ப்பாதமேநினைந்தேன்வினைகளும்விண்டன
நெருங்கிவண்பொழில்சூழ்ந்தெழில்பெறநின்றகாவிரிக்கோட்டிடைக்
குரும்பைமென்முலைக்கோதைமார்குடைந்தாடுபாண்டிக்கொடுமுடி
விரும்பனேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௭)

செம்பொனேர்சடையாய்திரிபுரந்தீயெழச்சிலைகோலினாய்
வம்புலாங்குழலாளைப்பாகமமர்ந்துகாவிரிக்கோட்டிடைக்
கொம்பின்மேற்குயில்கூவமாமயிலாடுபாண்டிக்கொடுமுடி
நம்பனேயுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௮)

சாரணன்றந்தையெம்பிரானெந்தைதம்பிரானென்பொன்மாமணியென்று
பேரெணாயிரகோடிதேவர்பிதற்றிநின்றுபிரிகிலார்
நாரணன்பிரமன்றொழுங்கறையூரிற்பாண்டிக்கொடுமுடிக்
காரணாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே. (௯)

கோணியபிறை சூடியைக்கறை யூரிற்பாண்டிக் கொடிமுடி
பேணியபெரு மானைப்பிஞ்ஞகப் பித்தனைப்பிறப் பில்லியைப்
பாணுலாவரி வண்டறைகொன்றைத் தாரனைப்படப் பாம்பரை
நாணனைத்தொண்ட னூரன்சொல்லிவை சொல்லுவார்க்கில்லை துன்பமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-நெறிக்காட்டுநாயகர், தேவியார்-பரிகுழலாள்.

உலகெலாமுய்ய வுறுதியாம்பதிக முரைத்துமெய்யுணர்வறா வொருமை
நிலவியசிந்தை யுடன்றிருவருளா னீங்குவார்பாங்குநற் பதிகள்
பலவுமுன்பணிந்துபரமர்தாள்போற்றிப் போந்துதண்பனிமலர்ப்படப்பைக்
குலவுமிக்கொங்கிற் காஞ்சிவாய்ப்பேரூர் குறுகினார்முறுகுமா தரவால்.

(இ-ள்.) உலகெலாமுய்யவுறுதியாம்பதிகமுரைத்து=உலகத்தாரீடேற உறுதியை விளக்குந் திருப்பதிகத்தைப் பாடியருளி; மெய்யுணர்வறாவொருமைநிலவியசிந்தையுடன்=மெய்யுணர்ச்சி நீங்காத ஒருமைப்பாடோடு விரவிய சித்தத்துடன்; திருவருளானீங்குவார்=சிவபிரான் திருவருளால் அங்குநின்று நீங்கும் நம்பியாரூரர்; பாங்குநற்பதிகள்பலவுமுன்பணிந்து=அதனருகிலுள்ள பல திருப்பதிகளையும் முற்பட்டு வணங்கி; பரமர்தாள்போற்றிப்போந்து=அங்கு வீற்றிருந்தருளும் சிவபிரான் திருவடிகளைப்பரவிச்சென்று; தண்பனிமலர்ப்படப்பைகுலவுமிக்கொங்கில்=குளிர்ந்த மலர்களையுடைய தட்பமான சோலைகள் சூழ்ந்த இக்கொங்குநாட்டிலுள்ள; காஞ்சிவாய்ப்பே

ரூர்குறுகினார் முறுகுமாதரவால்—காஞ்சிநதிக்கரையிலிருக்கும் திருப்பேரூரையடைந் தார்முறுகிவளரும்பேரன்போடு.—எ-று. (அஅ)

அத்திருப்பதியை யணைந்துமுன்றம்மை யாண்டவர்கோயி லுட் புகுந்து
மெய்த்தவர்சூழ வலங்கொண்டுமுன்பு மேவுவார்தம்மெதிர் விளங்கி
நித்தனார்தில்லை மன்றுணின்றாட லீடியகோலநேர் காட்டக்
கைத்தலங்குவித்துக் கண்களானந்தக் கலுழிநீர்பொழிதரக் கண்டார்.

(இ-ள்.) அத்திருப்பதியையணைந்து—அத்திருப்பேரூரையடைந்து; முன்றம் மையாண்டவர்கோயிலுட்புகுந்து—முன்னாளில் தம்மை யடிமைக்கொண்ட சிவபிரான் திருக்கோயிலுட்புகுந்து; மெய்த்தவர்சூழவலங்கொண்டு—மெய்யடியார்கள் சூழும்வண் ணம் திருக்கோயிலை வலமாகவந்து; முன்புமேவுவார்—முன்னே வருகின்ற நம்பியாரூ ரர்; தம்மெதிர்விளங்க—தமக்கு எதிரிற்காணும்படி; நித்தனார்தில்லைமன்றுணின்றாடலீ டியகோலநேர்காட்ட—சிவபிரான் கனகசபையின்கண் நின்று நிருத்தஞ்செய்தருளுந் திருக்கோலத்தைத்தானே தரிசிப்பிக்க; கைத்தலங்குவித்து—திருக்கரங்களைச் சிரசின் மேற்குவித்து; கண்களானந்தக்கலுழிநீர்பொழிதரக்கண்டார்—கண்ணிரண்டும் ஆனந்த வெள்ளமாகிய நீரைப் பொழியும்படி தரிசித்தார்.—எ-று. (அகூ)

காண்டலுந்தொழுது வீழ்ந்துடனெழுந்து கரையிலன்பென்பினை யுருக்கப்
பூண்டவைம்புலனிற் புலப்படாவின்பம் புணர்ந்துமெய்யுணர்வினிற்பொங்
தாண்டவம்புரியுந் தம்பிரானாரைத் தலைப்படக்கிடைத்தபின் சைவ [கத்
வாண்டகையாருக் கடுத்தவந்நிலைமை விளைவையாரளவறிந் துரைப்பார்.

(இ-ள்.) காண்டலுந்தொழுதுவீழ்ந்துடனெழுந்து—தரிசித்த அளவில் நிலமுற அட்டாங்கம் வணங்கியெழுந்து; கரையிலன்பென்பினையுருக்க—அடங்காத பேரன்பா னது என்பினை யுருகச்செய்ய; பூண்டவைம்புலனிற்புலப்படாவின்பம்—ஐம்பொறி யோடியைந்த ஐம்புலவிடயங்களால் அறியப்படாத பேரின்பமானது; புணர்ந்துமெய்யு ணர்வினிற்பொங்க—தம்முட்கலந்து மெய்யுணர்வு காரணமாக மேம்பட; தாண்டவ ம்புரியுந்தம்பிரானாரை—ஆனந்தநிருத்தம் செய்தருளும் சிவபிரானை; தலைப்படக்கிடை த்தபின்—தரிசிக்கப்பெற்றபின்; சைவவாண்டகையாருக்கடுத்தவந்நிலைமைவிளைவை— நம்பியாரூரர்க்குண்டான அதீதானந்த விளைவை; யாரளவறிந்துரைப்பார்—இவ்வளவி ற்றென்று அதனளவையறிந்துரைக்கவல்லவர் யார் ஒருவருமில்லை.—எ-று.

ஐம்புலங்களுந் தத்தம் புலங்களை யுணர்தற்குக் கருவியாகிய பொறிகளை யுடை மையின் பூண்ட வைம்புலமென்றார். அப்பொறியாலுணரப்படும் வனிதை மாலை முதலி ய விடயங்களால் வருமின்பம் இது சுகமென்று சுட்டி யநுபவிக்கப்படுமேனும் அவ்வி ன்பம் விபரீதமும் அநித்தியமுமாதலின் ஐம்புலனிற் புலப்படாவின்பமென்றும், இரும் பைக் காந்தம் வலித்தாற்போலத் தம்மை வசப்படுத்தித் தம்முள் விரவி விளக்கி நிற் குந் திருவருளால் விளைதலிற் புணர்ந்து மெய்யுணர்வினிற் பொங்கவென்றுங்கூறினர். இத்திருப்பதியிற் சிவபிரான் நிருத்தக்காட்சி விசேடக்குறிப்பால் தரிசிப்பித்தமையின் இதுவும் ஓர் சிதம்பரமாதலறிக. (௬0)

அங்கிலைநிகழ்ந்த வாரருள்பெற்ற வன்பனாரின்பவெள் ளத்து
மன்னியபாடன் மகிழ்ந்துடன்பரவி வலம்பதியதனிடை மருவிப்
பொன்மணிமன்று ளெடுத்தசேவடியார் புரிநடங்கும்பிடப் பெற்று
லென்னினிப்புறமபோ யெய்துவதென்று மீண்டெழுந்தருளுதற் கெழுவார்.

(இ-ள்.) அந்நிலைநிகழ்ந்தவாறருள்பெற்றவன்பனார்=அவ்வாறு நிகழ்தற்கேது வான திருவருளைப்பெற்ற நம்பியாரூரர்; இன்பவெள்ளத்துமன்னியபாடல்=இன்பப் பெருக்கோடு நிலவிய திருப்பதிகத்தை; மகிழ்ந்துடன்பரவி=மகிழ்ச்சி காரணமாக உடனே துதித்து; வளம்பதியதனிடைமருவி=வளந்தங்கிய அத்திருப்பதியில் வீற்றிருந்து; பொன்மணிமன்றுள்=பொன்மயமான அழகிய கனகசபையில்; எடுத்தசேவடியார் புரிநடங்கும்பிடப்பெற்றால்=தூக்கிய சிவந்த திருவடியையுடைய நடேசப்பிரான் ஆடியருளுந் திருநடத்தைத் தரிசிக்கப்பெற்றுக்கொண்டால்; என்னினிப்புறம்போயெய்துவதென்று=புறத்திலுள்ள திருப்பதியிற்சென்று தாம் அடையும் பயன் யாதென்று; மீண்டெழுந்தருளுதற்கெழுவார்=அங்குநின்று சிதம்பரத்திற் கெழுந்தருளுதற்குடன்படுவாராயினர்.—எ-று. (௧௧)

ஆயிடைநீங்கி யருளினாற்செல்வா ரருவரைச்சுரங்களும் பிறவும்
பாயுநீர்நதியும் பலபலகடந்து பரமர்தம்பதிபல பணிந்து
மேயவண்டமிழால் விருப்பொடும்பரவி வெஞ்சமாக்கூடலும் பணிந்து
சேயிடைகழியப் போந்துவந்தடைந்தார் தென்றிசைக்கற்குடி மலையில்.

(இ-ள்.) ஆயிடைநீங்கியருளினாற்செல்வார்=அத்திருப்பதியினின்றும் நீங்கிச் சிவபிரான் திருவருளினால் எழுந்தருளுகின்ற நம்பியாரூரர்; அருவரைச்சுரங்களும்பிறவும்=அரிய மலைச்சுரங்களும் பிறகாடுகளும்; பாயுநீர்நதியும்பலபலகடந்து=பெருகுகின்ற நீரையுடைய நதியுமாகிய பற்பல விடங்களை நீங்கி; பரமர்தம்பதிபலபணிந்து=அங்கு சிவபிரான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையும் வணங்கி; மேயவண்டமிழால்விருப்பொடும்பரவி=இனிமைபொருந்திய தமிழ்ப்பதிகத்தால் விருப்புடன்றுதித்து; வெஞ்சமாக்கூடலும்பணிந்து=வெஞ்சமாக்கூடலென்னுந் திருப்பதியையும் வணங்கி; சேயிடைகழியப்போந்து=நெடுந்தூரம் நீங்கிப்போக எழுந்தருளி; வந்தடைந்தார்தென்றிசைக்கற்குடிமலையில்=தென்றிசையிலுள்ள கற்குடிமாமலையில் வந்தருளினார்.-எ-று.

## திருவெஞ்சமாக்கூடல்-பண்-கொல்லிக்கவ்வாணம்.

திருச்சிற்றம்பலம்.

எறிக்குங்கதிர்வேயுதிர்முத்தமோடேலமிலவங்கந்தக்கோலமிஞ்சி, செறிக்கும்புனலுட்பெய்துகொண்டுமண்டித்திளைத்தெற்றுசிற்றாறதன் கீழ்க்கரைமேன், முறிக்குந்தளைமாமுடப்புன்னைநாழல்குருக்கத்திகண்மேற்குயில் கூவலறா, வெறிக்குங்கலைமாவெஞ்சமாக்கூடல்விகிர்தாவடியேனையும்வேண்டுதியே.

வஞ்சிநுண்ணிடையார்மயிற்சாயனல்லார்வடிவேற்கணல்லார்பலர்வந்திறைஞ்சும், வெஞ்சமாக்கூடல்விகிர்தாவடியேனையும்வேண்டுதியேயென்று தானிரும்பி, வஞ்சியாதளிக்கும்வயனாவலர்கோன்வனப்பகையப்பன்வன்றொண்டன்சொன்ன, செஞ்சொற்றமிழ்மாலைகள்பத்தும்வல்லார்சிவலோகத்திருப்பதுதிண்ணமன்றே.

திருச்சிற்றம்பலம்.

---

வீடுதருமிக் கற்குடியில் விழுமியாரைப் பணிந்திறைஞ்சி
நீடுவிருப்பிற் றிருப்பதிக நிறைந்தசிந்தை யுடன்பாடிப்
பாடும்விருப்பிற் றொண்டருடன் பதிகள்பலவு மணைந்திறைஞ்சித்
தேடுமிருவர் காண்பரியார் திருவாறைமேற்றளி சென்றணைந்தார்.

(இ-ள்.) வீடுதருமிக்கற்குடியில்=அவர் வீட்டைக்கொடுக்கும் இத்திருக்கற்குடியில் வீற்றிருந்தருளும்; விழுமியானைப்பணிந்திறைஞ்சி=சிவபிரானை நிலமுறவீழ்ந்து வணங்கி; நீடுவிருப்பிற்றிருப்பதிகம்=மிக்க பேரன்போடு திருப்பதிகத்தை; நிறைந்த சிந்தையுடன்பாடி=நிறைவடைந்த சித்தத்துடன் பாடியருளி; பாடும்விருப்பிற்றொண்டருடன்=தாம் திருப்பதிகம் பாடும் விருப்பினால் அடியார்களோடு; பதிகள்பலவுமணைந்திறைஞ்சி=பல திருப்பதிகளையுஞ்சென்று வணங்கி; தேடுமிருவர்காண்பரியார்=தேடுகின்ற திருமால் பிரமனென்னும் இருவரும் அறிதற்கரிய சிவபிரான் வீற்றிருந்தருளும்; திருவாறைமேற்றளிசென்றடைந்தார்=திருவாறை மேற்றளியென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (கூ)

## திருக்கற்குடி பண் - நட்டராகம்.

### திருச்சிற்றம்பலம்.

விடையாருங்கொடியாய்வெறியார்மலர்க்கொன்றையினாய்
படையார்வெண்மழுவாபரமாயபரம்பரனே
கடியார்பூம்பொழில்சூழ்திருக்கற்குடிமன்னிநின்ற
வடிகேளெம்பெருமானடியேனையுமஞ்சலெனே.

அலையார்தண்புனல்சூழ்ந்தழகாகிவிழவமருங்
கலையார்மாதவர்சேர்திருக்கற்குடிக்கற்பகத்தைச்
சிலையார்வாணுதலாள்நல்லசிங்கடியப்பனுரை
விலையார்மாலைவல்லார்வியன்மூவுலகாள்பவரே.

திருச்சிற்றம்பலம்.

---

செம்பொன்மேருச் சிலைவளைத்த சிவனாராறை மேற்றளியி
னம்பர்பாதம் பணிந்திறைஞ்சி நாளுமகிழ்வார்க் கருள்கூட
வும்பர்போற்றுந் தானங்கள் பலவும்பணிந்து போந்தணைவா
ரிம்பர்வாழ வின்னம்பர் நகரைச்சேர வெய்தினார்.

(இ-ள்.) செம்பொன்மேருச்சிலைவளைத்த=சிவந்த பொன்மயமான மாமேருவை வில்லாகவளைத்தருளிய; சிவனாராறைமேற்றளியின்=சிவபிரானது திருவாறைமேற்றளியின்கண்; நம்பர்பாதம்பணிந்திறைஞ்சி=அச்சிவபிரான் திருவடிகளைப் பணிந்திறைஞ்சி; நாளுமகிழ்வார்க்கருள்கூட=நாடோறும் மகிழ்ச்சியடையுமவர்க்குத் திருவருள் கூட அதனால்; உம்பர்போற்றுந்தானங்கள்=தேவர்களும் பரவும் திருப்பதிகள்; பலவும்பணிந்துபோந்தணைவார்=பலவற்றையும் வணங்கியெழுந்தருளுகின்ற நம்பியாரூரர்; இம்பர்வாழ=இவ்வுலகத்தார் வாழும்படி; இன்னம்பர்நகரைச்சேரவெய்தினார்=திருவின்னம்பரென்னும் திருப்பதியையடைந்தார்.—எ-று. (கசு)

ஏரின்மருவு மின்னம்பர் மகிழ்ந்தவீசர் கழல்வணங்கி
யாருமன்பிற் பணிந்தேத்தி யாராவருளா லங்கமர்வார்
போரின்மலியுங் கரியுரித்தார் மருவும்புறம் பயம்போற்றிச்
சேருமுள்ள மிக்கெழமெய்ப் பதிகம்பாடிச் செல்கின்றார்.

(இ-ள்.) ஏரின்மருவுமின்னம்பர்மகிழ்ந்த=அழகான்மிக்க இன்னம்பரென்னுந் திருப்பதியில் வீற்றிருந்தருளும்; ஈசர்கழல்வணங்கி=சிவபிரான் திருவடிகளை வணங்கி; ஆருமன்பிற்பணிந்தேத்தி=நிறைந்த பேரன்பால் நிலமுறவணங்கித்துதித்து; ஆராவருளாலங்கமர்வார்=தெவிட்டாத் திருவருளினால் அத்திருப்பதியில் வீற்றிருந்தருளும்

நம்பியாரூரர்; போரின்மலியுங்கரியுரித்தார்=போர்த்தொழிலால் மிக்க கடூரமென்னும் யானையை யுரித்தருளும் சிவபிரான்; மருவும்புறம்பயம்போற்றி=வீற்றிருந்தருளும் திருப்புறம்பயமென்னும் திருப்பதியை வணங்கி; சேருமுள்ளமிக்கெழ=ஒருமித்த திருவுள்ளம் அன்பால் மீக்கூர; மெய்ப்பதிகம்பாடிச்செல்கின்றார்=மெய்ம்மையான திருப்பதிகம்பாடிக்கொண்டு செல்வாராயினார் —எ-று. (௬௫)

வேறு.

அங்கமோதியோ ராறைமேற்றளி யென்றெடுத்தமர் காதலிற்
பொங்குமின்றமி ழால்விரும்பு புறம்பயந்தொழப் போதுமென்
றெங்குமன்னிய வின்னிசைப்பதி கம்புனைந்துட னெய்தினார்
திங்கள்சூடிய செல்வர்மேவு திருப்புறம்பயஞ் சேரவே.

(இ-ள்.) அங்கமோதியோராறைமேற்றளியென்றெடுத்து=அவர் அங்கமோதியோராறைமேற்றளியென்று முதலிலெடுத்து: அமர்காதலிற்பொங்குமின்றமிழால்=மிக்க காதலினாற் பொலிவடைந்த இனிய திருப்பதிகத்தினாலே; புறம்பயந்தொழப்போதுமென்று=புறம்பயத்தைத்தொழ யாம் செல்வோமென்று; எங்குமன்னியவின்னிசைப்பதிகம்புனைந்து=எவ்விடத்தும் நிலைபெற்றஇனிய இசையோடுகூடிய திருப்பதிகத்தைப்பாடி; திங்கள்சூடியசெல்வர்மேவு=சிவபிரான் வீற்றிருந்தருளும்; திருப்புறம்பயஞ்சேரவுடனெய்தினார்=திருப்புறம்பயத்தைச்சார வந்தருளினார்.—எ-று. ஏ-அசை.

## திருப்புறம்பயம்-பண்-கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

அங்கமோதியோராறைமேற்றளிநின்றுபோந்துவந்தின்னம்பர்
தங்கினோமையுமின்னதென்றிலரீசனாரெழுநெஞ்சமே
கங்குலேமங்கள்கொண்டுதேவர்களோதவானவர்தாந்தொழும்
பொங்குமால்விடையேறிசெல்வப்புறம்பயந்தொழப்போதுமே.

துஞ்சியும்பிறந்துஞ்சிறந்துந்துயக்கறாதமயக்கிவை
யஞ்சியூரன்றிருப்புறம்பயத்தப்பனைத்தமிழ்ச்சீரினா
னெஞ்சினாலேபுறம்பயந்தொழுதுய்துமென்றுநினைத்தன
வஞ்சியாதுரைசெய்யவல்லவர்வல்லர்வானுலகாளவே.

திருச்சிற்றம்பலம்.

---

அப்பதிக்க ணமர்ந்ததொண்டரு மன்றுவெண்ணைநல் லூரினி
லொப்பருந்தனி வேதியன்பழ வோலைகாட்டிநின் றாண்டவ
ரிப்பதிக்கண்வந் தெய்தவென்னத வங்களென்றெதிர் கொள்ளவே
முப்புரங்க ளெரித்தசேவகர் கோயில்வாயிலின் முன்னினார்.

(இ-ள்.) அப்பதிக்கணமர்ந்ததொண்டரும்=அதுவன்றி அத்திருப்பதிக்கண்வாழும் அடியார்களும்; அன்றுவெண்ணைநல்லூரினில்=அந்நாளில் திருவெண்ணைநல்லூரில்; ஒப்பருந்தனிவேதியன்=ஒப்பற்ற சிவபிரானாகிய மறையவர்; பழவோலைகாட்டிநின்றாண்டவர்=பழைய ஆவணவோலையைக்காட்டி வெளிப்பட்டு அடிமைக்கொண்ட நம்பியாரூரர்; இப்பதிக்கண்வந்தெய்த=இத்திருப்பதிக்கணெழுந்தருள; என்னதவங்களென்றெதிர்கொள்ளவே=யாம் செய்த தவங்களென்னவென்று கூறி எதிர்கொண்டு

வரத் தாரும்; முப்புரங்களெரித்தசேவகர்=திரிபுரங்களையெரித்த சிவபிரானது; கோயில்வாயிலின்முன்னினார்=திருக்கோயில்வாயிலையடைந்தார்.—எ-று. ஏகாரம்-அசை.

நீடுகோபுர முன்பிறைஞ்சி நிலாவுதொண்டரொ டுள்ளணைந்
தாடன்மேவிய வண்ணலாரடி போற்றியஞ்சலி கோலிநின்
றேடுலாமலர் தூவியெட்டினொ டைந்துமாகுமு றுப்பினாற்
பீடுநீடு நிலத்தின்மேற்பெரு கப்பணிந்து வணங்கினார்.

(இ-ள்.) நீடுகோபுரமுன்பிறைஞ்சி=அவர் உயர்ந்த திருக்கோபுரத்தின்முன்னே வணங்கி; நிலாவுதொண்டரொடுள்ளணைந்து=விளங்கிய திருக்கூட்டத்தோடு ஆலயத்தினுள்ளே புகுந்து; ஆடன்மேவியவண்ணலாரடிபோற்றி=ஆனந்தநிருத்தஞ்செய்தருளும் சிவபிரான் திருவடிகளைத்துதித்து; அஞ்சலிகோலிநின்று=அஞ்சலியாகத் திருக்கரங்களைக்கூப்பித் திருமுன்னே நின்று; ஏடுலாமலர்தூவி=இதழ்விரிந்த மலர்களைச்சொரிந்து; எட்டினொடைந்துமாகுமுறுப்பினால்=அட்டாங்கபஞ்சாங்கமென்னு முறுப்போடு; பீடுநீடுநிலத்தின்மேல்=பெருமைமிக்க நிலத்தில்; பெருகப்பணிந்துவணங்கினார்=மிகப்பணிந்துதொழுதார்.—எ-று. (கஅ)

அங்குநீடருள் பெற்றுளார்வ மிகப்பொழிந்தெழு மன்பினாற்
பொங்குநாண்மலர்ப் பாதமுன்பணிந் தேத்திமீண்டு புறத்தணைந்
தெங்குமாகி நிறைந்து நின்றவர் தாமகிழ்ந்த விடங்களிற்
றங்குகோலமி றைஞ்சுவாரருட் டாவிலன்பரொ டெய்தினார்.

(இ-ள்.) அங்குநீடருள்பெற்று=அவர் அவ்விடத்து மிக்க சிவபிரான் திருவருளைப்பெற்று; ஆர்வமிகப்பொழிந்தெழுமன்பினால்=பெருவிருப்பை மிகவும் விளைத்தெழுகின்ற பேரன்பினால்; பொங்குநாண்மலர்ப்பாதமுன்பணிந்தேத்தி=பொலிவினையுடைய புதிய தாமரைமலர்போலும் திருவடிகளின் முன்னே வணங்கித்துதித்து; மீண்டு புறத்தணைந்து=திரும்பிப் புறம்பேசென்று; எங்குமாகிநிறைந்துநின்றவர்தாம்=எவ்விடத்தும் கலந்து வியாபித்துநின்ற சிவபிரான்; மகிழ்ந்தவிடங்களில்=வீற்றிருந்தருளுந் திருப்பதிகளில்; தங்குகோலமிறைஞ்சுவார்=பொருந்திய திருக்கோலத்தைத்தொழுங் கருத்துடைய நம்பியாரூரர்; அருள்தாவிலன்பரொடெய்தினார்=திருவருணீங்காத அடியார்களோடு அடைந்தார்.—எ-று. (கக)

வேறு.

வம்புநீ டலங்கன்மார்பின் வன்றொண்டர் வன்னிகொன்றை
தும்பைவெள் ளடம்புதிங்க டூயநீ ரணிந்தசென்னித்
தம்பிரா னமர்ந்ததானம் பலபல சார்ந்துதாழ்ந்து
கொம்பனா ராடனீடு கூடலை யாற்றூர்சார.

(இ-ள்.) வம்புநீடலங்கன்மார்பின்வன்றொண்டர்=வாசனைகமழும் மாலையணிந்த திருமார்பினையுடைய நம்பியாரூரர்; வன்னிகொன்றைதும்பைவெள்ளடம்புதிங்கள்=வன்னிப்பத்திரமும் கொன்றைமலரும் தும்பைமலரும் வெள்ளிய அடப்பம்பூவும் இளம்பிறையும்; தூயநீரணிந்த=பரிசுத்தமாகிய கங்கைநதியும் ஆகிய இவைகளையணிந்த; சென்னித்தம்பிரானமர்ந்த=திருமுடியையுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும்; தானம்பலபலசார்ந்துதாழ்ந்து=பல திருப்பதிகளையுமடைந்து வணங்கி; கொம்பனாராடனீடுகூடலையாற்றூர்சார=மகளிர்கள் நிருத்தஞ்செய்கின்ற திருக்கூடலையாற்றூரையடைய.—எ-று (௪00)

செப்பரும் பதியிற்சேரார் திருமுது குன்றநோக்கி
யொப்பரும் புகழார்செல்லு மொருவழி யுமையாளோடு
மெய்ப்பரம் பொருளாயுள்ளார் வேதிய ராகிநின்றார்
முப்புரி நூலுந்தாங்கி நம்பியா ரூரர்முன்பு.

(இ-ள்.) ஒப்பரும்புகழார்=ஒப்பற்ற புகழையுடைய அந்நம்பியாரூரர்; செப்பரும்பதியிற்சேரார்=சொல்லுதற்கரிய அத்திருப்பதியிற்சேராமல்; திருமுதுகுன்றநோக்கி=திருமுதுகுன்றமென்னுந் திருப்பதியைக் கருதிக்கொண்டு; செல்லுமொருவழி=போமொருமார்க்கத்தில்; உமையாளோடுமெய்ப் பரம்பொருளாயுள்ளார்=உமாதேவியாரோடு மெய்ம்மைக்கடவுளாயுள்ள சிவபிரான்; நம்பியாரூரர்முன்பு=நம்பியாரூரருக்கெதிரில்; முப்புரிநூலுந்தாங்கிவேதியராகிநின்றார்=பூணூலையு மணிந்து மறையவர் வேடந்தாங்கி நின்றருளினார்.—எ-று. (௬0௪)

நின்றவர் தம்மைநோக்கி நெகிழ்ந்தசிந் தையராய்த்தாழ்வா
ரின்றியா முதுகுன்றெய்த வழியெமக் கியம்புமென்னக்
குன்றவில் லாளியாருங் கூடலை யாற்றூரேறச்
சென்றதிவ் வழிதானென்று செல்வழித் துணையாய்ச்செல்ல.

(இ-ள்.) நின்றவர்தம்மைநோக்கி=அங்குநின்ற சிவபிரானைப்பார்த்து; நெகிழ்ந்தசிந்தையராய்த்தாழ்வார்=உருகிய மனமுடையவராய் வணங்கும் நம்பியாரூரர்; இன்றியாமுதுகுன்றெய்த=இன்றைக்கு நாம் திருமுதுகுன்றையடைய; வழியெமக்கியம்புமென்ன=மார்க்கத்தை நமக்குச் சொல்லுமென்று கேட்க; குன்றவில்லாளியாரும்=மேருவில்லையுடைய சிவபிரானாகிய மறையவரும்; கூடலையாற்றூரேறச்சென்றதிவ்வழிதானென்று=திருக்கூடலையாற்றூரையடைய விம்மார்க்கம் திருமுதுகுன்றத்துச்சென்றதென்று; செல்வழித்துணையாய்ச்செல்ல=அவர் செல்லும் வழிக்குத் தாம் துணையாகப் போக.—எ-று. (௬0௫)

கண்டவர் கைகள்கூப்பித் தொழுதுபின் றொடர்வார்க்காணார்
வண்டலர் கொன்றையானை வடிவுடை மழுவென்றேத்தி
யண்டர்தம் பெருமான்போந்த வதிசய மறியேனென்று
கொண்டெழு விருப்பினோடுங் கூடலை யாற்றூர்புக்கார்.

(இ-ள்) கண்டவர்கைகள்கூப்பித்தொழுது=வழித்துணையாச்செல்லும் சிவபிரானைத்தரிசித்த நம்பியாரூரர் கைகளைச் சிரசிற் குவித்து வணங்கி; பின்றொடர்வார்க்காணார்=தமக்கு வழித்துணையாச்செல்லும் சிவபிரானைக்காணாதவராய்; வண்டலர்கொன்றையானை=வண்டுகள் வீழ்தலால் அலர்ந்த கொன்றைப்பூமாலையைச்சூடிய சிவபிரானை; வடிவுடைமழுவென்றேத்தி=வடிவுடை மழுவென்று திருப்பதிகமெடுத்து; அண்டர்தம்பெருமான்போந்த வதிசயமறியேனென்று=தேவர்பெருமானாகிய சிவபிரான் போந்த வதிசயமறியேனென்று இறுதியில்வைத்து; கொண்டெழுவிருப்பினோடும்=தந்திருவுள்ளத்துக் கலந்தெழாநின்ற பேரன்போடும்; கூடலையாற்றூர்புக்கார்=திருக்கூடலையாற்றூரையடைந்தார்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். (௬0௬)

## திருக்கூடலையாற்றூர் - பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

வடிவுடைமழுவேந்திமதகரியுரிபோர்த்துப்
பொடியணிதிருமேனிப்புரிகுழலுமையோடுங்

கொடியணிநெடுமாடக்கூடலையாற்றூரி
லடிகளிவ்வழிபோந்தவதிசயமறியேனே.

கூடலையாற்றூரிற்கொடியிடையவளோடு
மாடலுகந்தானையதிசயமிதுவென்று
நாடியவின்றமிழாற்காவலவூரன்சொற்
பாடல்கள்பத்தும்வல்லார்தம்வினைபற்றறுமே.

திருச்சிற்றம்பலம்.

---

கூடலை யாற்றூர்மேவுங் கொன்றைவார் சடையினார்தம்
பீடுயர் கோயில்புக்குப் பெருகிய வார்வம்பொங்க
வாடகப் பொதுவிலாடு மறைகழல் வணங்கிப்போற்றி
நீடருள் பெற்றுப்போந்து திருமுது குன்றினேர்ந்தார்.

(இ-ள்.) கூடலையாற்றூர்மேவும்=அவர் திருக்கூடலையாற்றூரின்கண் வீற்றிருந்தருளும்; கொன்றைவார்சடையினார்தம்=கொன்றைமலரைச்சூடிய நீண்ட சடைமுடியையுடைய சிவபிரானது; பீடுயர்கோயில்புக்கு=பெருமைமிக்க திருக்கோயிலையடைந்து; பெருகியவார்வம்பொங்க=மிக்க பேரன்பானதுவளர; ஆடகப்பொதுவிலாடும்=கனகசபையின்கண் திருத்தஞ்செய்தருளும்; அறைகழல்வணங்கிப்போற்றி=ஒலிக்கின்ற வீரக்கழலைத்தரித்த திருவடிகளை வணங்கித்துதித்து; நீடருள்பெற்றுப்போந்து=மிக்க திருவருளைப்பெற்றுக்கொண்டு அங்குநின்றும் நீங்கி; திருமுதுகுன்றினேர்ந்தார்=திருமுதுகுன்றையடைந்தார்.—எ-று. (௧0௪)

தடநிலைக் கோபுரத்தைத் தாழ்ந்துமுன் னிறைஞ்சிக்கோயில்
புடைவலங் கொண்டுபுக்குப் போற்றினர் தொழுதுவீழ்ந்து
நடநவில் வாரைநஞ்சி யிடையெனுஞ் செஞ்சொன்மாலைந்
தொடைநிகழ் பதிகம்பாடித் தொழுதுகை சுமந்துநின்று.

(இ-ள்.) தடநிலைக்கோபுரத்தைத்தாழ்ந்து=அவர் பெரிய நிலைகளையுடைய திருக்கோபுரத்தைச் சாட்டாங்கமாக வணங்கி; முன்னிறைஞ்சி=திருமுன்னே நின்றுதொழுது; கோயில்புடைவலங்கொண்டு=திருக்கோயிலை அருகில் வலமாகவந்து; புக்குப் போற்றினர்தொழுதுவீழ்ந்து=உள்ளே புகுந்து துதித்து நிலமுறவணங்கி; நடநவில்வாரை=திருத்தஞ்செய்தருளும் சிவபிரானை; நஞ்சியிடையெனுஞ்செஞ்சொன்மாலை=நஞ்சியிடையென்னும் முதலையுடைய செஞ்சொல்லாலமைந்த மாலையாகிய; தொடைநிகழ் பதிகம்பாடி=தொடையமைந்த திருப்பதிகத்தைப்பாடி; தொழுதுகைசுமந்துநின்று=கைகளைக்கூப்பிச் சிரசின்மேல் அஞ்சலிசெய்து நின்று.—எ-று. (௧0௫)

## திருமுதுகுன்றம்-பண்-கொல்லிக்கவ்வாணம்.

திருச்சிற்றம்பலம்.

நஞ்சியிடையின்றுநாளையென்றும்மைநச்சுவார்
துஞ்சியிட்டாற்பின்னைச்செய்வதென்னடிகேள்சொலீர்
பஞ்சியிடப்புட்டில்கீறுமோபணியீரருள்
முஞ்சியிடைச்சங்கமார்க்குஞ்சீர்முதுகுன்றரே.

முத்திமுத்தாறுவலஞ்செய்முதுகுன்றரைப்
பித்தனேனப்பானடித்தொண்டனூரன்பிதற்றிவை
தத்துவஞானிகளாகினார்தடுமாற்றிலா
ரொத்தவத்தோர்களுமேத்துவார்க்கிடரில்லையே.

திருச்சிற்றம்பலம்.

---

நாதர்பாற் பொருடாம்வேண்டி நண்ணிய வண்ணமெல்லாங்
கோதறு மனத்துட்கொண்ட குறிப்பொடும் பரவும்போது
தாதவிழ் கொன்றைவேய்ந்தார் தரவருள் பெறுவார்சைவ
வேதியர் தலைவர்மீண்டு மெய்யில்வெண் பொடியும்பாட.

(இ-ள்.) சைவவேதியர்தலைவர்=சைவமறையவர் தலைவராகிய அந்நம்பியாரூரர்; நாதர்பாற்பொருடாம்வேண்டி=சிவபிரானிடத்துப் பொன்னைத் தாம் விரும்பி; நண்ணியவண்ணமெல்லாம்=வந்த வரலாறெல்லாம்; கோதறுமனத்துட்கொண்ட=குற்றமற்ற திருவுள்ளத்திற்கொண்ட; குறிப்பொடும் பரவும்போது=திருக்குறிப்பாற் பதிகம் பாடும்போது; தாதவிழ்கொன்றைவேய்ந்தார்=மலர்த்தாதோடலர்ந்த கொன்றைமாலையைச்சூடிய சிவபிரான்; தரவருள்பெறுவார்=பொன்னைக் கொடுத்தற்கேதுவான திருவருளைப்பெறுவாராய்; மீண்டுமெய்யில் வெண்பொடியும்பாட=திரும்ப மெய்யை முற்றப்பொடிப்பூசியென்னும் முதலையுடைய திருப்பதிகத்தையும் பாடியருள.

## நம்பியென்றதிருப்பதிகம்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

மெய்யைமுற்றப்பொடிப்பூசியோர்நம்பிவேதநான்கும்விரித்தோதியோர் நம்பி, கையிலோர்வெண்மழுவேந்தியோர்நம்பிகண்ணும்மூன்றுமுடையா யொருநம்பி, செய்யநம்பிசிறுசெஞ்சடைநம்பிதிரிபுரந்தீயெழச்செற்றதோ ர்வில்லா, லெய்தநம்பியெனையாளுடைநம்பியெழுபிறப்புமெங்கணம்பிகண் டாயே.

காத்திநம்பிகசியாதவர்வம்மைக்கசிந்த
வாக்கிம்மையோடம்மையிலின்பம்பெருக்குநம்பிபெருக்கருத்தா.

திருச்சிற்றம்பலம்.

---

பனிமதிச் சடையார்தாமும் பன்னிரண் டாயிரம்பொ
னனியருள் கொடுக்குமாற்றா னல்கிட வுடையநம்பி
தனிவரு மகிழ்ச்சிபொங்கத் தாழ்ந்தெழூஉ் தருகுசென்று
கனிவிட மிடற்றினார்முன் பின்னொன்று கழறலுற்றார்.

(இ-ள்.) பனிமதிச்சடையார்தாமும்=குளிர்ந்த இளம்பிறைசூடிய சடையையுடைய சிவபிரானும்; பன்னிரண்டாயிரம்பொன்=பன்னீராயிரம்பொன்னை; நனியருள்கொடுக்குமாற்றானல்கிட=மிக்க திருவருள் செய்யும் வழியாற்கொடுக்க; உடையநம்பிதனிவருமகிழ்ச்சிபொங்க=அநூர் ஒப்பின்றிவரும் மகிழ்ச்சி மீக்கூர; தாழ்ந்தெழூஉ்தருகுசென்று=வணங்கியெழுந்து சமீபத்திற்போய்; கனிவிடமிடற்றினார்முன்=களங்க

னிபோலுங் கரியவிடந்தங்கிய திருமிடற்றையுடைய சிவபிரான் திருமுன்னே; பின்னொன்றுகழறலுற்றார்=பின்னொன்று சொல்லத்தொடங்கினார்.—எ-று. இம்மூன்றுங்குளகம்.

அருளுமிக் கனகமெல்லா மடியனேற் காரூருள்ளோர்
மருளுற வியப்பவங்கே வரப்பெற வேண்டுமென்னத்
தெருளுற வெழுந்தவாக்காற் செழுமணி முத்தாற்றிட்டிப்
பொருளினை முழுதுமாரூர்க் குளத்திற்போய்க் கொள்கவென்றார்.

(இ-ள்.) அருளுமிக்கனகமெல்லாம்=அவர் தேவரீரருளிய இப்பொன்முழுதும்; அடியனேற்கு=அடியனேற்காக; ஆரூருள்ளோர் மருளுறவியப்ப=திருவாரூரின்கணுள்ளவர்கள் மயங்கவும் விம்மிதமடையவும், அங்கேவரப்பெறவேண்டுமென்ன=அத்திருவாரூரில் வரும்படி செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய; தெருளுறவெழுந்தவாக்கால்=சிவபிரான் யாவருமுணரவுதித்த அசரீரிவாக்கினால்; செழுமணிமுத்தாற்றிட்டிப்பொருளை=இப்பொன்னைக்குளிர்ந்த மணிமுத்தாநதியிலே யிட்டு; முழுதுமாரூர்க்குளத்திற்போய்க்கொள்கவென்றார்=குறையாமல் முழுதும் திருவாரூரிலுள்ள குளத்திற்சென்று நீ கொள்கவென்றருளிச்செய்தார்.—எ-று.

மருளுறவியப்பவென்றதனால் இப்பொருள் அங்குநின்று மிங்குவந்தது எவ்வாறெனநிச்சயித்தல் கூடாமையின் மருளும், இது மிக்க அற்புதமாதலின் வியப்பும் ஆரூருள்ளாரடையவென்றுகொள்க. (௧0அ)

என்றுதம் பிரானார்நல்கு மின்னருள் பெற்றபின்னர்
வன்றொண்டர் மச்சம்வேண்டிக் கைக்கொண்டு மணிமுத்தாற்றிற்
பொன்றிர ளெடுத்துநீருட் புகவிட்டுப் போதுகின்றா
ரன்றெனை வலிந்தாட்கொண்ட வருளிதி லறிவேனென்று.

(இ-ள்.) என்று தம்பிரானார்=இவ்வாறு தம்முதல்வராகிய சிவபிரான்; நல்குமின்னருள்பெற்றபின்னர்=அருளும் இனிய திருவருளைப்பெற்றபின்பு; வன்றொண்டர்மச்சம்வேண்டிக்கைக்கொண்டு=நம்பியாரூரர் மச்சத்தை விரும்பியெடுத்துக்கொண்டு; மணிமுத்தாற்றில்=திருமணிமுத்தாநதியில்; அன்றெனைவலிந்தாட்கொண்டவருள்=அந்நாளில் அடியேனைத் தடுத்தாட்கொண்ட திருவருளை; இதிலறிவேனென்று=இவ்வேதுவாலறியக்கடவேனென்று; பொன்றிரளெடுத்து=அப்பொற்குவையை யெடுத்து; நீருட்புகவிட்டுப்போதுகின்றார்=அந்நீருட்புகும்படி விட்டுச் செல்கின்றவராயினார். (௧0௯)

மேவிய காதற்றொண்டு விரவுமெய் விருத்திபெற்றா
ராவியின் விருத்தியான வந்தணர் புலியூர்மன்றிற்
காவியங் கண்டர்கூத்துக் கண்டுகும் பிடுவதென்று
வாவிசூழ் தில்லைமூதூர் வழிக்கொள்வான் வணங்கிப்போந்தார்.

(இ-ள்.) மேவியகாதற்றொண்டுவிரவும்=அன்போடுகூடிய திருத்தொண்டுசெய்யும்; மெய்விருத்திபெற்றார்=மெய்ம்மையான சித்தவிருத்தியைப்பெற்ற அவர்; ஆவியின்விருத்தியான=அவியினது விருத்தியையுடையராகிய: அந்தணர்புலியூர்மன்றில்=மறையவர்கள் வாழும் சிதம்பரத்தின்கணுள்ள கனகசபையில், காவியங்கண்டர்கூத்து=நீலமலர்போலுங் கரிய திருமிடற்றையுடைய சிவபிரான் செய்தருளும் திருக்கூத்தை; கண்டுகும்பிடுவதென்று=தரிசித்து வணங்கவேண்டுமென்று கருதிக்கொண்டு; வாவிசூழ்தில்லைமூதூர்வழிக்கொள்வான்=வாவிகள் சூழ்ந்த சிதம்பரத்தை யடையும்பொருட்டு; வணங்கிப்போந்தார்=திருமுதுகுன்றரை வணங்கிச்சென்றார்.—எ-று.

அவி யென்பது ஆவியென நீண்டது. விருத்தியென்றதில் முன்னையது சித்தவிருத்தி. பின்னையது செய்தொழில். விடயவழிச்செல்லாது அருள்வழித் தன்வசமாய் நிற்றலின் மெய்விருத்தியென்றார். ஆவியின் விருத்தியென்னுங்கால் சரு புரோடாச முதலிய அவிகளை ஓமஞ்செய்தொழுகுவோரென்பது பொருள். அது யாகஞ்செய்தலும் செய்வித்தலுமாகிய தொழின்மேனின்றது. (௧௧௦)

மாடுள பதிகள்சென்று வணங்கிப்போய் மங்கைபாகர்
நீடிய கடம்பூர்போற்றி நிறைந்தவா னந்தக்கூத்த
ராடிய தில்லைமூதூ ரணைந்தணி வாயில்புக்குச்
சேடுயர் மாடமன்னுஞ் செழுந்திரு வீதிசார்ந்தார்.

(இ-ள்.) மாடுளபதிகள்சென்று=அருகிலுள்ள திருப்பதிகளையடைந்து; வணங்கிப்போய்=தொழுதுசென்று; மங்கைபாகர்நீடியகடம்பூர்போற்றி=உமாதேவியை ஒருகூற்றிலுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும் திருக்கடம்பூரை வணங்கி, நிறைந்தவானந்தக்கூத்தர்=எவ்விடத்தும்நிறைந்த நடேசப்பிரான்; ஆடியதில்லைமூதூரணைந்து=நிருத்தஞ்செய்தருளுஞ் சிதம்பரத்தையடைந்து; அணிவாயில்புக்கு=அழகிய திருவாயிலிற்சென்று; சேடுயர்மாடமன்னும்=மிகவுயர்ந்த மாடங்கள் நிலைபெற்றிருக்கும்; செழுந்திருவீதிசார்ந்தார்=செழுமைதங்கிய திருவீதியை யடைந்தருளினார்.—எ-று. (௧௧௧)

பொற்றிரு வீதிதாழ்ந்து புண்ணிய விளைவாயோங்கு
நற்றிரு வாயினண்ணி நலமலி யலங்கன்மார்பர்
மற்றதன் முன்புமண்மேல் வணங்கியுள் புகுந்துபைம்பொற்
சுற்றுமா ளிகைசூழ்வந்து தொழுதுகை தலைமேற்கொள்வார்.

(இ-ள்.) பொற்றிருவீதிதாழ்ந்து=அழகிய திருவீதியை வணங்கி; புண்ணியவிளைவாயோங்கும்=புண்ணியத்தின் திரட்சியாயுயர்ந்த; நற்றிருவாயினண்ணி=நல்ல திருவாயிலையடைந்து, நலமலியலங்கன்மார்பர்=நன்மைமிக்க மாலையையணிந்த மார்பினையுடைய நம்பியாரூரர்; மற்றதன்முன்பு=அத்திருவாயிலின்முன்னே; மண்மேல்வணங்கியுள்புகுந்து=நிலமுறச்சாட்டாங்கமாக வணங்கி உள்ளேபுகுந்து; பைம்பொற்சுற்றுமாளிகைசூழ்வந்து=பசும்பொன்னாலாகிய சூழ்ந்த திருமாளிகையை வலமாகவந்து; தொழுதுகைதலைமேற்கொள்வார்=நிலமுறவணங்கிக் கரங்களைச் சிரமேற்குவித்து அஞ்சலிசெய்வாராயினார்.—எ-று. (௧௧௨)

ஆடிய திருமுன்பான வம்பொனின் கோபுரத்தி
னூடுபுக் கிறைஞ்சியோங்கு மொளிவளர் கனகமன்றி
லாடகச் செய்யதாளை நண்ணுற வுண்ணிறைந்து
நீடுமா னந்தவெள்ளக் கண்கணீர் நிரந்துபாய.

(இ-ள்.) ஆடியதிருமுன்பான=அவர் நிருத்தஞ்செய்தருளும் பிரானார் திருமுன்னே யிருக்கும்; அம்பொனின்கோபுரத்தினூடுபுக்கிறைஞ்சி=அழகிய பொன்னாலாகிய திருக்கோபுரத்தினுள்ளே புகுந்து வணங்கி; ஓங்குமொளிவளர்கனகமன்றில்=உயர்ந்த ஒளியை வீசுங் கனகசபையில்; ஆடகச்செய்யதாளைநண்ணுற=நிருத்தஞ்செய்தருளுஞ் சிவந்த திருவடிகளை யடையுங்கால்; உண்ணிறைந்துநீடும்=தம்முள் நிறைந்து பெருகும்; ஆனந்தவெள்ளக்கண்கணீர்நிரந்துபாய=வெள்ளமாகிய ஆனந்தக்கண்ணீர் திருமேனியிற் பரந்துபாயும்படி.—எ-று. (௧௧௩)

பரவுவாய் குளறிக்காதல் படிதிருப் படியைத்தாழ்ந்து
விரவுமெய் யங்கமைந்து மெட்டினும் வணங்கும்வேட்கை
யாறுரு திருக்கூத்துள்ள மார்தரப் பெருகிநெஞ்சிற்
கரவிலா தவரைக்கண்ட நிறைவுதங் கருத்திற்கொள்ள.

(இ-ள்.) பரவுவாய்குளறி=துதிக்கின்ற நாக்குளறி; காதல்படிதிருப்படியைத் தாழ்ந்து=விருப்புப்பொருந்திய திருப்படியை வணங்கி; விரவுமெய்யங்கமைந்துமெட்டினும்=திருமேனியிற்கலந்த உறுப்புக்கள் ஐந்துமெட்டுமாக; வணங்கும்வேட்கை=வணங்குகின்றமிகுகாதலோடு; அரனுறுதிருக்கூத்துள்ளமார்தரப்பருகி=சிவபிரான்செய் தருளுமானந்தநிருத்தத்தைத் திருவுள்ள நிறையப் பானஞ்செய்து; நெஞ்சிற்கரவிலாதவரைக்கண்டநிறைவு=தம் உள்ளத்து வெளிப்பட்டு நிற்கும் அச்சிவபிரானைத் திருப்பேரூரிற்றரிசித்தபேரானந்தக்கலப்பு; தங்கருத்திற்கொள்ள=தம்மிதயத்து விரவ.—எ-று.

வெளிப்படுதலாவது;—ஊனநடனமொழித்து ஞானநடனமாய்க் காட்சிகொடுத்தல். (கக௪)

வேறு.

மடித்தாடு மடிமைக்க ளன்றெடுத்து மன்னுயிர்கட் கருளுமாற்று
லடுத்தாற்று நன்னெறிக்க ணின்றாலும் வழுவினர்க ளணையாவண்ணந்
தடுப்பானைப் பேரூரிற் கண்டநிலை சிறப்பித்துத் தனிக்கூத்தென்று
நடிப்பானை நாமனமே பெற்றவா றெனுங்களிப்பா னயந்துபாடி.

(இ-ள்.) மடித்தாடுமடிமைக்களன்றெடுத்து=மடித்தாடு மடிமைக்களென்று முதலெடுத்து; மன்னுயிர்கட்கருளுமாற்றால்=நிலைபெற்ற ஆன்மாக்களுக்கு அருளும் வழியால்; அடுத்தாற்றுநன்னெறிக்கணின்றாலும்=கிட்டித் தாம்செய்யும் நல்வழிக்கண் ஒழுகினாலும்; வழுவினர்களணையாவண்ணம்=ஒருசிறிது வழுவினார் அப்பயனை நுகராதவண்ணம்; தடுப்பானை=தடுப்பானை; பேரூரிற்கண்டநிலை=திருப்பேரூரில் தாம் தரிசித்த நிலைமையை; சிறப்பித்து=அப்பதிகத்தில் சிறப்பித்து; தனிக்கூத்தென்றுநடிப்பானை=ஒப்பற்ற திருக்கூத்தை அனவரதமும் செய்கின்றவனை; நாமனமேபெற்றவாறெனுங்களிப்பால்=நாம் மனமே பெற்ற வண்ணமென்று கருதுங் களிப்பினால்; நயந்துபாடி=விரும்பிப்பாடி.—எ-று. இம்மூன்றுங்குளகம். (ககரு)

## கோயில்-பண்-வியாளக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

மடித்தாடுமடிமைக்களன்றியேமனனேநீவாழுநாளுந்
தடுத்தாட்டித்தருமனார்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வான்
கடுத்தாடுகரதலத்திற்றமருகமுமெரியகலுங்கரியபாம்பும்
பிடித்தாடிபுலியூர்ச்சிற்றம்பலத்தெம்பெருமானைப்பெற்றாமன்றே.

பாரூருமரவல்குலுமைநங்கையவள்பங்கன்பைங்கணேற்ற
னூரூரன்றருமனார்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வா
னாரூரன்றம்பிரானாரூரன்மீகோங்கிலணிகாஞ்சிவாய்ப்
பேரூர்பெருமானைப்புலியூர்ச்சிற்றம்பலத்தேபெற்றாமன்றே.

திருச்சிற்றம்பலம்.

மீளாத வருள்பெற்றுப் புறம்போந்து திருவீதி மேவித்தாழ்ந்தே
யாளான வன்றொண்ட ரந்தணர்க டாம்போற்ற வமர்ந்துவைகி
மாளாத பேரன்பாற் பொற்பதியை வணங்கிப்போய் மறலிவீழத்
தாளாண்மைகொண்டவர்தங்கருப்பறியலூர்வணங்கிச்சென்றுதாழ்ந்தார்.

(இ-ள்.) மீளாதவருள்பெற்றுப்புறம்போந்து=தம்மினின்றும் அகலாத நடேசப்பிரான் திருவருளைப்பெற்று ஆலயத்தின் புறம்பேசென்று; திருவீதிமேவித்தாழ்ந்து= திருவீதியையடைந்து அங்குவணங்கி; ஆளானவன்றொண்டர்=அடிமையான நம்பியாரூரர்; அந்தணர்கடாம்போற்றவமர்ந்துவைகி=அவ்வூரில் மறையவர்கள் துதிக்க விரும்பி அங்கு வீற்றிருந்தருளி; மாளாதபேரன்பாற்பொற்பதியைவணங்கிப்போய்=கெடாத பேரன்போடு அழகிய அத்திருப்பதியை வணங்கிக்கொண்டுசென்று; மறலிவீழத் தாளாண்மைகொண்டவர்தம்=யமன்வீழ உதைத்தகாரணத்தால் திருவடியின் வலியை ஆட்சிகொண்ட சிவபிரான் வீற்றிருந்தருளும்; கருப்பறியலூர்வணங்கிச்சென்றுசார்ந்தார்=திருக்கருப்பறியலூரென்னும் திருப்பதியை வணங்கிச்சென்று அங்கு அடைந்தார்.—எ-று. இவ்விரண்டுங்குளகம்.

தம்மினின்றும் அகலாமை:—அநாதியே அவர் திருவுள்ளத்து விரவி நீங்காதிருத்தல். (ககசு)

வேறு.

கூற்றுதைத்தார் திருக்கொகுடிக் கோயினண்ணிக் கோபுரத்தைத் தொழுதுபுகுந் தன்பர்சூழ, வேற்றபெருங் காதலினா லிறைஞ்சியேத்தி யெல்லையிலாப் பெருமகிழ்ச்சி மனத்திலெய்தப், போற்றிசைத்துப் புறத்தணைந்தப் பதியின்வைகிப் புனிதரவர் தமைநினையு மின்பங்கூறிச், சாற்றியமெய்த் திருப்பதிகஞ் சிம்மாந்தென்னுந் தமிழ்மாலை புனைந்தங்குச் சாருநாளில்.

(இ-ள்.) கூற்றுதைத்தார்திருக்கொகுடிக்கோயினண்ணி=அவர் யமனை உதைத்த சிவபிரான் வீற்றிருந்தருளும் திருக்கொகுடிக்கோயிலையடைந்து; கோபுரத்தைத் தொழுதுஅன்பர்சூழப்புகுந்து=திருக்கோபுரத்தை வணங்கி அடியார்கள்சூழ உள்ளே புகுந்து; ஏற்றபெருங்காதலினாலிறைஞ்சியேத்தி=தம்மையடைந்த பெருவிருப்போடு வணங்கித்துதித்து; எல்லையிலாப்பெருமகிழ்ச்சி=அடங்காத பேருவகையானது; மனத்திலெய்தப்போற்றிசைத்து=திருவுள்ளத்திற்பொருந்தத்துதிசெய்து; புறத்தணைந்தப் பதியின்வைகி=புறம்பேசென்று அத்திருப்பதியில் வீற்றிருந்து; புனிதரவர்தமைநினையுமின்பங்கூறி=சிவபிரானைத் தியானித்ததனால் விளைந்த பேரின்பத்தை அப்பதிகத்தில் வைத்து; சாற்றியமெய்த்திருப்பதிகஞ்சிம்மாந்தென்னும்=அருளிய மெய்ம்மையான திருப்பதிகமாகிய சிம்மாந்தென்னும் முதலையுடைய; தமிழ்மாலைபுனைந்தங்குச்சாருநாளில்=தமிழ்மாலையைப்பாடியருளி அத்தலத்தில் வீற்றிருந்தருளும்நாளில்.—எ-று. (ககஎ)

## திருக்கருப்பறியலூர்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

சிம்மாந்துசிம்புளித்துச்சிந்தையினில்வைத்துகந்துதிறம்பாவண்ணங்
கைம்மாவினுரிவைபோர்த்துமைவெருவக்கண்டானைக்கருப்பறியலூர்க்
கொய்ம்மாவின்மலர்ச்சோலைக்குயில்பாடமயிலாடுங்கொகுடிக்கோயி
லெம்மானைமன—சிகொடுப்பக்கண்டாதவர்நமக்கினியவாறே.

கலைமலிந்ததென்புலவர்கற்றோர்தம்மிடர்தீர்க்குங்கருப்பறியலூர்க்
குலைமலிந்தகோட்டெங்குமட்டொழுகும்பூஞ்சோலைக்கொகுடிக்கோயி
லிலைமலிந்தமழுவானைமனத்தினாலன்புசெய்தின்பமெய்தி
மலைமலிந்ததோளூரன்வனப்பகையப்பனுரைத்தவண்டமிழ்களே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வீரட்டேசர், தேவியார்-இளங்கொம்பம்மை.

---

கண்ணுதலார் விரும்புகருப் பறியலூரைக் கைதொழுது நீங்கிப்போ
ய்க் கயல்கள்பாயு, மண்ணிவளம் படிக்கரையை நண்ணியங்கு மாதொ
ருபா கத்தவர்தாள் வணங்கிப்போற்றி, யெண்ணில்புகழ்ப் பதிகமுமுன்
னவனென்றேத்தி யேகுவார் வாழ்கொளிபுத் தூரெய்தாது, புண்ணியனார்
போமபொழுது நினைந்துமீண்டு புகுகின்றார் தலைக்கலனென் றெடுத்துப்
போற்றி.

(இ-ள்.) புண்ணியனார்=அவர்; கண்ணுதலார்விரும்புகருப்பறியலூரை=சிவபி
ரான் வீற்றிருந்தருளும் திருக்கருப்பறியலூரை; கைதொழுதுநீங்கிப்போய்=வணங்கி
அங்குநின்றும் நீங்கிச்சென்று; கயல்கள்பாயுமண்ணிவளம்படிக்கரையைநண்ணி=கயல்
மீன்கள் பாய்கின்ற வளந்தங்கிய திருமண்ணிப்படிக்கரையையடைந்து; அங்குமாதொ
ருபாகத்தவர்தாள்வணங்கிப்போற்றி=அவ்விடத்து உமாதேவியை ஒருகூற்றிலுடைய
சிவபிரான் திருவடிகளை வணங்கித்துதித்து; எண்ணில்புகழ்ப்பதிகமுமுன்னவனென்
றேத்தியேகுவார்=அளவுபடாத புகழையுடைய திருப்பதிகத்தையும் முன்னவனென்று
முதலெடுத்துப்பாடிச் செல்கின்றவராய் நம்பியாரூரர்; வாழ்கொளிபுத்தூரெய்தாது
போம்பொழுது=திருவாழ்கொளிபுத்தூரென்னுந் திருப்பதியையடையாது செல்லும்
பொழுது; நினைந்துமீண்டுபுகுகின்றார்தலைக்கலனென்றெடுத்துப்போற்றி=அதை நினை
ந்து தலைக்கலனென்று முதலெடுத்துப் பதிகம்பாடித் துதித்துத் திரும்பப்புகுகின்றார்.

இவ்விரண்டுங்குளகம். (௧௧௮)

## திருப்பழமண்ணிப்படிக்கரை-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

முன்னவனெங்கள்பிரான்முதல்காண்பரிதாயபிரான்
சென்னியிலெங்கள்பிரான்திருநீலமிடற்றெம்பிரான்
மன்னியவெங்கள்பிரான்மறைநான்குங்கல்லானிழற்கீழ்ப்
பன்னியவெங்கள்பிரான்பழமண்ணிப்படிக்கரையே.

பல்லுயிர்வாழுந்தெண்ணீர்ப்பழமண்ணிப்படிக்கரையை
யல்லியந்தாமரைத்தாராரூரனுரைத்ததமிழ்
சொல்லுதல்கேட்டல்வல்லாரவர்க்குந்தமக்குங்கிளைக்கு
மெல்லியநண்பகலும்மிடர்கூருதலில்லையன்றே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-நீலகண்டேசர், தேவியார்-[illegible]ன்முகாம்பிகை.

## திருவாழ்கொளிபுத்தூர்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

தலைக்கலன் றலைமேற் றரித்தானைத் தன்னையென்னை நினைக்கத் தருவானை
க், கொலைக்கையானையுரிபோர்த்துகந்தானைக்கூற்றுதைத்தகுரைசேர்கழ
லானை, யலைத்தசெங்கண்விடையேறவல்லானை யாவடியேனடிநாயேன், ம
லைத்தசெந்நெல்வயல்வாழ்கொளிபுத்தூர்மாணிக்கத்தைமறந்தென்னினைக்

வளங்கிளர்பொழில்வாழ்கொளிபுத்தூர்மாணிக்கத்தைமறந்தென்னி
னைக்கேனென், றுளங்குளிர்தமிழூரன்வன்றொண்டன்சடையன்காதலன்வ
னப்பகையப்ப, னலங்கிளர்வயனாவலர்வேந்தனங்கைசிங்கடிதந்தைபயந்த,
பலங்கிளர்தமிழ்பாடவல்லார்மேற்பறையுமாஞ்செய்தபாவங்கடாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-மாணிக்கவண்ணர், தேவியார்-வண்டமர்பூங்குழல்நாயகி.

திருப்பதிகம் பாடியே சென்றங்கெய்தித் தேவர்பெரு மானார்தங்கோ
யில்வாயி, லுருப்பொலியு மயிர்ப்புளகம் விரவத்தாழ்ந்தே யுள்ளணைந்து
பணிந்தேத்தி யுருகுமன்பாற், பொருப்பரையன் மடப்பாவை யிடப்பா
லானைப் போற்றிசைத்துப் புறம்போந்து தங்கிப்பூமென், கருப்புவயல் வா
ழ்கொளிபுத் தூரைநீங்கிக் கானாட்டு முள்ளூரிற் கலந்தபோது.

(இ-ள்.) திருப்பதிகம்பாடியேசென்றங்கெய்தி=அவர் திருப்பதிகத்தைப் பா
டிக்கொண்டுபோய் அங்கடைந்து; தேவர்பெருமானார்தங்கோயில்வாயில்=சிவபிரான்
வீற்றிருந்தருளும் திருக்கோயில்வாயிலில்; உருப்பொலியுமயிர்ப்புளகம்விரவத்தாழ்ந்
து=திருமேனியில் விளங்கித்தோன்றும் மயிர்க்கூச்சுண்டாக வணங்கி; உள்ளணைந்து
பணிந்தேத்தி=உள்ளேசென்று வணங்கித்துதித்து; உருகுமன்பால்=உருகுகின்ற பே
ரன்போடு; பொருப்பரையன்மடப்பாவையிடப்பாலானைப்போற்றிசைத்து=பார்ப்ப
தியாரை இடப்பாகத்துடைய சிவபிரானைத்துதித்து; புறம்போந்துதங்கி=அத்தலத்தி
ன் புறம்பேசென்று அங்கு வீற்றிருந்து; பூமென்கருப்புவயல்வாழ்கொளிபுத்தூரைநீங்
கி=பொலிவுதங்கிய மிருதுவான கரும்பையுடைய வயல்சூழ்ந்த திருவாழ்கொளிபுத்தூ
ரை நீங்கி; கானாட்டுமுள்ளூரிற்கலந்தபோது=திருக்கானாட்டு முள்ளூரென்னுந் திருப்
பதியைக்கிட்டி.—எ-று. ஏ-அசை. (௧௧௯)

கானாட்டு முள்ளூரைச் சாரும்போது கண்ணுதலா ரெதிர்காட்சி
கொடுப்பக்கண்டு, தூநாண்மென் மலர்க்கொன்றைச் சடையார்செய்ய
துணைப்பாத மலர்கண்டு தொழுதேனென்று, வானாளுந் திருப்பதிகம் வ
ள்வாயென்னும் வண்டமிழின் றொடைமாலை மலரச்சாத்தித், தேனாரு ம
லர்ச்சோலை மருங்குசூழ்ந்த திருவெதிர்கொள் பாடியினை யெய்தச்செல்
வார்.

(இ-ள்.) கானாட்டுமுள்ளூரைச்சாரும்போது=அவ்வூரையடையும்போது; கண்
ணுதலாரெதிர்காட்சிகொடுப்பக்கண்டு=சிவபிரான் தம்மெதிரே காட்சிகொடுத்தருளத்

தரிசித்து; தூநாண்மென்மலர்க்கொன்றைச்சடையார்=தூயமிருதுவான அன்றலர்ந்த கொன்றைமலரைமுடித்த சடைமுடியையுடைய சிவபிரானது; செய்யதுணைப்பாதமலர்கண்டுதொழுதேனென்று=சிவந்த இரண்டுதிருவடிகளையுந் தரிசித்து வணங்கினேனென்று; வானாளுந்திருப்பதிகம்வள்வாயென்னும்=தன்னை ஓதுவாரை விண்ணுலகையாளச்செய்தற்கேதுவான திருப்பதிகமாகிய வள்வாயென்னும் முதலையுடைய; வண்டமிழின்றொடைமாலைமிழச்சாத்தி=வளவிய தமிழாற்றொடுத்த மாலையை விளங்கத்தரித்து; தேனாருமலர்ச்சோலைமருங்குசூழ்ந்த=தேன்நிறைந்த மலர்களையுடைய சோலைகள் தன்மருங்கிற்சூழ்ந்த; திருவெதிர்கொள்பாடியினையெய்தச்செல்வார்=திருவெதிர்கொள்பாடி என்னுந் திருப்பதியை அடையச்செல்வாராயினார்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். (கஉ0)

## திருக்காளுட்டுமுள்ளூர்-பண்-கொல்லிக்கவ்வாணம்.

திருச்சிற்றம்பலம்.

வள்வாயமதிமிளிரும்வளர்சடையினானைமறையவனை வாய்மொழியைவானவர்தங்கோனைப்,புள்வாயைக்கீண்டுலகம்விழுங்கியுமிழ்ந்தானைப்பொன்னிறத்தின்முப்புரிநூனான்முகத்தினானை,முள்வாயமடற்றாழைமுடத்தாழையீன்றுமொட்டலர்ந்துவிரைநாறுமுருகுவிரிபொழில்சூழ், கள்வாயகருங்குவளைகண்வளருங்கழனிக்காளுட்டுமுள்ளூரிற்கண்டுதொழுதேனே.

திரையினார்கடல்சூழ்ந்ததென்னிலங்கைக்கோனைச்செற்றவனைச்செஞ்சடைமேல்வெண்மதியினானை, நுரையினார்கனைதழுவுகொள்ளிடத்தின்கரைமேற்காளுட்டுமுள்ளூரிற்கண்டுகழற்றொழுது, உரையினார்மதயானைநாவலரூரனுரிமையாலுரைசெய்தவொண்டமிழ்கள்வல்லார், வரையினார்வகைஞாலமாண்டவர்க்குந்தாம்போய்வானவர்க்குந்தலைவராய்நிற்பவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-பதஞ்சலியீசர், தேவியார்-கானார்குழலம்மை.

---

எத்திசையுந் தொழுதேத்த மத்தயானை யெடுத்தெதிர்கொள் பாடியினை யடைவோமென்னுஞ், சித்தநிலைத் திருப்பதிகம் பாடிநைந்து செல்வமிகு செழுங்கோயி லிறைஞ்சிநண்ணி, யத்தர்தமை யடிவணங்கி யங்குவைகி யருள்பெற்றுத் திருவேள்விக் குடியிலெய்தி, முத்திதரும் பெருமானைத் துருத்திகூட மூப்பதிலை யெனும்பதிக மொழிந்துவாழ்ந்தார்.

(இ-ள்.) எத்திசையுந்தொழுதேத்தமத்தயானையெடுத்து=எத்திக்கிலுமுள்ளார் வணங்கித்துதிக்க மத்தயானையென முதலெடுத்து; எதிர்கொள்பாடியினையடைவோமென்னும்=திருவெதிர்கொள்பாடியினையடைவோமென்னும் இறுதியையுடைய; சித்தநிலைத்திருப்பதிகம்பாடிநைந்து=சித்தத்தை உறுதிபடுத்தும் திருப்பதிகத்தைப்பாடிமனமுருகி; செல்வமிகுசெழுங்கோயிலிறைஞ்சிநண்ணி=செல்வம் மிக்க திருக்கோயிலைவணங்கி உள்புகுந்து; அத்தர்தமையடிவணங்கியங்குவைகியருள்பெற்று=சிவபிரான் திருவடிகளை வணங்கி யங்கிருந்து அவர் திருவருளைப்பெற்று; திருவேள்விக்குடியிலெய்தி=திருவேள்விக்குடியென்னும் திருப்பதியையடைந்து, முத்திதரும்பெருமானைத்துருத்திகூட=தன் அடியார்க்கு முத்தியைக்கொடுக்கும் சிவபிரானைத் திருத்துரு

த்தியோடுகூட; மூப்பதில்லையெனும்பதிகம்பாடித்துவாழ்ந்தார்=மூப்பதுமில்லையென்னு
ம் முதலையுடைய திருப்பதிகத்தைப்பாடி அங்கு வீற்றிருந்தருளினார்.—எ-று. (௩௨௧)

## திருவெதிர்கொள்பாடி-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

மத்தயானையேறிமன்னர்சூழவருவீர்காள்
செத்தபோதெலாருமில்லைச்சிந்தையுள்வைம்மின்கள்
வைத்தவுள்ளமாற்றவேண்டாவம்மின்மனத்தீரே
யத்தர்கோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே.

முத்துநீற்றுப்பவளமேனிச்செஞ்சடையானுறையும்
பத்தர்பந்தத்தெதிர்கொள்பாடிப்பரமனையேபணியச்
சித்தம்வைத்ததொண்டர்தொண்டன்சடையனவன்சிறுவன்
பத்தனூரன்பாடல்வல்லார்பாதம்பணிவாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-அயிராபதேசர், தேவியார்-வாசமலர்க்குழல்நாயகி.

---

## மூப்பதுமில்லை-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

மூப்பதுமில்லைபிறப்பதுமில்லையிறப்பதில்லைச்
சேர்ப்பதுகாட்டகத்தூரினுமாகச்சிந்திக்கிலல்லாற்
காப்பதுவேள்விக்குடிதண்டுருத்தியெங்கோனரைமே
லார்ப்பதுநாகமறிந்தோமேநாமிவர்க்காட்பட்டோமே.

கூடலர்மன்னன்குலநாவலூர்க்கோனலத்தமிழைப்
பாடவல்லபரமனடியார்க்கடிமைவழுவா
நாடவல்லதொண்டனாரூரனாட்படுமாறுசொல்லிப்
பாடவல்லார்பரலோகத்திருப்பதுபண்டமன்றே.

திருச்சிற்றம்பலம்.

---

வேறு.

காட்டுநல் வேள்விக்கோலங் கருத்துற வணங்கிக்காத
லூட்டிய வுள்ளத்தோடு நம்பியா ரூரர்போற்றி
யீட்டிய தவத்தோர்சூழ வங்குநின் றேகியன்பு
பூட்டியாட் கொண்டார்மன்னுந் தானங்க ளிறைஞ்சிப்போந்தார்.

(இ-ள்) காட்டுநல்வேள்விக்கோலங்கருத்துறவணங்கி=தரிசிப்பிக்கும் நல்ல யாகத்திற்கு அதிபராயிருக்குந் திருக்கோலத்தைத் திருவுள்ளத்திற்பொருந்த வணங்கி; காதலூட்டியவுள்ளத்தோடு=பெருவிருப்பானது நிலைபெற்ற திருவுள்ளத்தோடு; நம்பியாரூரர்போற்றி=நம்பியாரூரர் துதித்து; ஈட்டியதவத்தோர்சூழவங்குநின்றேகி=நெருங்கிய அடியார்கள்சூழ அங்குநின்றும் எழுந்தருளி; அன்புபூட்டியாட்கொண்டார்மன்னும்=தம்மிடத்து அன்பு விளைவித்துத் தடுத்தாட்கொண்ட சிவபிரான் வீற்றிருந்தருளும்; தானங்களிறைஞ்சிப்போந்தார்=பல திருப்பதிகளையும் வணங்கிச்சென்றருளினார்.

எஞ்சாத பேரன்பிற் றிருத்தொண்ட ருடனெய்தி
நஞ்சாருங் கறைமிடற்று ரிடம்பலவு நயந்தேத்தி
மஞ்சாரும் பொழிலுடுத்த மலர்த்தடங்கள் புடைசூழுஞ்
செஞ்சாலி வயன்மருதத் திருவாரூர் சென்றடைந்தார்.

(இ-ள்.) எஞ்சாதபேரன்பிற்றிருத்தொண்டருடனெய்தி=அவர் குறையாத பேரன்பினையுடைய அடியார்குழாங்களோடுஞ் சென்றருளி; நஞ்சாருங்கறைமிடற்றாரிடம்பலவுநயந்தேத்தி=விடந்தங்கிய கரிய திருமிடற்றையுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையும் விரும்பித்துதித்து; மஞ்சாரும்பொழிலுடுத்த=மேகங்கள் தவழும் சோலைசூழ்ந்த; மலர்த்தடங்கள்புடைசூழும்=மலர்வாவிகள் அருகிலிருக்கும்; செஞ்சாலிவயன்மருதத்திருவாரூர்சென்றடைந்தார்=செந்நெற்பயிர்களையுடைய வயல்சூழ்ந்த மருதநிலமாகிய திருவாரூரையடைந்தருளினார்.—எ-று. (கஉங)

செல்வமலி திருவாரூர்த் தேவரொடு முனிவர்களு
மல்குதிருக் கோபுரத்து வந்திறைஞ்சி யுள்புக்கங்
கெல்லையிலாக் காதன்மிக வெடுத்தமலர்க் கைகுவித்துப்
பல்குதிருத் தொண்டருடன் பரமர்திரு முன்னணைந்தார்.

(இ-ள்.) செல்வமலிதிருவாரூர்த்தேவரொடுமுனிவர்களுமல்கு=அவர் செல்வமிக்க திருவாரூரின்கணுள்ள தேவர்களும் முனிவர்களும் நெருங்கிய; திருக்கோபுரத்துவந்திறைஞ்சியுள்புக்கு=திருக்கோபுரத்தையடைந்துவணங்கி உள்ளேபுகுந்து; அங்கெல்லையிலாக்காதன்மிக=அவ்விடத்து அடங்காத பெருவிருப்புமீக்கூர; எடுத்தமலர்க்கைகுவித்து=சிரசின்மேலெடுத்த திருக்கரங்களைக் கூப்பிக்கொண்டு; பல்குதிருத்தொண்டருடன்=நெருங்கிய திருத்தொண்டரோடு; பரமர்திருமுன்னணைந்தார்=சிவபிரான் திருமுன்னே யடைந்தருளினார்.—எ-று. (கஉச)

மூவாத முதலாகி நடுவாகி முடியாத
சேவாருங் கொடியானைத் திருமூலட் டானத்து
ளோவாத பெருங்காத லுடனிறைஞ்சிப் புறம்போந்து
தாவாத புகழ்ப்பரவை யார்திருமா ளிகைசார்ந்தார்.

(இ-ள்.) மூவாதமுதலாகிநடுவாகிமுடியாத=அவர் அழிவில்லாத முதற்கடவுளாய் எப்பொருட்கும் அந்தரியாமியாய் அளவுபடாத; சேவாருங்கொடியானை=இடபக்கொடியையுடைய சிவபிரானை; திருமூலட்டானத்துள்=திருமூலட்டானத்தில்; ஓவாதபெருங்காதலுடனிறைஞ்சிப்புறம்போந்து=நீங்காத பெருவிருப்போடு வணங்கிப் புறம்பேசென்று; தாவாதபுகழ்ப்பரவையார்திருமாளிகைசார்ந்தார்=அழியாத புகழையுடைய பரவையாரது திருமாளிகையை அடைந்தார்.—எ-று. (கஉரு)

பொங்குபெரு விருப்பினொடு புரிகுழலார் பலர்போற்றப்
பங்கயக்கட் செங்கனிவாய்ப் பரவையா ரடிவணங்கி
யெங்களையு நினைந்தருளிற் றெனவியம்ப வினிதளித்து
மங்கைநல்லா ரவரோடு மகிழ்ந்துறைந்து வைகுநாள்.

(இ-ள்.) பொங்குபெருவிருப்பினொடு=அவர் மிக்க பெருவிருப்போடு; புரிகுழலார்பலர்போற்ற=பின்னிய கூந்தலையுடைய மகளிர்கள் பலர் துதிக்க; பங்கயக்கட்செங்கனிவாய்ப் பரவையாரடிவணங்கி=தாமரைமலர்போலும் வடிவத்தையுடைய கண்ணையும் சிவந்த கொவ்வைக்கனிபோலும் நிறத்தையுடைய வாயையுமுள்ள பர

வைநாச்சியார் அவர் திருவடிகளில் தொழுது; ஏயகன்யுமினைந்தருளிற்றெனவியம்ப= சிறியேனையும் திருவுள்ளங்கொண்டருளிற்றென்று கூற; இனிதளித்து=இனிய வார்த்தைகளை அவருக்குக்கூறி; மங்கைநல்லாரவரோடுமகிழ்ந்துறைந்துவைகுநாள்=அப்பரவைநாச்சியாரோடு மகிழ்வுடன் வீற்றிருந்தருளும்நாளில்.—எ-று. (கஉ௬)

நாயனார் முதுகுன்றர் நமக்களித்த நன்னிதியந்
தூயமணி முத்தாற்றிற் புகவிட்டேந் துணைவரவர்
கோயிலின்மா ளிகைமேல்பாற் குளத்திலவ ரருளாலே
போயெடுத்துக் கொடுபோதப் போதுவா யெனப்புகல.

(இ-ள்.) நாயனார்முதுகுன்றர்நமக்களித்தநன்னிதியம்=அவர் நமது முதல்வராகிய திருமுதுகுன்றர் நமக்குக்கொடுத்த நல்ல நிதியத்தை; தூயமணிமுத்தாற்றிற்புகவிட்டேம்=தூய்மையான திருமணிமுத்தாற்றில் புகச்செய்தோம்; துணைவரவர்கோயிலின்=அச்சிவபிரானது திருக்கோயிலின்; மாளிகைமேல்பாற்குளத்தில்=திருமாளிகைப்பத்திக்கு மேல்பாலுள்ள திருக்குளத்தில்; அவரருளாலேபோயெடுத்துக்கொடுபோத=அவர் திருவருளால் போயெடுத்துக்கொண்டுவர; போதுவாயெனப்புகல=என்னுடன் வருவாயாக என்று பரவையாருடன் கூறியருள.—எ-று.

துணைவரவொன்றது திருமுதுகுன்றரைப் புற்றிடங்கொண்டாரோடு ஒற்றுமையாகக்கூறியது. (கஉ௭)

என்னவதி சயமிதுதா னென்சொன்ன வாறென்று
மின்னிடையார் சிறுமுறுவ லுடன்விளம்ப மெய்யுணர்ந்தார்
நன்னுதலா யென்னுடைய நாதனரு ளாற்குளத்திற்
பொன்னடைய வெடுத்துனக்குத் தருவதுபொய் யாதென்று.

(இ-ள்.) என்னவதிசயமிது=இது என்ன அதிசயம்; என்சொன்னவாறென்று=இவ்வாறருளியது யாதென்று; மின்னிடையார்சிறுமுறுவலுடன்விளம்ப=பரவையார் புன்முறுவலோடு கூற; மெய்யுணர்ந்தார்=நம்பியாரூரர்; நன்னுதலாயென்னுடையநாதனருளால்=பெண்ணே எம்பிரானார் திருவருளினால்; குளத்திற்பொன்னடையவெடுத்து=இவ்வாவியில் பொன்முழுவதையும் எடுத்து; உனக்குத்தருவதுபொய்யாதென்று=உனக்குக்கொடுப்பது தவறாதென்று கூறி.—எ-று. தான்-அசை. (கஉ௮)

ஆங்கவரு முடன்போத வளவிறந்த விருப்பினுடன்
பூங்கோயி லுண்மகிழ்ந்த புனிதர்கழல் புக்கிறைஞ்சி
யோங்குதிரு மாளிகையை வலம்வந்தங் குடன்மேலைப்
பாங்குதிருக் குளத்தணைந்தார் பரவையார் தனித்துணைவர்.

(இ-ள்.) பரவையார்தனித்துணைவர்=நம்பியாரூரர்; ஆங்கவருமுடன்போத=பரவையாரும் தம்முடன்வர; அளவிறந்தவிருப்பினுடன்=அளவுபடாத விருப்போடு; பூங்கோயிலுண்மகிழ்ந்த=பூங்கோயிலை விரும்பி வீற்றிருந்தருளும்; புனிதர்கழல்புக்கிறைஞ்சி=சிவபிரான் திருவடிகளையடைந்து வணங்கி; ஓங்குதிருமாளிகையைவலம்வந்து=உயர்ந்த திருமாளிகையை வலமாகவந்து; அங்குடன்=அவ்விடத்து உடனே; மேலைப்பாங்குதிருக்குளத்தணைந்தார்=மேல்பாலுள்ள திருக்குளத்தினருகிற்சென்றருளினார்.—எ-று. இந்நான்குங்குளகம். (கஉ௯)

மற்றதனின் வடகீழ்பாற் கரைமிது வந்தருளி
முற்றிழையார் தமையிருத்தி முனைப்பாடித் திருநாடர்

கற்றைவார் சடையானைக் கைதொழுது குளத்திலிழிந்
தற்றைநா ளிட்டெடுப்பார் போலங்குத் தடவுதலும்.

(இ-ள்.) முன்னைப்பாடித்திருநாடர்=நம்பியாரூரர்; மற்றதனின்வடகீழ்பால்= அத்திருமாளிகையின் வடகிழக்கிலுள்ள; கரைமீதுவந்தருளி=கமலாலயக்கரையின்மேல் வந்தருளி; முற்றிழையார்தமைநிறுத்தி=பரவையாரை அங்குநிறுத்தி; கற்றைவார்சடையானைக்கைதொழுது=சிவபிரானை வணங்கி; குளத்திலிழிந்து=கமலாலயத்தில் இறங்கி; அற்றைநாளிட்டெடுப்பார்போலங்குத்தடவுதலும்=அந்நாளில் இட்டெடுக்கின்றவர்போல அவ்விடத்துத்தடவுதலும். (கூ௰)

நீற்றழகர் பாட்டுவந்து திருவிளையாட் டினினின்று
மாற்றுறுசெம் பொன்குளத்து வருவியா தொழிந்தருள
வாற்றினிலிட் டுக்குளத்திற் றேடுவா ரருளிதுவோ
சாற்றுமெனக் கோற்றொடியார் மொழிந்தருளத் தனித்தொண்டர்.

(இ-ள்.) நீற்றழகர்பாட்டுவந்து=தாம் பூசும் திருவெண்ணீற்றால் அழகுடையவராகிய சிவபிரான் நம்பியாரூரர் திருப்பதிகத்தை விரும்பி; திருவிளையாட்டினினின்று=திருவிளையாடலேதுவாக; மாற்றுறுசெம்பொன்=மாற்றுயர்ந்த பொன்னை; குளத்து வருவியாதொழிந்தருள=குளத்தில் வருவியாதிருக்க; ஆற்றினிலிட்டுக்குளத்திற்றேடுவார்=திருமணிமுத்தாற்றிலிட்டு இக்கமலாலயக்குளத்தில் தேடுகின்றவரே; அருளிதுவோசாற்றுமென=திருவருளிதுதானோ கூறுமென்று; கோற்றொடியார்மொழிந்தருள த்தனித்தொண்டர்=பரவையார் சொல்ல அதுகேட்ட நம்பியாரூரர்.—எ-று. (கூ௧)

முன்செய்த வருள்வழியே முருகலர்பூங் குழற்பரவை
தன்செய்ய வாயினகை சாராமே தாருமென
மின்செய்த நூன்மார்பின் வேதியர்தா முதுகுன்றிற்
பொன்செய்த மேனியனே யெனப்பதிகம் போற்றிசைத்து.

(இ-ள்.) முன்செய்தவருள்வழியே=முன் அருளிய திருவருளின்படியே; முருகலர்பூங்குழற்பரவைதன்=வாசனைகமழும் மலர்களை முடித்த கேசத்தையுடைய பரவையின்; செய்யவாயினகைசாராமேதாருமென=சிவந்தவாயில் நகைவிளையாமல் பொன்னைக்கொடுமென்று; முதுகுன்றில்=திருமுதுகுன்றத்தில் வீற்றிருந்தருளும் சிவபிரானை; பொன்செய்தமேனியனேயெனப்பதிகம்போற்றிசைத்து=பதிகமுதலில் பொன்செய்த மேனியனே என எடுத்துத்துதித்து; மின்செய்தநூன்மார்பின்வேதியர்தாம்= நம்பியாரூரர்.—எ-று.

முன்செய்தவருளாவது:—மணிமுத்தாற்றிட்டுத் திருவாரூர்க்குளத்திற் கொள்கவெனக்கூறிய அசரீரிவாக்கு. (கூ௨)

## திருமுதுகுன்றம்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பொன்செய்தமேனியினீர்புலித்தோலையரைக்கசைத்தீர்
முன்செய்தமூவெயிலுமெரித்தீர்முதுகுன்றமர்ந்தீர்
மின்செய்தநுண்ணிடையாள்பரவையிவடன்முகப்பே
யென்செய்தவாறடிகேளடியேனிட்டளங்கெடவே.

பிறையாருஞ்சடையெம்பெருமானருளாயென்று
முறையால்வந்தமரர்வணங்கும்முதுகுன்றர்தம்மை
மறையார்தங்குரிசில்வயனாவலாரூரன்சொன்ன
விறையார்பாடல்வல்லார்க்கெளிதாஞ்சிவலோகமதே.

திருச்சிற்றம்பலம்.

---

முட்டவிமை யோரறிய முதுகுன்றிற் றந்தபொருள்
சட்டநான் பெறுதொழிந்த தளர்வினாற் கையறவா
மிட்டளத்தை யிவளெதிரே கெடுத்தருளு மெனுந்திருப்பாட்
டெட்டளவும் பொன்காட்டா தொழிந்தருள வேத்துவார்.

(இ-ள்.) முட்டவிமையோரறிய=தேவர்களெல்லாருமறிய; முதுகுன்றிற்றந்த பொருள்சட்ட=திருமுதுகுன்றத்தில் எனக்குக்கொடுத்த பொருள் முழுவதும்; நான் பெறுதொழிந்ததளர்வினால்=நான் பெறாதகாரணத்தால் வருந் தளர்ச்சியினால்; கையறவாமிட்டளத்தை=வருந்துந் துயரத்தை; இவளெதிரேகெடுத்தருளுமெனுந்திருப்பாட்டு=இப்பரவையார்முன் நீக்கியருளுமென்னும் இறுதியையுடைய திருப்பாட்டு; எட்டளவும்பொன்காட்டாதொழிந்தருளவேத்துவார்=எட்டுவரையில் பொன்னைக் கொடுக்காதொழியப் பின்னுந் துதிப்பாராய்.—எ-று. முட்ட=முழுதும். (௧௩௩)

எத்தாதே யிருந்தறியே னெனுந்திருப்பாட் டெவ்வுலகுங்
காத்தாடு மம்பலத்துக் கண்ணுளனுங் கண்ணுதலைக்
கூத்தாதந் தருளாயிக் கோமளத்தின் முன்னென்று
நீத்தாருந் தொடர்வரிய நெறிநின்றார் பரவுதலும்.

(இ-ள்.) எத்தாதேயிருந்தறியேனெனுந்திருப்பாட்டு=எத்தாதே யிருந்தறியேனென்னும் முதலையுடைய திருப்பாடலை; எவ்வுலகுங்காத்து=எவ்வுலகத்தாரையுங் காத்து; ஆடுமம்பலத்துக்கண்ணுளனுங்கண்ணுதலை=நிருத்தஞ்செய்தருளும் கனகசபையின்கண் வாழும் சிவபிரானை; கூத்தாதந்தருளாயிக்கோமளத்தின்முன்னென்று=இப்பரவையார்முன் கூத்தாதந்தருளாயென்று இறுதியில் வைத்து; நீத்தாருந்தொடர்வரியநெறிநின்றார்பரவுதலும்=எவ்வகைப்பற்றையும் அறுத்தாரும் அடைதற்கரிய அருநெறியில் நின்ற நம்பியாரூரர் துதிக்கவும்.—எ-று

ஆடுமம்பலத்துக்கண்ணுளனென்றதை அம்பலத்தாடுங் கண்ணுளன் எனக்கூட்டி அம்பலத்தின்கண் நிருத்தஞ்செய்யும் நாடகர் என்றுரைத்தலுமொன்று. கண்ணுளன்=நாடகன். புறநெறிக்கணுள்ளார் உட்பற்று புறப்பற்றுகளற்றாராயினும் அவர் தாம் தாம் கொண்ட சுக்கிலத்தியானம் புருடவிவேகம் ஆன்மவிவேகம் விஞ்ஞானவிச்சித்தி முதலிய ஞானங்கள் திருவருண்ஞானமன்மையின் நீத்தாருந்தொடர்வரிய என்றார். எனவே பற்றற்று அருநெறியடைவதே வீடுபேற்றிற்குக் காரணமென்றாராயிற்று. (௧௩௪)

மேற்பதிகத்தைச்சேர்ந்த தேவாரம்.

[திருச்சிற்]றம்பலம்.

எத்தாதிருந்தறியேனிமையோர்தனிநாயகனே
மூத்தாயுலகுக்கெலாமுதுகுன்றமமர்ந்தவனே
பூத்தாருங்குழலாள்பரவையிவடன்முகப்பே
கூத்தாதந்தருளாய்கொடியேனிட்டளங்கெடவே.

திருச்சிற்றம்பலம்.

கொந்தவிழ்பூங் கொன்றைமுடிக் கூத்தனார் திருவருளால்
வந்தெழுபொன் றிரளெடுத்து வரன்முறையாற் கரையேற்ற
வந்தரத்து மலர்மாரி பொழிந்திழிந்த தவனியுள்ளோ
ரிந்தவதி சயமென்னே யார்பெறுவா ரெனத்தொழுதார்.

(இ-ள்) கொந்தவிழ்பூங்கொன்றைமுடிக்கூத்தனார்திருவருளால்=கொத்தாக அவிழ்ந்த கொன்றைமலர்மாலையைச்சூடிய திருமுடியையுடைய சிவபிரான் திருவருளினால்; வந்தெழுபொன்றிரளெடுத்து=திருமணிமுத்தாற்றினின்றும் வந்து கமலாலயக் குளத்திலெழாநின்ற பொற்குவையைத் தாம் எடுத்து; வரன்முறையாற்கரையேற்ற= பன்னீராயிரம் என்னும் எண்ணிக்கையோடு கரையிலே சேர்க்க; அந்தரத்துமலர்மாரி பொழிந்திழிந்தது=விண்ணுலகத்து வானவரால் மலர்மழை பொழியப்பட்டு நிலவுலகத்தில் சொரிந்தது; அவனியுள்ளோரிந்தவதிசயமென்னே=மண்ணுலகத்துள்ளார் இவ்வியப்பு எவ்வாறு நிகழ்ந்தது; யார்பெறுவாரெனத்தொழுதார்=இவ்வாறானபேற்றை இவரேயன்றி யாவரும் அடையமாட்டார்களென்று வணங்கினார்கள்.—எ-று. இவ்வாறு க்குளகம். (௧௬௫)

ஞாலம்வியப் பெய்தவரு நற்கனக மிடையெடுத்து
மூலமெனக் கொடுபோந்த வாணியின்முன் னுரைப்பிக்க
நீலமிடற் றவரருளா லுரைதாழப் பின்னுநெடு
மாலயனுக் கரியகழல் வழுத்தினார் வன்றொண்டர்.

(இ-ள்.) ஞாலம்வியப்பெய்தவரும்=மண்ணுலகத்தார் வியப்படையவராநின்ற; நற்கனகமிடையெடுத்து=நல்ல பொற்குவையை நிறைதூக்கி; மூலமெனக்கொடு போந்த=மாற்றுக்கு மூலமாகத் தாம் மச்சம் எடுத்துவந்த; ஆணியின்முன்னுரைப்பிக்க=மாற்றாணியோடு உரைத்துப்பார்க்க; நீலமிடற்றவரருளாலுரைதாழ=சிவபிரான் திருவருளினால் மாற்றுக்குறைய; பின்னுநெடுமாலயனுக்கரியகழல்வழுத்தினார்வன்றொண்டர்=திருமால் பிரமன் என்னு மிருவரால் அறியக்கூடாத அவர் திருவடிகளை நம்பியாரூரர் மீண்டும் துதித்தார்.—எ-று. (௧௬௬)

மீட்டுமவர் பரவுதலு மெய்யன்ப ரன்பில்வரும்
பாட்டுவந்து கூத்துவந்தார் படுவாசி முடிவெய்து
மோட்டறுசெம் பொன்னுக்க வொருமாவுங் குறையாமற்
காட்டுதலு மகிழ்ந்தெடுத்துக் கொண்டுகரை யேறினார்.

(இ-ள்.) மீட்டுமவர்பரவுதலும்=அவர் அவ்வாறு மீளவும் துதிக்குமிடத்து; மெய்யன்பரன்பில்வரும்பாட்டுவந்து=நம்பியாரூரரது அன்புகாரணமாகவரும் திருப்பாடலை விரும்பி; கூத்துவந்தார்=சிவபிரான்; படுவாசிமுடிவெய்தும்=அதிலுள்ளவாசி நீங்கிய; ஒட்டறுசெம்பொன்னுக்க=மாற்றுயர்ந்த செம்பொன்னை முழுதும்; ஒருமாவுங்குறையாமற்காட்டுதலும்=மாப்பொன்னுங்குறையாமல் காட்டவும்; மகிழ்ந்தெடுத்துக்கொண்டுகரையேறினார்=மகிழ்ச்சியுடன அதை எடுத்துக்கொண்டு கரையிலேறினார்.

வாசிமுடிவெய்தும் அப்பொன்னுக்கு அதுவே உயர்ந்த மாற்றாதலின் ஒட்டறு செம்பொன் என்றும் அடைகொடுத்தார். (௧௬௭)

கரையேறிப் பரவையா ரூடன்கனக மானதெலா
நிரையாளிற் சுமையேற்றி நெடுநிலைமா ளிகைபோக்கித்
திரையேறும் புனற்சடிலத் திருமூலட் டானத்தார்
விரையேறு மலர்ப்பாதந் தொழுதணைந்தார் வீதியில்.



ஆரூரர் பரவைநாச்சியாரைக் கமலாலயத் திருப்படிமீதிலிருத்திக் குளத்திலிரங்கிப் பொன்னைவாரித்திருப்படி

(இ-ள்.) கரையேறிப்பரவையாருடன்=அவர் குளக்கரையிலேறிப் பரவையாரோடு; கனகமானதெலாநிரையாளிற்சுமையேற்றி=பொற்குவியலெல்லாம் நிறைந்த சுமையாள்களின்மேல் எடுப்பித்து; நெடுநிலைமாளிகைபோக்கி=நீண்ட வாயிலையுடைய பரவையார் திருமாளிகைக்கனுப்பி; திரையேறும்புனற்சடிலத்திருமூலட்டானத்தார்=அலைவீசும் கங்கைநதிதங்கிய சடையையுடைய திருவாரூர்ப்புற்றிடங்கொண்டாரது; விரையேறுமலர்ப்பாதம்=வாசனைகமழும் தாமரைமலர்போலும் சிவந்த திருவடிகளை; தொழுதணைந்தார்வீதியினில்=வணங்கி வீதியில் வந்தருளினார்.—எ-று.(கஅஅ)

வந்துதிரு மாளிகையி னுட்புகுந்து மங்கலவாழ்த்
தந்தமிலா வகையேத்து மளவிறந்தா ரொலிசிறப்பச்
சிந்தைநிறை மகிழ்ச்சியுடன் சேயிழையா ருடனமர்ந்தார்
கந்தமலி மலர்ச்சோலை நாவலர்தங் காவலனார்.

(இ-ள்.) வந்துதிருமாளிகையினுட்புகுந்து=வீதியிலெழுந்தருளிப் பரவையார் திருமாளிகையினுள்ளே சென்று; மங்கலவாழ்த்தந்தமிலாவகையேத்தும்=மங்கல வாழ்த்தை அளவில்லாதவண்ணம் எடுத்துக்கூறும்; அளவிறந்தாரொலிசிறப்ப=எண்ணிறந்த பரிசனங்களின் ஒலி சிறப்படைய; சிந்தைநிறைமகிழ்ச்சியுடன்=திருவுள்ளத்தில் நிறைந்த மகிழ்ச்சியோடு, சேயிழையாருடனமர்ந்தார்=பரவையாரோடு அவர் திருமாளிகையில் வீற்றிருந்தருளினார்; கந்தமலிமலர்ச்சோலைநாவலர்தங்காவலனார்=வாசனைகமழும் பூஞ்சோலைசூழ்ந்த திருநாவலூரார்.—எ-று. (கஅகூ)

அணியாரூர் மணிப்புற்றி னமர்ந்தருளும் பரம்பொருளைப்
பணிவாரங் கொருநாளிற் பாராட்டுந் திருப்பதிகந்
தணியாத வானந்தத் தலைசிறப்பத் தொண்டருடன்
றுணிவாய்ப்பே ரருள்வினவித் தொழுதாடிப் பாடுவார்.

(இ-ள்.) அணியாரூர்மணிப்புற்றின்=அழகிய திருவாரூரிலுள்ள மண[illegible]பமான புற்றின்கண்; அமர்ந்தருளும்பரம்பொருளைப்பணிவார்=வீற்றிருந்தருளும் [illegible]ரானைப்பணிகின்ற நம்பியாரூரர்; அங்கொருநாளிற்பாராட்டுந்திருப்பதிகம்=அவ்விடத்து ஒருநாளில் சிறப்பித்துக்கூறும் திருப்பதிகத்தை; தணியாதவானந்தந்தலைசிறப்ப=அடங்காத பேரானந்தமானது மேற்பட; தொண்டருடன்றுணிவாய்ப்பேரருள்வினவி=அடியார் கூட்டத்துடன் நிச்சயமாய்த் திருவருளை வினவி; தொழுதாடிப்பாடுவார்=வணங்கி யாடிப்பாடுவாராயினார்.—எ-று. (கசഠ)

பண்ணிறையும் வகைபாறு தாங்கியென வெடுத்தருளி
யுண்ணிறையு மனக்களிப்பா லுறுபுளக மயிர்முகிழ்ப்பக்
கண்ணிறையும் புனல்பொழியக் கரையிகந்த வானந்த
மெண்ணிறைந்த படிதோன்ற வேத்திமகிழ்ந் தின்புற்றார்.

(இ-ள்.) பண்ணிறையும்வகைபாறுதாங்கியெனவெடுத்தருளி=அவர் இசைநிறையும்படி பாறுதாங்கிய என முதலிலெடுத்து; உண்ணிறையுமனக்களிப்பால்=உள்ளே நிறைந்த திருவுள்ளக்களிப்போடு; உறுபுளகமயிர்முகிழ்ப்ப=மிக்க மயிர்க்கூச்செறிய; கண்ணிறையும்புனல்பொழிய=கண்ணினின்றும் துளும்பும் ஆனந்தபாஷ்பம் சொரிய; கரையிகந்தவானந்தம்=அளவுபடாத பேரானந்தமானது; எண்ணிறைந்தபடிதோன்ற=தம் திருவுள்ளத்தில் நிறைந்துதோன்ற; ஏத்திமகிழ்ந்தின்புற்றார்=துதித்து மகிழ்ச்சியடைந்தின்பமுற்றார்.—எ-று. (கசக)

## திருவாரூர் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பாறுதாங்கியகாடரோபடுதலையரோமலைப்பாவையோர்
கூறுதாங்கியகுழகரோகுழைக்காதரோகுறுங்கோட்டிள
வேறுதாங்கியகொடியரோசுடுபொடியரோவிலங்கும்பறை
யாறுதாங்கியசடையரோநமக்கடிகளாகியவடிகளே.

படிசெய்நீர்மையிற்பத்தர்காள்பணிந்தேத்திநேன்பணியீரருள்
வடிவிலான்றிருநாவலூரன்வனப்பகையப்பன்வன்றொண்டன்
செடியனாகிலுந்தீயனாகிலுந்தம்மையேமனஞ்சிந்திக்கு
மடியனூரனையாள்வரோநமக்கடிகளாகியவடிகளே.

திருச்சிற்றம்பலம்.

---

இன்புற்றங் கமர்நாளி லீறிலரு மறைபரவும்
வன்புற்றி னரவணிந்த மன்னவரு ளருள்பெற்ற
வன்புற்ற காதலுட னளவிறந்த பிறபதியும்
பொன்புற்கென் றிடவொளிருஞ் சடையாரைத் தொழப்போவார்.

(இ-ள்.) இன்புற்றங்கமர்நாளில்=பேரானந்தமடைந்து அத்திருவாரூரில் வீற்றிருக்குங்கால்; ஈறிலருமறைபரவும்=அழியாத அரியவேதங்கள் துதிக்கும்; வன்புற்றினரவணிந்த=வலிய புற்றின்கண் வாழும் பாம்பை ஆபரணமாகத்தரித்த; மன்னவரருள்பெற்று=சிவபிரான் திருவருளைப்பெற்று; அவன்புற்றகாதலுடன்=அவரன்பு நிறைந்த பெருவிருப்போடு; அளவிறந்தபிறபதியும்=எண்ணிறந்த பிறதிருப்பதியினும்; பொன்புற்கென்றிடவொளிருஞ் சடையாரை=பொன்னும் புகைநிறமுடைத்தென்று சொல்லும்படி செந்நிறமாய் விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபிரானை; தொழப்போவார்=தொழுதற்குப்போவாராயினர்.—எ-று. (கசஉ)

பரிசனமு முடன்போதப் பாங்கமைந்த பதிகடொறுங்
கரியுரிவை யுரித்தார்தங் கழறொழுது மகிழ்ந்தேத்தித்
துரிசறுநற் பெருந்தொண்டர் நள்ளாறு தொழுவதற்குப்
புரிவுறுமெய்த் திருத்தொண்ட ரெதிர்கொள்ளப் புக்கணைந்தார்.

(இ-ள்.) பரிசனமுமுடன்போத=பரிசனங்களும் தம்முடன்வர; பாங்கமைந்த பதிகடொறும்=அருகிலுள்ள திருப்பதிகடோறும்; கரியுரிவையுரித்தார்தங்கழறொழுது=யானையின்றோலையுரித்துப்போர்த்த சிவபிரானது திருவடிகளை வணங்கி; மகிழ்ந்தேத்தி=மகிழ்ந்து துதித்து; துரிசறுநற்பெருந்தொண்டர்=குற்றமற்ற நம்பியாரூரர்; நள்ளாறுதொழுவதற்கு=திருநள்ளாற்றை வணங்க; புரிவுறுமெய்த்திருத்தொண்டரெதிர்கொள்ள=விருப்பமிக்க அங்குள்ள மெய்யடியார் எதிர்கொள்ளும்படி; புக்கணைந்தார்=அணைந்தருளினார்.—எ-று. (கசங)

விண்டடவு கோபுரத்தைப் பணிந்துகர மேற்குவித்துக்
கொண்டுபுகுந் தண்ணலார் கோயிலினை வலஞ்செய்து
மண்டியபே ரன்பினொடு மன்னுதிரு நள்ளாறர்
புண்டரிகச் சேவடிக்கீழ்ப் பொருந்தநில மிசைப்பணிந்தார்.

(இ-ள்.) விண்டடவுகோபுரத்தைப்பணிந்து=ஆகாயத்தையளாவிய திருக்கோபுரத்தை வணங்கி; கரமேற்குவித்துக்கொண்டுபுகுந்து=கைகளைச் சிரமேற்குவித்துக் கொண்டுள்ளே புகுந்து; அண்ணலார்கோயிலினைவலஞ்செய்து=சிவபிரான் வீற்றிருந்தருளும் திருக்கோயிலை வலமாகவந்து; மண்டியபேரன்பினொடு=நிறைந்த பேரன்போடு; மன்னுதிருநள்ளாறர்புண்டரீகச்சேவடிக்கீழ்=அங்கு வீற்றிருந்தருளும் திருநள்ளாறருடைய தாமரைமலர்போலும் சிவந்த திருவடிக்கண்; பொருந்தநிலமிசைப்பணிந்தார்=பொருந்தும்வண்ணம் சாட்டாங்கமாக வணங்கினார்.—எ-று. (கசச)

அங்கணரைப் பணிந்தேத்தி யருளினாற் றொழுதுபோய்
மங்குலணி மணிமாடத் திருக்கடவூர் வந்தெய்தித்
திங்கள்வளர் முடியார்தந் திருமயான மும்பணிந்து
பொங்குமிசைப் பதிகமரு வார்கொன்றை யெனப்போற்றி.

(இ-ள்.) அங்கணரைப்பணிந்தேத்தி=திருநள்ளாறரைவணங்கித் திருப்பதிகம்பாடி; அருளினாற்றொழுதுபோய்=அவர் திருவருளினால் வணங்கிப் புறம்பேசென்று; மங்குலணிமணிமாடத்திருக்கடவூர்வந்தெய்தி=மேகங்கள் சூழ்ந்திருக்கும் அழகிய மாடங்களையுடைய திருக்கடவூரை யடைந்து; திங்கள்வளர்முடியார்தம்=இளம்பிறைதவழும் திருமுடியையுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும்; திருமயானமும்பணிந்து=திருமயானத்தையும் வணங்கி; பொங்குமிசைப்பதிகம்=பொலிவுதங்கிய இசையோடு கூடிய திருப்பதிகத்தை; மருவார்கொன்றையெனப்போற்றி=மருவார்கொன்றையென முதலிலெடுத்துத் துதித்து.—எ-று. (கசடு)

## திருநள்ளாறு - பண் - தக்கேசி-

திருச்சிற்றம்பலம்.

பூவில்வாசத்தைப்பொன்னினைமணியைப்புவியைக்காற்றினைப்புனலனல்வெளியைச், சேவின்மேல்வருஞ்செல்வனைச்சிவனைத்தேவதேவனைத்தித்திக்குந்தேனைக், காவியங்கண்ணிபங்கனைக்கங்கைச்சடையனைக்காமரத்திசைபாட, நாவிலூறுநள்ளாறனையமுதைநாயினேன்மறந்தென்னினைக்கேனே.

செறிந்தசோலைகள்சூழ்ந்தநள்ளாற்றெஞ்சிவனைநாவலூர்ச்சிங்கடிதந்தை, மறந்துநான்மற்றுநினைப்பதென்னென்றுவனப்பகையப்பனூரன்வன்றொண்டன், சிறந்தமாலைகளஞ்சினொடஞ்சுஞ்சிந்தையுள்ளுருகிச்செப்பவல்லார்க், கிறந்துபோக்கிலைவரவிலையாகியின்பவெள்ளத்துளிருப்பர்களினிதே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கடவூர்மயானம்-பண்-பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

மருவார்கொன்றைமதிசூடிமாணிக்கத்தின்மலைபோல
வருவார்விடைமேல்மாதோடுமகிழ்ந்துபூதப்படைசூழத்
திருமால்பிரமனிந்திரற்கு[illegible] தானவர்க்கும்
பெருமான்[illegible] பரியபெருமானடிகளே.

பாடமல்குகடவூரின்மறையோர்த்துமயானத்துப்
பீடைதீரவடியாருக்கருளும்பெருமானடிகள்சீர
நாடிநாவலாரூரனம்பிசொன்னநற்றமிழ்கள்
பாடுமடியார்கேட்பார்மேற்பாவமானபறையுமே.

திருச்சிற்றம்பலம்.

---

திருவீரட் டானத்துத் தேவர்பிரான் சினக்கூற்றின்
பொருவீரந் தொலைத்தகழல் பணிந்துபொடி யார்மேனி
மருவீரத் தமிழ்மாலை புனைந்தேத்தி மலைவளைத்த
பெருவீரர் வலம்புரத்துப் பெருகார்வத் தொடுஞ்சென்றார்.

(இ-ள்.) திருவீரட்டானத்துத்தேவர்பிரான்=திருக்கடவூர் வீரட்டத்து வீற்றிருந்தருளும் சிவபிரானது; சினக்கூற்றின்பொருவீரந்தொலைத்தகழல்பணிந்து=கோபந்தங்கிய யமனது பொராநின்ற வீரத்தைக்கெடுத்தருளிய திருவடிகளை வணங்கி, பொடியார்மேனிமருவீரத் தமிழ்மாலைபுனைந்தேத்தி=பொடியார்மேனி என்னும் முதலையுடை ... குளிர்ச்சிதங்கிய தமிழ்த்திருப்பதிகத்தைப்பாடித் துதித்து; மலைவளைத்தபெருவீரர் ... ந்தருளும் திரு...=மேருமலையை வில்லாகவளைத்த பெரிய வீரராகிய சிவபிரான் வீற்றிருந்தருளினார்.—எ-று. இவவிரண்டுங்குளகம். ... சென்றார்=மிக்க கா... (௧௭௬)

## திருக்கடவூர்வீரட்டம்-பண் நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பொடியார்மேனியனேபுரிநூலொருபால்பொருந்த
வடியார்மூவிலைவேல்வளரங்கையினங்கையொடுங்
கடியார்கொன்றையனேகடவூர்தனுள்வீரட்டத்தெம்
மடிகேளென்னமுதேயெனக்கார்துணைநீயலதே.

காராரும்பொழில்சூழ்கடவூர்திருவீரட்டத்து
ளேராரும்மிறையைத்துணையாவெழில்நாவலர்கோ
னாரூரனடியானடித்தொண்டனுரைத்ததமிழ்
பாரோரேத்தவல்லார்பரலோகத்திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

---

வரையோடு நிகர்புரிசை வலம்புரத்தார் கழல்வணங்கி
யுரையோசைப் பதிகமெனக் கினியோதிப் போய்ச்சங்க
நிரையோடு துமித்தூப மணித்தீப நித்திலப்பூந்
திரையோதங் கொண்டிறைஞ்சுந் திருச்சாய்க்கா டெய்தினார்.

(இ-ள்.) வரையோடுநிகர்புரிசை=மலையையொத்த மதில்சூழ்ந்த; வலம்புரத்தார்கழல்வணங்கி=திருவலம்புரத்தில் வீற்றிருந்தருளும் சிவபிரான் திருவடிகளைப்பணிந்து; உரையோசைப்பதிகம்=சொல்நிறைந்த இசையோடுகூடிய திருப்பதிகத்தை; எனக்கினியோதிப்போய்=எனக்கினி... ந்ததில ... யெடுத்துப்பாடி அங்குநின்று மெழுந்தருளி; சங்கநிரையோடுதுமித்தூபமணித்... -வாத்தியத்தோடு

திவலைகளாகிய தூபத்தையும் நவமணிகளாகிய தீபத்தையும், நித்திலப்பூந்திரையோதங் கொண்டிறைஞ்சும்=முத்துக்களோடுகூடிய பொலிவுதங்கிய அலைப்பெருக்குகள் கொணர்ந்து வணங்குகின்ற; திருச்சாய்க்காடெய்தினார்=திருச்சாய்க்காடென்னும் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (௧௪௭)

## திருவலம்புரம்-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

எனக்கினித் தினைத்தனைப்புகலிடமறிந்தேன்
பனைக்கனிப்பழம்படும்பரவையின்கரைமே
லெனக்கினியவன்றமர்க்கினியவனெழுமையு
மனக்கினியவன்றனதிடம்வலம்புரமே.

வருங்கலமும்பலபேணுதல்கருங்கட
லிருங்குலப்பிறப்பர்தமிடம்வலம்புரத்தினை
யருங்குலத்தருந்தமிழூரன்வன்றொண்டன்சொல்
பெருங்குலத்தவரொடுபிதற்றுதல்பெருமையே.

திருச்சிற்றம்பலம்.

---

தேவர்பெருமான்றன்னைத் திருச்சாய்க்காட் டினிற்பணிந்து
பாவலர்செந் தமிழ்மாலைத் திருப்பதிகம் பாடிப்போய்
மேவலர்தம் புரமெரித்தார் வெண்காடு பணிந்தேத்தி
நாவலர்கா வலரடைந்தார் நனிபள்ளித் திருநகரில்.

(இ-ள்) தேவர்பெருமான்றன்னை=சிவபிரானை; திருச்சாய்க்காட்டினிற்பணிந்து=திருச்சாய்க்காட்டினில் வணங்கி; பாவலர்செந்தமிழ்மாலைத்திருப்பதிகம்பாடிப்போய்=செய்யுளமைந்த செந்தமிழ்த்திருப்பதிகமாலையைப் பாடிச்சென்று; மேவலர்தம்புரமெரித்தார்=பகைவர்களது திரிபுரத்தை யெரித்தருளிய சிவபிரான் வீற்றிருந்தருளும்; வெண்காடுபணிந்தேத்தி=திருவெண்காடென்னும் திருப்பதியை வணங்கித்துதித்து; நாவலர்காவலரடைந்தார்நனிபள்ளித்திருநகரில்=நம்பியாரூரர் திருநனிபள்ளியென்னும் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. (௧௪௮)

நனிபள்ளி யமர்ந்தபிரான் கழல்வணங்கி நற்றமிழின்
புனிதநறுந் தொடைபுனைந்து திருச்செம்பொன் பள்ளிமுதற்
பனிமதிசேர் சடையார்தம் பதிபலவும் பணிந்துபோய்த்
தனிவிடைமேல் வருவார்தந் திருநின்றி யூர்சார்ந்தார்.

(இ-ள்.) நனிபள்ளியமர்ந்தபிரான்கழல்வணங்கி=திருநனிபள்ளியில் வீற்றிருந்தருளும் சிவபிரான் திருவடிகளை வணங்கி; நற்றமிழின்புனிதநறுந்தொடைபுனைந்து=நல்ல தமிழாலாகிய தூயதிருப்பதிகமாலையைச்சாத்தி; திருச்செம்பொன்பள்ளிமுதல்=திருச்செம்பொன்பள்ளியென்னும் திருப்பதிமுதலாக; பனிமதிசேர்சடையார்தம்பதி=குளிர்ந்த இளம்பிறைவாழும் சடைமுடியையுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும் திருப்பதிகள்; பலவும்பணிந்துபோய்=பலவற்றையும் வணங்கிச்சென்று; தனிவிடைமேல் வருவார்தம்=ஒப்பற்ற இடபத்தின்மீதூர்ந்துவரும் சிவபிரான் வீற்றிருந்தருளும்; திருநின்றியூர்சார்ந்தார்=திருநின்றியூரென்னும் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. ()

## திருநனிபள்ளி-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

ஆதியனாதிரையனயன்மாலறிதற்கரிய
சோதியன்சொற்பொருளாய்ச்சுருங்காமறைநான்கினையு
மோதியனும்பர்தங்கோனுலகத்தினுளெவ்வுயிர்க்கு
நாதியல்நம்பெருமானண்ணுமூர்நனிபள்ளியதே.

காலமுநாள்கழியுநனிபள்ளிமனத்தினுள்கிக்
கோலமதாயவனைக்குளிர்நாவலவூரன்சொன்ன
மாலைமதித்துரைப்பார்மண்மறந்துவானோருலகிற்
சாலநலின்பமெய்தித்தவலோகத்திருப்பவரே.

திருச்சிற்றம்பலம்.

---

நின்றியூர் மேயானை நேசத்தாற் புக்கிறைஞ்சி
யொன்றியவன் புள்ளுருகிப் பாடுவா ருடையவர
சென்றுமுல கிடர்நீங்கப் பாடியவே ழெழுநூறு
மன்றுசிறப் பித்தஞ்சொற் றிருப்பதிக மருள்செய்தார்.

(இ-ள்.) நின்றியூர்மேயானை=அவர் திருநின்றியூரில் வீற்றிருந்தருளும் சிவபிரானை; நேசத்தாற்புக்கிறைஞ்சி=அன்போடு ஆலயத்துட்புகுந்து வணங்கி; ஒன்றியவன் புள்ளுருகிப்பாடுவார்=ஒருப்பட்ட பேரன்பானது தம்முள்ளத்தை யுருக்கப்பாடுகின்ற நம்பியாரூரர்; உடையவரசென்றுமுலகிடர்நீங்கப்பாடிய=ஆண்டவரசு எந்நாளும் உலகிலுள்ளார் துயர்தீரப்பாடியருளிய; ஏழெழுநூறுமன்றுசிறப்பித்து=நாலாயிரத்துத்தொளாயிரம் பதிகங்களையும் அன்று தாமருளிய திருப்பதிகத்தில் ஏழெழுநூறிருபது பனுவலின்றவன் றிருநாவுக்கரையனெனச் சிறப்பித்து; அஞ்சொற்றிருப்பதிகமருள்செய்தார்=அழகிய சொல்லாலாகிய திருப்பதிகத்தைப் பாடியருளினார்.—எ-று.

ஏழெழுநூறென்றது-நாலாயிரத்துத்தொளாயிரமென்க. "கூற்றுயினவெண்ண வெடுத்துக்கோதிலொருமானைத்தரிக்குமொருவனையுங்காறுமொருநாற்பத்தொன்பதினாயிரமதாக" என்றிருத்தலின் மாறுபட்டதேயெனின், நாலாயிரத்துத்தொளாயிரம் என்றது பதிகத்தொகையும் நாற்பத்தொன்பதினாயிரம் என்றது செய்யுட்டொகையுமாதலின் மாறுபட்டதின்றென்க. ஏழெழுநூறென்றது பதிகத்தால் நாலாயிரத்துத்தொளாயிரமாதலும், அந்நாலாயிரத்துத்தொளாயிரம் பதிகத்திற்குச்செய்யுளால் நாற்பத்தொன்பதினாயிரமாதலும் ஊகித்துணர்க. இவை இவ்வாறாதலின் ஆளுடையபிள்ளையார் பதிகத்தொகையும் "பச்சைப்பதிகத்துடன் பதினாறாயிரம்பா" என நம்பியாண்டார்நம்பி அருளியபடி செய்யுட்டொகையிற் பதினாறாயிரமென்றும் பதிகத்தொகையில் ஆயிரத்தறுநூறென்றும், நம்பியாரூரர் பதிகத்தொகையும் உமாபதிசிவம் "பித்தாவென்னுமின்பமுதற்றிருப்பதிகமுழிதோறுமீறாய் மூப்பத்தெண்ணாயிரமதாக." எனவருளியபடி செய்யுட்டொகையால் முப்பத்தெண்ணாயிரமென்றும் பதிகத்தொகையால் மூவாயிரத்தெண்ணூறென்றுங்கொள்க. பதிகமென்றது செய்யுளுக்கும் பனுவலென்றது பதிகத்திற்கும் வழங்கிவருவது திருமுறைகண்டபுராணமுதலியவற்றிற்காண்க. (கஙo)

## திருநின்றியூர்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

அணிகொளாடையம்பூணணிமாலையமுதுசெய்தமுதம்பெறுதண்டி, யிணைகொளேழெழுநூறிருபதுபனுவலீன்றவன்றிருநாவுக்கரையன், கணைகொள்கண்ணப்பனென்றிவர்பெற்றகாதலின்னருளாதரித்தடைந்தேன், றிணைகொள்செந்தமிழ்பைங்கிளிதெரியுஞ்செல்வத்தென்றிருநின்றியூரானே.

இரவிநீள்சுடரெழுவதன்முன்னமெழுந்துதன்மூலைக்கலசங்களேந்திச், சுரவிபால்சொரிந்தாட்டியுன்பாதந்தொடர்ந்தவார்த்தைதிடம்பெறக்கேட்டுப், பரவியுள்கிவன்பாசத்தையறுத்துப்பரமவந்துநின்பாதத்தையடைந்தேன், விரவிநித்திலமத்தகுசெம்பொனளிக்குந்தென்றிருநின்றியூரானே.

திருச்சிற்றம்பலம்.

---

அப்பதியி லன்பருட னமர்ந்தருள்வா ரகலிடத்திற்
செப்பரிய புகழ்நீடூர் பணியாது செல்பொழுதி
லொப்பரிய வுணர்வினு னினைந்தருளித் தொழுதுறுவார்
மெய்ப்பொருள்வண் டமிழ்மாலை விளம்பியே மீண்டணைந்தார்.

(இ-ள்.) அப்பதியிலன்பருடனமர்ந்தருள்வார்=அத்திருநின்றியூரில் அடியார் கூட்டத்துடன் வீற்றிருந்தருளும் நம்பியாரூரர்; அகலிடத்திற்செப்பரியபுகழ்நீடூர்பணியா செல்பொழுதில்=நிலவுலகத்தில் சொல்லுதற்கரிய புகழையுடைய திருநீடூரைவணங் கா போகும்பொழுதில்; ஒப்பரியவுணர்வினுனினைந்தருளித்தொழுதுறுவார்=நிகரற்ற தம் உணர்வு றிற்கருதி வணங்குகின்றவராய்; மெய்ப்பொருள்வண்டமிழ்மாலைவிளம்பி யேமீண்டணைந்தார்= மெய்ம்மைப்பொருளினையுடைய வளவிய தமிழ்ப்பதிகமாலையைப் பாடிக்கொண்டு திரும்பி வந்தருளினார்.—எ-று. (கஙிக)

மடலாரும் புனனீடூர் மருவினார் தாள் வணங்காது
விடலாமே யெனுங்காதல் விருப்புறுமத் திருப்பதிக
மடலார்சூ லப்படையார் தமைப்பாடி யடிவணங்கி
யுடலாரு மயிர்ப்புளக மிகப்பணிந்தங் குறைகின்றார்.

(இ-ள்.) மடலாரும்புனனீடூர்மருவினார்தாள்=அவர் இதழ்நிறைந்த மலர்களையுடைய நீர்வளந்தங்கிய திருநீடூரில் வீற்றிருந்தருளும் சிவபிரானது திருவடிகளை; வணங்காதுவிடலாமேயெனும்=பணியாவிடலாமே என்னும் இறுதியையுடைய; காதல்விருப்புறுமத்திருப்பதிகம்=பெருவிருப்புமிக்க அத்திருப்பதிகத்தை; அடலார்சூலப்படையார் தமைப்பாடி=வலிதங்கிய சூலப்படையையுடைய சிவபிரானைப்பாடி, அடிவணங்கி= திருவடிகளில்பணிந்து; உடலாருமயிர்ப்புளகமிக=திருமேனியின்கண் நிறைந்த உரோமாஞ்சிதமானது உண்டாக; பணிந்தங்குறைகின்றார்=வணங்கி அந்நீடூரில் தங்குவாராயினார்.—எ-று. (கஙிஉ)

## திருநீடூர்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

ஊர்வதோர்விடையொன் றுடையானையொண்ணுதற்றனிக்கண்ணுதலானைக் காரதார்கறை ... ந்கருதலார்புரமூன்றெரித்தானை

நீரில்வாளைவரால்குதிகொள்ளுமிறைபுனற்றழனிச்செல்வநீடுரப்
பாருளார்பரவித்தொழநின்றபரமனைப்பணியாவிடலாமே.

பேரோராயிரமும்முடையானைப்பேசினற்பெரிதும்மினியானை
நீருர்வார்சடைமின்மலன்றன்னைநீடூர்நின்றுகந்திட்டபிரானை
யாரூரன்னடிகாண்பதற்கன்பாயாதரித்தழைத்திட்டவிம்மாலை
பாருரும்பரவித்தொழவல்லார்பத்தராய்முத்திதாம்பெறுவாரே.

திருச்சிற்றம்பலம்.

அங்கணினி தமர்ந்தருளாற் றிருப்புன்கூ ரணைந்திறைஞ்சிக்
கொங்கலரு மலர்ச்சோலைத் திருக்கோலக் காவணையக்
கங்கைசடைக் கரந்தவர்தா மெதிர்காட்சி கொடுத்தருளப்
பொங்குவிருப் பாற்றொழுது திருப்பதிகம் போற்றிசைப்பார்.

(இ-ள்.) அங்கணினிதமர்ந்து=அவர் அவ்விடத்து இனிதாக வீற்றிருந்தருளி; அருளாற்றிருப்புன்கூரணைந்திறைஞ்சி=திருவருளினால் திருப்புன்கூரையடைந்து வணங்கி; கொங்கலருமலர்ச்சோலை=வாசனைவிரிந்த மலர்களையுடைய சோலைசூழ்ந்த; திருக்கோலக்காவணைய=திருக்கோலக்காவென்னும் திருப்பதியையடைய, கங்கைசடைக் கரந்தவர்தாம்=கங்கைநதியைச் சடைமுடியிலே கரந்த சிவபிரான்; எதிர்காட்சிகொடுத்தருள=அவரெதிரே காட்சிகொடுத்தருள, பொங்குவிருப்பாற்றொழுது=மிக்க பெருவிருப்போடு வணங்கி, திருப்பதிகம்போற்றிசைப்பார்=திருப்பதிகத்தைப் பாடுவாராயினர்.—எ-று. (கஞரு)

திருஞான சம்பந்தர் திருக்கைக ளாலொத்திப்
பெருகார்வத் துடன்பாடப் பிஞ்ஞகனர் கண்டிரங்கி
யருளாலே திருத்தாள மளித்தபடி சிறப்பித்துப்
பொருண்மாலைத் திருப்பதிகம் பாடியே போற்றிசைத்தார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தர்திருக்கைகளாலொத்தி=அவர் ஆளுடையபிள்ளையார் திருக்கரங்களாலொத்தித் தாளம் வரையறுத்து; பெருகார்வத்துடன்பாட=மிக்க பேரன்போடு பாட; பிஞ்ஞகனார்கண்டிரங்கி=சிவபிரான் அதைக்கண்டு இரக்கமுற்று, அருளாலேதிருத்தாளமளித்தபடிசிறப்பித்து=திருவருளினால் திருப்பொற்றாளம் கொடுத்த முறைமையைத் தம் திருப்பதிகத்திற் சிறப்பித்து; பொருண்மாலைத்திருப்பதிகம் பாடியேபோற்றிசைத்தார்=பொருளமைந்த பாமாலையாகிய திருப்பதிகத்தைப் பாடித் துதித்தார்.—எ-று. (கஞசா)

## திருக்கோலக்கா-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்,

நாளுமின்னிசையாற்றமிழ்பரப்புஞானசம்பந்தனுக்குலகவர்முன்
றாளமீந்தவன்பாடலுக்கிரங்குந்தன்மையாளனையென்மனக்கருத்தை
யாளும்பூதங்கள்பாடநின்றாடுமங்கணன்றனையெண்கணமிறைஞ்சுங்
கோளிலிப்பெருங்கோயிலுளானைக்கோலக்காவினிற் கண்டுகொண்டேனே.

கோடரம்பயில்சடையுடைக்கரும்பைக்கோலக்காவுளெம்மானைமெய்ம்மானைப், பாடரங்குடியடியவர்விரும்பப்பயிலுமாவலாரூரன்வன்றொண்டன், கொடிரகுமுன்னறியுமக்நெறியானவின்றபத்திவைவிளம்பியமாந்தர், காடரநுகெனாடகவின்றுன்பாற்கதியுமெய்துவர்பதியவர்க்குதுவே.

திருச்சிற்றம்பலம்.

மறிற்காண்க.



-திருக்குருகாவூரில் சிவபிரான் சோலைசூழத் தண்ணீர்ப்பந்தலமைத்து வன்றொண்டருக்குப் பொதிசோறும் தண்

மூவாத முழுமுதலார் முதற்கோலக் காவகன்று
தாவாத புகழ்ச்சண்பை வலங்கொண்டு தாழ்ந்திறைஞ்சி
நாவார்முத் தமிழ்விரகர் நற்பதங்கள் பரவிப்போய்
மேவார்தம் புரஞ்செற்றார் குருகாவூர் மேவுவார்.

(இ-ள்.) மூவாதமுழுமுதலார்=அவர் அழியாத முழுமுதலாயுள்ள சிவபிரான் வீற்றிருந்தருளும்; முதற்கோலக்காவகன்று=சிறந்த திருக்கோலக்காவை நீங்கி; தாவாதபுகழ்ச்சண்பைவலங்கொண்டு=கெடாத புகழையுடைய சீகாழியை வலமாகவந்து; தாழ்ந்திறைஞ்சி=நிலமுறவணங்கி; நாவார்முத்தமிழ்விரகர்=நாவார்ந்த முத்தமிழ்விரகராகிய ஆளுடையபிள்ளையாரது; நற்பதங்கள்பரவிப்போய்=நல்ல திருவடிகளை வணங்கிச்சென்று; மேவார்தம்புரஞ்செற்றார்=வணங்காத அசுரர்களது திரிபுரத்தையும் எரித்தருளிய சிவபிரான் வீற்றிருந்தருளும்; குருகாவூர்மேவுவார்=திருக்குருகாவூரை யடைவாராயினார்.—எ-று. (கடுஙு)

உண்ணீரின் வேட்கையுட னுறுபசியான் மிகவருந்திப்
பண்ணீர்மை மொழிப்பரவை யார்கொழுநர் வரும்பாங்கர்க்
கண்ணீடு திருநுதலார் காதலவர் கருத்தறிந்து
தண்ணீரும் பொதிசோறுங் கொண்டுவழிச் சார்கின்றார்.

(இ-ள்.) உண்ணீரின்வேட்கையுடன்=உண்ணும் நீர்வேட்கையோடு; உறுபசியான்மிகவருந்தி=மிக்க பசியால் மிக வருத்தமுற்று; பண்ணீர்மைமொழிப்பரவையார்கொழுநர்வரும்பாங்கர்=பண்ணமைந்த மொழியையுடைய பரவையார் கொழுநராகிய நம்பியாரூரர் வருமிடத்தில்; கண்ணீடுதிருநுதலார்=நெற்றிக்கண்ணையுடைய சிவபிரான்; காதலவர்கருத்தறிந்து=அவர் திருவுள்ளக்கருத்தையறிந்து; தண்ணீரும்பொதிசோறுங்கொண்டு=தண்ணீரையும் பொதிசோற்றையும் அமைத்துக்கொண்டு; வழிச்சார்கின்றார்=வழியிலே இருப்பாராயினார்.—எ-று. (கடுசு)

வேனிலுறு வெயில்வெம்மை தணிப்பதற்கு விரைகுளிர்மென்
பானன்மலர்த் தடமபோலும் பந்தரொரு பாலமைத்தே
யானமறை வேதியரா யருள்வேடங் கொண்டிருந்தார்
மானமருந் திருக்கரத்தார் வன்றொண்டர் தமைப்பார்த்து.

(இ-ள்.) வேனிலுறுவெயில்வெம்மைதணிப்பதற்கு=வேனிற்காலத்தில் வருகின்ற வெயிலினது வெப்பத்தைக் கெடுப்பதற்கு; விரைகுளிர்மென்பானன்மலர்த்தடம்போலும்=வாசனைகமழும் குளிர்ந்த மிருதுவான செங்கழுநீர்மலர்களையுடைய வாவி போலும், பந்தரொருபாலமைத்து=தண்ணீர்ப்பந்தலை ஒருமருங்குசெய்து; ஆனமறைவேதியராய்=நல்ல வேதங்களையுணர்ந்த மறையவராய்; அருள்வேடங்கொண்டிருந்தார்=அருள்வடிவங்கொண்டெழுந்தருளியிருந்தார்; மானமருந்திருக்கரத்தார்=மான்கன்று தங்கிய திருக்கரத்தையுடையவர்; வன்றொண்டர்தமைப்பார்த்து=நம்பியாரூரனை எதிர்பார்த்துக்கொண்டு.—எ-று. ஏ-அசை. (கடுஎ)

குருகாவூ ரமர்ந்தருளுங் குழகர்வழி பார்த்திருப்பத்
திருவாரூர்த் தம்பிரான் றோழர்திருத் தொண்டருடன்
வருவாரப் பந்தரிடைப் புகுந்துதிரு மறையவர்பாற்
பெருகார்வஞ் செலவிருந்தார் சிவாயநம வெனப்பேசி.

(இ-ள்.) குருகாவூரமர்ந்தருளுங்குழகர் வழிபார்த்திருப்ப=திருக்குருகாவூரில் வீற்றிருந்தருளும் சிவபிரான் வன்றொண்டர்வரும் வழியைப்பார்த்துக்கொண்டிருக்க; திருவாரூர்த்தம்பிரான்றோழர்திருத்தொண்டருடன்வருவார்=திருவாரூரின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரான் தோழராகிய நம்பியாரூரர் அடியார்கூட்டத்துடன் வருகின்றவராய்; அப்பந்தரிடைப்புகுந்து=அத்தண்ணீர்ப்பந்தலுட்புகுந்தருளி; திருமறையவர்பாற்பெருகார்வஞ்செல=அச்சிவபிரானாகிய மறையவரிடத்துப் பேரன்பு செல்லும்படி; இருந்தார்சிவாயநமவெனப்பேசி=சிவாயநமவென்று கூறி எழுந்தருளியிருந்தார்.()

ஆலநிழற் கீழிருந்தா ரவர்தம்மை யெதிர்நோக்கிச
சாலமிகப் பசித்தீரிப் பொதிசோறு தருகின்றேன்
காலமினித் தாழாமே கைக்கொண்டிங் கினிதருந்தி
யேலநறுங் குளிர்தண்ணீர் குடித்திளைப்புத் தீருமென.

(இ-ள்.) ஆலநிழற்கீழிருந்தார்=வடவானிழற்கண் இருந்தருளிய சிவபிரான்; அவர்தம்மையெதிர்நோக்கி=நம்பியாரூரரை எதிரே பார்த்தருளி; சாலமிகப்பசித்தீர்=நீர்மிக்க கழிபெரும்பசியுடையீர் ஆதலின்; இப்பொதிசோறுதருகின்றேன்=இக்கட்டமுதை உமக்குக் கொடுக்கின்றேன்; காலமினித்தாழாமேகைக்கொண்டு=இனிக் காலதாமதஞ்செய்யாமல் இதைக் கைக்கொண்டு; இங்கினிதருந்தி=இங்கே இனிதாகத் திருவமுதுசெய்து; ஏலநறுங்குளிர்தண்ணீர்குடித்து=பொருந்த நறுமணங்கமழும் குளிர்ந்த நீரையுண்டு; இளைப்புத்தீருமென=பசிவருத்தத்தை நீங்குமென்றுகூறியருள.—எ-று.

வன்றொண்ட ரதுகேட்டு மறைமுனிவர் தரும்பொதிசோ
றின்றுநமக் கெதிர்விலக்க லாகாதென் றிசைந்தருளிப்
பொன்றயங்கு நூன்மார்பர் தருமபொதிசோ றதுவாங்கிச்
சென்றதிருத் தொண்டருடன் றிருவமுது செய்தருளி.

(இ-ள்.) வன்றொண்டரதுகேட்டு=நம்பியாரூரர் அம்மறையவர் மொழியைக் கேட்டு; மறைமுனிவர்தரும்பொதிசோறு=வேதங்களையுணர்ந்த அம்மறையவர் நமக்குக்கொடுக்கும் பொதிசோற்றை; இன்றுநமக்கெதிர்விலக்கலாகாதென்றிசைந்தருளி=இப்பொழுது எமக்கு எதிரே மறுக்கக்கூடாதென்று உடன்பட்டு; பொன்றயங்குநூன்மார்பர்தரும்=பொன்போல விளங்குகின்ற பூணூலையணிந்த மார்பையுடைய மறையவர்கொடுக்கும்; பொதிசோறதுவாங்கி=கட்டமுதை வாங்கி; சென்றதிருத்தொண்டருடன்றிருவமுதுசெய்தருளி=தம்முடன் சென்ற அடியார் கூட்டத்துடன் திருவமுது செய்து.—எ-று. (கக௦)

எண்ணிறைந்த பரிசனங்க ளெல்லாரு மினிதருந்தப்
பண்ணியபின் னம்மருங்கு பசித்தணைந்தார் களுமருந்த
வுண்ணிறைந்த வாரமுதா யொருகாலு முலவாதே
புண்ணியனார் தாமளித்த பொதிசோறு பொலிந்ததால்.

(இ-ள்.) எண்ணிறந்தபரிசனங்களெல்லாரும்=அளவற்ற பரிசனங்கள் முழுவதும்; இனிதருந்தப்பண்ணியபின்=இனிதாகத்திருவமுது செய்யச்செய்வித்தபின்; அம்மருங்குபசித்தணைந்தார்களுமருந்த=அத்தண்ணீர்ப்பந்தலினருகேபசித்திருந்தவழிச்செல்வோரும்உண்ணும்படி; உண்ணிறைந்தவாரமுதாய்=தம்உள்ளேநிறைந்தஅமுதம்போலும் இனிமையுடையதாய்; ஒருகாலுமுலவாதே=எடுக்குந்தோறுங்குறையாமல்; புண

ணியாரூர் தாமளித்த=சிவபிரான்கொடுத்தருளிய; பொதிசோறுபொலிந்தது=கட்டமுதானதுவளர்ந்திருந்தது.—எ-று. ஆல்-அசை-இம்மூன்றுங்குளகம். (கசுக)

சங்கரனார் திருவருள்போற் றண்ணீரின் சுவையார்ந்து
பொங்கிவரு மாதரவா லவர்நாமம் புகழ்ந்தேத்தி
யங்கயர்வாற் பள்ளியமர்ந் தருகணைந்தார் களுந்துயிலக்
கங்கைசடைக் கரந்தாரப் பந்தரொடுந் தாங்கரந்தார்.

(இ-ள்.) சங்கரனார்திருவருள்போல்=சிவபிரான்திருவருள்போன்ற; தண்ணீரின்சுவையார்ந்து=இனியசுவையோடுகூடிய தண்ணீரையுண்டு; பொங்கிவருமாதரவால்=மிககெழுகின்றபெருவிருப்பினால்; அவர்நாமம்புகழ்ந்தேத்தி=அச்சிவபிரான் திருநாமங்களைப்புகழ்ந்துதுதித்து; அங்கயர்வாற்பள்ளியமர்ந்து=அவ்விடத்து இளைப்பினால் துயில்கூர்ந்து; அருகணைந்தார்களுந்துயில=அருகணைந்தபரிசனங்களுந்துயில; கங்கைசடைக்கரந்தார்=கங்கைநதியைச் சடையிற்கரந்தசிவபிரான்; அப்பந்தரொடுந்தாங்கரந்தார்= அப்பொழுதுஅத்தண்ணீர்ப்பந்தரோடு தாமும்மறைந்தருளினார்.—எ-று.()

சித்தநிலை திரியாத திருநாவ லூர்மன்ன
ரத்தகுதி யினிற்பள்ளி யுணர்ந்தவரைக் காணாமை
யித்தனையா மாற்ற மறிந்திலே னெனவெடுத்து
மெய்த்தகைய திருப்பதிகம் விளம்பியே சென்றடைந்தார்.

(இ-ள்.) சித்தநிலைதிரியாததிருநாவலூர்மன்னர்=தம்உள்ளத்துக்கொண்ட திருவருணிலைமையினின்றும் நீங்காத நம்பியாரூரர்; அத்தகுதியினிற்பள்ளியுணர்ந்து=அந்நிலைமையினில்விழித்து; அவரைக்காணாமை=அம்மறையவரைக்காணாமல்; இத்தனையாமாற்றமறிந்திலேனெனவெடுத்து=இத்தனையாமாற்ற மறிந்திலேனெனமுதலெடுத்து; மெய்த்தகையதிருப்பதிகம்விளம்பியேசென்றடைந்தார்=மெய்ம்மையான திருப்பதிகத்தைப்பாடிக்கொண்டு அடைந்தருளினார்.—எ-று. (கசுங)

## திருக்குருகாவூர் பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

இத்தனையாமாற்றமறிந்திலேனெம்பெருமான
பித்தனையென் றுமமைப்பேசுவார்பிறரொல்லா
முத்தினைமணிதன்னைமாணிக்கமுளைத்தெழுந்த
வித்தனைகுருகாவூர்வெள்ளடையீயன்றே.

வளங்கனிபொழின்மல்குவயலணிந்தழகாய்
விளங்கொளிகுருகாவூர்வெள்ளடையுறைவானை
யிளங்கிளையாரூரன்வனப்பகையவளப்ப
னுளங்குளிர்தமிழ்மாலைபத்தர்கட்குரையாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வெள்ளடைநாதர், தேவியார்-காவியங்கண்ணியம்மை.

திருகாவூ ரமர்ந்தருளுங் குழகனார் கோயிலினுக்
குருகார்பொற் கோபுரத்தை யணைந்திறைஞ்சி யுள்புக்கு

வருகாதல் கூரவலங் கொண்டுதிரு முன்வணங்கிப்
பருகாவின் னமுதத்தைக் கண்களாற் பருகினார்.

(இ-ள்.) குருகாவூரமர்ந்தருளுங்குழகனார்கோயிலினுக்கருகார்=திருக்குருகாவூரில் வீற்றிருந்தருளும் சிவபிரான் திருக்கோயிலுக்கருகேயுள்ள; பொற்கோபுரத்தைய ணைந்திறைஞ்சியுள்புக்கு=திருக்கோபுரத்தையடைந்து வணங்கி யுள்ளே புகுந்து; வருகாதல்கூரவலங்கொண்டுதிருமுன்வணங்கி=உதிக்கின்ற பெருவிருப்பு மீக்கூர வலமாகவந்து திருமுன்னேபணிந்து; பருகாவின்னமுதத்தைக்கண்களாற்பருகினார்=பருகப்படாத இனிய அமுதம்போலும் சிவபிரானைக் கண்களினாற்றரிசித் தின்பமடைந்தார்.

தியானிப்பார்க்கு உள்ளத்துக் களிபேருவகை பயப்பித்துநிற்றலின் அவர்க்கமுதம்போல்வாராயினும் அமுதம் தேவர்கள்வாயினாற்பருகப் படுதல்போற் பருகப்படாமையின் பருகாவின்னமுதென்றும், காட்சி வாயிலாய்த்தரிசித்துப் பேரானந்தமடைதல் பருகுதலோடொத்தலின் கண்களாற்பருகினாரென்றுங்கூறினார். (கஙச)

கண்ணார்ந்த வின்னமுதைக் கையாரத் தொழுதிறைஞ்சிப்
பண்ணார்ந்த திருப்பதிகம் பாடியே பணிந்தேத்தி
யுண்ணாடும் பெருங்காத லுடையவர்தாம் புறத்தெய்தி
நண்ணார்வத் தொண்டருட னங்கினிது நயந்திருந்தார்.

(இ-ள்.) கண்ணார்ந்தவின்னமுதை=தங்காட்சிக்குப் புலப்படும் இனிய அமுதுபோல்வானை; கையாரத்தொழுதிறைஞ்சி=கைக்கிசையவணங்கித்துதித்து; பண்ணார்ந்ததிருப்பதிகம்பாடியேபணிந்தேத்தி=பண்ணமைந்த திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டு வணங்கித்துதித்து; உண்ணாடும்பெருங்காதலுடையவர்தாம்புறத்தெய்தி=தம்திருவுள்ளத்துக்கொண்ட பெருவிருப்புடைய நம்பியாரூரர்தாம் புறம்பேசென்று, நண்ணார்வத்தொண்டருடன்=தம்முடன்வரும் அன்புடைய அடியார்களோடு; அங்கினிது நயந்திருந்தார்=அக்குருகாவூரில் இனிதாகவீற்றிருந்தருளினார்.—எ-று. (கஙரு)

அந்நாளிற் றம்பெருமா னருள்கூடப் பணிந்தகன்று
மின்னார்செஞ் சடைமுடியார் விரும்புமிடம் பலவணங்கிக்
கண்ணாடு மெயில்புடைசூழ் கழிப்பாலை தொழுதேத்தித்
தென்னாவ லூர்மன்னர் திருத்தில்லை வந்தடைந்தார்.

(இ-ள்.) அந்நாளிற்றம்பெருமானருள்கூட=அந்நாளிலே சிவபிரான் திருவருள்பொருந்த; பணிந்தகன்று=அங்குவணங்கி அவணைவிட்டுநீங்கி; மின்னார்செஞ்சடைமுடியார்=மின்போலும்ஒளிவீசுகின்ற சிவந்தசடைமுடியையுடைய சிவபிரான்; விரும்புமிடம்பலவணங்கி=விரும்பிவீற்றிருந்தருளும் பலதிருப்பதிகளையும் வணங்கிக்கொண்டு; கண்ணாடுமெயில்புடைசூழ்=பார்த்தவர்கள் கண்கள்நாடியறியத்தக்க சிறப்பையுடையமதில் அருகிற்சூழ்ந்த; கழிப்பாலைதொழுதேத்தி=திருக்கழிப்பாலையை வணங்கித்துதித்து; தென்னாவலூர்மன்னர்=நம்பியாரூரர்; திருத்தில்லைவந்தடைந்தார்=சிதம்பரத்தையடைந்தருளினார்.—எ-று. (கஙசு)

சீர்வளருந் திருத்தில்லைத் திருவீதி பணிந்துபுகுந்
தேர்வளர்பொற் றிருமன்று ளெடுத்தசே வடியிறைஞ்சிப்
பார்வளர மறைவளர்க்கும் பதியதனிற் பணிந்துறைவார்
போர்வளர்மே ருச்சிலையார் திருத்திணை மாநகர்புகுந்தார்.

(இ-ள்.) சீர்வளருந்திருத்தில்லைத்திருவீதி—சிறப்போங்குஞ்சிதம்பரத்தின்கணுள்ளதிருவீதியை; பணிந்துபுகுந்து—வணங்கியுள்ளேசென்று; ஏர்வளர்பொற்றிருமன்றுள்—அழகுமிக்க கனகசபையுள்; எடுத்தசேவடியிறைஞ்சி—தூக்கியபாதத்தைவணங்கி; பார்வளரமறைவளர்க்கும்—நிலவுலகத்தார்சடேறவைதிகமார்க்கத்தைவளர்க்கும்; பதியதனிற்பணிந்துறைவார்—அத்திருப்பதியில்வணங்கி வசிக்கும் நம்பியாரூரர்; போர்வளர்மேருச்சிலையார்—போர்த்தொழிலுக்குரிய மேருவில்லையுடைய சிவபிரான்வீற்றிருந்தருளும்; திருத்தினைமாநகர்புகுந்தார்—பெருமைதங்கிய திருத்தினைநகர் என்னுந்திருப்பதியையடைந்தருளினார் —எ-று. (கசுஎ)

திருத்தினைமா நகர்மேவுஞ் சிவக்கொழுந்தைப் பணிந்துபோய்
திருத்தனு ரமர்ந்தருளு நிறைபதிகள் பலவணங்கிப்
பொருத்தமிகுந் திருத்தொண்டர் போற்றுதிருநாவலூர்
கருத்தில்வரு மாதரவாற் கைதொழச்சென் றெய்தினார்.

(இ-ள்.) திருத்தினைமாநகர்மேவும்—திருத்தினை நகரின்கண் வீற்றிருந்தருளும்; சிவக்கொழுந்தைப்பணிந்துபோய்—சிவபிரானைவணங்கி அங்குநின்றும்நீங்கி; திருத்தனுரமர்ந்தருளும்—சிவபிரான் வீற்றிருந்தருளும்; நிறைபதிகள்பலவணங்கி—பலதிருப்பதிகளைவணங்கிக்கொண்டு; பொருத்தமிகுந்திருத்தொண்டர்—ஒருப்பாடுமிக்கஅடியார்கள்; போற்றுதிருநாவலூர்—துதிக்குந்திருநாவலூரை; கருத்தில்வருமாதரவால்—தம்உள்ளத் துதித்தபேரன்பால்; கைதொழச்சென்றெய்தினார்—வணங்குதற் கெழுந்தருளினார்.—எ-று. (கசுஅ)

திருநாவ லூர்மன்னர் சேர்கின்றா ரெனக்கேட்டுப்
பெருநாமப் பதியோருந் தொண்டர்களும் பெருவாழ்வு
வருநாளென் றலங்கரித்து வந்தெதிர்கொண் டுள்ளணையச்
செருநாகத் துரிபுனைந்தார் செழுங்கோயி லுள்ளணைந்தார்.

(இ-ள்.) திருநாவலூர்மன்னர்சேர்கின்றாரெனக்கேட்டு—நம்பியாரூரர் வருகின்றாரென்று கேள்வியுற்று; பெருநாமப்பதியோருந்தொண்டர்களும்—மிக்க புகழையுடைய அவ்வூருள்ளாரும் அடியார்களும்; பெருவாழ்வுவருநாளென்றலங்கரித்து—நமக்குப் பெருவாழ்வு வருதற்கேதுவான நாளிதுவென்று அலங்காரஞ்செய்து; வந்தெதிர்கொண்டுள்ளணைய—வந்து எதிர்கொண்டழைத்துக்கொண்டு உள்ளேசெல்ல; செருநாகத்துரிபுனைந்தார்—போர்செய்யும் யானையினது உரிவையைப்புனைந்த சிவபிரான் வீற்றிருந்தருளும்; செழுங்கோயிலுள்ளணைந்தார்—செழுமைதங்கிய திருக்கோயிலுள் புகுந்தருளினார்.—எ-று. (கசுகூ)

மேவியவத் தொண்டர்குழா மிடைந்தரவென் றெழுமோசை
மூவுலகும் போயொலிப்ப முதல்வனார் முன்பெய்தி
யாவியினு மடைவுடையா ரடிக்கமலத் தருள்போற்றிக்
கோவலனான் முகனெடுத்துப் பாடியே கும்பிட்டார்.

(இ-ள்.) மேவியவத்தொண்டர்குழாமிடைந்து—எதிர்கொண்டுவந்த அந்தஅடியார்கூட்டங்கள் நெருங்கி; அரவென்றெழுமோசைமூவுலகும்போயொலிப்ப—அரகரவென்று கூறுதலால் எழாநின்ற ஓசையானது மூன்றுலகத்தும் சென்று முழங்காநிற்க; முதல்வனார்முன்பெய்தி—சிவபிரான் திருமுன்னேயடைந்து; ஆவியினுமடைவுடை

யார்=உயிரினுமினியராய்த் தாம் அடைதற்குரியசிவபிரானது; அடிக்கமலத்தருள்போற்றி=திருவடித்தாமரையின் திருவருளைத்துதித்து; கோவலனான்முகனெடுத்துப்பாடியேகும்பிட்டார்=கோவலனான்முகனென்று முதலெடுத்துத் திருப்பதிகத்தைப் பாடித்தொழுதார்.—எ-று. (கஎ0)

## திருவெண்ணெய்நல்லூரும்திருநாவலூரும்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

கோவலனான்முகன்வானவர்கோனுங்குற்றேவல்செய்ய
மேவலர்முப்புரந்தீயெழுவித்தவனோரம்பினா
லேவலனார்வெண்ணெய்நல்லூரில்வைத்தெம்மையாளுங்கொண்ட
நாவலனார்க்கிடமாவதுநந்திருநாவலூரே.

நாதனுக்கூர்நமக்கூர்நரசிங்கமுனையரைய
னாதரித்தீசனுக்காட்செய்யுமூரணிநாவலூரென்
றோதநற்றவத்தவன்றொண்டனாரூரனுரைத்ததமிழ்
காதலித்துங்கற்றுங்கேட்பவர்காவினைகட்டறுமே.

திருச்சிற்றம்பலம்.

---

நலம்பெருகு மப்பதியி னாடியவன் பொடுபணிந்து
குலம்பெருகுந் திருத்தொண்டர் குழாத்தோடு மினிதமர்ந்து
சலம்பெருகுஞ் சடைமுடியார் தாள்வணங்கி யருள்பெற்றுப்
பொலம்புரிநூன் மணிமார்பர் பிறபதியுந் தொழப்போவார்.

(இ-ள்.) நலம்பெருகுமப்பதியில்=நன்மைமிக்கஅத்திருப்பதியில்; நாடியவன்பொடுநயந்து=விரும்பிய பேரன்போடுகூடி; குலம்பெருகுந்திருத்தொண்டர்குழாத்தோடுமினிதமர்ந்து=கூட்டம் மிக்க அடியார் திரளோடும் இனிதாக வீற்றிருந்து; சலம்பெருகுஞ்சடைமுடியார்தாள்வணங்கி=கங்கைநதிபெருக்கெடுக்கும் சடைமுடியையுடைய சிவபிரான் திருவடிகளை வணங்கி; அருள்பெற்றுப்பொலம்புரிநூன்மணிமார்பர்=அவர் திருவருளைப்பெற்றுப் பொன்போல விளங்கும் பூநூலணிந்த அழகிய திருமார்பினையுடைய நம்பியாரூரர்; பிறபதியுந்தொழப்போவார்=பிற திருப்பதிகளையும் வணங்குதற்குப் போவாராயினார்.—எ-று. (கஎக)

தண்டகமாந் திருநாட்டுத் தனிவிடையார் மகிழ்விடங்க
டொண்டரெதிர் கொண்டணையத் தொழுதுபோய்த் தூயநதி
வண்டறைபூம் புறவுமலை வளமருதம் பலகடந்தே
யெண்டிசையோர் பரவுதிருக் கழுக்குன்றை யெய்தினார்.

(இ-ள்.) தண்டகமாந்திருநாட்டு=திருத்தொண்டைநாட்டில்; தனிவிடையார மகிழ்விடங்கள்=ஒப்பற்ற இடபத்தை வாகனமாகக்கொண்டருளும் சிவபிரான் மகிழ்ந்து வீற்றிருக்கும் திருப்பதிகளை; தொண்டரெதிர்கொண்டணையத்தொழுதுபோய்=அங்குள்ள அடியார்கள் எதிர்கொண்டுவர வணங்கிச்சென்று; தூயநதிவண்டறைபூம்புறவு=தூய்மையாகிய நதிகளையும் வண்டுகளொலிக்கின்ற பூக்களையுடைய முல்லைநிலமும்; மலைவளமருதம்பலகடந்து=குறிஞ்சிநிலமும்வளந்தங்கிய மருதநிலமுமாகிய பலவிட

ங்களைக்கடந்து; எண்டிசையோர்பரவ=எட்டுத்திக்கின்கணுள்ளாரும்துதிக்கும்; திருக்கழுக்குன்றையெய்தினர்=திருக்கழுக்குன்றத்தினை யடைந்தருளினர்.—எ-று. (எஎ௨)

தேனார்ந்த மலர்ச்சோலைத் திருக்கழுக்குன் றத்தடியா
ரானாத விருப்பினொடு மெதிர்கொள்ள வடைந்தருளித்
தூநாள்வெண் மதியணிந்த சுடர்க்கொழுந்தைத் தொழுதிறைஞ்சிப்
பாநாடு மின்னிசையின் றிருப்பதிகம் பாடினார்.

(இ-ள்.) தேனார்ந்தமலர்ச்சோலைத்திருக்கழுக்குன்றத்து=தேன்நிறைந்த மலர்களையுடைய சோலைசூழ்ந்ததிருக்கழுக்குன்றின்கண்வாழும்; அடியாரானாதவிருப்பினொடுமெதிர்கொள்ளவடைந்தருளி=அடியார்கள் அடங்காத பெருவிருப்போடும் எதிர்கொண்டுவர அங்குச்சென்றருளி; தூநாள்வெண்மதியணிந்தசுடர்க்கொழுந்தைத்தொழுதிறைஞ்சி=தூயவெள்ளிய இளம்பிறையையணிந்த சிவபிரானைவணங்கி; பாநாடுமின்னிசையின்றிருப்பதிகம்பாடினார்=செய்யுளுக்கமைந்த இன்னிசையோடு திருப்பதிகத்தைப்பாடியருளினர்.—எ-று. (எஎ௩)

## திருக்கழுக்குன்றம்-பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

கொன்றுசெய்தகொடுமையாற்பலசொல்லவே
நின்றபாவம்வினைகடாம்பலநீங்கவே
சென்றுசென்றுதொழுமின்றேவர்பிரானிடங்
கன்றினோடுபிடிசூழ்தண்கழுக்குன்றமே.

பல்லில்வெள்ளைத்தலையன்றான் பயிலும்மிடங்
கல்லில்வெள்ளையருவித்தண்கழுக்குன்றினை
மல்லின்மல்குதிரடோளான் வணப்பினாற்
சொல்லச்சொல்லித்தொழுவாரைத்தொழுமின்களே.

திருச்சிற்றம்பலம்.

---

பாடியவப் பதியின்க ணினிதமர்ந்து பணிந்துபோய்
நாடியநல் லுணர்வினொடுந் திருக்கச்சூர் தனைநண்ணி
யாடகமா மதில்புடைசூ ழாலக்கோயிலி னமுதைக்
கூடியமெய் யன்புருகக் கும்பிட்டுப் புறத்தணைந்தார்.

(இ-ள்.) பாடியவப்பதியின்கணினிதமர்ந்து=திருப்பதிகம்பாடிய அத்திருக்கழுக்குன்றத்தில் இனிதாகவமர்ந்து; பணிந்துபோய்=வணங்கி அங்கு நின்றும்போய்; நாடியநல்லுணர்வினொடும்=சிவபிரான்திருவருளைநாடிய நல்லுணர்வோடு; திருக்கச்சூர்தனைநண்ணி=திருக்கச்சூரையடைந்து; ஆடகமாமதில்புடைசூழ்=பொன்மயமான பெரியமதில் அருகிற்சூழ்ந்த; ஆலக்கோயிலினமுதை=ஆலக்கோயிலில் வீற்றிருந்தருளும் சிவபிரானை; கூடியமெய்யன்புருக=தம்மிடத்துதித்த பேரன்புகாரணமான மனமுருகும்படி; கும்பிட்டுப்புறத்தணைந்தார்=வணங்கிப் புறம்பேசென்றார்.—எ-று. (எஎ௪)

அணைந்தருளு மவ்வேலை யமுதுசெய்யும் பொழுதாகக்
கொணர்ந்தமுது சமைத்தளிக்கும் பரிசனமுங் குறுகாமைத்

தணந்தபசி வருத்தத்தாற் றம்பிரான் றிருவாயிற்
புணர்ந்தமதிற் புறத்திருந்தார் முனைப்பாடிப் புரவலனார்.

(இ-ள்.) அணைந்தருளுமவ்வேலை=திருக்கோயிலின் புறத்தேவரும்போது; அமுதுசெயும்பொழுதாக=திருவமுதுசெய்யும் உச்சிப்பொழுதாக; கொணர்ந்தமுதுசமைத்தளிக்கும்=திருவமுதமைத்துக் கொடுவந்து கொடுக்கும்; பரிசனமுங்குறுகாமை=பரிசனங்களும் வாராமையினால்; தணந்தபசிவருத்தத்தால்=மிக்க பசிவருத்தத்தினால்; தம்பிரான்றிருவாயிற்புணர்ந்த=சிவபிரானது திருவாயிலின்கணுள்ள; மதிற்புறத்திருந்தார்=மதிலருகேயிருந்தார்; முனைப்பாடிப்புரவலனார்=நம்பியாரூரர்.—எ-று. (கஎரு)

வன்றொண்டர் பசிதீர்க்க மலையின்மேன் மருந்தானார்
மின்றங்கு வெண்டலையோ டொழிந்தொருவெற் றோடேந்தி
யன்றங்கு வாழ்வாரோ ரந்தணராய்ப் புறப்பட்டுச்
சென்றன்பர் முகநோக்கி யருள்கூரச் செப்புவார்.

(இ-ள்.) வன்றொண்டர்பசிதீர்க்க=நம்பியாரூரரது பசிநோயைநீக்க; மலையின்மேன்மருந்தானார்=பிணிதீர்க்கும் மலைமருந்துபோன்றவர்; மின்றங்குவெண்டலையோடு=ஒளிவீசுகின்ற பிரமகபாலத்தை; ஒழிந்தொருவெற்றோடேந்தி=நீக்கிவேறொருவெற்றோட்டைத் தாங்கிக்கொண்டு; அன்றங்குவாழ்வாரோரந்தணராய்ப்புறப்பட்டுச்சென்று=அற்றைநாளில் அங்குவாழும் ஓர்மறையவராய் வெளிப்பட்டுவந்து; அன்பர்முகநோக்கியருள்கூரச்செப்புவார்=நம்பியாரூரர் திருமுகத்தைப்பார்த்து அவர்மேல் அருண்மிக்கூரச் சொல்லுகின்றார்.—எ-று. (கஎசு)

மெய்ப்பசியான் மிகவருந்தி யிளைத்திருந்தீர் வேட்கைவிட
விப்பொழுதே சோறிரந்திங் கியானுமக்குக் கொணர்கின்றே
னப்புறநீ ரகலாதே சிறிதுபொழு தமருமெனச்
செப்பியவர் திருக்கச்சூர் மனைதோறுஞ் சென்றிரப்பார்.

(இ-ள்.) மெய்ப்பசியான்மிகவருந்தியிளைத்திருந்தீர்=உமது உடம்பு பசியினால் மிகவருத்தமுற்று இளைத்திருக்கின்றீர்; வேட்கைவிட=உம்முடைய பசிவேட்கைநீங்க; இப்பொழுதேசோறிரந்து=இப்பொழுதே சோற்றையிரந்து; இங்கியானுமக்குக்கொணர்கின்றேன்=இவ்விடத்தில் நான் உமக்குக்கொண்டு வருகின்றேன்; அப்புறநீரகலாதே=இங்குநின்றும் வேறிடஞ்செல்லாமல்; சிறிதுபொழுதமருமெனச்செப்பி=சிறிதுபொழுதிருமென்றுகூறி; அவர்திருக்கச்சூர்மனைதோறுஞ்சென்றிரப்பார்=அவர் திருக்கச்சூரின்கணுள்ள மறையவர்வீடுதோறுஞ் சென்றிரப்பாராயினர்.—எ-று. (கஎஎ)

வெண்டிருநீற் றணிதிகழ விளங்குநூ லொளிதுளங்கக்
கண்டவர்கண் மனமுருகக் கடும்பகற்போ திடும்பலிக்குப்
புண்டரிகக் கழல்புவிமேற் பொருந்தமனை தொறும்புக்குக்
கொண்டுதாம் விரும்பியாட் கொண்டவர்முன் கொடுவந்தார்.

(இ-ள்.) வெண்டிருநீற்றணிதிகழ=வெள்ளியதிருநீற்றுப்புண்டரம் திருமேனியில்விளங்க; விளங்குநூலொளிதுளங்க=மார்பில்விளங்கிய பூணூலானது ஒளியோடுபிரகாசிக்க; கண்டவர்கண்மனமுருக=வேடத்தைத்தரிசித்த அடியார்கள் மனமுருக; கடும்பகற்போதிடும்பலிக்கு=மத்தியானத்திலிடுகின்ற பிட்சைக்கு; புண்டரிகக்கழல்புவிமேற்பொருந்த=தாமரைமலர்போலும் திருவடிகள் நிலத்திற்பொருந்த; மனைதொறு



திருக்கச்சூரில் நம்பியாரூரர் சுவாமிதெரிசனஞ்செய்து மிகப்பசியுடன் பரிஜனங்களுக்கெதிர் நோக்க, சிவபிரான்

ம்புக்குக்கொண்டு = மனைதோறும்புகுந்து பிட்சையேற்று ; தாம்விரும்பியாட்கொண் டவர்முன்கொடுவந்தார் = தாமேவிருப்புற்றுத்தடுத்தாட்கொண்ட நம்பியாரூரர் முன் னேகொண்டுவந்தருளினார். எ-று. (களஅ)

இரந்துதாங்கொடுவந்தவின்னடிசிலுங்கறியு
மரந்தைதரும்பசிதீரவருந்துவீரெனவளிப்பப்
பெருந்தகையார்மறையவர்தம்பேரருளின்றிறம்பேணி
யிரந்தபெருங்காதலினானேர்தொழுதுவாங்கினார்.

(இ-ள்.) இரந்துதாங்கொடுவந்த = தாம் பிச்சையெடுத்துக்கொண்டுவந்த ; இன்னடிசிலுங்கறியும் = இனியசோறும்கறியும் ; அரந்தைதரும்பசிதீர = உமக்குத்து யர்செய்யும் பசிநீங்க ; அருந்துவீரெனவளிப்ப = உண்ணுமென்று கொடுக்க ; பெருந் தகையார்மறையவர்தம் = நம்பியாரூரர் அச்சிவபிரானாகிய மறையவரது ; பேரருளின் றிறம்பேணி = பெருங்கருணையின்கூறுபாட்டைமதித்து ; நிரந்தபெருங்காதலினால் = திருவுள்ளத்தடைந்தபெருவிருப்போடு ; நேர்தொழுதுவாங்கினார் = அவர்திருமு ன்னேஅஞ்சலிசெய்துவாங்கினார்.—எ-று. (களகூ)

வாங்கியவத்திருவமுதுவன்றொண்டர்மருங்கணைந்த
வோங்குதவத்தொண்டருடனுண்டருளியுவந்திருப்ப
வாங்கருகுநின்றார்போலவர்தம்மையறியாமே
நீங்கினாரெப்பொருளுநீங்காதநிலைமையினார்.

(இ-ள்.) வாங்கியவத்திருவமுது = தாம் கையில்வாங்கிய அத்திருவமுதை ; வன் றொண்டர் = நம்பியாரூரர் ; மருங்கணைந்தவோங்குதவத்தொண்டருடன் = தம்அரு கில்வந்தமிக்கதவத்தையுடைய அடியவர்களோடு ; உண்டருளியுவந்திருப்ப = திருவ முதுசெய்து மகிழ்ந்து வீற்றிருந்தருள ; ஆங்கருகுநின்றார்போல் = அவ்விடத்து அரு கிலேநின்றவரைப்போல் ; அவர்தம்மை யறியாமேநீங்கினார் = நம்பியாரூரர்தம்மை அறியாவண்ணம் நீங்கினார் ; எப்பொருளு நீங்காதநிலைமையினார் = சித்தசித்தென்னும் எல்லாப்பொருள்களினும் வியாபித்துக் கலந்திருக்கின்ற நிலைமையையுடைய சிவபி ரான்.—எ-று. (க௮௦)

எப்பொருளுநீங்காநிலைமை-வியாத்தியாற்கலந்துடனாயிருத்தல், அவ்வாறிருப்பி னும் வேறாதலுமுடைய ரென்பதுகொள்க. வியாத்தி - பாலினெய்போலிருத்தல்.

திருநாவலூராளிசிவயோகியார்நீங்க
வருநாமமறையவனாரிறையவனாரெனமதித்தே
பெருநாதச்சிலம்பணிசேவடிவருந்தப்பெரும்பகற்க
ணுருநாடியெழுந்தருளிற்றென்பொருட்டாமெனவுருகி.

(இ-ள்.) திருநாவலூராளி சிவயோகியார்நீங்க = நம்பியாரூரர் சிவபிரானாகிய மறையவர் அங்குநின்றும் மறைய ; வருநாமமறையவனார் = ஈண்டு வாராநின்ற சிவ யோகியென்னும் நாமத்தையுடைய வேதியர் ; இறையவனாரெனமதித்து = சிவபிரா னென்று தம்திருவுள்ளத்துத்துணிந்து ; பெருநாதச்சிலம்பணிசேவடிவருந்த = அதி

சுக்குமவாக்கென்னும்நாதமயமானசிலம்பையணிந்ததிருவடிவருந்த ; பெரும்பகற்கணு ருநாடியெழுந்தருளிற்று = நடுப்பகலில்திருமேனிகொண்டெழுந்தருளியது ; என்பொ ருட்டாமெனவுருகி=அடியேன்பொருட்டென்று மன்முருகி —எ-று. ஏ-அசை. (கஅக)

இந்நாதம்ஆதியில்சுத்தமாயையினின்றுமுதித்துவேதாகமங்களுதித்தற்குக் கார ணமாய் நிருவிகற்பஞானவேதுவாயிருக்கும்.

முதுவாயோரியென்றெடுத்துமுதல்வனார்தம்பெருங்கருணை
யதுவாமிதுவென்றதிசயம்வந்தெய்தக்கண்ணீர்மழையருவிப்
புதுவார்புனலின்மயிர்ப்புளகம்புதையப்பதிகம்போற்றிசைத்து
மதுவாரிதழிமுடியாரைப்பாடிமகிழ்ந்துவணங்கினார்.

(இ-ள்.) முதுவாயோரியென்றெடுத்து = முதுவாயோரியெனமுதலெடுத்து ; முதல்வனார்தம் பெருங்கருணையதுவாமிதுவென்று = சிவபிரானது பெரிய திருவருள் தானே இவ்வாறு வந்ததென்று ; அதிசயம்வந்தெய்த = தம்திருவுள்ளத்துவிம்மித முண்டாக ; கண்ணீர் மழையருவிப்புதுவார்புனலின் = ஆனந்தக்கண்ணீராகியமழை யாலுண்டாகும் அருவியென்னும் புதிதாகப்பெருகுகின்றநீரில் ; மயிர்ப்புளகம்புதைய = உரோமகூபங்கள்புதைந்துவிட ; பதிகம்போற்றிசைத்து = திருப்பதிகத்தைப்பாடி; மதுவாரிதழிமுடியாரைப்பாடி = தேன்றங்கியகொன்றைமாலையையணிந்ததிருமுடியை யுடைய சிவபிரானைத்துதித்து ; மகிழ்ந்துவணங்கினார் = மகிழ்ச்சியடைந்து பணிந் தார்.—எ-று. இவ்விரண்டும் குளகம். (கஅஉ)

---

திருக்கச்சூராலக்கோயில். பண். சொல்லிச்சவ்வர்ணம்.

திருச்சிற்றம்பலம்.

முதுவாயோரிகதறமுதுகாட்டெரிகொண்டாடன்முயல்வானே
மதுவார்கொன்றைப்புதுவீசூடும்மலையான்மகடன்மணவாளா
கதுவாய்த்தலையிற்பலிநீகொள்ளக்கண்டாலடியார்கவலாரோ
வதுவேயாமாறிதுவோகச்சூராலக்கோயிலம்மானே.

அன்னமன்னும்வயல்சூழ்கச்சூராலக்கோயிலம்மானை
முன்னமுன்னுமனத்தாரூரனாரூரன்பேர்முடிவைத்த
மன்னுபுலவன்வயனாவலர்கோன்செஞ்சொனாவன்வன்றொண்டன்
பன்னுதமிழ்நூன்மாலைவல்லாரவரென்றலைமேற்பயில்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர். விருந்திட்டநாதர் - தேவியார். கன்னியுமைமாது. திருப்பதிகம். க.

வந்தித்திறைவரருளாற்போய்மங்கைபாகர்மகிழ்ந்தவிட
முந்தித்தொண்டரெதிர்கொள்ளப்புக்குமுக்கட்பெருமானைச்
சிந்தித்திடவந்தருள்செய்கழலபணிந்துசெஞ்சொற்றொடைபுனைந்தே
யந்திச்செக்கர்ப்பெருகொளியாரமருங்காஞ்சிமருங்கணைந்தார்.

(இ-ள்.) வந்தித்திறைவரருளாற்போய் = அவர் திருக்கச்சூரில் சிவபிரானை வணங்கி அவரருளால்அங்குநின்றுமகன்று; மங்கைபாகர்மகிழ்ந்தவிடம் = அச்சிவபிரான் மகிழ்ந்து வீற்றிருக்கும் பிறதிருப்பதிகளையும்; முந்தித்தொண்டரெதிர்கொள்ளப்புக்கு = முன்னே அடியார் கூட்டங்கள் எதிர்கொள்ளச்சென்று; சிந்தித்திடவந்தருள்செய்முக்கட்பெருமானைக்கழல்பணிந்து = அடியார்கள் சிந்திக்குங்கால் அவர்க்கு வெளிப்பட்டுவந்தருள்செய்கின்றசிவபிரான்திருவடிகளில் வணங்கி; செஞ்சொற்றொடைபுனைந்து = செவ்வியசொற்களமைந்தபதிகத்தைச்சாத்தி; அந்திச்செக்கர்ப்பெருகொளியார் = மாலைக்காலத்துச்செக்கர்போலும்மிக்கவொளியையுடையசிவபிரான்; அமருங்காஞ்சிமருங்கணைந்தார் = வீற்றிருந்தருளும் காஞ்சிபுரத்தின்சமீபத்தில்வந்தார்— எ-று. ஏ-அசை.

அடியார் சிந்திக்குங்கால் அவர்குறைநிரப்பவெளிப்பட்டுவரும்பெருங்கருணை தோன்றவந்தருள்செய்கழலென்றார். (கஅரு)

வேறு.

அன்றுவெண்ணெய்நல்லூரிலரியுமயனுந்தொடர்வரிய
வென்றிமழவெள்விடையுயர்த்தார்வேதமுதல்வராய்வந்து
நின்றுசவைமுன்வழக்குரைத்துநேரேதொடர்ந்தாட்கொண்டவர்தா
மின்றிங்கெய்தப்பெற்றோமென்றெயில்சூழ்காஞ்சிநகர்வாழ்வார்.

(இ-ள்.) அன்றுவெண்ணெய்நல்லூரில் = அந்நாளில் திருவெண்ணெய் நல்லூரில்; அரியுமயனுந்தொடர்வரிய = திருமாலும் பிரமனும் தேடியறியாத; வென்றிமழவெள்விடையுயர்த்தார் = வெற்றிதங்கிய இளமையினையுடைய வெள்ளேற்றைக் கொடியாகக் கொண்ட சிவபிரான்; வேதமுதல்வராய்வந்து = மறையவராய்வந்து; நின்றுசவைமுன்வழக்குரைத்து = சபையார் முன்னின்று வழக்குச்சொல்லி; நேரேதொடர்ந்தாட்கொண்டவர்தாம் = தாமே வலிந்தாட்கொண்டவன்றொண்டர்; இன்றிங்கெய்தப்பெற்றோமென்று = இன்றைக்கு இவ்விடத்து வரப்பெற்றுக்கொண்டோமென்று; எயில்சூழ்காஞ்சி நகர்வாழ்வார் = மதில்சூழ்ந்த காஞ்சிநகரத்தில் வாழ்கின்றவர்கள்.— எ-று. (கஅசு)

மல்குமகிழ்ச்சிமிகப்பெருகமறுகுமணித்தோரணநாட்டி
யல்குதீபநிறைகுடங்களகிலின்றூபங்கொடியெடுத்துச்
செல்வமனைகளலங்கரித்துத்தெற்றியாடன்முழவதிரப்
பல்குதொண்டருடன்கூடிப்பதியின்புறம்போயெதிர்கொண்டார்.

(இ-ள்.) மல்குமகிழ்ச்சிமிகப்பெருக = நிறைந்த மகிழ்ச்சியானது மீக்கூர; மறுகுமணித்தோரணநாட்டி = வீதிகள்தோறும் அழகிய தோரணங்களைத்தூக்கி; அல்குதீப நிறைகுடங்கள் = நிலைபெற்ற தீபங்களையும் நிறைகுடங்களையும்; அகிலின்றூபங்கொடியெடுத்து = அகிற்கட்டைகளினாலாகிய தூபங்களையும் கொடியாடைகளையும் எடுத்துக்கொண்டு; செல்வமனைகளலங்கரித்து = வளந்தங்கிய மனைகளை யலங்காரஞ்

செய்து; தெற்றியாடன் முழவதிர = சதுக்கங்களிலே மகளிர்கள் நிருத்தஞ்செய்கி ன்ற முழவம் ஒலிக்க; பல்குதொண்டருடன்கூடி = பரம்பிய அடியார் குழாத்தோடு கூடி; பதியின் புறம்போயெதிர்கொண்டார் = அக்காஞ்சிநகரத்திற்குப்புறம்பேபோய் நம்பியாரூரரை எதிர்கொண்டார்கள்.—எ-று. இவ்விரண்டும் குளகம். (சஅ௫)

ஆண்டநம்பியெதிர்கொண்டவடியார்வணங்கவெதிர்வணங்கி
நீண்டமதிட்கோபுரங்கடந்துநிரைமாளிகைவீதியிற்போந்து
பூண்டகாதல்வாழ்த்தினுடன்புனைமங்கலதூரியமொலிப்ப
வீண்டுதொண்டர்பெருகுதிருவேகாம்பரஞ்சென்றெய்தினார்.

(இ-ள்.) ஆண்டநம்பி = நம்பியாரூரர்; எதிர்கொண்டவடியார்வணங்க = தம் மை எதிர்கொண்டுவந்த அடியார்கள் தொழ; எதிர்வணங்கி = அவரைத்தாமும் எதி ரேவணங்கி; நீண்டமதிட்கோபுரங்கடந்து = நீண்டமதிலையுடைய கோபுரத்தைக்கட ந்து; நிரைமாளிகைவீதியிற்போந்து = வரிசையான திருமாளிகை வீதியிற்சென்று; பூண்டகாதல் வாழ்த்தினுடன் = அடியார்செய்யும் பெருவிருப்போடுகூடிய வாழ்த் தொலியுடன்; புனைமங்கலதூரியமொலிப்ப = மங்கலத்தங்கிய வாத்தியம் முழங்க; ஈண்டுதொண்டர்பெருகு = நெருங்கிய அடியார்குழாம் மிக்கிருக்கின்ற; திருவேகாம் பரஞ்சென்றெய்தினார் = திருவேகாம்பரம் என்னும் ஆலயத்தை யடைந்தருளினார்.— எ-று. திருமாளிகைவீதியென்றது-திருமாளிகைப்பத்தியை. அது கோபுரத்தினுள்ளிரு க்கும் பிராகாரம் (கஅசு)

ஆழிநெடுமாலயன்முதலாமமரர்நெருங்குகோபுரமுன்
பூழியுறமண்மிசைமேனிபொருந்தவணங்கிப்புகுந்தருளிச்
சூழுமணிமாளிகைபலவுந்தொழுதுவணங்கிவலங்கொண்டு
வாழிமணிப்பொற்கோயிலினுள்வந்தாரணுக்கவன்றொண்டர்.

(இ-ள்.) ஆழிநெடுமாலயன் முதலாம் = சக்கரயேந்திய திருமால் பிரமன் மு தலாகிய; அமரர்நெருங்கு கோபுரமுன் = தேவர்கள் நெருங்கியிருக்கும் கோபுரத் தின்முன்; பூழியுறமண்மிசைமேனி பொருந்தவணங்கிப்புகுந்தருளி = புழுதியுறுதற் கேதுவாகத் திருமேனிநிலமுறவணங்கி உள்ளேபுகுந்து; சூழுமணிமாளிகைபலவும்= ஆலயத்தைச்சூழ்ந்த அழகிய திருமாளிகைகள் பலவற்றையும்; தொழுதுவணங்கி, வல ங்கொண்டு = கைகூப்பித்தொழுது நிலமுறவணங்கி வலமாகவந்து; மணிப்பொற் கோயிலினுள் = மணிகளழுத்திய பொன்மயமான திருக்கோயிலினுள்; வந்தாரணுக் கவன்றொண்டர் = நம்பியாரூரர் வந்தருளினார்.—எ-று. வாழி-அசை. (கஅஎ)

கைகள்கூப்பிமுன்னணைவார்கம்பையாறுபெருகிவர
வையர்தமக்குமிகவஞ்சியாரத்தழுவிக்கொண்டிருந்த
மையுலாவுங்கருநெடுங்கண்மலையாளென்றும்வழிபடுபூஞ்
செய்யகமலச்சேவடிக்கீழ்த்திருந்துகாதலுடன்வீழ்ந்தார்.

(இ-ள்.) கைகள்கூப்பிமுன்னணைவார் = கைகளைச்சிரமேற்கூப்பிக்கொண்டு திருமுன்னே செல்கின்ற நம்பியாரூரர்; கம்பையாறுபெருகிவர = கம்பாநதியானது

பெருக்கெடுத்துவர ; ஐயர்தமக்குமிகவஞ்சி = தாம்வழிபடும் சிவபிரானுக்கு அதனால் இடையூறுவருமென்று மிகப்பயந்து ; ஆரத்தழுவிக்கொண்டிருந்த = பொருந்தக் கட்டித்தழுவிக்கொண்டிருந்த ; மையுலாவுங்கருநெடுங்கண்மலையாள் = மைதீட்டிய கரிய நீண்டகண்களையுடைய பார்ப்பதியார் ; என்றும்வழிபடுபூஞ்செய்யகமலச்சேவடிக்கீழ் = எந்நாளும் வழிபாடுசெய்கின்ற தாமரைமலர்போலுஞ் சிவந்ததிருவடிக்கீழ் ; திருத்துகாதலுடன் வீழ்ந்தார் = திருந்தமான பேரன்போடு வணங்கினார்.—எ-று. (கஅஅ)

சிவார்ச்சனைக்கிடையூறுறாது சிவபிரானைத்தழுவிக்கொண்ட பார்ப்பதியாரதுபத்திமைவிளக்கிய ஆரத்தழுவிக்கொண்ட என்றும், எவ்வறத்தினும் சிவார்ச்சனையின் பெருமைமிகுதி விளக்கியஎன்றும்வழிபடுமென்றுங்கூறினர்.

வீழ்ந்துபோற்றிப்பரவசமாய்விம்மியெழுந்துமெய்யன்பால்
வாழ்ந்தசிந்தையுடன்பாடிமாறாவிருப்பிற்புறம்போந்து
சூழ்ந்ததொண்டருடன்மருவுநாளிறொல்லைக்கச்சிநகர்த்
தாழ்ந்தசடையாராலயங்கள்பலவுஞ்சார்ந்துவணங்குவார்.

(இ-ள்.) வீழ்ந்துபோற்றிப்பரவசமாய் விம்மியெழுந்து = நிலமுறவீழ்ந்து வணங்கித்துதித்து ஆனந்தபரவசத்தால் விம்மியெழுந்து ; மெய்யன்பால் வாழ்ந்தசிந்தையுடன்பாடி = மெய்யன்பினால் வாழ்வடைந்த திருவுள்ளத்தோடு திருப்பதிகம் பாடி ; மாறாவிருப்பிற்புறம்போந்து = நீங்காத பெருவிருப்போடு புறம்பேசென்று ; சூழ்ந்ததொண்டருடன் மருவுநாளில் = தம்மைச்சூழ்ந்த அடியார்களுடனிருக்குநாளில் ; தொல்லைக்கச்சிநகர்த்தாழ்ந்த சடையாராலயங்கள்பலவும் = பழைய காஞ்சிநகரத்தில் தாழ்ந்த சடைமுடியையுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும் ஆலயங்கள் பலவற்றையும் ; சார்ந்து வணங்குவார் = அடைந்து வணங்குவாராயினார்.—எ-று. (கஅகூ)

மெய்யன்பாற் பேரானந்தமடைந்த திருவுள்ளமென்பதுவிளக்கிய வாழ்ந்தசிந்தையென்றும், அழியாதவிம்மிதங்களோடு தன்னுக்குமுருபம் பிரளயத்தெஞ்சி நிற்றலிற்றொல்லைக்காஞ்சி யென்றுங்கூறினர். விம்முதல் - அழுகைமிகுதியாலுண்டாகி முகத்தின்கண்ணும் உடம்பின்கண்ணுங் காட்டுமோர்குறி.

சீரார்காஞ்சிமன்னுதிருக்காமக்கோட்டஞ்சென்றிறைஞ்சி
நீரார்சடையாரமர்ந்தருளுநீடுதிருமேற்றளிமேவி
யாராவன்பிற்பணிந்தேத்தியளவினுந்தாவொண்சுடராம்
பாரார்பெருமைத்திருப்பதிகம்பாடிமகிழ்ந்துபரவினார்.

(இ-ள்.) சீரார்காஞ்சிமன்னு திருக்காமக்கோட்டஞ் சென்றிறைஞ்சி=அவர் சிறப்பமைந்த காஞ்சிபுரத்திலிருக்கின்ற திருக்காமக்கோட்டத்தைச்சென்று வணங்கி; நீரார்சடையாரமர்ந்தருளும் = கங்கைதங்கிய சடைமுடியையுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும்; நீடுதிருமேற்றளிமேவி = உயர்ந்த திருமேற்றளியையடைந்து ; ஆராவன்பிற்பணிந்தேத்தி = அடங்காத பேரன்பினால் வணங்கித்துதித்து ; அளவினுந்தாவொண்சுடராம் = அளவுபடாத நுந்தாவொண்சுடரொன்னும் ; பாரார்பெருமைத்திருப்பதிகம்பாடிமகிழ்ந்துபரவினார் = உலகில்நிறைந்தபெருமையினையுடையதிருப்பதிகத்தைப்பாடிமகிழ்ந்து துதித்தார்.—எ-று. (ககூ0)

கச்சிக்காமக்கோட்டம் சத்திபீடங்களுள் உயர்ந்ததென்பது விளக்கிய காமக்கோட்டஞ்சென்றிறைஞ்சி என்றார்.

திருமேற்றளி. பண். நட்டராகம்.
திருச்சிற்றம்பலம்.

நுந்தாவொண்சுடரே நுனையேநினைந்திருந்தேன்
வந்தாய்போயறியாய்மனமேபுகுந்துநின்ற
சிந்தாயெந்தைபிரான்றிருமேற்றளியுறையு
மெந்தாயுன்னையல்லாலினியேத்தமாட்டேனே.

பாரூர்பல்லவனூர்மதிட்காஞ்சிமாநகர்வாய்ச்
சீரூருந்திருமேற்றளிச்சிவனை
யாரூரன்னடியானடித்தொண்டனாரூரன்சொன்ன
சீரூர்பாடல்வல்லார்சிவலோகஞ்சேர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர். திருமேற்றளிநாயகர். திருப்பதிகம். உ.

ஓணகாந்தன்றளிமேவுமொருவர்தம்மையுரிமையுடன்
பேணியமைந்ததோழமையாற்பெருகுமடிமைத்திறம்பேசிக்
காணமோடுபொன்வேண்டிநெய்யும்பாலுங்கலைவிளங்கும்
யாணர்ப்பதிகமெடுத்தேத்தியெண்ணிணிதிபெற்றினிதிருந்தார்.

(இ-ள்.) ஓணகாந்தன்றளிமேவுமொருவர்தம்மை = திருவோணகாந்தன்றளியில்வீற்றிருந்தருளுஞ்சிவபிரானை; உரிமையுடன்பேணியமைந்ததோழமையால் = உரிமையோடுவிரும்பிந்தமக்குண்டாகியதோழமையால்; பெருகுமடிமைத்திறம்பேசி = மிக்க அடிமைத்திறத்தை அப்பதிகத்துட் குறித்து; காணமோடுபொன்வேண்டி =பொற்காசோடு பொன்னையும்விரும்பி; நெய்யும்பாலுங்கலைவிளங்கும் யாணர்ப்பதிகமெடுத்தேத்தி = நெய்யும்பாலுமென்னுந்தொடக்கத்தையுடைய செய்யுளால்விளங்கியபுதியதிருப்பதிகத்தை எடுத்துத்துதித்து; எண்ணிநிதிபெற்றினிதிருந்தார் = அளவில்லாத நிதியைப்பெற்று அவ்விடத்தில் இனிதாக வீற்றிருந்தருளினார்.—எ-று. (கசுக)

---

திருவோணகாந்தன்றளி - பண். இந்தளம்.
திருச்சிற்றம்பலம்.

நெய்யும்பாலுந்தயிருங்கொண்டுநித்தல்பூசனைசெய்யலுற்றார்
கையிலொன்றுங்காணமில்லைகழலடிதொழுதுய்யினல்லா
லைவர்கொண்டிங்காட்டவாடியாழ்குழிப்பட்டழுந்துவேற்
குய்யுமாறென்றருளிச்செய்யீரோணகாந்தன்றளியுளீரே.

ஓவணமேலெருதொன்றேறுமோணகாந்தன்றளியுளார்தா
மாவணஞ்செய்தாளுங்கொண்டரைதுகிலொடுபட்டுவீக்கிக்
கோவணமேற்கொண்டுவேடங்கோவையாகவாரூரன்சொன்ன
பாவணத்தமிழ்பத்தும்வல்லார்பறையுந்தாஞ்செய்தபாவந்தானே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர். ஏணகாந்தேசுவரர்.

அங்கணமர்வாரனேகதங்காபதத்தையெய்தியுள்ளணைந்து
செங்கண்விடையார்தமைப்பணிந்துதேனெய்புரிந்தென்றெடுத்ததமிழ்
தங்குமிடமாமெனப்பாடித்தாழ்ந்துபிறவுந்தானங்கள்
பொங்குகாதலுடன்போற்றிப்புரிந்தப்பதியிற்பொருந்துநாள்.

(இ-ள்.) அங்கணமர்வாரனேகதங்காபதத்தையெய்தியுள்ளணைந்து = அத்திருப்பதியில் வீற்றிருந்தருளும் நம்பியாரூரர் திருக்கச்சியனேகதங்காபதம் என்னும் திருப்பதியையடைந்து உள்ளேசென்று; செங்கண்விடையார் தமைப்பணிந்து = சிவந்த கண்ணையுடைய இடபத்தை வாகனமாகக்கொண்ட சிவபிரானை வணங்கி; தேனெய்புரிந்தென்றெடுத்ததமிழ் = தேனெய்புரிந்தென்று முதலெடுத்த திருப்பதிகத்தை; தங்குமிடமாமெனப்பாடித்தாழ்ந்து = அவர்தங்குமிடமிதுவெனறுபாடிவணங்கி; பிறவுந்தானங்கள் பொங்குகாதலுடன்போற்றி = பிறதிருப்பதிகளையும் மிக்க விருப்போடு துதித்து; புரிந்தப்பதியிற்பொருந்துநாள் = விரும்பிஅத்திருப்பதியில்வீற்றிருந்தருளும்நாளில்.—எ-று. (௧௬௨)

திருக்கச்சியனேகதங்காபதம். பண். இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தேனெய்புரிந்துழல்செஞ்சடையெம்பெருமானதிடந்திகழைங்கணையக்
கோனையெரித்தெரியாடியிடங்குலவானதிடங்குறையாமறையா
மானையிடத்ததோர்கையனிடமதமாறுபடப்பொழியும்மலைபோ
லானையுரித்தபிரானதிடங்கலிக்கச்சியனேகதங்காபதமே.

வீடுபெறப்பலவூழிகணின்றுநினைக்குமிடம்வினைதீருமிடம்
பீடுபெறப்பெரியோரதிடங்கொண்டுமேவினர்தங்களைக்காக்குமிடம்
பாடுமிடத்தடியான்புகழூரனுரைத்தவிம்மாலைகள்பத்தும்வல்லார்
கூடுமிடஞ்சிவலோகனிடங்கலிக்கச்சியனேகதங்காபதமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர். காவதேசுவரர். திருப்பதிகம். ௧.

பாடவிசையும்பணிபிறைற் பாவைதழுவக்குழைகம்ப
ராடன்மருவுஞ்சேவடிகள்பரவிப்பிரியாதமர்கின்றார்
நீடமுதூர்ப்புறத்திறைவர்நிலவும்பதிதொழவிருப்பான்
மாடநெருங்குவன்பார்த்தான்பனங்காட்டூரில்வந்தடைந்தார்.

(இ-ள்.) பாடலிசையும் பணியினால் = பதிகம் பாடுதற்குடன்படும் திருத்தொண்டினால் ; பாவைதழுவக்குழைகம்பர் = உமாதேவியார் தழுவக்குழைந்த ஏகாம்பரநாதருடைய ; ஆடன்மருவுஞ் சேவடிகள் பரவி = நிருத்தஞ்செய்தருளும் திருவடிகளைத்துதித்து ; பிரியாதமர்கின்றார் = நீங்காது அங்குவீற்றிருக்கின்ற நம்பியாரூரர் ; நீடமூதூர்ப்புறத்து = உயர்ந்த அக்காஞ்சிநகரின்புறம்பே ; இறைவர்நிலவும்பதிகடொழவிருப்பால்=சிவபிரான் வீற்றிருந்தருளும் திருப்பதிகளை வணங்க விருப்போடு ; மாடநெருங்குவன்பார்த்தான்பனங்காட்டூரில்வந்தடைந்தார் = மாடங்கள் நெருங்கிய வன்பார்த்தான் பனங்காட்டூர் என்னும் திருப்பதியில் வந்தடைந்தார்.—எ-று. (கசுங)

செல்வமல்குதிருப்பனங்காட்டூரிற்செம்பொற்செழுஞ்சுடரை
யல்லலறுக்குமருமருந்தைவணங்கியன்புபொழிகண்ணீர்
மல்கநின்றுவிடையின்மேல்வருவாரொனும்வண்டமிழ்ப்பதிக
நல்லவிசையினுடன்பாடிப்போந்துபுறம்புநண்ணுவார்.

(இ-ள்.) செல்வமல்குதிருப்பனங்காட்டூரில் = அவர்செல்வம் நிறைந்தவன்பார்த்தான் பனங்காட்டூரில் வீற்றிருந்தருளும் ; செம்பொற்செழுஞ்சுடரை = சிவந்த பொன்னிறமான செழுமைதங்கிய ஒளிவடிவனை ; அல்லலறுக்குமருமருந்தைவணங்கி= துயரத்தைநீக்கும் அருமருந்து போல்வாரைத்தொழுது ; அன்பு பொழிகண்ணீர்மல்க நின்று = அன்புகாரணமாகப்பொழிகின்ற ஆனந்தபாஷ்பஞ்சொரியத்திருமுன்னின்று ; விடையின்மேல் வருவாரொன்னும் = விடையின்மேல்வருவாரொன்னுமுதலையுடைய ; வண்டமிழ்ப்பதிகநல்லவிசையினுடன்பாடிப்போய் = வளவியதமிழ்ப்பதிகத்தைநல்ல இசையோடுபாடிச்சென்று ; புறம்புநண்ணுவார் = அத்திருப்பதியின்புறம்பே செல்லுவாராயினார்.—எ-று. (கசுச)

திருவன்பார்த்தான்பனங்காட்டூர். பண். சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

விடையின்மேல்வருவானைவேதத்தின்பொருளானை
அடையிலன்புடையானையாவர்க்குமறிவொண்ணா
மடையில்வாளைகள்பாயும்வன்பார்த்தான்பனங்காட்டூர்ச்
சடையிற்கங்கைவைத்தானைச்சாராதார்சார்வென்னே.

பாரூரும்பனங்காட்டூர்ப்பவளத்தின்படியானைச்
சீரூருந்திருவாரூர்ச்சிவன்பேர்சென்னியில்வைத்த
வாரூரனடித்தொண்டனடியன்சொலடிநாய்ச்சொ
லூரூரன்றமிழுரைசெய்வாருயர்வானத்துயர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர். பனங்காட்டீசர். தேவியார். அமுதவல்லியம்மை. திருப்பதிகம் க.

மன்னுதிருமாற்பேறணைந்துவணங்கிப்பரவித்திருவல்லந்
தன்னுளெய்திப்பிறைஞ்சிப்போய்ச்சாருமேல்பாற்சடைக்கற்றைப்
பின்னன்முடியாரிடம்பலவும்பேணிவணங்கிப்பெருந்தொண்டர்
சென்னிமுகிறேய்தருங்குவட்டுத்திருக்காளத்திமலைசேர்ந்தார்.

(இ-ள்.) மன்னுதிருமாற்பேறணைந்துவணங்கிப்பரவி = நிலைபெற்ற திருமாற்பேறென்னும்திருப்பதியையடைந்து வணங்கித்துதித்து; திருவல்லந்தன்னுளெய்திப்பிறைஞ்சிப்போய்=திருவல்லமென்னுந் திருப்பதியையடைந்து வணங்கிச்சென்று; சாருமேல்பால் = அதற்குமேல்பாலிருக்கும்; சடைக்கற்றைப்பின்னன்முடியாரிடம்பலவும்பேணிவணங்கி = பின்னலோடுகூடிய கூட்டமானசடைமுடியையுடைய சிவபிரான் திருப்பதிகள் பலவற்றையும் விரும்பித்தொழுது; பெருந்தொண்டர் = நம்பியாரூரர்; சென்னிமுகிறேய்தருங்குவட்டு = சிகரங்களில்மேகங்கள்தவழுங் கொடுமுடியையுடைய; திருக்காளத்திமலை சேர்ந்தார் = திருக்காளத்திமலையை யடைந்தருளினார்.—எ-று. (ககரு)

தடுக்கலாகாப்பெருங்காதற்றலைநின்றருளுங்கண்ணப்ப
ரிடுக்கண்களைந்தாட்கொண்டருளுமிறைவர்மகிழ்ந்தகாளத்தி
யடுக்கல்சேரவணைந்துபணிந்தருளாலேறியன்பாறு
மடுப்பத்திருமுன்சென்றெய்திமலைமேன்மருந்தைவணங்கினார்.

(இ-ள்.) தடுக்கலாகாப்பெருங்காதற்றலைநின்றருளுங்கண்ணப்பர் = அவர்அடங்காத பேரன்பின் வழியில்நிற்கின்ற கண்ணப்பநாயனாரது; இடுக்கண்களைந்தாட்கொண்டருளும் = பிறவிநோயைநீக்கித் தடுத்தாட்கொண்டருளும்; இறைவர்மகிழ்ந்த காளத்தியடுக்கல்சேரவணைந்து = சிவபிரான்மகிழ்ந்துவீற்றிருந்தருளுந்திருக்காளத்திமலையைப் பொருந்தவடைந்து; பணிந்தருளாலேறி = வணங்கித் திருவருளினால் மலைமேலேறி; அன்பாறுமடுப்பத்திருமுன்சென்றெய்தி = அன்பாகிய ஆறுனதுதேங்கத் திருமுன்னேவந்து; மலைமேன்மருந்தை வணங்கினார் = மலையின்மேலுள்ள மருந்துபோலுஞ் சிவபிரானைத் தொழுதார்.—எ-று. (ககசு)

வணங்கியுள்ளங்களிகூரமகிழ்ந்துபோற்றிமதுரவிசை
யணங்குசெண்டாடெனும்பதிகம்பாடியன்பாற்கண்ணப்பர்
மணங்கொண்மலர்ச்சேவடிபணிந்துவாழ்ந்துபோந்துமன்னுபதி
யிணங்குதொண்டருடன்கெழுமியின்புற்றிருக்குமந்நாளில்.

(இ-ள்.) வணங்கியுள்ளங்களிகூரமகிழ்ந்துபோற்றி = அவர்பணிந்து திருவுள்ளத்தின்கண் களிப்புமிக்கூர மகிழ்ச்சியடைந்து துதித்து; மதுரவிசையணங்கு செண்டாடெனும் பதிகம்பாடி = மதுரமான இசையோடுகூடிய செண்டாடென்னும் முதலையுடைய திருப்பதிகத்தைப்பாடி; அன்பாற்கண்ணப்பர் மணங்கொள் மலர்ச்சேவடி பணிந்து=பேரன்பினாற் கண்ணப்பநாயனாரது மணந்தங்கிய மலர்போலும் மிருதுவான திருவடிகளைவணங்கி; வாழ்ந்துபோந்து=பேரானந்த வாழ்வடைந்து அங்குநின்றும்

மீண்டு ; மன்னுபதியிணங்கு தொண்டருடனெழுமி = நிலைபெற்ற அத்திருப்பதியிற் கூடிய அடியார்களோடு கலந்திருந்து ; இன்புற்றிருக்குமந்நாளில்=இன்பமடைந்திருக்கும் அந்நாளில்.—எ-று. (கஎ)

---

## திருக்காளத்தி. பண். நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

செண்டாடும்விடையாய்சிவனேயென்செழுஞ்சுடரே
வண்டாடுங்குழலாளுமைபாகமகிழ்ந்தவனே
கண்டார்காதலிக்குங்கணநாதனெங்காளத்தியா
யண்டாவுன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே.

காரூரும்பொழில்சூழ்கணநாதனெங்காளத்தியு
ளாராவின்னமுதையணிநாவலாரூரன்சொன்ன
சீரூர்செந்தமிழ்கள்செப்புவார்வினையாயினபோய்ப்
பேராவிண்ணுலகம்பெறுவர்பிழைப்பொன்றிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர். காளத்திநாதர். தேவியார். ஞானப்பூங்கோதையம்மை. திருப்பதிகம். ௧

வடமாதிரத்துப்பருப்பதமுந்திருக்கேதாரமலைமுதலா
விடமாவரனார்தாமுவந்தவெல்லாமிங்கேயிருந்திறைஞ்சி
நடமாடியசேவடியாரைநண்ணினார்போலுண்ணிறைந்து
திடமாங்கருத்திற்றிருப்பதிகம்பாடிக்காதல்சிறந்திருந்தார்.

(இ-ள்) வடமாதிரத்துப் பருப்பதமுந்திருக்கேதாரமலைமுதலா = வடதிசைக்கணுள்ள ஸ்ரீசைலமும் திருக்கேதாரமலையும் முதலாக ; இடமாவரனார் தாமுவந்த=திருப்பதிகளாகச் சிவபிரான்மகிழ்ந்து வீற்றிருந்தருளும் ; எல்லாமிங்கே யிருந்திறைஞ்சி =எல்லாத்திருப்பதிகளையும் இத்திருக்காளத்தி மலையிலேயே யிருந்துவணங்கி; நடமாடியசேவடியாரை=நிருத்தஞ்செய்தருளும் சிவந்ததிருவடிகளையுடைய அத்தலங்களில் வீற்றிருந்தருளும் சிவபிரானை; நண்ணினார்போலுண்ணிறைந்து = அடைந்து தரிசித்தவர் போலத் திருவுள்ளத்திலே நிறைவடைந்து ; திடமாங்கருத்திற்றிருப்பதிகம்பாடி = உறுதிபொருந்துகின்ற கருத்துடன்திருப்பதிகத்தைப்பாடி ; காதல்சிறந்திருந்தார்=அன்புமீக்கூர்ந்திருந்தருளினார்.—எ-று. (கக௮)

## ஸ்ரீபருப்பதம். பண். நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

மானும்மரையினமும்மயிலினமுங்கலந்தெங்குந்
தாமேமிகமேய்ந்துதடஞ்சுனைநீர்களைப்பருகிப்
பூமாமரமுரிஞ்சிப்பொழிலூடேசென்றுபுக்குத்
தேமாம்பொழில்நீழற்றுயில்சீபருப்பதமலையே.

நல்லாரவர்பலர்வாழ் திருவயல்நவல்லூரன்
செல்லலுறவரியசிவன்சீபருப்பதமலையை
யல்லலவை தீரச்சொன்னதமிழ்மாலைகள்வல்லா
ரொல்லைச்செலவுயர் வானகமாண்டங்கிருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர். பர்வதநாதர். தேவியார். பர்வதநாயகியம்மை. திருப்பதிகம். க

---

## திருக்கேதாரம். பண். நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

வாழ்வாவதுமாயம்மிதுமண்ணாவதுதிண்ணம்
பாழ்போவதுபிறவிக்கடல்பசிநோய்செய்தபறிதான்
தாழாதறஞ்செய்ம்மின்றடங்கண்ணான்மலரோனுங்
கீழ்மேலுறநின்றான்றிருக்கேதாரமெனீரே.

நாவின்மிசையரையன்னொடுதமிழ்ஞானசம்பந்த
னாவர்சிவனடியார்களுக்கடியானடித்தொண்டன்
தேவன்திருக்கேதாரத்தையூரனுரைசெய்த
பாவின்றமிழ்வல்லார்பரலோகத்திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர். கேதாரேசுவரர். தேவியார். கேதாரேசுவரியம்மை. திருப்பதிகம். உ.

அங்குச்சிலநாள்வைகிப்பின்னருளாற்போந்துபொருவிடையார்
தங்குமிடங்களெனைப்பலவுஞ்சார்ந்துதாழ்ந்துதமிழ்பாடிப்
பொங்குபுணரிக்கரைமருங்குபுவியுஞ்சிவலோகம்போலத்
திங்கண்முடியாரமர்ந்ததிருவொற்றியூரைச்சென்றடைந்தார்.

(இ-ள்) அங்குச்சிலநாள் வைகிப்பினருளாற்போந்து = அவர் அத்திருக்காளத்தியிற்சிலநாள் வீற்றிருந்து பின்பு சிவபிரான் திருவருளினாலே சென்று; பொருவிடையார் தங்குமிடங்களெனைப்பலவும்=பொராநின்ற இடபத்தையுடைய அச்சிவபிரான் வீற்றிருந்தருளும் பிறதிருப்பதிகள் பலவற்றையும்; சார்ந்துதாழ்ந்து தமிழ்பாடி=அடைந்துவணங்கித் திருப்பதிகங்கள்பாடி; பொங்குபுணரிக்கரைமருங்கு = பொலிவினையுடைய கடற்கரையில்; புவியுஞ்சிவலோகம்போல = மண்ணுலகமும் சிவலோகம்போல; திங்கண் முடியாரமர்ந்த = இளம்பிறைசூடிய சடைமுடியையுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும்; திருவொற்றியூரைச் சென்றடைந்தார் = திருவொற்றியூரென்னும் திருப்பதியை யடைந்தருளினார்.—எ-று. ஏனைஎனையென விகாரமாயிற்று. (௧௧௧)

அண்ணலொருடர்ந்தாவணங்காட்டியாண்டநம்பியெழுந்தருள
வெண்ணில்பெருமையாதிபுரியிறைவரடியாரெதிர்கொள்வார்

வண்ணவீதிவாயிறொறும்வாழைகமுகுதோரணங்கள்
சுண்ணநிறைபொற்குடந்தூபதீபமெடுத்துத்தொழவெழுங்கால்.

(இ-ள்.) அண்ணலொடர்ந்தாவணங்காட்டி = சிவபிரான் வழக்குத்தொடர்ந்து அடிமையோலையைக்காட்டி; ஆண்டநம்பியெழுந்தருள=தடுத்தாட்கொண்ட நம்பியாரூரர் எழுந்தருளிவர ; எண்ணில்பெருமையாதிபுரி = அடங்காத பெருமையையுடைய திருவொற்றியூரில்வாழும் ; இறைவரடியாரெதிர்கொள்வார் = சிவபிரான்தொண்டர்கள் அவரை எதிர்கொள்வாராய் ; வண்ணவீதிவாயிறொறும் = அழகிய திருவீதியுள்ளனவாயில்கடோறும் ; வாழைகமுகு தோரணங்கள் = வாழைகள் கமுகுகள் தோரணங்கள் இவைகளைநிறுத்தி ; சுண்ணநிறைபொற்குடந்தூபந் தீடமெடுத்துத்தொழவெழுங்கால் = பொற்சுண்ணங்களையும் நிறைகுடங்களையும் தூபங்களையும் தீபங்களையும் எடுத்துக்கொண்டு அவரை எதிர்கொள்ளவரும்பொழுது.—எ-று. (உ00)

வரமங்கலநல்லியமுழங்கவாசமாலையணியரங்கிற்
புரமங்கையர்கணடமாடப்பொழியும்வெள்ளப்பூமாரி
யரமங்கையருமமரர்களுஞ்வீசவன்பருடன்புகுந்தார்
பிரமன்றலையிற்பலியுவந்தபிரானுர்விரும்புபெருந்தொண்டர்.

(இ-ள்.) வரமங்கலநல்லியமுழங்க=மேலான மங்கலகரமுள்ள நல்லவாத்தியங்களொலிக்க ; வாசமாலையணியரங்கிற்புரமங்கையர்கணடமாட = வாசனைவீசுகின்ற மாலைகளையணிந்த ஆடரங்குகளிலே அந்நகரத்திலுள்ள மகளிர்கள் திருத்தஞ்செய்ய ; பொழியும் வெள்ளப்பூமாரி யரமங்கையருமமரர்களும்வீச=பொழியாநின்ற தொகுதியானமலர்மழையாகிய வெள்ளத்தைத் தேவமாதர்களுந் தேவர்களுஞ்சொரிய ; பிரமன்றலையிற் பலியுவந்தபிரானுர்விரும்பு பெருந்தொண்டர்=பிரமனது தலையிலே பலியை விரும்பிய சிவபிரான் உவந்தாட்கொண்ட பெரியதொண்டராகிய நம்பியாரூரர் ; அன்பருடன் புகுந்தார்=அடியார் கூட்டத்துடன் புகுந்தருளினுர்.—எ-று. (உ0க)

ஒற்றியூரினுமையோடுங்கூடநின்றருயர்தவத்தின்
பற்றுமிக்கதிருத்தொண்டர்பரந்தகடல்போல்வந்தீண்டிச்
சுற்றுமணைந்துதுதிசெய்யத்தொழுதுதம்பிரானன்பர்
கொற்றமழவேறுடையவர்தங்கோயில்வாயிலெய்தினுர்.

(இ-ள்.) ஒற்றியூரினுமையோடுங்கூடநின்றார் = திருவொற்றியூரில் பார்ப்பதியாரோடுகூட வீற்றிருந்தருளும் சிவபிரானுடைய ; உயர்தவத்தின் பற்றுமிக்க திருத்தொண்டர் = உயர்ந்ததவப்பற்றுமிக்க அடியார்கள் ; பரந்தகடல்போல் வந்தீண்டிச்சுற்றுமணைந்து துதிசெய்ய = பரவியகடலைப்போல்வந்து கூடி நாற்புறமுஞ்சூழ்ந்து துதிக்க ; தொழுது தம்பிரானன்பர் = சிவபிரான் அன்பராகிய நம்பியாரூரர் அவர்களை வணங்கி ; கொற்றமழவேறுடையவர்தங்கோயில் வாயிலெய்தினுர் = வெற்றிதங்கிய இளமையாகிய இடபத்தையுடைய சிவபிரானது திருக்கோயில்வாயிலையடைந்தருளினுர்.— எ-று. (உ0உ)

வானையளக்குங்கோபுரத்தைவந்துபணிந்துபுகுந்துவளர்
கூனலிளவெண்பிறைச்சடையார்கோயில்வலங்கொண்டெதிர்குறுகி

பூனுமுயிருங்கரைந்துருகவுச்சிகுவித்தகையினுட
னானகாதலுடன்வீழ்ந்தாராராவன்பினரூரர்.

(இ-ள்.) வானையளக்குங்கோபுரத்தை வந்துபணிந்துபுகுந்து = மேகமண்டல த்தையளந்து கொண்டிருக்கும் திருக்கோபுரத்தைவந்து வணங்கியுள்ளேபோய்; வளர் கூனலிளவெண்பிறைச்சடையார் கோயில்வலங்கொண்டு = வளரும்வளைவுதங்கிய இள மையானவெண்பிறையைச்சூடிய சடைமுடியையுடைய சிவபிரான் திருக்கோயிலை வல மாகவந்து; எதிர்குறுகி யூனுமுயிருங்கரைந்துருக=திருமுன்னேசென்று உடம்புமுயி ரும் நெக்குருக; உச்சிகுவித்தகையினுடனான காதலுடன் வீழ்ந்தார் = சிரமேற்குவித் ததிருக்கரங்களுடன் தமக்குண்டாகிய பேரன்போடு நிலமுறவிழுந்து வணங்கினர்; ஆராவன்பினரூரர் = அடங்காத பேரன்பினையுடைய நம்பியாரூரர்.—எ-று. (உ0௩)

ஏட்டுவரியிலொற்றியூர்நீங்கலென்னுமெழுத்தறியு
நாட்டமலருந்திருநுதலார்நறும்பொற்கமலச்சேவடியிற்
கூட்டுமுணர்வுங்கொண்டெழுந்துகோதிலமுதவிசைகூடப்
பாட்டும்பாடிப்பரவியெனும்பதிகமெடுத்துப்பாடினர்.

(இ-ள்.) ஏட்டுவரியிலொற்றியூர்நீங்கலென்னுமெழுத்தறியும் = அவர்வரிக்கண க்கெழுதிய ஏட்டுவரியில் திருவொற்றியூர் நீங்கலென்று வரிப்பிளந்தெழுதும் எழுத் தையறிந்த; நாட்டமலருந்திருநுதலார் நறும்பொற்கமலச்சேவடியில் = நெற்றிக்கண் ணையுடைய சிவபிரானது நல்லபொற்றாமரையொத்த சிவந்ததிருவடியில்; கூட்டுமு ணர்வுங்கொண்டெழுந்து = கலக்கும் உணர்வும்பெற்றெழுந்து; கோதிலமுதவிசை கூட=குற்றமற்ற அமுதமயமான இசையமைய; பாட்டும்பாடிப்பரவியென்னும் பதி கமெடுத்துப்பாடினர் = பாட்டும்பாடிப்பரவியென்னும் முதலையுடைய திருப்பதிகத்தை யெடுத்துப்பாடினர்.—எ-று. (உ0௪)

இசை கேட்டார்க்கு இன்பம்விளைத்தலின் அமுதவிசையென்றார். உணர்வும்என் றஉம்மை அன்பேயன்றி யுணர்வுமெனநிற்றலின் இறந்தது தழீஇயது.

---

## திருவொற்றியூர். பண். குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பாட்டும்பாடிப்பரவித்திரிவா-ரீட்டும்வினைகெடர்ப்பான்கோயில்
காட்டுங்கலமுந்திமிலுங்கரைக்கே-யோட்டுந்திரைவாயொற்றியூரே.
ஒற்றியூருமரவும்பிறையும்-பற்றியூரும்பவளச்சடையா
னொற்றியூர்மேலூரனுரைத்த-கற்றுப்பாடக்கழியும்வினையே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர். மாணிக்கத்தியாகர். தேவி பெயர். வடிவுடையம்மை. திருப்பதிகம். அ.

பாடியறிவுபரவசமாம்பரிவுபற்றப்புறம்போந்து
நீடுவிருப்பிற்பெருங்காதனிறைந்தவன்பர்பலர்போற்றத்
தேடுமயனுந்திருமாலுமறிதற்கரியதிருப்பாதங்
கூடுங்காலங்களிலணைந்துபரவிக்கும்பிட்டினிதிருந்தார்.

(இ-ள்.) பாடியறிவுபரவசமாம்பரிவு = அவர்திருப்பதிகம்பாடித்தம் உணர்ச்சி ஆனந்தபரவசமாதற்கேதுவான பேரன்பானது ; பற்றப்புறம்போந்து = தம் உள்ளத் துதிக்கப்புறம்பேசென்று ; நீடுவிருப்பிற்பெருங்காதனிறைந்தவன்பர்பலர்போற்ற = மிக்கவிருப்போடு பேரன்புநிறைந்த அடியார்கள் பலர்துதிக்க ; தேடுமயனுந்திருமாலு மறிதற்கரிய திருப்பாதம் = முன்னாளில் தேடுகின்றபிரமனும் திருமாலும் அறிதற்கரிய திருவடிகளை ; கூடுங்காலங்களிலணைந்துபரவிக்கும்பிட்டினிதிருந்தார் = வருகின்ற காலை உச்சி மாலை என்னுங்காலங்களிலடைந்து துதித்துவணங்கி இனிதாக இருந்தருளினார்.—எ-று. (உ0ரு)

இந்தநிலைமையாரிவரிங்கிருந்தார்முன்பேயிவர்க்காக
வந்தண்கயிலைமலைநீங்கியருளாற்போந்தவனிந்திதையார்
வந்துபுவிமேலவதரித்துவளர்ந்துபின்புவன்றொண்டர்
சந்தவிரைசூழ்புயஞ்சேர்ந்தபரிசுதெரியச்சாற்றுவாம்.

(இ-ள்.) இந்தநிலைமையாரிவரிங்கிருந்தார் = இந்நம்பியாரூரர் இந்நிலைமையை யுடையராய் இத்திருவொற்றியூரில் வீற்றிருந்தருளினார் ; முன்பேயிவர்க்காக வந்தண் கயிலைமலைநீங்கி=இவர் இங்கு வருவதற்குமுன்னே இந்நம்பியாரூரருக்காக அழகிய தட்டமான திருக்கைலாயமலையை நீங்கி ; அருளாற்போந்தவனிந்திதையார் = சிவபிரான் திருவருளினாற்சென்ற அனிந்திதையார் ; வந்துபுவிமேலவதரித்து வளர்ந்து = நிலவுலகத்தில் வந்து அவதாரஞ்செய்து வளர்ந்து ; பின்புவன்றொண்டர் சந்தவிரைசூழ்புயஞ் சேர்ந்தபரிசு = பின்பு நம்பியாரூரரது சந்தனக்குழம்பின் வாசனைசூழ்ந்த திருப்புயங் களையணைந்த முறைமையை ; தெரியச்சாற்றுவாம் = விளங்கச்சொல்லுவாம்.—எ-று.

நாலாங்குலத்திற்பெருகுநலமுடையார்வாழுஞாயிற்றின்
மேலாங்கொள்கைவேளாண்மைமிக்கதிருஞாயிறுகிழவர்
பாலாதரவுதருமகளாராகிப்பார்மேலவதரித்தார்
ஆலாலஞ்சேர்கறைமிடற்றாரருளான்முன்னையனிந்திதையார்.

(இ-ள்.) நாலாங்குலத்திற் பெருகுநலமுடையார் வாழுஞாயிற்றில் = நான்காம் குலத்திலே மிக்கநலமுடைய வேளாளர்கள் வாழ்கின்ற ஞாயிறென்னும் ஊரில்; மேலாங்கொள்கை வேளாண்மைமிக்க = சிறந்த கொள்கையினையுடைய உழவுத்தொழிலின்மிக்க ; திருஞாயிறுகிழவர்பால் = செல்வமுடைய ஞாயிறு கிழாரென்பவரிடத்து ; ஆதரவுதருமகளாராகிப்பார்மேலவதரித்தார் = பிரியங்கூருந்திருமகளாராய் நிலவுலகத்தில் அவதாரஞ்செய்தார் ; ஆலாலஞ்சேர்கறைமிடற்றாரருளான்முன்னையனிந்திதையார்=ஆலாலவிடஞ்சேர்ந்த கரியதிருமிடற்றையுடைய சிவபிரான் திருவருளினால் திருக்கயிலையில் நம்பியாரூரரால் விரும்பப்பட்ட இருவருள் ஒருவராகிய அனிந்திதையார்.—எ-று

மலையான்மடந்தைமலர்ப்பாதமறவாவன்பால்வந்தநெறி
தலையாமுணர்வுவந்தணையத்தாமேயறிந்தசங்கிலியா
ரலையார்வேற்கட்சிறுமகளிராய்த்தோடும்விளையாட்டு
நிலையாயினவப்பருவங்கடோறுநிகழநிரம்புவார்.

(இ-ள்) மலையான்மடந்தைமலர்ப்பாதமறவாவன்பால் = பார்ப்பதியாருடைய தாமரைமலர்போலுஞ் சிவந்ததிருவடிகளை மறவாதநேயத்தால்; வந்தநெறிதலையாமுணர்வுவந்தணைய = தாம்அவதரித்தமுறைப்படி மெய்யுணர்வானது தலைப்பட ; தாமேயறிந்த சங்கிலியார் = பிறர்போதியாது தம்மியல்பில் சிவபிரானையுணர்ந்த சங்கிலிநாச்சியார்; அலையார்வேற்கட்சிறுமகளிராய்த்தோடும் = சுழல்கின்றவேல்போலும் உருவமைந்தகண்களையுடைய சிறுமகளிர்களினது தொகுதியோடும் ; விளையாட்டுநிலையாயின வப்பருவங்கடோறு நிகழநிரம்புவார் = சிற்றில்முதலிய விளையாட்டுத்தொழில்களானவை அந்தந்தபருவங்கள்தோறும்நடக்கப்பருவம் நிரம்புவாராயினார்.—எ-று. (உ0அ)

அன்பால்என்றதனால் மெய்யுணர்வுவருவதற்கு அன்புகாரணம் என்றாராயிற்று.

சீர்கொண்மரபில்வருஞ்செயலேயன்றித்தெய்வநிகழ்தன்மை
பாரிலெவருமதிசயிக்கும்பண்பில்வளரும்பைந்தொடியார்
வாருமணியவணியவாய்வளர்மென்முலைகளிடைவருத்தச்
சாரும்பதத்திற்றந்தையார்தங்கண்மனைவியார்க்குரைப்பார்.

(இ-ள்) சீர்கொண்மரபில் வருஞ்செயலேயன்றி = சிறந்ததம்குலத்திற்கு உரிததாகும் ஒழுக்கநெறிகளேயன்றி; தெய்வநிகழ்தன்மை = அவர்தெய்வத்தன்மையும் ; பாரிலெவருமதிசயிக்கும் பண்பில்வளரும் பைந்தொடியார் = நிலவுலகத்தில் கண்டார் யாவரும் வியப்படையும் முறையால்வளராநின்ற சங்கிலிநாச்சியார் ; வாருமணியவணியவாய்வளர்மென்முலைகளிடைவருத்த = கச்சுமணியும்படி சமீபித்தபருவமுடையராய் வளராநின்றமிருதுவான முலைகள்இடையைவருத்த ; சாரும்பதத்திற்றந்தையார் தங்கண்மனைவியார்க்குரைப்பார் = அடையும்மங்கைப்பருவத்தில் நாயிறுகிழார்தமது மனைவியார்க்குரைப்பாராயினார்.—எ-று. (உ0கூ)

மரபில்வருஞ்செயல்-ஒழுக்கம். அதுகுலதருமமெனினுமொக்கும். தெய்வநிகழ்தன்மை - அவரிடத்துநிகழும் தெய்வத்தன்மை. அது கண்டார் இவளோர் தெய்வமெனமதிக்கும் நிலைமை. இவ்விரண்டும்உடனிகழவளர்தலின் அதிசயிக்கும்பண்பில் வளரும்பைந்தொடியாரென்றார். வாரும்என்றஉம்மை உத்தரீயமுமென எதிரதுதழீஇயது.

வடிவுங்குணமுநம்முடையமகட்குமண்ணுளோர்க்கிசையும்
படிவமன்றிமேற்பட்டபரிசாம்பான்மையறிகிலோங்
கடிசேர்மணமுமினிநிகழுங்காலமென்னக்கற்புவளர்
கொடியேயனையமனைவியாரேற்குமாற்றாற்கொடுமென்றார்.

(இ-ள்) வடிவுங்குணமுநம்முடையமகட்கு = நம்முடையபுதல்விக்குக்கண்டார் வியக்கும்அழகும் அதற்சேற்ற சிறந்தகுணமும்; மண்ணுளோர்க்கிசையும்படிவமன்றி = நிலவுலகத்தார்க்குரிய முறை [illegible] மேற்பட்டபரிசாம் பான்மையறிகிலோம் = அதிக

ரித்தவாற்றையாம் அறியோம்; கடிசேர்மணமுமினி நிகழுங்காலமென்ன=காப்பமைந்த மணமும் இனிமேல் நிகழ்தற்குரியகாலமென்று சொல்ல; கற்புவளர்கொடியேயனை யமனைவியார் = கற்புவளர்தற்கிடனான கொடியையொத்த அவர்மனைவியார்; ஏற்குமா ற்றாற்கொடுமென்றார் = நமக்கிசைந்தவழியால் மணஞ்செய்து கொடுமென்றுசொன் னார்.—எ-று. (உகo)

படிவம்-ஈண்டு முறைமை. ஏற்குமாறுஎன்றது-சாதி குடிட்பிறப்பு செல்வம் கல்வி ஒழுக்கம் இவைகளா.

தாயாரோடுந்தந்தையார்பேசக்கேட்டசங்கிலியா
ரேயுமாற்றமன்றிதுவெம்பெருமானீசன்றிருவருளே
மேயவொருவர்க்குரியதியான்வேறென்விளையுமெனவெருவுற்
றாயவுணர்வுமயங்கிமிகவயர்ந்தேயவனிமேல்விழுந்தார்.

(இ-ள்) தாயாரோடுந்தந்தையார் பேசக்கேட்டசங்கிலியார் = தாயுடன்தந்தையார் இவ்வாறுபேசுவதைக்கேட்ட சங்கிலிநாச்சியார்; ஏயுமாற்றமன்றிது = இவர்பேசியது எமக்குப்பொருந்து முறைமையுடையதன்று; எம்பெருமானீசன்றிருவருளே மேயவொருவர்க்குரியதியான்=நான்எமது முதல்வராகியசிவபிரான் திருவருளைப்பெற்ற ஓரடியார்க்குரியதாயிருக்க; வேறென்விளையுமெனவெருவுற்று = இவர்கூறியவாற்றால் வேறென்னவிளையுமோவென்று அஞ்சி; ஆயவுணர்வுமயங்கிமிக வயர்ந்தேயவனிமேல்விழுந்தார்=தம்மிடத்துள்ளஅறிவுமயங்கி மிகமூர்ச்சித்து நிலத்தில்விழுந்தார்.—எ-று. (உகக)

உரியது என்றது - திணைவழுவமைதி.

பாங்குநின்றதந்தையார்தாயார்பதைத்துப்பரிந்தெடுத்தே
யேங்குமுள்ளத்தினராகியிவளுக்கென்னோவுற்றதெனத்
தாங்கிச்சீதவிளைப்பனிநீர்தெளித்துத்தைவந்ததுநீங்க
வாங்குசிலைநன்னுதலாளைவந்ததுனக்கிங்கென்னென்றார்.

(இ-ள்) பாங்குநின்றதந்தையார் தாயார்பதைத்து = அவரருகில் நின்றதந்தையாரும் தாயாரும் பதைபதைத்து; பரிந்தெடுத்தேயேங்குமுள்ளத்தினராகி = வருத்தமுற்றெடுத்து அச்சமடைந்தமனமுடையராய்; இவளுக்கென்னோ வுற்றதெனத்தாங்கி = இட்புதல்விக்குயாது வந்ததோவென்று அணைத்துக்கொண்டு; சீதவிளைப்பனிநீர் தெளித்துத்தைவந்ததுநீங்க = குளிர்ந்தவாசனைதங்கிய பனிநீரைத்தெளித்துத்தடவி அதனால் அம்மயக்கம்தெளிய; வாங்குசிலைநன்னுதலாளை = வளைந்தவிற்போலும் நெற்றியையுடையசங்கிலிநாச்சியாளை; வந்ததுனக்கிங்கென்னென்றார்= உனக்குஇவ்விடத்துயாதுவந்ததென்றுவினாவினார்.—எ-று. (உகஉ)

ஏங்குதல் - துயர்கண்டுமிஞசுதல்.

என்றுதம்மையீன்றெடுத்தார்வினவமறைவிட்டியம்புவா
ரின்றென்றிறத்துநீர்மொழிந்தவிதுவென்பரிசுக்கிசையாது
வென்றிவிடையாரருள்செய்தாரொருவர்க்குரியதியானினிமேற்
சென்றுதிருவொற்றியூரணைந்துசிவனாரருளிற்செல்வனென.

(இ-ள்) என்றுதம்மையீன்றெடுத்தார்வினவ = இவ்வாறுதம்மைப் பெற்றதாய் தந்தையர்வினவ; மறைவிட்டியம்புவார் = தங்கருத்தைமறையாமற்கூறுவார்; இன்றெ

ன்றிறத்துநீர்மொழிந்த அது=இன்றைக்கு என்பொருட்டாக நீவிர்கூறிய இவ்வார்த்தை; என்பரிசுக்கிசையாது = என்தன்மைக்குப்பொருந்தாது; வென்றிவிடையாரருள்செய்தா ரொருவர்க்குரியதியான்=வெற்றியமைந்த இடபத்தை வாகனமாகவுடைய சிவபிரான் வரனாகத் திருவருள்செய்தாரொருவர்க்கு யான் உரியபொருளாதலால்; இனிமேற் செ ன்று திருவொற்றியூரணைந்து = இனித்திருவொற்றியூரிடத்தடைந்து; சிவனாருளிற் செல்வனென=சிவபிரான் திருவருளின்வழியே செல்வேனென்றுகூற. எ-று. (உகங)

சிவபிரான் திருவருள்செய்தஒருவருக்கு யான்உரியேன் அதனால் நீவிர்கூறியது இசையாதெனமறுத்து அவர்திருவுள்ளக்கருத்திற்கேற்ற வரனை அருள்செய்யும்படி திரு வொற்றியூர்ச்செல்வனெனக்கூறினாரென்க. இனிமேல்என்பது தடையின்றிச்செல்ல வேண்டுமென்பதைக்குறித்தது.

அந்தமாற்றங்கேட்டவர்தாமயர்வும்பயமுமதிசயமும்
வந்தவுள்ளத்தினராகிமற்றமாற்றமறைத்தொழுகப்
பந்தநீடுமிவர்குலத்துநிகராமொருவன்பரிசறியான்
சிந்தைவிரும்பிமகட்பேசவிடுத்தார்சிலருஞ்சென்றிசைத்தார்.

(இ-ள்.)அந்தமாற்றங்கேட்டவர்தாம்=அச்சங்கிலிநாச்சியார்கூறியஅவ்வார்த்தை யைக்கேட்ட தாய்தந்தையர்கள்; அயர்வும்பயமுமதிசயமும்வந்தவுள்ளத்தினராகி=சோ ர்வும் அச்சமும் விம்மிதமும் அடைந்த மனமுடையராய்; மற்றமாற்றமறைத்தொழுக= அவ்வுரையைப்பிறரறியாமல் மறைத்தொழுகுங்கால்; பந்தநீடுமிவர்குலத்து நிகராமொ ருவன்=சாதியாசாரத்தில் மிக்க ஒழுக்கத்தையுடைய இவர்மரபில் செல்வம்குடிமைமு தலியவற்றில் ஒப்பாகவிருக்கின்ற ஒருவன்; பரிசறியான் சிந்தைவிரும்பி=செய்தியறியா னாய் மணம்விரும்பி; மகட்பேசவிடுத்தார் சிலருஞ் சென்றிசைத்தார்=மகளைமணம்பேச விடுக்கப்பட்டவர் சிலரும்அவரிடத்தில்வந்து சொன்னார்கள்—எ-று. (உகச)

இம்மகளின்செய்தி இவ்வாறாயிற்றேயென்றயர்வும், இவள்கருத்திற்கு மாறுப டச்செய்தால் தீங்குவருமென்பதனாலச்சமும், இவளோர்தெய்வத்தன்மையுடையவளெ ன்று அதிசயமும் அவர்க்கு நிகழ்ந்ததென்க. மற்று-அசை.

தாதையாருமதுகேட்டுத்தன்மைவிளம்பத்தகாமையினா
லேதமெய்தாவகைமொழிந்துபோக்கவவராங்கெய்தாமுன்
றீதங்கிழைத்தேயிறந்தான்போற்செல்லவிடுத்தாருடன்சென்றான்
மாதராரைப்பெற்றார்மற்றதனைக்கேட்டுமனமருண்டார்.

(இ-ள்.) தாதையாருமதுகேட்டு=தந்தையாரும் மகட்கேட்டவார்த்தையைக் கேட்டு; தன்மைவிளம்பத்தகாமையினால்=அவரியல்பை வெளிப்படுத்தக்கூடாமையினா ல்=ஏதமெய்தாவகைமொழிந்துபோக்க = மணங்கேட்கவந்தவர் குறைவடையாமல் எடுத்துக் கூறி அவரையனுப்ப; அவராங்கெய்தாமுன் = மணங்கேட்கவந்தவர்கள் அவ் வூரையடையுமுன்; தீதங்கிழைத்தேயிறந்தான்போல் = அங்கு ஓர் இடுக்கண் விளைத்து இறந்தவனைப்போல; செல்லவிடுத்தாருடன் சென்றான் = தனக்குறுதியாகமணங்கேட் டனுப்பிய சுற்றத்தாருடன் தானும் இறந்தான்;மாதராரைப்பெற்றார்=சங்கிலிநாச்சியா

ரைப் பெற்றதாய்தந்தையர்; மற்றதனைக்கேட்டுமனமருண்டார் = அவ்வார்த்தையைக் கேட்டு மனம் மயங்கினார்கள்.—எ-று. (உகரு)

எய்தாமுன் இறந்தானென்பது எய்த உடனேயிறந்தான் என்னும் விரைவுப்பொருளில்வந்தது; மருந்துதின்னுமுன்நோய்தீர்ந்ததென்றாற்போல. மற்று-அசை.

தையலார்சங்கிலியார்தந்திறத்துப்பேசத்தகாவார்த்தை
யுய்யவேண்டுநினைவுடையாருரையாரென்றங்குலகறியச்
செய்யவிதுபோலதுநிகழச்சிறந்தார்க்குள்ளபடிசெப்பி
னையுமுள்ளத்துடனஞ்சிநங்கைசெயலேயுடன்படுவார்.

(இ-ள்.) தையலார்சங்கிலியார்தந்திறத்து=சங்கிலிநாச்சியார்மாட்டு; பேசத்தகாவார்த்தை=மணவினைகேட்டலே; உய்யவேண்டுநினைவுடையாருரையாரென்று = பிழைத்திருக்கவேண்டுமென்னும் நினைவுடையவர்கள் சொல்லமாட்டார்களென்று; அங்குலகறியச்செய்ய = அவ்விடத்து உலகத்தாரறியும்படி செய்தற்கேதுவாக; இதுபோலதுநிகழ = இவர் மணம்வேண்டாமென்றுசொல்வதற்கேற்க மணங்கேட்டவனிறந்துவிட; சிறந்தார்க்குள்ளபடிசெப்பி = சிறந்தபந்துக்களுக்குப்பொருந்தஉள்ளபடிசொல்லி; நையுமுள்ளத்துடனஞ்சி = வருந்தியமனத்தோடு அச்சமுற்று; நங்கைசெயலேயுடன்படுவார்=சங்கிலிநாச்சியார்திறத்திற்கேயுடன்படுவாராயினர்.—எ-று. (உகசு)

செய்யவென்னும் வினையெச்சம் காரணப்பொருளில்வந்தது. விதிபோலென்றும்பாடம்.

அணங்கேயாகுமிவள்செய்கையறிந்தோர்பேசவஞ்சுவரால்
வணங்குமீசர்திறமன்றிவார்த்தையறியாண்மற்றொன்றுங்
குணங்களிவையாமினியிவடான்குறித்தபடியேயொற்றிநகர்ப்
பணங்கொளரவச்சடையார்தம்பாற்கொண்டணைவோமெனப்பகர்வார்.

(இ-ள்.) அணங்கேயாகுமிவள்செய்கை=இச்சங்கிலியாரதுசெயல் தெய்வத்தன்மையாகவே யிருக்கின்றது; அறிந்தோர்பேசவஞ்சுவரால்=இவர்திறத்தையறிந்தவர்கள் இவரிடத்தில் வார்த்தைசொல்லவும் அச்சமுறுவார்கள்; வணங்குமீசர்திறமன்றி=தம்மால்வணங்கப்படும் சிவபிரான் தன்மையேயன்றி; வார்த்தையறியாண்மற்றொன்றும்=பிறவார்த்தைகளை அறியமாட்டார்; குணங்களிவையாம்=இவர்குணங்களித்தன்மையவாம்; இனியிவடான் குறித்தபடியே=இனிமேல் இவர்கருதியவாறு; ஒற்றிநகர்ப்பணங்கொளரவச்சடையார்தம்பால் = திருவொற்றியூரின்கண் வீற்றிருந்தருளும் படந்தங்கிய பாம்பைத்தரித்த சடையையுடைய சிவபிரானிடத்து; கொண்டணைவோமெனப்பகர்வார்= அழைத்துக்கொண்டு செல்வோமென்று சொல்வாராயினர்.—எ- று. (உகஎ)

பண்ணார்மொழிச்சங்கிலியாரைநோக்கிப்பயந்தாரொடுங்கிளைஞர்
தெண்ணீர்முடியார்திருவொற்றியூரிற்சேர்ந்துசெல்கதியுங்
கண்ணார்நுதலார்திருவருளாலாகக்கன்னிமாடத்துத்
தண்ணார்தடஞ்சூழ்நகரிற்றங்கிப்புரிவீர்தவமென்று.

(இ-ள்.) பயந்தாரொடுங்கிளைஞர்=தாய்தந்தையரோடு சுற்றத்தாரும்; பண்ணார்மொழிச்சங்கிலியாரைநோக்கி=பண்ணமைந்தமொழியையுடைய சங்கிலிநாச்சியாரைப்

பார்த்து; தென்னீர்முடியார் திருவொற்றியூரிற்சேர்ந்து = தெள்ளியகங்கையணிந்த சடைமுடியையுடைய சிவபிரான்வீற்றிருந்தருளும் திருவொற்றியூரையடைந்து; செல்க தியுங்கண்ணுர் நுதலார்திருவருளாலாக = மறுமைப்பயனும் அப்பிரானுர் திருவருளாலா கும்படி; தண்ணுர்தடஞ்சூழ்நகரில்=குளிர்ந்தவாவிகள்சூழ்ந்த அவ்வூரில்; கன்னிமாடத் துத்தங்கித்தவம்புரிவீரென்று=கன்னிமாடத்தின்கணிருந்து தவம்புரிவீராகவென்று:—எ-று. (உ௧அ)

பெற்றதாதைசுற்றத்தார்பிறைசேர்முடியார்விதியாலே
மற்றுச்செயலொன்றறியாதுமங்கையார்சங்கிலியார்தாஞ்
சொற்றவண்ணஞ்செயத்துணிந்துநிறைந்தசெல்வத்தொடும்புரங்கள்
செற்றசிலையார்திருவொற்றியூரிற்கொண்டுசென்றணைந்தார்.

(இ-ள்.) பெற்றதாதைசுற்றத்தார் = பெற்றதந்தையாரும் உறவினரும்; பிறை சேர்முடியார்விதியாலே = சிவபிரான்நியமப்படி; மற்றுச்செயலொன்றறியாது = பிற செய்கைகளொன்றையும் விரும்பாது; மங்கையார்சங்கிலியார்சொற்றவண்ணஞ்செயத் துணிந்து = சங்கிலிநாச்சியார்கூறியவாறு செய்யநிச்சயித்து; நிறைந்தசெல்வத்தொ டும் = நிறைந்தசம்பத்தோடு; புரங்கள்செற்றசிலையார் = திரிபுரங்களையெரித்தற்கேது வான மேருவில்லையுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும்; திருவொற்றியூரிற்கொண்டு சென்றணைந்தார்=திருவொற்றியூரிற்குச் சங்கிலிநாச்சியாரை அழைத்துக்கொண்டுபோ ய்ச்சேர்ந்தார்கள்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். தாம் அசை. (உ௧௯)

சென்னிவளர்வெண்பிறையணிந்தசிவனுர்கோயிலுட்புகுந்து
துன்னுஞ்சுற்றத்தொடும்பணிந்துதொல்லைப்பதியோரிசைவினுற்
கன்னிமாடமருங்கமைத்துக்கடிசேர்முறைமைக்காப்பியற்றி
மன்னுஞ்செல்வந்தகவகுத்துத்தந்தையார்வந்தடிவணங்கி.

(இ-ள்.) சென்னிவளர்வெண்பிறையணிந்த = திருமுடியின்கண்வளராநின்ற வெள்ளிய இளம்பிறையைச்சூடிய; சிவனுர்கோயிலுட்புகுந்து=சிவபிரான் திருக்கோ யிலுட்சென்று; துன்னுஞ்சுற்றத்தொடும்பணிந்து = சூழ்ந்தஉறவினரோடும் தாமும்வ ணங்கி; தொல்லைப்பதியோரிசைவினுல்=பழையஅத்திருப்பதிக்கணுள்ளாரது உடன்பாட் டினுல்; கன்னிமாடமருங்கமைத்து=அக்கோயிலினருகே கன்னிமாடமொன்றைச்சமை த்து; கடிசேர்முறைமைக்காப்பியற்றி=காத்தற்குரியமுறைமையான மதிற்காவல்முதலி யவற்றையுஞ்செய்து; மன்னுஞ்செல்வந்தகவகுத்து = நிலைமைபெற்றசெல்வத்தையும் அதற்குப்பொருந்த நியமித்து; தந்தையார்வந்தடிவணங்கி=ஞாயிறுகிழார்வந்து சங்கிலி நாச்சியார் திருவடிகளில்வணங்கி.—எ-று. (உ௨௰)

யாங்களுமக்குப்பணிசெய்யவீசற்கேற்றபணிவிரும்பி
யோங்குகன்னிமாடத்திலுறைகின்றீரென்றுரைக்கின்ருர்
தாங்கற்கரியகண்கணீர்த்தாரையொழுகத்தரியாதே
யேங்குசுற்றத்தொடுமிறைஞ்சிப்போனுரெயில்சூழ்தம்பதியில்.

(இ-ள்.) யாங்களுமக்குப்பணிசெய்ய = நாங்கள் உமக்குப்பணிவிடைசெய்ய; ஈசற்கேற்றபணிவிரும்பி=நீர் சிவபிரானுக்கேற்ற பள்ளித்தாமமமைக்குந் திருப்பணி

யை விரும்பி; ஓங்குகன்னிமாடத்தி னுறைகின்றீரென்றுரைக்கின்ருர் = உயர்ந்த இக் கன்னிமாடத்தில் இருப்பீரென்று சொல்கின்றவராய்; தாங்கற்கரிய கண்கணீர்த்தாரை யொழுக=கண்களினின்றும் அடங்காதநீர் தாரையாகவொழுக; தரியாதே யெங்குசுற்றத் தொடுமிறைஞ்சிப்போனூரெயில்சூழ்தம்பதியில் = ஆற்றுது இரங்குகின்ற உறவின ரோடும்வணங்கி மதில்சூழ்ந்த தமது ஞாயிறென்னும் நகரிற்சென்ருர்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். ஏ. அசை. உறைகின்றீரென்பது எதிர்காலப்பொருளில்வந்தது.()

காதல்புரிந்துதவம்புரியுங்கன்னியாரங்கமர்கின்ருர்
பூதநாதர்கோயிலினிற்காலந்தோறும்புக்கிறைஞ்சி
நீதிமுறைமைவழுவாதுதமக்குநேர்ந்தபணிசெய்யச்
சீதமலர்ப்பூமண்டபத்துத்திரைசூழொருபாற்சென்றிருந்து

(இ-ள்.) காதல்புரிந்துதவம்புரியுங்கன்னியார்=விருப்புநீங்காது தவத்தைச்செய் கின்ற சங்கிலிநாச்சியார்; அங்கமர்கின்ருர்=அக்கன்னிமாடத்து இருக்கின்ருராய்; பூத நாதர்கோயிலினில்=சிவபிரான் திருக்கோயிலினில்; காலந்தோறும் புக்கிறைஞ்சி=கால ங்கடோறும் சென்றுவணங்கி; நீதிமுறைமைவழுவாது=தாம்செய்யும் திருப்பணிமு றைமைதவருது; தமக்கு நேர்ந்தபணிசெய்ய=தமக்குத்தக்க திருமாலைப்பணியைச்செ ய்தற்கு; சீதமலர்ப்பூமண்டபத்து=குளிர்ந்தமலர்களையுடைய மாலைமண்டபத்தில்;திரை சூழொருபாற் சென்றிருந்து=திரைசூழ்ந்த ஓரிடத்திற்போயிருந்து.—எ-று. (௨௨௨)

பண்டுகயிலைத்திருமலையிற்செய்யும்பணியின்பான்மைமனங்
கொண்டவுணர்வுதலைநிற்பக்குலவுமலர்மென்கொடியனையார்
வண்டுமருவுந்திருமலர்மென்மாலைகாலங்களுக்கேற்ப
வண்டர்பெருமான்முடிச்சாத்தவமைத்துவணங்கியமருநாள்.

(இ-ள்.) பண்டுகயிலைத்திருமலையில்=முன்னூளில் திருக்கயிலைமலையில்; செய்யும் பணியின்பான்மை = தாம்செய்யுந் திருமாலைப்பணியின் தன்மையை; மனங்கொண்ட வுணர்வு தலைநிற்ப = தம்உள்ளத்திற்கொண்டவாசனையுணர்வானது நிலைபெறுக, குலவு மலர்மென்கொடியனையார் = விளங்காநின்றமிருதுவான பூங்கொடியையொத்தசங்கிலி நாச்சியார்; வண்டுமருவுந்திருமலர்மென்மாலை = வண்டுகள்பொருந்தும்மலராற்றொடு த்த மிருதுவான திருமாலையை; காலங்களுக்கேற்ப = காலைஉச்சிமுதலிய காலங்களுக் கிசைய; அண்டர்பெருமான் முடிச்சாத்தவமைத்து = சிவபிரான் திருமுடியின்கண் ணேசாத்துதற்குத்தொடுத்து; வணங்கியமருநாள் = வணங்கியிருக்கும்நாளில்.—எ-று.

அந்திவண்ணத்தொருவர்திருவருளால்வந்தவாரூரர்
கந்தமாலைச்சங்கிலியார்தம்மைக்காதன்மணம்புணர
வந்தபருவமாதலால்வகுத்ததன்மைவழுவாத
முந்தைவிதியால்வந்தொருநாண்முதல்வர்கோயிலுட்புகுந்தார்.

(இ-ள்.) அந்திவண்ணத்தொருவர்திருவருளால்வந்தவாரூரர் = செக்கர்போலுந் திருமேனியையுடைய சிவபிரான்திருவருளால் அவதரித்தநம்பியாரூரர்; கந்தமாலைச்சங்

லியார்தம்மை = வாசனைகமழும்மலர்மாலையைமுடித்தசங்கிலிநாச்சியாரை; காதல்ம ணம்புணரவந்தபருவமாதலால் = விருப்போடுகூடிய திருமணஞ்செய்வதற்கு நேரிட்ட பருவமுடைமையால்; வருந்தன்மைவழுவாத முந்தைவிதியால் வந்து = நியமித்த நிலைமையினின்றும்தவறாத பழைய ஊழ்முறைமையால் திருவொற்றியூருக் கெழுந்தரு ளி; ஒருநாண்முதல்வர்கோயிலுட்புகுந்தார் = ஒருதினம் சிவபிரான்திருக்கோயிலுட் சென்றார்.—எ-று. இம்மூன்றுங்குளகம். (௨௨௪)

அண்டர்பெருமானந்தணராயாண்டநம்பியங்கணரைப்
பண்டைமுறைமையாற்பணிந்துபாடிப்பரவிப்புறம்போந்து
தொண்டுசெய்வார்திருத்தொழில்கள்கண்டுதொழுதுசெல்கின்றார்
புண்டரீகத்தடநிகர்பூந்திருமண்டபத்தினுட்புகுந்தார்.

(இ-ள்.) அண்டர்பெருமானந்தணராயாண்டநம்பி = சிவபிரான் மறையவர்வடி வாய்வந்துதடுத்தாட்கொண்ட நம்பியாரூரர்; அங்கணரைப்பண்டைமுறைமையாற்பணி ந்து = படம்பக்கநாதரைத் தாம்வணங்கும்முறைமைப்படிவணங்கி; பாடிப்பரவிப்புறம் போந்து = திருப்பதிகம்பாடித்துதிசெய்து புறம்பேயெழுந்தருளி; தொண்டுசெய்வார் திருத்தொழில்கள்கண்டு = தொண்டுசெய்கின்ற அடியார்களது திருத்தொண்டுகளைக் கண்டு; தொழுதுசெல்கின்றார் = அவரைவணங்கிச்செல்கின்றவர்; புண்டரீகத்தடநிகர் = தாமரைமலர்வாவிபோலும்; பூந்திருமண்டபத்தினுட்புகுந்தார் = திருமாலைமண்டபத் தினுள்ளெழுந்தருளினார்.—எ-று. (௨௨௫)

அன்புநாராவஞ்செழுத்துநெஞ்சுதொடுக்கவலர்தொடுத்தே
யென்புள்ளுருக்குமடியாரைத்தொழுதுநீங்கிவேறிடத்து
முன்புபோலத்திரைநீக்கிமுதல்வர்சாத்தும்பணிகொடுத்து
மின்போன்மறையுஞ்சங்கிலியார்தம்மைவிதியாற்கண்ணுற்றார்.

(இ-ள்.) என்புள்ளுருக்குமடியாரைத்தொழுதுநீங்கி = என்பினையும் உள்ளே யுருக்கத்தக்கபேரன்புடைய அடியவர்களைவணங்கி அங்ககன்று; வேறிடத்துஅன்புநாரா வஞ்செழுத்துநெஞ்சுதொடுக்கவலர்தொடுத்து = அம்மண்டபத்தின் வேறோரிடத்திலிரு ந்துகொண்டு அன்பேநாராகத் திருவைந்தெழுத்தையும் மனசானது மானசீகமாகத்தொ டுக்கப் புறம்பே மலரைக்கட்டி; முன்புபோலத்திரைநீக்கிமுதல்வர்சாத்தும்பணிகொடுத் து = வழக்கம்போலத் திரையைஒதுக்கிச் சிவபிரான்தரித்துக்கொள்ளும் அத்திருமாலை யைக் கொடுத்து; மின்போன்மறையுஞ்சங்கிலியார்தம்மை விதியாற்கண்ணுற்றார் = மி ன்னலைப்போலப் பின்னும் அத்திரைக்குள்மறையும் சங்கிலிநாச்சியாரை ஊழ்வசத்தாற் கண்டார்.—எ-று. ஏ-அசை. (௨௨௬)

கோவாமுத்துஞ்சுரும்பேறுக்கொழுமென்முகையுமனையாரைச்
சேவார்கொடியார்திருத்தொண்டர்கண்டபோதுசிந்தைநிறை
காவாதவர்பாற்போய்வீழத்தம்பாற்காமனார்துரந்த
பூவாளிகள்வந்துறவீழத்தரியார்புறமேபோந்துரைப்பார்.

(இ-ள்.) கோவாமுத்துஞ் சுரும்பேறுக்கொழுமென்முகையுமனையாரை = கோ ாதமுத்தையும் வண்டுவீழாத கொழுவியமிருதுவான மலர்முகையையுமொத்த சங்கிலி

நாச்சியாரை; சேவார்கொடியார் திருத்தொண்டர்கண்டபோது = இடபக்கொடியையுடைய சிவபிரான் திருத்தொண்டராகிய நம்பியாரூரர்கண்ணுற்றபொழுது; சிந்தைநிறைகாவாதவர்பாற்போய்வீழ=மனமானது நிறையைப்பேணாது அச்சங்கிலியாரிடத்துச்சென்றுவிழ; தம்பாற்காமனார்துரந்த பூவாளிகள்வந்துறவீழ = தம்மிடத்துக் காமன் செலுத்தியமலர்வாளிகள் வந்துவிழ; தரியார்புறமேபோந்துரைப்பார் = ஆற்றாராய்மண்டபத்திற்குப்புறம்பே வந்துசொல்லுவார்.—எ-று. (உஉஎ)

நிறையென்பது தம்மனம் இவ்வாறுநிற்கவெனத் தாம்வைத்தவாறு நிற்றல். விகாரமின்றியவுள்ளம் விகாரப்படுதலால் அம்மயக்கமே சிந்தையும் பசியையும் உணவுநீக்கமும் அசதியும்விளைக்கவும் மலர்வாளிகள் அவற்றை விளைக்குமென்பது உபசாரம்.

இன்னபரிசென்றறிவரிதாலீங்கோர்மருங்குதிரைக்குள்ளாற்
பொன்னுமணியுமலர்ந்தவொளியமுதிலளாவிப்புதியமதி
தன்னுணீர்மையாற்குழைத்துச்சமைத்தமின்னுக்கொடிபோல்வா
ளென்னையுள்ளந்திரிவித்தாள்யார்கொலென்றங்கியம்புதலும்.

(இ-ள்.) இன்னபரிசென்றறிவரிது = இது இவ்வாறு நிகழ்ந்ததென்று என்னாலறிதல்கூடாது; ஈங்கோர்மருங்குதிரைக்குள்ளால் = இவ்வாலயத்திலோர்மருங்கு கட்டியதிரைக்குள்ளில்; பொன்னுமணியுமலர்ந்தவொளியமுதிலளாவி = பொன்னிடத்தும் மணியிடத்தும் கலந்திருக்கும்ஒளியைஅமுதோடுகலந்து; புதியமதிதன்னுணீர்மையாற்குழைத்து = புதிதானசந்திரனுளிருக்கின்ற தட்பத்தோடுசேர்த்து; சமைத்தமின்னுக்கொடிபோல்வாள் = அமைத்தஒருமின்னுக்கொடியை யொத்தவள்; என்னை யுள்ளந்திரிவித்தாள் = என்னைமனம்வேறுபடச்செய்வித்தாள்; யார்கொலென்றங்கியம்புதலும்=இவள்யாரென்று அவ்விடத்துச்சொல்லவும்.—எ-று. ஆல்-அசை. (உஉஅ)

பொன் மணி இவைகளிடத்திருக்கும் ஒளியும் தீயின்குணமாயவெள்ளொளியாதலானும், அமுதத்தின்கணுள்ளஒளி சலத்தின்கணுள்ளவெள்ளொளியாயிருத்தலானும் அவ்விரண்டையுமொருங்குசேர்த்தால் வேறோர் திவ்யவொளிவிளையுமாதலின் பொன்னுமணியுமலர்ந்தவொளி யமுதிலளாவியென்றும்; மதிக்கணுள்ளஒளியும் அமுதத்தால் மூடப்பட்ட தீயினொளியாகலின் அதைச்சேர்த்துக் குழைத்தென்றுங்கூறினர். இதனால் இம்மின்னுக்கொடி வெம்மைமிக்கமின்னுக்கொடிபோலாது சமமானதட்பமும் ஒளியுமுள்ளதென்பதுகருத்து. அமுதில் - அமுதோடு. நீர்மையால் - நீர்மையோடு.

அருகுநின்றார்விளம்புவாரவர்தாநங்கைசங்கிலியார்
பெருகுந்தவத்தாலீசர்பணிபேணுங்கன்னியாரென்ன
விருவராலிப்பிறவியையெம்பெருமானருளாலெய்துவித்தார்
மருவும்பரவையொருத்தியிவண்மற்றையவளாமெனமருண்டார்.

(இ-ள்.) அருகுநின்றார்விளம்புவார் = அருகில்நின்றஅடியார்கள் சொல்லுவார்; அவர்தாநங்கைசங்கிலியார் = அவர்சங்கிலிநாச்சியார்; பெருகுந்தவத்தா லீசர்பணிபேணுங்கன்னியாரென்ன=சிவபிரான் திருப்பணியைப்பெருந்தவத்தாற் செய்யும்கன்னிகையென்றுசொல்ல; இருவராலிப்பிறவியை யெம்பெருமானருளாலெய்துவித்தார் = சிவபிரான் தந்திருவருளினால் இம்மானிடப்பிறவியைக் கமலினி அனிந்திதையெனும் இரு

வர்பொருட்டு அடைவித்தார்; மருவும்பரவையொருத்தி = அவ்விருவரில்பூமியில் அவத ரித்தபரவையொருத்தி; இவள்மற்றையவளாமெனமருண்டார் = இவள் அனிந்திதை யென்று சொல்லிமயங்கினர்.—எ-று. (உஉ௬)

மின்னார்சடையார்தமக்காளாம்விதியால்வாழுமெனைவருத்தித்
தன்னாரருளால்வரும்பேறுதவத்தாலணையாவகைதடுத்தே
யென்னாருயிருமெழின்மலருங்கூடப்பிணைக்குமிவடன்னைப்
பொன்னாரிதழிமுடியார்பாற்பெறுவேனென்றுபோய்ப்புக்கார்.

(இ-ள்.) மின்னார்சடையார் தமக்காளாம்விதியால் = மின்போலும்நிறந்தங்கிய சடைமுடியையுடைய சிவபிரானுக்கு அடிமையாகின்றமுறைமையால்; வாழுமெனை வருத்தி = வாழ்கின்றஎன்னை வருத்தச்செய்து; தன்னாரருளால்வரும்பேறு = சிவபிரா ன்திருவருளினால் அடையும்பேற்றை; தவத்தாலணையாவகைதடுத்து=தவங்காரணமாக நானடையாமல் தடைசெய்து; என்னாருயிருமெழின்மலருங்கூடப்பிணைக்குமிவடன் னை;=என்னுடையஉயிரையும் அழகியமலரையுஞ்சேர ஒருங்குபிணைக்கின்ற இப்பெண் ணை; பொன்னாரிதழிமுடியார்பாற்பெறுவேனென்று = பொன்னிறந்தங்கிய கொன்றை மலர்மாலையைத்தரித்தமுடியையுடைய அச்சிவபிரானிடத்துப் பெற்றுக்கொள்வேனெ ன்று; போய்ப்புக்கார்=ஆலயத்திற்சென்றார்.—எ-று. (உ௩௰)

மலர்மேலயனுநெடுமாலும்வானுநிலனுங்கிளைத்தறியா
நிலவுமலருந்திருமுடியுநீடுங்கழலுமுடையாரை
யுலகமெல்லாந்தாமுடையாராயுமொற்றியூரமர்ந்த
விலகுசோதிப்பரம்பொருளையிறைஞ்சிமுன்னின்றேத்துவார்.

(இ-ள்.) மலர்மேலயனுநெடுமாலும் = மலரின்கண்வாழும்பிரமனும் திருமா லும்; வானுநிலனுங்கிளைத்தறியா = விண்ணையும் மண்ணையும் கீண்டுஅறியாத; நிலவுமல ருந்திருமுடியுநீடுங்கழலுமுடையாரை = இளம்பிறைவாழுந்திருமுடியையும் நீண்ட திருவடியையும்உடையவரும்; உலகமெல்லாந்தாமுடையாராயும்=எல்லாஉலகமும் தம க்குடைமையாயுள்ளாராயும்; ஒற்றியூரமர்ந்த இலகுசோதிப்பரம்பொருளை = திருவொ ற்றியூரின்கண் வாழும் ஒளிவடிவானபரம்பொருளுமாகிய சிவபெருமானை; இறைஞ்சி முன்னின்றேத்துவார் = வணங்கித்திருமுன்னின்று துதிப்பாராயினர்.—எ-று. ()

ஒற்றியாகவைக்கப்படும் ஊரெனவும் பொருள்படுதலின் இங்ஙனங்கூறினர்.

மங்கையொருபான்மகிழ்ந்ததுவுமன்றிமணிநீண்முடியின்கட்
கங்கைதன்னைக்கரந்தருளுங்காதலுடையீரடியேனுக்
கிங்குநுமக்குத்திருமாலைதொடுத்தெனுள்ளத்தொடையவிழ்த்த
திங்கள்வதனச்சங்கிலியைத்தந்தென்வருத்தந்தீருமென.

(இ-ள்.) மங்கையொருபான் மகிழ்ந்ததுவுமன்றி = உமாதேவியை ஒருகூற்றில் விரும்பிவைத்ததேயன்றி; மணிநீண்முடியின்கட்கங்கைதன்னை = அழகியநீண்டதிருமு டியினிடத்துக்கங்கையாளையும்; கரந்தருளுங்காதலுடையீர் = மறைத்துவைத்தருளும் விருப்புடையீர்; அடியேனுக்கு = அடியேனுக்கு; இங்குநுமக்குத்திருமாலைதொடுத்து=

ணடுஉமக்குத்திருமாலையைத்தொடுத்து; என்னுள்ளத்தொடையவிழ்த்த=என துள்ளத்தின் பிணிப்பையவிழ்த்துவிட்ட; திங்கள்வதனச் சங்கிலியைத்தந்து=மதிபோலும்தட்பமான முகத்தையுடைய சங்கிலியை மணஞ்செய்துகொடுத்து; என்வருத்தந்தீருமென=என் துயரத்தைநீக்கியருளுமென்று.—எ-று. (௨௩௨)

அண்ணலார்முன்பலவுமவரறியவுணர்த்திப்புறத்தணைந்தே
யெண்ணமெல்லாமுமக்கடிமையாமாறெண்ணுமென்னெஞ்சிற்
றிண்ணமெல்லாமுடைவித்தாள்செய்வதொன்றுமறியேன்யான்
றண்ணிலாமின்னொளிர்பவளச்சடையீரருளுமெனத்தளர்வார்.

(இ-ள்.) அண்ணலார்முன்பலவுமவரறியவுணர்த்தி = சிவபிரான்திருமுன்னே இவ்வாறுபலமாற்றங்களையும் அவரறியும்படி விண்ணப்பித்து; புறத்தணைந்து=ஆலயத்தின்புறம்பேவந்து; எண்ணமெல்லாமுமக்கடிமையாமாறெண்ணுமென்னெஞ்சில் = என்கருத்துமுழுதும் உமக்குஅடிமையாக இருக்கவேண்டுமென்றுகருதும் என்னுள்ளத்தில்; திண்ணமெல்லாமுடைவித்தாள் = திடம்முழுதும் உடையச்செய்தாள்; செய்வதொன்றுமறியேன்யான்=மேற்செய்வதொன்றையும் யான் அறியமாட்டேன்; தண்ணிலாமின்னொளிர்பவளச்சடையீர் = தண்ணிலாவையணிந்த மின்போல்விளங்கும் பவளநிறமான சடைமுடியையுடையவரே; அருளுமெனத்தளர்வார் = திருவருள் செய்யுமென்று வருந்துவாராயினர்.—எ-று. (௨௩௩)

மதிவாண்முடியார்மகிழ்கோயிற்புறத்தோர்மருங்குவந்திருப்பக்
கதிரோன்மேலைக்கடல்காணமாலைக்கடலைக்கண்டயர்வார்
முதிராமுலையார்தம்மைமணம்புணர்க்கவேண்டிமுளரிவளை
நிதியானன்பர்தமக்கருளுநண்பாணினைந்துநினைந்தழிய.

(இ-ள்.) மதிவாழ்முடியார்மகிழ்கோயிற்புறத்து = இளம்பிறைவாழும் திருமுடியையுடையசிவபிரான் வீற்றிருந்தருளுந்திருக்கோயிலின் புறத்து; ஓர் மருங்குவந்திருப்ப = ஓரிடத்து நம்பியாரூரர்வந்திருக்க; கதிரோன்மேலைக்கடல்காண = சூரியன் மேலைக்கடலில் மறைய; மாலைக்கடலைக்கண்டயர்வார்=மாலைக்காலமாகிய கடலைக்கண்டு வருந்துகின்றவராய்;முதிராமுலையார்தம்மை=இளமுலையையுடையசங்கிலிநாச்சியாரை; மணம்புணர்க்கவேண்டி = மணம்புரிவிக்கவிரும்பி; முளரிவளைநிதியானன்பர் தமக்கருளுநண்பால்=சங்கநிதிபதுமநிதியென்னும் இருநிதியையுடைய குபேரனுக்குத்தோழராகிய சிவபிரான் தமக்குமருளிச்செய்த தோழமையால்;நினைந்து நினைந்தழிய=அப்பெருமானை நினைந்து நினைந்துவருந்த.—எ-று. (௨௩௪)

உம்பருய்யவுலகுய்யவோலவேலைவிடமுண்ட
தம்பிரானார்வன்றொண்டர்தம்பாலெய்திச்சங்கிலியை
யிம்பருலகில்யாவருக்குமெய்தவொண்ணாவிருந்தவத்துக்
கொம்பையுனக்குத்தருகின்றோங்கொண்டகவலையொழிகென்ன.

(இ-ள்.) உம்பருய்யஉலகுய்ய=தேவர்கள்பிழைக்க உலகத்தாரீடேற; ஓலவேலைவிடமுண்டதம்பிரானார் = ஒலிதங்கியபாற்கடலில் உதித்தவிடத்தை யமுதுசெய்த

1-சுந்தரர் ஒற்றியூரரைத் தெரிசித்தது. 2-ஆரூரர் அடியார்திருத்தொண்டைக்காண பூக்கட்டுமண்டபத்தையணுக-



சங்கிலியார் தொடுத்தமாலையை பெருமானுக்குச்சாற்ற திரையைநீக்கியளிக்க சுந்தரர் கண்டிச்சைகொண்டது.
3-ஆரூரர் பசுபதியால் சங்கிலியாரைத் தமக்குமணஞ்செய்விக்க விண்ணப்பித்தது.

ஆன்மநாயகராகிய சிவபெருமான்; வன்றொண்டர்தம்பாலெய்தி = நம்பியாரூரர்பால் கண்ணி; இம்பருலகில்யாவருக்குமெய்தவொண்ணா=இவ்வுலகில் எத்தன்மையருக்கும் அடையமுடியாத; இருந்தவத்துக்கொம்பைச்சங்கிலியை = உயர்ந்ததவத்தையுடைய பூங்கொம்பையொத்தசங்கிலியை; உனக்குத்தருகின்றோங்கொண்டகவலையொழிகென்ன=நினக்கு அளிக்கின்றோம் நீகொண்டதுன்பத்தை ஒழிவாயாக என்றுபணித்த லும்-எ-று. (உ௬௫)

விடம் அருந்தாவழி எவரும்பிழைத்திலரென்பார் "உம்பருய்யவுலகுய்யவோல வேலைவிடமுண்டதம்பிரானார்" எனவும், அவளையெய்தற்குரிய அத்துணைத்தவமுடைய வர் இவ்வுலகிலிலரென்பார் "இம்பருலகில்யாவருக்குமெய்தவொண்ணாவிருந்தவத்துக் கொம்பு" எனவும், நீ அவளை அணைதற்குரிய அருந்தவமுடையையென்பார் "உனக்குத் தருகின்றோம்" எனவுங்கூறினார். உம்மைஉயர்வுசிறப்பின்கணின்றமுற்றும்மை.

அன்றுவெண்ணெய்நல்லூரில்வலியவாண்டுகொண்டருளி
யொன்றுமறியாநாயேனுக்குறுதியளித்தீருயிர்காக்க
வின்றுமிவளைமணம்புணர்க்கவேன்றுநின்றீரெனப்போற்றி
மன்றன்மலர்ச்சேவடியிணைக்கீழ்வணங்கிமகிழ்ந்தார்வன்றொண்டர்.

(இ-ள்.) அன்றுவெண்ணெய்நல்லூரில் வலியவாண்டுகொண்டருளி = அந்நா ளிலே திருவெண்ணெய்நல்லூரில் வலியவந்து தடுத்தாட்கொண்டருளி; ஒன்றுமறியா நாயேனுக்குறுதியளித்தீர்=யாதொன்றுமறியாத எளியேனுக்கு உண்மைநிலையைத் தந் தருளினீர்; உயிர்காக்கவின்றுமிவளைமணம்புணர்க்க=என்னுயிரைக்காத்தற்கு இந்நாளி லும் இச்சங்கிலியாரை மணம்புரிய; ஏன்றுநின்றீரெனப்போற்றி=உடன்பட்டுநின்றீர் எனக்கென்குறை எனத்துதித்து;மன்றன்மலர்ச்சேவடியிணைக்கீழ்=மணங்கமழும் மலர் போலும் சிவந்ததிருவடியிணையின்கீழ்; வணங்கிமகிழ்ந்தார்வன்றொண்டர் = நமஸ்கரித் துக்களித்தார் நம்பியாரூரர்—எ-று. (உ௬௬)

ஒன்றும்என்னும்உம்மை இழிவுசிறப்பு. ஏன்று-நிற்றல். தமக்கேகடமையாக மேற்கொள்ளல். எனக்கென்குறை என்பது இசையெச்சம்.

ஆண்டுகொண்டவந்தணனாரவருக்கருளிக்கருணையினா
னீண்டகங்குல்யாமத்துநீங்கிவானினிறைமதியந்
தீண்டுகன்னிமாடத்துச்சென்றுதிகழ்சங்கிலியாராந்
தூண்டுசோதிவிளக்கனையார்தம்பாற்கனவிற்றோன்றினார்.

(இ-ள்.) ஆண்டுகொண்டவந்தணனாரவருக்கருளி=தடுத்தாட்கொண்ட தம்பிரா னார் நம்பியாரூரருக்கு இவ்வாறருளி; கருணையினானீண்டகங்குல்யாமத்துநீங்கி=அருளி னால் இரவினடுயாமத்து அங்குநின்றுமெழுந்தருளி,வானினிறைமதியந்தீண்டுகன்னிமா டத்துச்சென்று=வானின்கணுள்ள பூரணசந்திரன்தொடுகின்ற உயர்ந்த கன்னிமாடத் திற்போய்; திகழ்சங்கிலியாராம் = விளங்காநின்றசங்கிலிநாச்சியாரென்னும்; தூண்டு சோதிவிளக்கனையார்தம்பால்=தூண்டிய ஒளியினையுடைய விளக்குப்போலும் தோற்ற முடைய அவரிடத்து; கனவிற்றோன்றினார்=கனவில்வெளிப்பட்டார்-எ-று. (உ௬௭)

புறவொளியால் அகற்றுதற்கரிய அகவிருளையும் அகற்றிநிற்பாராதலின் விளக் கையும்தூண்டும்சோதியையுடைய அனையார்எனமாற்றிப்பொருள்கொள்ளலுமொன்று.

தோற்றும்பொழுதிற்சங்கிலியார்தொழுதுவிழுந்துபரவசமா
யாற்றவன்புபொங்கியெழுந்தடியேனுய்யவெழுந்தருளும
பேற்றுக்கென்யான்செய்வதெனப்பெரியகருணைபொழிந்தனைய
நீற்றுக்கோலவேதியருநேர்நின்றருளிச்செய்கின்ருர்.

(இ-ள்.) தோற்றும்பொழுதிற்சங்கிலியார்தொழுதுவிழுந்துபரவசமாய்=வெளிப்படும்பொழுது சங்கிலிநாச்சியார் விழுந்துபணிந்து அவசமாகி; ஆற்றவன்புபொங்கியெழுந்து=மிகவும் அன்புமேற்கொண்டெழுந்து; அடியேனுய்யவெழுந்தருளும்பேற்றுக்கு=அடியேன் உய்யும்படியெழுந்தருளிய பெருமைக்கு; என்யான்செய்வதென=யாது யான்செய்வது என்றுகூற; பெரியகருணைபொழிந்தனையநீற்றுக்கோலவேதியரும்=மிக்க கிருபையானது உண்ணின்றுமிகுந்துவழிந்தாற்போலும் திருநீற்றுக்கோலத்தையுடைய சிவபிரானும்; நேர்நின்றருளிச்செய்கின்ருர்=அவரெதிரேநின்று அருளிச்செய்வாராயினுர்-எ-று. (௨௩௮)

அருளை வெண்ணிறத்ததாகக்கூறுதல் ஆன்ருேர்வழக்காகலின் உண்ணிறைந்து பெருகிய திருவருட்பெருக்காகத் திருநீற்றை உபசரித்தார்.

சாருந்தவத்துச்சங்கிலிகேள்சாலவென்பாலன்புடையான்
மேருவரையின்மேம்பட்டதவத்தான்வெண்ணெய்நல்லூரி
லியாருமறியயாளுளவுரியானுன்னையெனையிரந்தான்
வார்கொண்முலையாய்நீயவனைமணத்தாலணைவாய்மகிழ்ந்தென்ருர்.

(இ-ள்.) சாருந்தவத்துச்சங்கிலிகேள் = அடையுந்தவத்தையுடைய சங்கிலியே கேட்பாயாக; சாலவென்பாலன்புடையான்=பெரிதும் நம்மிடத்து அன்புடையவன்; மேருவரையின்மேம்பட்டதவத்தான்=மேருமலையினும் மேன்மையுற்ற தவத்தையுடையவன்; வெண்ணெய்நல்லூரில்யாருமறியயாளுளவுரியான்=திருவெண்ணெய்நல்லூரில் யாவருமுணரும்படி யாம் தடுத்தாட்கொள்ளவுரிமையுற்றவன்; உன்னையெனையிரந்தான் =உன்னை (சீதனச்சுமணஞ்செய்துகொடுக்கும்வண்ணம்) என்னைவேண்டினுன்; வார்கொண்முலையாய் = கச்சணிந்தனங்களையுடையபெண்ணே; நீயவனைமணத்தான்மகிழ்ந்தணைவாயென்ருர்=நீ அவ்வன்றெண்டனை மணஞ்செய்து மகிழ்ந்தடைவாயென்று அருளிச்செய்தார்-எ-று. (௨௩௯)

சலியாமைபெருமைமுதலியசால்புடையநாய்த் தன்னையடைந்தபொருளைத் தன்மயமாக்கும் மேருவினுஞ்சிறந்த தவத்தினனென்பார் "மேருவரையின்மேம்பட்டதவத்தான்" எனவும், ஏனைத்தொண்டர்போலக் கொள்ளற்கவென்பார் "யாருமறியயாளுளவுரியான்" எனவும், அம்மேருமலையினும் மிகவேற்றமாகும் சலியாநிலைமையவாய்ந்திருந்தும் நின்னுற்சலித்தனுண்டாயிற்றென்பார் "உன்னையெனையிரந்தான்" எனவும், இது மறுக்கற்பாலதன்றென்பார் "மகிழ்ந்தணைவாய்" எனவுங்கூறினுரென்க.

ஆதிதேவர்முன்னின்றங்கருளிச்செய்தபொழுதின்கண்
மாதரார்சங்கிலியாருமாலுமயனுமறிவரிய
சீதமலர்த்தாமரையடிக்கீழ்ச்சேர்ந்துவீழ்ந்துசெங்நின்று
வேதமுதல்வர்முன்னடுக்கமெய்தித்தொழுதுவிளம்புவார்.

(இ-ள்.) ஆதிதேவர்முன்னின்றருளிச்செய்தபொழுதின்கண் = அனைவர்க்கும் முதற்கடவுளாகிய சிவபிரான் அக்கனவில் எதிர்நின்று அருளிச்செய்தகாலத்தில்; மாத

ராச்சங்கிலியாரும்=சங்கிலியாச்சியாரும்; மாலுமயனுமறிவரிய=திருமாலும் பிரமதேவரும் தேடி அறிதற்கரிய; சேமலர்த்தாமரையடிக்கீழ்ச்சேர்ந்து வீழ்ந்து எழுந்து நின்று=தண்ணிய தாமரைமலர்போலும் சிவந்ததிருவடியின்கீழ் அணுகிவணங்கி எழுந்துநின்று; வேதமுதல்வர் முன்னடுக்கமெய்தித்தொழுதுவிளம்புவார் = சிவபிரான் திருமுன்னே அச்சத்தால் நடுங்கி அஞ்சலிசெய்து அறிவிப்பாராயினார்-எ-று. (உசம)

அங்கு-அசை. ஆன்மாக்கள் அருங்கதியடையுமாறு விதிவிலக்குக்களை அருளிச்செய்த முதற்கடவுளென்பார் "வேதமுதல்வர்" என்றார். வேதத்தாற் பிரதிபாதிக்கும் முதற்பொருளென்னலுமொன்று.

எம்பிரானேநீரருளிச்செய்தார்க்குரியேன்யானிமையோர்
தம்பிரானேயருடலைமேற்கொண்டேன்றக்கவிதிமணத்தா
னம்பியாரூரருக்கென்னைநல்கியருளும்பொழுதிமையக்
கொம்பினுகங்கொண்டீர்க்குக்கூறுந்திறமொன்றுளதென்பார்.

(இ-ள்.) எம்பிரானேநீரருளிச்செய்தார்க்குரியேன்யான் = எமதுபெருமானே தேவரீர் கட்டளையிட்டருளிய அவர்மணஞ்செய்தற்கு யான் உரியேன்; இமையோர் தம்பிரானேயருடலைமேற்கொண்டேன்=தேவர்பிரானே உமதுதிருவருளைச் சிரமேற்கொண்டேன்; தக்கவிதிமணத்தால்=எம்மரபிற்குஇயைந்தவிதியையுடைய திருமணச்சடங்கால்;நம்பியாரூரருக்கென்னைநல்கியருளும்பொழுது=நம்பியாரூரருக்கு அடியேனை மணஞ்செய்துகொடுக்கத் திருவுளமாயின்;இமையக்கொம்பினுகங்கொண்டீர்க்கு=பார்வதியாரைத் திருமேனியின் ஓர்பாகத்திற்கொண்ட உமக்கு; கூறுந்திறமொன்றுளதென்பார் = அடியேன் விண்ணப்பஞ்செயற்பாலது ஒன்றுண்டென்று கூறுவாராயினார்-எ-று. (உசு)

எமக்கேயன்றி இமையவர்க்கும்பிரானுயுள்ள தேவரீர்கட்டளையைச் சிறியேன் மறுத்தற்குரியேனோவென்பார் "நீரருளிச்செய்தார்க்குரியேன் அருடலைமேற்கொண்டேன்" என்றாரென்க. "நல்கியருளும்பொழுது" என்பது கொடுத்தருளத்திருவுளமாயினென்னும்பொருள்பட உலகவழக்குப்பற்றிவந்தது.

பின்னும்பின்னன்முடியார்முன்பெருகநாணித்தொழுதுரைப்பார்
மன்னுந்திருவாரூரின்கணவர்தாமிகவுமகிழ்ந்துறைவ
தென்னுந்தன்மையறிந்தருளுமெம்பிராட்டிதிருமுலைதோய்
மின்னும்புரிநூலணிமார்பீரென்றார்குன்றாவிளக்கனையார்.

(இ-ள்.) பின்னும்பின்னன்முடியார்முன்=மீண்டும் சடைமுடியையுடைய சிவபிரான்திருமுன்னே; பெருகநாணித்தொழுதுரைப்பார்=மிகவும் நாணமடைந்து வணங்கிவிண்ணப்பிப்பார்; எம்பிராட்டிதிருமுலைதோய்=பார்வதியாருடைய திருமுலைகளைத் தோய்கின்ற; மின்னும்புரிநூலணிமார்பீர்=ஒளிவீசும் முப்புரிநூலையணிந்த மார்பையுடையவரே; மன்னுந்திருவாரூரின்கணவர்மிகவுமகிழ்ந்துறைவது = நிலைபெற்றதிருவாரூரின்கண்ணே அத்தொண்டர் மிகவும் நேசித்துவாழ்வது; என்னுந்தன்மையறிந்தருளும்=என்னும் இயல்பைச் சிந்தித்தருளும்; என்றார்குன்றாவிளக்கனையார்=என்றுவிண்ணப்பித்தார் ஒளிகுறையாதவிளக்கையொத்த சங்கிலியாச்சியார்-எ-று. (உ.எ

தாம்-அசை. கற்புடைமகளிர் கணவர்பிரிந்தவழிக் கவல்வரென்பது எம்பிராட்டி நீங்கப்பெறாத உமக்கு இனிதுவிளங்குமென்பார் "இமயக்கொம்பினைக்கொண்டீர்" எனவும், "எம்பிராட்டிதிருமுலைத்தாய்மார்பீர்" எனவுஞ் சுட்டி, அவரியல்பை அறிந்தருளுமென இசைத்தாரென்க.

வேறு.

மற்றவர்தம்முரைகொண்டுவன்றொண்டர்நிலைமையினை
யொற்றிநகரமர்ந்தபிரானுணர்ந்தருளியுரைசெய்வார்
பொற்றொடியாயுனையிகந்துபோகாமைக்கொருசபத
மற்றமுறுநிலைமையினாலவன்செய்வானெனவருளி.

(இ-ள்.) ஒற்றிநகரமர்ந்தபிரான் = ஆதிபுரியில்வீற்றிருக்கும் அமலரானவர்; அவர்தம்முரைகொண்டு = அச்சங்கிலிநாச்சியாரது வார்த்தையைக்கேட்டருளி; வன்றொண்டர்நிலைமையினையுணர்ந்தருளியுரைசெய்வார் = நம்பியாரூரருடைய நிலைமையினை அறிந்தருளி அருளிச்செய்வார்; பொற்றொடியாயற்றமுறுநிலைமையினால் = சங்கிலியே! பிரிவுநிகழுமென்று நீவருந்தும் இயல்பினால்; உனையிகந்துபோகாமைக்கு = உனைப்பிரிந்தகலாமலிருப்பதற்கு; ஒருசபதமவன்செய்வானெனவருளி = ஒருசபதத்தை அவன் செய்துகொடுப்பானென்று அருளிச்செய்து-எ-று. (உ௪௩)

மற்று-அசை. சபதமென்பது-இன்னவாறு செய்வேனென நிச்சயித்துக்கூறி, இங்ஙனஞ்செய்யாவிடில் இன்னவாறுவேனென்று வற்புறுத்தலாயினும், ஈண்டு இன்னவாறு செய்வேனென்பதுமாத்திரம் கொள்க. அச்சபதம்செய்யவேண்டுவதின்றாயினும் அவன்பிரிவானென்று நீ அற்றமுறுநிலைமையினால் அவன்செய்வானென்றாரென்க.

வேயனையதோளியார்பானின்றுமீண்டருளித்
தூயமனமகிழ்ந்திருந்ததோழனார்பாலணைந்து
நீயவளைமணம்புணருநிலையுரைத்தோமதற்கவள்பா
லாயதொருகுறையுன்னாலமைப்பதுளதென்றருளி.

(இ-ள்.) வேயனையதோளியார்பானின்றுமீண்டருளி = மூங்கில்போலுந் தோள்களையுடைய சங்கிலிநாச்சியாரிடத்தினின்றும் எழுந்தருளி; தூயமனமகிழ்ந்திருந்த தோழனார்பாலணைந்து = சுத்தமாகிய திருவுள்ளத்திலே களிகூர்ந்திருந்த சுந்தரமூர்த்திநாயனாரிடஞ்சென்று; நீயவளைமணம்புணருநிலையுரைத்தோம் = நீ அச்சங்கிலியை மணஞ்செய்யும் நிலைமையை அவளிடத்துக்கூறினோம்; அதற்கவள்பாலுன்னாலமைப்பதாய தொருகுறை = அம்மணத்திற்காக அவளிடத்தே உன்னாற்செயற்பாலதாகியதொரு குறை; உளதென்றருளி = உள்ளதென்று அருளிச்செய்து-எ-று. (உ௪௪)

மகிழ்ச்சியாவது நமதுகாரியத்தை முடித்துக்கொண்டே வருவரென்னும் களிப்பு. குறை-இன்றியமையாதது. இதனை "வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக் குறை-தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு." என்னுந்திருக்குறளானுணர்க.

வன்றொண்டர்மனங்களித்துவணங்கியடியேன்செய்ய
நின்றகுறையாதென்ன நீயவளைமணம்புணர்தற்
கான்றியுடனேநிகழவொருசபதமவண்முன்பு
சான்றுகிடைத்திவ்விரவேசெய்கவெனவருள்செய்தார்.

1-தியாகர் சங்கிலியார் சொற்பனத்தில் நின்னை சுந்தரனுக்களித்தோமெனை. அதற்கவர் பரவையார்பால் விருப்
புள்ளாராயிற்றூரெனை. இறைவர் உன்னைப்பிரியாதிருக்கச் சபதஞ்செய்துத்தருவானென்றது.




2 தியாகா சுந்தரா ீ சங்கிலியை பிரியாதிருக்கச் சபதஞ்செயக்கேட்கிருளென. பிஞ்சகா தேவரீர் ஆலயத்தை
விட்டு மகிழின்கீழிருக்க வருந்தினது. 3-இறைவர் சங்கிலியே சுந்தரன் உனக்குச் சபதஞ்செய்வதை கோயிலில்

(இ-ள்.) வன்றொண்டர்மனங்களித்துவணங்கி=நம்பியாரூரர் மனமகிழ்ந்து நமஸ்கரித்து; அடியேன்செய்யநின்றகுறையாதென்ன=அடியேன் செயற்பாலதாகும் இன்றியாமையாத்தொழில் யாதென்றுகேட்க; நீயவளைமணம்புணர்தற்கு=நீ அவளை மணஞ்செய்வதற்காக; ஒன்றியுடனேநிகழ்வதொருசபதம்=ஒருமைப்பாடுடைமையாய்ப் பிரியாமலிருப்பதாகிய ஒருசபதத்தை; இவ்விரவேயவள்முன்புசென்றுகிடைத்து=இன்றிரவே அவள்முன்னே போய் அணுகி; செய்கவெனவருள்செய்தார்=நீசெய்வாயாகவென்று அருளிச்செய்தார்-எ-று. இம்மூன்றும்குளகம். (உ௪௫)

என்செய்தாலிதுமுடியுமதுசெய்வன்யானதற்கு
மின்செய்தபுரிசடையீரருள்பெறுதல்வேண்டுமென
முன்செய்தமுறுவலுடன்முதல்வரவர்முகநோக்கி
யுன்செய்கைதனக்கினியென்வேண்டுவதென்றுரைத்தருள.

(இ-ள்.) என்செய்தாலிதுமுடியுமதுசெய்வல்யான் = எதுசெய்தால் இம்மணம் முடியுமோ அது யான்செய்வேன்; மின்செய்தபுரிசடையீர் = மின்போலும் விளங்குகின்ற முறுக்குத்தங்கிய சடையையுடையவரே; அதற்கருள்பெறுதல்வேண்டுமென = அவ்வாறு சபதஞ்செய்தற்கு உம்முடையதிருவருள் கிடைக்கவேண்டுமென்றுகூற; முதல்வர்முன்செய்தமுறுவலுடனவர்முகநோக்கி=சிவபிரான் நம்பியாரூரர்முன்னே செய்யப்பட்டஇளநகையோடு அவர்முகத்தைப்பார்த்து; உன்செய்கைதனக்கினியென்வேண்டுவதென்றுரைத்தருள=நீசபதங்கூறுவதற்கு இனி என்ன ஆகவேண்டுமென்று வினவியருள-எ-று. (உ௪௬)

வம்பணிமென்முலையவர்க்குமனங்கொடுத்தவன்றொண்டர்
நம்பரிவர்பிறபதியுநயந்தகோலஞ்சென்று
கும்பிடவேகடவேனுக்கிதுவிலக்காமெனுங்குறிப்பாற்
றம்பெருமான்றிருமுன்புதாம்வேண்டுங்குறையுரைப்பார்.

(இ-ள்.) வம்பணிமென்முலையவர்க்குமனங்கொடுத்தவன்றொண்டர் = கச்சணிந்த மெல்லிய தனங்களையுடைய சங்கிலிநாச்சியாருக்கு மனதைக்கொடுத்த நம்பியாரூரர்; நம்பரிவர்பிறபதியுநயந்தகோலம்=இப்பிரானார் பிறதிருப்பதிகளிலும் கொண்டருளியதிருக்கோலத்தை; சென்றுகும்பிடக்கடவேனுக்கு=போய்த்தரிசித்தற்குரியேனாகிய எனக்கு; இதுவிலக்காமெனுங்குறிப்பால்=இச்சபதம் வழுவாகும் என்னுங்குறிப்பினால்; தம்பெருமான்றிருமுன்பு = தம்முடைய தலைவர்திருமுன்னே; தாம்வேண்டுங்குறையுரைப்பார்=தாம் விரும்பியகுறையைச் சாற்றுவார்-எ-று. இவ்விரண்டுங்குளகம். ()

பரமர்கொண்டருளிய திருக்கோலத்தைப் பலதலங்களினுஞ்சென்று பணியவேண்டியநமக்கு இச்சபதம் இடையூறாகுமென எண்ணி இசைப்பாரென்பதுகருத்து. ஏ-இசைநிறை.

சங்கரர்தாள்பணிந்திருந்துதமிழ்வேந்தர்மொழிகின்றார்
மங்கையவடனைப்பிரியாவகைசபதஞ்செய்வதனுக்
கங்கவளோடியான்வந்தாலப்பொழுதுகோயில்விடத்
தங்குமிடந்திருமகிழ்க்கீழ்க்கொளவேண்டுமெனத்தாழ்ந்தார்.

(இ-ள்.) சங்கரர்தாள்பணிந்திருந்து=சிவபிரான்திருவடிகளைவணங்கித் திருமுன்னிருந்து; தமிழ்வேந்தர்மொழிகின்றார்=நம்பியாரூரர் நவிலுவார்; மங்கையவடனைப்

பிரியாவகைசபதஞ்செய்வதனுக்கு=சங்கிலியை யான்பிரியாதிருக்கும்வண்ணம் சபதஞ் செய்யும்பொருட்டு; அங்கவளோடியான்வந்தால்=அச்சங்கிலியாரோடு யான் உமதுசந் நிதிக்கு அணுகினால்; அப்பொழுதுகோயில்விட=அப்பொழுது திருக்கோயிலையகன்று; தங்குமிடந்திருமகிழ்க்கீழ்க்கொளவேண்டுமெனத்தாழ்ந்தார்=வீற்றிருக்குமிடம் திருமகிழின்கீழாகக்கொள்ளவேண்டுமென்று வணங்கினார்-எ-று. (௨௪௮)

பணிந்திரந்தென்றும்பாடம். சங்கரர்-சுகஞ்செய்பவர். தமிழைவளர்த்தவரென்பார் "தமிழ்வேந்தர்" என்றார். விட்டென்பது விடவெனத்திரிந்தது.

தம்பிரான்றோழரவர்தாம்வேண்டிக்கொண்டருள
வும்பர்நாயகருமதற்குடன்பாடுசெய்வாராய்
நம்பிநீசொன்னபடிநாஞ்செய்துமென்றருள
வெம்பிரானேயரியதினியெனக்கென்னெனவேத்தி.

(இ-ள்.) தம்பிரான்றோழரவர்தாம்வேண்டிக்கொண்டருள=நம்பியாரூரர் தாம் இவ்வாறு சிவபிரானைப் பிரார்த்திக்க; உம்பர்நாயகருமதற்குடன்பாடுசெய்வாராய்=தேவர்க்குமுதல்வராகிய சிவபிரானும் அவர்வேண்டுகோளுக்கு உடன்பட்டவர்போன்று; நம்பிநீசொன்னபடிநாஞ்செய்துமென்றருள=நம்பியே நீசொல்லியவாறு நாம்செய்வோமென்று அருளிச்செய்ய; எம்பிரானேயரியதினியெனக்கென்னெனவேத்தி=அவர் எமதுபிரானே இனிமேல் எனக்கு அரியது யாதென்றுதுதித்து-எ-று. (௨௪௯)

உடன்பாடுசெய்வாராயென்பது செய்யாமைமேற்று; இதில் ஆதல் உவமவுருபு.

அஞ்சலிசென்னியின்மன்னியருள்பெற்றுப்புறம்போதச்
செஞ்சடையாரவர்மாட்டுத்திருவிளையாட்டினைமகிழ்ந்தோ
வஞ்சியிடைச்சங்கிலியார்வழியடிமைப்பெருமையோ
துஞ்சிருண்மீளவுமணைந்தாரவர்க்குறுதிசொல்லுவார்.

(இ-ள்.) அஞ்சலிசென்னியின்மன்னி = அஞ்சலியைச் சிரசின்மேல் நிலைபெறக்கொண்டு; அருள்பெற்றுப்புறப்போத=சிவபிரான்திருவருளைப்பெற்றுப் புறம்பேசெல்ல; செஞ்சடையாரவர்மாட்டுத்திருவிளையாட்டினைமகிழ்ந்தோ=சிவபிரானார் அவரிடத்தே ஓர்திருவிளையாட்டினைத் திருவுள்ளத்தடைத்தோ; வஞ்சியிடைச்சங்கிலியார்வழியடிமைப்பெருமையோ = வல்லிசாதக்கொடிபோலும் நுணுகியஇடையையுடைய சங்கிலிநாச்சியாரது பரம்பரைத்தொண்டின்சிறப்போ; அவர்க்குறுதிசொல்லுவார்=அச்சங்கிலிநாச்சியார்க்கு உறுதியை அறிவிப்பாராய்; துஞ்சிருண்மீளவுமணைந்தார்=அந்நடுயாமத்திலே மீண்டும்அடைந்தார்-எ-று. இவ்விரண்டும் குளகம். (௨௫௰)

நம்பியாரூரர்கொள்கைக்கு உடன்பட்டார்போன்றுநடித்துச் சங்கிலிநாச்சியாருக்கு உறுதிசொல்ல அணைந்தமை ஒருதிருவிளையாடல்போலுமென்பார் "அவர் மாட்டுத் திருவிளையாட்டினைமகிழ்ந்தோ" எனவும், அங்ஙனம் அணைதற்குக்காரணம் அந்நாச்சியாரது பரம்பரைத்தொண்டின் பெருமைபோலுமென்பார், "சங்கிலியார்வழியடிமைப்பெருமையோ" எனவுங்கூறினார்.

சங்கிலியார்தம்மருங்குமுன்போலச்சார்ந்தருளி
நங்கையுனக்காரூரனயந்துசூளுறக்கடவ

ணங்குநமக்கெதிர்செய்யுமதற்குநீயிசையாதே
கொங்கலர்பூமகிழின்கீழ்க்கொள்வதெனக்குறித்தருள.

(இ-ள்.) சங்கிலியார்தம்மருங்குமுன்போலச்சார்ந்தருளி = சங்கிலிநாச்சியாரிடத்து முன்போலக் கனவிலெழுந்தருளி; நங்கையுனக்காரூரனயந்துரூறக்கடவன்=நங்காய் நினக்கு நம்பியாரூரன் விரும்பிச் சபதஞ்செய்துகொடுக்கக் கடவன்; அங்கு நமக்கெதிர்செய்யுமதற்குநீஇசையாது=அவன் அங்கே நமது சந்நிதிக்கெதிர்நின்றுகூறும் அதற்கு நீ உடன்படாமல்; கொங்கலர்பூமகிழின்கீழ்=வாசனையின்டலர்கின்ற மலர்களையுடைய திருமகிழின்கீழ்ச் செய்யும்படி; கொள்வதெனக்குறித்தருள = கேட்பதென்று குறிப்பித்தருள-எ-று. ஏ. இசைநிறை. (உருஎ)

மற்றவருங்கைகுவித்துமாலயனுக்கறிவரியீ
ரற்றமெனக்கருள்புரிந்தவதனிலடியேனாகப்
பெற்றதியானெனக்கண்கள்பெருந்தாரைபொழிந்திழிய
வெற்றிமழவிடையார்தஞ்சேவடிக்கீழ்வீழ்ந்தெழுந்தார்.

(இ-ள்.) அவருங்கைகுவிந்து=அச்சங்கிலிநாச்சியாரும் அஞ்சலிசெய்துவணங்கி; மாலயனுக்கறிவரியீர்=திருமாலுக்கும் பிரமதேவருக்கும் தேடியறிய அரியீரே; அற்றமெனக்கருள்புரிந்தவதனில்=இரகசியத்தை எனக்கு இசைந்தருளினமையால்; யானடியேனாகப்பெற்றதென = யான் உமக்கு வழியடிமையாகப்பெற்றது என்று; கண்கள் பொழிந்துபெருந்தாரையிழிய=கண்களாற்பொழியப்பட்டு மிக்க ஆனந்தபாஷ்பம் வழிய; வெற்றிமழவிடையார்தஞ்சேவடிக்கீழ்வீழ்ந்தெழுந்தார்=வெற்றிதங்கிய இளமையாகிய இடபத்தையுடைய விடலரது திருவடிகளின்கீழ் வணங்கியெழுந்தார்-எ-று. ()

இவ்விரண்டும் குளகம். மற்று, அசை. பொழியப்பட்டு என்னும் செயப்பாட்டுவினை செய்வினையாய் நின்றது. இவ்வுண்மையையுணர்ந்தாவழி வழித்தொண்டுடையளென வழங்குதற்கு உரியவளாகவேனென்பார், "அற்றமெனக்கருள்புரிந்தவதனிலடியேனாப்பெற்றதியான்" என்றார். ஆனந்தக்கண்ணீர்சொரிதலும் வணங்குதலும் சொப்பனத்துமுளவாகலின் இங்ஙனங்கூறினார்.

தையலார்தமக்கருளிச்சடாமகுடரெழுந்தருள
வெய்தியபோததிசயத்தாலுணர்ந்தெழுந்தவவிரவின்கட்
செய்யசடையாரருளின்றிறநினைந்தேகண்டுயிலா
ரையமுடனருகுதுயில்சேடியரையணைந்தெழுப்பி.

(இ-ள்.) தையலார்தமக்கருளிச்சடாமகுடரருளியெழுந்தருள = சங்கிலிநாச்சியார் தமக்குச் சிவபிரான் இவ்வாறருளிச்செய்து எழுந்தருள; எய்தியபோது=சொப்பனம் நிகழ்ந்தபொழுது; அதிசயத்தாலுணர்ந்தெழுந்து = ஆச்சரியத்தால் விழித்தெழுந்து; அவ்விரவின்கட்செய்யசடையாரருளின்றிறநினைந்துகண்டுயிலார்=அவ்விரவிலே பரமர் எழுந்தருளிப்பாலித்த திருவருளின்றிறத்தைச் சிந்தித்து உறங்காராய்; ஐயமுடன்=இவ்வாறுநிகழ்ந்தது யாதென்று சந்தேகத்துடனே; அருகுதுயில்சேடியரையணைந்தெழுப்பி=அருகேநித்திரைசெய்கின்ற பாங்கியரை அணுகி எழுப்பி-எ-று. (உருஅ)

ஏ. இசைநிறை. கனவுஉடம்பிற்கு நனவுஉடம்பு வேறாகலின் இவ்வாறுநிகழ்ந்தது யாதென ஐயம் உண்டாயிற்றென்க.

நீங்குதுயிற்பாங்கியர்க்குநீங்கலெழுத்தறியுமவர்
தாங்கனவிலெழுந்தருளித்தமக்கருளிச்செய்ததெல்லாம்
பாங்கறியமொழியவவர்பயத்தினுடனதிசயமுந்
தாங்குமகிழ்ச்சியுமெய்தச்சங்கிலியார்தமைப்பணிந்தார்.

(இ-ள்.) துயினீங்குபாங்கியர்க்கு=துயிலுணர்ந்ததோழியர்க்கு; நீங்கலெழுத்தறியுமவர்=திருவொற்றியூர் நீங்கலாகவென்று வரிப்பிளந்தெழுதும் எழுத்தறியும்பெருமான்; கனவிலெழுந்தருளித் தமக்கருளிச்செய்ததெலாம் = தமக்குச் சொப்பனத்திலெழுந்தருளி அருளிச்செய்தமுறைமைகளையெல்லாம்; பாங்கறியமொழிய=முறைமையாக அவர் அறியும்படி சங்கிலியார் கூற; அவர்பயத்தினுடனதிசயமுந்தாங்குமகிழ்ச்சியுமெய்த=அப்பாங்கியர்கள் அச்சத்துடன் விம்மிதமும் உட்கொண்ட உவகையும்அடைய; சங்கிலியார்தமைப்பணிந்தார்=சங்கிலிநாச்சியாரை வணங்கினர்கள்-எ-று. (உ௫௪)

இவ்விரண்டும் குளகம். அவர்மாட்டெங்கழ்ந்த திருவருட்செயலைநோக்கி அவர்பாலச்சமும், அப்பெருமான் அருளின்திறத்தைநோக்கி அதிசயமும், இத்தகையருக்கு ஏவல்புரியப்பெற்றோமென்னும் சிந்தையால் மகிழ்ச்சியும் ஒருங்கெய்தப்பெற்றனர் என்பார் "அவர்பயத்தினுடனதிசயமுந்தாங்குமகிழ்ச்சியுமெய்த" என்றார்.

சேயிழையார்திருப்பள்ளியெழுச்சிக்குமலர்தொடுக்குந்
தூயபணிப்பொழுதாகத்தொழில்புரிவாருடன்போதக்
கோயிலின்முன்காலமதுவாகவேகுறித்தணைந்தா
ராயசபதஞ்செய்யவரவுபார்த்தாரூரர்.

(இ-ள்.) சேயிழையார்=செவ்விய ஆபரணத்தையணிந்த சங்கிலிநாச்சியார்; திருப்பள்ளியெழுச்சிக்குமலர்தொடுக்குந்தூயபணிப்பொழுதாக = பெருமான்திருப்பள்ளியெழுச்சிக்கு மலர்தொடுக்கும் செவ்விய திருத்தொண்டிற்குரிய விடியற்காலம் அணுகலும்; தொழில்புரிவாருடன்போத = அத்திருத்தொண்டைச்செய்யும் சேடியருடன் ஆலயத்திற்குச்செல்ல; ஆரூரராயசபதஞ்செய்ய=நம்பியாரூரர் சிவபிரானருளியசபதத்தைச் செய்தற்கு; அதுவேகாலமாகக்குறித்து=அதுவே காலமாகநிச்சயித்து; வரவுபார்த்துக்கோயிலின்முன்னணைந்தார்=சங்கிலிநாச்சியார்வரவை நோக்கிக்கொண்டு ஆலயத்தின்முன்னாரணுகினர்-எ-று. ஏகாரம். பிரிநிலை. (உ௫௫)

நின்றவரங்கெதிர்வந்தநேரிழையார்தம்மருங்கு
சென்றணைந்துதம்பெருமான்றிருவருளின்றிறங்கூற
மின்றியங்குநுண்ணிடையார்விதியுடன்பாடெதிர்விளம்பா
ரொன்றியநாணொடுமடவாருடனொதுங்கியுட்புகுந்தார்.

(இ-ள்.) நின்றவர்=அவ்வாலயத்தின்முன்னின்ற நம்பியாரூரர்; அங்கெதிர்வந்த நேரிழையார்தம்மருங்குசென்றணைந்து = அவ்விடத்துத் தம்மெதிரேவந்த சங்கிலிநாச்சியார்பாலணுகி; தம்பெருமான்றிருவருளின்றிறங்கூற = தம்முதல்வராகிய சிவபெருமான் திருவருளின்வரலாற்றைச் செப்பியருள; மின்றியங்குநுண்ணிடையார் = மின்னும்மயங்கும் நுண்ணியஇடையையுடைய சங்கிலிநாச்சியார்; விதியுடன்பாடெதிர்விளம்பார்=விதியாகியஉடன்படுதலும் எதிர்மறுத்தலும் கூறாதவராய்; ஒன்றியநாணொடும்= தம்மிடத்துத்தங்கிய நாணத்தோடும்; மடவாருடனொதுங்கியுட்புகுந்தார்=சேடியர்சூழ ஒருபுடையொதுங்கி உள்ளேசென்றார்-எ-று. (உ௫௬)



சுந்தரமூர்த்திசுவாமிகள்சங்கிலியாருக்கு ஆலயத்திற்சபதஞ்செய்வதைவிலக்கி மகிழின்கீழ்ச்செய்துக்கொடுத்தது.

திருவருளின்றிறமாவது சபதஞ்செய்துகொடுக்கும்படி சிவபிரான் தமக்குக் கட்டளையிட்டது. விதியுடன்பாட்டெதிர்விளம்பாரென்பதுபாடமேல், விதிப்படி உடன்பட்டமையால் எதிர்மொழிகொடாராய் என்றுரைக்க.

அங்கவர்தம்பின்சென்றவாரூரராயிழையீ
ரிங்குநான்பிரியாமையுமக்கிசையும்படியியம்பத்
திங்கண்முடியார்திருமுன்போதுவீரெனச்செப்பச்
சங்கிலியார்கனவுரைப்பக்கேட்டதாதியர்மொழிவார்.

(இ-ள்.) அவர்தம்பின்சென்றவாரூரர்=அந்தச்சங்கிலியார்பின்னே தொடர்ந்து சென்ற நம்பியாரூரர்; ஆயிழையீரிங்குநான்பிரியாமை=மகளிர்களே இவ்வூரில் நான் உம்மைப்பிரியாதிருத்தலை; உமக்கிசையும்படியியம்ப=உமக்குப்பொருந்தும்படி சபதஞ் செய்ய;திங்கண்முடியார்திருமுன்போதுவீரெனச்செப்ப=சிவபிரான்திருமுன்னேநீவிர் செல்லுவீரென்று கூற; சங்கிலியார்கனவுரைப்பக்கேட்டதாதியர்மொழிவார் = அன்றிரவு சங்கிலிநாச்சியார் தாங்கண்டகனவை அறிவிக்கக்கேட்ட சேடியர் அவருக்கு உத்தரங்கூறுவார்-எ-று. (உ௫எ)

சங்கிலிநாச்சியாரை முன்பு தனியேவிளித்து விடைபெறுமையின் பின்பொதுமையாக ஆயத்தோடு உடன்படுத்தி விளித்தனரென்க. அங்கு. அசை.

எம்பெருமானிதற்காகவெழுந்தருளியிமையவர்க
டம்பெருமான்றிருமுன்புசாற்றுவதுதகாதென்ன
நம்பெருமான்வன்றொண்டர்நாதர்செயலறியாதே
கொம்பனையீர்யான்செய்வதெங்கென்றுகூறுதலும்.

(இ-ள்.) எம்பெருமானிதற்காகவெழுந்தருளி=எம்பெருமானே இச்சபதத்திற்காகத் தேவரீரெழுந்தருளி; இமையவர்கடம்பெருமான்றிருமுன்புசாற்றுவதுதகாதென்ன=தேவாதிபராகிய சிவபிரான்றிருமுன்னேகூறுவது தக்கதன்றென்று சொல்ல; நம்பெருமான்வன்றொண்டர்=நம்பிரானாராகிய நம்பியாரூரர்; நாதர்செயலறியாது = சிவபிரான்றிருவருளின்றிறத்தை அறியாமல்; கொம்பனையீர்யான்செய்வதெங்கென்றுகூறுதலும்=பூங்கொம்பைநிகர்த்தபொலிவையுடையமகளிர்களே யாம்சபதஞ்செய்வது எவ்விடத்தென்று கேட்டலும்-எ-று. ஏ. இசைநிறை. (உ௫அ)

மாதரவர்மகிழ்க்கீழேயமையுமெனமனமருள்வா
ரீதலராகிலுமாகுமிவர்சொன்னபடிமறுக்கி
னாதலினுடன்படலேயமையுமெனத்துணிந்தாகிற்
போதுவீரெனமகிழ்க்கீழவர்போதப்போயணைந்தார்.

(இ-ள்.) மாதரவர்மகிழ்க்கீழேயமையுமென=சேடியர்கள் மகிழின்கீழேசபதஞ் செய்தாற்போதுமென்றுகூற;மனமருள்வார்=அதனால் மனங்கவல்கின்ற நம்பியாரூரர்; இவர்சொன்னபடிமறுக்கின்=இச்சேடியர் சொல்லியவாற்றை யாம்மறுத்தால்; ஈதலராகிலுமாகும்=இதுபழிமொழியானாலும் ஆகும்; ஆதலினுடன்படலேயமையுமெனத் துணிந்து=ஆதலால் அவர்கூறியவாறு உடன்படுதலே பொருந்துமெனநிச்சயித்து; ஆகிற்போதுவீரென = இம்மகிழின்கீழ்ச்சத்தியஞ்செய்தல் உமக்கு உடன்பாடானால் எம்முடன்வருவீரென்று; மகிழ்க்கீழவர்போதப்போயணைந்தார்=மகிழின்கீழ் அவருரூ செல்லத் தாமுஞ்சென்றார்-எ-று. (உ௫௯)

சிவபிரானை ஆலயத்திலிராது மகிழின்கீழிருக்கத் தாம்பிரார்த்தித்துக்கொண்டதை இவரறிந்தாராதலின் மறுக்கில் அலராகிலும் ஆகுமென்றும், அலரானால் தாங் குறித்த மணம் தடைப்படுமாகலின் உடன்படலேயமையுமென்றும் துணிந்தனரென்க.

தாவாதபெருந்தவத்துச்சங்கிலியாருங்காண
மூவாததிருமகிழைமுக்காலும்வலம்வந்து
மேவாதிங்கியானகலேனெனநின்றுவிளம்பினார்
பூவார்தண்புனற்பொய்கைமுனைப்பாடிப்புரவலனார்.

(இ-ள்.) தாவாதபெருந்தவத்துச்சங்கிலியாருங்காண = குறைவில்லாத பெரிய தவத்தையுடைய சங்கிலிநாச்சியாரும் (சேடியரும்) காண; மூவாததிருமகிழைமுக்காலும்வலம்வந்து = அழிவில்லாததிருமகிழை மூன்றுதரமுங்குறையாது வலம்வந்து; மேவாதிங்கியானகலேனெனநின்றுவிளம்பினார்=யான் இங்கிராது நீங்கேனென்று (மகிழின்கீழ்) நின்று சபதங்கூறினார்; பூவார்தண்புனற்பொய்கை = மலர்களும் தட்பமும் வாய்ந்த நீர்மலிந்த பொய்கைசூழ்ந்த; முனைப்பாடிப்புரவலனார்=திருமுனைப்பாடி நாட்டுத்தலைவராகிய நம்பியாரூரர்.—எ-று. (உ௬0)

உம்மைஇரண்டனுள் முந்தியது எதிரதுதழீஇயஎச்சவும்மை; பிந்தியது முற்றும்மை. மூவாமை-தெய்வீகத்தால் முதிராமையுமாம்.

மேவியசீராரூரர்மெய்ச்சபதவினைமுடிப்பக்
காவியினேர்கண்ணாருங்கண்டுமிகமனங்கலங்கிப்
பாவியேனிதுகண்டேனென்றம்பிரான்பணியாலென்
றாவிசோர்ந்தழிவாரங்கொருமருங்குமறைந்தயர்ந்தார்.

(இ-ள்.) மேவியசீராரூரர்=நிலைபெற்றபுகழையுடைய நம்பியாரூரர்; மெய்ச்சபதவினைமுடிப்ப=(சங்கிலிநாச்சியாருக்கு உம்மைப்பிரியேனென்று)உண்மையாகச் சபதஞ் சொல்லிமுடிக்க; காவியினேர்கண்ணாருங்கண்டு=கருங்குவளைபோலும் கரியகண்களையுடைய சங்கிலிநாச்சியாரும் (அச்சபதவினையைக்) கண்டு; மிகமனங்கலங்கி=பெரிதும் மனக்கலக்கம் அடைந்து; தம்பிரான்பணியால்=சிவபிரான் சொப்பனத்திற் பணித்தருளியவாற்றால்;பாவியேனிதுகண்டேனென்று=பாவியாகியயான் இப்பொய்ச்சபதத்தைப் பார்த்தேனென்று; ஆவிசோர்ந்தழிவார்=உயிர்சோர்ந்து வருந்துகின்றஅவர்; அங்கொருமருங்குமறைந்தயர்ந்தார்=அங்கு ஒருபுறந்தொதுங்கித் துக்கித்தனர்.—எ-று. (உ௬க)

பெருமான்சந்நிதியிலே ஒருவர் துணிந்து கூறும் பொய்ச்சபதத்தை நோக்குவது பெரும்பாவமென்பார் "பாவியேன்" எனவும், பரமர்கட்டளையால் இது பார்க்க நேர்ந்ததென்பார் "தம்பிரான்பணியாலிதுகண்டேன்" எனவும் கூறினார். ஆவிசோர்ந்தழிதலாவது-துக்கமேலீட்டாற் செயலறவருந்தல்.

திருநாவலூராளிதம்முடையசெயன்முற்றிப்
பொருநாகத்துரிபுனைந்தார்கோயிலினுட்புகுந்திறைஞ்சி
யருணாளுந்தரவிருந்தீர்செய்தவாறழகிதெனப்
பெருநாமமெடுத்தேத்திப்பெருமகிழ்ச்சியுடன்போந்தார்.

(இ-ள்.) திருநாவலூராளிதம்முடையசெயன்முற்றி=நம்பியாரூரர் தாம்செய்ய வேண்டிய சபதவினையைமுடித்து; பொருநாகத்துரிபுனைந்தார்=பொருகின்ற யானையின்

தோலைப் போர்த்தபிரானது; கோயிலினுட்புகுந்திறைஞ்சி = திருக்கோயிலினுள்ளே சென்றுவணங்கி; அருளாரூந்தரவிருந்தீர் = திருவருளைத் தினமும் அடியேனுக்குப்பாலிக்க இருந்தவரே;செய்தவாறழகிதென=தேவரீர்செய்தவகை அழகாக இருந்ததென்று; பெருநாமமெடுத்தேத்தி=பெரியதிருநாமங்களை எடுத்துத்துதித்து; பெருமகிழ்ச்சியுடன் போந்தார்=பேரானந்தத்தோடு சென்றருளினார்.—எ-று. (உசுஉ)

அடியேன் வழுவினும் வழுவாதொழியினும் என்றும் அருள்செய்தற்கு உரியீரென்பார் "அருளாரூந்தரவிருந்தீர்" எனவும், தமியேனைப் புறக்கணித்துச் சங்கிலியாற் சார்ந்தீரென்பார், "செய்தவாறழகிது" எனவும் கூறி விண்ணப்பித்து, இங்ஙனம் இயற்றினும் கருத்துமுற்றுவித்தமையின் பெருமகிழ்ச்சியுடன் போந்தாரென்பதாம்.

வார்புனையும்வனமுலையார்வன்றொண்டர்போனதற்பின்
றார்புனையுமண்டபத்துத்தம்முடையபணிசெய்து
கார்புனையுமணிகண்டர்செயல்கருத்திற்கொண்டிறைஞ்சி
யேர்புனையுங்கன்னிமாடம்புகுந்தாரிருள்புலர.

(இ-ள்.) வார்புனையும்வனமுலையார்=கச்சணியும் அழகியதனங்களையுடைய சங்கிலிநாச்சியார்; வன்றொண்டர்போனதற்பின் = நம்பியாரூரர் ஆலயத்திற்குச்சென்ற பின்பு; தார்புனையுமண்டபத்துத்தம்முடையபணிசெய்து = மாலைகட்டும்திருமண்டபத்தில் தாம்செய்யும் புஷ்பத்தொண்டுபுரிந்து; கார்புனையுமணிகண்டர்செயல் = கருநிறம் வாய்ந்த நீலகண்டத்தையுடைய கடவுளின்திருவருளை; கருத்திற்கொண்டிறைஞ்சி=திருவுள்ளத்திற் கொண்டுவணங்கி; ஏர்புனையுங்கன்னிமாடமிருள்புலரப்புகுந்தார் = அழகமைந்த கன்னிமாடத்தில் விடியும்வேளையிற்சென்றார்.—எ-று. (உசுங)

அன்றிரவேயாதிபுரியொற்றிகொண்டாராட்கொண்ட
பொன்றிகழ்பூண்வன்றொண்டர்புரிந்தவினைமுடித்தருள
நின்றபுகழ்த்திருவொற்றியூர்நிலவுதொண்டர்க்கு
மன்றல்வினைசெய்வதற்குமனங்கொள்ளவுணர்த்துவார்.

(இ-ள்.) அன்றிரவேயாதிபுரியொற்றிகொண்டாராட்கொண்ட = அன்றிரவிலேயே ஆதிபுரியை ஒற்றியூராகக்கொண்ட அமலர் தாம் தடுத்தாட்கொண்ட; பொன்றிகழ்பூண்வன்றொண்டர்புரிந்தவினைமுடித்தருள = பொன்னால்விளங்கும் ஆபரணங்களைப்புனைந்த நம்பியாரூரர்விரும்பியசெயலை முடித்தருளும்படி; நின்றபுகழ்த்திருவொற்றியூர்நிலவுதொண்டர்க்கு = நிலைபெற்றபுகழையுடைய திருவொற்றியூரின்கண்ணேயிருக்கும் அடியார்க்கு; மன்றல்வினைசெய்வதற்கு=(அந்நம்பியாரூரர்க்கு)மணவினைமுடித்தற்பொருட்டு; மனங்கொள்ளவுணர்த்துவார் = அவருள்ளத்திற்படியுணர்த்துவாராயினார்.—எ-று. இவ்விரண்டும் குளகம். (உசுச)

ஒற்றியூராகக்கொள்ளுதலாவது அரசனிறக்கிய இறையை "ஒற்றியூர்நீங்கலாக" என்றுவரிபிளந்தெழுதியும்தமக்குச்சொந்தமல்லாதுபோன்று ஒற்றியாகக்கொள்ளுதல். "ஒற்றியூரேலும்ம்தன்று" என்னுந்தேவாரத்தானுமுணர்க. ஆதிபுரிஎன்பது தொன்றுதொட்டபெயரும் ஒற்றியூரென்பது பின்வந்தபெயருமென்பது. அடியார் கருதிய வினையை அவர்கருதியவாறே முடிப்பவரென்பதுதோன்ற, "புரிந்தவினைமுடித்தருளவுணர்த்துவார்" என்றார்.

நம்பியாரூரனுக்குநங்கைசங்கிலிதன்னை
யிம்பர்ஞாலத்திடைநம்மேவலினான்மணவினைசெய்
தும்பர்வாழுலகறியவளிப்பீரென்றுணர்த்துதலுந்
தம்பிரான்றிருத்தொண்டரருடலைமேற்கொண்டெழுவார்.

(இ-ள்.) நம்பியாரூரனுக்குநங்கைசங்கிலிதன்னை=வன்றொண்டனுக்கு வனிதையருட்சிறந்த சங்கிலியை; இம்பர்ஞாலத்திடை=இவ்வுலகத்திலே; நம்மேவலினால் மணவினைசெய்து = எம்மாணையால் மணம்புரிவித்து; உம்பர்வாழுலகறியவளிப்பீரென்றுணர்த்துதலும்=தேவருலகறியும்படி கொடுப்பீர்களாகவென்று சிவபிரான் சொப்பனம் அருளலும்; தம்பிரான்றிருத்தொண்டரருடலைமேற்கொண்டெழுவார் = சிவனடியார்கள்யாவரும் சிவபிரான்திருவருளைச் சிரமேற்கொண்டு துயிலுணர்ந்தாராயினார்—எ-று.

மந்திரபூர்வமாக வானவரையுமழைத்து அக்கினிசான்றாகப் பாணிக்கிரகணம் செய்விப்பதாகலின் "உம்பர்வாழுலகறிய" என்றாரென்க.

மண்ணிறைந்தபெருஞ்செல்வத்திருவொற்றியூர்மன்னு
மெண்ணிறைந்ததிருத்தொண்டரெயிற்பதியோருடனீண்டி
யுண்ணிறைந்தமகிழ்ச்சியுடனும்பர்பூமழைபொழியக்
கண்ணிறைந்தபெருஞ்சிறப்பிற்கலியாணஞ்செய்தளித்தார்.

(இ-ள்.) மண்ணிறைந்தபெருஞ்செல்வத்திருவொற்றியூர்மன்னும் = நிலவுலகத்திலே பெருஞ்செல்வம்நிறைந்த திருவொற்றியூரின்கண்ணேவாழும்; எண்ணிறைந்த திருத்தொண்டரெயிற்பதியோருடனீண்டி=அளவிறந்தசிவனடியார்கள் அத்திருப்பதியிலுள்ளாரோடுகலந்து; உண்ணிறைந்தமகிழ்ச்சியுடனும்பர்பூமழைபொழிய = சித்தத்திலேநிறைந்த பெருங்களிப்புடனே தேவர்கள்மலர்மழைசொரிய; கண்ணிறைந்த பெருஞ்சிறப்பிற்கலியாணஞ்செய்தளித்தார் = கண்ணுக்கமைந்த மிக்கசிறப்புடன் திருமணஞ்செய்துகொடுத்தார்கள்.—எ-று. (உகூகூ)

பண்டுநிகழ்பான்மையினாற்பசுபதிதன்னருளாலே
வண்டமர்பூங்குழலாரைமணம்புணர்ந்தவன்றொண்டர்
புண்டரிகத்தவள்வனப்பைப்புறங்கண்டதூநலத்தைக்
கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றமர்ந்திருந்தார்காதலினால்.

(இ-ள்.) பண்டுநிகழ்பான்மையினாற்பசுபதிதன்னருளாலே = திருக்கயிலையில் முன்னாளிலேநிகழ்ந்த முறைப்படி சிவபிரான்திருவருளால்; வண்டமர்பூங்குழலாரை= வண்டுகள்மொய்க்கும் மலர்களைச்சூடிய கூந்தலையுடைய சங்கிலிநாச்சியாரை; மணம்புணர்ந்தவன்றொண்டர் = திருக்கலியாணஞ்செய்த நம்பியாரூரர்; புண்டரிகத்தவள் வனப்பைப்புறங்கண்டதூநலத்தை=திருமகள்பாற்பெருகும் இன்பத்தையும் தோற்கச்செய்த செவ்விய இன்பத்தை; காதலினாற்கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றுணர்ந்திருந்தார்= விருப்பத்தினால் கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் கலந்தும் ஐம்பொறிகளும்ஆர அநுபவித்திருந்தார்.—எ-று. (உகூஎ)

எனவே இவர்நுகர்ந்த இன்பத்திற்குத் திருமால்நுகரும் இன்பமும் இணையன்றென்றபடி. வனப்பு ஈண்டு இன்பத்தின்மேற்று. ஐம்புலவிஷயங்களும் சத்தபரிசரூபரசகந்தமயமாயிருத்தலின் ஒவ்வொன்றிற்கும் உணர்ச்சிவெவ்வேறுதல்பற்றிப் பொது



தியாகப்பெருமான் சங்கிலிநாச்சியாரைச் சுந்தரனுக்குவிவாகஞ்செய்யுங்களெனத் திருத்தொண்டர்கள் சொற்பனத்தில் ஆஞ்ஞாபிக்க அவ்வாறே திருமணம் நடத்தினது.

வினையாக "உவந்திருந்தார்" என்றார். அரிவையர் மாட்டு ஐம்புலன்களும் ஒருங்கமைதலை "கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியுமைம்புலனு-மொண்டொடிகண்ணேயுள" என்னுந் திருக்குறளானுந்தெளிக.

யாழின்மொழியெழின் முறுவலிருகுழைமேற்கடைபிறழு
மாழைவிழிவனமுலையார்மணியல்குற்றுறைபடிந்து
வீழுமவர்க்கிடைதோன்றிமிகுபுலவிப்புணர்ச்சிக்க
ணூழியாமொருகணந்தானவ்வூழியொருகணமாம்.

(இ-ள்.) யாழின்மொழியெழின்முறுவல்=யாழினதுஓசைபோலும் இனியமொழியையும் அழகியபற்களையும்; இருகுழைமேற்கடைபிறழுமாழைவிழி=இருகாதுகளின் மீதும் கடைப்பார்வைபிறழ்ந்துசெல்லும் மாவடுவைப்போலும் கண்களையும்; வனமுலையார்=சந்தனக்கோலமெழுதிய தனங்களையும்பெற்ற சங்கிலிநாச்சியாருடைய; மணியல்குற்றுறைபடிந்து=அழகியகடிதடத்தின்முழுகி; வீழுமவர்க்கு=அதிலே அழுந்துகின்ற நம்பியாரூரருக்கு; இடைதோன்றிமிகுபுலவிபுணர்ச்சிக்கண்=இடையே உதித்து மிக்கு வருகின்ற புலவியினும் புணர்ச்சியினும் முறையே; ஊழியாமொருகணமவ்வூழியொரு கணமாம்=ஒருகணம்ஊழியாகும்; அவ்வூழிஒருகணமாகும்.—எ-று. (உசுஅ)

காமவின்பத்தைக் கடல்போலுருவகித்தல் ஆன்றோர்வழக்காதலின் அல்குலைத் துறையென்றார்; அவ்வின்பத்தையனுபவித்தற்குரிய தானம் அதுவேயாகலின். வீழ்தல் விரும்பலுமாம். புலவியாவது இருவர்நெஞ்சும் புணர்ச்சியில்விரையாது புலக்கக்கருதிய வழி ஒருவரோடொருவர் புலப்பது. புணர்ச்சிக்கண்விரைந்தவழி புலக்கக்கருதின் அது இன்பம்பயவாமையின் ஒருகணநேரம் ஊழியாயும், புணர்ச்சியில்விரைந்து புணரப்புணர இன்பமிகுதலால் முன்னைப்புணர்ச்சி புணராமையாகி மேலும் காலநீட்டிப்பை அவாவலின் ஊழியொருகணமாயும் தோன்றலால் "வீழுமவர்க்கிடைதோன்றி மிகுபுலவிப்புணர்ச்சிக்க - ணூழியாமொருகணந்தானவ்வூழியொருகணமாம்" என்றாரென்க. புணர்ச்சிக்கண்விரைந்தவழி புலவிவேண்டாமையை "தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங்-காம நிறைய வரின்" என்னுந்திருக்குறளானும், மேலுமேலும் புணர்ச்சியை அவாவுதலை "அறிதோ றறியாமை கண்டற்றாம் காமஞ் - செறிதோறுஞ் சேயிழை மாட்டு" என்னுந்திருக்குறளானுந்தெளிக. புலவிப்புணர்ச்சி-உம்மைத்தொகை. புலவிக்கண் ஒருகணமூழியாம் புணர்ச்சிக்கண் அவ்வூழி ஒருகணமாம் எனஇயைதலின் இது முறைநிரனிறை. தான். அசை.

இந்நிலையிற்பேரின்பமினிதமர்வாரிறையுறைய
மன்னுபுகழொற்றியூரதனின்மகிழ்சிறப்பினாற்
சென்னிமதிபுனைவார்தந்திருப்பாதந்தொழுதிருந்தார்
முன்னியகாலங்கள்பலமுறைமையினால்வந்தகல.

(இ-ள்.) இந்நிலையிற்பேரின்பமினிதமர்வார்=இவ்வாறானநிலைமையோடு பேரின்பத்தை இனிதாகவிரும்பிவாழும் நம்பியாரூரர்; இறையுறையுமன்னுபுகழொற்றியூரதனில்=சிவபிரான்அமரும் நிலைபெற்றபுகழையுடைய திருவொற்றியூரின்கண்; மகிழ்சிறப்பினால்=சிறப்புவாய்ந்த மனமகிழ்ச்சியோடு; சென்னிமதிபுனைவார்தந்திருப்பாதந்தொழுது=திருமுடியில்இளம்பிறைமுடித்த சிவபெருமான்திருவடிகளை ஆலயத்திற்சென்று

வணங்கிக்கொண்டு; முன்னியசாலங்களில் பலநிறைமையினால்வந்தகலவிருந்தார்=உன்னு தற்குரியஉற்சவகாலங்கள் பலவேறுபாட்டால் உற்றுநீங்க வதிந்தருளினார்.—எ-று. ()

ஒற்றியூரதனில்தொழுது அகலஇருந்தார் எனவுமையும். காமவின்பம் சிவஞானமில்லாதார்க்கு உரியஇன்பமாயும், சிவஞானமுடையார்க்குப் பேரின்பத்தோடியைந்த சிற்றின்பமாயுமிருத்தலின் "இந்நிலையிற்பேரின்பமினிதமர்வார்" என்றார்.

பொங்குதமிழ்ப்பொதியமலைப்பிறந்துபூஞ்சந்தனத்தின்
கொங்கணைந்துகுளிர்சாரலிடைவளர்ந்தகொழுந்தென்ற
லங்கணையத்திருவாரூரணிவீதியழகரவர்
மங்கலநாள்வசந்தமெதிர்கொண்டருளும்வகைநினைந்தார்.

(இ-ள்.) பொங்குதமிழ்ப்பொதியமலைப்பிறந்து=உயர்ந்ததமிழையுடைய பொதியவரையின்கண் உதித்து; பூஞ்சந்தனத்தின்கொங்கணைந்து = பொலிவுதங்கிய சந்தனமரத்தின் மணத்தோடுவிரவி; குளிர்சாரலிடைவளர்ந்தகொழுந்தென்றல் = தண்ணிய அம்மலைச்சாரலிடத்துவளர்ந்த இளந்தென்றலானது; திருவாரூரங்கணைய=அந்திருவாரூரில்வர; அணிவீதியழகரவர்=அழகிய வீதிவிடங்கப்பெருமான்; மங்கலநாள்வசந்தமெதிர்கொண்டருளும்வகைநினைந்தார்=திருவிழாக்காலத்தில் வசந்தோற்சவங்கொண்டருளுந்திறத்தைச் சிந்தித்தருளினார்.—எ-று. (உஎ0)

பொதியச்சாரலிற்றோன்றிய அத்தென்றல் மாந்தியமுதலிய வளத்ததாகலின் "கொழுந்தென்றல்" என்றும், நித்தியத்தின்தாழ்வுதீரச்செய்யும் நைமித்திகமாகலின் உற்சவத்தை "மங்கலநாள்" என்றும், இளவேனிற்காலத்திற்செய்வதாகலின் ஆறுநாண் மாலைவிழாவை "வசந்தம்" என்றும், அவ்விளந்தென்றல்வீசப்பவனிவருதலின் "கொழுந்தென்றலங்கணையவெதிர்கொண்டருளும்" என்றுங் கூறினார். தாம் அமரும் இடத்தில் தென்றலணையக்காணாலும் பெருமான்வசந்தோற்சவங்கொண்டருளுங்காலம் இது வன்றோவென அத்திறநினைந்தாரெனினும் அமையும்.

வெண்மதியின்கொழுந்தணிந்தவீதிவிடங்கப்பெருமா
னொண்ணுதலார்புடைபரந்தவோலக்கமதனிடையே
பண்ணமருமொழிப்பரவையார்பாடலாடறனைக்
கண்ணுறமுன்கண்டுகொண்டார்போலக்கருதினார்.

(இ-ள்.) வெண்மதியின்கொழுந்தணிந்தவீதிவிடங்கப்பெருமான் = வெள்ளிய இளம்பிறைசூடிய தியாகேசப்பெருமான்கொண்டருளும்; ஒண்ணுதலார்புடைபரந்த வோலக்கமதனிடையே; ஒள்ளிய நுதலையுடைய மகளிர்கள்புடைசூழ்ந்த திருவோலக்கத்திலே; பண்ணமருமொழிப்பரவையார்பாடலாடறனை = பண்ணிறைந்தமொழியினை வாய்ந்த பரவைநாச்சியாருடைய பாடலையும் ஆடலையும்; கண்ணுறமுன்கண்டுகொண்டார்போலக்கருதினார்=நேரேதமக்குமுன்னே கண்டவரைப்போலநினைத்தார்.—எ-று.

ஏ-இசைநிறை. ஓலக்கமென்றது திருநந்திதேவர் முதலிய கணங்களோடும் அடியார்களோடும்தியாகேசப்பெருமான் வீற்றிருந்தருளும் அமையம். அவ்வமையத்தே பரவைநாச்சியார்பாடலாடல்களைச் சிந்தனைமாத்திரத்தானே கண்கூடாகக்கண்டார் போலாயினாரென்பதுவிளக்கிய "பாடலாடறனைக்கண்ணுறமுன் கண்டுகொண்டார்போலக்கருதினார்" என்றார். வெள்ளியை வெள்ளியெனக்கோடல் யதார்த்தஞானமும் இப்பியை வெள்ளியெனக் கோடல் அயதார்த்தஞானமும் ஆமாறுபோல,யதார்த்தமும்

அயதார்த்தமுமென இருவகைப்படும் ஸ்மிருதியுள் ஈண்டுக் கருதியது யதார்த்தஸ்மிருதியாம். ஸ்மிருதி நினைவு. மேற்செய்யுளிற் கொண்டருளும்வகைநினைந்தார்" என்றதும் யதார்த்தஸ்மிருதியேயென்க.

பூங்கோயிலமர்ந்தாரைப்புற்றிடங்கொண்டிருந்தாரை
நீங்காதகாதலினானினைந்தாரைநினைவாரைப்
பாங்காகத்தாமுன்புபணியவரும்பயனுணர்வா
ரீங்குநான்மறந்தேனென்றேசறவான்மிகவழிவார்.

(இ-ள்.) பூங்கோயிலமர்ந்தாரைப்புற்றிடங்கொண்டிருந்தாரை = கமலாலயத்தில் வீற்றிருந்தருள்பவரும் புற்றைஇடமாகக்கொண்டிருந்தவரும்; நீங்காதகாதலினானினைந்தாரைநினைவாரை=இடையறாப்பேரன்பால் தம்மையுள்ளும் அடியாரைத் தாம்உள்ளும் இயல்புடையவருமாகிய தியாகேசப்பெருமானை; பாங்காகத்தாமுன்பு பணியவரும்பயனுணர்வார்=முறைப்படி தாம் முன்புவணங்க அதனால் அடைந்த திருவருள்பயன்றிறத்தைச் சிந்திக்கின்ற நம்பியாரூரர்; ஈங்குநான்மறந்தேனென்றேசறவான்மிகவழிவார்=இவ்விடத்துநான்மறந்துவிட்டேனென்று துயரத்தால்மிகவும்வருந்துவார்-எ-று.

அவ்வாலயத்திற்குப் பூங்கோயிலெனவும் மணிப்புற்றெனவும் இருபெயருமிருத்தலின் "பூங்கோயிலமர்ந்தாரைப்புற்றிடங்கொண்டிருந்தாரை" எனவும், இம்மைமறுமைப்பயன்களைவெஃகாது தீவிரமலபரிபாகத்தால்விளைவதாய், ஐயந்திரிபின்றி ஓரியல்பாய்நிற்றலின் "நீங்காதகாதல்" எனவும், அக்காதலானினைதல் எவர்க்கும் எளிதன்றாகலின், "நினைந்தாரை" எனவும், மலஉயிர்கட்குத் தாம் மறைந்துநின்றுணர்த்துதல்போலாது நினைந்தவருள்ளத்துப்பேரானந்தம்விளைத்து வெளிப்பட்டுநிற்றலின் "நினைவார்" எனவும் கூறினார். ஏசறவு-துயரம். நினைந்தாரைநினைவார்என்பதனை "ஈசனறியுமிராப்பகலுந்தன்னைப்-பாசத்துள்வைத்துப்பரிவுசெய்வார்களைத்-தேசுற்றறிந்து செயலற்றிருந்திடி-லீசன்வந்தெய்மிடையீட்டிநின்றானே." என்னும் திருமந்திரத்தானுந்தெளிக.

பணியவரும்பயன்-தம்மைத் தோழமைகொண்டு ஆண்டருளினமை.

மின்னொளிச்செஞ்சடையானைவேதமுதலானை
மன்னுபுகழ்த்திருவாரூர்மகிழ்ந்தானைமிகநினைந்து
பன்னியசொற்பத்திமையுமடிமையையுங்கைவிடுவா
னென்னுமிசைத்திருப்பதிகமெடுத்தியம்பியிரங்கினார்

(இ-ள்.) மின்னொளிச்செஞ்சடையானைவேதமுதலானை=மின்போலும் ஒளிவீசுகின்ற சிவந்தசடைமுடியையுடையவரும் வேதத்தையருளிய முதலவருமாகிய; மன்னுபுகழ்த்திருவாரூர்மகிழ்ந்தானைமிகநினைந்து=நிலைபெற்ற புகழையுடைய திருவாரூரின்கண்ணே அமரும் தியாகேசப்பெருமானைப் பெரிதும்சிந்தித்து; பத்திமையுமடிமையையுங்கைவிடுவானென்னும்பன்னியசொல்="பத்திமையுமடிமையையுங்கைவிடுவான்"என்னும் சீர்த்திபெற்ற சொற்களமைந்த;இசைத்திருப்பதிகமெடுத்தியம்பியிரங்கினார்=பண்வாய்ந்த திருப்பதிகத்தை எடுத்தோதிவருந்தினார்.—எ-று. (உஎங)

வேதமுதலென்றது வேதம் ஒருபுருடனாற் செய்யப்பட்டதன்றென்னும்பாட்டபிரபாகரமதங்களின் மறுதலையாய்நின்றது. அன்றியும் வேதத்துக்கும் சிவபெருமானுக்கும் வகுப்பதூஉம் வகுக்கப்படுவதூஉமாகிய சம்பந்தமுண்மையுங்காண்க நெடிதுபோதுநினைந்தனரென்பார் "மிகநினைந்து" என்றார். செய்யுட்குரிய நால்வகைச்சொல்லுமமைதலின் "பன்னியசொல்" என்றாரென்னலுமொன்று.

திருவாரூர் - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

பத்திமையுமடிமையையுங்கைவிடுவான்பாவியேன்
பொத்தினநோயதுவிதனைப்பொருளறிந்தேபோய்த்தொழுவேன
முத்தினைமாமணிதன்னைவயிரத்தைமூர்க்கனே
னெத்தனைநாள்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே.

பேரூருமதகரியினுரியானைப்பெரியவர்தஞ்
சீரூருந்திருவாரூர்ச்சிவனடியேதிறம்விரும்பி
யாரூரனடித்தொண்டனடியன்சொலகலிடத்தி
லூரூரனிவைவல்லாருலகவர்க்குமேலாரே. திருச்சிற்றம்பலம்.

பின்னொருநாடிருவாரூர்தனைப்பெருகநினைந்தருளி
யுன்னவினியார்கோயில்புகுந்திறைஞ்சியொற்றிநகர்
தன்னையகலப்புக்கார்தாஞ்செய்தசபதத்தான்
முன்னடிகடோன்றாதுகண்மறையமூர்ச்சித்தார்.

(இ-ள்.) பின்னொருநாடிருவாரூர்தனைப்பெருகநினைந்தருளி=வேறொருநாள் திருவாரூரை மிகவும்நினைந்து; உன்னவினியார்கோயில்புகுந்திறைஞ்சி=கருதுங்கால் அடியவருள்ளத்தே இனியராய்வெளிப்படும் படம்பக்கநாதர் ஆலயத்துட்புகுந்து அவரைப் பணிந்து; ஒற்றிநகர்தன்னையகலப்புக்கார்=திருவொற்றியூரைநீங்கஅடியிட்டார்; தாஞ்செய்தசபதத்தால்=(இவ்வொற்றியூரையகலேனென்று இறைவர்சந்நிதியில்) தாம்செய்த சத்தியத்தால்; முன்னடிகடோன்றாதுகண்மறையமூர்ச்சித்தார்=தம்முன்னே அடிகளை யெடுத்துவைக்க வழிதோன்றாதுகண்கள்மறைந்துவிட அதனால்மூர்ச்சையடைந்தார்-எ-று.

உன்னவினியராதலை, "அருப்புப்போன்முலையாரல்லல்வாழ்க்கைமேல்-விருப்புச் சேர்நிலைவிட்டுநல்லிட்டமாய்த் திருப்புத்தூரனைச்சிந்தைசெயச்செயக் - கருப்புச்சாற்றினுமண்ணிக்குங்காண்மினே" என்னும்திருக்குறுந்தொகையானுந்தெளிக. உன்ன வினையெச்சத்திரிபு. மூர்ச்சித்தல்-கரணவியாபாரமற்றுமயங்கிநிற்றல்.

செய்வதனையறியாதுநிகைத்தருளிநெடிதுயிர்ப்பார்
மைவிரவுகண்ணார்பாற்சூளுறவுமறுத்ததனா
லிவ்வினைவந்தெய்தியதாமெனநினைந்தெம்பெருமானை
யெய்தியவித்துயர்நீங்கப்பாடுவேனெனநினைந்து.

(இ-ள்.) செய்வதனையறியாதுநிகைத்தருளிநெடிதுயிர்ப்பார் = தாம்செய்யுஞ் செயலொன்றையும்உணராது திகைத்துநின்று நெட்டுயிர்ப்புவிடுகின்ற நம்பியாரூரர்; மைவிரவுகண்ணார்பாற்சூளுறவும்றுத்ததனால் = சங்கிலியாரிடத்துச்செய்த சபதத்தை யான்மறுத்துவிட்டதனால்; இவ்வினைவந்தெய்தியதெனநினைந்து=இத்தீவினைவந்ததென்று சிந்தித்து, எய்தியவித்துயர்நீங்க=உண்டடைந்தஇத்துன்பம்அகல; எம்பெருமானைப் பாடுவேனெனநினைந்து=படம்பக்கநாதரைப் பதிகம்பாடுவேனென்று கருதி.—எ-று.



சுந்தரர் திருவாரூர் வீதிவிடங்கப்பெருமானைத் தெரிசிக்கநினைந்து திருவொற்றியூரெல்லையைக் கடக்க

### வே று.

அழுக்குமெய்கொடென் றெடுத்தசொற்பதிக மாதிநீள்புரி யண்ணலை
யோதி, வழுத்துநெஞ்சொடு தாழ்ந்துநின்றுரைப்பார் மாதொர்பாகனார்
மலர்ப்பதமுன்னி, யிழுக்குநீக்கிடவேண்டுமென்றிரந்தே யெய்துவெந்து
யர்க்கையறவினுக்கும், பழிக்கும்வெள்கிநல் லிசைகொடுபரவிப்பணிந்து
சாலவும்பலபலநினைவார்.

(இ-ள்.) நீளாதிபுரியண்ணலையோதி=மேன்மையுற்ற ஆதிபுரியில் வீற்றிருந்த
ருளும் விமலரைப்புகழ்ந்து; வழுத்துநெஞ்சொடுதாழ்ந்துநின்று=துதிக்குமனதோடு
தொழுதுநின்று; அழுக்குமெய்கொடென்றெடுத்தசொற்பதிகமுரைப்பார் = (அழுக்கு
மெய்கொடு) எனத்தொடங்கிய கீர்த்திபெற்றபதிகத்தை அருளிச்செய்வாராய்; மாதொர்
பாகனார்மலர்ப்பதமுன்னி = அம்பிகைபாகராகிய அப்பெருமானது செந்தாமரைமலர்
போலுந் திருவடிகளைச்சிந்தித்து; இழுக்குநீக்கிடவேண்டுமென்றிரந்து=தமதுதவறு
லுண்டாகியதிங்கைத் தவிர்த்தருளவேண்டுமெனப் பிரார்த்தித்து; எய்துவெந்துயர்க
கையறவினுக்கும்=செறிந்த வெவ்விய துன்பமிகுதியினுண்டாகிய செயலறுதலுக்கும்;
பழிக்கும்வெள்கி=பலருமியம்பும் பழிக்கும்நாணி; நல்லிசைகொடுபரவிப்பணிந்து=பல
ருப்விழையும் பண்ணைக்கொண்டு துதித்துவணங்கி; சாலவும்பலபலநினைவார்=மிகவும்
பற்பலவாக நினைவாராயினர்-எ-று.　　(உஎசு)

இவ்விரண்டுமே குளகம். உரைப்பார் முற்றெச்சம். இழுக்கினால்விளையுந் திங்கை
இழுக்கென்றார். இழுக்கு குற்றறவுமாறுந்தமை. ஏ. இசைநிறை. கையறவு செயலறு
தல். அதாவது நேத்திரமிழக்க நேர்ந்ததேயென்னும் நெடியதுன்பத்தால் யாதொரு
செயலினும் நினைவுசெல்லாமை. பலபலநினைதலாவது கண்விளங்குமோ விளங்காதோ
இன்னும் ஏதேதுவிளையுமோவென இங்ஙனம் பலவாகச் சிந்தித்தல். தாழ்ந்துநின்று
பதிகமுரைப்பாராய் உன்னி பார்த்து வெள்கி பணிந்து நினைவாரெனஇயையும்.

## திருவொற்றியூர்-பண்-தக்கேசி.

### திருச்சிற்றம்பலம்.

அழுக்குமெய்கொடுன் றிருவடியடைந்தே னதுவுநான்படப்பால
தொன்றுளற், பிழுக்கைவாரியும்பாலகொள்வரடிகேள் பிழைப்பனாகிலுந்
திருவடிப்பிழையேன், வழுக்கிவீழினுந்திருப்பெயரல்லான்மற்றுநானறி
யேன்மறுமாற்ற, மொழுக்கவென்கணுக்கொருமருந்துரையாயொற்றியூரெ
னுமூருறைவானே.　　(க)

கட்டனேன்பிறந்தேனுனக்காளாய்க்காதற்சங்கிலிகாரணமாக
வெட்டிஞற்றிகழுந்திருமூர்த்தியென்செய்வானடியேனெடுந்துரைக்கேன்
பெட்டனாகிலுந்திருவடிப்பிழையேன்பிழைப்பனாகிலுந்திருவடிக்கடிமை
யொட்டினேனெனைநீசெய்வதெல்லாமொற்றியூரெனுமூருறைவானே.　　() .

கங்கைதங்கியசடையுடைக்கரும்பேகட்டியேபலர்க்குங்களைகண்ணே
யங்கைநெல்லியின்பழத்திடையமுதேயத்தாவென்னிடரார்க்கெடுத்துரைக்

[கேன்

சங்குமிப்பியுஞ்சலஞ்சலமூரல்வயிரமுத்தொடுபொன்மணிவரன்றி
யொங்குமாகடலோதம்வந்துலவுமொற்றியூரெனுமூருறைவானே. (௩)

ஈன்றுகொண்டதோர்சுற்றமொன்றன்றலியாவராகிலென்னன்புடையார்க
டோன்றநின்றருள்செய்தளித்திட்டாற்சொல்லுவாரையல்லாதனசொல்லா
மூன்றுகண்ணுடையாயடியேன்கண்கொள்வதேகணக்குவழக்காகி [ய்
லூன்றுகோலெனக்காவதொன்றருளாயொற்றியூரெனுமூருறைவானே. (௪)

வழித்தலைப்படுவான்முயல்கின்றேனுன்னைப்போலென்னைப்பாவிக்கமாட்டேன்
சுழித்தலைப்பட்டநீரதுபோலச்சுழல்கின்றேன்சுழல்கின்றதென்னுள்ளங்
கழித்தலைப்பட்டநாயதுபோலவொருவன்கோல்பற்றிக்கறகறவிழுக்கை
பொழித்துநீயருளாயினசெய்யாயொற்றியூரெனுமூருறைவானே. (௫)

மானைநோக்கியர்கண்வலைப்பட்டுவருந்தியானுற்றவல்வினைக்கஞ்சித்
தேனையாடியகொன்றையினாயுன்சீலமுங்குணமுஞ்சிந்தியாதே
நானுமித்தனைவேண்டுவதடியேனுயிரொடுநரகத்தழுந்தாமை
யூனமுள்ளனதீர்த்தருள்செய்யாயொற்றியூரெனுமூருறைவானே. (௬)

மற்றுத்தேவரைநினைந்துனைமறவேனெஞ்சினாரொடுவாழவுமாட்டேன்
பெற்றிருந்துபெறாதொழிகின்றபேதையேன்பிழைத்திட்டதையறியேன்
முற்றுநீயெனைமுனிந்திடவடியேன்கடவதென்னுனைநான்மறவேனே
லுற்றநோயுறுபிணிதவிர்த்தருளாயொற்றியூரெனுமூருறைவானே. (௭)

கூடினாய்மலைமங்கையைநினையாய்கங்கையாயிரமுகமுடையாளைச்
சூடினாயென்றுசொல்லியபுக்காற்றெழும்பனேனுக்குஞ்சொல்லலுமாமே
வாடிநீயிருந்தென்செய்திமனனேவருந்தியானுற்றவல்வினைக்கஞ்சி
யூடினாலினியாவதொன்றுண்டேயொற்றியூரெனுமூருறைவானே. (௮)

மகத்திற்புக்கதோர்சனியெனக்கானாய்மைந்தனேமணியேமணவாளா
வகத்திற்பெண்டுகணானொன்றுசொன்னாலழையேற்போகுருடாவெனத்தரியேன்
முகத்திற்கண்ணிழந்தெங்ஙனம்வாழ்கேன்முக்கணாமுறையோமறையோதீ
யுகைக்குந்தண்கடலோதம்வந்துலவுமொற்றியூரெனுமூருறைவானே. (௯)

ஓதம்வந்துலவுங்கரைதன்மேலொற்றியூருறைசெல்வனைநாளு
ஞாலந்தான்பரவப்படுகின்றநான்மறையங்கமோதியநாவன்
சீலந்தான்பெரிதும்மிகவல்லசிறுவன்வன்றொண்டனூரனுரைத்த
பாடல்பத்திவைவல்லவர்தாம்போய்ப்பரகதிதிண்ணநண்ணுவர்தாமே. (௰)

திருச்சிற்றம்பலம்.

அங்குநாதர்செய்யருளதுவாகவங்கைகூப்பியாரூர்தொழநினைந்தே
பொங்குகாதன்மீளாநிலைமையினாற்போதுவார்வழிகாட்டமுன்போந்து
திங்கள்வேணியார்திருமுல்லைவாயில்சென்றிறைஞ்சிநீடியதிருப்பதி
கங்கிளிக்காகவென்கணைமறைத்தீரென்றுசாற்றியதன்மையிற்பாடி.

(இ-ள்.) அங்குநாதர்செய்யருளதுவாகவங்கேகூப்பி=அங்கே பிரான்செய்யுந் திருவருள் அத்தண்டனையேயாக அஞ்சலிசெய்துகொண்டு; ஆரூர்தொழநினைந்து=திருவாரூரைவணங்கச் சிந்தித்து; போங்குகாதன்மீளாநிலைமையினால்=அதிகரித்தவிருப்பம் அகலாமையினாற்(புறப்பட்டு); போதுவார்வழிகாட்டமுன்போந்து=உடன்வருவார்வழிகாட்ட முற்சென்று; திங்கள்வேணியார் திருமுல்லைவாயில்சென்றிறைஞ்சி=சந்திரனையணிந்த சடைமுடியையுடையகடவுளின் திருமுல்லைவாயிலிற்சேர்ந்துபணிந்து; சங்கிலிக்காகவென்கண்ணைமறைத்தீரென்று=சங்கிலிக்காக என்கண்ணைமறைத்தீரென்று; சாற்றியதன்மையினீடியதிருப்பதிகம்பாடி=அறைந்தஇந்தன்மையாக மிக்கதிருப்பதிகத்தை அருளிச்செய்து-எ-று. (உஎஎ)

அதுவென்பது ஆண்டுக் கண்மறைவித்தமையைச் சுட்டிநின்றது. தவறுநோக்கித்தண்டித்த அதுவும் திருவருட்செயலேயாகலின் "அங்குநாதர்செய்யருளதுவாக" என்றார். முனிவும்அருளேயாதலை "தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்க டஞ்சொலாற்றின்-வந்திடா விடிலு றுக்கி வளாரினா லடித்துத் தீப - பந்தமு மிடுவ ரெல்லாம் பார்த்திடிற் பரிவே யாகு - மிந்தநீர் முறைமை யன்றோ வீசனார் முனிவு மென்றும்." என்னும் சிவஞானசித்தித்திருவிருத்தத்தானுமுணர்க.

---

## திருமுல்லைவாயில் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

திருவுமெய்ப்பொருளுஞ்செல்வமுமெனக்குன் சீருடைக்கழல்களென்றெண்ணி
யொருவரைமதியாதுறாமைகள்செய்துமூடியுமுறைப்பனாய்த்திரிவேன்
முருகமர்சோலைசூழ்திருமுல்லைவாயிலாய்வாயினாலுன்னைப்
பரவியுமடியேன்படுதுயர்களையாய்பாசுபதாபரஞ்சுடரே.

விண்பணிந்தேத்தும்வேதியர்மாதர்வெருவிடவேழமொன்றுரித்தாய்
செண்பகச்சோலைசூழ்திருமுல்லைவாயிலாய்தேவர்தமரசே
தண்பொழிலொற்றிமாநகருடையாய்சங்கிலிக்காவென்கண்கொண்ட
பண்பநின்னடியேன்படுதுயர்களையாய்பாசுபதாபரஞ்சுடரே.

சொல்லரும்புகழான்றொண்டைமான்களிற்றைச்சூழ்கொடிமுல்லையாற்கட்டிட்
டெல்லையிலின்பமவன்பெறவெளிப்பட்டருளியவிறைவனேயென்று
நல்லவர்பரவுந்திருமுல்லைவாயினாதனேநாவிடையேறி
பல்கலைப்பொருளேபடுதுயர்களையாய்பாசுபதாபரஞ்சுடரே.

விரைதருமலர்மேலயனொடுமாலும்வெருவிடநீண்டவெம்மானைத்
திரைதருபுனல்சூழ்திருமுல்லைவாயிற்செல்வனைநாவலாரூர
னுரைதருமாலையோரஞ்சினோடஞ்சுமுள்குளிர்ந்தேத்தவல்லார்க
ணரைதிரைமூப்புமடலையும்மினறிநண்ணுவார்விண்ணவர்க்கரசே.

திருச்சிற்றம்பலம்.

---

## சுவாமிபெயர் பாசுபதேசுவரர். தேவியார் கொடியிடையம்மை. திருப்பதிகம்-க.

தொண்டைமானுக்கன்றருள்கொடுத்தருளுந் தொல்லைவண்புகழ்முல்லைநாயகனைக், கொண்டவெந்துயர் களைகெனப்பரவிக் குறித்தகாதலினெறிக்

கொளவருவார், வண்டுலாமலர்ச் சோலைகள்சூழ்ந்து மாடமாளிகை நீடு
வெண்பாக்கங், கண்டதொண்டர்க ளெதிர்கொளவணங்கிக் காயநாகத்தர்
கோயிலையடைந்தார்.

(இ-ள்.) தொண்டைமானுக்கன்றருள்கொடுத்தருளும்=தொண்டைமான்சக்கரவர்த்தியாருக்குத் திருவருள்பாலித்த; தொல்லைவண்புகழ்=தொன்றுதொட்டு வளப்பம் பொருந்திய சீர்த்திபடைத்த; முல்லைநாயகரை=திருமுல்லைவாயிலில்வதிந்தருளும் பாசுபதேசுரரை; கொண்டவெந்துயர்களைகெனப்பரவி = சிறியேனடைந்துள்ள கொடிய துன்பத்தைத் தீர்த்தருளவேண்டுமென்று துதித்து; குறித்தகாதலினெறிக்கொளவருவார்=திருவாரூரைவணங்கவேண்டுமெனச் சிந்தித்தவிருப்பத்தோடு வழிபற்றிச்சென்று; வண்டுலாமலர்ச்சோலைகள்சூழ்ந்து=மதுகரஞ்சஞ்சரிக்கும் பூக்களையுடைய சோலைகளடர்ந்து; மாடமாளிகைநீடுவெண்பாக்கம்=உபரிகைவாய்ந்த வீடுகளோங்கிய திருவெண்பாக்கத்திலே; கண்டதொண்டர்களெதிர்கொளவணங்கி=தாமெழுந்தருளுவதைத்தெரிந்தஅடியவர்கள் எதிர்கொண்டுபணியத் தாமுமிறைஞ்சி; காயநாகத்தர்கோயிலையடைந்தார்=அனைவரையும் வருத்துகின்ற அரவங்களை ஆபரணமாகவணிந்த அண்ணலாரது ஆலயத்தையடைந்தார்-எ-று. இவ்விரண்டுங்குளகம். (உஎஅ)

தொண்டைமான்சக்கரவர்த்தியார் பலதலங்களையும் பணிந்துவரும்வழி முல்லைக்கொடிகளாற் பொதிவுற்றிருந்த இம்முழுமுதற்கடவுள் அவரேறியயானையை அக்கொடியாற்பிணிப்புறச்செய்து, அவர் அக்கொடியைச்சேதிக்குங்கால் திருமுடியிலுதிரம்பெருகவெட்டுண்டு தரிசனந்தந்தளித்தனரென்பது அத்தலமான்மியமாதலின், "தொண்டைமானுக்கருள்கொடுத்தமுல்லைநாயகர்" என்றார். வருவார் முற்றெச்சம். எதிர்கொள என்பது அதன்காரியமாகியவணங்கலையும் குறிப்பாலுணர்த்திற்று. எதிர்கொண்ட தொண்டர்கள் வணங்குமுன் தாம்வணங்கினரெனினு மமையும். காயுமெனநிகழ்காலத்தாற் கூறினமையின் நாகமென்றது அரவையெனக்கொள்க. காய்ந்தநாகமெனக் காலமயக்கமாக்கி யானையெனக்கொள்ளலுமொன்று.

அணைந்ததொண்டர்களுடன்வலமாக வங்கணாயகர் கோயின்முன்னெய்
திக், குணங்களேத்தியேபரவியஞ்சலியாற் குவித்தகைதலைமேற்கொண்டு
நின்று, வணங்கிநீர்மகிழ் கோயிலுளீரே யென்றவன்றொண்டர்க் கூன்று
கோலருளி, யிணங்கிலாமொழியாலுளோம்போகிறென்றியம்பினரேதிலார்
போல.

(இ-ள்.) அணைந்ததொண்டர்களுடன்வலமாக=அங்குவந்த தொண்டர்களோடு பிரதக்ஷணமாக; அங்கணாயகர்கோயின்முன்னெய்தி=அருட்கண்ணராகிய வெண்பாக்கநாதரது ஆலயத்தின்முன்னரடைந்து; குணங்களேத்தியேபரவி = அப்பிரானுடைய புகழ்களைத்துதித்து வழிபட்டு; அஞ்சலியாற்குவித்தகைதலைமேற்கொண்டுநின்றுவணங்கி=அஞ்சலியோடு குவித்தகரங்களைச் சிரமேற்கொண்டுநின்று தொழுது; நீர்மகிழ் கோயிலுளீரேயென்றவன்றொண்டர்க்கு = தேவரீர் திருவுளமகிழ்ந்து ஆலயத்திலே அமர்ந்திருக்கின்றீரோவென்ற ஆளுடையநம்பிகளுக்கு; ஊன்றுகோலருளி=அப்பெருமான் ஊன்றுகோல் கொடுத்தருளி; உளோம்போகிறென்று=யாம் உள்ளேம் நீர்போகிறென்று; இணங்கிலாமொழியாலேதிலார்போலவியம்பினர்=இசைவில்லாதமொழியினால் அயலார்போலக் கட்டளையிட்டருளினர்-எ-று. (உஎகூ)

மகிழென்னும்பகுதி வினையெச்சப்பொருளில்வந்தது. "வரிப்புனைபந்து" என்பதில் வரியென்னும் பகுதிபோல. கண்ணிற்க ழகு அருளேயாகலின் அங்கண் அருட்கண்ணெனக்கொள்க. யான் கண்ணிழந்து துயருழந்தலைய நீர் மகிழ்ந்து ஆலயத்திருப்பது அருட்குணமோ என்பார் "மகிழ்கோயிலுளீரே" என்றார். கண்வேண்டினார்க்குக் கண்கொடாது கோல்கொடுத்து அயலார்போல் யாம்உளேம் நீர்போகீரென்பது இயல்புடைத்தன்றாகலின் இணக்கிலாமொழியெனப்பட்டது.

வேறு.

பிழையுளனபொறுத்திடுவரென்றெடுத்துப்பெண்பாகம்
விழைவடிவிற்பெருமானைவெண்பாக்கமகிழ்ந்தானை
யிழையெனமாசுணமணிந்தவிறையானைப்பாடினார்
மழைதவழுநெடும்புரிசைநாவலூர்மன்னவனார்.

(இ-ள்.) மழைதவழுநெடும்புரிசை=முகில்கள்படியும் நெடியமதில்சூழ்ந்த; நாவலூர்மன்னவனார்=திருநாவலூர்க்குத்தலைவராகிய சுந்தரமூர்த்திநாயனார்; பெண்பாகம்விழைவடிவிற்பெருமானை=உமாதேவியாரைத் திருவுருவத்தின் ஓர்பாகத்திலே காதலித்துக்கொண்டவரும்; வெண்பாக்கமகிழ்ந்தானை=திருவெண்பாக்கமென்னுந்தலத்தை விரும்பினவரும்; இழையெனமாசுணமணிந்தவிறையானை=ஆபரணமாக அரவையணிந்தவருமாகிய சிவபெருமானை; பிழையுளனபொறுத்திடுவரென்றெடுத்துப்பாடினார்="பிழையுளனபொறுத்திடுவர்" என்றுதொடங்கித் துதித்தார்-எ-று. (உ௮௰)

தோழராகலின் இப்பிழையினையுங் குறிக்கொள்ளாது பரிகரித்தாளுவரென்னும் உறுதிகொண்டியற்றியதென்பார் "பிழையுளனபொறுத்திடுவரென்றடியேன்பிழைத்தக்கால்" என்றாரென்க.

---

## திருவெண்பாக்கம் - பண் - சீகாமரம்.

### திருச்சிற்றம்பலம்.

பிழையுளனபொறுத்திடுவரென்றடியேன்பிழைத்தக்காற்
பழியதனைப்பாராதேபடலமென்கண்மறைப்பித்தாய்
குழைவிரவுவடிகாதாகோயிலுளாயேயென்ன
வுழையுடையானுள்ளிருந்துளோம்போகீரென்றானே.

மான்றிகழுஞ்சங்கிலியைத்தந்துவருபயன்களெலாந்
தோன்றவருள்செய்தளித்தாயென்றுரைக்கவுலகமெல்லா
மீன்றவனேவெண்கோயிலிங்கிருந்தாயேயென்ன
வூன்றுவதோர்கோலருளியுளோம்போகீரென்றானே.

ஏராரும்பொழினிலவுவெண்பாக்கமிடங்கொண்ட
காராருமிடற்றானைக்காதலித்திட்டன்போடுஞ்
சீராருந்திருவாரூர்ச்சிவன்பேர்சென்னியில்வைத்த
வாரூரன்றமிழ்வல்லார்க்கடையாவல்வினைதானே.

### திருச்சிற்றம்பலம்.

## சுவாமிபெயர் வெண்பாக்கநாதர்· தேவியார் கனிவாய்மொழியம்மை· திருப்பதிகம்-க·

முன்னின்றுமுறைப்பாடுபோன்மொழிந்தமொழிமாலைப்
பன்னுமிசைத்திருப்பதிகம்பாடியபின்பற்றாய
வென்னுடையபிரானருளிங்கித்தனைகொலாமென்று
மன்னுபெருந்தொண்டருடன்வணங்கியேவழிக்கொள்வார்.

(இ-ள்.) முன்னின்றுமுறைப்பாடுபோன்மொழிந்த = எதிர்நின்று முறையிடு போலிசைத்த; பன்னுமிசைமொழிமாலைத்திருப்பதிகம்பாடியபின் = பரவும்பண்ணையுடைய பாமாலையாகியதிருப்பதிகத்தைப் பாடிமுடித்தபின்; என்னுடையபிரானருள் = என்னையடிமையாகவுடைய எம்பிரான்திருவருள்; இங்கித்தனைகொலாமென்று = அடியேனுக்கு இங்கேபாலிப்பது இவ்வளவேயாமென்றுவருந்தி; மன்னுபெருந்தொண்டருடன் = நிலைபெற்றபெருமையையுடைய அடியவர்களோடு; வணங்கிவழிக்கொள்வார் = அப்பெருமானைப்பணிந்துகொண்டு செல்வாராயினார்-எ-று. (உஅக)

ஈண்டுப்பாலிக்குந்திருவருள் கோல்கொடுத்தலாகிய இவ்வளவினதே என்று வழிக்கொள்வார் என்றபடி. கொல்-அசை. ஏ-இசைநிறை.

அங்கணர்தம்பதியதனையகன்றுபோயன்பருடன்
பங்கயப்பூந்தடம்பணைசூழ்பழையனூருழையெய்தித்
தங்குவாரம்மைதிருத்தலையாலேவலங்கொள்ளுந்
திங்கள்முடியாராடுந்திருவாலங்காட்டினயல்.

(இ-ள்.) அங்கணர்தம்பதியதனை = அருட்கண்ணராகியபெருமானது அத்தலத்தை; அன்பருடனகன்றுபோய் = அடியவரோடு நீங்கிச்சென்று; பங்கயப்பூந்தடம்பணைசூழ் = தாமரைமலர்செறிந்த பெருவயல்சூழ்ந்த; பழையனூருழையெய்தித்தங்குவார் = பழையனூரிற்சேர்ந்துவதிந்து; அம்மைதிருத்தலையாலேவலங்கொள்ளும் = காரைக்காலம்மையார் திருத்தலையினாலேவலம்வந்த; திங்கண்முடியாராடுந்திருவாலங்காட்டினயல் = சந்திரசேகரப்பெருமான் நடிக்கும் திருவாலங்காட்டினருகே-எ-று. (உஅஉ)

உழை. ஏழனுருபு. அம்மையார் தலையால்வலம்வந்த அரியதலமாதலின் அதனை மிதியாதுபழையனூரில்வதிந்து அத்தலத்தினருகே சந்நிதிமுன்னின்று பாடியேத்துவாரென அடுத்தபாடலோடுமுடிக்க.

முன்னின்றுதொழுதேத்திமுத்தாவென்றெடுத்தருளிப்
பன்னுமிசைத்திருப்பதிகம்பாடிமகிழ்ந்தேத்துவா
ரந்நின்றுவணங்கிப்போய்த்திருவூறலமர்ந்திறைஞ்சிக்
கன்னிமதின்மணிமாடக்காஞ்சிமாநகரணைந்தார்.

(இ-ள்.) முன்னின்றுதொழுதேத்தி = சந்நிதிக்கெதிரேநின்றுதாழ்ந்துதுதித்து; முத்தாவென்றெடுத்தருளி = "முத்தா" என்றுதொடங்கி; பன்னுமிசைத்திருப்பதிகம் பாடி = சீர்த்திபெற்றபண்ணையுடைய திருப்பதிகத்தை அருளிச்செய்து; மகிழ்ந்தேத்துவார் = களித்துப்புகழ்வாராகிய திருநாவலூரர்; அந்நின்றுவணங்கிப்போய் = அத்தலத்தினின்றும் நமஸ்கரித்துச்சென்று; திருவூறலமர்ந்திறைஞ்சி = திருவூறலென்னுந்தலத்தை விரும்பிவணங்கி; கன்னிமதின்மணிமாடம் = அழிவில்லாத அரண்கள்சூழ்ந்த மணிகளிழைத்த மாளிகைகளையுடைய; காஞ்சிமாநகரணைந்தார் = திருக்காஞ்சியென்னுந்தலத்தைச் சேர்ந்தார்-எ-று. (உஅரு)

இவ்விரண்டும் குளகம். அக்குளகத் திரியாதுநின்ற அகரச்சுட்டு திருவாலங் காடென்னும் அத்தலத்தையுணர்த்திநின்றது.

## திருவாலங்காடு - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

முத்தாமுத்திதரவல்லமுகிழ்மென்முலையாளுமைபங்கா
சித்தாசித்தித்திறங்காட்டுஞ்சிவனேதேவர்சிங்கமே
பத்தாபத்தர்பலர்போற்றும்பரமாபழையனூர்மேய
வத்தாவாலங்காடாவுன்னடியார்க்கடியேனாவேனே.

பத்தர்சித்தர்பலரேத்தும்பரமன்பழையனூர்மேய
வத்தனாலங்காடன்றனடிமைத்திறமேயன்பாகிச்
சித்தர்சித்தம்வைத்தபுகழ்ச்சிறுவனூரனொண்டமிழ்கள்
பத்தும்பாடியாடுவார்பரமனடியேபணிவாரே.

திருச்சிற்றம்பலம்.

---

## சுவாமிபெயர் ஊர்த்ததாண்டவேசுரர். தேவியார் வண்டார் பூங்குழலியம்மை. திருப்பதிகம் - ௪.

தேனிலவுபொழிற்கச்சித்திருக்காமக்கோட்டத்தி
லூனில்வளருயிர்க்கெல்லாமொழியாதகருணையினா
லானதிருவறம்புரக்குமம்மைதிருக்கோயிலின்முன்
வானில்வளர்திருவாயில்வணங்கினார்வன்றொண்டர்.

(இ-ள்.) தேனிலவுபொழிற்கச்சித்திருக்காமக்கோட்டத்தில் = தேன்வெள்ளஞ் செறிந்தசோலைசூழ்ந்த திருக்காஞ்சிப்பதியிலுள்ள திருக்காமக்கோட்டத்திலேவதிந்து; ஊனில்வளருயிர்க்கெல்லாம்=உடலோடுவாழும் உயிர்களுக்கெல்லாம்; ஆனதிருவறம் = இன்பமளிக்கும் இனியதருமங்களை; ஒழியாதகருணையினாற்புரக்கும்=குன்றுதலில்லாத திருவருளினாற்பேணிய; அம்மைதிருக்கோயிலின்முன்=காமாட்சியம்மையினது ஆலயத்தின்முன்னுள்ள;வானில்வளர்திருவாயில்=தேவலோகமளவுஞ் சென்றோங்கிய திருவாயிலை; வன்றொண்டர்வணங்கினார்=நம்பியாரூரர் நமஸ்கரித்தார்-எ-று. (உ௮௪)

திருக்காமக்கோட்டம் தேவியார்திருவாலயம். கோட்டத்தில் புரக்கும் என இயையும். ஊன்-ஆகுபெயர்.

தொழுதுவிழுந்தெழுந்தருளாற்றுதித்துப்போய்த்தொல்லுலக
முழுதுமளித்தழித்தாக்குமுதல்வர்திருவேகம்பம்
பழுதிலடியார்முன்புபுகப்புக்குப்பணிசின்று
ரிழுதையேன்றிருமுன்பேயென்மொழிவேனென்றிறைஞ்சி.

(இ-ள்.) விழுந்துதொழுதெழுந்தருளாற்றுதித்துப்போய் = நிலத்தில்விழுந்து நமஸ்கரித்தெழுந்து திருவருளாற்பரவிப்போந்து; பழுதிலடியார்முன்புபுகப்புக்கு=ஒழுக்கம்வழுவாத உண்மையடியவர்கள் எதிர்கொள்ள அவருடன்உட்சென்று; தொல்லு

லகமுழுதுமளித்தழித்தாக்கும்=பழைய உலகமுழுமையும் காத்தும் சங்கரித்தும் சிரு ட்டிக்கும்; முதல்வர்திருவேகம்பம்பணிகின்றார்=இறைவராகிய சிவபெருமானது திரு வேகம்பத்தை இறைஞ்சுவாராகிய வன்றொண்டப்பெருமான்; திருமுன்பேஇழுதையே னென்மொழிவேனென்றிறைஞ்சி=சந்நிதிமுன்னர் அறிவிலேனாகியயான் யாதுதுதிப் பேனென்று பணிந்து-எ-று. (உ௮௫)

தொழுதுவிழுதல் அஞ்சலித்துவணங்கலுமாம். அவனருளின்றி அவன்றாளைத் துதித்தல் இயலாதாகலின் "அருளாற்றுதித்து" எனவும், தொன்றுதொட்டுவருதலின் "தொல்லுலகம்" எனவும், அளவுபடாத அருட்பெருந்திறத்தை அறிந்துதுதித்தல் அரி தாகலின் "இழுதையேனென்மொழிவேன்" எனவும் கூறினார். தேவியார்வழிபட்ட திருவேகம்பத்திலே வீற்றிருந்துகொண்டு திரிமூர்த்திகளையுந்தோற்றுவித்து அவர்க்குச் சிருட்டியாதி முத்தொழில்களுமளித்துவிளங்கும் முதற்கடவுளென்பார் "தொல்லுலக முழுதுமளித்தழித்தாக்குமுதல்வர்" என்றார். உலகைத்தோற்றுவித்தபடியேயொடுக்கி மீட்டும் சிருட்டித்தலுடையராகலின், "அளித்தழித்தாக்குமுதல்வர்" எனமுறைப்படு த்தனரென்க. அம்மூவரும் சிருட்டியாதிமுத்தொழில்பெற வழிபட்ட முத்தலங்களும் வெள்ளக்கம்பம் கள்ளக்கம்பம் நல்லகம்பம் எனப்பெயர்பெறும். இதனைக்காஞ்சிப்புரா ணம் திருவேகம்பப்படலத்துணர்க.

விண்ணாள்வாரமுதுண்ணமிக்கபெருவிடமுண்ட
கண்ணாளாகச்சியேகம்பனேகடையானே
னெண்ணாதபிழைபொறுத்தின்றியான்காணவெழிற்பவள
வண்ணாகண்ணளித்தருளாயெனவீழ்ந்துவணங்கினார்.

(இ-ள்.) விண்ணாள்வாரமுதுண்ண=தேவலோகத்தையாளும் திருமாலாதிதே வர்கள் அமிழ்தம்நுகர்தற்பொருட்டு; மிக்கபெருவிடமுண்டகண்ணாளா=அதிகரித்த பெ ரிய நஞ்சத்தைப்பருகிய அருட்கண்ணரே; கச்சியேகம்பனே=திருக்கச்சித்திருவேகம் பரே; எழிற்பவளவண்ணா=அழகிய பவளம்போன்ற நிறத்தரே; கடையானேனெண்ணா தபிழைபொறுத்து=கீழ்மையேனாகிய அடியேன் சிந்தியாதியற்றிய குற்றத்தைப்பொறு த்தருளி; இன்றியான்காண=இப்பொழுது தேவரீரைத்தரிசித்தற்கு; கண்ணளித்தருளா யெனவீழ்ந்துவணங்கினார்=நேத்திரத்தைத் தந்தளிப்பீரென்று விழுந்துபணிந்தார். எ-று. (உ௮௬)

இவ்விரண்டுங்குளகம். உண்ணஉண்டஎனஇயையும். தேவருமுனிவரும் இரியத் திசைமுழுதும்பரம்பிச் சீறிவந்ததாகலின், "மிக்கபெருவிடம்" எனவும், அதனைப்பருகு தாவழி அவருய்தலும் அமிர்தருந்தலும் இன்றாமாகலின் "அமுதுண்ணவிடமுண்ட" எனவும், பிரார்த்தனையின்றிச்சென்று பாற்கடல்கடைந்து ஆலகாலந்தோன்றியபின் அடைக்கலம்புக்கார்க்கும் அருட்பார்வையளித்தலின் "கண்ணாளா" எனவும், சூளுறன் மறுப்பின் துயருழத்தற்சேதுவாமெனத் துணியாதியற்றியதாகலின் "எண்ணாதபிழை" எனவும், அடிமையின்தவறைப்பொறுத்தல் ஆண்டார்க்குக்கடமையாகலின் "பிழை பொறுத்துக்கண்ணளித்தருளாய்" எனவும் கூறினாரென்க. கண்ணோடிநஞ்சுநுகர்தல் "பெயக்கண்டுநஞ்சுண்டமைவர்நயக்கண்டு - நாகரிகம்வேண்டுபவர்." என்னுந்திருக் குறளானுமுணர்க. நாகரிகம்-கண்ணோட்டம்.



இடக்கண்பெற்று திருத்
ஆளுடையநம்பி ஸ்ரீகாஞ்சிப்பதியில் திருவேகாம்பவாணனைத்தொழுது
வீதிவிடங்கப்பெருமானைத்தெரிசித்து வலக்கண்பெற்றது.

பங்கயச்செங்கைத்தளிராற்பனிமலர்கொண்டர்ச்சித்துச்
செங்கயற்கண்மலைவல்லிபணிந்தசேவடிநினைந்து
பொங்கியவன்பொடுபரவிப்போற்றியவாரூரருக்கு
மங்கைதழுவக்குழைந்தார்மறைந்தவிடக்கண்கொடுத்தார்.

(இ-ள்.) செங்கயற்கண்மலைவல்லி = செவ்வியகயல்போலும் கண்களையுடைய பார்வதிதேவியார்; பங்கயச்செங்கைத்தளிரால்=செந்தாமரைமலரையும் சிறுதளிரையு நிகர்த்த சிவந்தகரங்களால்; பனிமலர்கொண்டர்ச்சித்து=தண்ணியமலர்களாற் பூசித்து; பணிந்தசேவடிநினைந்து=வணங்கிய திருவடிகளைச் சிந்தித்து; பொங்கியவன்பொடு பரவிப்போற்றியவாரூரருக்கு=பெருகியஅன்போடு துதித்துவணங்கிய நம்பியாரூரருக்கு; மங்கைதழுவக்குழைந்தார்=அம்பிகையாரணைக்க அருண்மேனிகுழைந்த அப்பெருமான்; மறைந்தஇடக்கண்கொடுத்தார்=பார்வையிழந்த இடதுநேத்திரத்தைப் பரிந்தருளினார்-எ-று.

பார்வதிதேவியார் மலையிலுதித்தமையின், "மலைவல்லி" என்றார். குழைதலாவது திருமேனிநெகிழ்ந்து முலைத்தழும்பும் வளைத்தழும்புமுடையராதல். (உ௮எ)

ஞாலந்தானிடந்தவனுநளிர்விசும்புகடந்தவனு
மூலந்தானறிவரியார்கண்ணளித்துமுலைச்சுவட்டுக்
கோலந்தான்காட்டுதலுங்குறுகிவிழுந்தெழுந்துகளித்
தாலந்தானுகந்தவனென்றெடுத்தாடிப்பாடினார்.

(இ-ள்.) ஞாலந்தானிடந்தவனும்=(வராகமாய்ப்) பூமியைக்கீண்டதிருமாலும்; நளிர்விசும்புகடந்தவனும்=(அன்னமாய்க்) குளிர்ந்த வானையளவிட்டபிரமதேவரும்; மூலந்தானறிவரியார்கண்ணளித்து = அடியும்முடியும் காணுதற்கரியபெருமான் இடக்கண்பாலித்து; முலைச்சுவட்டுக்கோலந்தான்காட்டுதலும் = முலைத்தழும்பணிந்ததிருக்கோலத்தைக் காட்டியருளலும்; குறுகிவிழுந்தெழுந்துகளித்து=அணுகி நமஸ்கரித்தெழுந்து மகிழ்ந்து; ஆலந்தானுகந்தவனென்றெடுத்து="ஆலந்தானுகந்தமுதுசெய்தவன்" என்றுதொடங்கி; ஆடிப்பாடினார்=நிர்த்தனஞ்செய்துகொண்டு திருப்பதிகம் அருளிச்செய்தார்-எ-று.

உம்மைகள் எண்ணின்கணின்ற உயர்வுசிறப்பு. மூலமறிவரியார் என்றதனால் முடியுமறிவறியார்என்பது உபலக்கணத்தாற்பெற்றாம்; அவற்றையறியநாடிய இருவரையும் அறைதலின். அறிவென்புழி நான்கனுருபுவிகாரத்தாற்றொக்கது. சிறப்புநோக்கி முலைத்தழும்பிசைப்பினும் வளைத்தழும்புங்கொள்க. சுவடு-நல்லவழி. குறுகல்-தாழ்தலுமாம். தான் என்பன-அசைகள். (உ௮௮)

## திருவேகம்பம் - பண் - தக்கேசி.

### திருச்சிற்றம்பலம்.

ஆலந்தானுகந்தமுதுசெய்தானையாதியையமரர்தொழுதேத்துஞ்
சீலந்தான்பெரிதும்முடையானைச்சிந்திப்பாரவர்சிந்தையுளானை
யேலவார்குழலாளுமைநங்கையென்றுமேத்திவழிபடப்பெற்ற
காலகாலனைக்கம்பனெம்மானைக்காணக்கண்ணடியேன்பெற்றவாறே.

பெற்றமேறுகந்தேறவல்லானைப்பெரியவெம்பெருமானென்றெப்போதுங்
கற்றவர்பரவப்படுவானைக்காணக்கண்ணடியேன்பெற்றதென்று
கொற்றவன்கம்பன்கூத்தனெம்மானைக்குளிர்பொழிற்றிருநாவலாரூர
னற்றமிழிவையீரைந்தும்வல்லார்நன்னெறியுலகெய்துவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

பாடிமிகப்பரவசமாய்ப்பணிவார்க்குப்பாவையுட
னீடியகோலங்காட்டநிறைந்தவிருப்புடனிறைஞ்சிச்
சூடியவஞ்சலியினராய்த்தொழுதுபுறம்போந்தன்பு
கூடியமெய்த்தொண்டருடன்கும்பிட்டங்கினிதமர்வார்.

(இ-ள்.) பாடிமிகப்பரவசமாய்ப்பணிவார்க்கு = திருப்பதிசம்அருளிப் பெரிதுந் தன்வசமிழந்து சேவிக்கும் வன்றொண்டப்பிரானுக்கு; பாவையுடனீடியகோலங்காட்ட =மீட்டும் தேவியாரோடு மிக்கதிருக்கோலத்தைக் காட்டியருளலும்; நிறைந்தவிருப்புடனிறைஞ்சி = பூரணவிழைவாற் பணிந்து; சூடியவஞ்சலியினராய்த்தொழுதுபுறம் போந்து=சிரத்திற்குவித்த கரங்களையுடையராய்வணங்கிப் புறத்தில்வந்து; அன்புகூடியமெய்த்தொண்டருடன்=அன்புமுதிர்ந்த உண்மையடியவர்களோடு; அங்குக்கும்பிட்டினிதமர்ந்தார்=அத்தலத்திலே (அவ்வக்காலங்களினும்) தரிசனஞ்செய்துகொண்டு விருப்புடன்வீற்றிருந்தார்-எ-று. (உஅசு)

மாமலையாண்முலைச்சுவடும்வளைத்தழும்புமணிந்தமதிப்
பூமலிவார்சடையாரைப்போற்றியருளதுவாகத்
தேமலர்வார்பொழிற்காஞ்சித்திருநகரங்கடந்தகல்வார்
பாமலர்மாலைப்பதிகந்திருவாரூர்மேற்பரவி.

(இ-ள்.) அருளதுவாக=பெருமான் தமக்குப்பாலித்ததிருவருள் இடக்கண் அளித்தலதுவேயாக; மாமலையாண்முலைச்சுவடும்வளைத்தழும்புமணிந்த = பெருமைபெற்ற பார்வதிதேவியாருடைய முலைத்தழும்பையும் வளைத்தழும்பையுமணிந்த; மதிப்பூமலிவார்சடையாரைப்போற்றி=அப்பெருமானைவணங்கி; தேமலர்வார்பொழில் = தேன்சொரியும் மலர்செறிந்த நீண்டசோலைகளையுடைய; காஞ்சித்திருநகரங்கடந்தகல்வார்= திருக்காஞ்சிநகரைக்கடந்து செல்லுங்கால்; மலர்ப்பாமாலைப்பதிகந்திருவாரூர்மேற் பரவி=மலர்ந்த பாமாலையாகியதிருப்பதிகத்தைத் திருவாரூர்மீது சுட்டி-எ-று.

மதிப்பூமலிவார்சடையாரென்பது சந்திரனும் கொன்றைமுதலிய மலர்களும் மிக்ககங்கையும் தங்கிய சடையாரெனப்பொருள்படினும் ஈண்டுச் சிவபெருமானென்னும் பெயரளவாய்நின்றது. பரவி என்பது சுட்டுதலென்னும்பொருளில்வந்தது. உஅ௭

அந்தியுநண்பகலுமெனவெடுத்தார்வத்துடனசைவா
லெந்தைபிரான்றிருவாரூரென்றுகொலெய்துவதென்று
சந்தவிசைபாடிப்போய்த்தாங்கரியவாதரவு
வந்தணையவன்பருடன்மகிழ்ந்துவழிக்கொள்கின்றார்.

(இ-ள்.) ஆர்வத்துடனந்தியுநண்பகலுமெனவெடுத்து=விருப்பத்தோடு "அந்தியுநண்பகலும்" என்றுதொடங்கி; திருவாரூரெந்தைபிரானென்றுகொலெய்துவதென்று="திருவாரூர் (புக்கு) எந்தைபிரானை என்றுகொலெய்துவது" என்று; அசைவா

றிசைந்தவிசைபாடிப்போய்=சோர்விஞல் அழுகிப்பண்ணேடுபொடிச்சென்று; தாங்கரிய ஆதரவுவந்தடைய=தாங்குதற்கரியதாய்மேலோங்கிய அன்புபெருக; அன்பருடன்மகிழ்ந்துவழிக்கொள்கின்ருர்=அன்பரோடுகளித்து வழிச்செல்வாராயினர்—எ-று.

இவ்விரண்டுங்குளகம். அசைவு - ஆரூர்ப்பெருமானை நெடுநாளகன்றமையைச் சிந்தித்தலானிகழும் மனச்சோர்வு. தாங்கரியஆதரவு - எல்லையில்லாத அன்பு. (உகூக)

## திருவாரூர் - பண் - புறநீர்மை.

### திருச்சிற்றம்பலம்.

அந்தியுநண்பகலுமைஞ்சுபதஞ்சொல்லி
முந்தியெழும்பழையவல்வினைமூடாமுன்
சிந்தைபராமரியாத்தென்றிருவாரூர்புக்
கெந்தைபிரானரையென்றுகொலெய்துவதே.

மின்னெடுஞ்செஞ்சடையான்மேவியவாரூரை
நன்னெடுங்காதன்மையாளவலர்கோனூரன்
பன்னெடுஞ்சொன்மலர்கொண்டிட்டனபத்தும்வல்லார்
பொன்னுடைவிண்ணுலகம்நண்ணுவர்புண்ணியரே.

### திருச்சிற்றம்பலம்.

மன்னுதிருப்பதிகடொறும்வன்னியொடுங்கூவிளமுஞ்
சென்னிமிசைவைத்துவந்தார்கோயிலின்முன்சென்றிறைஞ்சிப்
பன்னுதமிழ்த்தொடைசாத்திப்பரவியேபோந்தணைந்தா
ரன்னமலிவயற்றடங்கள்சூழ்ந்ததிருவாமாத்தூர்.

(இ-ள்.) மன்னுதிருப்பதிகடொறுஞ்சென்று = வழியிற்பொருந்திய திருத்தலங்கடோறுமடைந்து; வன்னியொடுங்கூவிளமுஞ்சென்னிமிசைவைத்துவந்தார்=வன்னியும்வில்வமும் திருமுடியிலே மகிழ்ந்தணிந்தபெருமானது; கோயிலின்முன்னிறைஞ்சி=ஆலயங்களின் முன்னர்வணங்கி; பன்னுதமிழ்த்தொடைசாத்திப்பரவிப்போந்து= சீர்த்திபெற்ற தமிழ்த்திருப்பதிகப் பாமாலையைப் புனைந்துதுதித்துச்சென்று; அன்னமலிவயற்றடங்கள்சூழ்ந்த=அன்னங்கள்விளையாடும் வயல்களுங் குளங்களுஞ் செறிந்த; திருவாமாத்தூரணைந்தார்=திருவாமாத்தூரைச்சேர்ந்தார்—எ-று. ஏ-அசை. (உகூஉ)

அங்கணரையாமாத்தூரழகர்தமையடிவணங்கித்
தங்குமிசைத்திருப்பதிகம்பாடிப்போய்த்தாரணிக்கு
மங்கலமாம்பெருந்தொண்டைவளநாடுகடந்தணைவார்
செங்கண்வளவன்பிறந்தசீர்நாடுநீர்நாடு.

(இ-ள்.) ஆமாத்தூரங்கணரையழகர்தமை=திருவாமாத்தூரிலமர்ந்த அருட்கண்ணராகியஅழகரை; அடிவணங்கி=திருவடிகளில்வணங்கி; இசைதங்குதிருப்பதிகம்பாடிப்போய்=பண்ணேடுபொருந்திய திருப்பதிகமருளிச்சென்று; தாரணிக்குமங்கலமாம்=உலகிற்கு மங்களம்போல்விளங்கும்; பெருந்தொண்டைவளநாடுகடந்து=பெரியதொண்டைவளநாட்டையகன்று; செங்கண்வளவன்பிறந்த=கோச்செங்கட்சோழநாயனர் திருவவதாரஞ்செய்த; சீர்நாடுநீர்நாடணைவார்=சிறப்பை யாவருநாடுகின்ற சோணாட்டைச் சேர்வாராய்—எ-று.

* "முதன்முன்னைவரிற்கண்ணென்வேற்றுமை - சினைமுன்வருதறெள்ளிதென்ப." என்றதனால் அடியென்னும்சினைக்கண் ஏழனுருபுவிரிக்கப்பட்டது. மங்கலசூத்திரம் ஏனையஅணிகளிற்சிறத்தல்போலத் தொண்டைநாடு மற்றெந்நாடுகளினும் சிறந்து, அம்பிகையறம்வளர்த்ததானமாய் அனேகவிம்பிதங்களைக்கொண்டு அரிபிரமேந்திராதிதேவர்முதலியோர்க்கு வேண்டிய இஷ்டசித்திகளை அளித்துவிளங்கும் திருக்காஞ்சிமுதலிய திருப்பதிகளையுடைமையின் "மங்கலமாம்பெருந்தொண்டைவளநாடு" என்றார். இதில் ஆக்கச்சொல் உவமைப்பொருள் குறித்துநின்றது. இதனை × "ஆள்வாரிலிமாடாவேனோ" என்னுந்திருவாசகத்தானுமுணர்க. கோச்செங்கட்சோழநாயனார் சிவாலயங்கள் பலவமைத்ததுமன்றித் தேசமுழுமையும் சிவபத்திபரவச்செய்தவராகலின் அவரை ஈண்டுச்சிறப்பித்தனரென்க. (௨கூஙு)

அந்நாட்டின்மருங்குதிருவரத்துறையிற்சென்றெய்தி
மின்னாரும்படைமழுவார்விரைமலர்த்தாட்பணிந்தெழுந்து
சொன்மாலைமலர்கல்வாயகிலென்னுந்தொடைசாத்தி
மன்னார்வத்திருத்தொண்டருடன்மகிழ்ந்துவைகினார்.

(இ-ள்.) அந்நாட்டின்மருங்குதிருவரத்துறையிற்சென்றெய்தி = அச்சோணாட்டினருகுள்ள திருவரத்துறையிற்சென்றடைந்து; மின்னாரும்படைமழுவார் = காந்திநிரம்பியமழுப்படையையுடையகடவுளின்; விரைமலர்த்தாட்பணிந்தெழுந்து = மணநிறைந்தமலர்ப்பதங்களை வணங்கியெழுந்து; சொன்மாலைமலர்கல்வாயகிலென்னுந்தொடைசாத்தி = சொற்களாகியமலர்களாற் றொடுக்கப்படும் "கல்வாயகில்" என்னும் பாமாலையைத்தரித்து; மன்னார்வத்திருத்தொண்டருடன்மகிழ்ந்துவைகினார் = மிக்ககாதலையுடைய அடியவர்களோடு களித்துவசித்தார் -எ-று.

அந்நாடென்றது சோணாட்டினை. திருவரத்துறையென்னுந்தலம் நடுநாட்டின்கண்ணதாகலின் அந்நாடென்னாது "அந்நாட்டின்மருங்கு" என்றார். (௨கூச)

## திருநெல்வாயில்அரத்துறை - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

கல்வாயகிலுங்கதிர்மாமணியுங்கலந்துந்திவருநிவவின்கரைமே
னெல்வாயிலரத்துறைநீடுறையுநிலவெண்மதிசூடியநின்மலனே
நல்வாயில்செய்தார்நடந்தாருடுத்தார்நரைத்தாரிறந்தாரெனநானிலத்திற்
சொல்வாய்க்கழிகின்றதறிந்தடியேன்றொடர்ந்தேனுய்யப்போவதொர் சூழல்
சொல்லே.

நீரூருநெடுவயல்சூழ்புறவினெல்வாயிலரத்துறைநின்மலனைத்
தேரூர்நெடுவீதிநன்மாடமலிதென்னாவலர்கோனடித்தொண்டனணி
யாரூரனுரைத்தனநற்றமிழின்மிகுமாலையொர்பத்திவைகற்றுவல்லார்
காரூர்களிவண்டறையானைமன்னரவராகியொர்விண்முழுதாள்பவரே.

திருச்சிற்றம்பலம்.

பரமர்திருவரத்துறையைப்பணிந்துபோய்ப்பலபதிகள்
விரவிமழவிடையுயர்த்தார்விரைமலர்த்தாடொழுதேத்தி

* தொல்காப்பியம் சொலலதிகாரம் சூ-அஅ. × கோயின்மூத்ததிருப்பதிகம்.

யுரவுநீர்த்தடம்பொன்னியடைந்தன்பருடனாடி
யரவணிந்தாரமர்ந்ததிருவாவடுதண்டுறையணைந்தார்.

(இ-ள்.) பரமர்திருவீரதந்துறையைப்பணிந்துபோய் = சிவபெருமானெழுந்தருளிய திருவரத்துறையைத்தொழுது புறப்பட்டு; பலபதிகள்விரவி = பலதலங்கடோறு மடைந்து; மழவிடையுயர்த்தார் = இளமைவாய்ந்த இடபத்தைக் கொடியாகவுயர்ந்திய இறைவரது; விரைமலர்த்தாடொழுதேத்தி = மணஞ்செறிந்த தாமரைமலர்போலுந் திருவடிகளைவணங்கித்துதித்து; உரவுநீர்த்தடம்பொன்னியடைந்தன்பருடனாடி = அலைகளுலாவும் நீர்நிரம்பிய அகன்ற காவிரிநதியையணைந்து அடியவரோடுமூழ்கி; அரவணிந்தாரமர்ந்ததிருவாவடுதண்டுறையணைந்தார் = பாம்பையணிந்தபரமர்விரும்பிய திருவாவடுதுறையைச்சேர்ந்தார்-எ-று.

உரவல்-உலாவல். அலைகளென்பது அவாய்நிலையான்வந்தது. (உகூரு)

அங்கணைவார்தமையடியாரெதிர்கொள்ளப்புக்கருளிப்
பொங்குதிருக்கோயிலினைப்புடைவலங்கொண்டுள்ளணைந்து
கங்கைவாழ்சடையாயோர்கண்ணிலேனெனக்கவல்வா
ரிங்கெனக்காருறவென்னுந்திருப்பதிகமெடுத்திசைத்தார்.

(இ-ள்.) அங்கணைவார் = அங்கெழுந்தருளியஆளுடையநம்பிகள்; தமைஅடியாரெதிர்கொள்ளப்புக்கருளி = தம்மைஅடியவரெதிர்கொள்ள ஆண்டுச்சென்று; பொங்குதிருக்கோயிலினைப்புடைவலங்கொண்டுள்ளணைந்து = ஓங்கியதிருவாலயத்தைப்புறவலம் வந்து உள்ளேபுகுந்து; கங்கைவாழ்சடையாயோர்கண்ணிலேனெனக்கவல்வார் = "கங்கைவாழ்சடையாய்" ஒருகண்ணில்லேனென்று கவலையுறுவாராய்; இங்கெனக்காருறவென்னுந்திருப்பதிகமெடுத்திசைத்தார் = இங்கே அடியேனுக்கு ஆர் உறவு என்னுந்திருப்பதிகத்தையருளிச்செய்தார்-எ-று. புடை-புறம். (உகூசு)

## திருவாவடுதுறை - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

கங்கைவாழ்சடையாய்கணநாதாகாலகாலனேகாமனுக்கனலே
பொங்குமாகடல்விடமிடற்றானேபூதநாதனேபுண்ணியாபுனிதா
செங்கண்மால்விடையாய்தெளிதேனேதீர்த்தனேதிருவாவடுதுறையு
ளங்கணாவெனையஞ்சலென்றருளாயாரெனக்குறவமரர்களேறே.

வெண்டலைப்பிறைகொன்றையுமரவும்வேரிமத்தமும்விரவிமுன்முடித்த
விண்டைமாமலர்ச்செஞ்சடையானைவீசனைத்திருவாவடுதுறையு
ளண்டவாணனைச்சிங்கடியப்பனணுக்கவன்றொண்டனூர்வத்தானுரைத்த
தண்டமிழ்மலர்பத்தும்வல்லார்கள்சாதலும்பிறப்புமறுப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

திருப்பதிகங்கொடுபரவிப்பணிந்துதிருவருளாற்போய்
விருப்பினொடுந்திருத்துருத்திதனைமேவிவிமலர்கழ
லருத்தியினாற்புக்கிறைஞ்சியடியேன்மேலுற்றபிணி
வருத்தமெனையொழித்தருளவேண்டுமெனவணங்குவார்.

(இ-ள்.) திருப்பதிகங்கொடேரவிப்பணிந்து = திருப்பதிகங்கொண்டு துதித்துவணங்கி; திருவருளாற்போய் = திருவருள்பெற்றுச்சென்று; விருப்பினொடுந் திருத்துருத்தியணைவேவி = ஆர்வத்தோடும் திருத்துருத்தியென்னுந் தலத்தையடைந்து; விமலர்கழலருத்தியினாற்புக்கிறைஞ்சி = நிருமலராகிய சிவபிரானது திருவடிகளை நேசத்தாலணுகிவணங்கி; அடியேன்மேலுற்றபிணிவருத்தம் = அடியேனது உடலிற்பற்றிய நோயின் வருத்தத்தை; எனையொழித்தருளவேண்டுமெனவணங்குவார் = என்பால் அகற்றியருளவேண்டுமென்று பணிவாராயினார்-எ-று. (உசஎ)

விமலர்- அநாதியேமலத்தினீங்கியவர். அருத்தி-அன்பு. எனை-வேற்றுமைமயக்கம்.

பரவியேபணிந்தவர்க்குப்பரமர்திருவருள்புரிவார்
விரவியவிப்பிணியடையத்தவிர்ப்பதற்குவேறாக
வரமலர்வண்டறைதீர்த்தவடகுளத்துக்குளியென்னக்
கரவிறிருத்தொண்டர்தாங்கைதொழுதுபுறப்பட்டார்.

(இ-ள்.) பரவிப்பணிந்தவர்க்கு = துதித்துவணங்கிய சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு; பரமர்திருவருள்புரிவார் = சிவபெருமான் திருவருள்பாலிக்கத்திருவுளங்கொண்டவராய்; விரவியவிப்பிணியடையவேறாகத்தவிர்ப்பதற்கு = உடலிற்கலந்த இந்நோய்முழுமையும் வேறுபடவொழித்தற்கு; வரமலர்வண்டறை = தாமரைமலர்களில் வண்டுகளிசைபாடும்; வடகுளத்துத்தீர்த்தங்குளியென்ன = வடகுளத்திலுள்ள தீர்த்தத்திலே மூழ்குவாயென்றுகட்டளையிட; கரவிறிருத்தொண்டர்கைதொழுதுபுறப்பட்டார் = கரத்தலில்லாதநாயனார் அஞ்சலிக்கரத்தராய்ப் புறத்தில்வந்தார்-எ-று. ஏ-அசை.

புரிவார்-முற்றெச்சம். அடைய-முற்றும். தாமரைமலர் ஏனைமலர்களிற்சிறத்தலின் வரமலரென்றது அதனைச்சுட்டிநின்றது. * "பூவிற்குத்தாமரையே" என்பதனுமுணர்க. வடகுளம் - வடக்கின்கணுள்ளகுளம். தாம்பெற்றபேறு உலகமெல்லாமெய்த அறம் பொருள் இன்பம் வீடென்னும் புருஷார்த்தங்களை எளிதின் விளக்கியருளினவராகலின் "கரவிறிருத்தொண்டர்." என்றார். தாம் தான் என்பன பெரும்பான்மை எழுவாய்த்தொடர்க்கண் வரும் அசைகள். (உசஅ)

மிக்கபுனற்றீர்த்தத்தின்முன்னணைந்துவேதமெல்லாந்
தொக்கவடிவாயிருந்ததுருத்தியார்தமைத்தொழுது
புக்கதனின்மூழ்குதலும்புதியபிணியதுநீங்கி
யக்கணமேமணியொளிசேர்திருமேனியராயினார்.

(இ-ள்.) மிக்கபுனற்றீர்த்தத்தினமுன்னணைந்து = மேம்பட்ட அத்தீர்த்தத்தினெதிரேயணுகி; வேதமெல்லாந்தொக்கவடிவாயிருந்த = வேதமுழுமையும் செறிந்ததிருமேனியாகக்கொண்ட; துருத்தியார்தமைத்தொழுது = வேதேச்சுரரைவணங்கி; புக்கதனின்மூழ்குதலும் = அதிற்புகுந்துமுழுகுதலும்; புதியபிணியதுநீங்கி = நூதனமாகநேர்ந்துள்ளநோய்நீங்கி; அக்கணமேமணியொளிசேர்திருமேனியாயினார் = அப்பொழுதே அரதனம்போலும் ஒளிபெற்ற திருமேனி ஆகப்பெற்றார்-எ-று.

புனற்றீர்த்தம் ஒருபொருட்பன்மொழி. அத்தலத்தில் வேதேச்சுரரென்னுந்திருநாமமுடையராகலின் "வேதமெல்லாந்தொக்கவடிவாயிருந்ததுருத்தியார்." என்றார். ()

* திருவள்ளுவமாலை.

கண்டவர்களதிசயிப்பக்கரையேறியுடைபுனைந்து
மண்டுபெருங்காதலினாற்கோயிலினைவந்தடைந்து
தொண்டரெதிர்மின்னுமாமேகமென்னுஞ்சொற்பதிக
மெண்டிசையுமறிந்துய்யவேழிசையாலெடுத்திசைத்தார்.

(இ-ள்.) கண்டவர்களதிசயிப்பக்கரையேறியுடைபுனைந்து = கண்டோர்வியக்க (மணியொளிபெற்றுக்) கரையேறி ஆடையணிந்து; மண்டுபெருங்காதலினாற்கோயிலினைவந்தடைந்துதொண்டரெதிர்=செறிந்தமிக்கவிருப்பத்தால் திருவாலயத்தையடைந்து சிவனடியாரெதிரே; மின்னுமாமேகமென்னுஞ்சொற்பதிகம்= "மின்னுமாமேகம்" என்னும் முதற்குறிப்பையுடைய வியன்பதிகத்தை; எண்டிசையுமறிந்துய்ய=எட்டுத்திக்கிலுள்ளாரும் ஆராய்ந்து நற்கதிபெறும்படி; ஏழிசையாலெடுத்திசைத்தார்=எழுவகையிசையால் எடுத்துப்பாடினார்-எ-று.

தொண்டரெதிரிசைத்தாரென இயையும். அறிதல் அதன்காரணமாகிய ஆராய்தலையுணர்த்திற்று. ஏழிசை-குரல்-துத்தம்-கைக்கிளை-உழை-இளி-விளரி-தாரமென்பவை.()

[திருத்துருத்தியும்திருவேள்விக்குடியும்-பண்-காந்தாரம்.]

திருச்சிற்றம்பலம்.

மின்னுமாமேகங்கள்பொழிந்திழிந்தருவிவெடிபடக்கரையொடு திரைகொணர்ந்தெற்று, மன்னமாங்காவிரியகன்கரையுறைவா ரடியிணைதொழுதெழுமன்பராமடியார், சொன்னவாறறிவார்துருத்தியார்வேள்விக் குடியுளாரடிகளைச்செடியனேனாயே, னென்னைநான்மறக்குமாறெம்பெருமானையென்னுடம்படும்பிணியிடர்கெடுத்தானே.

மங்கையோர்கூறுகந்தேறுகந்தேறிமாற்றலார்திரிபுரநீறெழச்செற்ற,வங்கையான்கழலடியன்றிமற்றறியானடியவர்க்கடியவன்றொழுவனாரூரன்,கங்கையார்காவிரித்துருத்தியார்வேள்விக்குடியுளாரடிகளைச்சேர்த்தியபாடற்,றங்கையாற்றொழுதுதந்நாவின்மேற்கொள்வார் தவநெறிச்சென்றமருலகமாள்வாரே. திருச்சிற்றம்பலம்.

பண்ணிறைந்ததமிழ்பாடிப்பரமர்திருவருண்மறவா
ரெண்ணிறைந்ததொண்டருடன்பணிந்தங்கணுறைந்தேகி
யுண்ணிறைந்தபதிபிறவுமுடையவர்தாள்வணங்கிப்போய்க்
கண்ணிறைந்ததிருவாரூர்முன்றோன்றக்காண்கின்றார்.

(இ-ள்) பண்ணிறைந்ததமிழ்பாடி=பண்ணிரம்பிய பதிகத்தையருளிச்செய்து; பரமர்திருவருண்மறவார்=அப்பெருமான் தமக்குப்பாலித்ததிருவருளை மறவாதவராய்; எண்ணிறைந்ததொண்டருடன்பணிந்து = எண்ணிற்குறைவில்லாத அடியவர்களோடு மிறைஞ்சி; அங்கணுறைந்தேகி=ஆண்டுவசித்தகன்று; உண்ணிறைந்தபதிபிறவும்=அந்நாட்டினுள்ளேநிறைவுற்ற பிறதலங்களினும்; உடையவர்தாள்வணங்கிப்போய் = தம்மையடிமைகொண்டதலைவருடையதிருவடிகளைத் தாழ்ந்துசென்று; கண்ணிறைந்ததிருவாரூர்முன்றோன்றக்காண்கின்றார்=கண்ணிறைவுற்றதிருவாரூர் எதிரேவிளங்கக் காண்கின்ற அந்நாயனார்—எ-று.

மறவார்பணிந்தெனஇயையும். அடியவர் நாளுக்குநாள் குறைவின்றிமிகுதலின் "எண்ணிறைந்ததொண்டர்" எனவும், பார்த்தகண்கள்மீளாதபடி பலவளங்களுடைமையின் "கண்ணிறைந்ததிருவாரூர்" எனவும் கூறினார். (ஙுoக)

அன்றுதிருநோக்கொன்றாலாரக்கண்டின்புற்றார்
நின்றுநிலமிசைவீழ்ந்துநெடிதுயிர்த்துநேரிறைஞ்சி
வன்றொண்டர்திருவாரூர்மயங்குமாலையிற்புகுந்து
துன்றுசடைத்தூவாயார்தமைமுன்னந்தொழவணைந்தார்.

(இ-ள்.) அன்றுவன்றொண்டர் = அப்பொழுதுவன்றொண்டப்பெருமான்; திருவாரூர் திருநோக்கொன்றாலாரக்கண்டு=திருவாரூரை ஒருநேத்திரத்தினாலே நிரம்பத்தரிசித்து; இன்புற்றார்நின்று=மகிழ்ந்தவராய்நின்று; நிலமிசைவீழ்ந்துநெடிதுயிர்த்துநேரிறைஞ்சி=பூமியில்விழுந்து பெருமூச்செறிந்து எதிர்வணங்கி; மயங்குமாலையிற்புகுந்து=(அந்தலத்தினுள்ளே) மருண்மாலையிற்புகுந்து; துன்றுசடை=கற்றைச்சடைமுடியோடு; தூவாயார்தமை=யாவர்க்கும் பற்றுக்கோடாயுள்ள மண்டலேச்சுரரை;முன்னந்தொழவணைந்தார்=முன்புவணங்குதற்குச்சென்றார்-எ-று.

இவ்விரண்டுங்குளகம். மருண்மாலை-அந்திவேளை. தூஆயார் பற்றுக்கோடாயினவர். தூ-பற்றுக்கோடாதலை "மனந்தூய்மைசெய்வினைதூய்மையிரண்டு, மினந்தூய்மைதூவாவரும்." என்னுந்திருக்குறளானுமுணர்க. தூய்மையுடைய வேதசிவாகமவாக்கியராகலின் தூவாயாரென்னலுமொன்று. (ஙுoஉ)

பொங்குதிருத்தொண்டருடனுள்ளணைந்துபுக்கிறைஞ்சித்
துங்கவிசைத்திருப்பதிகந்தூவாயாவெனவெடுத்தே
யிங்கெமதுதுயர்களைந்துகண்காணக்காட்டாயென்
றங்கணர்தமுன்னின்றுபாடியருந்தமிழ்புனைந்தார்.

(இ-ள்.) பொங்குதிருத்தொண்டருடனுள்ளணைந்து=பலஅடியவர்களோடு பரவையுண்மண்டளியென்னும் ஆலயத்துள்ளணைந்து, புக்கிறைஞ்சி=பெருமானைச்சமீபித்துவணங்கி; இங்கெமதுதுயர்களைந்து=ஈண்டு எமதுதுன்பத்தைநீக்கி;காணக்கண்காட்டாயென்று=தேவரீர்நேத்தரிசிக்கும்படி வலக்கண்ணையும் விளங்கச்செய்வீரென்று; அங்கணர்தம்முன்னின்று = அருட்கண்ணராகிய அப்பெருமான்சந்நிதியினின்று; துங்கவிசைத்திருப்பதிகந்தூவாயாவெனவெடுத்துப்பாடி = சிறந்தபண்ணையுடைய திருப்பதிகத்தை "தூவாயா" என்றுதொடங்கிப்பாடி; அருந்தமிழ்புனைந்தார்=அவ்வரியதமிழ்ப்பாமாலையைச் சாத்தினார்-எ-று. ஏ-அசை.

கண்ணையுமென்னும் இறந்ததுதழுவுமெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. (ஙுoஙு)

[திருவாரூர்-பரவையுண்மண்டளி-பண்-பஞ்சமம்.]

திருச்சிற்றம்பலம்.

தூவாயாதொண்டுசெய்வார்படுதுக்கங்கள்
காவாயேகண்டுகொண்டாரைவர்க்காகிலும்
நாவாயாலுன்னையேநல்லனசொல்லுவேற்
காவாவென்பரவையுண்மண்டளியம்மானே.

சரந்தையும்வன்னியுமத்தமுங்கூவிளம்
பரந்தசீர்ப்பரவையுண்மண்டளியம்மானை
நிரம்பியவூரனுரைத்தனபத்திவை
விரும்புவார்மேலையார்மேலையார்மேலாரே. திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - மண்டலேசுவரர் - தேவிபெயர்
பஞ்சினுமெல்லடியம்மை. திருப்பதிகம்—க.

ஆறணியுஞ்சடையாரைத்தொழுதுபுறம்போந்தங்கண்
வேறிருந்துதிருத்தொண்டர்விரவுவாருடன்கூடி
யேறுயர்த்தார்திருமூலத்தானத்துளிடைதெரிந்து
மாறிறிருவத்தயாமத்திறைஞ்சவந்தணைந்தார்.

(இ-ள்.) ஆறணியுஞ்சடையாரைத்தொழுதுபுறம்போந்து=கங்கையைத் தரித்த சடைமுடியையுடைய கடவுளைவணங்கிப்புறம்பேவந்து; அங்கண்வேறிருந்து=அங்கே வேறு தனியிடத்திலிருந்து; ஏறுயர்த்தார்திருமூலத்தானத்துள் = இடபத்தைக்கொடியாகவேந்திய இறைவரது திருமூலத்தானத்தினுள்ளே; இடைதெரிந்து = தரிசனத்திற்குரியசமயமறிந்துகொண்டு; மாறிறிருவத்தயாமத்திறைஞ்சி=மாறுபடுதலில்லாத சிறந்த அர்த்தயாமத்திலே அப்பிரானைவணங்கி; விரவுவார்திருத்தொண்டருடன்கூடிவந்தணைந்தார்=கலப்புற்றவர்களாகிய திருத்தொண்டர்களோடு வந்துசேர்ந்தார்-எ-று.

மாறின்மை-தரிசனத்திற்கிடையூறின்மை. அன்றி அர்த்தயாமமென்னும் அப்பதினைந்துநாழிகையிற் குறைபாடின்மையெனினும் அமையும். (கூ0ச)

ஆதிதிருவன்பரெதிரணையவவர்முகநோக்கிக்
கோதிலிசையாற்குருகுபாயவெனக்கோத்தெடுத்தே
யேதிலார்போல்வினவியேசறவாற்றிருப்பதிகங்
காதல்புரிகைக்கிளையாற்பாடியேகலந்தணைவார்.

(இ-ள்.) ஆதிதிருவன்பரெதிரணையவவர்முகநோக்கி=(உள்ளெழுந்தருளுங்கால்) சிவனடியவரெதிர்கொள்ள அவர்திருமுகம்நோக்கி; கோதிலிசையால்=குற்றமற்றபண்ணினால்; குருகுபாயவெனக்கோத்தெடுத்து="குருகுபாய" எனத்தொடுத்துத்தொடங்கி; ஏதிலார்போல்வினவி=(எமதுநிலைமையை ஆரூரருக்குணர்த்துவீரோ) என அவரை அயலவரைவினவுவதுபோல் வினவி; ஏசறவாற்காதல்புரிகைக்கிளையால் = அவாமேலீட்டினால் காதலைவிளைவிக்கும் கைக்கிளையினாலே; திருப்பதிகம்பாடிக்கலந்தணைவார்= திருப்பதிகம்பாடிக்கொண்டு அவரோடுகலந்துசெல்வார்-எ-று. ஏ-அசை.

கைக்கிளை ஒருதலைக்காமம், அதாவது தலைவன்தலைவி என்னும் இருவருள் ஒருவரிடத்துநிகழும் காதல். (கூ0ரு)

திருவாரூர் - பண் - கொல்லி.

**திருச்சிற்றம்பலம்.**

குருகுபாயக்கொழுங்கரும்புகணெரிந்தசா
றருகுபாயும்வயலந்தணாரூரரைப்

பருகுமாறும்பணிந்தேத்துமாறுங்கினைந்
துருகுமாறும்மிவையுணர்த்தவல்லீர்களே.

கித்தமாககினைந்துள்ளமேத்தித்தொழு
மத்தனம்பொற்கழலடிகளாரூரனைச்
சித்தம்வைத்தபுகழ்ச்சிங்கடியப்பன்மெய்ப்
பத்தனூரன்சொன்னபாடுமின்பத்தரே. திருச்சிற்றம்பலம்.

---

சீர்பெருகுந்திருத்தேவாசிரயனைமுன்சென்றிறைஞ்சிக்
கார்விரவுகோபுரத்தைக்கைதொழுதேயுட்புகுந்து
தார்பெருகுபூங்கோயிறனைவணங்கிச்சார்ந்தணைவா
ரார்வமிகுபெருங்காதலாலவனிமேல்வீழ்ந்தார்.

(இ-ள்.) சீர்பெருகுந்திருத்தேவாசிரயனைமுன்சென்றிறைஞ்சி=சிறப்புமிக்க அழகிய தேவாசிரயமென்ற திருக்காவணத்தை எதிர்சென்றுபணிந்து; கார்விரவுகோபுரத்தைக்கைதொழுதேயுட்புகுந்து=மேகம்படியும் உன்னதமுடைய திருக்கோபுரத்தை அஞ்சலிசெய்து உட்புகுந்து; தார்பெருகுபூங்கோயிறனைவணங்கிச்சார்ந்தணைவார்=மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட கமலாலயத்தை வணங்கிச் சமீபிக்கும் அந்நாயனார்; ஆர்வமிகுபெருங்காதலாலவனிமேல்வீழ்ந்தார்=அன்பதிகரித்த மிக்கவிருப்பத்தால் பூமியிலேவீழ்ந்து நமஸ்கரித்தார்-எ-று. ஏ-அசை.

தேவாசிரயம்-தேவர்களுக்கு வாசஸ்தானமாயுள்ளது. ஏனைத்திருத்தொண்டர் முதலியோர்க்கும் வாசஸ்தானமேயாயினும் சிறப்புப்பற்றி தேவாசிரயமெனப்பட்டது. ஆசிரயம் ஆசிரயனெனப்போலியாயிற்று. கமலாலயமென்னும் வடமொழி தமிழிற் பூங்கோயிலெனவந்தது. அது புற்றிடங்கொண்டபெருமான் வீற்றிருக்குந்தானம். ()

வீழ்ந்தெழுந்துகைதொழுதுமுன்னின்றுவிம்மியே
வாழ்ந்தமலர்க்கண்ணொன்றுலாராமன்மனமழிவா
ராழ்ந்ததுயர்க்கடலிடைநின்றடியேனையெடுத்தருளித்
தாழ்ந்தகருத்தினைநிரப்பிக்கண்டாருமெனத்தாழ்ந்தார்.

(இ-ள்.) வீழ்ந்தெழுந்து=அவனியில்விழுந்து நமஸ்கரித்தெழுந்து; கைதொழுதுமுன்னின்றுவிம்மியே=அஞ்சலித்தெதிர்நின்று விம்முதலடைந்து; வாழ்ந்தமலர்க்கண்ணொன்றுலாராமல்-விளக்கமுற்றுள்ளஒருநேத்திரத்தினாலே (விமலரைத்தரிசித்தல்) அமையாமையால்; மனமழிவார்=திருவுளம்வருந்துவாராகிய திருநாவலூரர்; ஆழ்ந்ததுயர்க்கடலிடைநின்றடியேனையெடுத்தருளி = அழுந்தியதுக்கசாகரத்தினின்றும் அடியேனையெடுத்து; தாழ்ந்தகருத்தினைநிரப்பி = குறைவுற்றசிந்தனையைநிறைவாக்கி; கண்டாருமெனத்தாழ்ந்தார்=மற்றைக்கண்ணினையும் தந்தருளுமெனவணங்கினார்-எ-று.

விம்முதல்-ஆனந்தமேலீட்டாலடைவதோர்பூரிப்பு. வாழ்தல் - விளக்கமுறல். தாழ்ந்தகருத்தாவது - சிவபெருமானைச் செவ்விதிற்றரிசித்தற்கு வலதுநேத்திரமிலதாயிற்றேயென்னும் குறைபாடு. ஏ-அசை. (௩௦௯)

திருநாவலூர்மன்னர்திருவாரூர்வீற்றிருந்த
பெருமானைத்திருமூலட்டானஞ்சேர்பிஞ்ஞகனைப்

பருகாவின்னமுதத்தைக்கண்களாற்பருகுதற்கு
மருவார்வத்துடன்மற்றைக்கண்டாரீரெனவணங்கி.

(இ-ள்.) திருநாவலூர்மன்னர் = திருநாவலூர்க்குத்தலைவராகியநம்பியாரூரர்; திருவாரூர்வீற்றிருந்தபெருமானை = திருவாரூரிலமர்ந்தருளும்பெருமானும்; திருமூலத்தானஞ்சேர்பிஞ்ஞகனை=திருமூலத்தானத்தில்வீற்றிருக்கும் பிஞ்ஞகருமாகிய; பருகாவின்னமுதத்தை=எவருநுகர்தற்கரியஇனியஅமுதம்போலும் எம்பெருமானை; கண்களாற்பருகுதற்கு=கண்களாலேநுகர்ந்துகளித்தற்கு; மருவார்வத்துடன்மற்றைக்கண்டாரீரெனவணங்கி=மருவியஅன்பினால் மற்றைக்கண்ணையும் தந்தருளுமென்றுவணங்கி-எ-று.

திருவாரூர்கோயிலாக்கொண்டநாள் சிறிதும் வரையறுக்கப்படாதென்பார் "வீற்றிருந்தபெருமான்" என இறந்தகாலத்தாற்கூறினார். இதனை"ஒருவனுயுலகேத்தநின்ற நாளோ" என்னும் தேவாரத்திருப்பதிகத்தானுமுணர்க. பிஞ்ஞகர்-தலைக்கோலமுடையவர். அன்பருக்கன்றி ஏனையர்க்குப் பருகுதலருமையின் "பருகாவின்னமு" தென்றார். வாயாற்பருகாத இன்னமுதென்னலுமொன்று. கண்களாற்பருகல்-கண்டுகளித்தல். ()

வேறு.

மீளாவடிமையெனவெடுத்துமிக்கதேவர்குலமெல்லா
மாளாமேநஞ்சுண்டருளிமன்னியிருந்தபெருமானைத்
தாளாதரிக்குமெய்யடியார்தமக்காமிடர்நீர்தரியீரென்
றாளாந்திருத்தோழமைத்திறத்தாலஞ்சொற்பதிகம்பாடினார்.

(இ-ள்.) தாளாதரிக்குமெய்யடியார்தமக்கு=தேவரீர்திருவடிகளைவிரும்பிய உண்மைத்திருத்தொண்டர்களுக்கு; ஆமிடர்நீர்தரியீரென்று=அணுகுந்துன்பத்தைத் திருவுளங்கொள்கின்றீரில்லையென்று; ஆளாந்திருத்தோழமைத்திறத்தால் = அக்கடவுளுக்கு அடிமையாகும் திருத்தோழமைநிலைமையால்; மீளாவடிமையெனவெடுத்து = "மீளாவடிமை" என்றுதொடங்கி; மிக்கதேவர்குலமெல்லாமாளாமே = சிறந்ததேவவருக்கமுழுமையும் சிதையாவண்ணம்; நஞ்சுண்டருளிமன்னியிருந்தபெருமானை=நஞ்சைநுகர்ந்தருளிநிலைபெற்ற நம்பெருமானை; அஞ்சொற்பதிகம்பாடினார்=அழகமைந்தசொற்களையுடைய திருப்பதிகத்தினால் துதித்தார்-எ-று.

தரியீரென்றுதோழமைத்திறத்தாலெடுத்துப் பெருமானைப்பாடினார் எனஇயையும். அமரரையுமடிக்கவந்த நஞ்சையருந்தியும் அனுத்துணையும் நலிவின்றியமர்ந்தனரென்பார் "தேவர்குலமெல்லாமாளாமேநஞ்சுண்டருளிமன்னியிருந்தபெருமான்" என்றும், அடியவரிடரை அகற்றாது "வாளாங்கிருப்பீர்வாழ்ந்துபோதீரே" என விநோதமாகத்துதிப்பினும், அடியவரிடரைஉட்கொண்டு அகற்றியருளல்வேண்டுமென்பதே கருத்தென்பார் "மெய்யடியார்தமக்காமிடர்நீர்தரியீர்" என்றும், அங்ஙனம்கூறியதும் அடிமையோடுதோழமையுமிருத்தலாலென்பார் "ஆளாந்திருத்தோழமைத்திறத்தால்" என்றும் கூறினார். எம்மிடரென்பதை அடியவரிடரெனப் படர்க்கையினுரைத்தாரென்க. தரித்தல்-உட்கொள்ளல். அது,அதன்காரியமாகிய நிவர்த்தித்தலையுணர்த்திற்று. தரியீரென்பதற்கு நீர்தரிக்கின்றீரில்லையாகலின் "நீரேவாழ்ந்துபோதிர்" என இசையெச்சமாகவருவிப்பினும் இயையும். சொற்குஅழகு சுருங்கச்சொல்லல் முதலியபத்துமாம். பதிகம்என்புழி மூன்றனுருபுவிரிக்க. (௬௯)

திருவாரூர் - செந்துருத்தி.

திருச்சிற்றம்பலம்.

மீளாவடிமையுமக்கேயாளாய்ப்பிறரைவேண்டாதே
மூளாத்தீப்போலுள்ளேகனன்றுமுகத்தான்மிகவாடி
யாளாயிருக்குமடியார்தங்களல்லல்சொன்னக்கால்
வாளாங்கிருப்பீர்திருவாரூரீர்வாழ்ந்துபோதீரே.

காரூர்கண்டத்தெண்டோண்முக்கண்கலைகள்பலவாகி
யாரூர்த்திருமூலட்டானத்தேயடிப்பேராரூரன்
பாரூரறியவென்கண்கொண்டீர்நீரேபழிப்பட்டீர்
வாரூர்முலையாள்பாகங்கொண்டீர்வாழ்ந்துபோதீரே.

திருச்சிற்றம்பலம்.

---

பூதமுதல்வர்புற்றிடங்கொண்டிருந்தபுனிதர்வன்றொண்டர்
காதல்புரிவேதனைக்கிரங்கிக்கருணைத்திருநோக்களித்தருளிச்
சீதமலர்க்கண்கொடுத்தருளச்செவ்வேவிழித்துமுகமலர்ந்து
பாதமலர்கண்மேற்பணிந்துவீழ்ந்தாருள்ளம்பரவசமாய்.

(இ-ள்.) பூதமுதல்வர் = பூதங்கட்குத்தலைவரும்; புற்றிடங்கொண்டிருந்தபுனிதர் = புற்றை இடமாகக்கொண்டிருந்த சுத்தருமாகியபெருமான்; வன்றொண்டர்காதல் புரிவேதனைக்கிரங்கி = வன்றொண்டப்பெருமானுக்கு ஆர்வம்விளைவித்த அருந்துயர்க்கிரங்கி; கருணைத்திருநோக்களித்தருளி = கிருபாநோக்கம்பாலித்து; சீதமலர்க்கண்கொடுத்தருள = தண்ணியமலர்போலும் வலக்கண்ணையுந்தந்தருள; செவ்வேவிழித்துமுகமலர்ந்துள்ளம்பரவசமாய் = செவ்விதிற்றிறந்து திருமுகமலர்வுற்று திருவுள்ளம்பரவசப்பட்டு; பாதமலர்கண்மேற்பணிந்துவீழ்ந்தார் = மலர்போலுந்திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்-எ-று.

காதலாவது "எத்தனைநாள்பிரிந்திருக்கேனென்னாரூரிறைவனையே" என எழுந்தவேட்கை. இதுகாரணமாகச் சூளுறவுவிடுத்து ஒற்றியூரையகன்று கண்ணிழந்தமை பற்றி "காதல்புரிவேதனை"என்றார். பணிந்துவீழ்ந்தாரென்பது வீழ்ந்துபணிந்தாரென விகுதிபிரித்துக்கூட்டப்பட்டது. (ரு௰)

விழுந்துமெழுந்தும்பலமுறையான்மேவிப்பணிந்துமிகப்பரவி
யெழுந்தகளிப்பினாலாடிப்பாடியின்பவெள்ளத்தி
லழுந்தியிரண்டுகண்ணாலுமம்பொற்புற்றினிடையெழுந்த
செழுந்தண்பவளச்சிவக்கொழுந்தினருளைப்பருகித்திளைக்கின்றார்.

(இ-ள்.) பலமுறையால்விழுந்துமெழுந்தும் = பலகால் பூமியில் நமஸ்கரித்தும் எழுந்தும்; மேவிப்பணிந்துமிகப்பரவி = விரும்பிவணங்கி மிகத்துதித்து; எழுந்தகளிப்பினாலாடிப்பாடி = பெருகியவுவகையால் கூத்துமாடிப்புகழ்ந்து; இன்பவெள்ளத்திலழுந்தி = பேரின்பப்பெருக்கின்மூழ்கி; அம்பொற்புற்றினிடையெழுந்த = பொன்போலும் அழகிய புற்றின்கண்ணேதோன்றிய; செழுந்தண்பவளச்சிவக்கொழுந்தின் = செழித்த குளிர்ந்த பவளம்போலுந் திருமேனியையுடைய சிவக்கொழுந்தாகியபெருமானது; அ

சங்கிலியார்ஊடல்.



பரவைநாச்சியார் சுந்தரமூர்த்திகள் திருவொற்றியூரில் சங்கிலிநாச்சியாரை மணஞ்செய்துகொண்டா [illegible] கொண்டு வீதிவிடங்கப்பெருமானிடத்து விண்ணப்பித்தது.

ளைப்பருகித்திளைக்கின்றார்=திருவருளை இருநேத்திரங்களினாலும் அருந்தி அத்திருவருமயமாயினர்-எ-று. மூந்திய ஆல்-அசை.

இன்பவெள்ளத்திலழுந்தலாவது பொங்கித்ததும்பிவியாபகமாகிய சிவானந்தப் பெருக்கில் ஆன்மபோதமிழந்து வியாப்பியமாக ஒடுங்கல். உலகிலில்லதொரு அபூதப் பொருளென்பார் "புற்றிலெழுந்தசெழுந்தண்பவளச்சிவக்கொழுந்து." என்றார். (௲கக)

காதனிரம்பத்தொழுதேத்திக்கனகமணிமாளிகைக்கோயில்
ஞாலமுய்யவருநம்பிநலங்கொள்விருப்பால்வலங்கொண்டு
மாலுமயனுமுறையிருக்கும்வாயில்கழியப்புறம்போந்து
சீலமுடையவன்பருடன்றேவாசிரயன்மருங்கணைந்தார்.

(இ-ள்.) ஞாலமுய்யவருநம்பி=அவனியெல்லாம்நற்கதிபெற அவதரித்த ஆளுடையநம்பிகள்; காதனிரம்பத்தொழுதேத்தி = ஆசையமைதிபெறவணங்கித்துதித்து; கனகமணிமாளிகைக்கோயில்=பொன்னாலும் இரத்தினங்களாலும் புனைந்த மாளிகைகளையுடைய ஆலயத்தை; நலங்கொள்விருப்பால்வலங்கொண்டு = சிறப்பமைந்த காதலால் வலமாகவந்து; மாலுமயனுமுறையிருக்கும் = திருமாலும்பிரமதேவரும் முறையே காத்திருக்கும்; வாயில்கழியப்புறம்போந்து=திருவாயிலைக்கடந்துவெளிவந்து; சீலமுடையவன்பருடன் = ஒழுக்கமிக்கஉண்மையடியவரோடு; தேவாசிரயன்மருங்கணைந்தார்=தேவாசிரயனென்னுந்திருக்காவணத்தருகேசேர்ந்தார்-எ-று.

ஞாலமுய்யவந்தமைதடுத்தாட்கொண்டபுராணத்தொடக்கத்துட்காண்க. மாலுமயனுமுறையிருத்தலாவது. இடமும்வலமுமாகக் காத்திருத்தல். தரிசனத்தைவிரும்பித் தங்கியிருத்தலுமாம். கழிந்தென்பது கழியவெனத்திரிந்தது. (௲கஉ)

நங்கைபரவையார்தம்மைநம்பிபிரிந்துபோனதற்பின்
றங்குமணிமாளிகையின்கட்டனிமைகூரத்தளர்வார்க்குக்
கங்குல்பகலாய்ப்பகல்கங்குலாகிக்கழியாநாளெல்லாம்
பொங்குகாதன்மீதூரப்புலர்வார்சிலநாள்போனதற்பின்.

(இ-ள்.) தம்மைநம்பிபிரிந்துபோனதற்பின்=தம்மை ஆளுடையநம்பிகள்பிரிந்து அகன்றபின்பு; தங்குமணிமாளிகையின்கண்=தாம்வசிக்கும் இரத்தினங்களிழைத்த மாடத்திலே; தனிமைகூரத்தளர்வார்நங்கைபரவையார்க்கு = தனிமைமிகுதலாற்றளர்கின்ற வனிதையருட்சிறந்த பரவைநாச்சியாருக்கு; கங்குல்பகலாய்ப்பகல்கங்குலாகிநாளெல்லாங்கழிய=இரவுபகலாகியும் பகலிரவாகியும் நாள்முழுமையும்செல்ல; பொங்குகாதன்மீதூரப்புலர்வார்=மலிந்தஆசை நாளுககுநாள்அதிகரிக்க வாடுவாராகி; சிலநாள் போனதற்பின்=சிலநாள்சென்றதன்பின்பு-எ-று.

பிரிந்துழி ஒருநாளெழுநாள்போற்செல்லுதலாற் பிரிந்தமைசிலநாளேனும் நெடுநாள்போலத்தோற்றுதலின் "தனிமைமிக" என்றும், விரகமிகுதலால் இரவுமுற்றுந் துயிலின்றித்துன்பமுற்றும், அச்சோர்வால் பகன்முற்றும் உணவின்றியுறங்கியுமிருத்தலின் "கங்குல்பகலாய்ப்பகல்கங்குலாகிக்கழியநாளெல்லாம்" என்றும், கணவன்மாட்டுக் காதல்விர்த்தித்தலால் பிரிவாற்றுதுவாடுதலின் "பொங்குகாதன்மீதூரப்புலர்வார்" என்றுங்கூறினர். (௲கங)

செம்மைநெறிசேர்திருநாவலூரரொற்றியூர்சேர்ந்து
கொம்மைமுலையார்சங்கிலியார்தம்மைக்குலவுமணம்புணர்ந்த
மெய்ம்மைவார்த்தைதாமவர்பால்விட்டார்வந்துகட்டுரைப்பத்
தம்மையறியாவெகுளியினாற்றரியாநெஞ்சினொடுந்தளர்வார்.

(இ-ள்.) செம்மைநெறிசேர்திருநாவலூரர்=ஞானநெறியின்மிக்க திருநாவலூரர்; ஒற்றியூர்சார்ந்து = திருவொற்றியூரையணுகி; கொம்மைமுலையார்சங்கிலியார்தம்மை=திரண்டதனங்களையுடைய சங்கிலிநாச்சியாரை; குலவுமணம்புணர்ந்தமெய்ம்மைவார்த்தை=பிரசித்தியாகியதிருமணமுடித்த உறுதிமொழியை; தாமவர்பால்விட்டார் வந்துகட்டுரைப்ப=அந்நாயனார்நிலைமையையறிந்துவருமாறு தம்மாலனுப்பப்பட்டவரானுகி நிச்சயமாகக்கூற; தம்மையறியாவெகுளியால்=தம்மையடைந்தறியாதசினத்தால்; தரியாநெஞ்சினொடுந்தளர்வார்=சகியாதமனதோடுந்தளர்வாராயினர்-எ-று.

செம்மை-ஞானம. குலவல்-பிரசித்தியாதல். கணவர் பிறர்பாற்கலந்தொழுகுதலைக்கேட்கின் கற்புடைமடவார்க்கும் கடுஞ்சினமிகுதல் இயல்பாகலின் "தம்மையறியா வெகுளி" என்றார். தரியாமையாவது-தாம்நுகரும் கலவியின்பத்தைப் பிறர்நுகர்தலிற் சகியாமை. (ருகச)

மென்பூஞ்சயனத்திடைத்துயிலுமேவார்விழித்துமினிதமரார்
பொன்பூந்தவிசின்மிசையிரார்நில்லார்சொல்லார்புறம்பொழியார்
மன்பூவாளிமழைகழியார்மறவார்நினையாரென்செய்வா
ரென்பூடுருக்கும்புலவியோபிரிவோவிரண்டினிடைப்பட்டார்.

(இ-ள்.) மென்பூஞ்சயனத்திடைத்துயிலுமேவார்=மெல்லியமலர்கள்பரப்பிய சயனத்திலே நித்திரைசெய்தலையும்விரும்பார்; விழித்துமினிதமரார்=இனிமையாகவிழித்தும்பொருந்தார்; பொன்பூந்தவிசின்மிசையிரார்=பொன்னாற்செய்யப்பட்டுப்பொலிவுற்ற ஆதனத்தின்கண்ணும் அமர்ந்திரார்; நில்லார்=நிற்றலுஞ்செய்யார்; சொல்லார்=வார்த்தையும்பேசார்; புறம்பொழியார்=புறத்தும்செல்லார்; மன்பூவாளிமழைகழியார்=மன்மதனாற்பொழியப்படும் புட்பபாணமழையும்நீங்கார்; மறவார்=மறத்தலுஞ்செய்யார்; நினையார்=நினைத்தலுஞ்செய்யார்; என்செய்வார்=வேறென்செய்வார்; என்பூடுருக்கும்புலவியோபிரிவோ=எலும்பையும் ஊடுருகச்செய்யும் புலவியும்பிரிவுமாகிய இவற்றுள் ஒன்றின்கணன்றி; இரண்டினிடைப்பட்டார் = இவ்விரண்டிற்குமிடையேபொருந்தினார்-எ-று.

விரகமும் சினமுமுடையார்க்குச் சித்தம் ஒன்றினும்விரவிநில்லாதாகலின் இங்ஙனமாயினாரென்பது. யாவர்க்கும் விரகத்தைவிளைக்கும் தலைவனாகலின் மன்மதனை "மன்" என்றும், அவனால் விரகமிகும்படி இடையீடின்றிப் புஷ்பபாணம்பொழியப்படுதலின் "பூவாளிமழைகழியார்" என்றும்,மறத்தலின்மையினினைத்தலுமின்றி ஒரு தன்மைத்தாகிய அக்கணவர்சிந்தனையே மிகுந்துவாட்டலின் "மறவார்நினையாரென் செய்வார்" என்றும், புலத்தலும்பிரிதலுமுளவேனும்,நெஞ்சம் அவர்மாட்டுச்சேறலின் அவ் "இரண்டினிடைப்பட்டார்" என்றும் கூறினார். ஓகாரம் எண்ணிடைச்சொல்; எதிர்மறையுமாம். (ருகரு)

ஆனகவலைக்கையறவாலழியுநாளிலாரூரர்
கூனலிளவெண்பிறைக்கண்ணிமுடியார்கோயின்முன்குறுகப்
பானல்விழியார்மாளிகைபிற்பண்டுசெல்லும்பரிசினாற்
போனபெருமைப்பரிசனங்கள்புகுதப்பெறுதுபுறநின்றார்.

(இ-ள்.) ஆனகவலைக்கையறவாலழியுநாளில்=மலிவுற்றகிலேசத்தாற் செயலறுதலோடுவருந்துநாளில்; கூனலிளவெண்பிறைக்கண்ணிமுடியார்=வளைதலோடுஇளமைவாய்ந்த வெண்பிறையாகிய அரும்பையணிந்ததிருமுடியையுடைய அமலரது; கோயின் முன்னாரூரர்குறுக=ஆலயத்தின்முன் ஆளுடையநம்பிகள் எழுந்தருளுதலும்; பண்டு செல்லும்பரிசினாற்போனபெருமைப்பரிசனங்கள்=முன்செலவுந்தன்மைபோலச்சென்ற சிறப்புற்றபரிசனங்கள்; பானல்விழியார்மாளிகையில்=கருங்குவளைபோலுங்கண்களையுடைய பரவைநாச்சியாரது மாளிகையினுள்ளே; புகுதப்பெறுதுபுறநின்றார்=நுழையப்பெறாமல் வெளியேநின்றனர்-எ-று.

ஆதல்-விர்த்தித்தல். கையறவு-செயலறுதல். பிறை-கலைகிரம்பாமதி. கண்ணி-அரும்பு. இதனை "முன்மாலைநகுதிங்கண்முகிழ்விளங்குமுடிச்சென்னி" என்னுந் திருப்பழனத்தேவாரமுதலியவற்றானுமுணர்க. (ருகசு)

நின்றநிலைமையவர்கள்சிலர்நிலவுதிருவாரூரரெதிர்
சென்றுமொழிவார்திருவொற்றியூரினிகழ்ந்தசெய்கையெல்லா
மொன்றுமொழியாவகையறிந்தங்குள்ளார்தள்ளமாளிகையி
லின்றுபுறமுஞ்சென்றெய்தப்பெற்றிலோமென்றிறைஞ்சினார்.

(இ-ள்.) நின்றநிலைமையவர்கள்சிலர்=புறத்தேநின்ற இயல்பையுடையவர்களுள்ளேசிலர்; நிலவுதிருவாரூரரெதிர்சென்றுமொழிவார்=ஆளுடையநம்பிகள்முன்பு அடைந்துவிண்ணப்பஞ்செய்வார்; திருவொற்றியூரினிகழ்ந்தசெய்கையெல்லாம்=திருவொற்றியூரிலேநடந்தசெயல்களனைத்தையும்; ஒன்றுமொழியாவகையறிந்தங்குள்ளார் தள்ள=ஒன்றுந்தவறாமலுணர்ந்து அங்குள்ளவர்கள் தள்ளிவிடுதலால்; இன்றுமாளிகையிற் புறமுஞ்சென்றெய்தப்பெற்றிலோமென்றிறைஞ்சினார்=இப்பொழுது திருமாளிகையின் புறத்திலும் சேர்ந்தடையப்பெற்றேமில்லையென்று விண்ணப்பித்துவணங்கினார்-எ-று.

உம்மைகளுள் முந்தியதுமுற்றும்மை; பிந்தியது இழிவுசிறப்பும்மை. தள்ளாலென்பது தள்ளவெனத்திரிந்துநின்றது. (ருகஎ)

மற்றமாற்றங் கேட்டொழிந்தமனத்தராகிவன்றொண்ட
ருற்றவிதனுக்கினியென்னோசெயலென்றுணர்வாருலகியல்பு
கற்றமாந்தர்சிலர்தம்மைக்காதற்பரவையார்கொண்ட
செற்றநிலைமையறிந்தவர்க்குத்தீர்வுசொல்லச்செலவிட்டார்.

(இ-ள்.) வன்றொண்டரம்மாற்றங்கேட்டொழிந்தமனத்தராகி= சுந்தரமூர்த்திநாயனார் அவ்வுரைகேட்டுச் சோர்ந்தவுள்ளத்தையுடையராய்; உற்றவிதனுக்கினியென்னோசெயலென்றுணர்வார்=ஈண்டுநிகழ்ந்த இச்செய்கைக்கு இனிச்செய்வதியாதென்று ஆராய்ந்து; உலகியல்புகற்றமாந்தர்சிலர்தம்மை= இலௌகிகவிஷயங்களையறிந்தவருட் சிலரை; காதற்பரவையார்கொண்டசெற்றநிலைமையறிந்து=ஆர்வமிக்க பரவைநாச்சி

யாரடைந்துள்ள சினத்தினியல்பையறிந்து; அவர்க்குத்தீர்வுசொல்லச்செலவிட்டார்= அவர்க்கு அக்கோபநீங்குதற்குரிய இனியமொழியையிசைக்கும்படி அனுப்பினார்-எ-று.

மற்று-அசை. அம்மாற்றம் அமாற்றமெனநதொக்கது. தீர்வுக்கேதுவாகியமொழியைத் தீர்வென்றார். (௩கஅ)

நம்பியருளாற்சென்றவருநங்கைபரவையார்தமது
பைம்பொன்மணிமாளிகையணைந்துபண்புபுரியும்பாங்கினால்
வெம்புபுலவிக்கடலழுந்துமின்னேரிடையாண்முன்னெய்தி
யெம்பிராட்டிக்கிதுதகுமோவென்றுபலவுமெடுத்துரைப்பார்.

(இ-ள்.) நம்பியருளாற்சென்றவரும் = ஆளுடையநம்பிகள்திருவருள்பெற்றுப்போந்தவரும்; நங்கைபரவையார்தமது=சிறந்தபரவைநாச்சியாரது; பைம்பொன்மணி மாளிகையணைந்து=பசும்பொன்னாலும் நவமணிகளாலுமமைந்த மாளிகையையடைந்து; பண்புபுரியும்பாங்கினால் = கற்டையவாவியநிலைமையால்; வெம்புபுலவிக்கடலழுந்தும்=வெதும்புதற்கேதுவாகிய பிணக்கென்னும் பெருங்கடலிலழுந்திய; மின்னேரிடையாண்முன்னெய்தி=மின்னையொத்தநுசுப்பையுடைய பரவைநாச்சியார்பாலணுகி; எம்பிராட்டிக்கிதுதகுமோவென்று=எங்கள்தலைவியாகிய உமக்கு இதுசெய்யத்தக்கதோ வென்று; பலவுமெடுத்துரைப்பார்=பலவிடயங்களையும் எடுத்தியம்புவாராயினார்-எ-று.

அரிவையர்க்குக் கற்பே முக்கியகுணமாகலின் பண்பென்பது ஈண்டு அதன்மேற்று. கற்புடைமையால் காதல்மிக்குப் புலவியதிகரிக்க வெதும்புதலின், "பண்புபுரியும் பாங்கினால்வெம்புபுலவிக்கடல்" என்றார். வெம்புபுலவி - வெம்புதற்கேதுவாகியபுலவி()

பேதநிலைமைநீதியினாற்பின்னும்பலவுஞ்சொன்னவர்முன்
மாதரவருமறுத்துமனங்கொண்டசெற்றமாற்றாரா
யேதமருவுமவர்திறத்திலிந்தமாற்றமியம்பிலுயிர்
போதலொழியாதெனவுரைத்தாரவருமஞ்சிப்புறம்போந்தார்.

(இ-ள்.) பேதநிலைமைநீதியினால்=வெவ்வேறுவகைப்படும் நியாயங்களினால்; பின்னும்பலவுஞ்சொன்னவர்முன்=மீட்டும் அனேகவிதமாக விளம்பியவர்முன்பு; மாதரவருமறுத்து=பரவைநாச்சியாரும் இணங்காமல்; மனங்கொண்டசெற்றமாற்றாராய்= திருவுளத்தேகொண்ட சீறறம்மாறாதவராகி; ஏதமருவுமவர்திறத்தில்=தீங்குடையாராகிய அவர்விடயமாக; இந்தமாற்றமியம்பில்=இத்தகையவார்த்தைகளை இனிப்பேசுவீராகில்; உயிர்போதலொழியாதெனவுரைத்தார்=உயிர்நீங்குதல் தவறாதென்று உறுதிகூறினர்; அவருமஞ்சிப்புறம்போந்தார் = அதுகேட்டஅவரும் அச்சமுற்றுவெளியேவந்துவிட்டார்-எ-று. (௩உ0)

போந்துபுகுந்தபடியெல்லாம்பூந்தண்பழனமுனைப்பாடி
வேந்தர்தமக்குவிளம்புதலும்வெருவுற்றயர்வார்துயர்வேலை
நீந்தும்புணையாந்துணைகாணார்நிகழ்ந்தசிந்தாகுலநெஞ்சிற்
காந்தவழிந்துதோய்ந்தெழார்கங்குலிடையாமக்கடலுள்.

(இ-ள்.) போந்துபுகுந்தபடியெல்லாம் = சென்றுநிகழ்ந்தசெயல்களனைத்தையும்; பூந்தண்பழனம் = மலர்கள்செறிந்த குளிர்ந்த வயல்பரம்பிய; முனைப்பாடி

வேந்தர்தமக்குவிளம்புதலும்=திருமுனைப்பாடிநாட்டுத்தலைவருக்குச் செப்புதலும்; வெருவுற்றயர்வார்=செயற்பாலதுயாதெனை அச்சமுற்றுச்சோர்வார்; துயர்வேலைநீந்தும்புணையாந்துணைகாணார்=துன்பசாகரத்தைக்கடத்தற்கேதுவாகிய தெப்பமாகுந்துணையைக் கண்டிலர்; நிகழ்ந்தசிந்தாகுலநெஞ்சிற்காந்தவழிந்து=நேர்ந்தவியாகுலமானது மனதை வெதுப்ப நிலையழிந்து; கங்குலிடையாமக்கடலுட்டோய்ந்தெழார்=அவ்விரவிலே அர்த்தயாமமென்னுங்கடலின்மூழ்கி எழாதவராயினார்-எ-று.

உலகியல்புணர்ந்தோர் தக்காங்குணர்த்தியும் உணராதபரவையாரை இனியுணர்த்துவார் மனிதருளிலரெனத் துணிந்தனரென்பார் "துயர்வேலைநீந்தும்புணையாந்துணைகாணார்" என்றும், அர்த்தயாமமுமாயிற்றே இனி அவர்மாளிகையை அடையுமாறு எங்ஙனமென்னும் ஆகுலமேமிகுதலால் அக்காலம் நீட்டித்ததுபோலத் தோற்றியதெனபார் "அர்த்தயாமக்கடலுட்டோய்ந்தெழார்" என்றும் கூறினார். நீந்துதற்கேதுவாகியபுணையை நீந்தும்புணையென்றது காரியத்தைக் காரணமாக உபசரித்தலாம். (ருஉக)

அருகுசூழ்ந்தார்துயின்றுதிருவத்தயாமப்பணிமடங்கிப்
பெருகுபுவனஞ்சலிப்பின்றிப்பேயுமுறங்கும்பிறங்கிருள்வாய்
முருகுவிரியுமலர்க்கொன்றைமுடிமேலரவுமிளமதியுஞ்
செருகுமொருவர்தோழர்தனிவருந்தியிருந்துசிந்திப்பார்.

(இ-ள்.) அருகுசூழ்ந்தார்துயின்று=அருகேசூழ்ந்துள்ள அடியவர்களும் பரிசனங்களும்உறங்க; திருவத்தயாமப்பணிமடங்கி=சிறந்த அர்த்தயாமபூசையுமுடிதலால்; பெருகுபுவனஞ்சலிப்பின்றி=மிக்கபுவனமுற்றும் செயலில்லையாக; பேயுமுறங்கும்பிறங்கிருள்வாய்=பேயுங்கண்ணுறங்குகின்ற மிக்கஇருளிலே; முருகுவிரியுமலர்க்கொன்றைமுடிமேல்=மணம்பரவிய கொன்றைமலரணிந்த திருமுடிமேல்; அரவுமிளமதியுஞ்செருகுமொருவர்தோழர்=பாம்பையுமிளம்பிறையையும் பகைமைநீங்கவணியும் அமலரது தோழராகிய நம்பியாரூரர்; தனிவருந்தியிருந்துசிந்திப்பார்=தனித்து அயர்வுற்றிருந்து ஆலோசிப்பார்—எ-று.

மடங்குதலென்பது தாற்பரியப்பொருளாய் ஈண்டு முடிதலையுணர்த்திற்று. உறங்காது உழலுகின்ற பேயுமுறங்கும் அர்த்தயாமத்திலே இவரொருவரும் உறங்காது இங்ஙனம் ஆலோசனையுடையராயிருந்தமை அதிவியப்பென்பார் "பேயுமுறங்கும் பிறங்கிருள்வாய்த்தனிவருந்தியிருந்துசிந்திப்பார்" என்றார். பேயும்என்புழி உம்மை இழிவுசிறப்பு. துயின்று மடங்கி இன்றி என்பவை வினையெச்சத்திரிபுகள். (ருஉஉ)

முன்னைவினையாலிவ்வினைக்குமூலமானுள்பாலனைய
வென்னையுடையாய்நினைந்தருளாயிந்தயாமத்தெழுந்தருளி
யன்னமனையாள்புலவியினையகற்றிலுய்யலாமன்றிப்
பின்னையில்லைச்செயலென்றுபெருமானடிகடமைநினைந்தார்.

(இ-ள்.) என்னையுடையாய்=என்னைஅடிமையாகவுடையஎம்பெருமானே; முன்னைவினையாலிவ்வினைக்கு=பூர்வகன்மத்தால் ஈண்டநுடவிக்கப்படும்புவினைப்போகங்கட்கு; மூலமானுள்பாலனைய=காரணமாயிருக்கும் பரவைபாலனுக; நினைந்தருளாய்=தேவரீர்சிந்தித்தருளல்வேண்டும்; இந்தயாமத்தெழுந்தருளி=இந்தஅர்த்தயாமத்திலே ஆங்

கெழுந்தருளி; அன்னமனையாள் புலவியினை=அன்னம்போல்வாளாகியபரவையின்பிணக்கை; அகற்றிலுய்யலாமன்றி=ஒழித்தால்உயிர்பிழைப்பதல்லது; பின்னையில்லைச்செயலென்று=வேறுசெய்கையில்லையென்று; பெருமானடிகடமைநினைந்தார்=சிவபெருமானடிகளைச்சிந்தித்தார்-.எ-று.

வினைப்போகங்களை வினையென்றது உபசாரவழக்கு. அப்போகங்கள் அவன்அவள் அதுவென்னும் முன்னிலையால் அனுகற்பாலனவாகலின் இவ்வினைப்போகம் இப்பரவைமுன்னிலையால் அனுகிற்றென்பார் "இவ்வினைக்குமூலமானாள்" என்றும், அடிமைகட்கு ஆபத்துநேர்ந்தழி உடையானையன்றி உறுதுணையின்மையின் நீரேநீக்கியருளல் வேண்டுமென்பார் "என்னையுடையாய்நினைந்தருளாய்" என்றும், எழுந்தருளிப் புலவியையகற்றுதவழி அணையப்பெறுமையின் உய்தியின்மை ஒருதலையென்பார் "புலவியினையகற்றிலுய்யலாமன்றிப்பின்னையில்லைச்செயல்" என்றும், பெருமானடிகளை நினைந்தாரென்க. (௩௨௩)

அடியாரிடுக்கண்டரியாதாராண்டுகொண்டதோழர்குறை
முடியாதிருக்கவல்லரோமுற்றுமளித்தாள்பொற்றளிர்க்கைத்
தொடியார்தழும்புமுலைச்சுவடுமுடையார்தொண்டர்தாங்காணும்
படியாலணைந்தார்நெடியோனுங்காணுவடிகள்படிதோய.

(இ-ள்.) அடியாரிடுக்கண்டரியாதார்=(ஆட்கொள்ளப்பட்ட) அடியவர்கள்படுந்துன்பத்தையும் சகியாத அண்ணலார்; ஆண்டுகொண்டதோழர்குறை=தாமே வலிந்து அடிமைகொண்டதோழராகிய நம்பியாரூரர் குறையை; முடியாதிருக்கவல்லரே=பூர்த்திசெய்யாதிருக்கவல்லரோ (வல்லரல்லர் ஆகலின்) ; முற்றுமளித்தாள்=உலகமுழுமையும்பெற்றளித்தஉமாதேவியாரது; தளிர்க்கைப்பொற்றொடியார்தழும்புமுலைச்சுவடுமுடையார் = தளிர்போலும்கரத்திலணிந்த பொன்னாலாகிய வளைத்தழும்பையும் முலைத்தழும்பையுமுடையவராகிய அம்முதல்வர்; தொண்டர்காணும்படிநெடியோனுங்காணுவடிகள்படிதோயவணைந்தார் = அந்நாயனார்நோக்கும்படி திருமாலுமுணராததிருவடிகள் நிலத்திற்படிய எழுந்தருளினார்-எ-று. தாம்-ஆல்-அசைகள்.

இடுக்கணும் என்னும் இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. வல்லரேஎன்னும் ஏகாரம் வல்லராகார்என்னும் பொருளுணர்த்தலின் எதிர்மறை. இது "புதியன புகுதலும்வழுவல" என்பதனாற்கொள்க. முலைத்தழும்பும் வளைத்தழும்புமுடையராகலின் அத்தகையஇன்பம் தோழரும்பெற அருளினரென்பார் "தொடியார்தழும்புமுலைச்சுவடுமுடையார்" என்றும், ஏனையர்க்கு அரியரேனும் அடியவர்க்கு எளியரென்பார் "நெடியோனுங்காணுவடிகள்படிதோயவணைந்தார்" என்றும், கூறினார். பிந்தியஉம்மை சிறப்பும்மை. (௩௨௪)

தம்பிரானாரெழுந்தருளத்தாங்கற்கரியமகிழ்ச்சியினாற்
கம்பியாநின்றவயவங்கள்கலந்தபுளகமயிர்முகிழ்ப்ப
நம்பியாரூரருமெதிரேநளினமலர்க்கைதலைக்குவிய
வம்பிகாவல்லவர்செய்யவடித்தாமரையின்கீழ்வீழ்ந்தார்.

(இ-ள்.) தம்பிரானாரெழுந்தருள=தம்முடையதலைவனார்எழுந்தருளுதலால்;நம்பியாரூரருமெதிரேதாங்கற்கரியமகிழ்ச்சியினால்=தம்பிரான்றோழரும்அத்தலைவரெதிரே

தாங்குதற்கரியமகிழ்ச்சியோடு; அவயவங்கள்கம்பியாநின்று = உறுப்புக்கள்நடுங்கவும்; கலந்தபுளகமயிர்முகிழ்ப்ப=சிலிர்த்தலடைந்த உரோமங்கள் அரும்பவும்; நளினமலர்க் கைதலைக்குவிய=செந்தாமரைமலர்போலுங்கரங்கள் சிரமேற்குவியவும்; அம்பிகாவல்ல வர்=அம்பிகாபதியாகிய அக்கடவுளின்; செய்யவடித்தாமரையின்கீழ்வீழ்ந்தார்=செந்தா மரை மலர்போலும் திருவடிகளில் நமஸ்கரித்தார்-எ-று.

நிற்பவென்பதுநின்றெனத்திரிந்தது. வல்லவர்-நாயகர். கீழ்-ஏழனுருபு.(௩௨௫)

விழுந்துபரவிமிக்கபெருவிருப்பினோடுமெதிர்போற்றி
யெழுந்தநண்பர்தமைநோக்கியென்னீயுற்றதென்றருளத்
தொழுந்தங்குறையைவிளம்புவார்யானேதொடங்குந்துரிசிடைப்பட்
டழுந்துமென்னையின்னமெடுத்தாளவேண்டுமுமக்கென்று.

(இ-ள்.) விழுந்துபரவிமிக்கபெருவிருப்பினோடும்=விழுந்துநமஸ்கரித்து மிகுந் தபெருங்காதலோடும்; எதிர்போற்றியெழுந்தநண்பர்தமைநோக்கி = எதிரே துதித்துக் கொண்டெழுந்ததோழரைப்பார்த்து; என்னீயுற்றதென்றருள=நீ இயைந்தவருத்தம் யா தென்றுகேட்டருள; யானேதொடங்குந்துரிசிடைப்பட்டழுந்துமென்னை= யானேமே ற்கொண்ட குற்றத்துட்பட்டுவருந்தும் என்னை; இன்னமெடுத்தாளவேண்டுமுமக்கெ ன்று=இன்னமும் அக்குற்றத்தினீக்கி ஆண்டருள உமக்குக்கடமையென்றுகூறி; தொ ழுந்தங்குறையைவிளம்புவார்=பணியுந்தமதுகுறையைப் பரிந்துரைப்பார்-எ-று.

யானேதொடங்குந்துரிசென்றது-சங்கிலிநாச்சியாருக்குத் தாமே வலிந்துசபத முரைத்துத் தவறி, அதுகாரணமாக அயர்வுறல் நீங்கு. ஏகாரம்-தேற்றம். வேண்டுமெ ன்பது பசிம் தகும் என்பனபோலத் தொழிற்பெயராய்த் தேற்றப்பொருள்பட்டுநிற்ப தொருசொல். கடமைஎன்பது சொல்லெச்சம். (௩௨௬)

அடியேனங்குத்திருவொற்றியூரினீரேயருள்செய்ய
வடிவேலொண்கட்சங்கிலியைமணஞ்செய்தணைந்ததிறமெல்லாங்
கொடியேரிடையாள்பரவைதானறிந்துதன்பால்யான்குறுகின்
முடிவேனென்றுதுணிந்திருந்தாளென்னான்செய்வதெனமொழிந்து.

(இ-ள்) திருவொற்றியூரில்நீரேயருள்செய்ய = திருவொற்றியூரிலே தேவரீரே கிருபைபாலிக்க; வடிவேலொண்கட்சங்கிலியை=வடித்தவேல்போலும் அழகியகண்களை யுடையசங்கிலியை; அடியேன்மணஞ்செய்தணைந்ததிறமெல்லாம்= அடியேன்மணம்புரி ந்து உடனிருந்தசெய்கைமுற்றும்; கொடியேரிடையாள்பரவையறிந்து=கொடியைநிகர் த்தமருங்குலையுடைய பரவையென்பவளுணர்ந்து; தன்பால்யான்குறுகின்=தன்னிடத் தே யான் அடைந்தால்; முடிவேனென்றுதுணிந்திருந்தாள்=உயிர்விடுவேனென்று நிச் சயித்திருந்தனள்; என்னான்செய்வதெனமொழிந்து = அடியேன்செய்வதுயாதென்று விண்ணப்பித்து-எ-று.

அங்கு-தான்-அசைகள். ஏகாரம்-பிரிநிலை. வடி-வடுவகிருமாம். ஏர்-உவமவுருபு. இருக்கின்றாளென்பது துணிவுபற்றி இறந்தகாலத்தாற்கூறப்பட்டது. (௩௨௭)

நாயனீரோநானுமக்கிங்கடியேனாகினீரெனக்குத்
தாயினல்லதோழருமாந்தம்பிரானாரேயாகி

லாயவறிவுமிழந்தழிவேனயர்வுநோக்கியவ்வளவும்
போயிவ்விரவேபரவையுறுபுலவிதீர்த்துத்தாருமென.

(இ-ள்.) நாயனீரேநானுமக்கிங்கடியேனுகில்=தலைவரே! யான் தேவரீருக்கு அடியேனானல்; நீரெனக்குத்தாயினல்லதோழருமாந்தம்பிரானுரேயாகில்=தேவரீர் அடியேனுக்குத் தாயினும்நல்லதோழருமாகும் தலைவரேயானல்; ஆயவறிவுமிழந்தழிவேனயர்வுநோக்கி=(செயற்கைஅறிவையேயன்றி) இசயற்கையறிவையுமிழந்து வருந்துவேனுடைய சோர்வைக்குறித்து; இவ்விரவேயவ்வளவும்போய்=இந்தஇரவிலேயே அப் (பரவையினதுமனை) அளவுஞ்சென்று; பரவையுறுபுலவிதீர்த்துத்தாருமென=அவள்பாலுதித்தபுலவியை அகற்றியருளுமென்றுவேண்ட-எ-று.

யான் உமக்கு அடியவனுகியதும் நீர் எனக்குத் தோழமையோடு தலைவராகியதும் திண்ணமாயின் என்பார் இதனையே புலவிதீர்த்தற்கு இரண்டேதுவாக்கி "நாயனீரேநானுமக்கிங்கடியேனுகில் நீரெனக்குத்தாயினல்லதோழருமாந்தம்பிரானுரேயாகில் புலவிதீர்த்துத்தாரும்" என்றும், நீர் செல்லுதற்கருந்தூரத்ததென்பார் "அவ்வளவும்" என்றும், காலந்நீட்டிக்கின் உய்தியில்லையென்பார் "இவ்விரவே" என்றுங்கூறினரென்க. நாயனீரேஎன்பது முன்னிலை. இங்கு-அசை. தாயினுமென்னும் உயர்வுசிறப்பும்மை தொக்கது. பிந்தியஏகாரமிரண்டனுள் முந்தியதுதேற்றம்; பிந்தியதுபிரிநிலை. முந்திய உம்மையிரண்டும் இறந்ததுதழீஇயவை. ஆயஅறிவு-இயற்கையறிவு. அவ்வளவுமென்பது தூரத்தைச்சுட்டலின் இதில்உம்மைஉயர்வுசிறப்பு. அவ்வளவும் என்புழி ஏழனுருபுவிரித்து அந்தமாளிகையினும் என்னலுமொன்று. இப்பொருட்கண் உம்மை இழிவுசிறப்பென்க. (௩௨அ)

அன்புவேண்டுந்தம்பெருமானடியார்வேண்டிற்றேவேண்டி
முன்புநின்றுவிண்ணப்பஞ்செய்தநம்பிமுகநோக்கித்
துன்பமொழிநீயாமுனக்கோர்தூதனுகியிப்பொழுதே
பொன்செய்மணிப்பூண்பரவைபாற்போகின்றேமென்றருள்செய்தார்.

(இ-ள்.) அன்புவேண்டுந்தம்பெருமான்=அன்பையேவிரும்பிய ஆன்மநாயகராகியபெருமான்; அடியார்வேண்டிற்றேவேண்டி = அடியவராகிய ஆளுடையநம்பிகள் விரும்பியதையே முடிக்கவிரும்பி; முன்புநின்றுவிண்ணப்பஞ்செய்தநம்பிமுகநோக்கி= தமக்கு எதிரேநின்று விண்ணப்பஞ்செய்த அந்நாயனர்திருமுகம்நோக்கி; நீதுன்பமொழி=நீ துன்பத்தைவிடக்கடவாய்; யாமுனக்கோர்தூதனுகி = யாம்நினக்குஒருதூதனுகி; பொன்செய்மணிப்பூண்பரவைபால்=பொன்னுலும் நவமணிகளாலும் இயற்றிய ஆபரணங்களைப்புனைந்த பரவையினிடத்து; இப்பொழுதேபோகின்றேமென்றருள்செய்தார் =இவ்விரவிலேயே செல்கின்றேமென்று கட்டளையிட்டருளினர்-எ-று.

தம்-ஆன்மா. கெடியவனுங்காணுத நின்மலக்கடவுள் தூதராகிச்செல்லத்துணிந்தமைக்கு ஏது அன்பேயன்றிப் பிறிது அன்றென்பார். "அன்புவேண்டுந்தம்பெருமான்" என்றும், அன்பரெண்ணியவற்றை எண்ணியாங்கு அந்நிலையேயளிக்கும் அருளுடையரென்பார், "அடியார்வேண்டிற்றேவேண்டித்தூதனுகி இப்பொழுதே போகின்றேமென்றருள்செய்தார்" என்றும் கூறினரென்க. (௩௨௧)

எல்லையில்லாக்களிப்பினுலிறைவர்தாளில்வீழ்ந்தெழுந்து
வல்லபரிசெல்லாந்துதித்துவாழ்ந்துநின்றவன்றெண்டர்

முல்லைமுகைவெண்ணகைப்பரவைமுகில்சேர்மாடத்திடைசெல்ல
நில்லாதீண்டவெழுந்தருளிநீக்கும்புலவியெனத்தொழுதார்.

(இ-ள்.) எல்லையில்லாக்களிப்பினுலிறைவர்தாளில்வீழ்ந்தெழுந்து=அளவில்லாத மகிழ்வால் அண்ணலார்திருவடிகளிற்பணிந்தெழுந்து; வல்லபரிசெல்லாந்துதித்து=(அப்பெருமான்கீர்த்தியிலே) தாம்அறிந்துள்ள தன்மைமுற்றுந்துதித்து; வாழ்ந்துநின்ற வன்றொண்டர்=மகிழ்ந்துநின்ற வன்றொண்டப்பெருமான்; முல்லைமுகைவெண்ணகைப் பரவை=முல்லையரும்பைநிகர்த்தவெள்ளியமுறுவலையுடைய பரவையினது; முகில்சேர் மாடத்திடைசெல்லநில்லாது=மஞ்சுபடியும்மாளிகையிற்செல்லத்தாமதியாது; ஈண்ட வெழுந்தருளிநீக்கும்புலவியெனத்தொழுதார்=விரையவெழுந்தருளிப் பிணக்கை நிவர்த்தித்தருளல்வேண்டுமென்று வீழ்ந்துவணங்கினர்-எ-று.

தம்பெருமையைத் தாமுமறியாத்தன்மையராகிய அக்கடவுளின்பெருமையைத் திருவருள் உள்ளத்திலேநின்றுணர்த்த உணர்ந்தவற்றையேயன்றி முற்றுமுணர்ந்து துதித்தல் முடியாதென்பார் "வல்லபரிசெல்லாந்துதித்தார்"என்றார். ஈண்டுதல்-விரைதல். பல்லோர்படர்க்கைமுன்னிலைதன்மையிற்செல்லாத "நீக்கும்" என்னும் செய்யுமென் முற்று முன்னிலைக்கண்வந்தமை இடவழுவமைதி. (ருருய)

அண்டர்வாழக்கருணையினாலாலகாலமமுதாக
வுண்டநீலக்கோலமிடற்றொருவரிருவர்க்கறிவரியார்
வண்டுவாழுமலர்க்கூந்தற்பரவையார்மாளிகைநோக்கித்
தொண்டனார்தந்துயர்நீக்கத்தூதனாராயெழுந்தருள.

(இ-ள்.) அண்டர்வாழ=தேவர்பிழைத்துவாழ்தற்பொருட்டு; கருணையினாலால காலமமுதாகவுண்ட=திருவருளால் நஞ்சத்தை அமுதாகஅருந்திய; நீலக்கோலமிடற் றொருவர்=நீலநிறம்பெற்றகண்டத்தையுடைய நிமலரும்; இருவர்க்கறிவரியார்=திருமாலுக்கும்பிரமதேவருக்கும் (தேடி) அறிதற்கரியவருமாகியஇறைவர்; வண்டுவாழுமலர்க் கூந்தல்=(மணம்விரும்பி) வண்டுகள்குடிகொள்ளும் மலர்செறிந்த அளகத்தையுடைய; பரவையார்மாளிகைநோக்கி=பரவைநாச்சியாரது திருமனையைக்குறித்து;தொண்டனார் தந்துயர்நீக்கத்தூதனாராயெழுந்தருள = சுந்தரமூர்த்திசுவாமிகள்கவலையை அகற்றுதற்குத் தூதராயெழுந்தருளுங்கால்-எ-று.

அண்டர்வாழஆலமுண்டவரென்பது தொண்டர்வேண்டினால் தூதராகாதிருப்பரோவென்னும் நயம்பற்றிவந்தது. உண்ணுதலாலாகியநீலகண்டம் என்பதனை உண்ட நீலகண்டம் என்றார். (ருருக)

தேவாசிரயன்முறையிருக்குந்தேவரெல்லாஞ்சேவித்துப்
போவார்தம்மில்வேண்டுவார்போதவொழிந்தார்புறத்தொழிய
மேவாவணுக்கச்சேவகத்திலுள்ளோர்பூதகணநாதர்
மூவாமுனிவர்யோகிகளின்முதலானார்கண்முன்போக.

(இ-ள்.) தேவாசிரயன்முறையிருக்குந்தேவரெல்லாம் = தேவாசிரயனென்னுந் திருக்காவணத்தில் கிரமப்படிவசிக்கும் தேவர்அனைவரும்; சேவித்துப்போவார்தம்மில்= வணங்கிச்செல்வாராகிஅவருள்; வேண்டுவார்போத=வேண்டுந்தகுதியர்மாத்திரம் உட

ன்செல்ல; ஒழிந்தோர்புறத்தொழிய=ஏனையோர்புறத்தேநிற்க; ஓவாவணுக்கச்சேவகத்திலுள்ளோர்பூதகணநாதர்=அகலாத அகம்படித்தொண்டர்களும் பூதகணநாதர்களும்; மூவாமுனிவர்யோகிகளிற்முதலானார்கள்முன்போக = அழிவில்லாத முனிவர்களும் யோகிகளுமாகியஇவர்களிலே தலைமைபெற்றவர்கள் முற்செல்ல-எ-று.

தலைவர்புறப்படுங்கால் யாவரும் உடன்செல்லுதலும் சிறிதுதூரங்கழிந்தபின் வேண்டுவோர்போக ஏனையோர்மீளுதலும் மரபாகலின் "போவார் நம்மில்வேண்டுவார் போத வொழிந்தோர்புறத்தொழிய" என்றார். அணுக்கம்-சமீபம். மூவாமை-அழிவின்றிக் கற்பாதிகளால எக்காலத்தும் ஒருபெற்றியினிருத்தல். (ருருஉ)

அருகுபெரியதேவருடனணைந்துவருமவ்விருடிகளு
மருவுநண்புநிதிக்கோனுமுதலாயுள்ளோர்மகிழ்ந்தேத்தத்
தெருவும்விசும்புநிறைந்துவிரைச்செழும்பூமாரிபொழிந்தலையப்
பொருவிலன்பர்விடுந்தூதர்புனிதவீதியினிற்போத.

(இ-ள்.) பெரியதேவருடனணைந்துவருமவ்விருடிகளும்=பெருமைபெற்றதேவர்களோடு நெருங்கிவரும்முனிவர்களும்; மருவுநண்புநிதிக்கோனுமுதலாயுள்ளோர்=நிலைபெற்றநட்பையுடைய குபேரனும்முதலாயினோர்; அருகுமகிழ்ந்தேத்த=அருகேஉவந்துதுதிக்க; விரைச்செழும்பூமாரிபொழிந்து=மணம்நிரம்பிய செழித்தமலர்மாரிபொழியப்பட்டு; தெருவும்விசும்புநிறைந்தலைய = வீதிகளினும் விண்ணினும் நிறைந்துபரவ; பொருவிலன்பர்விடுந்தூதர் = நிகரற்றஅன்பரால் அனுப்பப்பட்டதூதராகியநிமலனார்; புனிதவீதியினிற்போத=புனிதமுடையவீதியிலெழுந்தருள-எ-று.

பொழிந்தென்னும்செய்வினை செயப்பாட்டுவினைக்கண்வந்தது. தேவர்முனிவர் முதலியோருடன் தேவாதிபரெழுந்தருளப்பெறுதலின் "புனிதவீதி" என்றார்.(ருருரு)

மாலுமயனுங்காணாதார்மலர்த்தாள்பூண்டுவணங்குஞ்
காலமிதுவென்றங்கவரையழைத்தாலென்னக்கடல்விளைத்த
வாலமிருண்டகண்டத்தானடித்தாமரைமேற்சிலம்பொலிப்ப
நீலமலர்க்கட்பரவையார்திருமாளிகையைநேர்நோக்கி.

(இ-ள்.) மாலுமயனுங்காணாதார்மலர்த்தாள்=திருமாலும்திசைமுகரும்காணப்பரிய தேவாதிபருடைய திருவடித்தாமரைகளை; வந்துபூண்டிறைஞ்சுங்காலமிதுவென்று =அணுகிச் சிரமேற்கொண்டுவணங்குங்காலம் இதுவாகுமென்று; அங்கவரையழைத்தாலென்ன=அங்கே அவ்விருவரையும் அழைத்தாற்போல; கடல்விளைத்தவாலமிருண்டகண்டத்தான்=கடலிலேவிளைந்த ஆலத்தையருந்துதலாலிருண்ட கண்டத்தைப்பெற்ற கடவுளது; அடித்தாமரைமேற்சிலம்பொலிப்ப=திருவடித்தாமரைகளிற் சிலம்புகளொலிக்க; நீலமலர்க்கட்பரவையார்=கருங்குவளைமலர்நிகர்க்கும் கண்களைவாய்ந்த பரவைநாச்சியாரது; திருமாளிகையைநேர்நோக்கி=திருமனையையெதிர்குறித்து-எ-று.

உம்மையிரண்டும் எண்ணின்கணின்ற உயர்வுசிறப்பு. விளைத்த-வலித்தல்விகாரம். கடலில்(வாசுகி) விளைத்தஎனினுமாம். ஆலமென்புழி மூன்றனுருபுவிரிக்க. சிலம்புகள், யாவர்க்கும் சிவபதமளிக்கும் வேதவடிவினவாகலின், அப்பேறடையுமாறு அவ்விருவரையும் அழைத்தாற்போல ஒலித்தனவென உபசரித்தாரென்க. (ருருச)

இறைவர்விரைவினெழுந்தருளவெய்துமவர்கள்பின்றொடர
வறைகொடிரைநீர்தொடர்சடையிலரவுதொடரவரியவிளம்
பிறைகொளருகுநறைபிதழிப்பிணையல்சுரும்புதொடரவுடன்
மறைகடொடரவன்றொண்டர்மனமுந்தொடரவரும்பொழுது.

(இ-ள்.) இறைவர்விரைவினெழுந்தருள=எம்பெருமான் தாம் விரைவாகவெழுந்தருளுதலால்; எய்துமவர்கள்பின்றொடர = உடன்வருபவர்கள்பின்னர்த்தொடரவும்; திரையறைகொள்நீர்தொடர்சடையிலரவுதொடர=அலைகள்மோதுதல்வாய்ந்த கங்கையணிந்தசடையிலே பாம்புகள தொடரவும்; அரியஇளம்பிறைகொளருகு=பெரிதும்இளமைவாய்ந்த பிறைமதியைச்சூடியபக்கத்திலே; நறைபிதழிப்பிணையற்சுரும்புதொடர=மதுவைச்சொரியும் கொன்றைமாலையிலுள்ளவண்டுகள் தொடரவும்; உடன்மறைகடொடர=விடாதுவேதங்கள்தொடரவும்; வன்றொண்டர்மனமுந்தொடரவரும்பொழுது=இவற்றோடு நாயனாரது உள்ளமும்தொடர வருந்தருணத்தில்-எ-று.

எழுந்தருளஎன்பது எச்சத்திரிபு. எழுந்தருளும்பொழுது என்றுரைப்பினும் அமையும். அறை-முதனிலைத்தொழிற்பெயர். இறைவர் விரைந்துசெல்லுதலின் ஏனையோர் ஒக்கஉடன்சென்றிலரென்பார் "பின்றொடர" என்றும், விரைதலால்நிலைபெறின்றிஅரவுதொடர்தல்முதலியவும் உடனிகழ்ந்தனவென்பார் "அரவுமுதலியவைதொடர" என்றும், மனம் செல்லுதற்கரிய சிற்றுருவாயிருந்தும் அதுவும் உடன்சென்றதென்பார் "மனமுந்தொடர" என்றும் கூறினர். மனமும்என்பதன்கணும்மை இறந்ததுதழீஇயது; சிறப்புமாம். (ருருரு)

பெருவீரையினுமிகமுழங்கிப்பிறங்குமதகுஞ்சரமுரித்து
மருவீருரிவைபுனைந்தவர்தம்மருங்குசூழ்வார்நெருங்குதலாற்
றிருவீதியினிலழகரவர்மகிழுஞ்செல்வத்திருவாரு
ரொருவீதியிலேசிவலோகமுழுதுங்காணவுளதாமால்

(இ-ள்.) பெருவீரையினுமிகமுழங்கிப்பிறங்குமதகுஞ்சரமுரித்து= விசாலமாகியகடலினும் மிககொலித்துவிளங்கிய மதயானையையுரித்து; ஈருருவுரிவைபுனைந்தவர்தம்மருங்குசூழ்வார்நெருங்குதலால் = குளிர்மைபொருந்திய தோலைத்தரித்தபெருமானருகே சூழ்பவர் கூடுதலால்; திருவீதியினிலழகரவர்திகழுஞ்செல்வத்திருவாரூர் = வீதி * விடங்கரெழுந்தருளப்பெற்ற செல்வமிக்கதிருவாரூரானது; ஒருவீதியிலேசிவலோகமுழுதுங்காணவுளதாம்=ஒருவீதியின்கண்ணேயே சிவலோகமுழுமையும்நோக்க உளதாயிற்று-எ-று.

கயமுகாசுரனென்பவன் யானையுருவாய் தேவர்முதலியோர்க்கு இடுக்கண்செய்தானாக; பெருமான் அதனையுரிந்துத் தோலைப்புனைந்தாராகலால், "குஞ்சரமுரித்துரிவைபுனைந்தார்" என்றும். சிவலோகத்துள்ளாரனைவரும் சிவபெருமானுடன்வந்து ஈண்டுத்திகழுதலால் "ஒருவீதியிலே சிவலோகமுழுதுங்காணவுளதாகும்" என்றும் கூறினர். ஈர்மை-குளிர்மை. உரிவை-தோல். உரிக்கப்பட்டது என்பதுபொருள். உளதாம் என்றது காலமயக்கம். ஆல்-அசை. (ருருசு)

---

* விடங்கர்-அழகர்.

ஞாலமுய்யவெழுந்தருளுநம்பிதூதர்பரவையார்
கோலமணிமாளிகைவாயில்குறுகுவார்முன்கூடத்தம்
பாலங்கணைந்தார்புறநிற்பப்பண்டேதம்மையர்ச்சிக்குஞ்
சீலமுடையமறைமுனிவராகித்தனியேசென்றணைந்தார்.

(இ-ள்.) ஞாலமுய்யவெழுந்தருளுநம்பிதூதர்=உலகம்உய்தற்பொருட்டெழுந்தருளிய நம்பியாரூரர்க்குத்தூதராகிய (தலைவர்) ; பரவையார்கோலமணிமாளிகைவாயில் குறுகுவார் = பரவைநாச்சியாரது அழகியமணிகளிழைத்த மனையின்வாயிலையணுகி; முன்கூடத்தம்பாலங்கணைந்தார்புறநிற்ப=ஆதிதொடங்கித் தம்மைச்சூழ அங்குவந்தவரெல்லாம் புறத்தேநிற்க; பண்டேதம்மையர்ச்சிக்குஞ்சீலமுடையமறைமுனிவராகி=அநேககாலமாகத் தம்மைப்பூசிக்கும் ஒழுக்கமுடைய ஆதிசைவமுனிவராகி; தனியேசென்றணைந்தார்=தனியேபோய்ச்சார்ந்தார்-எ-று. ௩௩௪ முதல் இவ்வேழுங்குளகம்.

குறுகுவார் - முற்றெச்சம். ஏகாரங்களுள்முந்தியது தேற்றம்; பிந்தியது பிரிநிலை. (௩௩௭)

சென்றுமணிவாயிற்கதவஞ்செறியவடைத்தவதன்முன்பு
நின்றுபாவாய்திறவாயென்றழைப்பநெறிமென்குழலாரு
மொன்றுந்துயிலாதுணர்ந்தயர்வாருடையபெருமான்பூசனைசெய்
துன்றும்புரிநூன்மணிமார்பர்போலுமழைத்தாரெனத்துணிந்து.

(இ-ள்.) சென்றுமணிவாயில்=திருவாயிலைச்சேர்ந்து; செறியவடைத்தகதவமதன்முன்புநின்று=முற்றஅடைத்தகதவின்முன்புநின்று;பாவாய்திறவாயென்றழைப்ப=பாவைபோலும்பரவையே கதவைத்திறப்பாயாகவென்றுவிளிக்க; ஒன்றுந்துயிலாதுணர்ந்தயர்வார் = சிறிதும் நித்திரையின்றிப் பலவகையாகச்சிந்தித்து வருந்துவாராகிய; நெறிமென்குழலாரும்=நெறித்தமெல்லியகூந்தலையுடைய பரவைநாச்சியாரும்; அழைத்தார்=இங்கேஅழைத்தவர்; உடையபெருமான்பூசனைசெய்=நம்மைஅடிமையாகவுடைய நாதரைவழிபடும்; துன்றும்புரிநூன்மணிமார்பர்போலுமெனத்துணிந்து = உபவீதம் பொருந்திய அழகியமார்பையுடைய ஆதிசைவமுனிவர்போலுமென நிச்சயித்து-எ-று.

ஒன்றுமென்பது-சிறிதுமென்னும்பொருட்டு. போலும்-ஒப்பில்போலி. (௩௩௮)

பாதிமதிவாழ்முடியாரைப்பயில்பூசனையின்பணிபுரிவார்
பாதியிரவிலிங்கணைந்ததென்னோவென்றுபயமெய்திப்
பாதியுமையாடிருவடிவிற்பரமராவதறியாதே
பாதிமதிவாணுதலாரும்பதைத்துவந்துகடைதிறந்தார்.

(இ-ள்.) பாதிமதிவாழ்சடையாரை = பிறைமதிதங்கியசடையையுடையபெருமானை; பயில்பூசனையின்பணிபுரிவார்=தகுதிபெற்ற அருச்சித்தற்றொண்டுபுரியும் ஆதிசைவமுனிவர்; பாதியிரவிலிங்கணைந்ததென்னோவென்றுபயமெய்தி = அர்த்தராத்திரியிலே இங்குவந்தகாரியம் யாதோவென்று அச்சமெய்தி; உமையாள்பாதிதிருவடிவிற்பரமராவதறியாதே=உமாதேவியைஒருபாகத்திற்கொண்டதிருவுருவையுடைய சிவபெருமானென்பதையுணராமல்;பாதிமதிவாணுதலாரும் = அர்த்தசந்திரன்போலும் ஒளிபெற்றநெற்றியையுடையபரவைநாச்சியாரும்; பதைத்துவந்துகடைதிறந்தார்=பதைத்து அணுகிக்கதவைத்திறந்தார்-எ-று.



வீதிவிடங்கர் தம்மை யருச்சிக்கும் ஆதிசைவராய் பரவை திருமாளிகைக்கேகி வன்றொண்ட ரிங்குவர, இணங்கெனவேண்ட இசையாததை அவர் தெரிந்து தம்முயிரிழப்பேனென சிவபெருமான் மற்றொரு [illegible]

உமாபதியணிந்தது ஒருகலைமதியேயாகலின் ஆண்டுப் பாதிமதியென்றது அதனைச்சுட்டிநின்றது. இன் தவிர்வழிவந்தசாரியை. கடை ஈண்டுக் கதவு. "கடை திறமின்" என்பதனானுமுணர்க. (௩௩௯)

மன்னுமுரிமைவன்றொண்டர்வாயிற்றூதாவாயிலிடை
முன்னின்றுரைக்கண்டிறைஞ்சிமுழுதுமுறங்கும்பொழுதின்க
ணென்னையாளும்பெருமானிங்கெய்தியருளினொன்ன
மின்னுமணிநூலணிமார்பசெய்தவேண்டிற்றென்னென்றார்.

(இ-ள்.) உரிமைமன்னும்வன்றொண்டர்வாயிற்றூதா=உரிமைபெற்றவன்றொண்டர்காரணமாகத் தூதாகி; வாயிலிடைமுன்னின்றுரைக்கண்டிறைஞ்சி=வாயிலின்கண்ணே எதிர்நின்றவள்ளலைநோக்கிவணங்கி; முழுதுமுறங்கும்பொழுதின்கண் = யாவும் நித்திரைசெய்யும் அர்த்தயாமத்திலே; என்னையாளும்பெருமானிங்கெய்தியருளினொன்ன=என்னையாட்கொண்டருளும் எம்பெருமான் ஈண்டு எழுந்தருளியதுபோல; மின்னுமணிநூலணிமார்ப=அழகுவிளங்கும்உபவீதமணிந்த மார்பையுடைய தேவரீர்; செய்தவேண்டிற்றென்னென்றார்=அடையவேண்டியது யாதென்று வினவினார்.—எ-று.

வாயிற்றூது-வாயிலாகுந்தூது. வாயில்-காரணம். (௩௪௦)

வேறு.

கங்கைநீர்கரந்தவேணிகரந்தவரருளிச்செய்வார்
நங்கைநீமறாதுசெய்யினான்வந்ததுரைப்பதென்ன
வங்கயல்விழியினாருமதனைநீரருளிச்செய்தா
லிங்கெனக்கிசையுமாகிலிசைபலாமென்றுசொல்லி.

(இ-ள்.) கங்கைநீர்கரந்தவேணிகரந்தவரருளிச்செய்வார்=கங்காநதியொடுங்கிய சடையைமறைத்தகடவுள் அருளிச்செய்கின்றார்; நங்கை-வனிதையருட்சிறந்தமங்கையே; நீமறாதுசெய்யினான்வந்ததுரைப்பதென்ன = நீமறுக்காதுசெய்வையேல் யான்வந்த காரியம் வகுக்கலாமென்றுகூற; அங்கயல்விழியினாரும்=அழகியகயல்மச்சம்போலும் கண்களையுடைய பரவைநாச்சியாரும்; அதனைநீரருளிச்செய்தால் = அதனைத் தேவரீர் ஆஞ்ஞாபித்தால்; இங்கெனக்கிசையுமாகிலிசைபலாமென்றுசொல்லி=ஈண்டு அடியேனுக்கு இயலுமானால் உடன்படலாமென்றுரைத்து.—எ-று.

பெருமான் தம்முடையவிழிகளை விளையாட்டாகமூடிய அம்பிகையின்கரத்திலே வெயர்வையாகத்தோற்றியகங்கைப்பெருக்கைஉலகழியாவண்ணம் ஒருசடையிற்கரப்பித்தாராகலின் "கங்கைநீர்கரந்தவேணி" என்றும், அருச்சகருருவாய்வந்த இப்பொழுது அவ்வேணியைமறைத்தாராகலின் "வேணிகரந்தவர்" என்றும் வியந்தனர். (௩௪௧)

என்னினைந்தணைந்ததென்பாலின்னதென்றருளிச்செய்தாற்
பின்னையதியலுமாகிலாமெனப்பிரானார்தாமு
மின்னிடைமடவாய்நம்பிவரவிங்குவேண்டுமென்ன
நன்னுதலாருஞ்சாலநன்றுநம்பெருமையென்பார்.

(இ-ள்.) என்னினைந்தணைந்ததென்பால் = தேவரீர் யாதுநினைந்துசிறியேனிடத்தேவந்தது; இன்னதென்றருளிச்செய்தால்=அது இன்னகாரியமென்று அருளிச்செய்வீராயின்; பின்னையதியலுமாகிலாமென = பின்பு என்னாற்செய்யத்தக்கதாயின் அது

செய்யலாமென்றுரைக்க; பிரானார்தாமும்=பெருமானும்; மின்னிடைமடவாய்=மின்னையொத்தநுசுப்பையுடையநங்கையே; நம்பிவரவிங்குவேண்டுமென்ன = ஆளுடைய நம்பிகள் இங்கே அணுகுதற்கு இசையவேண்டுமென்றுகூற; நன்னுதலாரும் = நல்ல நெற்றியையுடையபரவைநாச்சியாரும்; சாலநன்றுநம்பெருமையென்பார்=நம்முடைய பெருமை மிகவும்நன்றென்று நவிலுவாராயினார்.—எ-று.

மின்னிடைமடவாயென்பதற்கு, உருவத்தால் மின்னலுக்தோற்கும் இளம்பருவமுடையாய் எனினும்பொருந்தும். நீர் இங்ஙனங்கூறுதலும் யான் இதற்குடன்படுதலும் செய்யின் ஞாலத்திலே நம்பெருமை நன்குவிளங்குமெனப் பழித்தனரென்பார் "சாலநன்றுநம்பெருமையென்பார்" என்றார். (௩௪௨)

பங்குனித்திருநாளுக்குப்பண்டுபோல்வருவாராகி
யிங்கெனைப்பிரிந்துபோகியொற்றியூரெய்தியங்கே
சங்கிலித்தொடக்குண்டாருக்கிங்கொருசார்வுண்டோநீர்
கங்குலின்வந்துசொன்னகாரியமழகிதென்றார்.

(இ-ள்.) பங்குனித்திருநாளுக்குப்பண்டுபோல்வருவாராகி= உத்தரத்திருநாளுக்கு வழக்கம்போலவருவாரொத்துநடித்து; இங்கெனைப்பிரிந்துபோகியொற்றியூரெய்தி= இங்கே அடியேனையகன்றுசென்று திருவொற்றியூரைச்சேர்ந்து; அங்கேசங்கிலித்தொடக்குண்டாருக்கு=அவ்விடத்திலே சங்கிலியினது பிணிப்பையுடையராயினார்க்கு; இங்கொருசார்வுண்டோ=இவ்விடத்திலே ஒருபற்றுண்டாகுமோ; நீர்கங்குலின்வந்துசொன்னகாரியமழகிதென்றார்=நீர் இந்தஅர்த்தராத்திரியில்வந்து அறிவித்த இச்செயல் மிக அழகுடைத்தென்றார்.—எ-று.

உத்தரநட்சத்திரம் பங்குனிமதிக்கு உரியதாகலின் பங்குனியெனப்பெயர்பெற்றது. பங்குனிமாதத்திருவிழா என்னலும் ஒன்று.வருத்தவண்ணம்வாராமையின் வருவார்போன்றுநடித்ததேயன்றி வாய்மையன்றென்பார்"வருவாராகி"என்றும், இரட்டுறமொழிதலால்"சங்கிலித்தொடக்குண்டார்"என்றும், அங்கேபிணிப்புண்டார்க்கு இங்கேசார் தற்றன்மையின்றென்பார் "இங்கொருசார்வுண்டோ" எனறும், இவ்விரவிலே இதன் பொருட்டு நீர்அணுகியது அதிவியப்பென்பார் "நீர்கங்குலின்வந்துசொன்னகாரியமழகிது" என்றும் இயம்பினரென்க. (௩௪௩)

நாதருமதனைக்கேட்டுநங்கைநீநம்பிசெய்த
வேதங்கண்மனத்துக்கொள்ளாதெய்தியவெகுளிநீங்கி
நோதகவொழிதற்கன்றேநுன்னையான்வேண்டிக்கொண்ட
தாதலின்மறுத்தல்செய்யவடாதெனவருளிச்செய்தார்.

(இ-ள்.) நாதருமதனைக்கேட்டு=நம்பெருமானும்அதனைக்கேட்டருளி; நங்கை=நங்கையே;நீநம்பிசெய்தவேதங்கண்மனத்துக்கொள்ளாது=நீ ஆளுடையநம்பிகள்செய்தஅக்குற்றங்களை நெஞ்சிற்கொள்ளாமல்;எய்தியவெகுளிநீங்கி=சார்ந்தகோபம்தணிந்து; நோதகவொழிதற்கன்றேநுன்னையான்வேண்டிக்கொண்டது=(நீ) துன்பத்தைத் தக்கபடி நீங்குதற்பொருட்டல்லவா நின்னை யான்கேட்டுக்கொண்டது; ஆதலின்மறுத்தல் செய்யவடாதெனவருளிச்செய்தார் = இதுகருத்தாகலின், இனித் தடுத்தல்செய்யத்தகாதென்று இசைத்தருளினார்.—எ-று.

நோ-துன்பம். இதனை வினைத்தொகையாக்கி நோகின்றதகவுஎனினும்அமையும். நின்வருத்தம்நீக்கலே நம்மது முக்கியகருத்தென்பார் "நீவெகுளிநீங்கிநோதகவொழிந்தற் கன்றோ துன்னையான்வேண்டிக்கொண்டது" என்றாரென்க. (௩௪௪)

அருமறைமுனிவரானவையனைத்தையலார்தாங்
கருமமீதாகநீரிக்கடைத்தலைவருகைமற்றும்
பெருமைக்குத்தகுவதன்றாலொற்றியூருறுதிபெற்றார்
வருவதற்கிசையேனீரும்போமெனமறுத்துச்சொன்னார்.

(இ-ள்.) தையலார்=பரவைநாச்சியார்; அருமறைமுனிவரானவையனை=அரிய வேதமுனிவராயெழுந்தருளியஅண்ணலை(நோக்கி);கருமமீதாகநீரிக்கடைத்தலைவருகை= இத்தொழிலின்பொருட்டு நீர் இவ்விடத்தின்கண்வருதல்; உம்பெருமைக்குத்தகுவதன் று=நுமதுமேன்மைக்குத் தகுதியன்று; ஒற்றியூருறுதிபெற்றார்வருவதற்கிசையேன்= ஒற்றியூரைஉரிமையாகக்கொண்ட அவர்வருதற்குஉடன்படேன்; நீரும்போமெனமறுத் துச்சொன்னார்=நீரும்செல்லுமென்று தடுத்துச்சொல்லினர்.—எ-று.

கடை-இடம். தலை-ஏழனுருபு. தாம்-மற்று-ஆல்-அசைகள். (௩௪௫)

நம்பர்தாமதனைக்கேட்டுநகையுமுட்கொண்டுமெய்ம்மைத்
தம்பரிசறியக்காட்டார்தனிப்பெருந்தோழனார்தம்
வெம்புறுவேட்கைகாணுந்திருவிளையாட்டின்மேவி
வம்பலர்குழலினார்தாமறுத்ததேகொண்டுமீண்டார்.

(இ-ள்.) நம்பரதனைக்கேட்டு = அடியவர்பால்விருப்புடையகடவுளும் அதைத் திருச்செவியேற்று; நகையுமுட்கொண்டு=புன்முறுவலையும் உட்கொண்டருளி; மெய்ம் மைத்தம்பரிசறியக்காட்டார்=தமது உண்மைத்தன்மையை அவருணரக்காட்டாராகி; தனிப்பெருந்தோழனார்தம் = நிகரற்றபெரியதோழராகிய வன்றொண்டப்பெருமானது; வெம்புறுவேட்கைகாணுந்திருவிளையாட்டின்மேவி = வெதுப்புறுதற்கேதுவாகியவேண வாவைநோக்கும் திருவிளையாட்டில்விருப்புற்று; வம்பலர்குழலினார்=நறுமணம்விரிந்த கூந்தலையுடையபரவைநாச்சியார்; மறுத்ததேகொண்டுமீண்டார்=தடுத்ததேஏதுவாகக் கொண்டு தாம்திரும்பினர்.—எ-று.

நம்பர்-விருப்பர். தாம்-இரண்டும் அசைகள். தம்பரிசுஅறியக்காட்டித் தன்வயம் ஆக்காமை தோழர்வேட்கைகாணும் திருவிளையாடலேயென்பதாம். காரியத்தைக்கார ணமாகஉபசரித்து வெம்புறுவேட்கை என்றார். மேவல்-விரும்பல். (௩௪௬)

தூதனைப்போகவிட்டுவரவுபார்த்திருந்ததொண்டர்
நாதனையறிவிலாதேநன்னுதல்புலவிநீக்கிப்
போதரத்தொழுதேனென்றுபுலம்புவார்பரவையாரைக்
காதலினிசைவுகொண்டுவருவதேகருத்துட்கொள்வார்.

(இ-ள்.) தூதரைப்போகவிட்டுவரவுபார்த்திருந்ததொண்டர்= தூதரையனுப்பி விட்டு வரவுநோக்கியிருந்ததோழனார்; அறிவிலாதேநாதரை=அறிவின்மையால்நம்பெரு மானை; நன்னுதல்புலவிநீக்கிப்போதர=நல்லநெற்றியையுடைய பரவையின்பிணக்கைத் தவிர்த்துவர; தொழுதேனென்றுபுலம்புவார் = பிரார்த்தித்தேனென்றுவருந்துவாராகி யிருந்துகொண்டு; பரவையாரைக்காதலினிசைவுகொண்டுவருவதே=தூதுசென்றதுணை

வனார் பரவைநாச்சியாரைப் பரிவினால இசையச்செய்துவருவதையே; கருத்துட்கொள் வார்=சித்தத்திற்சிந்திப்பாராயினார்.—எ-று.

ஆண்டானை இத்தகையதொழிலின்கண் ஏவுதல் அடிமையர்க்கு இயல்பன்றாக லின் "நாதரையறிவிலாதேநன்னுதல்புலவிநீக்கிப் போதரத்தொழுதேனென்றுபுலம்பு வார்" என்றும், அப்பெருமானுக்கு இயலாக்காரியம் ஒன்றும் இன்றாகலால் "இசைவு கொண்டுவருவதேகருத்துட்கொள்வார்" என்றும் இயம்பினாரென்க. (௩௬௭)

போயவன்மனையினண்ணும்புண்ணியரென்செய்தாரோ
நாயனார்தம்மைக்கண்டானன்னுதன்மறுக்குமோதா
னாயவென்னயர்வுதன்னையறிந்தெழுந்தருளினார்தாஞ்
சேயிழைதுனிதீர்த்தன்றிமீள்வதுஞ்செய்யாரென்று.

(இ-ள்.) போயவன்மனையினண்ணும்புண்ணியரென்செய்தாரோ= சென்றுபர வைமனையையடைந்த தருமசொரூபர் யாதுபுரிந்தாரோ; நாயனார்தம்மைக்கண்டானன் னுதல்மறுக்குமோ=பரமரைக்கண்டால் நல்லநெற்றியையுடையபரவை மறுப்பாளோ; ஆயவென்னயர்வுதன்னையறிந்தெழுந்தருளினார் = விர்த்தித்த எனதுசோர்வைநோக்கித் தூதாகச்சென்றருளியவிமலனார்; சேயிழைதுனிதீர்த்தன்றி=செவ்விய ஆபரணங்களையு டையபரவையினது புலவிநீட்டத்தைத்தீர்த்தல்லது; மீள்வதுஞ்செய்யாரென்று=திரு ம்புவதும் இயற்றாரென்றுகருதி.—எ-று.

மறுக்குமென்பது செய்யுமென்முற்றாகலின் படர்க்கைப்பெண்ணொருமைக்கண் வந்தது. தான்-தாம்-அசைகள். துனி-புலவிநீட்டம். (௩௬௮)

வழியெதிர்கொள்ளச்செல்வர்வரவுகாணாதுமீள
வழிவுறமயங்கிநிற்பரசைவுடனிருப்பர்நெற்றி
விழியவர்தாழ்த்தாரென்றுமீளவுமெழுவர்மாரன்
பொழிமலர்மாரிவீழவொதுங்குவார்புன்கணுற்றார்.

(இ-ள்.) வழியெதிர்கொள்ளச்செல்வர் = வழியிலேஎதிர்கொள்ளுதற்குப்போ வார்; வரவுகாணாதுமீளவழிவுறமயங்கிநிற்பர் = வருதல்காணமையால் மீளுதற்கு வருத் தம்மிக மயங்கிநிற்பார்; அசைவுடனிருப்பர்=சோர்வோடும்ஓரிடத்திலிருப்பார்; நெற்றி விழியவர்தாழ்த்தாரென்றுமீளவுமெழுவர் = நெற்றிக்கண்ணுடையபரமர் இன்னும்வா ராது தாமதித்தனரேயென்று பின்னருமெழுவார்; மாரன்பொழிமலர்மாரிவீழவொதுங் குவார்=மன்மதன்பொழியும் புட்பபாணங்கள் மழைபோல்மேல்விழுதலால் ஒதுங்கு வார்; புன்கணுற்றார்=இங்ஙனந்துன்புற்றார்.—எ-று.

அசைவு-சோர்வு. வீழ-வினையெச்சத்திரிபு. தாழ்த்தாரென்பதற்குத் தாமதியா ரெனக்கொள்ளலுமொன்று. (௩௬௯)

பரவையார்தம்பானம்பிதூதராம்பாங்கிற்போன
வரவணிசடையார்மீண்டேயறியுமாறணையும்போதி
லிரவுதான்பகலாய்த்தோன்றவெதிரெழுந்தணையைவிட்ட
வுரவுநீர்வெள்ளம்போலவோங்கியகளிப்பிற்சென்றார்.

(இ-ள்.) பரவையார்தம்பால் = பரவைநாச்சியாரதுபாங்கர்; நம்பிதூதராம்பாங் கிற்போன=ஆளுடையநம்பிகளின் தூதராந்தன்மையிற்சென்ற; அரவணிசடையார்மீ

ண்டு = பாம்பையணிந்தசடைமுடியையுடையபரமனார்திரும்பி; அறியுமாறணையும்போதில்=காணும்படிஎழுந்தருளுங்கால்;இரவுபகலாய்த்தோன்றவெழுந்து=திருமேனிப்பிரகாசமுதலியவற்றால் இரவுபகலாய்விளங்க நாயனாரெழுந்து; அணையவிட்டவுரவுநீர்வெள்ளம்போல=அணையைமீறியபெருவெள்ளம்போலவிரைந்து; ஓங்கியகளிப்பினெதிர்சென்றார்=அதிகரித்தமகிழ்வோடும் எதிர்சென்றார்.—எ-று.

ஏ-தான்-அசைகள், உரவு-வன்மை. (௩௫0)

சென்றுதம்பிரானைத்தாழ்ந்துதிருமுகமுறுவல்செய்ய
வொன்றியவிளையாட்டோராருறுதிசெய்தணைந்தாரென்றே
யன்றுநீராண்டுகொண்டவதனுக்குத்தகவேசெய்தீ
ரின்றிவள்வெகுளியெல்லாந்தீர்த்தெழுந்தருளியென்றார்.

(இ-ள்.) சென்றுதம்பிரானைத்தாழ்ந்து=எதிர்போந்து தமதுஇறைவரைவணங்கி; திருமுகமுறுவல்செய்ய=அவர்திருமுகம்திருப்புன்முறுவலலிக்க(நோக்கி); ஒன்றியவிளையாட்டோரார் = அவர்திருவிளையாடலைத் தெளியாராய்; உறுதிசெய்தணைந்தாரென்று=முன்னியகாரியத்தை முடித்துவந்தாரெனத்துணிந்து; இன்றிவள்வெகுளியெல்லாந்தீர்த்தெழுந்தருளி=இவ்வமையத்தேசென்று இப்பரவையின்கோபமுற்றுந்தணித்து எழுந்தருளி; அன்றுநீராண்டுகொண்டவதனுக்குத்தகவேசெய்தீரென்றார்= ஆக்காலத்திலேதேவரீர்வலிந்துஆட்கொண்ட அச்செயலுக்குஅமையவேசெய்தீர்என்றார்.-எ-று.

ஓரார்-முற்றெச்சம். உறுதிசெய்தல்-காரியசித்தியாக்கல். அமையச்செய்தலாவது-அதுபோலும் பெருமுயற்சி இதற்கும்மேற்கொண்டு முடித்தல். ஏகாரம்இரண்டனுள் முந்தியது அசை; பிந்தியது தேற்றம். தாழ்ந்து ஓரார் என்றார் எனஇயையும்.()

அம்மொழிவிளம்புநம்பிக்கையர்தாமருளிச்செய்வார்
நம்மைநீசொல்லநாம்போய்ப்பரவைதன்னில்லநண்ணிக்
கொம்மைவெம்முலைபினாட்குன்றிறமெலாங்கூறக்கொள்ளாள்
வெம்மைதான்சொல்லிநாமேவேண்டவுமறுத்தாளென்றார்.

(இ-ள்.) அம்மொழிவிளம்புநம்பிக்கையரருளிச்செய்வார் = அவ்வார்த்தைகூறிய ஆளுடையநம்பிகளுக்கு அண்ணலாரருளுவார்;நம்மைநீசொல்லநாம்போய்=இக்காரியமுடிக்குமாறு நீநம்மிடத்தியம்பலால் யாம்சென்று; பரவைதன்னில்லநண்ணி=பரவையின்கிருகத்தையடைந்து; கொம்மைவெம்முலையினாட்கு=திரண்டனவாகி விருப்பத்தைத்தரும் தனங்களையுடையஅப்பரவைக்கு; உன்றிறமெலாங்கூற=உன்செய்திமுற்றும்உரைக்க; கொள்ளாள்வெம்மைசொல்லி=அங்கீகரியாதவளாய்க்கடுமொழிஅறைந்து;நாமேவேண்டவுமறுத்தாளென்றார் = யாமேவேண்டிக்கொள்ளவும் தடுத்துவிட்டனள் என்றார்.—எ-று.

நம்மை-வேற்றுமைமயக்கம். சொல்ல-எச்சத்திரிபு. எல்லாம் என்பது எஞ்சாமைப்பொருளது. கொள்ளாள்-முற்றெச்சம்.தாம்-தான்-அசைகள். நாமேஎன்னுமேகாரம் உயர்வுகுறித்துவந்தபிரிநிலை. உம்மை-உயர்வுசிறப்பு. (௩௫௨)

அண்ணலாரருளிச்செய்பக்கேட்டவாரூரர்தாமுந்
துண்ணெனநடுக்கமுற்றேதொழுதுநீரருளிச்செய்த

வண்ணமுமடியாளானபரவையேமறுப்பாளுங்க
ளெண்ணலாரடிமைக்கென்பதின்றறிவித்தீரென்று.

(இ-ள்.) அண்ணலாரருளிச்செய்யக்கேட்டவாரூரரும் = அமலர்இவ்வாறருளக்கேட்டநம்பியாரூரரும்; தண்ணெனமுக்கமுற்றுத்தொழுது=திடுக்கிடநடுக்கமெய்திவணங்கி; அடியாளானபரவையேநீரருளிச்செய்தவண்ணமுமறுப்பாள் = திருவடித்தொழும்புபூண்ட பரவையோ தேவரீர்பணித்தகட்டளையையுந் தடுப்பவள்; நாங்களடிமைக்கெண்ணலாரென்பது=யாங்கள் இருவரும் அடிமையின்பொருட்டுச் சிந்திக்கப்படாதவரென்பதை; இன்றறிவித்தீரென்று = இவ்வமயத்திலே விளக்கினீரென்று இசைத்து.—எ-று.

தாம்-ஏ-அசைகள். உம்மை-உயர்வுசிறப்பு. ஏகாரம் - வினவின்கணின்ற எதிர்மறை. யாங்கள் அடிமையராக எண்ணப்பட்டிருப்பின் இதனை முடியாது ஈங்கெழுந்தருளீரென்பார்“அடிமைக்கெண்ணலார்” என்றார். எண்ண ஆர் என்பதுபாடமாயின், அடிமைக்குரிமையாகவெண்ண என்னவியல்புடையோமெனக்கொள்க. அடிமைக்கென்பதனை அடிமையினென வேற்றுமைமயக்கமாக்கினும் அமையும். (௩௫௩)

வானவருய்யவேண்டி மறிகடனஞ்சையுண்டீர்
தானவர்புரங்கள்வேவமூவரைத்தவிர்த்தாட்கொண்டீர்
நான்மறைச்சிறுவர்க்காகக்காலனைக்காய்ந்துநட்டீர்
யான்மிகையுமக்கின்றானாலென்செய்வீர்போதாதென்றார்.

(இ-ள்.) வானவருய்யவேண்டிமறிகடனஞ்சையுண்டீர்=அமரர் உய்யவிரும்பி அலைகடலிற்றோன்றிய ஆலத்தையருந்தியருளினீர்; தானவர்புரங்கள்வேவ = அசுரர்குடிகொண்டமுப்புரங்களும்நீறாக; மூவரைத்தவிர்த்தாட்கொண்டீர்=அவற்றுள், மூவரைப்பிழைப்பித்து அடிமைகொண்டருளினீர்; நான்மறைச்சிறுவர்க்காக=இருக்காதிவேதங்களை இனிதுணர்ந்த மார்க்கண்டேயர்பொருட்டு; காலனைக்காய்ந்துநட்டீர்=அந்தகனையுதைத்து(அவரை) அடிமையாகக்கொண்டீர்; உமக்குயான்இன்றுமிகையானால் = இத்தகையதேவரீருக்கு அடியேன்இப்பொழுதுமிகையாயின்;போதாதுஎன்செய்வீரென்றார்=மீண்டுவாராது வேறு யாதுசெய்வீரென்றுகூறினார்.—எ-று.

அடைக்கலம்புக்காரைக்காக்க இத்தகையஅரியசெயல்புரிந்த அருளாளராகியநீர் இதனைமுடியாது மீண்டுவந்தமை எளியேனைத்தொண்டுகொள்ளும் இசைவின்மையே என்பார் “யான்மிகையுமக்கின்றானாலென்செய்வீர்போதாது”என்றாரென்க. மூவராவார் பரமவிரதன் பரமயோகன் பரமகுணன் என்பவர். இவர், சுசீலன் சுதன்மன் சுபுத்தியெனவும் முறையே பெயர்பெறுவர். ஆட்கொண்டமையாவது-இருவரை வாயிற்காவலராகவும், ஒருவரைக் குடமுழாமுழக்குபவராகவும் அடிமைகொண்டமை. இதனை “மூவெயில்செற்ற ஞான்றுய்ந்தமூவரி லிருவர்நின்றிருக் கோயிலின்வாய்தல, காவலாளரென் றேவியபின்னை யொருவனீகரி காடரங்காக, மானைநோக்கியோர் மாநடமகிழ மணிமுழாமுழக்க வருள்செய்த, தேவதேவநின் றிருவடியடைந்தேன் செழும்பொழிற்றிருப்புன்கூருளானே.”என்னும்இச்சுந்தரமூர்த்திசுவாமிகள்தேவாரத்தானும், அவர்சரித்திர விரிவை உபதேசகாண்டமுதலியவற்றானும் உணர்க. சிறுவர்தம்மை என்பதும்பாடம். மிகை-வேண்டப்படாமல் மிஞ்சுவது. (௩௫௪)

ஆவதேசெய்தீரின்றென்னடிமைநீர்வேண்டாவிட்டாற்
பாவியேன்றன்னையன்றுவலியவாட்கொண்டபற்றென்
ளோவுமென்னழிவுங்கண்டீர்நுடங்கிடையவள்பாலின்று
மேவுதல்செய்யீராகில்விடுமுயிரென்றுவீழ்ந்தார்.

(இ-ள்.) ஆவதேசெய்தீர்=தக்கதேபுரிந்தீர்; இன்றென்னடிமைநீர்வேண்டாவிட்டால்=நீர் இப்பொழுது எனது அடிமைத்தன்மையை விரும்பாதுவிடின்; பாவியேன்றன்னையன்று வலியவாட்கொண்டபற்றென்=அடிமையாதற்குச் சிந்தியாத என்னை அக்காலத்தில் வலிந்துஅடிமைகொண்டசம்பந்தம்யாதுக்கு; நோவுமென்னழிவுங்கண்டீர்=எனக்குநேர்ந்தவருத்தமும் அதனால் யான்படும்பாடும்நேரேகண்டறிந்தீராகலின்; நுடங்கிடையவள்பால்=துவளும்நுசுப்பையுடையபரவையிடத்து; இன்றுமேவுதல்செய்யீராகில் = இப்பொழுதே யான்அடையுமாறு இயற்றாதுவிடுவீரேல்; விடுமுயிரென்றுவீழ்ந்தார்= (உடலினின்றும்) உயிர்நீங்குமென்று உரைத்துச்சோர்ந்தார்.—எ-று.

ஆவதேசெய்திரென்பது, உடன்பாடுபோன்று துன்பமிகுதியாலிசைக்கும் எதிர்மறைஇகழ்ச்சிக்குறிப்பு. இனறு காத்தலிக்கைவிடும்தேவரீர் அன்றுவலிந்தாட்கொண்டது எற்றிற்கென்பார் "அடியைவேண்டாவிடின்அன்றுஆட்கொண்டபற்றென்" என்றார். எனவே, ஆண்டுகைவிடல் அருளுடைத்தன்று என்றவாறு. என்என்புழி எவனுக்கு என நான்கனுருபுவிரிக்க. இன்றேயெனனும்பிரிநிலையேகாரம் விகாரத்தாற்றொக்கது. ()

தம்பிரானதனைக்கண்டுதரியாதுதளர்ந்துவீழ்ந்த
நம்பியையருளானோக்கிநாமின்னமவள்பாற்போயக்
கொம்பினையிப்போதேநீகுறுகுமாகூறுகின்றோம்
வெம்புறுதுயர்நீங்கென்றார்வினையெல்லாம்விளைக்கவல்லார்.

(இ-ள்.) வினையெல்லாம்விளைக்கவல்லார்தம்பிரான்=அவ்வவ்வினைப்போகங்கண் முற்றும் அனுபவிப்பித்து ஒழிக்கவல்லராகிய ஆன்மநாயகர்; அதனைக்கண்டுதரியாது= அவர்மெலிவைநோக்கிச்சகியாது; தளர்ந்துவீழ்ந்தநம்பியையருளானோக்கி = மெலிந்து விழுந்தநம்பியாரூரரைக் கிருபையோடுபார்த்து; நாமின்னமவள்பாற்போய்=யாம் இன்னமும் அப்பரவையினிடம்சென்று;அக்கொம்பினையிப்போதேநீகுறுகுமாகூறுகின்றோம் =பூங்கொம்புபோல்வாளாகிய அவளை நீ அடையுமாறு இப்பொழுதே அறைகின்றோம்; வெம்புறுதுயர்நீங்கென்றார்=வெதும்புகின்றதுன்பை விடுவாயென்றுகட்டளையிட்டார். எ-று.

வினை ஈட்டப்படுங்கால் மந்திரமுதலிய அத்துவாக்களிடமாக மனம்வாக்குக்காயமென்னும் மூன்றானீட்டப்பட்டுத் தூலகன்மமாய் ஆகாமியமெனப்பெயர்பெற்று, பின்னர்ப் பக்குவம் ஆங்காறும் சூக்குமகன்மமாய்ப் புத்திதத்துவம்பற்றுக்கோடாக மாயையிற்கிடந்து, சாதி ஆயுப் போகமென்னும் மூன்றற்குமேதுவாய் முறையே சனகம் தாரகம் போக்கியமென்னும் மூவகைத்தாய், அபூருவம் சஞ்சிதம் புண்ணியபாவமென்னும் பரியாயப்பெயர்பெற்று, பின்னர்ப்பயன்படுங்கால் ஆதிதைவிகம் ஆத்தியான்மிகம் ஆதிபௌதிகமென்னும் முத்திறத்தாற் பலதிறப்பட்டுப்பிராரத்தமெனப்பெயர்பெறும். ஆதிபௌதிகமாவது-சடம்வாயிலாகவருவது. ஆத்தியான்மிகமாவது - சடத்தோடுகூடிய சேதனம்வாயில்ாகவருவது. ஆதிதைவிகமாவது-அருவாயிலானன்றித்தெய்வந்தானேகா

ரணமாகவருவது. இன்னும் இவ்வினைகள் உலகம் வைதிகம் அத்தியான்மிகம் அதிமார்க்கம் மாந்திரம் என்று ஐவகைப்பட்டு, ஒன்றற்கொன்று ஏற்றமுடைத்தாய், முறையே நிவிர்த்திமுதலிய பஞ்சகலைகளினடங்கி, அசுத்தம் மிச்சிரம் சுத்தமெனப்படும் போகங்களைப்பயப்பிக்குமென்பார் "வினையெலாம்" என்றும், பயன்றருவனவினையேயாயினும் அவை சடமாகலானும், ஆன்மாக்களுக்குத் தமக்கென அறிவின்மையானும், முதல்வரே அறிந்தணைக்கவல்லுநரென்பார் "விளைக்கவல்லார்" என்றும்கூறினார். இதனைவற்புறுத்தற்கன்றே தம்பிரானென்றதூஉமென்க. உலகம் - கூவல் தண்ணீர்ப்பந்தல்முதலியன. வைதிகம்-வேள்விமுதலியன. அத்தியான்மிகம்-சிவபூசை. அதிமார்க்கம்-யோகம். மாந்திரம்-மந்திரோச்சாரம்; ஞானநூலோதன்முதலியன. (நடுசு)

மயங்கியநண்பருய்யவாக்கெனுமதுரவாய்மை
நயங்கிளரமுதநல்கநாவலூர்மன்னர்தாமு
முயங்கியகலக்கநீங்கியும்மடித்தொழும்பனேனைப்
பயங்கெடுத்திவ்வாறன்றேபணிகொள்வதென்றுபோற்ற.

(இ-ள்.) மயங்கியநண்பருய்ய=மாழ்கியதோழராகிய வன்றொண்டப்பெருமான் பிழைக்கும்படி; வாக்கெனுமதுரவாய்மைநலங்கிளரமுதநல்க = (எம்பெருமான்) தமது திருவாக்காகிய இனிமையும் உண்மையும் இன்பமும்ஓங்கிய அமுதத்தையளிக்க; நாவலூர்மன்னருமுயங்கியகலக்கநீங்கி=வன்றொண்டப்பெருமானும் வாடியமயக்கமொழிந்து; உம்மடித்தொழும்பனேனை=தேவரீருடைய திருவடித்தொண்டனாகியசிறியேனை; பயங்கெடுத்திவ்வாறன்றே=அச்சத்தையகற்றி இங்ஙனம்அல்லவோ; பணிகொள்வதென்றுபோற்ற=அடிமைகொள்ளவேண்டுவது என்றுதுதிக்க.—எ-று. தாம்-அசை.

மயங்குதலாவது-இந்தொழில் எங்ஙனமுடியுமோவென்னும் ஏக்கத்தால் சித்தம் நிலைபெறாமை. இறந்துபடுவார்போற்சோர்ந்த நாயனாரை இனிதுய்யச்செய்தலின், அத்திருவாக்கை அமுதமாகவுருவகித்தார். அவ்வாக்கு, இனிமையோடு தவறாமையினையும் இன்பம்பயத்தலையும் உடைமையின் "மதுரவாய்மைநயங்கிளர்" என்றும், அடிமையர்கலக்கத்தை அகற்றுவது ஆண்டானுக்குக்கடமையாகலின் "தொழும்பனேனைப்பயங்கெடுத்திவ்வாறன்றேபணிகொள்வது" என்றும் பரிந்தியம்பினாரென்க. (நடுஎ)

அன்பர்மேற்கருணைகூரவாண்டவர்மீண்டுஞ்செல்லப்
பின்புசென்றிறைஞ்சிநம்பிபேதுறவோடுமீண்டார்
முன்புடன்போதாதாருமுறைமையிற்சேவித்தேகப்
பொன்புரிசடையார்மாதர்புனிதமாளிகையிற்சென்றார்.

(இ-ள்.) அன்பர்மேற்கருணைகூர = ஆளுடையநம்பிகளின்மீது அருள்மிகுதலால்; ஆண்டவர்மீண்டுஞ்செல்ல=பெருமான் பின்னரும் தூதுசெல்ல; நம்பிபின்புசென்றிறைஞ்சிப்பேதுறவோடுமீண்டார்=வன்றொண்டப்பெருமான் சிறிதுதூரஞ்சென்று வணங்கி மயக்கத்தோடுதிரும்பினார்; பொன்புரிசடையார் = பொன்போலும்முறுக்குச்சடைமுடியையுடைய புனிதரும்; முன்புடன்போதாதாருமுறைமையிற்சேவித்தேக= முன்னே உடன்வராதவர்களும் முறைப்படிசேவித்துஉடனேவர; மாதர்புனிதமாளிகையிற்சென்றார்=பரவைநாச்சியாரது பரிசுத்தமாகியதிருக்கத்திலடைந்தார்.—எ-று.

மேல் ஏழனுருபு. கூரனென்பது ஏதுப்பொருள்படநின்ற எச்சத்திரிபு. போதாதாருமென்புழி உம்மை இறந்தது தழீஇயது. (கடுஅ)

மதிநுதற்பரவையார்தாம்மறையவர்போனபின்பு
முதிர்மறைமுனியாய்வந்தாராளுடைமுதல்வராகு
மதிசயம்பலவுந்தோன்றவறிவுற்றேயஞ்சிக்கெட்டே
னெதிர்மொழியெம்பிரான்முன்னென்செயமறுத்தேனென்பார்.

(இ-ள்.) மறையவர்போனபின்பு = ஆதிசைவராகவெழுந்தருளிய அண்ணலார்சென்றபின்னர்; முதிர்மறைமுனியாய்வந்தார்=இங்ஙனம் ஆதிசைவராயெழுந்தருளியவர்; ஆளுடைமுதல்வராகுமதிசயம் பலவுந்தோன்ற = எவரையும் அடிமையாகவுடைய இறைவரேயெனத்துணிதற்கேதுவாகும் வியப்புகள்பலவும் எதிரே விளங்க; மதிநுதற்பரவையா ரறிவுற்றஞ்சி=பாதிமதியைநிகர்க்கும் நெற்றியையுடைய பரவைநாச்சியாரறிந்துபயந்து; எதிர்மொழியெம்பிரான்முன் = எதிர்ப்பட்டுமொழிந்தமொழிகளை எமதுபெருமான்முன்னர்; என்செயமறுத்தேனென்பார் = யாது காரியம் முடித்தற்பொருட்டு மறுத்தேனென்று வருந்துவாராயினர்.—எ-று. தாம்-ஏ - அசைகள்.

ஆகுதல்-ஈண்டுத்துணிதன்மேற்று. ஆதற்கேதுவாகும் அதிசயத்தை ஆகுமதிசயமென்றுபசரித்தார். அதிசயம்-புட்பவருஷம் பொழிதலுடைமை முதலியவை. கெட்டேன் என்பது வருத்தமிகுதிக்கண் வருவதோரிடைச்சொல். எதிர்மொழி - எதிர்ந்து மொழிந்தமொழியெனவிரியும். எதிரென்பது எதிர்தற்கருமைதோன்றநின்றது. ஆண்டவன் கட்டளையைமறுத்து அடிமையர்செய்வது ஒருதொழிலும் இன்றாகலின் "எதிர்மொழி எம்பிரான்முன் என்செயமறுத்தேனென்பார்" என்க. ()

கண்டுயிலெய்தார்வெய்யகையறவெய்தியீங்கின்
றண்டர்தம்பிரானார்தோழர்க்காகவர்ச்சிப்பார்கோலங்
கொண்டணைந்தவனையானுட்கொண்டிலேன்பாவியேனென்
றொண்சுடர்வாயிலேபார்த்துழையரோடழியும்போதில்.

(இ-ள்.) கண்டுயிலெய்தார்=நித்திரைசெய்யாராய்; வெய்யகையறவெய்தி= கொடியகவலையுற்று; ஈங்கின்று அண்டர்தம்பிரானார் தோழர்க்காக = ஈண்டுஇப்பொழுது தேவாதிபர் தமதுநண்பராகிய நாயனார்பொருட்டாக; அர்ச்சிப்பார் கோலங்கொண்டணைந்தவனை = தம்மையருச்சிக்கும் ஆதிசைவர்போலத் திருமேனிகொண்டெழுந்தருள அவரை; பாவியேன்யானுட்கொண்டிலேனென்று = பாவியேனாகிய யான் அறியாமற்போயினேனென்று பரிதபித்து; ஒண்சுடர்வாயிலேபார்த்து=(இன்னும் ஒருகால் எழுந்தருளுவரோவென) அழகியகாந்திபெற்ற வாயிலையேநோக்கிக்கொண்டு; உழையரோடழியும்போதில் = பாங்கியரோடு வருந்துந் தருணத்தில்.—எ-று.

செயலறுங் கடுந்துன்பமென்பார் "வெய்யகையறவு" என்றார். அணைந்தென்பது வினையெச்சத்திரிபு. உட்கொள்ளாமை-ஈண்டு உள்ளவாறுணராமை. பாவியேனென்பதற்குப் பாவித்தலுஞ் செய்திலனெனினும் பொருந்தும். சுடர் - தீபமுமாம். (கசு0)

வெறியுறுகொன்றைவேணிவிமலருந்தாமாந்தன்மை
யறிவுறுகோலத்தோடுமளவில்பல்பூதநாதர்
செறிவுறத்தேவர்யோகமுனிவர்கள்சூழ்ந்துசெல்ல
மறுவில்சீர்ப்பரவையார்தம்மாளிகைபுகுந்தார்வந்து.

(இ-ள்.) வெறியுறுகொன்றைவேணிவிமலரும் = பரிமளமிக்க கொன்றை மாலையையணிந்த சடைமுடியையுடைய பரமரும்; தாமாந்தன்மை யறிவுறுகோலத்தோடும் = தமதுநிலைமையை அறிதற்குரிய திருமேனியோடும்; அளவில்பல் பூதநாதர் = எண்ணிறந்த பூதகணநாதரும்; செறிவுறுதேவர் = நெருக்கமுற்ற தேவர்களும்; யோகமுனிவர்கள் = சிவயோகத்தில் முதிர்ந்தமுனிவர்களும்; சூழ்ந்துசெல்ல = யாண்டுஞ்சூழ்ந்துவர; மறுவில்சீர்ப்பரவையார்தம்மாளிகைவந்து புகுந்தார் = பழுதற்ற சீர்த்திபெற்ற பரவைநாச்சியாரது திருமாளிகையில் வந்துசேர்ந்தார்.—எ-று.

விமலர்-அநாதியேமலத்தினீங்கியவர். தாமாந்தன்மையறிவுறுகோலமாவது-சடைமுடி திரிநேத்திரம் காளகண்டம் சதுர்ப்புஜமுதலியவுடைமை. மறுவின்மை - கற்புமுதலிய உத்தமகுணங்களில் வழுவின்மை. சீர் - அதனாலுண்டாகியமேம்பாடு.

பாரிடத்தலைவர்முன்னும்பல்கணநாதர்தேவர்
நேர்வுறுமுனிவர்சித்தரியக்கர்கணிறைதலாலே
பேரருளாளரெய்தப்பெற்றமாளிகைதான்றென்பாற்
சீர்வளர்கயிலைவெள்ளித்திருமலைபோன்றதன்றே.

(இ-ள்.) பேரருளாளரெய்தப்பெற்றமாளிகை = மிக்கதிருவருளுடைய விமலரெழுந்தருளப்பெற்ற (பரவைநாச்சியாரது) மாளிகை; பாரிடத்தலைவர் முன்னும் பல்கணநாதர் = பூதத்தலைவர்முதலிய பலகணநாதர்களும்; தேவர்நேர்வுறுமுனிவர் சித்தரியக்கர்கணிறைதலாலே = தேவர்களும் ஒத்தமுனிவர்களும் சித்தர்களும்இயக்கர்களும் செறிதலால்; தென்பாற்சீர்வளர்கயிலைவெள்ளித் திருமலைபோன்றது = தென்பூமியிலுள்ள சீர்த்திவளரும் திருக்கயிலையென்னும் வெள்ளியங்கிரியை நிகர்த்தது.—எ-று.

நேர்வு-ஒத்தல். தொண்டர்பொருட்டுச் செயற்கருந்தொழிலைச் செயற்கிசைந்தமையின், "பேரருளாளர்" என்றும், வடகைலைபோலப் பலகணங்களும் நிறைதலால் மாளிகையைத்"தென்கைலை" என்றும் கூறினரென்க. அன்று-ஏ-அசைகள்.

ஐயரங்கணைந்தபோதிலகிலலோகத்துள்ளாரு
மெய்தியேசெறிந்துசூழவெதிர்கொண்டபரவையார்தா
மெய்யுறுநடுக்கத்தோடுமிக்கெழுமகிழ்ச்சிபொங்கச்
செய்யதாளிணைமுன்சேரவிரைவிஞற்சென்றுவீழ்ந்தார்.

(இ-ள்.) ஐயரங்கணைந்தபோதில் = அண்ணலார்உள்ளெழுந்தருளியதருணத்தில்; அகிலலோகத்துள்ளாருமெய்தியேசெறிந்துசூழ = எவ்வுலகத்துள்ளவரும் இசைந்துநெருங்கிப்புடைநிற்க; எதிர்கொண்டபரவையார் = எதிர்கொண்டபரவைநாச்சியார்; மெய்யுறுநடுக்கத்தோடும் = திருமேனியில்மிக்க விதிர்விதிர்ப்புடன்; மிக்கெழுமகிழ்ச்சிபொங்க = அதிகரித்தெழுகின்ற சந்தோஷம்பெருக; செய்யதாளிணைமுன்

சேரச்சென்று=சிவந்ததிருவடிகளின்முன் அணுக்கமாகச்சேர்ந்து; விரைவினுல்வீழ்ந்தார் = சீக்கிரமாகப் பணிந்தார்.—எ-று.

விமலருனையைக கடந்தனுமையச் சிந்தித்தலால் மெய்யின்கண் நடுக்கமும், அவர் மீட்டும் எழுந்தருளப்பெற்றமையால் மிக்கஉவகையும் ஒருங்குடையராயினு ரென்பார் "மெய்யுறுநடுக்கத்தோடு மிக்கெழுமகிழ்ச்சிபொங்க" என்றும், தூதுசெல்லுதலிற்சிவந்த துணையடியென்பார் "செய்யதாளிணை" என்றும் கூறினுர்.(௩௬௩)

அரியயற்கரியார்தாமுமாயிழையாளைநோக்கி
யுரிமையாலூரனேவமீளவுமுன்பால்வந்தோ
முருகலர்குழலாயின்னமுன்புபோன்மறுதேநின்பாற்
பிரிவுறவருந்துகின்றுன்வரப்பெறவேண்டுமென்றுர்.

(இ-ள்) அரியயற்கரியாரும் = திருமாலுக்கும் திசைமுகர்க்கும் அரியசிவபெருமானும்; ஆயிழையாளைநோக்கி = ஆய்ந்தணிந்த ஆபரணத்தையுடைய பரவை நாச்சியாரைப்பார்த்து; முருகலர்குழலாய் = வாசனைவிரிந்த கூந்தலையுடைய மங்கையே; உரிமையாலூரனேவமீளவுமுன்பால்வந்தோம் = தோழமையாற்சுந்தரனேவ மறுபடியும் நின்னிடத்துவந்தோம்; முன்புபோன்மறுது=முன்போல இன்னமும் மறுக்காமல்; பிரிவுறவருந்துகின்றுன் = உன்பாற் பிரிவுநேர்ந்தமையாற்பெருந்துயருழக்கும் அவ்வாரூரன்; நின்பால் வரப்பெறவேண்டுமென்றுர்=உன்பால் அடையப்பெறவேண்டுமென்று உரைத்தருளினுர்.—எ-று.

தாம்-ஏ - அசைகள். உம்மைகளுள் முந்தியது உயர்வுசிறப்பும் பிந்தியதுஇறந்ததுதழீஇயதுமாம். உறவென்பது ஏதுப்பொருள்விரிய நின்ற எச்சத்திரிபு. (௩௬௪)

பெருந்தடங்கண்ணினுரும்பிரான்முன்புமிகவுமஞ்சி
வருந்தியவுள்ளத்தோடுமலர்க்கரங்குழன்மேற்கொண்டே
யருந்திருமறையோராகியணைந்தீர்முன்னடியேன்செய்த
விருந்தவப்பயனுமென்னவெய்தியநீரோவென்பார்.

(இ-ள்.) பெருந்தடங்கண்ணினுரும் = பருத்தவிசாலமாகியகண்களையுடைய பரவைநாச்சியாரும்; பிரான்முன்புமிகவுமஞ்சி = நம்பிரான் முன்னர் நனிபயந்து; வருந்தியவுள்ளத்தோடுமலர்க்கரங்குழன்மேற்கொண்டு = அயர்வுற்றமனதோடுதாமரைமலர்போலுங்கரங்களை அளகமேற்குவித்து; அடியேன்செய்தவிருந்தவப்பயனுமென்ன = எளியேனியற்றிய இணையில்லாத தவப்பயன்போலுமென்ன; எய்தியநீரோ = இப்பொழுது எழுந்தருளியதேவரீரோ; அருந்திருமறையோராகிமுன்னணைந்தீரென்பார் =அரியவேதங்களையாய்ந்த ஆதிசைவராகி முன்னேயெழுந்தருளினீர் என்பார்.—எ-று.

அமலரே முன் அணுகியவரெனத்தெளிந்தமையால் அஞ்சிவருந்தியஉள்ளத்தராளுரென்க. எல்லையில்லாத்தவமென்பார் "இருந்தவம்" என்றுர். (௩௬௫)

துளிவளர்கண்ணீர்வாரத்தொழுதுவிண்ணப்பஞ்செய்வா
ரொளிவளர்செய்யபாதம்வருந்தவோரிரவுமாறு
தளிவருமன்பர்க்காகவங்கொடிங்குழல்வீராகி
யெளிவருவீருமானுலென்செய்கேனிசையாதென்றுர்.

(இ-ள்.) துளிவளர்கண்ணீர்வாரத்தொழுது விண்ணப்பஞ்செய்வார் = திவலை மிக்ககண்ணீர்பெருகத் திருக்கரங்களைக்குவித்து விண்ணப்பஞ்செய்வார்; மாறுதனி வருமன்பர்க்காக = குன்றுதலடையாது அன்புவளரும் அடியவர்பொருட்டு; ஒளி வளர்செய்யபாதம்வருந்த = காந்திபெருகும் சிவந்தபாதம் கன்ற; ஓரிரவும் அங் கொடிங்குழலவீராகி = இன்றிரவுமுழுமையும் அங்கும் இங்கும் சஞ்சரிப்பீராகி; எளிவருவீருமானால் = எளிதாகஎழுந்தருளுவீரும் ஆயின்; இசையாதென்செய்கே னென்றார் = அதற்குடன்படாது வேறென்செய்யக்கடவேனென்று விண்ணப்பித் தார்.—எ-று.

ஒடு-எண்ணிடைச்சொல்; இது, இங்கென்பதனோடும் இயையும். திருமாலாதி தேவர்முதலியோரால் அறிதற்கரியதேவரீரே அன்பர்பொருட்டு இங்ஙனம் உழன்று எளிவரின் எங்ஙனம் மறுப்பதென்பார் "என்செய்கேனிசையாதென்றார்" என்க. உம்மைகளுள் முந்தியது முற்றுமமையும் பிந்தியது இறந்ததுதழீஇயதுமாம்.

நங்கைநின்றன்மைக்கேற்குநன்மையேமொழிந்தாயென்று
மங்கையோர்பாகம்வைத்தவள்ளலார்விரைந்துபோகத்
திங்கள்வாணுதலினாருஞ்சென்றுபின்னிறைஞ்சிமீண்டா
ரெங்களையாளுநம்பிதூதர்மீண்டேகுகின்றார்.

(இ-ள்) நங்கைநின்றன்மைக்கேற்கு நன்மையேமொழிந்தாயென்று = வனி தையரிற்சிறந்தமங்கையே நினதுதகுதிக்குத் தக்கநலத்தையே நவின்றனை யென்று வியந்து; மங்கையோர்பாகம்வைத்த வள்ளலார்விரைந்துபோக = அம்பிகையைவாம பாகத்திற்கொண்ட அண்ணலார்கடிதெழுந்தருள; திங்கள்வாணுதலினாரும் = பாதிம திபோலுங்காந்திபெற்ற நெற்றியையுடைய பரவைநாச்சியாரும்; பின்சென்றிறை ஞ்சிமீண்டார் = பின்னர்ச்சிறிதுதூரம்போய் வணங்கித்திரும்பினர்; எங்களையாளு நம்பிதூதர்மீண்டேகுகின்றார் = எங்களை அடிமைகொண்டருளிய நம்பியாரூரரின் தூதராகிய இறைவர்மீண்டுசெல்கின்றார்.—எ-று.

இப்பரவைநாச்சியாருடைய நெற்றி ஏனையநெற்றிபோலாது விபூதிப்பிர காசமும் விரவியிருத்தலின், திங்களை வடிவத்தாலன்றி வண்ணத்தாலும் ஒத்ததென் பார் திங்களுதலென்னாது, "திங்கள்வாணுதல்" என்றார். (௩சுஎ)

வேறு

ஆதியுமேலுமாலயனுடற்கருளாதார்
தூதினிலேகித்தொண்டனாரூரர்தொழில்கண்டே
வீதியிலாடிப்பாடிமகிழ்ந்தேமிடைகின்றார்
பூதியினீடும்பல்கணநாதர்புகழ்வீரர்.

(இ-ள்.) பூதியினீடும்பல்கணநாதர்புகழ்வீரர் = விபூதிப்பிரகாசத்தோடு மே ன்மைவாய்ந்த பலகணத்தலைவராகிய புகழ்பெற்றவீரர்கள்; ஆதியுமேலுமாலயனுடற் கருளாதார் = திருவடியையுந்திருமுடியையும் திருமாலுநான்முகனும் தரிசிக்கும் படி காட்டியருளாதகடவுள், தூதினிலேகித்தொண்டனாரூரர்தொழில்கண்டே = தூதிற்சென்றுசுந்தரமூர்த்திசுவாமிகளைப்புரந்தசெயலைநோக்கி, வீதியிலாடிப்பாடி=



தியாகப்பெருமான் தமது பரிவாரத்துடன் பரவையார் மாளிகையிற்செல்லு முன்னர் அவரெதிர்சென்று வணங்கி சுந்தரமூர்த்திசுவாமிகள் இங்கு வரலாமென்றது.

ளிலே கூத்தும்ஆடிப் புகழ்ந்துதொண்டு; மகிழ்ந்துமிடைகின்றார்=மிகுகளிப் -யராய்ப் புடைநெருங்கினார்.—எ-று.

திருமாலுந்திசைமுகனும் திருத்தொண்டு பூணுமையின் அருளாது, இவர் டமையின் இங்ஙனம் அருளினரென்பார் "ஆதியுமேலுமாலயனுடற் கருளா துதினிலேகித்தொண்டனையாளும்" என்றாரென்க. (நசுஅ)

அன்னவர்முன்னும்பின்னுமருங்குமணைவெய்த
மின்னிடையாள்பாலன்பனையுய்க்கும்விரைவோடுஞ்
சென்னியினீடுங்கங்கைததும்பத்திருவாரூர்
மன்னவனாரம்மறையவனார்பால்வந்துற்றார்.

(இ-ள்.) திருவாரூர் மன்னவனார் = திருவாரூரில் வீற்றிருக்கும் தியாகேசப் மான்; அன்னவர் முன்னும்பின்னு மருங்குமணைவெய்த = அவ்வீரர்கள்முன் பின்னரும் இருபக்கத்தும் மொய்த்துவர; மின்னிடையாள்பால்=மின்புரை சுப்பையுடைய பரவைநாச்சியாரிடத்து; அன்பனையுய்க்கும் விரைவோடும்= யனாரை அனுப்பவேண்டுமென்னும் அதிகவேகத்தோடும்; சென்னியினீடுங் கததும்ப = திருமுடியிலணிந்த கங்காநதி திரைகளைமோதும்படி; அம்மறை ர்பால்வந்துற்றார் = அந்நாயனார்பால் வந்து அணுகினார்.—எ-று. (நசுகூ)

அன்பருமென்பாலாவியளிக்கும்படிபோனா
ரென்செய்துமீள்வாரின்னமுமென்றேயிடர்கூரப்
பொன்புரிமுந்நூன்மார்பினர்செல்லப்பொலிவீதி
முன்புறநேருங்கண்ணிணைதானுமுகிழாரால்.

(இ-ள்.) அன்பரும் = சுந்தரமூர்த்திநாயனாரும்; என்பாலாவியளிக்கும்படி ர் = எனதுயிரை உடலில் இருத்துதற்பொருட்டுச்சென்ற எமதுதலைவனார்; சய்துமீள்வாரின்னமுமென்றேயிடர்கூர = இன்னமும் யாதுபுரிந்து திரும் ாஎன்று இடர்அதிகரித்தலால்; பொன்புரிமுந்நூன்மார்பினர்செல்ல=பொன் ற்றிய உபவீதமணிந்த மார்பினையுடைய பெருமான் எழுந்தருளுதலால்; பொ = பொலிவுற்றுவிளங்கும் வீதியின்கண்ணே; முன்புறநேருங்கண்ணிணையும் ார் = முற்படச்சென்ற இருகண்களையும் மூடாதவராயினார்.—எ-று.

அன்பரும் இடர்கூர முகிழாரென இயையும். உம்மை மூன்றனுள், முந்திய டும் இறந்தவைதழீஇயவும், பிந்தியது முற்றும்மையுமாம். ஆவியளித்தல் - டலிற்கழியாது உறுவித்தல், மீள்வாரோஎன்னும் ஐயவோகாரம் விகாரத்தா கது. கூர - செல்ல - என்பன ஏதுப்பொருள்குறிக்கும் எச்சத்திரிபுகள். - ஆல் - அசைகள். (கஎ0)

அந்நிலைமைக்கண்மன்மதன்வாளிக்கழிவார்தம்
மன்னுயிர்நல்குந்தம்பெருமானார்வரவெய்த
முன்னெதிர்சென்றேமூவுலகுஞ்சென்றடையுந்தாள்
சென்னியில்வைத்தென்சொல்லுவனென்றேதெளியாதார்.

(இ-ள்.) மன்மதன்வாளிக்கழிவார்=மன்மதபாணங்கட்குச்சோர்வாராகிய ரூரர்; அந்நிலைமைக்கண் = இங்ஙனம் வருந்துந்தருணத்தில்; தம்மன்னுயிர்

நல்கும்=தம்முடைய நிலைபெற்றவுயிரைத்தந்தளிக்கும் ; தம்பெருமானார்வந்தெய்த= தம்பிரானார்வந்தணுகலும்; முன்னெதிர்சென்று = முற்பட்டெதிர்போந்து; மூவுலகுஞ்சென்றடையுந்தாள்சென்னியில்வைத்து = மூன்றுலகமும்ஒடுங்கும் திருவடிகளை முடிமேற்சூடி; என்சொல்லுவரென்றுதெளியாதார்=யாது ஆஞ்ஞாபிப்பரோவென்று தெளிவு அடையாதவராகி.—எ-று.

சங்காரகாலத்து யாவுந்திருவடியினொடுங்கிச் சிருட்டிக்காலத்து ஒடுங்கிய முறையே தோற்றலின், "மூவுலகுஞ்சென்றடையுந்தாள்" என்றார். இதனை "அவனவளதுவெனுமவைமூவினைமையிற்-றோற்றியதிதியேயொடுங்கிமலத்துளதா-மந்தமாதியென்மனார் புலவர்." என்னும் சிவஞானபோதத்தானுமுணர்க. சொல்லுவரோ என்னும் ஐயவோகாரம் விகாரத்தாற்றொக்கது. ஏ இரண்டும், அசைகள். (௩௭௧)

எம்பெருமானீரென்னுயிர்காவாதிடர்செய்யுங்
கொம்பனையார்பாலென்கொடுவந்தீர்குறையென்னத்
தம்பெருமானுந்தாழ்குழல்செற்றந்தணிவித்தோம்
நம்பியினிப்போய்மற்றவடன்பாலணுகென்ன.

(இ-ள்.) எம்பெருமான் = எம்பெருமானே; நீரென்னுயிர்காவாதிடர்செய்யுங்கொம்பனையார்பால் = தேவரீர், எனதுயிரைப்பேணாது இன்னலைவிளைக்கும் பரவையிடத்து; என்குறைகொடுவந்தீரென்ன = யாதுகுறை கொண்டுவந்தீரென்று வினவ; தம்பெருமானுந்தாழ்குழல்செற்றந்தணிவித்தோம் = தம்பிரானாரும் சரிந்த குழலையுடைய பரவையின்முனிவைச் சாந்தமாக்கினோம்; நம்பியினிப்போய் = ஆரூரனே! நீ இப்பொழுதேசென்று; அவடன்பாலணுகென்ன = அவளிடத்திலே அணைவாயாகஎன்று பணிக்க.—எ-று. இவ்விரண்டுங்குளகம்.

முன்போற் குறைமுடியாதுவந்தீரோ என்பார்"என்குறைகொடுவந்தீர்"என்றார். பெரும்பான்மையும் எதிர்காலப்பொருளில்வரும் இனிஎன்பது ஈண்டு நிகழ்காலத்தில்வந்தது; "பண்டறியேன்கூற்றென்பதனையினியறிந்தேன் - பெண்டகையார்பேரமர்க்கட்டு." என்னும் திருக்குறளிற்போல. மற்று-அசை. (௩௭௨)

நந்திபிரானார்வந்தருள்செய்யநலமெய்துஞ்
சிந்தையுளார்வங்கூர்களியெய்தித்திகழ்கின்றார்
பந்தமும்வீடுநீரருள்செய்யும்படிசெய்தீ
ரெந்தைபிரானேயென்னினியென்பாலிடரென்றார்.

(இ-ள்.) நந்திபிரானார்வந்தருள்செய்ய = நந்தியென்னுந் திருநாமத்தையுடைய நம்பெருமான்வந்து இவ்வாறுபணிக்க; நலமெய்துஞ்சிந்தையுள்=நற்குணம் நிரம்பியசித்தத்திலே; ஆர்வங்கூர்களியெய்தித்திகழ்கின்றார் = உவகைமிகுதற்கு ஏதுவாகிய களிப்பையுற்றுவிளங்கிய அந்நாயனார்; எந்தைபிரானே = எமதுபிதாவாகியபெருமானே; பந்தமும்வீடுநீரருள்செய்யும்படிசெய்தீர்=பந்தத்தையும்வீட்டையும் தேவரீர்பாலிக்குந்தன்மையை அடியேனிடத்துவிளக்கிக்காட்டினீர்; இனியென்பாலிடரென்னென்றார் = இனி அடியேனிடத்துத் துன்பம்யாதுஎன்றார்.—எ-று.

இவ்விரண்டுங் குளகம். கூர்தற்கேதுவாகியகளியைக் கூர்களியென்றார். பந்தமாவது - மலபரிபாகத்தின்பொருட்டு வினைக்கீடாகத் தனுகரணபுவனபோகங்

களைத்தந்து சுகதுக்காதிகளை ஆன்மாக்களுக்குத்தோற்றாது மறைத்துநுகர்வித்தல். பந்தம் - தனுவாதிகளாற்பந்தித்தல். வீடாவது - இருவினையொப்பும் மலபரிபாகமும்வந்துழி அப்பந்தத்தைநிவர்த்தித்துத் திருவடியிற்கலப்பித்தல். வீடு - விடுதல். செய்தல் - ஈண்டு விளக்கலின்மேற்று. (ஙஎங)

என்றடிவீழுநண்பர்தமன்புக்கெளிவந்தார்
சென்றணைநீயச்சேயிழைபாலென்றருள்செய்து
வென்றுயர்சேமேல்வீதிவிடங்கப்பெருமான்றம்
பொன்றிகழ்வாயிற்கோயில்புகுந்தார்புவிவாழ.

(இ-ள்.) என்றடிவீழுநண்பர்தமன்புக்கு = இங்ஙனம்விண்ணப்பித்துத் திருவடியிற்பணியும் தோழர்பத்திமைக்கு; எளிவந்தார் = எளிதுஎழுந்தருளியதம்பிரான்; நீயச்சேயிழைபால் = நீ அச்செவ்வியஆபரணத்தைத்தரித்த பரவையினிடத்தே; சென்றணையென்றருள்செய்து = போய்அடைவாயாக என்று அநுக்கிரகித்து; வீதிவிடங்கப்பெருமான் வென்றுயர்சேமேல் = அவ்வீதிவிடங்கப்பெருமான் வெற்றிபெற்றோங்கியஇடபவாகனத்தின்மீது; புவிவாழத்தம்பொன்றிகழ்வாயிற்கோயில்புகுந்தார் = உலகத்தாருய்யத் தமது பொன்னால்விளங்கும்வாயிலையுடைய கோயிலிற்புகுந்தார்.—எ-று.

வென்றுயர்சே - வெல்லுதலாலுயர்ந்தசே. வெல்லுதல்-மேம்படுதலுமாம்.

வேறு.

தம்பிரானார்பின்சென்றுதாழ்ந்தெழுந்தருளான்மீள்வா
ரெம்பிரான்வல்லவாறென்றெய்தியமகிழ்ச்சியோடும்
வம்பலர்குழலார்செம்பொன் மாளிகைவாயினோக்கி
நம்பியாரூரர்காதனயந்தெழுந்தருளும்போது.

(இ-ள்.) தம்பிரானார்பின்சென்றுதாழ்ந்தெழுந்து = தம்முடைய தலைவர்பின் போய் நமஸ்கரித்தெழுந்து; அருளான்மீள்வார்நம்பியாரூரர் = திருவருள்பெற்றுத் திரும்புவாராகிய நம்பியாரூரர்; எம்பிரான்வல்லவாறென்று = எம்பெருமானது வலியதன்மையால் (இதுமுடிந்தது) என்று; எய்தியமகிழ்ச்சியோடும் = நிரம்பிய உவகையோடும்; வம்பலர்குழலார் = நறுமணம்விரிந்த அளகத்தையுடைய பரவை நாச்சியாரது; செம்பொன்மாளிகைவாயினோக்கி = செம்பொன்னாலாகிய கிருகத்தினது திருவாயிலை நோக்கி; காதனயந்தெழுந்தருளும்போது = காதலித்தெழுந்தருளுங்காலையில்.—எ-று.

எம்பெருமான்மேற்கொள்ளாவிடின் இக்காரியம் முடியாதென்பார் "எம்பிரான்வல்லவாறு" என்றார். ஆறுஎன்புழி ஆற்றாலென மூன்றனுருபுவிரிக்க. இக்காரியம்முடிந்ததென்பது அவாய்நிலையான்வந்தது. நல்லவாறுஎன்றும்பாடம். (ஙஎரு)

முன்றுயிலுணர்ந்துசூழ்ந்தபரிசனமருங்குமொய்ப்ப
மின்றிகழ்பொலம்பூமாரிவிண்ணவர்பொழிந்துவாழ்த்த
மன்றல்செய்மதுரசீதசீகரங்கொண்டுமெந்தத்
தென்றலுமெதிர்கொண்டெய்துஞ்சேவகமுன்புகாட்ட.

(இ-ள்.) முன்றயிலுணர்ந்தருழ்ந்தபரிசனமருங்குமொய்ப்ப = இதற்குமுன் னரே நித்திரைதெளிந்துசூழ்ந்த ஏவலர்புடைநெருங்க; மின்றிகழ்பொலம்பூமாரி விண்ணவரபொழிந்துவாழ்த்த = மின்போலவிளங்கும் பொன்மலர்மழையைத் தேவர்வருஷித்துவாழ்த்த; மன்றல்செய்மதுரசீதசீகரங்கொண்டு = மணம்விளைக் கும் இனிய குளிர்ந்த நீர்த்திவலைகளைக்கொண்டு, மந்தத்தெனறலும் = மெல்லிய நடையையுடையதென்றலும்; எதிர்கொண்டெய்துஞ்சேவகம்முன்புகாட்ட = எதிர் கொண்டுசெல்லும் சேவகத்தொழிலை எதிர்புரிய.—எ-று.

உம்மை-இறந்ததுதழீஇயது, இழிவுசிறப்புமாம். (௧எசு)

மாலைதண்கலவைச்சேறுமான்மதச்சாந்துபொங்கும்
கோலநற்பசுங்கற்பூரங்குங்குமமுதலாயுள்ள
சாலுமெய்க்கலன்கள்கூடச்சாத்தும்பூணரவர்க்கம்
பாலனபிறவுமேந்தும்பரிசனமுன்புசெல்ல.

(இ-ள்.) மாலை — மாலைகளும்; மான்மதச்சாந்து = கஸ்தூரிகலந்தசந்தன மும்; பொங்குங்கோலநற்பசுங்கற்பூரம் = பரிமளிக்கும் அழகிய நல்ல பச்சைக்கற் பூரத்தோடு; குங்குமமுதலாயுள்ளதண்கலவைச்சேறும்=குங்குமப்பூமுதலியவை கலந்துள்ள குளிர்ந்தகூட்டுவர்க்கக்குழம்புகளும்; மெய்ச்சாலுநகலனகள்=திருமே னியிலணியும் நிறைந்ததிருவாபரணங்களும்,கூடச்சாத்தும்பூணரவர்க்கம்=ஒருங்கு தரிக்கும்பூணுகிய முத்தாரமுதலியவும், பாலனபிறவுமேந்தும்பரிசனமுன்புசெல்ல= தகுதியுடையபிறவுந்தாங்கிவரும் பரிசனங்கள்முற்செல்ல.—எ-று.

கூடச்சாத்தல்-மிகத்தரித்தலுமாம். (௧எஎ)

இவ்வகையிவர்வநதெய்தவெய்தியவிருப்பினோடு
மைவளர்நெடுங்கண்ணாருமாளிகையடையமன்னுஞ்
செய்வினையலங்காரத்துச்சிறபபணிபலவுஞ்செய்து
நெய்வளர்விளக்குத்தூபநிறைகுடநிரைத்துப்பின்னும.

(இ-ள்.) இவ்வகையிவர்வந்தெய்த = இவ்வாறு நம்பியாரூரர் இனிதடையு ங்கால்; மைவளர்நெடுஙகண்ணாரும்=அஞ்சனநதீற்றிய நெடியகண்களையுடைய பர வைநாச்சியாரும்; எய்தியவிருப்பினோடு = நிறைநதகாதலோடு, மாளிகையடைய= திருமனைமுழுமையும்; மன்னுமலங்காரதது = நிலைபெற்ற அலங்காரத்திற்குரிய; செய்வினைச்சிறப்புபணிபலவுஞ்செய்து=செய்தொழிலால் செவ்வியஅலங்காரம்பலவு மியற்றி; நெய்வளாவிளக்குதூபநிறைகுடநிரைததுப்பின்னும் = நெய்த்தீபமும் தூபமும் பூரணகும்பமும் வரிசையாகநிறுவிப் பின்னரும்.—எ-று.

அடைய-முற்றும். (௧எஅ)

பூமலிநறுமபொற்சுமமபுனைமணிக்கோவைநாற்றி
காமர்பொற்சுண்ணம்வீசிக்கமழ்நறுஞ்சாநதுநீவி
தூமலர்வீதிசூழ்ந்ததோகையர்வாழ்த்தத்தாமும
மாமணிவாயின்முன்புவந்தெதிரேற்றநின்றா.

(இ-ள்.) பூமலிநறும்பொற்சும்ம = மலர்களால் மிகத்தொகுத்த வாசனை மிக்க அழகியமாலைகளும்; புனைமணிகோவைநாற்றி=தொகுத்தநல்லமணிக்கோவை



தியாகர் சுந்தரா! இக்கணமே பரவை திருமாளிகைக்குச் செல்லுமென, ஆரூரர் தமது திருக்கூட்டஞ்சூழ வருவதை பரவையார் கண்டு வணங்கி அரண்மனையி லழைத்துச் சென்றது.

களும் தொங்கவிடுத்து; காமர்பொற்சுண்ணம்வீசி = எழில்வாய்ந்த பொற்சுண்ணம் இறைத்து; சமழ்நறுஞ்சாந்துநீவி = மணக்கும் வாசனையையுடைய சந்தனத்தால்மெழுகி; தூமலர்வீதிசூழ்ந்தகோதையர்வாழ்த்தத்தாமும் = புனிதமலர்ந்த வீதியிலுள்ள பூவையர்வாழ்த்த அப்பரவைநாச்சியாரும்; மாமணிவாயின்முன்புவந்து = சிறந்த இரத்தினங்கள் பதித்த திருவாயிலின் முன்னர் அடைந்து; எதிரேற்று நின்றார் = எதிர்கொண்டுநின்றார்.—எ-று. இவ்வைந்துங் குளகம்.

பெருமானெழுந்தருளும் பெருஞ்சிறப்புடைமையின் புனிதவீதியென மேலும் வியந்திருத்தலுணர்க. தேவர்பொழிந்த செவ்வியமலர் நிரம்பிய வீதியென்னலுமொன்று. (௩எக)

வண்டலாங்குழலார்முன்புவன்றொண்டர்வந்துகூடக்
கண்டபோதுள்ளக்காதல்வெள்ளத்தின் கரைகாணாது
கொண்டநாணச்சங்கூரவணங்கவக்குரிசிலாருந்
தண்டளிர்ச்செங்கைபற்றிக்கொண்டுமாளிகையுட்சார்ந்தார்.

(இ-ள்.) வண்டலாங்குழலார் = (மணங்கவர) வண்டுகள்சரிக்கும் கூந்தலையுடைய பரவைநாச்சியார்; முன்பு வன்றொண்டர்வந்து கூடக்கண்டபோது = எதிரோ வன்றொண்டப்பெருமான்வந்து சமீபிக்கக்கண்டுழி; உள்ளக்காதல்வெள்ளத்தின்கரைகாணாது = உள்ளத்திலேநிரம்பிய காதற்பெருக்கின் எல்லையுணராதவராகி; கொண்டநாணச்சங்கூரவணங்க = உட்கொண்டநாணமும் அச்சமுமிகும்படி இறைஞ்ச; அக்குரிசிலாரும் = அந்நம்பியாரூரரும்; தண்டளிர்ச்செங்கைபற்றிக்கொண்டு மாளிகையுட்சார்ந்தார் = தண்ணிய தளிர்போலும் செவ்வியகரத்தைப்பற்றிக்கொண்டு திருமனையுட்சேர்ந்தார்.—எ-று.

காணாதுவணங்க என இயையும். கணவனைக்கண்டவழி கற்புடைமகளிர்மனம் காதலதிகரிக்க ஊடலைமறந்து கூடற்கட்செல்லுதல் ஒருதலையாகலின், "கண்டபோ துள்ளக்காதல்வெள்ளத்தின் கரைகாணாது" என்றாரென்க. இதனை "ஊடற்கட் சென்றேன்மற் றோழி யதுமறந்து-கூடற்கட் சென்றதென் னெஞ்சு." என்னும் திருக்குறளானுமுணர்க. நாணமாவது - முன்னர் உடன்படுதலின்றிப் பின்னர்உடன்பட்டு எதிர்கொள்ளுதலிற்கூசுதல். அச்சமாவது - எம்பிரான்திருவருள்பதிந்த இப்பெருந்தகையைப்பிழைத்த இத்தவறு எங்ஙனம் அகல்வேமென்னும் ஏக்கம். இவ்விருகுணமுமிக இறைஞ்சினரென்பார் "நாணச்சங்கூரவணங்க" என்றார். (௩அ0)

இருவருந்தம்பிரானார்தாமிடையாடிச்செய்த
திருவருட்கருணைவெள்ளத்திறத்தினைப்போற்றிச்சிந்தை
மருவியவின்பவெள்ளத்தழுந்தியபுணர்ச்சிவாய்ப்ப
வொருவருளொருவர்மேவுநிலைமையிலுயிரொன்றானார்.

(இ-ள்.) இருவரும் = நம்பியாரூரரும்பரவைநாச்சியாரும்; தம்பிரானார்தாமிடையாடிச்செய்த = தம்பெருமான் தம்பொருட்டு இடையே பிணக்ககலப்பேசி முடித்த; திருவருட்கருணைவெள்ளத்திறத்தினைப்போற்றி = திருவருட்பெருக்கின்நிலைமையைத்துதித்து; மருவியவின்பவெள்ளத்துச் சிந்தையழுந்திய புணர்ச்சிவாய்ப்ப = கலத்தலாலுண்டாகிய இன்பப்பெருக்கிலே கருத்துமூழ்கும்படி கலப்புவாய்த்தலால்; ஒரு

வருவேளாருவர் மேவுநிலைமையிலுயிரொன்முனார்—ஒருவருள்ளே மற்றொருவர்மேவுந தன்மையால் பேதமின்றி ஒருயிரேயாயினர்.—எ-று.

ஆடுதல்-பேசுதல். மருவுதலாலுண்டாகிய இனபத்தை மருவிய இன்பென்றார். அழுந்திய-வினையெச்சம். வாய்ப்ப-வினையெச்சத்திரிபு. பாலும்சுவையும்போல அபேதமாய் இருவர்உள்ளங்களும் ஒற்றுமைப்பட்டு ஒன்றேயாய் நிற்றலின் "உயிர் ஒன்றானார்" என்றார். இதனை "சொற்பாலமுதிவள் யான்சுவை" என்னும் திருக்கோவையாரானுமுணர்க. (ருஅக)

ஆரணக்கமலக்கோயின்மேவிப்புற்றிடங்கொண்டாண்ட
நீரணிவேணியாளைநிரந்தரம்பணிந்துபோற்றிப்
பாரணிவிளக்குஞ்செஞ்சொற்பதிகமாலைகளுஞ்சாத்தித்
தாரணிமணிப்பூண்மார்பர்தாமகிழ்ந்திருந்தநாளில்.

(இ-ள்.) ஆரணக்கமலக்கோயின்மேவி = வேதத்திற்கூறப்படும் கமலாலயத்தையடைந்து; புற்றிடங்கொண்டாண்ட = புற்றை வீற்றிருக்குந்தானமாகக்கொண்டு விளங்கித் தம்மையடிமைகொண்ட; நீரணிவேணியானை = கங்கையைத்தரித்தசடைமுடியையுடைய கடவுளை; நிரந்தரம்பணிந்துபோற்றி = எப்பொழுதும் இறைஞ்சித் துதித்து; பாரணிவிளக்குஞ்செஞ்சொல் = உலகத்திலே அணிஇலக்கணங்களை விளக்கும் செவ்வியசொற்களாகிய (மலர்களாற்றொடுத்த); பதிகமாலைகளுஞ்சாத்தி=பதிகங்களாகிய பாமாலைகளையுந் தரித்து; தாரணிமணிப்பூண்மார்பர்=மாலைகளையும் இரத்தினாபரணங்களையுமணிந்த மார்பினையுடையவன்றொண்டப்பெருமான்; தாமகிழ்ந்திருந்தநாளில் = தாம் களிகூர்ந்துவீற்றிருக்கும் காலத்தில்.—எ-று.

நிரந்தரம் - இடையீடின்மை. பதிகத்தைமாலையெனக்கூறிச் சொற்களை மலர்களென்னுமை ஏகதேசவுருவகம். (ருஅஉ)

நம்பியாரூரர்நெஞ்சினடுக்கமொன்றின்றிநின்று
தம்பிரானாரைத்தூதுதையல்பால்விட்டாரென்னு
மிம்பரின்மிக்கவார்த்தையேயர்கோனார்தாங்கேட்டு
வெம்பினாரதிசயித்தார்வெருவினார்விளம்பலுற்றார்.

(இ-ள்.) நம்பியாரூரர்நெஞ்சினடுக்கமொன்றின்றிநின்று=நம்பியாரூரர் தமது நெஞ்சத்திலே நடுக்கமென்பதுசிறிதுமில்லாமல் எதிர்நின்று; தம்பிரானாரைத்தையல் பாற்றூதுவிட்டாரென்னும்=தமதுதலைவரைப் பரவைநாச்சியார்பாற் றூதுவிடுத்தாரென்கின்ற; இம்பரின்மிக்கவார்த்தை=இவ்வுலகெங்கும்பரவியபெருவார்த்தையை; ஏயர்கோனார்தாங்கேட்டு=ஏயர்கோன் கலிக்காமநாயனார் கேள்வியுற்று; வெம்பினாரதிசயித்தார்வெருவினார்விளம்பலுற்றார்=மனப்புழுக்கமடைந்து ஆச்சரியம் உற்று அச்சமுங்கொண்டு அறையத்தொடங்கினார்.—எ-று.

என்னும் வார்த்தை என இயையும். ஆண்டவரையேவுதலில் அடிமையர் மிக அஞ்சவேண்டியிருக்க, இவர் அஃது சிறிதும் இலராயினரென்பார் "நடுக்கம் ஒன்றின்றி" என்றும், அதனினும், அரிவையர்பாற்றூதேவுதல் அவனியில் இயலாததாகலின் ஈது எங்கும் பரந்ததென்பார் "இம்பரின்மிக்கவார்த்தை" என்றும், இங்ஙனஞ்செய்யலாமோவென உள்ளே சினந்தனர் என்பார் "வெம்பினார" என்றும்,

இது இன்றளவுங் கேட்டறியாததென வியந்தனரென்பார் "அதிசயித்தார்"என்றும், இச்செயல் நினைத்தற்கரியதெனப் பயந்தனரென்பார் "வெருவினர்" என்றும் கூறினர். ஒன்றுமென்னும் இழிவுசிறப்பும்மை தொக்கது. ஒன்றுமென்பது சிறிதும் என்னும்பொருட்டு. வெம்பினர்முதலியமூன்றும் முற்றெச்சம். (௩அ௩)

நாயனையடியானேவுங்காரியநன்றுசால
வேயுமென்றிதனைச்செய்வான்றொண்டனுமென்னேபாவம்
பேயனேன்பொறுக்கவொண்ணாப்பிழையினைச்செவியாற்கேட்ப
தாயினபின்னுமாயாதிருந்ததென்னுவியென்பார்.

(இ-ள்.) நாயனையடியானேவுங் காரியஞ்சாலநன்று=தலைவனை அடியவனேவும்செய்கை மிக நல்லது; இதனையேயுமென்றுசெய்வான்றொண்டனும்=இதனைத் தகுதியாகுமென்று செய்பவனும் அடியவனும்; என்னேபாவம்=இது என்பனவாம்; பேயனேன்=பேய்த்தன்மையேனாகிய யான்; பொறுக்கவொண்ணாப்பிழையினைச்செவியாற்கேட்பதாயினபின்னும்=சகிக்கக்கூடாத இக்குற்றத்தினைக் காதுகளாற்கேட்டபின்னரும்; ஆவிமாயாதிருந்ததென்னென்பார்=என்னுயிர்நீங்காதிருந்தது யாதுவியப்பு என்பார்.—எ-று.

ஆமென்பது சினத்தற்கண் எதிர்மறைப்பொருளில் வருவதொரு வியப்பிடைச்சொல். இதனை "விறலின் மேதகு மவுணராம் வலியிலார் மிகவும்-வறியராகிய தேவரா மேலவர் மழலைச் - சிறுவ ராந்தனி முதல்வர்க்கு மமைச்சியல் செய்வா-ரறியுநேமிசூ ழுலகத்து வழக்கநன் றிதுவே" என்னும் கந்தபுராணச்செய்யுளானுமுணர்க. இது அளவிடற்கரிய பாவச்செயலென்பார் "என்னேபாவம்" என்றும், இது கேட்டும் தொண்டினுறைப்பால் உடனே உயிர்விடும் நிலைபேறுணர்ச்சி யிலனென்பார் "பேயனேன்" என்றும், இத்தகைய அபசாரம் கேட்டவழி நீங்குதற்குரிய வுயிர் நீங்காதிருப்பது யாதுவியப்பென்பார் "மாயாதிருந்ததென்னுவியென்பார்" என்றும் கூறினர். பாவச்செயல் பாவமென உபசரிக்கப்பட்டது. (௩அச)

காரிகைதன்பாற்செல்லுங்காதலாலொருவனேவப்
பாரிடைநடந்துசெய்யபாததாமரைகணோவத்
தேரணிவீதியூடுசெல்வதுவருவதாகி
யோரிரவெல்லாந்தூதுக்குழல்வராமொருவரென்று.

(இ-ள்.) காரிகைதன்பாற்செல்லுங்காதலாலொருவனேவ=மனைவிபாலடையும் வேட்கையால் ஒருவன்விடுக்க; ஒருவர்=ஒப்பற்றவராகியபெருமான் (அதற்குஉடன்பட்டு);செய்யபாதாமரைகள்பாரிடைநடந்துநோவ=செந்தாமரைமலரைநிகர்க்கும் திருவடிகள் பூமியிலே நடத்தலால் வருந்தும்படி; ஓரிரவெல்லாம்=ஒரு இரவு முழுமையும்; தேரணிவீதியூடு தூதுக்குச்செல்வதுவருவதாகி=தேரூரும் அழகிய வீதியினிடத்தே தூதுக்குப்போதலும் வருதலும் உடையாராகி; உழல்வராமென்று=உழல்வாராம் (இஃதொருவியப்பு நிகழ்ந்தவாறு என்னே) என்று.—எ-று.

நோவவுழல்வராம் என இயையும். நடந்து என்பது ஏதுப்பொருளில் வந்த வினையெச்சத்திரிபு. ஆமென்பதற்கு மேற்செய்யுளில் உரைத்தாங் குரைத்துக் கொள்க. (௩அ௫)

நம்பர்தாமடிமையாற்றூராகிப்நண்ணிறோ
லும்பரார்கோனுமாலுமயனுநேருணரவொண்ணா
வெம்பிரானிசைந்தாலேவப்பெறுவதேயிதனுக்குள்ளங்
கம்பியாதவனையான்முன்காணுநாளெந்நாளென்று.

(இ-ள்.) நம்பர்தாமடிமையாற்றூராகிநண்ணிறேல்=ஆண்டவர் அடிமைவழிப்பட்டவராகி அடைவராயின்; உம்பரார்கோனுமாலுமயனுநேருணரவொண்ணா=தேவேந்திரனும் திருமாலும் திசைமுகனும் நேரே காணுதற்கரிய; எம்பிரானிசைந்தாலேவப்பெறுவதே=எமது பெருமானது இசைவுபற்றி இச்செயலில் ஏவுதலாமோ; இதனுக்குள்ளங்கம்பியாதவனை=இங்ஙனம் ஏவுதற்கு உள்ளத்திலே நடுக்கம் உறாதவனை; யான்முன்காணுநாளெந்நாளென்று=யான் நேரேகாணுந்தினம் எத்தினமோவென்று இசைத்து.—எ-று.

அடிக்கமலங்கள்போற்றும் அடியவர் வேண்டிற்றெல்லாம் கொடுத்தருள் கருணைவள்ளலாகலின் தம்பெருமைநோக்காது நண்ணுதலுங் கூடுமென்பார் "நண்ணிறேல்" என்றும், அங்ஙனம்நண்ணி இசைந்தால் ஏவலாமோ என்பார் "இசைந்தாலேவப்பெறுவதே" என்றும், பெரிதும் அஞ்சுதற்குரிய இத்தொழிலில் சிறிதும் அஞ்சுதலில்லாதவனைக்காணின் அவனையழித்தல் அல்லது நாம் அழிதல் என்னும் இரண்டனுள் ஒன்று நிகழும் என்பார் "காணுநாளெந்நாள்" என்றும் இசைத்தாரென்க. ஆறு - வழி. ஏ-அசை. உம்மைகள் எண்ணின்கணின்ற உயர்வு சிறப்பு. ஏவப்பெறுதல்-ஒருசொன்னீர்மைத்து. எந்நாளோ என்னும் ஒழியிசைப்பொருள் பயக்கும் ஓகாரம் விகாரத்தாற்றொக்கது. (௩அசு)

அரிவைகாரணத்தினாலேயாளுடைபரமர்தம்மை
யிரவினிற்றூதுபோகவேவியங்கிருந்தான்றன்னை
வரவெதிர்காண்பேனாகில்வருவதென்னாங்கொலென்று
விரவியசெற்றம்பற்றிவிள்ளுமுள்ளத்தராகி.

(இ-ள்.) ஆளுடைப்பரமர்தம்மை=தன்னை அடிமையாகவுடைய தலைவரை; அரிவைகாரணத்தினாலே=ஒருமங்கையின்பொருட்டாக; இரவினிற்றூதுபோகவேவி=அர்த்தராத்திரியிலே தூதுசெல்லவிடுத்து; அங்கிருந்தான்றன்னை=(அவள் பிணக்கை நீக்கிக்கொண்டு) அங்கே இருக்கின்றவனை; வரவெதிர்காண்பேனாகில்வருவதென்கொலென்று=எதிரேவர நோக்குவேனாயின் விளைவது யாதோ என்று; விரவியசெற்றம்பற்றிவிள்ளுமுள்ளத்தராகி=செறிந்த சினங்காரணமாகக்கூறும்சிந்தனையையுடையராகி.—எ-று.

காண்பேனாகில் யாவருயிர் நீங்குமோ யாது தீங்குவிளையுமோ வென்பார் "வருவதென்னாங்கொல்" என்றார். காண்பேனாகில் என்பது காண்டலில் விருப்பின்மையைக் குறிப்பித்து நின்றது. ஆம். அசை. கொல். ஐயம். (௩அள)

ஈறிலாப்புகழினேங்குமேயர்கோனார்தமெண்ணப
பேறிதுபெற்றார்கேட்டுப்பிழையுடன்படுவாராகி
வேறினியிதற்குத்தீர்வுவேண்டுவார்விரிபூங்கொன்றை
யாறிடுசடையனாருக்கதனைவிண்ணப்பஞ்செய்து.

(இ-ள்.) ஈறிலாப்புகழினேங்குமேயர்கோனார்தம்=அழிவில்லாத கீர்த்தியோ டு மேம்பட்ட ஏயர்கோன் கலிக்காமநாயனாருடைய; எண்ணப்பேறிது பெற்றார்கேட் டு=சிந்தனையாகிய இப்பேற்றைத் தமக்குரிமையாகப்பெற்ற சுந்தரமூர்த்திநாயனார் கேள்வியுற்று; பிழையுடன்படுவாராகி=அத்தவறுக்கு உடன்பட்டவராகி; இனியித ற்குத்தீர்வுவேறுவேண்டுவார்=அப்பொழுதே இப்பிழைக்குக்*கழுவாயாகவுள்ள வே றொரு செயலை விரும்புவாராய்; விரிபூங்கொன்றையாறிடுசடையனாருக்கு=விரிந்த கொன்றைமலரையும் கங்கையையுமணிந்த சடையையுடைய பெருமானுக்கு; அத னைவிண்ணப்பஞ்செய்து=அச்செயலை விண்ணப்பித்து.—எ-று.

அவராற் சிந்திக்கப்பெற்றமையே அரும்பெரும்பேறென்பார் "எண்ணப்பேறி துபெற்றார்" என்றும், சால்புடையராகலின் நாம்புரிந்தது தவறெனக் கொண்டன ரென்பார். "பிழையுடன்படுவார்"என்றும், சிவபெருமான் திருவருள்புரியாவழி வே றுகழுவாயின்றெனத் தேர்ந்தனரென்பார் "தீர்வுவேண்டுவார் விரிபூங்கொன்றையா றிடுசடையனாருக்குவிண்ணப்பஞ்செய்து"என்றும் கூறினார். படுவார்-காலமயக்கம். இனி யென்பது நிகழ்காலத்தில்வந்தது. வேண்டுவார்-முற்றெச்சம். (௬அஅ)

நாடொறும்பணிந்துபோற்றநாதருமதனைக்கேட்டு
நீடியதொண்டர்தம்முளிருவருமேவுநீர்மை
கூடுதல்புரிவாரேயர்குரிசிலார்தம்பான்மேனி
வாடுறுசூலைதன்னையருளினார்வருந்துமாற்றால்.

(இ-ள்.) நாடொறும்பணிந்துபோற்ற=(அவர்முனிவை அகற்றியருளல் வே ண்டுமென்று) அநுதினமும் நமஸ்கரித்துத் துதிக்க; நாதருமதனைக்கேட்டு=சிவபெ ருமானும் அதனைத்திருச்செவியேற்று; நீடியதொண்டரிருவரும்=சிறந்த அந்நாயன் மாரிருவரும்; தம்முண்மேவுநீர்மைகூடுதல்புரிவார்=தம்முள்ளே ஒற்றுமைப்படவா மூந் தன்மையை அநுக்கிரகிப்பாராய்; ஏயர்குரிசிலார்தம்பால்=ஏயர்கோன்கலிக்காம நாயனார்பால்; மேனிவாடுறுசூலைதன்னை வருந்துமாற்றாலருளினார்=திருமேனி வாடு தற்குரிய சூலைநோயை அவர்வருந்தும்படி உண்டாக்கினார்.—எ-று.

இவ்வைந்துங் குளகம். (௬அக)

ஏதமில்பெருமைச்செய்கையேயர்தம்பெருமான்பக்க
லாதியாரேவுஞ்சூலையனல்செய்வேல்குடைவதென்ன
வேதனைமேன்மேற்செய்யமிகவதற்குடைந்துவீழ்ந்து
பூதநாயகர்தம்பொற்றாள்பற்றியேபோற்றுகின்றார்.

(இ-ள்.) ஏதமில்பெருமைச்செய்கை=இழிவில்லாத மேன்மைத் தொழிலையு டைய; ஏயர்தம்பெருமான்பக்கல்=ஏயர்கோன்கலிக்காமநாயனார்பால்; ஆதியாரேவு ஞ்சூலை=முதல்வர்விடுத்தருளிய சூலைநோயானது; அனல்செய்வேல்குடைவதென் ன=அக்கினிமயமாகக் காய்ச்சியவேல் குடைதல்போல; வேதனைமேன்மேற்செய்ய= மேலுமேலும் துன்பத்தைவிளைத்தலால்; மிகவதற்குடைந்துவீழ்ந்து=அதற்கு (ஆற் றாராய்) மிகவும் சோர்ந்து விழுந்து; பூதநாயகர்தம்பொற்றாள்பற்றிப் போற்றுகின் றார்=பூதத்தலைவராகிய சிவபெருமானுடைய பொன்போலுந் திருவடிகளைத் துணை யாகக்கொண்டு பணிகின்றார்.—எ-று. செய்ய என்பது வினையெச்சத்திரிபு.(௬௯௦)

* கழுவாய் - பிராயச்சித்தம்.

சிந்தையால்வாக்காலன்பர்திருந்தடிபோற்றிசெய்ய
வெந்தமையாளுமேயர்காவலர்தம்பாலீசர்
வந்துனைவருத்துஞ்சூலைவன்றொண்டன்றீர்க்கினன்றி
முந்துறவொழியாதென்றுமொழிந்தருள்செய்யக்கேட்டு.

(இ-ள்.) எந்தமையாளுமேயர்காவலர் = எம்மை ஆட்கொண்டருளும் ஏயர் கோன்கலிக்காமநாயனார்; சிந்தையால்வாக்கால்திருந்தடிபோற்றிசெய்ய = மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் (தம் பெருமானுடைய) செவ்வியபாதங்களை வழிபட; ஈசரன்பர்தம்பால்வந்து=அப்பெருமான் அவ்வடியவரிடத்தேதோன்றி; உனைவருத்துஞ்சூலை=நின்னைவருத்துகின்ற சூலைநோயானது;வன்றொண்டன்றீர்க்கினன்றி=வன்றொண்டன் நீக்கினாலல்லது ; முந்துறவொழியாதென்று மொழிந்தருள்செய்யக்கேட்டு=(மற்றையோரால்) விரையநீங்காதென்று வருத்தருளக் கேட்டு.—எ-று.

மனமொழிமெய்யென்னும் மூன்றனுள் சிந்தையும் வாக்குஞ் சேரமொழிந்தமையான் மெய் வருவிக்கப்பட்டது. ஈசர் - காத்தலையுடையவர். முந்துதல்-விரைதலின்மேற்று. (௩௧௧)

எம்பிரானெந்தைதந்தைதந்தையெங்கூட்டமெல்லாந்
தம்பிரானீரேயென்றுவழிவழிசார்ந்துவாழு
மிம்பரின்மிக்கவாழ்க்கையென்னைநின்றீருஞ்சூலை
வம்பெனவாண்டுகொண்டானொருவனோதீர்ப்பான்வந்து.

(இ-ள்.) எம்பிரான்=எம்பெருமானே; எந்தைதந்தைதந்தையெங்கூட்டமெல்லாம்=எமது தாதையும் மூதாதையும் எமது சுற்றத்தாருமாகிய யாவரும்; நீரே தம்பிரானென்றுவழிவழிசார்ந்துவாழும்=நீரேதலைவரென்று பரம்பரையாக அடிமைப்பட்டு வாழ்கின்ற; இம்பரின்மிக்கவாழ்க்கையென்னை= இவ்வுலகிற்சிறந்த சந்ததியிற்பிறந்த அடியேனை; நின்றீருஞ்சூலை = நிலைபெற்றுவருத்துஞ் சூலையை; வம்பெனவாண்டுகொண்டானொருவனோவந்துதீர்ப்பான்=புதிதாக ஆட்கொள்ளப்பட்ட ஒருவனோ வந்துநிவர்த்திப்பவன்.—எ-று.

ஏகாரம்-பிரிநிலை. வாழும் வாழ்க்கை என இயையும். வம்பு-புதுமை. வம்பெனை என்பதைச் செயின் என்னும் வினையெச்சத்திரிபாக்கி வம்பினால் ஆட்கொள்ளப்பட்டவன் எனினும் அமையும். வம்பு-வழக்கு. கொள்ளப்பட்டான் எனற்பாலது செயப்பாட்டு வினைப்பொருளுணர்த்தும் படுவிகுதிதொக்கு கொண்டான் எனநின்றது. ஏகாரம் வருத்தமிகுதியைக் குறிப்பித்து நிற்கும் வினாவிடைச்சொல். பரம்பரைத்தொண்டர் சந்ததியிற்பிறந்த என்னையை, புதிதாகவுங் கூடத் தானே தொண்டனாகாது தேவரீரால் வலிந்து தொண்டனாகக்கொள்ளப்பட்டவனொருவனோ தீர்க்கத்தக்கவனென்பது கருத்து. (௩௧௨)

மற்றவன் றீர்க்கிற்றீராதொழிந்தெனைவருத்தனன்றாற்
பெற்றமேலுயர்த்தீர்செய்யும்பெருமையையறிந்தார்யாரே
யுற்றவன்றொண்டற்கேயாமுறுதியேசெய்தீரொன்னக்
கற்றைவார்சடையார்தாமுமவர்முன்புகரந்தாரன்றே.

(இ-ள்.) மேல்பெற்ற முயர்த்தீர் = மேலே இடபத்தைக் கொடியாக ஏந்தியவரே; அவன்றீர்க்கில் = அவ்வன்றொண்டன்வந்துதீர்த்தலினும்; தீராதொழிந்தெனைவருத்தனன்று = அது தீராது என்னைவருத்துதல் நல்லது; செய்யும்பெருமையையாரறிந்தார் = (ஒருவரை உயர்த்தற்பொருட்டுத்தேவரீர்) புரியும் உயர்வை யாவர்அறிந்தவர்; உற்றவன்றொண்டற்கேயாமுறுதிசெய்தீரென்ன = புதிதாகத்தொண்டுபுக்கவன்றொண்டனுக்கே தக்க உயர்வைச்செய்தீர் என்று விண்ணப்பிக்க; கற்றைவார்சடையாருமவர்முன்புகரந்தார் = சிவபெருமானும் (பின்னரொன்றுங் கட்டளையிடாது) அந்நாயனர் முன்னர் மறைந்தருளினர்.—எ-று.

மற்று - ஆல் - தாம் - அன்று-ஏ-அசைகள். தீர்க்கு இல்விகுதியேற்றுநின்ற தொழிற்பெயர். தீர்க்கினும் என்னும் இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. தீராதொழிதல் ஒருசொன்னீர்மைத்து, உறுதலென்பது ஈண்டுஆளெனப் புதிதாகவந்தடைதலின் மேற்று. வன்றொண்டற்கேஎன்னும் ஏகாரம் பிரிநிலை. பெருமைபெற்றஎனது பழமைநோக்காது பெருமையிலாப்புதியனுக்கே பெருமைவிளைத்தீரென்பார், "நீர் செய்யும்பெருமையையறிந்தார்யாரோ யுற்றவன்றொண்டற்கேயாமுறுதியேசெய்தீர்" என்றொன்க. (ருகரு)

வன்றொண்டர்தம்பாற்சென்றுவள்ளலாரருளிச்செய்வா
ரின்றுநம்மேவலாலேயேயர்கோனுற்றசூலை
சென்றுநீதீர்ப்பாயாகென்றருள்செயச்சிந்தையோடு
நன்றுமெய்மகிழ்ந்துபோற்றிவணங்கினர்நாவலூரர்.

(இ-ள்.) வள்ளலார் வன்றொண்டர்தம்பாற்சென்றருளிச்செய்வார் = அண்ணலார் ஆளுடையநம்பிகளபாலடைந்து அருளிச்செய்கின்றார்; நீஇன்றுநம்மேவலாலே சென்று = நீ இப்பொழுது எமது கட்டளையினற்போய்; ஏயர்கோனுற்றசூலை = ஏயர்கோனடைந்த சூலைநோயை; தீர்ப்பாயாகென்றருள்செய = அகற்றுவாயாக என்று அருளிச்செய்ய; நாவலூரர்நன்றுமகிழ்ந்துபோற்றி = திருநாவலூரர் நன்கு மகிழ்ச்சியுற்று வாக்காற்றுதித்து; சிந்தையோடு மெய்வணங்கினர் = மனதோடு காயத்தால் வணங்கினர்.—எ-று.

தீர்ப்பாயாகஎன்னும் வியங்கோளீற்றுஅகரம் விகாரத்தாற்றொக்கது. சிந்தையும்மெய்யும் செப்பினமையின் வாக்குவருவிக்கப்பட்டது. (ருகச)

கலிக்காமர், உயிர்நீக்கலை

அண்ணலாரருளிச்செய்துநீங்கவாரூரர்தாமும்
விண்ணவர்தம்பிரானேவலால்விரைந்துசெல்வார்
கண்ணியமனத்தின்மேவுங்காதலாற்கலிக்காமர்க்குந்
திண்ணியசூலைதீர்க்கவருதிறஞ்செப்பிவிட்டார்.

(இ-ள்.) அண்ணலாரருளிச்செய்துநீங்கவாரூரரும் = இறைவர் இங்ஙனம் ஆஞ்ஞாபித்துஎழுந்தருள நம்பியாரூரரும்; விண்ணவர்தம்பிரானேவலால்விரைந்து செல்வார் = அத்தேவநாயகர்கட்டளையின்படி சீக்கிரம்போவாராய்; கண்ணியமனத்தின்மேவுங்காதலால் = (ஏயர்கோன்கலிக்காமநாயனாருறவைச்) சிந்தித்தசித்தத்திலே நிலைபெற்றவிருப்பத்தினால்; திண்ணியசூலைதீர்க்கவருதறங்கலிக்காமர்க்குச் செப்பிவிட்டார் = வலியசூலைநோயைநிவர்த்திக்க வருந்தன்மையை அவர்க்குச் சொல்லியனுப்பினர்.—எ-று.

செல்வார் முற்றெச்சம். கண்ணுதல்-கருதுதல். முன்னரே கலிக்காமநாயனா ருறவை மிகுதியுங்காதலித்து நின்றனரென்பார் "விரைந்துசெல்வார்கண்ணியமனத் தின்மேவுங்காதலால்" என்றார். தாம்-அசை. (௩௩௫)

நாதர்தம்மருளானண்ணுஞ்சூலையுமவர்பாற்கேட்ட
கேதமும்வருத்தமீண்டுமவன்றொண்டர்வரவுகேட்டுத்
தூதனையெம்பிரானையேவினான்சூலைதீர்க்கு
மேதமிங்கெய்தவெய்தில்யான்செய்வதென்னுமென்பார்.

(இ-ள்.) நாதர்தம்மருளானண்ணுஞ்சூலையும் = தலைவரருளாலணுகிய சூலையும்; அவர்பாற்கேட்டகேதமும்வருத்த = அத்தலைவர்பாற்கேள்வியுற்றதீங்கும் இடர்ப் படுத்த(இருப்பவர்); மீண்டும்வன்றொண்டர்வரவுகேட்டு = மீட்டும் வன்றொண்டப் பெருமான் எழுந்தருள்வதைக்கேள்வியுற்று; எம்பிரானைத்தூதனையேவினான் = எம் பெருமானைத் தூதராகச்செல்லும்படி செலுத்தியவன்; சூலைதீர்க்குமேதமெய்தவிங் கெய்தில் = நமதுசூலையை நீக்கினானென்று நாணுங்குற்றம்விளைய இங்குவந்தால்; யான்செய்வதென்னுமென்பார் = யான்செய்வதுடாதுஎன்று ஆலோசிப்பார்.—எ-று)

"உனைவருத்துஞ்சூலை வன்றொண்டன்றீர்க்கினன்றியொழியாது" எனப் பெருமான் உரைத்தமை கேதத்திற்கேதுவாயிற்றென்பார்.அதனைக் "கேதம்" என்றும், வன்றொண்டர் வரவின்கேள்வி அதனினும் வருந்துதற்கேதுவாயிற்றென்பார் "மீண்டும் வன்றொண்டர்வரவுகேட்டு" என்றும், அவரைக்காணுதலில் கருத்திலரென்பதை "எய்தில்யான்செய்வதென்னுமென்பார்" என்றும் இயம்பினார். ஆக என்பது ஆமெனத்திரிந்தது. ஆம்-அசை. (௩௩௬)

மற்றவனிங்குவந்துதீர்ப்பதன்முன்னான்மாயப்
பற்றிநின்றென்னைநீங்காப்பாதகச்சூலைதன்னை
யுற்றவிவ்வயிற்றினோடுங்கிழிப்பனென்றுடைவாடன்னாற்
செற்றிடவுயிரினோடுஞ்சூலையுந்தீர்ந்ததன்றே.

(இ-ள்.) அவனிங்குவந்துதீர்ப்பதன்முன் = அவ்வன்றொண்டன் ஈண்டடைந்து இந்நோயை நீப்பதன்முன்னமே; நான் மாயவென்னைப்பற்றிநின்று = யான் இறக் கும்படி என்னைத்தொடர்ந்து நிலைபெற்று; நீங்காப்பாதகச்சூலைதன்னை = தொலை யாத பாதகரூபமாகிய சூலையை; உற்றவிவ் வயிற்றினோடுங் கிழிப்பனென்று = அதுகுடிகொண்ட இவ்வயிற்றினோடும் அழிப்பேனென்று; உடைவாடன்னாற்செற்றிட = உடைவாளால் வயிற்றைக்கிழிக்க; உயிரினோடுஞ்சூலையுந்தீர்ந்தது = உயிரோடு சூலையும் ஒழிந்தது.—எ-று.

மற்று-அன்று-ஏ-அசைகள். பாதகம்போல அகலாதுவருத்தலின் பாதகச்சூலை என்றார். (௩௩௭)

கருதரும்பெருமைநீர்மைக்கலிக்காமர்தேவியாரும
பொருவருங்கணவரோடுபோவதுபுரியுங்காலை
மருவியிங்கணைந்தார்நம்பியென்றுமுன்வந்தார்கூற
வொருவருமழுதல்செய்யாதொழிகவென்றுரைத்துப்பின்னர்.



ப்பிக்க, அவர் இருவருக்கும் நட்புண்டாகக்கருதிக் கலிக்காமருக்குச் சூலைநோயேவ அதனால் மிகவருந்தி தம்முயிர்த்துணையாகிய சிவபெருமானைச்சிந்திக்க அவர் வெளிப்பட்டு இந்நோய் சுந்தரனாலன்றித் தீராவென்றருளி அவரிடஞ்சென்று நம்மேவலால் கலிக்காமனை வருத்தும் சூலையைத் தீர்ப்பாயென்றருள சுந்தரர் தாம் வருவதைக் கலிக்காமருக்குத்தெரிவிக்க அதுகேட்ட கலிக்காமரும் அவர் வருவதற்குமுன் தன்னுடைய வாளினால் வயிற்றைக்கிழித்துக்கொண்டு உயிர் நீக்கினது.

(இ-[illegible]ம்பெருமைத்தீர்மைக் கலிக்காமர்தேவியாரும் = சிந்தித்தற்கரிய சிறப்பு[illegible]டைய கலிக்காமநாயனாரது காதலியாரும்; பொருவருங்கணவரோடுபோ[illegible]ங்காலை = நிகரற்றகாதலரோடு அனுமரணஞ்செய்தலை நேசிக்குந்தருணத்[illegible]; நம்பிமருவியிங்கணைந்தாரென்றுமுன்வந்தார்கூற = நம்பியாரூரர் அத்தருணத்தில் சமீபித்துவந்துவிட்டாரென்று முன்வந்தவர்மொழிய; ஒருவரு மழுதல் செய்யாதொழிகவென்றுரைத்தப்பின்னர் = அத்தேவியார் ஒருவரும் புலம்புதலைப்புரியாதுவிடுகவென்று புகன்றபின்பு.—எ-று.

கணவருடன் உயிர்துறந்தகற்புடைமகளிர் அக்கணவரோடுகணக்கிலாக்காலம் மேலுலகங்களில் விழைந்த[illegible]ன்பங்களை நுகரப்பெறுவரென்பது நூற்றுணிபாகலின் இவர் தேவியாரும் அங்ஙன[illegible] துணிந்தனரென்பார் "பொருவருங்கணவரோடுபோவதுபுரியுங்காலை." என்றாரெ[illegible]க. (௩௯௮)

கணவர்தஞ்செய்கைதன்னைக்கரந்துகாதலனைநம்பி
யணைவுறும்பொழுதுசாலவலங்கரித்தெதிர்போமென்னப்
புணர்நிலைவாயிற்றீபம்பூரணகும்பம்வைத்துத்
துணர்மலர்மாலைதூக்கித்தொழுதெதிர்கொள்ளச்சென்றார்.

(இ-ள்.) கணவர்தஞ்செய்கைதன்னைக்கரந்து = தம்முடைய காதலர்செயலை மறைத்து; காதலனை = விருப்புடையசிலரை (நோக்கி); சாலவலங்கரித்து நம்பியணைவுறும்பொழுதெதிர்போமென்ன = (ஈண்டு) மிகவும் அலங்கரித்து நம்பியாரூரர் சமீபிக்கும்போது எதிர்கொள்ளுமென்று பணிக்க; புணர்நிலைவாயிற்றீபம் பூரணகும்பம்வைத்து = (அவரும்) செறிந்தநிலையையுடையவாயிலில் தீபமும்பூரணகும்பமும் இருத்தி; துணர்மலர்மாலை தூக்கி = தொத்துக்களாகப் பூக்களாற்றொடுக்கப்பட்டதொடைகளைத் தொங்கவிடுத்து; தொழுதெதிர்கொள்ளச்சென்றார்=இறைஞ்சி எதிர்கொள்ளப்போந்தார்.—எ-று.

கணவனார் அமலர்பால்வைத்த அன்பின்உறைப்பால் இங்ஙனம் ஆருயிர்துறந்தாரேனும், தேவியார் தமதுஇல்லைநோக்கிப் பெரியவரணுகியவழிப் பேணாதிருத்தல் பிழைபாடெனத் தெளிந்தாராகலின், எதிர்கொண்டுபசரிக்கக் காதலனை யேவினரென்க. (௩௯௯)

செம்மைசேர்சிந்தைமாந்தர்சென்றெதிர்கொண்டுபோற்ற
நம்மையாளுடையநம்பிநகைமுகமவர்க்குநல்கி
மெய்ம்மையாம்விருப்பினோடுமேவியுட்புகுந்துமிக்க
மொய்ம்மலர்த்தவிசின்மீதுமுகமலர்ந்திருந்தபோது.

(இ-ள்.) செம்மைசேர்சிந்தைமாந்தர் சென்றெதிர்கொண்டுபோற்ற = செவ்வியசித்தத்தையுடைய அவர்போந்து எதிர்கொண்டுசேவிக்க; நம்மை யாளுடைய நம்பி=நம்மைஅடிமையாகவுடைய நம்பியாரூரர்; அவர்க்குநகைமுகநல்கி=அவர்க்கு முகமலர்ச்சியளித்தருளி; மெய்ம்மையாம்விருப்பினோடுமேவியுட்புகுந்து = உண்மைக்காதலோடும்அடைந்து மனையினுள்ளே எழுந்தருளி; மிக்கமொய்ம்மலர்த்தவிசின்மீது=மேம்பட்ட மலர்செறிந்த ஆதனத்தின்மேல்; முகமலர்ந்திருந்தபோது = திருமுகமலர்ச்சியுற்று வீற்றிருந்ததருணத்தில்.—எ-று.

கலிக்காமநாயனரைக் காணுதலில் மிக்ககாதலராகலின் "யாம்விரு ப்பினோம்" என்றும், அகத்து உவகையைப் புறத்தேதோற்றுவாராகலின் "முகமலர்ந்து" என்றும் விதந்தனரென்க. (சஙo)

பான்மையர்ச்சனைகளெல்லாம்பண்பினில்வழாமையேய்ந்த
நான்மறைதொடர்ந்தவாய்மைநம்பியாரூரர்கொண்டிங்
கியான்மிகவருந்துகின்றேனேயர்கோனார்தாமுற்ற
வூனவெஞ்சூலைநீக்கியுடனிருப்பதனுக்கென்றார்.

(இ-ள்.) பண்பினில்வழாமையேய்ந்த = முறைமையிற்றவறுதலின்மைவாய்ந்த; நான்மறை தொடர்ந்தவாய்மை நம்பியாரூரர் = நான்குவேதங்களும் குடிகொண்ட திருவாக்கையுடைய நம்பியாரூரர்; பான்மையர்ச்சனைகளெல்லாங்கொண்டு = தக்க உபசாரங்களையெல்லாம் ஏற்றுக்கொண்டு; ஏயர்கோனார் தாமுற்ற ஊனவெஞ்சூலைநீக்கி = ஏயர்கோன்கலிக்காமநாயனர்அடைந்த தீயவெவ்விய சூலையைத்தீர்த்து, உடனிருப்பதனுக்கியான்மிக வருந்துகின்றேனென்றார் = அவருடன் வசிப்பதற்கு யான் பெரிதும் துன்புறுகின்றேன் என்றார்.—எ-று.

பண்பாவது-சிவபெருமானுடைய ஆஞ்ஞாசத்தி ரூபமாய் நின்று அனைவர்க்கும் விதிவிலக்குக்களையுணர்த்தி நல்வழிப்படுத்திமேற்கதிகளும் வீடுபேறும அளிக்கும் முறைமை.வாய்மை வாக்கு. இங்கு-தாம்-அசைகள்.அவா யாண்டுளாரென்பது இசையெச்சமாய் எஞ்சிநின்றது. (சஙக)

மாதர்தமேவலாலேமனைத்தொழின் மாக்கண்மற்றிங்
கேதமொன்றில்லையுள்ளேபள்ளிகொள்கின்றாரென்னத்
தீதணைவில்லையேனுமென்மனந்தெருளாதின்ன
மாதலாலவரைக்காணவேண்டுமெனவருளிச்செய்தார்.

(இ-ள்.) மாதர்தமேவலாலே = கலிக்காமநாயனர் மனைவியாரது ஏவலால்; மனைத்தொழின்மாக்கள் = வீட்டிற்குரிய வேலைக்காரர்கள்; ஏதமொன்றில்லை = நாயனார்க்குத் தீங்குசிறிதுமில்லை; உள்ளே பள்ளிகொள்கின்றாரென்ன = உள்ளே நித்திரை செய்கின்றாரென்று உரைக்க, தீதணைவில்லையேனும் = தீங்கு அணுகுதலில்லையேனும்; இன்னமென்மனந்தெருளாது = இன்னமும் எனமனந்தெளியவில்லை; ஆதலாலவரைக் காணவேண்டுமென் றருளிச்செய்தார்; ஆகையால் அவரை நேரிற்காணவேண்டுமென்று அருளினார்—எ-று. ஏ-மற்று-இங்கு-அசைகள். (சஙஉ)

வன்றொண்டர்பின்னுங்கூறமற்றவர்தம்மைக்காட்டத்
துன்றியகுருதிசோரத்தொடர்குடர்சொரிந்துள்ளாவி
பொன்றியேகிடந்தார்தம்மைக்கண்டபின்புகுந்தவாறு
நன்றெனமொழிந்துநானுநண்ணுவேனிவர்முன்னென்பார்.

(இ-ள்.) வன்றொண்டர்பின்னுங்கூற = வன்றொண்டப்பெருமான் பின்னும்வற்புறுத்தலால்; அவர் தம்மைக்காட்ட = கலிக்காமநாயனரைக் காட்டுதலும்; துன்றிய குருதிசோர = எங்கும்பரவும்படி உதிரம்பெருகவும், தொடர்குடர்சொரிந்து = தொடர்ச்சியுள்ள குடர்கள் வெளிப்படவும்; உள்ளாவிபொன்றியேகிடந்தார் தம்மைக் கண்டபின் = அகத்திருந்த ஆவியை இழந்துகிடந்த அவரை நோக்கியவுடனே, புகுந்தவா



சுந்தரமூர்த்திசுவாமிகள் ஏயர்கோன்கலிக்காமநாயனாரைக்காண அவர் திருமாளிகைக்குட்செல்ல, அவர் செய்கையைப்பார்த்துத் த
தோழரும் அவ்வாறுயிர் நீக்க உடைவாளையெடுக்கையில் சிவபெருமான் திருவருளால் ஏயர்கோன் கலிக்காமர் உயிர்பெற்றெழுந்
மூர்த்திசுவாமிகள் திருக்கரத்திலுள்ள உடைவாளைப்பற்றிக்கொள்ளச் சுந்தரர் கலிக்காமரைப்பணியக் கலிக்காமரும் வன்றொண்
[illegible] இ வரும் நண்புள்ளவராயிருந்தது.

ஆநன்றென மொழிந்து = இவர்க்குநேர்ந்த இச்செய்கை நன்றென்று இசைத்து; நானுநன்னுவேனிவர்முன்பென்பார் = யானும் இவர்முன் (இச்செய்கையை) எய்துவேன் என்பாராய்.—எ-று. (சூ0௬)

கூறலால் என்பது கூறவெனவும், சொரியவென்பது சொரிந்தெனவுந் திரிந்து நின்றன. மற்று-அசை. நன்றிய-வினையெச்சம். புகுந்தவாறென்பது பின்னுங் கூட்டப்பட்டது. என்பார்-முற்றெச்சம்.

கோளுறுமனத்தராகிக்குற்றுடைவாளைப்பற்ற
வாளுடைத்தம்பிரானாரருளினாலவருமுய்ந்து
கேளிரேயாகிக்கெட்டேனெனவிரைந்தெழுந்துகையில
வாளினைப்பிடித்துக்கொள்ளவன்றொண்டர்வணங்கிவீழ்ந்தார்.

(இ-ள்.) கோளுறு மனத்தராகி=வலிமையுற்ற மனத்தையுடையராகி; குற்றுடை வாளைப்பற்ற=அவர்குத்திக்கொண்ட உடைவாளைவாங்க (அப்பொழுது); ஆளுடைத்தம்பிரானா ரருளினாலவருமுய்ந்து=ஆட்கொண்டபெருமானுடைய திருவருளினாலவரும்பிழைத்து; கேளிரேயாகி=நட்புடையவரேயாகி; கெட்டேனெனவிரைந்தெழுந்து=என்னஅபசாரம் இயற்றினேனென்றுசீக்கிரமெழுந்து; கையில்வாளினைப்பிடித்துக்கொள்ள=கரத்திற்பற்றியவாளைப்பிடித்துக்கொள்ளவன்றொண்டர்வணங்கி வீழ்ந்தார்=நம்பியாரூரர்வீழ்ந்து நமஸ்கரித்தார்.—எ-று. (சூ0௭)

குற்றுதல் - குத்துதல்.* "நெற்குறுபாட்டொலி பரக்கும்" என மேற்போந்தமையானுமுணர்க. எகாரம்-தேற்றம். கெட்டேனென்பது ஈண்டுஅபசாரமுடையேனென்னும் பொருட்கண்வந்தது.

மற்றவர்வணங்கிவீழவாளினைமாற்றியேயர்
கொற்றவனுருநம்பிகுளாகழல்பணிந்துவீழ்ந்தா
ரற்றைநாணிகழ்ந்தவிந்தவதிசயங்கண்டுவானோர்
பொற்றடமலரின்மாரிபொழிந்தனர்புவனம்போற்ற.

(இ-ள்.) அவர்வணங்கிவீழ = அவர்விழுந்துநமஸ்கரித்தலும்; ஏயர்கொற்றவனும்வாளினைமாற்றி = ஏயர்கோன்கலிக்காமநாயனாரும் வாளைநீக்கிவிட்டு; நம்பிகுளாகழல்பணிந்துவீழ்ந்தார்=நம்பியாரூரரது ஒலிக்கும் வீரக்கழலையணிந்ததிருவடிகளில் வீழ்ந்துபணிந்தார்; அற்றைநாணிகழ்ந்தவிந்தவதிசயங்கண்டு = அன்று உண்டாகிய இந்தஆச்சரியத்தைநோக்கி; புவனம்போற்ற = இவ்வுலகிலுள்ளோரனைவரும் இறைஞ்ச; வானோர்பொற்றடமலரின் மாரிபொழிந்தனர்=தேவர்களும் சிறந்தபொன்மலர்மழையைப்பொழிந்தார்கள்.—எ-று.

மற்று-அசை. கழல் - வீரக்கழல்; இது திருவடியையுணர்த்தலின் தானியாகுபெயர். நம்பியாரூரர் நரசிங்கமுனையரையர்க்கு அபிமானபுத்திரராக அமர்ந்திருந்தமையால் அரசசின்னங்களும் உடையராகலின், வீரக்கழலும் உண்டெனக்கொள்க. குளாகழல் - சீர்த்திபெற்ற திருவடியெனினும் அமையும். (சூ0௫)

இருவருமெழுந்துபுல்லியிடைவிடாநண்பினாலே
பொருவருமகிழ்ச்சிபொங்கத்திருப்புன்கூர்ப்புனிதர்பாத

---

* திருநாளைப்போவார்நாயனார்புராணம்.

மருவினர்போற்றிநின்றுவன்றொண்டர்தம்பிரானா
ரருளினைநினைந்தேயந்தணாளனென்றெடுத்துப்பாடி.

(இ-ள்.) இருவருமெழுந்துபுல்லி = நாயன்மார்களிருவருமெழுந்து ஒருவரையொருவர் தழுவிக்கொண்டு, இடைவிடா நண்பினாலே = நீக்கமில்லாதநட்பினால்; பொருவருமகிழ்ச்சிபொங்க = ஒப்பற்றஉவகை ஓங்கிவளர, திருப்புன்கூர்ப்புனிதர் பாதமருவினர் = திருப்புன்கூர்ப் பெருமான்சந்நிதியையடைந்தனர்; வன்றொண்டர் போற்றிநின்று = (அவருள்) நம்பியாரூரர்வணங்கிநின்று; தம்பிரானாரருளினைநினைந்து = அப்பெருமானுடைய திருவருளின்றிறத்தைச் சிந்தித்து; அந்தணாளனென்றெடுத்துப்பாடி = "அந்தணாளன்" என்றுதொடங்கித்திருப்பதிகம்பாடி.—எ-று.

திருப்புன்கூர்-பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

அந்தணாளனுன்னடைக்கலம்புகுதவவனைக்காப்பதுகாரணமாக
வந்தகாலன்றனாருயிரதனைவவ்வினாய்க்குன்றன்வண்மைகண்டடியே
னெந்தைநீயெனைநமன்றமர்நலியிலிவன்மற்றென்னடியானெனவிலக்குஞ்
சிந்தையால்வந்துன்றிருவடியடைந்தேன்செழும்பொழிற்றிருப்புன்கூரு
[ளானே.

கம்பமால்களிற்றின்னுரியானைக்காமற்காய்ந்ததோர்கண்ணுடையானைச்
செம்பொனேயொக்குந்திருவுருவானைச்செழும்பொழிற்றிருப்புன்கூருளா
யும்பராளியையுமையவள்கோனையூரன்வன்றொண்டனுள்ளத்தாலுகந் [னை
தன்பினாற்சொன்னவருந்தமிழைந்தோடைந்தும்வல்லவாருவினையிலரே.

திருச்சிற்றம்பலம்.

சிலபகல்கழிந்தபின்புதிருமுனைப்பாடிநாடர்
மலர்புகழ்த்திருவாரூரின்மகிழ்ந்துடன்வந்தவேயா
குலமுதற்றலைவனாருங்கூடவேகுளிர்பூங்கோயி
னிலவினார்தமமைக்கும்பிட்டுறைந்தனர்நிறைந்தான்பால்.

(இ-ள்.) சிலபகல்கழிந்தபின்பு திருமுனைப்பாடிநாடர் = சிலநாள் அகன்றபின் நம்பியாரூரர், மலர்புகழ்த்திருவாரூரில் = பரந்தகீர்த்தியையுடைய திருவாரூரிலே மகிழ்ந்துடன்வந்தவேயர்குலமுதற்றலைவனாருங்கூட = மகிழ்ச்சியுடையராய் உடன்தொடர்ந்த ஏயர்கோன்நாயனாரும் பிரியாதிருக்க; குளிர்பூங்கோயினிலவினார்தம்மைக்கும்பிட்டு = குளிர்மைவாய்ந்த கமலாலயத்தில் வீற்றிருக்கும் கடவுளைவணங்கிக்கொண்டு; நிறைந்தநண்பாலுறைந்தனர் = நிறைவுற்றநட்பினால் வசித்தார்.—எ-று.

ஏ-அசை. (௪0எ)

அங்கினிதமர்ந்துநம்பியருளினால்மீண்டும்போந்து
பொங்கியதிருவின்மிக்கதம்பதிபுகுந்துபொற்பிற்
றங்குநாளேயர்கோனார்தமக்கேற்றதொண்டுசெய்தே
செங்கண்மால்விடையார்பாதஞ்சேர்ந்தனர்சிறப்பினோடும்.

(இ-ள்.) ஏயர்கோனாரங்கினிதமர்ந்து = ஏயர்கோனயனார் சிலநாள் அத்தலத்திலே இனிதாகவசித்து, நம்பியருளினால்மீண்டும்போந்து = வன்றொண்டப் பெரு

மானருளினல்விடைபெற்று மீட்டும்வந்து; மொங்கியதிருவின்மிக்கதம்பதிபுகுந்து = தழைந்தசெல்வத்தின்மிக்க தமதுநகரத்தையடைந்து; பொற்பிற்றங்குநாடமக்கேற்ற தொண்டுசெய்து = மேன்மையோடுவசிக்கும்நாளில் தமக்கிசைந்த தொண்டுகளை இயற்றி; செங்கண்மால்விடையார்பாதஞ் சிறப்பினேடுஞ் சேர்ந்தனர் = திருமாலை இடபவாகனமாகக்கொண்ட சிவபிரானுடையதிருவடிநீழலைச் சிறப்போடும் அடைந்தார்.—எ-று. ஏ-அசை. (சo அ)

சிறப்பாவது திருவடிநீழலைச் சேர்ந்தார்க்குரியபேரின்பநுகர்ச்சிமுதலியவை.

நள்ளிருளையனைத்தூதுவிட்டவர்க்கேநண்பாம்
வள்ளலாரேயர்கோனார்மலரடிவணங்கிப்புக்கே
னுள்ளுணர்வானஞானமுதலியவொருநான்குண்மை
தெள்ளுதீந்தமிழாற்கூறுந்திருமூலர்பெருமைசெப்ப.

(இ-ள்) நள்ளிருளையனைத்தூதுவிட்டவர்க்கேநண்பாம் = அர்த்தராத்திரியிலே அமலனைத்தூதுவிடுத்த சுந்தரமூர்த்திநாயனாருக்கேநட்பாகிய; வள்ளலார்ஏயர்கோனார் = ஏயர்கோன்கலிக்காமநாயனாரென்னும் இறைவருடைய; மலரடிவணங்கி = திருவடித்தாமரைகளைச்சேவித்து; உள்ளுணர்வானஞானமுதலிய வொருநான்குண்மை = உள்ளுணர்ச்சியாகிய சிவஞானமுதலாகிய நாற்பாதங்களின் நிலைமைகளை; தெள்ளுதீந்தமிழாற்கூறும் = தெளிந்த இனிய தமிழாலருளிச்செய்த; திருமூலர்பெருமைசெப்பப்புக்கேன் = திருமூலநாயனாருடைய மேன்மையை விளம்பத்துணிந்தேன்.—எ-று.

ஏகாரம் - உயர்த்தற்கண்வந்தபிரிநிலை. ஞானமென்பது சரியைகிரியையோகங்களால் விர்த்திப்படுதேயாயினும் உள்ளுணர்ச்சியில்லாவழி ஒன்றும் இயற்றலாகாமையின் அச்சரியையாதிகளைஇயற்றுதற்குந் தான்சாதனமாதலும், வீட்டிற்கு அவைபோலப் பரம்பரையானன்றி நேரேயேதுவாதலுமுடைமையின், அச்சிறப்புநோக்கிச் சாத்தியமுறையால் "ஞானமாதி" என ஞானத்தைமுற்கூறினார். ஒரு-அசை. நான்கென்புழி ஆறனுருபுவிரிக்க. ஞானமுதலியவற்றின் உண்மையை ஐயமறத்தெளியுமாறு செவ்விய இனிய தமிழ்ச்செய்யுளால் அருளினரென்பார் "தெள்ளுதீந்தமிழாற் கூறுந் திருமூலர்"என்றாரென்க. வணங்கிச் செப்பப்புக்கேனென இயையும். (சoக)

ஏயர்கோன்கலிக்காமநாயனார்புராணம் முற்றிற்று.

ஆகததிருவிருத்தம் - ௩oக.

திருச்சிற்றம்பலம்.

# திருமூலநாயனார்புராணம்.

அந்தியிளம்பிறைக்கண்ணியண்ணலார்கயிலையினின்
முந்தைநிகழ்கோயிலுக்குமுதற்பெருநாயகமாகி
யிந்திரன்மாலயன்முதலாமிமையவர்க்குநெறியருளு
நந்திதிருவருள்பெற்றநான்மறையோகிகளொருவர்.

(இ-ள்.) அந்தியிளம்பிறைக்கண்ணி = அந்தியிற்றோன்றும் இளந்திங்களாகிய அரும்பைச்சூடிய; அண்ணலார்கயிலையினில் =சிவபெருமான்வீற்றிருக்கும் திரு

க்கயிலையில் ; முந்தைநிகழ்கோயிலுக்குமுதற்பெருநாயகமாகி = முந்தியவாயிலுக்கு முதற்பெருந்தலைவராகி; இந்திரன்மாலயன்முதலாமிமையவர்க்கும் = தேவேந்திரன் திருமால் பிரமதேவர்முதலியதேவர்கட்கும்; நெறியருளுநந்திதிருவருள்பெற்ற=சகல நெறிகளையுந்தந்தளிக்கும் திருநந்திதேவருடையதிருவருள்பெற்ற; நான்மறையோகிக ளொருவர் = நான்குவேதங்களையும் உணர்ந்த சிவயோகியார் ஒருவர்.—எ-று.

முந்தைநிகழ்கோயில் - தொன்றுதொட்ட ஆலயமுமாம். முதற்பெருங்காவ லில்இருந்துகொண்டு, முதல்வர்பால் வேதசிவாகமாதிகளை ஐயந்திரிபற ஓதியுணர்ந்து ஆசிரியத்தன்மையுடையராய், அனைவர்க்கும் அனுக்கிரகித்தலின், "இமையவர்க்கு நெறியருளுநந்தி" என்றார். உம்மை - உயர்வுசிறப்பு. எச்சவும்மையாக்கி ஏனைமுனி வராதியர்க்கும்நெறியருளுநந்திஎன்னலுமொன்று. இச்சிவயோகியார்மிகுசிறப்புடை யரொன்பார் "நந்திதிருவருள்பெற்ற நான்மறையோகிகள்" எனநவின்றாரென்க. (க)

மற்றவர்தாமணிமாதிவருஞ்சித்திபெற்றுடையார்,
கொற்றவனார்திருக்கயிலைமலை நின்றுங்குறுமுனிபா
லுற்றதொருகேண்மையினாலுடன்சிலநாளுறைவதற்கு
நற்றமிழின்பொதியமலைநண்ணுதற்குவழிக்கொண்டார்.

(இ-ள்.) அணிமாதிவருஞ்சித்திபெற்றுடையார்=அணிமாமுதலியவாகக்கூறும் அட்டசித்திகளையும்பெற்றுள்ளவர்; அவர்=(அத்தகைமையையுடைய) அச்சிவயோகி யார்; குறுமுனிபாலுற்றதொருகேண்மையினால்=அகத்திய மகாமுனிவர்பாற்பொருந் தியதாகிய மிக்கநட்பினால்; உடன்சிலநாளுறைவதற்கு = அவருடன்சிலநாள்வசிப்ப தன்பொருட்டு; நற்றமிழின்பொதியமலைநண்ணுதற்கு = நல்லதமிழ்வளரும்பொதிய மலையைச்சார்தற்கு; கொற்றவனார்திருக்கயிலைமலைநின்றும்வழிக்கொண்டார் = சிவ பெருமான்அமரும் திருக்கயிலைமலையினின்றும் புறப்பட்டார்.—எ-று. மற்று - தாம் - அசைகள்.

அணிமா ஆதிஎன்பது அணிமாதியெனத்தீர்க்கசந்தியாயிற்று. அவை - அணி மா, மகிமா, லகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்என் பவை. இவற்றுள், அணுவினும் நுண்ணிய உருவங்கொள்வது அணிமா; எவ்வகைத் தத்துவங்களினும் உள்ளும்புறம்பும் அசலாது உறைந்துநிற்பது மகிமா; மேருவின் பாரம்போன்றிருந்தும் பிறரெடுக்குங்கால் லகுவாகிய பரமாணுப்போல்வது லகிமா; பரமாணுப்போன்றிருந்தும் பிறரெடுக்குங்கால் மேருவைப்போற்கனப்பது கரிமா; எவ் வுலகங்களினும்செல்லும் ஆற்றலோடு எவ்வளங்களும் எய்தப்பெறுவது பிராத்தி; இச் சித்தபோகமனைத்தும் இருந்துழிவரநுகர்வது பிராகாமியம்; ஈசனைப்போல முத்தொ ழில்களையும் இயற்றி, எவரும்பணிகேட்பத்திகழ்வது ஈசத்துவம்; எவ்வுயிருந் தன்வச மாகப்பெறுவது வசித்துவம் ஆம். ஏனைப்பாஷைகள் எட்டுணையுநிகராத ஆரியமுந் தமிழும் சிவபெருமானால் முற்பிற்பாடின்றி அம்பிகைக்கு உடனுணர்த்தப்பட்ட பாஷைகளேயாயினும், ஆரியத்தினும் தமிழ் இறைவனை எளிதினுணர உணர்த் துவதென்பார் நற்றமிழென்றார். இதனை "ஆரியமுந்தமிழும்முடனேசொல்லிக்-காரி கையார்க்குங்கருணைசெய்தானே" எனத் தெரித்துணர்த்திய ஆசிரியர் திருமூலநாய னார் மீட்டும், "தமிழ்ச்சொலவடசொல்லெனுமிவ்விரண்டு - முணர்த்துமவனையுணர லுமாமே" எனத் தமிழை முற்படுத்து வற்புறுத்தியதுபற்றியுமுணர்க. (உ)

மன்னுதிருக்கேதாரமவழிபட்டுமாமுனிவர்
பன்னுபுகழ்ப்பசுபதிநேபாளத்தைப்பணிந்தேத்தித்
துன்னுசடைச்சங்கரனேற்றதூநீர்க்கங்கை
யன்னமலியகன்றுறைநீரருங்கரையின்மருங்கணைந்தார்.

(இ-ள்.) மன்னு திருக்கேதாரம் வழிபட்டு = நிலைபெற்ற திருக்கேதாரத்தை வணங்கிக்கொண்டு; மாமுனிவர் பன்னுபுகழ் = சிறப்புவாய்ந்தமுனிவர்களால் துதி பெற்ற சீர்த்தியையுடைய; பசுபதிநேபாளத்தைப்பணிந்தேத்தி = பசுபதிநாதரமரும் நேபாளமென்னுந்தலத்தைப்பணிந்து துதித்து; துன்னுசடைச்சங்கரனேற்ற= செறிந்தசடைமுடியிலே சிவபெருமான் ஏற்றருளிய; தூநீர்க்கங்கை=சுத்தமாகிய நீர நிரம்பிய கங்காநதியினது; அன்னமலியகனீர்த்துறை=அன்னங்கள்அமர்ந்த அகன்ற நீர்த்துறைகளையுடைய; அருங்கரையின்மருங்கணைந்தார் = அரியகரையின் அருகே அணுகினார். எ-று.

கங்கைக்கரையென இயையும்.

கபிலமுனிவர் பார்வையால் நீறாகியசகரர் நற்கதிபெறுமாறு வசிட்டமுனிவ ரருளியவாறே பகீரதமன்னவன் பிரமதேவனைக்குறித்துப் பதினாயிரவருடம்பெருந்த வம்புரிந்தவழி, அவர்தோன்றி, மாண்டவர்களுடைய உடலெலும்பிலே தேவகங்கை வந்துதோயின் அவர்நற்கதிபெறுவர்; அக்கங்கைவரின் அதன்வேகத்தைத்தாங்கவல் லவர் சிவபெருமானொருவரேயாகலின் அவனைக்குறித்து அருந்தவம்இயற்றுக என்று அகல; அங்ஙனமே பெருமானைக்குறித்துப் பதினாயிரவருடமும் கங்கையைக்குறித்து ஐயாயிரவருடமும் தவம்புரிந்தும் திருவருள்பெறாமையின், மீட்டும், இரண்டாயிரத் தைந்நூறுவருடம் புரிந்து பெருமான் திருவருள்பெற்று, பின்னரும் இரண்டாயிரத் தைந்நூறுவருடம் கடுந்தவம்புரிந்தனன். அப்போது கங்கை பிரமாதிபதம்நடுங்கத் தோன்றலும், பெருமான்பிரசன்னராகி, அதனை ஒரு சடையிற்கரந்து, ஒருசிறிது விடு த்தகங்கையே இதுவாகலின், "சடையேற்றதூநீர்க்கங்கை" என்றார். ஏற்றலென் பது அதன்காரியமாகிய விடுத்தலையுமுணர்த்திநின்றது　　　(௩)

கங்கைநீடுறையாடிக்கருத்துறைநீள்கடலேற்று
மங்கணர்தாமகிழ்ந்தருளுமவிமுத்தம்பணிந்தேத்தி
மங்குல்வளர்வரைவிந்தமன்னுபருப்பதமிறைஞ்சித்
திங்களணிசடையர்திருக்காளத்திமலைசேர்ந்தார்.

(இ-ள்.) கங்கைநீடுறையாடி = சங்காநதியில் மணிகர்ணிகைத்துறையில் ஸ்நானஞ்செய்து; கருத்துறைநீள்கடலேற்றும் = பலபேதமாகிய பிறவியென்னும்பெ ருங்கடலைக் கடப்பிக்கின்ற; அங்கணர்மகிழ்ந்தருளும் = அருட்கண்ணராகிய பெரு மான் அமர்ந்தருளும்; அவிமுத்தம்பணிந்தேத்தி = காசியெனனும் தலத்தைவணங் கித்துதித்து; மங்குல்வளர்வரைவிந்தம் =மேகங்கள்படியும் விந்தமலையோடு; மன்னு பருப்பதமிறைஞ்சி=தொடர்புள்ள திருப்பருப்பதமென்னுந்தலத்தைவணங்கி; திங்க ளணிசடையர்திருக்காளத்திமலைசேர்ந்தார் = சந்திரனைச்சூடிய சடைமுடிக்கடவுள் வீற்றிருக்கும் திருக்காளத்திமலையைச்சார்ந்தார். எ-று.

விசுவநாதர்சந்நிதிக்கெதிரிலே விளங்குவது மணிகர்ணிகைத்துறையேயாக வின் "நீள்துறை" என்பது குறிப்பால் அதனையுணர்த்திற்று. காரணகாரியத்தொட

ர்ச்சியாய்க் கரையின்றிவருதலின் பிறவியை "நீள்கடல்" என்றும், தன்பாலணுகி இறந்தார்க்கு அத்தகையபிறவிக்கடலை எளிதிற்கடப்பிப்பதாகலின் "கருக்கடலேற்று மவிமுத்தம்" என்றும் கூறினார். அவிமுத்தம் என்பதில் முத்தம்-விடுகை; விமுத்தம்-மிகவும்விடுகை; அவிமுத்தம்-மிகவும் விடவேண்டியகாலத்தும் விடாமையெனக் கொள்க. இதில் அகரம் எதிர்மறை. முன்னொருகாலத்திலே, திவோதாஸன் அருந் தவமியற்றிப் பிரமதேவரால் காசியையாளும் அரசுரிமைபெற்றவழி, அத்தலத்திலே தேவர்வாசமில்லாதிருக்கும்படி வரமேற்று ஆண்டுகொண்டிருக்க; சிவபிரான் அவ் வரம்பொய்க்காவண்ணம் தாம் மந்தரமலையையடைய உத்தேசித்தகாலத்தும் அரு வுருவாகவீற்றிருந்தருளினராகலின், அவிமுத்தமெனப்பெயர்பெற்றதென்பது அத் தலமான்மியம். தாம்-அசை. (ச)

நீடுதிருக்காளத்திநிலவுதாணுவைவணங்கி
யாடுதிருவரங்கானவாலவனந்தொழுதேத்தித்
தேடுமிருவர்க்கரியார்திருவேகாம்பரப்பணிந்து
மாடுயர்மாமணிக்காஞ்சிவளநகருள்வைகினார்.

(இ-ள்.) நீடுதிருக்காளத்திநிலவுதாணுவைவணங்கி = மேன்மைபெற்ற திருக் காளத்தியில் வீற்றிருக்கும்பெருமானைப் பணிந்து; ஆடுதிருவரங்கான=பரமர்நடித் தருளும் பஞ்சசபைகளுள் ஒன்றாகிய இரத்தின சபையையுடைய; ஆலவனந்தொழு தேத்தி=திருவாலங்காட்டை வணங்கித்துதித்து; தேடுமிருவர்க்கரியார்=அடிமுடி தேடிய திருமாலுக்கும் பிரமதேவர்க்கும் காணுதற்கரிய அண்ணலாரமரும்; திருவே காம்பரம்பணிந்து=திருவேகாம்பரமென்னும் தலத்தைவணங்கி; மாடுயர்மாமதிற் காஞ்சிவளநகருள் வைகினார் = பக்கங்களில்ஓங்கிய பருத்தமதிலையுடைய வளம்பெ ற்றகாஞ்சிநகரத்திலே வசித்தருளினார். எ-று.

சிதம்பரத்திலுள்ளகனகசபையும் திருவாலவாயிலிலுள்ள இரசதசபையும் திரு நெல்வேலியிலுள்ளதாமிரசபையும் திருக்குற்றாலத்திலுள்ளசித்திரசபையும் ஆகிய நான்கனோடு இவ்விரத்தினசபையும் ஒன்றாகலின் "ஆடுதிருவரங்கான ஆலவனம்" என்றார். திருவேகாம்பரம்-திருக்காஞ்சியில் சிவபிரானமரும் திருஆலயம். அது, யா வும் அழியும் அக்காலத்தும் அழிவின்றி வேதரூபமாய்த்தனித்துள்ள ஆம்பரத்தை யுடைமையால், ஏகாம்பரமெனப்பெயர்பெற்றது. ஆம்பரம்=மாமரம், ஏக ஆம்பரம் ஏகாம்பரமென்றாயது தீர்க்கசந்தி. (ரு)

நற்பதியங்கமர்யோகமுனிவர்களைநயந்துபோய்க்
கற்புரிசைத்திருவதிகைத்தலத்திறைஞ்சிக்கறைக்கண்ட
ரற்புதக்கூத்தாடுகின்றவம்பலஞ்சூழ்திருவீதிப்
பொற்பதியாம்பெரும்பற்றப்புலியூரில்வந்தணைந்தார்.

(இ-ள்.) நற்பதியங்கமர்யோகமுனிவர்களைநயந்துபோய்=சிறந்த அத்தலத்தி லே தங்கிய சிவயோகமுதிர்ச்சிபெற்ற முனிவர்களை வியந்துநீங்கி; கற்புரிசைத்திரு வதிகைதலந்திறைஞ்சி=கற்களாலமைந்தமதில்களையுடையதிருவதிகையைச்சேர்ந்து வணங்கி; கறைக்கண்டரற்புதக்கூத்தாடுகின்ற=காளகண்டத்தையுடைய கடவுள் ஆனந்தநடனம்புரியும்; அம்பலஞ்சூழ்திருவீதி=சிற்சபையைச்சூழ்ந்த திருவீதிகளையு டைய; பொற்பதியாம்பெரும்பற்றப்புலியூரில்வந்தணைந்தார்=பொன்மயமாக விளங் கும் பதியாகிய சிதம்பரத்திலே போயணுகினார்.—எ-று.

தரிசிக்கும் அன்புடையார்கட்குத் தற்போதமொழித்து அதியற்புத ஆனந்தத்தைவிளைத்தலின் "அற்புதக்கூத்து" என்றும், இரணியமயகோசமெனப் பெயர்பெற்றுவிளங்கலின் "பொற்பதி" என்றும், ஏனைப்பற்றுக்களையெல்லாம் ஒழித்தாரையும் தரிசனமாத்திரத்தாற் றன்வயமாக்கித் தன்னைவிட்டகலாதபடி பெரும்பற்றை விளைத்து நிற்றலின், "பெரும்பற்றப்புலியூர்" என்றும் விதந்தனர். பெரும்பற்றப்புலியூரென்பதில் அகரம் சாரியை. அற்புதக்கூத்தாதலை, "விம்மும் வெருவும் விழுமெழு மெய்சோரும்-தம்மையுந் தாமறி யார்கள் சதுர்கெடுஞ்- செம்மை சிறந்த திருவம் பலக்கூத்து-எம்மலர்ப் பொற்பாதத் தன்புவைப் பார்கட்கே." என இந்நாயனார் கண்டனுபவித்தருளிய திருமந்திரத்தானுமுணர்க. (௬)

எவ்வுலகுமுய்யவெடுத்தருளியசேவடியாரைச்
செவ்வியவன்புறவணங்கிச்சிந்தைகளிவரத்திளைத்து
வவ்வியமெய்யுணர்வின்கண்வருமானந்தக்கூத்தை
யவ்வியல்பிற்கும்பிட்டங்காராமையமர்ந்திருந்தார்.

(இ-ள்.) எவ்வுலகுமுய்யவெடுத்தருளியசேவடியாரை=எவ்வுலகரும் ஈடேறத்தூக்கியருளிய சிவந்த திருவடியையுடைய சிற்சபாநாயகரை; செவ்வியவன்புறவணங்கி = இடையறுப்பேரன்பாற்பணிந்து; சிந்தைகளிவரத்திளைத்து= சித்தத்திலே உவகை மிகப் பரவசப்பட்டு; வவ்வியமெய்யுணர்வின்கண்வருமானந்தக்கூத்தை=சாதனத்தாற் பெறப்பட்ட தத்துவஞானத்தின்கண்ணே வெளிப்படும் ஆனந்தநடனத்தை; அவ்வியல்பிற்கும்பிட்டு=அகத்தேவணங்குமாறுபோலப் புறத்தும்வணங்கி அங்காராமையமர்ந்திருந்தார் = யாதொன்றினும் பற்றின்றி அத்தலத்திலேயே விருப்புற்று வசித்திருந்தார்.—எ-று.

இத்திருக்கூத்து தேவர்முதலிய யாவருஞ் சேவித்துக் கதிபெறுதற்பொருட்டே செய்தருளுவதென்பார், "எவ்வுலகுமுய்யவெடுத்தருளியசேவடியார்" என்றும், தரிசனமாத்திரத்தால் ஒவ்வொருவர்சித்தத்தையும் சிவானந்தப்பெருக்கின் மூழ்குவித்து ஒன்றுந்தோனறுவண்ணம் உன்மத்தர்போல உறுவிப்பதென்பார், "சிந்தைகளிவரத்திளைத்து" என்றும் கூறினர். ஆராமையாவது-யாதொன்றினுஞ் சித்தஞ்செல்லாமை. எவ்வுலகுமுய்யவென்பதனை "அண்டத்திற் றேவர்களப்பாலைத் தேவர்க-ளெண்டிசை சூழ்புவிக்குள்ளுள்ள தேவர்கள்-புண்டரி கப்பதப் பொன்னம் பலக்கூத்துக்-கண்டுசேவித்துக் கதிபெறு வார்களே." எனவும், உன்மத்தர்போல்வதை "திண்டாடிவீழ்கை சிவானந்த மாமது-வுண்டார்க் குணர்வுண்டா முன்மத்தஞ் சித்திக்குங்-கொண்டாடு மன்றுட் குனிக்குந் திருக்கூத்துக்-கண்டார் வருங்குணங் கேட்டார்க்குமொக்குமே." எனவும், அகத்தேதோன்றுவதை "ஆடிய காலு மதிற்சிலம் போசையும்-பாடிய பாட்டும் பலவான நட்டமுங்-கூடிய கோலங் குருபரன் கொண்டாடத்-தேடியுளேகண்டு தீர்ந்தற்ற வாறே." எனவும், ஆராமையடைதலை, "தேட்டறுஞ் சிந்தை திகைப்பறும் பிண்டத்துள்-வாட்டறுங் கால்புந்தி யாகி வரும்புல-னோட்டறு மாசையறுமுளத் தானந்த - நாட்ட முறுக்குறு நாடகங் காணவே." எனவுமருளிய திருமந்திரங்களானுந் தெளிக. (௭)

நாடுநிலைமாளிகைப்புலியூர்நன்னி லுறைந்திறைஞ்சிப்போ
யடல்விடையின்மேல்வருவாரமுதுசெயவஞ்சாதே
விடமளித்ததெனக்கருதிமேதினிக்குவளர்நிறைத்தே
கடல்வயிறுநிறையாததாவிரியின்கரையணைந்தார்.

(இ-ள்.) தடநிலைமாளிகைப் புலியூர்தன்னிலுறைந்து = மலைபோலும் அடுக்கமைந்த மாடங்களையுடைய சிதம்பரத்திலேவசித்து; இறைஞ்சிப்போய் = ஆனந்தநடேசனைவணங்கி அங்ககன்று; அடல்விடையின் மேல்வருவார் அமுதுசெய = வெற்றிபெற்றவிடையில் இவர்ந்தருளும் விமலர் திருவமுதுசெய்யுமாறு; அஞ்சாதேவிடமளித்ததெனக்கருதி = கடலானது அச்சமின்றி நஞ்சையளித்ததென்று சிந்தித்து; மேதினிக்குவளநிறைத்து = பூமிக்குவேண்டும்வளங்களைப் பொலிவித்து; கடல்வயிறுநிறையாத காவிரியின்கரையணைந்தார் = அக்கடலினது அகட்டை நிரப்பாத காவிரி நதியின்தீரத்தை யடைந்தார்.—எ-று.

ஏகாரங்களிரண்டும் அசைகள்.

காவிரிநதி சோணாடு முழுமையும் பரம்பி மேதினிக்கு வேண்டும் வளங்களை விளைவித்துக்கொடுப்பதேயன்றி ஏனைநதிகள்போலக் கடலிற்புக்கு வீண்படுதலின்றென்பார், "விடையின்மேல்வருவார்க்கு விடமளித்ததெனக்கருதி மேதினிக்குவளநிறைத்துக் கடல் வயிறுநிறையாத காவிரி" எனக் கடலை நிறையாமைக்கு ஒரு ஏதுகற்பித்து விசேடித்தார். (அ)

காவிரிநீர்ப்பெருந்தீர்த்தங்கலந்தாடிக்கடந்தேறி
யாவினருங்கன்றுறையுமாவடுதண்டுறையணைந்து
சேவில்வரும்பசுபதியார்திகழ்கோயில்வலம்வந்து
மேவுபெருங்காதலினாற்பணிந்தங்குவிருப்புறுவார்.

(இ-ள்.) காவிரிநீர்ப் பெருந்தீர்த்தங் கலந்தாடி = காவிரிநதியினது பெருமைபெற்ற தீர்த்தத்தையடைந்துமூழ்கி; கடந்தேறி = அதைக்கடந்து சென்று; ஆவினருங்கன்றுறையு மாவடுதண்டுறையணைந்து = ஆனினங்களோடு அரியகன்றுகளுங்குடிகொண்ட தண்ணிய திருவாவடுதுறையைச் சார்ந்து; சேவில்வரும் பசுபதியார் திகழ்கோயில்வலம்வந்து = இடபவாகனத்தி லாரோகணித்து எழுந்தருளும் பசுபதிநாதரமரும் திருவாலயத்தை வலமாகவந்து; மேவுபெருங்காதலினாற் பணிந்தங்கு விருப்புறுவார் = அமைவுற்ற மிக்க ஆர்வத்தினால்வணங்கி அத்தலத்திலே விருப்பங்கொண்டவராயினர்.—எ-று.

பரமர் தமதுகட்டளைப்படி அம்பிகை பசுவுருக்கொண்டு வழிபட அவ்வுருவை அகற்றியருளிப் பசுபதியெனப் பெயர்பெற்றுவிளங்கலின் பசுபதியாரென்றார். ஆவடுதுறை என்பதற்கு ஆ அட்டதுறையெனப் பொருள்கொள்க. ஆ-பசுத்துவம். ஆவடுதுறை கோகழி கோமுத்தி என்பன ஒருபொருட் சொற்கள். (கூ)

அந்நிலைமைத்தானத்தையகலாததொருகருத்து
முன்னியெழுங்குறிப்பினான்மூளுமாதரவெய்தப்
பின்னுமகன்றேகுவார்பேணவருங்கோக்குலங்கள்
பொன்னிநதிக்கரைப்புறவிற்புலம்புவனவெதிர்கண்டார்.

(இ-ள்.) அந்நிலைமைத்தானத்தை யகலாததொருகருத்து = அத்தகைமை வாய்ந்த தலத்தை அகலாது வசிப்பதொருசிந்தனை; முன்னியெழுங் குறிப்பினால் = சிந்தித்தலால் ஓங்கியஒருமையால்; மூளுமாதரவெய்த = மேலும்மேலும் அதிகரிக்கும் விருப்பம் உண்டாகவும்; பின்னுமகன்றேகுவார் = பின்னரும் அங்கு நீங்கிச் செல்பவர்; பேணவருங்கோக்குலங்கள் = மேய்த்தற்பொருட்டுக் கொண்டுவரப்பட்ட பசுக்கூ

ட்டங்கள்; பொன்னிநதிக்கரைப்புறவில்=காவிரிநதியின் கரையிலுள்ள காட்டிலே; புலம்புவனவெதிர்கண்டார் = கதறிநிற்றலை நேரே நோக்கினர்.—எ-று.

ஏகுவாரெதிர்கண்டாரென இயையும். முன்னலால் என்பது முன்னி யென த்திரிந்தது. பேணலரும் என்பது பாடமேல் பேணுதலில்லாத என்க. அருமை இன் மைப்பொருள்பயத்தலை "அருங்கேடன்" என்னுந்திருக்குறளானுமுணர்க. பேணிய வன்இறந்தமையின் அவன்பேணிய அருமைநோக்கிப் பெரிதும்புலம்பின என்பது.

அந்தணர்தஞ்சாத்தனூராமேய்ப்பார்குடித்தோன்றி
முந்தைமுறைநிரைமேய்ப்பான்மூலனெனும்பெயருடையான்
வந்துதனிமேய்க்கின்றான்வினைமாளவாழ்நாளை
வெந்தொழில்வன்கூற்றுண்ணவீடிநிலத்திடைவீழ்ந்தான்.

(இ-ள்.) சாத்தனூரந்தணர்தமாமேய்ப்பார்குடித்தோன்றி=சாத்தனூரிலுள்ள மறையவர்களின் பசுக்களைமேய்ப்பவர்குடியிலேயுதித்து; முந்தைமுறைநிரைமேய்ப் பான் = வமிசபரம்பரையின்படியே பசுக்களைமேய்க்கின்றவன்; மூலனெனும்பெய ருடையான் = மூலனெனக்கூறும்நாமத்தையுடையவன்; வந்துதனிமேய்க்கின்றான் வினைமாள = தனித்துவந்துமேய்க்கின்றஅவன் தன்வினைஒழிதலால்; வாழ்நாளை = அவ்வுடலோடுவாழ்தற்குரியவாகியநாளை; வெந்தொழில்வன்கூற்றுண்ண=கடுந்தொ ழிலையுடைய வலிய இயமன்கவர்ந்தமையால்; வீடிநிலத்திடைவீழ்ந்தான் = இறந்து பூமியிலேவிழுந்தனன்.—எ-று.

வாழ்நாளைக்கூற்றுவனுண்ணலாவது - அதனைப் பகலிரவென்னும் இருவாளி னால் நாளுமரிந்து உயிர்கவர்தல். பாவிகளைத்தண்டிக்கும் கடுந்தொழில்வன்மையுடை கலின் "வெந்தொழில்வன்கூற்று." என்றார். கூற்று அன்விகுதிகுன்றியபெயர்.(கக)

மற்றவன்றனுடம்பினையக்கோக்குலங்கள்வந்தணைந்து
சுற்றிமிகக்கதறுவனசுழல்வனமோப்பனவாக
நற்றவயோகியர்காணாநம்பரருளாலேயா
வுற்றதுயரிவைநீங்கவொழிப்பனெனவுணர்கின்றார்.

(இ-ள்.) அவன்றனுடம்பினையக்கோக்குலங்கள்வந்தணைந்துசுற்றி =அம்மூல னுடையவுடலை அப்பசுக்கூட்டங்கள்அணுகி நெருங்கிச்சூழ்ந்துகொண்டு; மிகக்கதறு வனசுழல்வனமோப்பனவாக = சாலப்புலம்புவனவும் சுற்றுவனவும் மோந்துபார்ப் பனவுமாகியிருக்க; நற்றவயோகியர்காணா = (இச்செயலைச்) சிறந்ததவமுதிர்ச்சியை யுடைய சிவயோகியார்கண்டு; ஆவுற்றதுயரிவைநீங்க=பசுக்களடைந்த இவ்வருத்த ங்களகல; நம்பரருளா லொழிப்பனெனவுணர்கின்றார் =பரமாதிருவருளினால் பரி கரிப்பேனெனச் சிந்திப்பாராயினர்.—எ-று.

மற்று-ஏ-அசைகள். நற்றவம்=உயிர்கண்மாட்டருளுடைமை. (கஉ)

இவனுயிர்பெற்றெழிலன்றியாக்களிடர்நீங்காவென்
றவனுடலிற்றமதுயிரையடைவிக்கவருள்புரியுந்
தவமுனிவர்தம்முடம்புக்கரண்செய்துதாமுயன்ற
பவனவழியவனுடலிற்றம்முயிரைப்பாய்த்தினர்.

(இ-ள்.) அருள்புரியுந்தவமுனிவர் = சீவகருணையையேவிரும்பிய தவத்தின் மேம்பட்ட சிவயோகியார்; இவனுயிர்பெற்றெழிலன்றி = இவனுயிர்பெற்றெழுந்தாலல்லது; ஆக்களிடர்நீங்காவென்று = இப்பசுக்கள் இன்னலொழியாவென்றுகருதி; அவனுடலிற்றம்முயிரையடைவிக்க = அவனுடையசரீரத்திலே தமதுயிரை அணுகுவித்தற்பொருட்டு; தம்முடம்புக்கரண்செய்து=தமதுதிருமேனிக்குக்காப்பமைத்து; தாமுயன்றபவனவழி = தாம்பழகியுள்ள பிராணாயாமவழியாக; தம்முயிரையவனுடலிற்பாய்த்தினார் = தமதுயிரைஅவனுடம்பிலே அடைவித்தார்.—எ-று.

அரண்செய்தல்-கெடுதிவாராவண்ணம் ஓரிடத்தேசேமித்தல். இங்ஙனம் பிரவேசிப்பித்தலைப் பிராகாமியமெனப்படும் பரகாயப்பிரவேசமெனபா. (கரு)

பாய்த்தியபின்றிருமூலராயெழலும்பசுக்களெலா
நாத்தழும்பநக்கிமோந்தணைந்துகனைப்பொடுநயந்து
வாய்த்தெழுந்தகளிப்பினால்வாலெடுத்துத்துள்ளியபின்
னீத்ததுயரினவாகிநிரைந்துபோய்மேய்ந்தனவால்.

(இ-ள்.) பாய்த்தியபின்திருமூலராயெழலும் = சேர்த்தியபின்பு திருமூலரென்னும் திருநாமத்தோடு எழுதலும்; பசுக்களெலாநாத்தழும்பநக்கிமோந்து = பசுக்கள்முழுமையும் நாக்கள்தழும்பேற நக்கிமோந்து; அணைந்துகனைப்பொடுநயந்து = அணுகிக் கனைத்தலோடு அரிதுபாராட்டி; வாய்த்தெழுந்தகளிப்பினால்வாலெடுத்துத் துள்ளியபின் = மலிந்தோங்கியமகிழ்ச்சியால் வால்களைத்தூக்கிக்கொண்டு பாய்ந்தபின்பு; நீத்ததுயரினவாகிநிரைந்துபோய்மேய்ந்தன =வருத்தத்தையொழித்தனவாகி வரிசையாகச்சென்றுமேய்ந்தன.—எ-று.

துயர்நீத்தனவென்பது நீத்ததுயரினவென முன்பின்னாகப்புணர்ந்தது; "இல் என்றூழ்வியன்குளம்" என்பதுபோல. ஆல்-அசை. (கசு)

ஆவினிரைமகிழ்வுறக்கண்டளிகூர்ந்தவருளினராய்
மேவியவைமேய்விடத்துப்பின்சென்றுமேய்ந்தவைதாங்
காவிரிமுன்றுறைத்தண்ணீர்கலந்துண்டுகரையேறப்
பூவிரிதண்புறவினிழலினிதாகப்புறங்காத்தார்.

(இ-ள்.) ஆவினிரைமகிழ்வுறக்கண்டு = பசுக்களின்கூட்டம் மகிழ்வுறுதலைப் பார்த்து; அளிகூர்ந்தவருளினராய் = அன்புமிக்க அருளையுடையராகி; அவைமேவி மேய்விடத்துப்பின்சென்று=அவைகள்சென்று மேயுமிடங்களிலே அவற்றின்பின்னரணுகி; மேய்ந்தவைகாவிரிமுன்றுறை = அப்பசுக்கள்மேய்ந்து காவிரியிலுள்ள துறைகளிலே; கலந்துதண்ணீருண்டுகரையேற = ஒருங்கே தண்ணீர்பருகிக் கரையிலேற; பூவிரிதண்புறவினிழல்=மலர்கள்விரிந்த குளிர்ந்தமுல்லைநிலத்திலுளளநிழலிலே; இனிதாகப்புறங்காத்தார் = இனிமையாகப் புறத்தேநின்று புரந்தார் —எ-று.

அன்பின்முதிர்ச்சியே அருளாகலின் அளிகூர்ந்தஅருளென்றார். இதனை "அருளென்னுமன்பீன்குழவி" எனனுந்திருக்குறளானுமுணர்க. தாம் - அசை. முன் - ஏழனுருபு. (கஎ)

வெய்யசுடர்க்கதிரவனுமேல்பாலைமலையணையச்
சைவநெறிமெய்யுணர்ந்தோரானினங்கடாமேமுன்

பையடப்பனகன்றைநினைந்துடர்வனவாகி
வையநிகழ்சாத்தனூர்வந்தெய்தப்பின்போனார்.

(இ-ள்.) வெய்யசுடர்க்கதிரவனும் மேல்பாலைமலையணைய=வெப்பமிக்ககிரணங்களையுடைய சூரியனும்மேற்குத்திக்கினுள்ள அஸ்தகிரியையடைய; ஆனினங்கள்தாமேமுன்பையநடப்பன - பசுக்கூட்டங்கள் தாமே முன்னர் மெல்லச்செல்வனவும்; கன்றைநினைந்துபடர்வனவாகி = கன்றுகளைச்சிந்தித்து விரைவனவுமாகி; வையநிகழ்சாத்தனூர்வந்தெய்த = பூமியிலேவிளக்கமுற்றதாகிய சாத்தனூரைப் போயடைய; சைவநெறிமெய்யுணர்ந்தோர்பின்போனார் = சைவசமயத்தினது உண்மைநெறியைத் தெளிந்தவராகிய திருமூலநாயனாரும் பின்னேசென்றார்.—எ-று.

சைவநெறிமெய்ம்மையாவது அநாதியே தற்சுதந்தரராய் ஆன்மாக்களை அடிமையாகவுடைய பதியினியல்பையும்,சுதந்தரரல்லராயுள்ள பசுக்களினியல்பையும், அப்பதிக்கு என்றும் உடைமைப்பொருளாகிய அப்பசுக்களைப்பந்தித்த பாசமானது அப்பதியினருளின்றி அகற்றலாகாதென்பதையும் ஆய்ந்துணர்ந்து, அருள்வழிநின்று, அக்கடவுளை அநுதினமும் வழிபடுதலாம். இந்நெறியே இந்நாயனார்கைக்கொண்ட உண்மைநெறியென்பதனை இவர் அனுபவத்தாலருளிய திருமந்திரமாலையானுணர்க.

போனவர்தாம்பசுக்களெல்லாமனைதோறும்புகநின்றார்
மானமுடைமனையாளும்வைகியபின்றாழ்த்தாரென்
றூனபயத்துடன்சென்றேயவர்நின்றவழிகண்டா
ளீனமிவர்க்கடுத்ததெனமெய்தீண்டவதற்கிசையார்.

(இ-ள்.) போனவர் = சென்றதிருமூலநாயனாரும்; பசுக்களெலாமனைதோறும்புகநின்றார் = ஆனினங்கள்யாவும் வீடுகடோறும்அடையப்புறத்தேநின்றார்; மானமுடைமனையாளும் = மாட்சிமையையுடையமூலன்மனைவியும்; வைகியபின்றாழ்த்தாரென்று= அத்தமித்தபின் இன்னும் நமதுகணவர் அணுகவில்லையேயென்று; ஆனபயத்துடன்சென்று=அதிகரித்தபயத்தோடுபோய்; அவர்நின்றவழிகண்டாள்=அவர்நின்றநிலையைநோக்கினவளாய்; இவர்க்கீனமடுத்ததென=இவர்க்கு ஏதோமாறுபாடு இசைந்ததென்று (சிந்தித்து); மெய்தீண்டவதற்கிசையார் = அவர்திருமேனியைத்தொட அதற்கு உடன்படாராயினார்.—எ-று.

வைகுதல் - நாட்கழிவு, இது அற்றைப்பகற்பொழுது கழிதலையுணர்த்திற்று. தாம் - ஏ-அசைகள். நின்றநிலை - பற்றின்மை. கண்டாள் - முற்றெச்சம். (கஎ)

அங்கவளுமக்களுடனருஞ்சுற்றமில்லாதா
டங்கிவெருவுறமயங்கியென்செய்தீரெனத்தளர
விங்குனக்கென்னுடனணைவொன்றில்லையெனவெதிர்மறுத்துப்
பொங்குதவத்தோராங்கோர்பொதுமடத்தினுட்புகுந்தார்.

(இ-ள்.) அவளுமக்களுடனருஞ்சுற்றமில்லாதாள்=அவளும் புத்திரர்களோடு அரியஉறவினரில்லாதவள்; தங்கிவெருவுறமயங்கியென்செய்தீரெனத்தளர = எதிர்நின்று அச்சமிகமயங்கி யாதுஇயற்றினீரென்று சோர்வடைய; பொங்குதவத்தோர்= சிறந்ததவத்தையுடைய திருமூலநாயனாரும்; இங்குனக்கென்னுடனணைவொன்றில்லையெனவெதிர்மறுத்து = இங்கே உனக்கு என்னோடு சிறிதும் சம்பந்தமில்லையென்று மறுத்துரைத்து; ஆங்கோர்பொதுமடத்தினுட்புகுந்தார் = அங்குள்ள ஒருபொதுமடத்தினுள்ளே அடைந்தார்.—எ-று. அங்கு-அசை.

என்செய்திரென்பது என்னை இவ்வாறு புறக்கணிக்கலாமோ என்னுங்கருத் தது. (கஅ)

இல்லாளனியல்புவேறானமைகண்டிரவெல்லாஞ்
சொல்லாடாதிருந்தவர்பாலணையாதுதுயிலாதாள்
பல்லார்முன்பிற்றைநாளிவர்க்கடுத்தபரிசுரைப்ப
நல்லார்களவர்திறத்துநாடியேநயந்துரைப்பார்.

(இ-ள்.) இல்லாளனியல்புவேறானமைகண்டு = காதலனிலைமை வேறுபட்டிருத்தலைக்கண்டு; இரவெல்லாஞ்சொல்லாடாதிருந்தவர்பால் = இரவுமுழுமையும் யாதொருவார்த்தையும் இசையாதிருந்தநாயனார்பால்; அணையாதுதுயிலாதாள் = அணுகாது நித்திரையுமின்றியிருந்த அவள்; இவர்க்கடுத்தபரிசுபிற்றைநாள் பல்லார்முன்னுரைப்ப = இவர்க்குநேர்ந்துள்ளதன்மையை அடுத்ததினத்திலே பலர்முன் அறிவிக்க; நல்லார்கள்அவர்திறத்துநாடி = அறிவுடையவர் அவர்விடயமாகஆராய்ந்து; நயந்துரைப்பார் = வியந்துவிளம்புவாராயினர்.—எ-று.

இல்லாளன் - இல்லையாள்பவன். (கசு)

பித்துற்றமயலன்றுபிறிதொருசார்புளதன்று
சித்தவிகற்பங்களைந்துதெளிந்தசிவயோகத்தில்
வைத்தகருத்தினராகிவரம்பில்பெருமையிலிருந்தா
ரித்தகைமையளப்பரிதால்யாராலுமெனவுரைப்பார்.

(இ-ள்.) பித்துற்றமயலன்று = பித்தம்அதிகரித்த மயக்கம்அல்லை;பிறிதொருசார்புளதன்று = வேறொரு தேவதாசம்பந்தமுடைமைமுதலியவும் அல்லை (பிறிதென்னெனில்); சித்தவிகற்பங்களைந்துதெளிந்தசிவயோகத்தில் = சித்தவேறுபாடுகளை நீக்கித் தெளிவுற்றசிவயோகத்திலே; வைத்தகருத்தினராகி = வதியச்செய்தமனதையுடையவராகி; வரம்பில்பெருமையிலிருந்தார் = அளவிடப்படாதமேன்மையில் அமர்ந்தார்; இத்தகைமையாராலுமளப்பரிதெனவுரைப்பார் = இவர்நிற்குநிலைமை எத்தகைமையராலும் ஆராய்ந்துதுணிதல் அரிதென்று (மீட்டும்) அறிவிப்பார்.—எ-று.

சித்தவிகற்பமாவன=சத்தாதிவிடயங்களால்விளையும் பற்பல மனவேறுபாடுகள். சிவயோகம்=சிவத்தினிடத்தே இரண்டறக்கலந்துநிற்றல். வைத்தல்=நிலைபெறுவித்தல். சிவயோகிகளினிலைமை ஏனையராற்றுணிதலரிதாகலின் "இத்தகைமையாராலுமளப்பரிது" என்றுரென்க. ஆல்-அசை. (உ0)

பற்றறுத்தவுபதேசப்பரமபதம்பெற்றார்போன்
முற்றுமுணர்ந்தனராகுமுன்னைநிலைமையிலுங்கள்
சுற்றவியல்பினுக்கெய்தாதொன்றுரைப்பத்துயரெய்தி
மற்றவளுமையலுறமருங்குள்ளார்கொண்டகன்றார்.

(இ-ள்.) பற்றறுத்தவுபதேசம் = எவ்வகைப்பற்றுக்களையும் ஒழித்தற்கு ஏதுவாகிய உபதேசத்தால்; பரமபதம்பெற்றார்போல் முற்றுமுணர்ந்தனர் = மோட்சபதத்தையடைந்தவர்போல முழுமையும் உணர்ந்தவராயினர்; முன்னைநிலைமையிலுங்கள் சுற்றவியல்பினுக்கெய்தாதொன்றுரைப்ப = முந்தியஇயல்புபோல் உங்களுடைய உறவின்முறைக்குப் பொருந்தாதொன்றுமொழிய; அவளுந்துயரெய்திமையலுற = (அது

கேட்ட) அவனும் அன்புற்று மயங்கிநிற்றலும்; மருங்குள்ளார்கொண்டகன்றார் = அருகேயுள்ளவர் அழைத்துக்கொண்டுசென்றார்.—எ-று.

பற்றறுத்தற்கேதுவாகிய உபதேசத்தைப் பற்றறுத்தவுபதேசமெனக் காரியத்தைக் காரணமாகஉபசரித்தார். உபதேசமென்புழி மூன்றனுருபுவிரிக்க. பரமர்பதமென்பதுபாடமேல், உபதேசத்தைப்புரிந்த பரமருடையபதமென்றுரைக்க. ஆகுமென்பது ஒப்பில்போலியாய் நிற்பதொரு இடைச்சொல். மற்று-அசை. (உக)

இந்தநிலைமையிலிருந்தாரொழுந்திருந்தாங்கானிரைகள்
வந்தநெறியேசென்றுவைத்தகாப்பினிலுய்த்த
முந்தையுடற்பொறைகாணார்முழுதுணர்ந்தமெய்ஞ்ஞானச்
சிந்தையினில்வந்தசெயலாராய்ந்துதெளிகின்றார்.

(இ-ள்.) இந்தநிலைமையிலாங்கிருந்தாரெழுந்திருந்து = இவ்வாறு அங்கிருந்த திருமூலநாயனாரெழுந்து; ஆனிரைகள்வந்தநெறியேசென்று = பசுக்கள்வந்தவழியே போய்; வைத்தகாப்பினிலுய்த்தமுந்தையுடற்பொறைகாணார் = வகுத்தகாவலிடத்தே வைத்த முந்திய உடற்சுமையைக் காணாதவராகி; முழுதுணர்ந்தமெய்ஞ்ஞானச்சிந்தையினில் = அனைத்தும் உணர்ந்த தத்துவஞானத்தையுடைய சித்தத்திலே; வந்த செயலாராய்ந்துதெளிகின்றார் = (தேகநீங்கும்படி) நேர்ந்தசெய்கையைத் தேர்ந்து தெளிகின்றார்.—எ-று.

சிந்தையினில்தெளிகின்றாரென இயையும். பிறப்பறுக்கலுற்றார்க்கு முத்திபெறற்குரிய உடலுமிகையாகலின் "உடற்பொறை" என்றார். இதனை "மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க-லுற்றார்க் குடம்பு மிகை." என்னுந்திருக்குறளானுமுணர்க. முக்காலவுணர்ச்சி முழுதுமுடையராகலின் தேகமறைந்தநிலையைத் தெளிவாராயினர் என்பது. (உஉ)

தண்ணிலவார்சடையார்தாந்தந்தவாகமப்பொருளை
மண்ணின்மிசைத்திருமூலர்வாக்கினாற்றமிழ்வகுப்பக்
கண்ணியவத்திருவருளாலவ்வுடலைக்கரப்பிக்க
வெண்ணிறைந்தவுணர்வுடையாரீசரருளெனவுணர்ந்தார்.

(இ-ள்.) தண்ணிலவார்சடையார் = தண்ணியசந்திரன்தங்கிய சடைமுடியையுடையபெருமான்; தாந்தந்தவாகமப்பொருளை = தாம் அருளிச்செய்த சிவாகமப் பொருள்களை; மண்ணின்மிசைத்திருமூலர்வாக்கினால் = இவ்வுலகின்கண் திருமூலர் திருவாக்கினாலே; தமிழ்வகுப்பக்கண்ணியவத்திருவருளால் = செந்தமிழிற்செய்விக்கச் சிந்தித்த அத்திருவருளினால்; அவ்வுடலைக்கரப்பிக்க = அவர்திருமேனியைமறைப்பிக்க (அதனை); எண்ணிறைந்தவுணர்வுடையார் = சிந்தனைநிரம்பிய ஞானமுதிர்ச்சியையுடைய திருமூலநாயனார்; ஈசரருளெனவுணர்ந்தார் = (நமதுசரீரமறைந்தமை) நம்பெருமான் அருளெனத் துணிந்தார்.—எ-று.

சிவபெருமான் திருவருளால் திருமேனியைக்கரப்பிக்க அதனை உள்ளவாறுணர்ந்தாரென்க. கண்ணுதல்-சிந்தித்தல். (உ௩)

சுற்றியவக்குலத்துள்ளார்தொடர்ந்தார்க்குத்தொடர்வின்மை
முற்றவேமொழிந்தருளவவர்மீண்டுபோனதற்பின்

பெற்றமீதுயர்த்தவர்தாள்சிந்தித்துப்பெருகார்வச்
செற்றமுதல்கடிந்தவர்தாமாவடுதண்டுறைசேர்ந்தார்.

(இ-ள்.) சுற்றியவக்குலத்துள்ளார்தொடர்ந்தார்க்கு = சூழ்ந்தஅம்மரபிலுள்ளவர்க்கும் தொடர்ந்துவந்தபிறர்க்கும்; தொடர்வின்மைமுற்றவேமொழிந்தருள = சம்பந்தமின்மை முழுமையும் சாற்றியருள; அவர்மீண்டுபோனதற்பின் =அவர்திரும்பிச்சென்றபின்; பெற்றமீதுயர்த்தவர்தாள்சிந்தித்து = இடபத்தைத் துவசமாகவேந்திய இறைவர்திருவடிகளைத் தியானித்து; பெருகார்வச்செற்றமுதல்கடிந்தவராவடுதண்டுறைசேர்ந்தார்=முதிருகின்ற காமவெகுளிமயக்கமென்னும் முக்குற்றங்களையுங்களைந்த திருமூலநாயனார் திருவாவடுதுறையைச்சேர்ந்தார். எ-று. ஏ-தாம்-அசைகள்.

பெருகுதலாவது = சிறிதுபற்றினும் அதுசார்பாக மேலும் மேலும் அதிகரித்தல். முக்குற்றங்களையும் முதலறக்களைதல்வேண்டு மென்பதனை "காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற-னாமங் கெடக்கெடு நோய்." என்னுந் திருக்குறளானுமுணர்க. மூன்றனுள் முந்திய இரண்டையு மொழிந்தமையின இனம்பற்றி மயக்கம் வருவிக்கப்பட்டது. அன்றி, ஆர்வச்செற்றமுதலென்பதற்கு, காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மார்ச்சரியமென்னும் அறுவகைக் குற்றங்களையும் கொள்ளினுமமையும்.

ஆவடுதண்டுறையணைந்தங்கரும்பொருளையுறவணங்கி
மேவுவார்புறக்குடபான்மிக்குயர்ந்தவரசின்கீழ்த்
தேவிருக்கையமர்ந்தருளிச்சிவயோகந்தலைநின்று
பூவலருமிதயத்துப்பொருளோடுமுணர்ந்திருந்தார்.

(இ-ள்.) தண்ணுவடுதுறையணைந்து = தண்ணிய திருவாவடுதுறையைச்சார்ந்து; அங்கரும்பொருளையுறவணங்கிப்புறமேவுவார் = அங்கே பெறற்கரிய சிவபெருமானைப் பெரிதும் இறைஞ்சிப் புறத்தையடைபவர்; குடபான்மிக்குயர்ந்தவரசின்கீழ்=மேற்குத்திசையில் மிகவளர்ந்தோங்கிய அரசமரநீழலின்கண்; தேவிருக்கையமர்ந்தருளி=தெய்வீகம்பெற்ற ஒருதானத்திலே சிறக்க இருந்து; சிவயோகந் தலைநின்று = சிவயோகத்திலே நிலைபெற்று; பூவலருமிதயத்து=மலர்போல விரிந்த இதயத்தின்கண்ணே(வதிந்தருளும்); பொருளோடுமுணர்ந்திருந்தார்=அப்பெருமானையுணர்ந்து அச்சுகானுபவத்தில் அமர்ந்தார்.எ-று.

பொருளோடும் வேற்றுமைமயக்கம். இதயத்தில் தியானித்து அப்பொருளோடு கலந்திருந்தார் என்னலுமொன்று. (௭௫)

ஊனுடம்பிற்பிறவிவிடந்தீர்ந்துலகத்தோருய்ய
ஞானமுதனான்குமலர்நற்றிருமந்திரமாலை
பான்மைமுறையோராண்டுக்கொன்றாகப்பரம்பொருளை
யேனவெயிறணிந்தாரையொன்றவன்றானெனவெடுத்து.

(இ - ள்.) ஊனுடம்பில்=ஊன்செறிந்த உடம்பினைப்பற்றிய; பிறவிவிடந்தீர்ந்துலகத்தோருய்ய=உற்பவமென்னும் விடம் அகன்று உலகினர் உய்தற்பொருட்டு; ஞானமுதனான்குமலர்=ஞானம் யோகம் கிரியை சரியையென்னும் நால்வகை மலர்களாற்றொடுத்த; நற்றிருமந்திரமாலை=நல்ல திருமந்திரமென்னும் பாமாலையை; பான்மைமுறையோராண்டுக்கொன்றாக=பாலின் முறைப்படி ஒருவருடத்துக்கு ஒன்றாக

ஏனவெயிறணிந்தாராம்பரம்பொருளை = பன்றியின்கோட்டை அணிந்தவராகிய பரமபதியையே (முதலாகக்கொண்டு); ஒன்றவன்றானெனவெடுத்து = "ஒன்றவன் றான்" என்று தொடங்கி-எ-று.

மாலையை ஒன்றவன்றான் எனவெடுத்து ஆண்டுக்கொன்றாக (அப்பெருமானு க்கு) மூவாயிரந்தமிழ்சாத்தியெனப் பிற்செய்யுளில் முடிக்க. சிவஞானமுதிர்ச்சியோ டு தெய்வீகமுடையாரையும் மருளுமாறு மயக்குவதென்பார், உற்பவத்தை விடமெ னவுருவகித்து, "ஊனுடம்பிற்பிறவிவிடம்" என்றும், இவ்விடம் எளிதிலொழிய எவ ரையும் உய்விப்பது இத்திருமந்திரமென்பார் "உலகத்தோருய்ய நற்றிருமந்திரம்" என்றும், கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ வென்னும் நால்வகைமலர்களாற் றொடுத்த மாலைபோல்வதென்பார், "ஞானமுதனான்குமலர்மாலை" என்றும் கூறினார். பான்மைஎன்பதில் மைவிகுதி தன்மையுணர்த்தாது தன்மையுடைப்பொருளாகிய பா லையுணர்த்தலின் பகுதிப்பொருள்விகுதி. இதனை வடநூலார் சுவார்த்தபாவ தத்திதப் பிரத்தியம் என்பர். பால் நூலினுறுப்புக்கள். இத்திருமந்திரமாலையில் பால்களைத் தந்திரமெனவழங்குவர். திருமால் வராகாவதாரங்கொண்டு இரணியாக்கனை வதை த்தவழி மயங்கி எவர்க்கும் இடர்புரிய அதுகண்டபெருமான் முருகக்கடவுளை விடு த்து அதன்கொம்பை முறிப்பித்து அணிந்தனரென்பது புராணசரித்திரமாகலின் "ஏனவெயிறணிந்தாரை" என்றார். (உசு)

---

## திருமந்திரமாலை.

திருச்சிற்றம்பலம்.

ஒன்றவன்றானேயிரண்டவனின்னரு
ளின்றனன்மூன்றினுணான்குணர்ந்தானைந்து
வென்றனனாறுவிரித்தனனேழுபா
சென்றனன்றானிருந்தானுணர்ந்தெட்டே.
நீருநிலனும்விசும்பங்கிமாருத
கூருமுடம்புறுசோதியுமங்குளன்
பேரும்பராபரன்பின்னுகனெம்மிறை
யூருஞ்சகலனுலப்பிலிதானே.

திருச்சிற்றம்பலம்.

---

முன்னியவப்பொருண்மாலைத்தமிழ்மூவாயிரஞ்சாத்தி
மன்னியமூவாயிரத்தாண்டிப்புவிமேன்மகிழ்ந்திருந்து
சென்னிமதியணிந்தார்தந்திருவருளாற்றிருக்கயிலை
தன்னிலணைந்தொருகாலும்பிரியாமைத்தாளடைந்தார்.

(இ-ள்.) முன்னியவப்பொருள் = சிந்தித்த அந்த ஞானமுதலிய நாற்பொரு ளமைந்த; மூவாயிரந்தமிழ்மாலைசாத்தி=மூவாயிரந்தமிழ்த்திருப்பாடல்களையுடைய அத்திருமந்திரமாலையை (முதல்வருக்குப்)புனைந்து; மன்னியமூவாயிரத்தாண்டு இப் புவிமேன்மகிழ்ந்திருந்து = நிலைபெற மூவாயிரவருடம் இந்நிலவுலகின்கண்ணே விருப்புற்றுவசித்து; சென்னிமதியணிந்தார்தந்திருவருளால் = திருமுடியிலே சந் திரனைத்தரித்த சிவபிரான்திருவருளால்; திருக்கயிலைதன்னிலணைந்து = திருக்கயி லாயத்தைச்சேர்ந்து; ஒருகாலும் பிரியாமைத்தாளடைந்தார் = ஒரு காலத்தும் பிரி யாதபடி அப்பெருமான் திருவடியைச்சேர்ந்தார்.—எ-று.

தமிழ் என்பது அதனாலாக்கப்படும் செய்யுளையுணர்த்தலின் ஆகுபெயர். மன்னிய வினையெச்சம். மூவாயிரத்தென அத்துச்சாரியை தவிர்வழிவந்தமை செய்யுள் விகாரம். மூவாயிரமென்னும் இலக்கத்தையுடைய ஆண்டெனினும் அமையும். பிரிதற்றன்மை சாலோகாதிபதமுத்திகட்கேயன்றிச் சாயுச்சியமாகிய பரமுத்திக்கின்மையின் "பிரியாமைத்தாளடைந்தார்" என்றாரென்க. (உஎ)

நலஞ்சிறந்தஞானயோகக்கிரியாசரிலயயெலா
மலர்ந்தமொழித்திருமூலதேவர்மலர்க்கழல்வணங்கி
யலர்ந்தபுகழ்த்திருவாரூரமணர்கலக்கங்கண்ட
தலங்குலவுவிறற்றண்டியடிகடிறஞ்சாற்றுவாம்.

(இ-ள்.) நலஞ்சிறந்தஞானயோகக்கிரியாசரியை = நன்மைமிக்க ஞானம் யோகம் கிரியை சரியையென்னும் நான்கினையும்; எலாமலர்ந்தமொழித்திருமூலதேவர் = முற்றும் திருவாய்மலர்ந்தருளிய திருவாக்கையுடைய திருமூலநாயனாரது; மலர்க்கழல்வணங்கி = மலர்போலுந்திருவடிகளைவணங்கி; அலர்ந்தபுகழ்த்திருவாரூர் = விரிந்தசீர்த்தியையுடைய திருவாரூரிலுள்ள; அமணர்கலக்கங்கண்ட = சமணர்களடைந்த வருத்தத்தைத் தாமே * கண்கூடாகக்காணப்பெற்ற; தலங்குலவுவிறல் = பூமியிலே பொலிவுற்ற வெற்றியையுடைய; தண்டியடிகடிறஞ்சாற்றுவாம் = தண்டியடிகணாயனாருடைய தகைமையைக் கூறுவாம்.—எ-று.

தண்டியடிகள் தமக்குக் கலக்கத்தைவிளைத்த சமணர்கள் கண்களிழந்துவருந்தத் தாம் சிவகிருபையால் கண்கள் விளங்கப்பெற்று அவர்கலக்கத்தை நேரேகாணப்பெற்றமையன்றி அவரை அவர்கூறிய உறுதியின்படி நகரைவிடுவித்துத் துரப்பித்தமையின் "அமணர்கலக்கங்கண்ட தலங்குலவுவிறற்றண்டி" என்றாரென்க. (உஅ)

திருமூலநாயனார்புராணம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௩௱௬௭.

திருச்சிற்றம்பலம்.

## தண்டியடிகணாயனார்புராணம்.

தண்டியடிகடிருவாரூர்ப்பிறக்கும்பெருமைத்தவமுடையா
ரண்டவாணர்மறைபாடவாடுஞ்செம்பொற்கழன்மனத்துக்
கொண்டகருத்தின்கண்ணேக்குங்குறிப்பேயன்றிப்புறநோக்குங்
கண்டவுணர்வுதுறந்தார்போற்பிறந்தபொழுதேகண்காணார்.

(இ-ள்.) தண்டியடிகள் = தண்டியடிகணாயனாரென்பவர்; திருவாரூர்ப்பிறக்கும்பெருமைத்தவமுடையார் = திருவாரூரிலே அவதரித்தற்கேதுவாகிய சிறந்ததவத்தையுடையவர்; அண்டவாணர்மறைபாடவாடும் = தேவர்கள் வேதமுழக்கஞ்செய்ய நடித்தருளுகின்ற; செம்பொற்கழல் = (தியாகேசப்பெருமானுடைய) சிவந்தபொன்போலும் திருவடிகளை; மனத்துக்கொண்டகருத்தின்கண்ணேக்குங்குறிப்பேயன்றி =

* கண்கூடு = பிரத்தியக்ஷம்.

மனதிற்கொண்ட ஞானக்கண்ணாற்றரிசிக்குங் குறிப்பொன்றேயல்லது; புறநோக்குங் கண்டவுணர்வுதுறந்தார்போல் = புறத்தேதரிசிக்கும் சிற்றுணர்ச்சியை ஒழித்தவர் போல; பிறந்தபொழுதேதகண்காணார் = அவதரித்தபொழுதே புறக்கண்பார்வை இல்லாதவர்.—எ-று.

கழல் கருத்தின்கண்ணேக்குங் குறிப்பு என இயையும். முத்திக்கேதுவாகிய திருவாரூர்ப்பிறத்தலைப் பெருமைபெற்றதவத்தாற் பெற்றவரென்பார் காரியத்தைக் காரணமாக உபசரித்து "திருவாரூர்ப்பிறக்கும் பெருமைத்தவமுடையார்" என்றும், அரியதூரத்தனவாகி அளவுபடாதுள்ள அரும்பொருள்களையெல்லாம் ஏககாலத்திலே அகத்திற்காணும் அகண்டவுணர்ச்சியையேஅல்லது, சமீபித்தனவாகி அளவுபட்டுள்ள எளியபொருள்களை ஏகதேசமாகப் புறத்தேகாணும் சிற்றுணர்ச்சியிலரென்பார் "கருத்தின்கண்ணேக்குங்குறிப்பேயன்றிப் புறநோக்குங்கண்டவுணர்வுதுறந்தார்" என்றுங் கூறினர். ஆடுஞ்செம்பொற்கழலென்பது குறிப்பால் தியாகேசப்பெருமானுடைய திருவடிகளையுணர்த்திற்று. கருத்தில் கண் - ஞானக்கண். ஞானக்கண்ணலென மூன்றனுருபுவிரிக்க. குறிப்பு-இலக்கு. ஏகாரங்களுள முந்தியது பிரிநிலை; பிந்தியது தேற்றம். பிந்தியது கண்டவுணர்வு என்றமையின் முந்தியது அகண்டவுணர்வென்பது பெற்றாம்.அகண்டம் = அளவுபடாமை. கண்டம் = அளவுபடுதல். (க)

காணுங்கண்ணாற்காண்பதுமெய்த்தொண்டேயான கருத்துடையார்
பேணுஞ்செல்வத்திருவாரூர்ப்பெருமானடிகடிருவடிக்கே
பூணுமன்பினாற்பரவிப்போற்றுநிலைமைபுரிந்தமரார்
சேணுமறியவரியதிருத்தொண்டிற்செறியச்சிறந்துள்ளார்.

(இ-ள்-) காணுங்கண்ணாற்காண்பது = தமக்குவிளங்கப்பெற்ற ஞானக்கண்ணாற் செயற்பாலது; மெய்த்தொண்டேயானகருத்துடையார்=உண்மைத்திருத்தொண்டே எனக்கொண்ட சிந்தனையையுடையவர்; பேணுஞ்செல்வத்திருவாரூர் = (எவரும்) விரும்பும்செல்வம்நிறைந்த திருவாரூரிலே வீற்றிருக்கும்; பெருமானடிகடிருவடிக்கே = எம்பெருமானாகிய கடவுளின்திருவடிகளுக்கே; பூணுமன்பினாற்பரவி = நியதியாகக்கொண்ட நேசத்தினாலே துதித்து; போற்றுநிலைமைபுரிந்து = வழிபடும் இயல்பைவிரும்பி; அமரர்சேணுமறியவரிய = தேவர்கள் தூரத்திலும் அறிதற்கரிய; திருத்தொண்டிற் செறியச்சிறந்துள்ளார் = திருத்தொண்டிலே மிகவும் சிறப்புற்றவர்.—எ-று.

காண்பது ஈண்டுச் செய்தலின்மேற்று. இதனை இதன் ஒன்பதாவது செய்யுளினுங்காண்க. அடிகள் = கடவுள். பூணுதல்=நியதியாகக்கோடல். தேவர் காமிய தவமுடையராகலின் போகசாதனத்திலேயன்றி, நிட்காமியதவமுடையாரால் அடையப்படும் மோக்ஷசாதனமாகிய திருத்தொண்டிலே சிறிதும் அவர்க்குச் சிந்தனைசெல்லுதல் அரிதென்பார் "அமரர்சேணுமறியவரிய திருத்தொண்டு" என்றார். சேணும் என்னும் உம்மை இழிவுசிறப்பு. அவர் காமியதவத்தின்கண்ணே கருத்துடையரென்பதை "வாழ்த்துவதும் வானவர்கடாம்வாழ்வான் மனநின்பாற் றாழ்த்துவதுந் தாமுயர்ந்து தம்மையெல்லாந் தொழவேண்டி" என்னுந் திருவாசகத்தானுமுணர்க. (உ)

பூவார்சடிலத்திருமுடியார்மகிழ்ந்ததெய்வப்பூங்கோயிற்
றேவாசிரயன்முன்னிறைஞ்சிவலஞ்செய்வாராய்ச்செம்மைபுரி

நாவாலின்பமுறுங்காதனமச்சிவாயநற்பதமே
யோவாவன்பிலெடுத்தோதியொருநாள்போலவருநாளில்.

(இ-ள்.) பூவார்சடிலத்திருமுடியார்மகிழ்ந்த = கொன்றைமலர்முதலியவை குடிகொண்ட சடைமுடியையுடைய தம்பெருமான்விரும்பிய; செல்வப்பூங்கோயில் = கனகமயமாகிய கமலாலயத்திலே; தேவாசிரயன்முன்னிறைஞ்சி வலஞ்செய்வாராய் = தேவாசிரயனென்னும் திருக்காவணத்தின் எதிர்வணங்கி வலம்புரிவாராகி; இன்பமுறுங்காதல் = களிப்புமிக்ககாதலோடு; நமச்சிவாயநற்பதமே = நமச்சிவாயவென்னும் நல்லமந்திரத்தையே; ஓவாவன்பிலெடுத்து = ஒழிவில்லாத அன்பினாற்றொடங்கி; செம்மைபுரிநாவாலொருநாள்போல வோதிவருநாளில் = செவ்வியநாவினால் நாடோறும் செபித்துவருநாளில்.—எ-று.

காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி ஓதல்வேண்டுமென்பார், "இன்பமுறுங் காதலோவாவன்பில்" என்றும், எவ்வகைமந்திரங்கட்கும் மூலமாய்ச் சிவன் அருள் ஆவி திரோதம் மலமென்னும் ஐம்பொருள்களையுடையதாதலால் நல்லவர்தீயரெனாது நச்சினார்செல்லல்கெடச் சிவமுத்திகாட்டுவதென்பார், "நமச்சிவாயநற்பதமே" என்றும், எம்பிரானுமமேயன்றி ஏனையவைபயிலாதநாவெனபார் "செம்மைபுரிநா" என்றும், அன்பு அகக்கருவியும் நா புறக்கருவியுமாமென்பார், "அன்பினாலெடுத்து நாவாலோதி" என்றும், இந்நியதியை முட்டின்றிச் செலுத்தினரென்பார் "ஒருநாள்போல வருநாளில்" என்றும் கூறினார். ஏகாரம் பிரிநிலை. எடுத்தோதல் - அவற்றிற்குரிய பொருள்களைச் சீர்தூக்கி ஓதலும் ஓங்க வுச்சரித்தலுமாம். (௩)

செங்கண்விடையார்திருக்கோயிற்குடபாற்றீர்த்தக்குளத்தின்பாங்
கெங்குமமணர்பாழிகளாயிடத்தாற்குறைபாடெய்துதலா
லங்கந்நிலைமைதனைத்தண்டியடிகளறிந்தேயாதரவா
லிங்குநானிக்குளம்பெருகக்கல்லவேண்டுமென்றெழுந்தார்.

(இ-ள்.) செங்கண்விடையார் = சிவந்தகண்களைப்பெற்ற இடபவாகனத்தையுடைய தியாகேசப்பெருமானது; திருக்கோயிற்குடபால் = திருவாலயத்தின் மேற்கிலுள்ள; தீர்த்தக்குளத்தின்பாங்கெங்கும் = தீர்த்தம்நிரம்பிய தடாகத்தின்பக்கமுற்றும்; அமணர்பாழிகளாய் = அமணர்களுடைய ஆலயங்களாகி; இடத்தாற் குறைபாடெய்துதலால் = இடத்தில் சுருக்கம் அடைந்திருந்தமையால்; அந்நிலைமைதனைத் தண்டியடிகளறிந்து = அத்தன்மையைத் தண்டியடிகளாருணர்ந்து; நானிக்குளம்பெருகக்கல்லவேண்டுமென்று = யான் இத்தடாகத்தை விசாலமாக வெட்டவேண்டுமென்று; ஆதரவாலெழுந்தார் = அன்பினாலே ஊக்கமுடையராயினார்.—எ-று.

பாழி தவச்சாலையுமாம். குறைபாடு = குறைபடுதல். அங்கு இங்கு என்பன அசைகள். எழுதல் - ஊக்கமேலிடல். (௪)

குழிவாயதனிற்குறிநட்டுக்கட்டுங்கயிறுகுளக்கரையி
னிழிவாய்ப்புறத்துநடுந்தறியோடிசையக்கட்டியிடைதடவி
வழியால்வந்துமண்கல்லியெடுத்துமறித்துந்தடவிப்போ
யொழியாமுயற்சியாலுய்த்தாரோதுமெழுத்தஞ்சுடனுய்ப்பார்.

(இ-ள்.) குழிவாயதனில் = (அகழுங்)குழியிடத்திலே; குறிநட்டு = அடையாளமாக(ஒருதறி) நட்டு; கட்டுங்கயிறு = அதிற்பிணித்தகயிற்றை; குளக்கரையினிழிவாய்ப்



தண்டியடிகணாயனார்.

புறத்து = அத்தடாகக்கரையின்கண்ணே இழியும் இடப்புறத்திலே; நடுந்தறியோ டிசையக்கட்டி=இறுக்கியதறியின்கண்ணே இணங்கக்கட்டி; இடைதடவிவழியால் வந்து=இடையே கயிற்றைத்தடவிக்கொண்டுசென்று வழியினுலிறங்கி; ஓதுமெழுத் தஞ்சுடன்மண்கல்லியெடுத்து = பஞ்சாக்ஷரசெபத்தோடு மண்ணைவெட்டிச்சுமந்து கொண்டு; மறித்துந்தடவிப்போயுய்ப்பார=மீட்டுந்தடவிச்சென்று வெளியே சொரி வாராய்; ஒழியாமுயற்சியாலுய்த்தார்=இடைவிடாதமுயற்சியால் இங்ஙனஞ்செய்து வந்தார்.—எ-று.

சூலே = கரை. இழிவாய் என்பதில் வாய் தொழிற்பெயர்விகுதியுமாம். தறி யொடு வேற்றுமைமயக்கம். உடனென்பது உடனிகழ்ச்சிப்பொருள்பயக்கும் மூன் றும்வேற்றுமைச்சொல்லுருபு. உய்ப்பார் முற்றெச்சம். (ரு)

நண்ணினாளுநற்றொண்டர்நயந்தவிருப்பான்மிகப்பெருகி
யண்ணறீர்த்தக்குளங்கல்லக்கண்டவமணர்பொறாராகி
யெண்ணித்தண்டியடிகள்பாலெய்திமுன்னின்றியம்புவார்
மண்ணைக்கல்லிற்பிராணிபடும்வருந்தவேண்டாவென்றுரைத்தார்.

(இ-ள்.) நற்றொண்டர்நாளுநண்ணி = சிறந்ததண்டியடிகளுயனார் தினமும் இங்ஙனம்பொருந்தி; நயந்தவிருப்பான் மிகப்பெருகி = தாம் மேற்கொண்டதிருத் தொண்டால் மிகவும்மேம்பட்டு; அண்ணறீர்த்தக்குளங்கல்ல = தியாகேசப்பெருமா னுக்குரிய தீர்த்தத்தடாகத்தைவெட்ட; கண்டவமணர்பொறாராகி = அதைக்கண்ட சமணர் அழுக்காறுடையராகி; எண்ணித்தண்டியடிகள்பாலெய்தி = தமக்குள்ளே ஆலோசித்துத் தண்டியடிகள்பால் அடைந்து; முன்னின்றியம்புவார் = எதிர்நின்று இசைப்பாராகி; மண்ணைக்கல்லிற்பிராணிபடும் = மண்ணைவெட்டினுல் உயிர்கள் மடியும்; வருந்தவேண்டாவென்றுரைத்தார் = நீரும் வீணே துன்பமுறவேண்டாம் என்று நிகழ்த்தினுர்.—எ-று.

இயம்புவார் முற்றெச்சம். (சு)

மாசுசேர்ந்தமுடையுடலார்மாற்றங்கேட்டுமறுமாற்றந்
தேசுபெருகுந்திருத்தொண்டர்செப்புகின்றுர்திருவிலிகாள்
பூசுநீறுசாந்தமெனப்புனைந்தபிரானுக்கானபணி
யாசிலாநல்லறமாவதறியவருமோவுமக்கென்றுர்.

(இ-ள்.) மாசுசேர்ந்தமுடையுடலார்மாற்றம்=அழுக்கடைந்த முடைநாற்றத் தின் உடலையுடைய அவர்கள்வார்த்தையை; தேசுபெருகுந்திருத்தொண்டர்கேட்டு மறுமாற்றஞ்செப்புகின்றுர் = அறிவின்மிக்க தண்டியடிகளார்கேட்டு மறுமொழி யறைகின்றுர்; திருவிலிகாள் = சிறப்பில்லாதகீழ்மையாசுளே; பூசுநீறுசாந்தமெனப் புனைந்த = அணிதற்குரியவிபூதியைச் சந்தனமாகஅணிந்த; பிரானுக்கானபணி=சிவ பெருமானுக்குரிமைபெற்றதிருத்தொண்டுகள் (எவையேனும் அவை); ஆசிலாநல்லற மாவது = தவறில்லாதநல்லதருமமாவது; உமக்கறியவருமோவென்றுர் = உங்கட் குத்தெரியுமோ என்றுரைத்தார.—எ-று.

மூழ்கும் நியதியிலரென்பார் "மாசுசேர்ந்தமுடையுடலார்" என்றும், இறை வனைச்சுட்டி இயற்றுவது எத்தொழிலேனும் அது இணையிலாத்தொண்டாம் என் பார், "பிரானுக்கானபணி ஆசிலாநல்லறம்" என்றும், தொண்டர்க்கேயன்றி மற்றை யோர்க்கு அத்தொண்டினிலைமை அறிதற்கரிதென்பார் "உமக்கறியவருமோ" என்

றும் கூறினார். முடை-அழுக்கு வியர்வைமுதலிய அசுத்தசம்பந்தத்தால் அணுகிய தொரு நாற்றம். திருவிலிகள்என்பது சீதேவிக்கு ஆகரமாயினவரென்னுங் குறிப் பின்மேனின்றது. (எ)

அந்தமில்லாவறிவுடையாருரைப்பக்கேட் டவறிவில்லார்
சிந்தித்திந்தவறங்கேளாய்செவியுமிழந்தாயோவென்ன
மந்தவுணர்வும்விழிக்குருடுங்கேளாச்செவியுமற்றுமக்கே
யிந்தவுலகத்துள்ளனவென்றன்பர்பின்னுமியம்புவார்.

(இ-ள்.) அந்தமில்லாவறிவுடையார் = அளவுபடாதஞானமுதிர்ச்சியையுடைய அந்நாயனார்; உரைப்பக்கேட்டஅறிவில்லார் = அங்ஙனம் மொழியக்கேட்ட அறிவில்லாதஅமணர்கள்; இந்தவறஞ்சிந்தித்துக்கேளாய் = யாம்கூறும் இத்தருமத்தைத் தேர்ந்து செவியில் ஏற்கின்றாயில்லை; செவியுமிழந்தாயோவென்ன = கண்களையே யன்றிக் காதுகளையும் இழந்தனையோவென்றுகூற; மந்தவுணர்வும்விழிக்குருடும்=குன்றியஉணர்ச்சியும் குருட்டுவிழியும்; கேளாச்செவியும் = (செவ்வியநெறி) கேளாச் செவிகளும்; இந்தவுலகத்துமக்கேயுள்ளனவென்று = இவ்வுலகத்திலே உங்களுக்கே உள்ளனவென்றிசைத்து; அன்பர்பின்னுமியம்புவார் = அந்நாயனார் பின்னரும் அறைவாராயினார்.—எ-று.

பித்தர்க்குத் தங்குணம் நூலினுஞ்செம்மையாம் ஆகலின் தாம்பிதற்றியகொள்கையே பேரறமென்பார் "சிந்தித்திந்தவறங்கேளாய்" என்றாரென்க. செவ்விய அறிவுமுதலியவையுடையரேனும் சிவபிரானைச்சிந்தித்தலும் தரிசித்தலும் அவர்திருப்புகழ்கேட்டலும் இல்லாவழி அவர் மந்தவுணர்ச்சிமுதலியவையுடைய மலினரேயென்பார் "மந்தவுணர்வும்விழிக்குருடுங் கேளாச்செவியுமற்றுமக்கே - யிந்தவுலகத்துள்ளன" என்றாரென்றவாறு. இதனை * "வன்பராய்முருடொக்குமென்சிந்தை மரக்கணென்செவி யிரும்பினும்வலிது" என ஆன்றோர்பழித்திருத்தலானுமுணர்க. ஓகாரம் வினா. மற்று அசை. ஏகாரம் பிரிநிலை. (அ)

வில்லாலெயின்மூன்றெரித்தபிரான்விரையார்கமலச்சேவடிக
ளல்லால்வேறுகாணேன்யானதுநீரறிதற்காரென்பார்
நில்லாநிலையீர்க்குணர்வின்றிநுங்கண்குருடாயென்கணுல
கெல்லாங்காண்பான்யான்கண்டாலென்செய்வீரென்றெடுத்துரைத்தார்.

(இ-ள்.) வில்லாலெயின்மூன்றெரித்தபிரான் =மேருமலையாகியவில்லைக்கொண்டு மும்மதில்களையும்நீறாக்கியமுதற்கடவுளின்;விரையார்கமலச்சேவடிகளல்லால்= பரிமளமிகுந்த தாமரைமலர்போலும் திருப்பாதங்களையன்றி; வேறுகாணேன்யான்= பிறிதொருபொருளையும் யான்கண்டிலேன்; அதுநீரறிதற்காரென்பார் = அந்த இரகசியத்தையுணர்தற்கு நீவிர்யாவர் என்று அறைந்து; நில்லாநிலையீர்க்கு = நிலைபெறாத தன்மையையுடைய நுங்கட்கு; உணர்வின்றிநுங்கண்குருடாய் = அறிவும்இன்றிக் கண்களுங்குருடாக; உலகெல்லாங்காண்பானென்கண்யான்கண்டால்=எவ்வுலகமும் பார்க்கும்படி என்கண்விளங்கயான்செய்தால்; என்செய்வீரென்றெடுத்துரைத்தார்= நீவிர் யாதுசெய்யக்கடவீரென்று வினவினார்.—எ-று.

எம்மையொத்ததொண்டர் அறிவரேயன்றி நீவிர் எங்ஙனம் அறிவீரென்பார் "அறிதற்குநீரார்" என்றாரென்க. என்பார் முற்றெச்சம். ஆக என்பது ஆயெனத் திரிந்தது. (கூ)

* திருவாசகம். செத்திலாப்பத்து-ல. அன்பராகி.

அருகராதுகேட்டுன்றெய்வத்தருளாற்கண்ணீபெற்றாயேற்
பெருகுமிவ்வூரினினாங்கள்பின்னையிருக்கிலோமென்று
கருகுமுருட்டுக்கைகளாற்கொட்டைவாங்கிக்கருத்தின்வழித்
தருகைக்கயிறுந்தறியுமுடன்பறித்தார்தங்கடலைபறித்தார்.

(இ-ள்.) தங்கடலைபறித்தாரருகராதுகேட்டு = தங்களுடைய தலையைப்பறித்தவராகிய அருகர்கள் அதனைக்கேட்டு; உன்றெய்வத்தருளாற்கண்ணீபெற்றாயேல் = நினது தெய்வத்தின்கிருபையால் நீ கண்களைப்பெற்றாயாயின்; பெருகுமிவ்வூரினினாங்கள்பின்னையிருக்கிலோமென்று = உயர்ந்த இவ்வூரிலே பின்பு யாங்கள்ஒருவரும் இரோமென்று; கருகுமுருட்டுக்கைகளால்=கருகியவன்மையையுடையகைகளினால்; கொட்டைவாங்கி=மண்வெட்டியைவலிந்துகவர்ந்துகொண்டு; கருத்தின்வழித்தரு= சிந்தனைபோல வழியைத்தெரிவிக்கும்; கைக்கயிறுந்தறியுமுடன்பறித்தார்=கைக்கயிற்றையும் தறிகளையும் உடனே கவர்ந்தார்.—எ-று.

கைக்கயிறுந்தறியுமில்லாவழி மண்ணைவெட்டுதலும் வெளியிற்சேர்த்தலும் இயலாவாகலின் "கருத்தின்வழித்தருகைக்கயிறுந்தறியும்" என்றும்; மயிர்களைமழிப்பதின்றிப் பறிப்பது அவர்மதக்கொள்கை யாகலின் "தலைபறித்தார்" என்றும் கூறினார். கொட்டு-மண்வெட்டி. (கப)

வெய்யதொழிலார்செய்கையின்மேல்வெகுண்டதண்டியடிகடா
மைகொள்கண்டர்பூங்கோயின்மணிவாயிலின்முன்வந்திறைஞ்சி
யையனேயின்றமணர்கடாமென்னையவமானஞ்செய்ய
நைவதானேனிதுதீரநல்குமடியேற்கெனவீழ்ந்தார்.

(இ-ள்.) வெய்யதொழிலார்செய்கையின்மேல்வெகுண்டதண்டியடிகள்=கொடுந்தொழிலுடையோர்செயலின்கண்ணே கோபமுதிர்ந்ததண்டியடிகளார்; மைகொள்கண்டர் = நஞ்சத்தைக்கொண்டகண்டத்தையுடைய நம்பெருமானது; பூங்கோயின்மணிவாயிலின்முன்வந்திறைஞ்சி = கமலாலயத்தினது அபிமுகவாயிலின் முன் கடுகிவந்துவணங்கி; ஐயனே = தலைவரே; இன்றமணர்களென்னையவமானஞ்செய்ய = இற்றைத்தினத்திலே சமணர்கள் என்னை மானபங்கஞ்செய்தலால்; நைவதானேன் = இடருழப்பதாயினேன்: இது தீரவடியேற்கு நல்குமெனவீழ்ந்தார்=இவ்வருத்தம்நீங்க எளியேனுக்குத் திருவருள்பாலியுமென்று இறைஞ்சினார்.—எ-று.

மேல் ஏழனுருபு. தாம் அசைகள். செய்தலாலென்பது செய்யவெனத்திரிந்தது.

பழுதுதீர்ப்பார்திருத்தொண்டர்பரவிவிண்ணப்பஞ்செய்து
தொழுதுபோந்துமடம்புகுந்துதூயபணிசெய்யப்பெறா
தழுதுகங்குலவர்துயிலக்கனவிலகிலலோகங்கண்
முழுதுமளித்தமுதல்வனார்முன்னின்றருளிச்செய்கின்றார்.

(இ-ள்.) பழுதுதீர்ப்பார்திருத்தொண்டர் = அன்பர்க்குவரும் ஆபத்தைத் தவிர்க்கின்ற அண்ணலாருடைய திருத்தொண்டரானவர்; பரவிவிண்ணப்பஞ்செய்து தொழுதுபோந்து மடம்புகுந்து = துதித்துமுறையிட்டுத் தொழுதுசென்று திருமடத்தையடைந்து; தூயபணிசெய்யப்பெறாதழுது = தூய்மைக்கேதுவாகிய திருத்தொண்டுபுரியாது துக்கித்து; கங்குலவர்துயில = அவ்விரவிலே அவர் நித்திரை செய்ய

அகிலலோகங்கண் முழுதுமளித்தமுதல்வனார் = எவ்வுலகங்களையும் சிருட்டித்தருளிய இறைவனார்; கனவின்முன்னின்றருளிச்செய்கின்றார் = அவர்சொப்பனத்திலே எதிர்நின்று அருளிச்செய்கின்றார்.—எ-று.

ஆபத்தையகற்றும் அருட்குணமுடையரென்பார் "பழுதுதீர்ப்பார்" என்றும், இவரியற்றுந்தொண்டு எவர்க்கும் தீர்த்தத்தினால் புறத்தும் அகத்தும் புனிதமளித்தற் கேதுவாவதென்பார் காரணத்தைக்காரியமாக உபசரித்துத் "தூயபணி" என்றும் கூறினார். (கஉ)

நெஞ்சின்மருவுங்கவலையினையொழிநீநினகண்விழித்தந்த
வஞ்சவமணர்தங்கண்கண்மறையுமாறுகாண்கின்றா
யஞ்சவேண்டாவென்றருளியவர்பானீங்கியவ்விரவே
துஞ்சுமிருளினரசன்பாற்றோன்றிக்கனவிலருள்புரிவார்.

(இ-ள்.) நெஞ்சின்மருவுங்கவலையினைநீயொழி = நினது மனத்திற்கொண்ட கவலையை நீவிடு; நின்கண்விழித்து = உன்னுடையகண்களைத் திறந்து; அந்தவஞ்சவமணர்தம் = அவ்வஞ்சனைமிக்கசமணர்களுடைய; கண்கண்மறையுமாறுகாண்கின்றாய் = கண்கள்மறையுந்தன்மையைக் கண்கூடாகக்காண்கின்றனை; அஞ்சவேண்டாவென்றருளியவர்பானீங்கி = நீ அஞ்சவேண்டுவதில்லையென அருளிச்செய்து அவரிடத்தினீங்கி; அவ்விரவே துஞ்சுமிருளினரசன்பாற்றோன்றி = அன்றிரவிலேயே நிலைபெற்றஇருளின்கண் அரசன்பாங்கரெழுந்தருளி; கனவிலருள்புரிவார் = கனவிலே கட்டளையிடுவாராயினார்.—எ-று.

விழித்துக்காண்கின்றாய் என இயையும். (கங)

தண்டிநமக்குக்குளங்கல்லக்கண்டவமணர்தரியாராய்
மிண்டுசெய்துபணிவிலக்கவெகுண்டானவன்பானீமேவிக்
கொண்டகுறிப்பாலவன்கருத்தைமுடிப்பாயென்றுகொளவருளித்
தொண்டரிடுக்கணீங்கவெழுந்தருளினாரத்தொழிலுவப்பார்.

(இ-ள்.) தண்டிநமக்குக்குளங்கல்லக்கண்டவமணர்தரியாராய் = தண்டியென்பவன் நமக்குத்தடாகம்வெட்டக்கண்ட சமணர்கள்பொறாராகி; மிண்டுசெய்துபணிவிலக்கவெகுண்டான் = கொடுமைபுரிந்து திருப்பணியைத்தடுத்தமையால் அவன் கோபமடைந்திருக்கின்றான்; அவன்பானீமேவி = அவனிடத்தேநீசென்று; அவன்கொண்டகுறிப்பாற்கருத்தைமுடிப்பாயென்று = அவன்கொண்டகுறிப்பின்படிஅவன் சிந்தனையைப் பூர்த்திசெய்வாயாகவென்று; தொண்டரிடுக்கணீங்கக்கொளவருளி = அந்நாயனார் துன்பம் அகலுமாறு (அரசனுக்கு)விளங்க அருளிச்செய்து; அத்தொழிலுவப்பாரெழுந்தருளினார் = அத்தொண்டைவிரும்பிய அண்ணலார் அவ்விடத்தில் அகன்றார்.—எ-று.

விலக்கலாலென்பது விலக்கவெனத்திரிந்தது. கொளவருளலாவது—அமணர் மாட்டே குற்றமுளதென்பதனை அரசன்மதிக்குமாறு அறைதல். (கச)

வேந்தனதுகண்டப்பொழுதேவிழித்துமெய்யின்மயிர்முகிழ்ப்பப்
பூந்தண்கொன்றைவேய்ந்தவனைப்போற்றிப்புலரத்தொண்டர்பாற்
சார்ந்துபுகுந்தபடிவிளம்பத்தம்பிரானாரருணினைந்தே
யேய்ந்தமன்னன்கேட்பவிதுபுகுந்தவண்ணமியம்புவார்.

(இ-ள்.) வேந்தனதுகண்டப்பொழுதேவிழித்து = அரசன் அங்ஙனம் சொப்பனங்கண்டு உடன்விழித்து; மெய்யின்மயிர்முகிழ்ப்ப = உடம்பிலுள்ளஉரோமங்கள் சிலிர்க்க; பூந்தண்கொன்றை வேய்ந்தவனைப்போற்றி = குளிர்ந்த கொன்றைமலரையணிந்த குழகனை வணங்கிக்கொண்டு; புலரத்தொண்டர்பாற்சார்ந்து புகுந்தபடி விளம்ப = விடியத் தொண்டர்பாலடைந்து நிகழ்ந்தவகையை விண்ணப்பிக்க; தம்பிரானருணினைந்து = தம்பெருமான் தம்பால்வைத்தருளிய திருவருளைச்சிந்தித்து; ஏய்ந்தமன்னன்கேட்பப் புகுந்தவண்ணமிதுவியம்புவார் = நண்ணிய அரசன்கேட்க நடந்தபடி இதுவென நவில்வார.—எ-று.

புலர்தல் - இருள்புலர்தல். (௧௫)

மன்னகேளியான்மழவிடையார்மகிழுந்தீர்த்தக்குளங்கல்லத்
துன்னுமமணரங்கணைந்தீதறமன்றென்றுபலசொல்லிப்
பின்னுங்கயிறுதடவுதற்கியான்பிணித்ததறிகளவைவாங்கி
யென்னைவலிசெய்தியான்கல்லுங்கொட்டைப்பறித்தாரென்றியம்பி.

(இ-ள்.) மன்னகேள்=அரசனே கேட்பாயாக; யான் மழவிடையார்மகிழுந்தீர்த்தக்குளங்கல்ல = யான் இளமைவாய்ந்த இடபவாகனத்தையுடைய இறைவர் விரும்புந் தீர்த்தக்குளத்தைவெட்ட; துன்னுமமணரங்கணைந்து = அடர்ந்த அருகர்கள் அங்கேவந்து; ஈதறமன்றென்றுபலசொல்லி = இதுதருமமல்லவென்று பலவாறு இழித்துக்கூறி, (இவ்வளவிலமையாது); பின்னும் யான்றடவுதற்குக் கயிறுபிணித்த தறிகளவைவாங்கி = பின்னரும், யான்தடவிச்செல்லுதற்குக் கயிற்றினைப்பிணித்த தறிகளையும்பிடுங்கி; என்னைவலிசெய்து = எனக்கும் இடுக்கண்விளைத்து; யான்கல்லுங்கொட்டைப்பறித்தாரென்றியம்பி=யான்வெட்டும் மண்வெட்டியையும் வலிந்து கவர்ந்தார என்று கூறி.—எ-று.

என்னை வேற்றுமைமயக்கம். (௧௬)

அந்தணனவுனக்கறிவுமில்லையென்றாரியானதனுக்
கெந்தைபெருமானருளாலியான்விழிக்கிலென்செய்வீரென்ன
விந்தவூரிலிருக்கிலோமென்றேயொட்டினாரிதுமேல்
வந்தவாறுகண்டிந்தவழக்கைமுடிப்பதெனமொழிந்தார்.

(இ-ள்.) அந்தணனவுனக்கறிவுமில்லையென்றார்=கண்களில்லாத நினக்கு அறிவுமில்லையென்று கழறினார்; யான்அதனுக்கு = யான் அம்மொழிக்கெதிராக; எந்தைபெருமானருளால் யான்விழிக்கில் = எமது பிதாவாகிய இறைவரருளால் யான் கண் விளங்கப்பெற்றால்; என்செய்வீரென்ன=நீவிர் யாதுசெய்யக்கடவீரென்று வினவ; இந்தவூரிலிருக்கிலோமென்றே யொட்டினார் = இந்தவூரில் இல்லாது அகல்கின்றோமென்று சபதம் இசைத்தனர்; இது மேல்வந்தவாறு=இது முன்னடந்தவிடயமாகும் (ஆகையால்); இந்த வழக்கைக்கண்டு முடிப்பதெனமொழிந்தார் = இந்தவழக்கை ஆய்ந்து இனித்தீர்மானித்தல்வேண்டுமெனச் செப்பினார்.—எ-று.

உம்மை இறந்ததுதழீஇயது. ஒட்டுதல் = உறுதிகூறல். (௧௭)

அருகர்தம்மையரசனுமங்கழைத்துக்கேட்கவதற்கிசைந்தார்
மருவுந்தொண்டர்முன்போதமன்னன்பின்போய்மலர்வாவி

யருகுநின்றுவிறற்றண்டியடிகடம்மைமுகநோக்கிப்
பெருகுந்தவத்தீர்கண்ணருளாற்பெறுமாகாட்டுமெனப்பெரியோர்.

(இ-ள்.) அரசனுமருசர்தம்மையங்கழைத்துக்கேட்கவதற்கிசைந்தார் = அரசனும் அமணரை அழைத்துவினவ அதற்குடன்பட்டனர்; மருவுந்தெண்டர்முன்போக மன்னன்பின்போய் = நிலைபெற்றதொண்டையுடைய தண்டியடிகளார் முற்செல்ல நிருபனும்பிற்சென்று; மலர்வாவியருகுநின்று = மலர்செறிந்த தீர்த்தத்தின்மருங்கே நின்றுகொண்டு; விறற்றண்டியடிகடம்மைமுகநோக்கி = வெற்றிபெற்ற தண்டியடிகளை முகத்தைநோக்கி; பெருகுந்தவத்தீர் = ஓங்கியதவத்தையுடையவரே; அருளாற் கண்பெறுமா காட்டுமென = கடவுளருளால் நீர்கண்பெறுவதைக் காட்டுமென்று கூற; பெரியோர் = அத்தண்டியடிகளார்.—எ-று.

அடிகடம்மைமுகநோக்கியென இரண்டனுருபு விரிந்தும் தொக்கும் இணைந்துவந்தன. ஆவினைப்பால்கறந்தான் என்றாற்போல. (கஅ)

ஏய்ந்தவடிமைசிவனுக்கியானென்னிலின்றென்கண்பெற்று
வேந்தனெதிரேதிருவாரூர்விரவுஞ்சமணர்கண்ணிழப்பா
ராய்ந்தபொருளுஞ்சிவபதமேயாவதென்றேயஞ்செழுத்தை
வாய்ந்ததொண்டரெடுத்தோதிமணிநீர்வாவிமுழுகினார்.

(இ-ள்.) யான் சிவனுக்கேய்ந்தவடிமையென்னில் = எளியேன் சிவபெருமானுக்கு இசைந்ததொண்டனானால்; வேந்தனெதிரேயின்றென் கண்பெற்று = இம்மன்னவனெதிரே இப்பொழுது என்கண்கள்விளங்க; திருவாரூர்விரவுஞ் சமணர் கண்ணிழப்பார் = இத்திருவாரூரிலே நிரம்பியுள்ள சமணர்களெல்லாம் தம்கண்களையிழப்பார்; ஆய்ந்தபொருளுஞ்சிவபதமேயாவதென்று = ஆராய்ந்துகொள்ளப்பட்ட ஐசுவரியமும் சிவபதமேஆகக்கடவது என்று; வாய்ந்ததொண்டரஞ்செழுத்தை யெடுத்தோதி = பதிந்ததொண்டையுடையநாயனார் பஞ்சாக்கரத்தையெடுத்து உச்சரித்து மணிநீர்வாவிமுழுகினார் = முத்துக்களைக்கொழிக்கும் நீரையுடைய திருக்குளத்திலே மூழ்கினார்.—எ-று.

இவ்விரண்டும் குளகம்.

யான்தொண்டனென்னில், என்கண்கள்விளங்க அமணர்கண்கள் இழத்தலும், ஆய்ந்துகொள்ளப்படும் ஐசுவரியம் சிவபதமேயாதலும் ஆகவென்று, அஞ்செழுத்தையுச்சரித்து, அத்தீர்த்தத்திலே மூழ்கினாரென்பதுகருத்து. கண்பெறல், கண்விளங்கல். சிவபதமேயென்னும் ஏகாரம் தேற்றம், ஏனயவை அசைகள்.

தொழுதுபுனன்மேலெழுந்தொண்டர்தூயமலர்க்கண்பெற்றெழுந்
பொழுதுதெரியாவகையமரர்பொழிந்தார்செழுந்தண்பூமாரி [தார்
யிழுதையமணர்விழித்தேகண்ணிழந்துதடுமாறக்கண்டு
பழுதுசெய்தவமண்கெட்டதென்றுமன்னன்பகர்கின்றான்.

(இ-ள்.) தொழுதுபுனன்மேலெழுந்தொண்டர்=அஞ்சலிசெய்து கொண்டே தீர்த்தத்தின்மீதெழுந்த அந்நாயனார்; தூயமலர்க்கண்பெற்றெழுந்தார் = களங்கமற்ற மலர்போலுங்கண்களைப்பெற்றுக் கரையேறினார்; அமரர்செழுந்தண்பூமாரி =தேவர்கள் செழித்துச்குளிர்ந்த புஷ்பவருஷங்களை; பொழுதுதெரியாவகைபொழிந்தார் =

சூரியனும்மறையும்படி சொரிந்தார்கள்; இழுதையமணர் = அறிவிலிகளாகிய அமணர்கள்; விழித்தேகண்ணிழந்துதடுமாறக்கண்டு = விழிக்கப்பெற்றே தம்முடைய கண்களிழந்து தடுமாறித்தலைநோக்கி; பழுதுசெய்தவமண் = அடியவர்க்குத்தீங்கியற்றிய அமணர்கூட்டம்; கெட்டதென்று மன்னன்பகர்கின்றான் = அழிந்ததென்று (சிந்தித்து) அரசன்கூறுகின்றான்.—எ-று.

பொழுது = சூரியன். பொழுதுதெரியாவகை பொழிதலாவது காலநீட்டித்துப்பொழிதலுமாம். விழித்தலையுடையதாயும் ஒளியிழந்தனவென்பார் "விழித்தேகண்ணிழந்து" என்றாரென்க. அமண் = சமணர்கூட்டம். (உ0)

தண்டியடிகடம்முடனேயொட்டிக்கெட்டசமண்குண்ட
ரண்டர்போற்றுந்திருவாரூர்நின்றுமகன்றுபோய்க்கழியக்
கண்டவமணர்தமையெங்குங்காணுவண்ணந்துரக்கவென
மண்டிவயவர்சாடுதலுங்கண்கள்காணார்மனங்கலங்கி.

(இ-ள்) தண்டியடிகடம்முடனேயொட்டிக்கெட்ட சமண்குண்டர் = தண்டியடிகளுயனுரோடு சபதம்கூறி நிலைகெட்ட சமண்கூட்டத்தார்; அண்டர்போற்றுந் திருவாரூர்நின்று மகன்றுபோய்க்கழிய = தேவர்கள்வழிபடும் திருவாரூரினின்றும் நீங்கிச்சென்று புறம்பாகும்படி; கண்டவமணர்தமையெங்குங்காணுவண்ணந்துரக்கவென = எதிர்ப்பட்டசமணர்களை எங்குமில்லாதபடி ஓட்டுகவென்று அரசன் உத்தரவு செய்ய; மண்டிவயவர்சாடுதலும் = முடுக்கி வீரர்கள்மோதுதலும்; கண்கள்காணார் மனங்கலங்கி = கண்களிழந்தஅவர் மனக்கலக்கம் அடைந்து.—எ-று.

கழியத்துரக்க எனஇயையும். (உக)

குழியில்விழுவார்நிலைதவிர்வார்கோலுமில்லையெனவுரைப்பார்
வழியீதென்றுதூறடைவார்மாண்டோமென்பார்மதிகெட்டீ
ரழியும்பொருளைவட்டித்திங்கழிந்தோமென்பாரரசனுக்குப்
பழியீதாமோவென்றுரைப்பர்பாய்களிழப்பார்பறிதலையர்.

(இ-ள்.) பறிதலையர் = பறித்ததலைகளையுடைய சமணர்கள்; குழியில் விழுவார் = பள்ளங்களில் விழுவர்; நிலைதவிர்வார் = இயற்கையாகிய இயல்பை இழப்பர்; கோலுமில்லையெனவுரைப்பார் = (ஊன்றிச்செல்லுதற்கு) ஒருகோலும் இல்லையேயென்று கூறுவர்; வழியீதென்றுதூறடைவார் = இதுவழியென்றுசென்று புதர்களையடைவர்; மாண்டோமென்பார் = இறந்தோமாயினோமென்பர்; மதிகெட்டீரழியும்பொருளை வட்டித்தழிந்தோமென்பார் = அறிவிலிகளே! யாம் மடியும்பொருளை உறுதியாகக்கூறி வாளாகெட்டோமென்பர்; அரசனுக்குப் பழியீதாமோ வென்றுரைப்பார் = இங்ஙனம் நம்மைத்துரத்துவது இறைவனுக்குப் பழிப்பாகுமோ என்று கூறுவர்; பாய்களிழப்பார் = பாய்களைக்கைவிடுவர்.—எ-று.

இவ்விரண்டும் குளகம். இங்கு-அசை. திகைத்துச்செயலிழந்துநிற்றலின்செத்தாரோடொப்போமென்பார், "மாண்டோம்" என்றும், நமதுசொற்படி துரத்தலின் இது அரசனுக்கு நகையன்றென்பார், "அரசனுக்குப்பழியீதாமோ" என்றும், பகர்ந்தாரென்க. அழியும்பொருளென்றது தமது மதசித்தாந்தத்திலே அறைந்தபடி சாதித்துப்பெற்ற சித்திகளை. வட்டித்தல்=உறுதியாகக்கூறல். அவிழ்ந்தபாயுடையை உடுத்தற்கும் அவகாசமில்லையென்பார், பாய்களிழப்பார் என்றார். (உஉ)

பீலிதடவிக்காணாதுபெயர்வார்நின் றுபேதுறுவார்
காலிேனேடுகைமுறியக்கன்மேலிட றிவீழ்வார்கள்
சாலநெருங்கியெதிரெதிரேதம்மிற்றுமேமுட்டிடுவர்
மாலுமனமுமழிந்தோடிவழிகளறியார்மயங்குவார்.

(இ-ள்.) பீலிதடவிக்காணாதுபெயர்வார் = மயிற்பீலியைத்த இடந்தெரியா மையால் எங்குந்தடவியும்அகப்படாமையின் ஏகுவர்; நின்றுபேதுறுவார்=நின்றுநிலை கலங்குவர்; காலினேடுகைமுறியக்கன்மேலிடறிவீழ்வார்கள் = கால்களோடுகரங்க ளும்முறியக் கல்லுகளில் இடறிவிழுவர்; சாலநெருங்கித்தம்மிற்றுமே யெதிரெதிர் முட்டிடுவர் = பெரிதும் நெருங்கித் தமக்குள் தாமே ஒருவரெதிர் மற்றொருவர் மோதுவர்; மாலுமனமு மழிந்தோடி வழிகளறியார் மயங்குவார் = தெளிவற்றமன முஞ் சிதைந்தோடி மார்க்கங்களறியாராய் மாழ்கிநிற்பர்.—எ-று.

ஏ, அசை. ஏனைச்செயலிழத்தலேயன்றி மயங்கியமனேடிடமும் இழந்தன ரென்பார் “ மாலுமனமுமழிந்தோடி” என்றார். (உங)

அன்னவண்ணமாரூரிலமணர்கலக்கங்கண்டவர்தாஞ்
சொன்னவண்ணமேயவரையோடத்தொடர்ந்துதுரந்ததற்பின்
பன்னும்பாழிபள்ளிகளும்பறித்துக்குளஞ்சூழ்கரைபடுத்து
மன்னனவனுமனமகிழ்ந்துவந்துதொண்டரடிபணிந்தான்.

(இ-ள்.) அன்னவண்ண மாரூரி லமணர்கலக்கங்கண்டு = அவ்வாறாகத் திரு வாரூரிலே அருகர் கலங்குதலைநோக்கி; அவர் சொன்னவண்ணமே அவரை யோடத் தொடர்ந்து துரந்ததற்பின் = அவர்கள் கூறியபடியே அவர்களை ஓடும்படி தொடர் ந்து ஓட்டியபின்; பன்னும்பாழிபள்ளிகளும்பறித்து=அவராற்கொண்டாடப்படும் கோயில்களையும் தவச்சாலைகளையும் களைந்து; குளஞ்சூழ்கரைபடுத்து = தடாகத் தைச்சூழ்ந்த கரையைச்சமைத்து; மன்னனவனுமனமகிழ்ந்துவந்து = வேந்தனும் உள்ளமுவந்து அணுகி; தொண்டரடிபணிந்தான் = தண்டியடிகளின் திருவடிக ளில் தாழ்ந்துவணங்கினன்.—எ-று.

தாம், அசை. ஏகாரம்-தேற்றம்; பிரிநிலையுமாம். (உச)

மன்னன்வணங்கிப்போயினபின்மாலுமயனுமறியாத
பொன்னங்கழல்கள்போற்றிசைத்துப்புரிந்தபணியுங்குறைமுடித்
துன்னுமனத்தாலஞ்செழுத்துமோதிவழுவாதொழுகியே [தே
மின்னுஞ்சடையாரடிநீழன்மிக்கசிறப்பின்மேவினர்.

(இ-ள்.) மன்னன் வணங்கிப்போயினபின் = அவ்வரசன் வணங்கி அகன்ற பின்பு; மாலுமயனுமறியாத = திருமாலும் பிரமதேவரும் தேடியறியாத (சிவபெரு மானுடைய); பொன்னங்கழல்கள் போற்றிசைத்து = பொன்னைநிகர்த்த திருவடிக ளைப்புகழ்ந்து; புரிந்தபணியுங் குறைமுடித்து = இயற்றிய திருப்பணியையும் பூர்த்தி யாகமுடித்து ; உன்னுமனத்தா லஞ்செழுத்துமோதி = உன்னுதற்கரியமனதினால் பஞ்சாக்கரங்களையும் உச்சரித்து; வழுவாதொழுகி = (சாற்றியநெறியிலே) தவறாது நடந்து; மின்னுஞ்சடையார் = பிரகாசிக்கின்ற சடைமுடியையுடைய தம்பெருமா னது; அடிநீழன்மிக்கசிறப்பின்மேவினர் = திருவடிநீழலின்கண்ணே மேம்பட்ட சிறப்போடுகலந்தார்.—எ-று.

போற்றிசைத்தல்-ஒருசொன்னீர்மைத்து. மனத்தாலுச்சரித்தலும், வாக்காற் பிறர்கேளாவண்ணம் உச்சரித்தலும், பிறர்கேட்கஉச்சரித்தலுமாகிய மானசம் மந்தம் வாசகமென்னும் மூவகைச்செபத்துள், மானசமே சிறந்ததாகலின், "மனத்தாலஞ்செழுத்துமோதி" என்றும், மந்திரசித்திக்கு முக்கியசாதனமாகப் பாதுகாப்பது நியதியாகலின் "வழுவாதொழுகி" என்றும், திருவடிநீழலின்கண்ணே பேரின்பநுகர்ச்சிமுதலிய பெருஞ்சிறப்புடைமையின் "அடிநீழன்மிக்கசிறப்பின்மேவினார்" என்றும் வியந்தனர். சிறப்பின்மேவுதலை "இறுமாந் திருப்பன்கொலோ வீசன் பல்கணத்தெண்ணப்பட்டுச் - சிறுமா னேந்திதன் சேவடிக்கீழ்ச்சென்றங் கிறுமாந் திருப்பன்கொலோ" என்னும் திருஅங்கமாலைத் தேவாரத்தானுமுணர்க. (உ௫)

கண்ணின்மணிகளவையின்றிக்கயிறுபிடித்துக்குளந்தொட்ட
வெண்ணில்பெருமைத்திருத்தொண்டர்பாதமிறைஞ்சியிடர்நீங்கி
விண்ணில்வாழ்வார்தாம்வேண்டப்புரங்கள்வெகுண்டார்வேற்காட்டூ
ருண்ணிலாவும்புகழ்த்தொண்டர்மூர்க்கர்செய்கையுரைக்கின்றாம்.

(இ-ள்) கண்ணின்மணிகளவையின்றி = கண்களிலே (பார்வைக்குரிய) கண்மணிகளின்மையால்; கயிறுபிடித்துக்குளந்தொட்ட = கயிற்றை ஆதாரமாகப் பற்றித் தடாகத்தைவெட்டிய; எண்ணில்பெருமைத்திருத்தொண்டர் = அளவுபடாத மேன்மைவாய்ந்த தண்டியடிகணாயனாருடைய; பாதமிறைஞ்சியிடர்நீங்கி = திருவடிகளைப் பணிந்து துன்பத்தினீங்கி; விண்ணில்வாழ்வார்வேண்டப்புரங்கள்வெகுண்டார் = தேவர்கள் பிரார்த்திக்கத் திரிபுரங்களையழித்த சிவபிரான் (வதிந்தருளும்); வேற்காட்டூருள்=திருவேற்காடென்னுந்தலத்திலே; நிலாவும்புகழ்த்தொண்டர் மூர்க்கர்செய்கையுரைக்கின்றாம் = சிறந்த புகழ்பெற்ற மூர்க்கநாயனாரியற்றிய திருத்தொண்டைக்கூறுவாம்.—எ-று.

இன்மையாலென்பது இன்றியெனத்திரிந்தது. தாம் அசை. உள் ஏழனுருபு.

தண்டியடிகணாயனார்புராணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௪௬௩.

திருச்சிற்றம்பலம்.

# மூர்க்கநாயனார்புராணம்.

மன்னிப்பெருகும்பெருந்தொண்டைவளநாடதனில்வயல்பரப்பு
நன்னித்திலவெண்டிரைப்பாலிநதியின்வடபாலலங்கொள்பதி
யன்னப்பெடைகள்குடைவாவியலர்புக்காடவரங்கினிடை
மின்னுக்கொடிகடுகிற்கொடிகள்விழவிற்காடுவேற்காடு.

(இ-ள்.) மன்னிப்பெருகும் பெருந்தொண்டைவளநாடதனில் = வதிந்தோங்கும் பெருமைபெற்ற வளப்பம்வாய்ந்த தொண்டைநாட்டிலே; நன்னித்திலம் வயல்பரப்பும் = மேன்மையுற்றமுத்துக்களை வயல்களில் ஒதுக்குகின்ற; வெண்டிரைப் பாலிநதியின் வடபால்=வெள்ளிய அலைகளையுடைய பாலியாற்றின் வடகரையிலே; நலங்கொள்பதி = நன்மையைக்கொண்டுவிளங்கும் நகரமாவது; அன்னப்பெடை

கள் குடைவாவியலர்புச்சாட = அன்னப்பேடுகள் தாம் நீராடுதற்குரிய தடாகங்களிற் செறிந்த மலர்களில் தங்கிவிளையாட; அரங்கினிடை மின்னுக்கொடிகள்=நடனசாலைகளிலே மின்னற்கொடியைநிகர்த்த மெல்லியலார்களோடு; துகிற்கொடிகள் விழவிற்காடு = வத்திரக்கொடிகளும் மங்கலத்தின்பொருட்டு ஆடுகின்ற; வேற்காடு = திருவேற்காடென்னும் நகரமாகும்.—எ-று.

ஆடுதல் நடித்தலும் அசைதலுமாம். அரங்கு உன்னதமுடைமையால் மேகங்கள்படிய, அவற்றினுள்ள மின்னுக்கொடிகளும் துகிற்கொடிகளும் விரவியசைகின்ற வேற்காடென்னலும் ஒன்று. (க)

செம்பொற்புரிசைத்திருவேற்காடமர்ந்தசெய்யசடைக்கற்றை
நம்பர்க்கும்பர்க்கமுதளித்துநஞ்சையமுதுசெய்தவருக்
கிம்பர்த்தலத்தில்வழியடிமையென்றுங்குன்றாவியல்பில்வருந்
தம்பற்றுடையநிலைவேளாண்குலத்திற்றலைமைசார்ந்துள்ளார்.

(இ-ள்.) செம்பொற் புரிசைத் திருவேற்காடமர்ந்த = செம்பொன்னாலாகிய மதில்களையுடைய திருவேற்காட்டில் வதிந்தருளிய; செய்யசடைக்கற்றை நம்பர்க்கு=சிவந்தசடைத்திரட்சியையுடைய நம்பரும்; உம்பர்க்கமுதளித்து நஞ்சையமுது செய்தவருக்கு = அமரர்களுண்ண அமுதளித்து அவர்பொருட்டு விடத்தையருந்தினவருமாகிய அமலருக்கு; இம்பர்த்தலத்தில் வழியடிமை = இவ்வுலகில் பரம்பரைத்தொண்டிலே; என்றுங் குன்றாவியல்பில்வரும் = எக்காலத்துங்குறையாத நிலைமையோடு விர்த்தித்துவருகின்ற; தம்பற்றுடைய நிலைவேளாண்குலத்திற் றலைமைசார்ந்துள்ளார் = தமக்குரிய அன்புநிலைமையுடைய வேளாண்மைக்குலத்திலே தலைமைபெற்றுள்ளவர்.—எ-று.

நம்பர். அன்பர்பால்விருப்புள்ளவர். பற்று. அன்பு. (உ)

கோதின்மரபிற்பிறந்துவளர்ந்தறிவுகொண்டநாடொடங்கி
யாதிமுதலாந்திருநீற்றினடைவேபொருளென்றறிந்தரனார்
காதலடியார்க்கமுதாக்கியமுதுசெய்யக்கண்டுண்ணு
நீதிமுறைமைவழுவாதநியதிபூண்டநிலைமையார்.

(இ-ள்.) கோதின்மரபிற் பிறந்துவளர்ந்தறிவுகொண்டநாடொடங்கி = மாசற்ற அம்மரபிலே அவதரித்து வளர்ச்சியுற்று அறிவுமுதிர்ந்தகாலமுதல்; ஆதிமுதலாந்திருநீற்றினடைவேபொருளென்றறிந்து = முதற்பொருளையடைதற்கு முந்திய சாதனமாகிய திருநீற்றின்சார்பே உண்மைநெறியென்று தெளிந்து; அரனார் காதலடியார்க்கமுதாக்கி = சிவபெருமானிடத்து அன்புடைய திருத்தொண்டர்களுக்கு அமுதளித்து; அமுதுசெய்யக்கண்டுண்ணும் = அவர்திருவமுதருந்தச்செய்து பின்னர்த் தாம் அருந்தும்; நீதிமுறைமைவழுவாத நியதிபூண்டநிலைமையார்=ஒழுக்கநிலைமைதவறாத உறுதியைமேற்கொண்ட குணத்தையுடையவர்.—எ-று.

பரம்பரைத்தொண்டுடையரென்பார் "கோதின்மரபு" என்றும், சாதனங்களுள்ளே நீறுமுந்தியதென்பார், "முதலாந்திருநீற்றினடைவே" என்றும், அந்நெறியை விரும்பினார் முக்கியமாக அநுட்டிக்கற்பாலது அடியவர்க்கமுதுசெய்வித்துச் சேடம்புசித்தலேயென்பார் "அடியாரமுதுசெய்யக்கண்டுண்ணும்நிலைமையார்" என்றும் கூறினார். ஆதியென்புழி இரண்டனுருபும் பயனும் உடன்றொக்கன. (ங)

தூயவடிசினெய்கன்னற்சுவையின்கறிகளவையமைத்து
மேயவடியார்தமைப்போற்றிவிருப்பாலமுதுசெய்வித்தே
யாயபொருளுமவர்வேண்டும்படியாலுதவியன்புமிக
வேயுமாறுநாடோறுமினையபணிசெய்தின்புற்றார்.

(இ-ள்.) மேயவடியார்தமைப்போற்றி = வந்த அடியவர்களை வணங்கி அவர்க்கு; தூயவடிசினெய்கன்னற் சுவையின்கறிகளவையமைத்து = சுத்தமாகிய அன்னம் நெய் சர்க்கரை சுவைகளையுடைய இனியகறிகள் முதலியவைபடைத்து; விருப்பாலமுதுசெய்வித்து = சிறந்தகாதலோடும் திருவமுதுபுரிவித்து; ஆயபொருளுமவர் வேண்டும்படி யுதவி = விருத்தியாயுள்ள பொருள்களையும் அவர் வேண்டியவண்ணங்கொடுத்து; அன்புமிகவேயுமாறு நாடோறு மினையபணிசெய்தின்புற்றார் = அன்புமேலிடுதலால் தக்கபடி அனுதினமும் இத்தகைய தொண்டுசெய்து இன்பமிக்கார்.—எ-று.

ஏ. ஆல். அசைகள். (ச)

இன்னசெயலினொழுகுநாளடியார்மிகவுமெழுந்தருள
முன்னமுடைமையானபொருண்முழுதுமாளவடிமையுடன்
மன்னுகாணியானநிலமற்றுமுள்ளதிறம்விற்றே
யன்னமளித்தேமேன்மேலுமாராமனத்தாராயினார்.

(இ-ள்.) இன்னசெயலினொழுகுநாளடியார்மிகவுமெழுந்தருள = இச்செய்கையில் நடந்துவருநாளில் அடியவர்கள் பெரிதும் எழுந்தருளுதலால்; முன்னமுடைமையானபொருண்முழுதுமாள = முன்னர்த்தம்பாலிருந்த திரவியமுற்றும் செலவாய்விட (அதன்பின்பு); அடிமையுடன் = தமக்குள்ள அடிமையரோடு; மன்னுகாணியானநிலம் = நிலைபெற்ற சுதந்தரமாகவுள்ளநிலம்; மற்றுமுள்ளதிறம்விற்று = அன்றியும் பலவகையாயுள்ள பொருள்கள் ஆகிய இவற்றையெல்லாம்விற்று; மேன்மேலுமன்னமளித்து = (அடியவர்க்கு) மேலுமேலும் திருவமுது அளித்து; ஆராமனத்தாராயினார் = அதிலே பூர்த்தியடையாத திருவுள்ளத்தராயினார்.—எ-று.

எழுந்தருள என்பது எச்சத்திரிபு. அடிமையை விற்றலாவது முற்றொகை கொடுத்து அடிமைகொள்ளப்பட்டானொருவனைப் பிறர்க்கு அடிமையாக்கி அத்தொகைபெறுதல். விற்றேயென்னும் ஏகாரம் வேறு தொழின்முயற்சியை விலக்கிநிற்றலின் பிரிநிலை. அளித்தும் என்னும் உயர்வுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. ஏ. அசை. மேன்மேலுமென்பது இடைவிடாமைமேற்று. ஆராமையாவது "மண்ணினிற்பிறந்தார்பெறும்பயன் மதிசூடும் அண்ணலாரடியார்தமையமுது செய்வித்தல்" ஆம் ஆகலின், செய்வித்தமைபோதுமெனத் திருப்திபிறவாமை. (ரு)

அங்கணவ்வூர்தமக்கொருபற்றடியார்தங்கட்கமுதாக்க
வெங்குங்காணுவகைதோன்றவிலம்பாடெய்தியிருந்தயர்வார்
தங்கும்வகையாற்றாமுன்புகற்றதன்மைநற்சூதாற்
பொங்கும்பொருளாக்கவுமங்குப்பொருவாரின்மையினிற்போவார்.

(இ-ள்.) அங்கணவ்வூரடியார்தங்கட்கமுதாக்க = அங்கேஅத்தலத்தில் அடியவர்களுக்கு அமுதுசெய்வித்தற்பொருட்டு; தமக்கொருபற்று = தமக்கு ஒரு ஆதார

மாயுள்ளசெயல்; எங்குங்காணுவகைதோற்ற=எவ்விடங்களினுங் கிடையாமை யுண்டாகலால்; இலம்பாடெய்தியிருந்தயர்வார் = வறுமையுடையராயிருந்துவருந்துவாராய்; தங்கும்வகையாற்றமுன்புகற்றதன்மைநற்சூதால் = நிலைபெறும்படி தாம் முன்னர்ப்பயின்றுள்ள நீதியியல்புடையசூதினால்; பொங்கும்பொருளாக்கவும்=மிக்க பொருளையீட்டுதற்கும்; அங்குப்பொருவாரின்மையினிற் போவார் = அங்கே ஆடுவாரின்மையால் அத்தலத்தைவிட்டகல்வார்.—எ-று.

பற்றாயுள்ளசெயலைப் பற்றென்றும், சூதெனும்பெயர்க்கமையச்சூதாகப்பொருதலின்றி நீதியிற்பொருதலே இவர்பயின்றநெறியென்பார் "முன்புகற்றநற்றன்மைச்சூது"என்றும் கூறினார். தோன்ற என்பது ஏதுப்பொருளில்வந்த எச்சத்திரிபு. ஆல் அசை. உம்மை இழிவுசிறப்பு. (சு)

பெற்றமேறிப்பலிக்குவரும்பெருமானமருந்தானங்க
ளுற்றவன்பாற்சென்றெய்தியுருகுமுள்ளத்தொடும்பணிந்து
கற்றசூதானியதியாங்கருமமுடித்தேகருதாரூர்
செற்றநிலையார்திருக்குடந்தையடைந்தார்வந்துசிலநாளில்.

(இ-ள்.) பெற்றமேறிப்பலிக்குவரும்=இடபத்தில் ஆரோகணித்துப் பிச்சைக்கு எழுந்தருளும்; பெருமானமருந்தானங்கள்=சிவபெருமான் வீற்றிருக்கின்ற திருத்தலங்கடோறும்; உற்றவன்பாற்சென்றெய்தி = உயர்ந்தபத்தியோடு போயடைந்து; உருகுமுள்ளத்தொடும் பணிந்து = உருகுஞ்சிந்தையுடன் வணங்கி; நியதியாங்கருமம் = (அடியவர்க்கமுதுபடைத்தலாகிய) தமது நியமத்தொழிலை; கற்றசூதால் முடித்து = பூர்வம்பயின்றுள்ள சூதாட்டத்தாற் பூர்த்தியாக்கிக்கொண்டு; கருதாரூர் செற்றநிலையார்=பகைவர்களுடைய முப்புரங்களையெரித்த நிலைமையையுடைய பரமர் உறையும்; திருக்குடந்தை சிலநாளில் வந்தடைந்தார்=திருக்குடந்தையென்னுந் தலத்தைச் சிலதினத்தில் வந்துசேர்ந்தார்.—எ.று.

திருக்குடந்தை - கும்பகோணம். (எ)

இருளாருமணிகண்டரடியார்க்கின்னமுதளிக்கப்
பொருளாயமெய்துதற்குப்புகழ்க்குடந்தையம்பலத்தே
யுருளாயச்சூதாடியுறும்பொருள்வென்றனநம்ப
ரருளாகவேகொண்டங்கமுதுசெய்வித்தின்புறுவார்.

(இ-ள்.) இருளாரு மணிகண்டரடியார்க்கு = இருள்போலும் நீலகண்டத்தராகிய இறைவருடைய அடியவர்களுக்கு; இன்னமுதளிக்கப் பொருளாயமெய்துதற்கு = இனிய அமுதுசெய்வித்தற்குப் பொருள்வரவு அடைதற்காக; புகழ்க்குடந்தை யம்பலத்து=சீர்த்திபெற்ற திருக்குடந்தையிலுள்ள அம்பலத்தி லிருந்துகொண்டு; உருளாயச்சூதாடி = உருளுகின்றசூதாடுகருவிகளைக்கொண்டு சூதாடி; வென்றனவுறும்பொருணம்பரருளாகவேகொண்டு = வென்றமையாலுற்ற பொருள்களை விமலரருளால் வந்தனவாகக்கொண்டு; அங்கமுதுசெய்வித்தின்புறுவார் = அத்தலத்திலே அடியவர்களுக்குத்திருவமுதமைத்து மகிழ்வார்.—எ-று.

ஆரும்-உவமவுருபு. ஆயம்-பொருள்வரவு; சூதாடுகருவி. அம்பலம்-பலரும் கூடும்பொதுஇடம். அருளால்வரும்பொருளை அருளென்றுபசரித்தார். ஏகாரங்களுள் முந்தியது அசை. பிந்தியது தேற்றம். (அ)

முற்சூதுதாந்தோற்றுமுதற்பணயமவர்கொள்ளப்
பிற்சூதுபலமுறையும்வென்றுபெரும்பொருளாக்கிச்
சொற்சூதான்மறுத்தாரைச்சுரிகையுருவிக்குத்தி
நற்சூதர்மூர்க்கரெனும்பெயர்பெற்றார்நானிலத்தில்.

(இ-ள்.) முற்சூதுதாந்தோற்று = முந்தியசூதாட்டத்திலே தாம் தோல்வியுற்று; முதற்பணயமவர்கொள்ள = முன்வைத்தாடியபொருளை அவர்கைக்கொள்ளவிடுத்து; பிற்சூதுபலமுறையும் வென்று பெரும்பொருளாக்கி = பின்னர்ப் பலமுறையும் சூதில்வென்று பெரும்பொருள் ஈட்டுதலால்; நற்சூதர் = நல்ல சூதரென்னும் பெயர்பெற்ற இந்நாயனார்; சொற்சூதான்மறுத்தாரை = சூதாகிய சொற்களால் தவறியுரைத்தவரை; சுரிகையுருவிக்குத்தி = தமது உடைவாளை உருவிக்குத்துதலால்; நானிலத்தில் மூர்க்கரெனும் பெயர்பெற்றார் = இவ்வுலகில் மூர்க்கரெனுந்திருநாமத்தையும் பெற்றார்.—எ-று.

பொருளாக்கி நற்சூதரெனும்பெயர்பெற்றார், குத்தி மூர்க்கரெனும்பெயர்பெற்றார் என முறையே இயைதலின், இது முறைநிரனிறை. ஆக்கி குத்தி என்பவை வினையெச்சத்திரிபுகள். ஆடுவார் நீங்காமைப்பொருட்டு முன்தோற்றுத் தம்பொருளீந்து, பின் பலமுறையும்வென்று அவர்பொருளகவர்தல், இத்தொழிற்கு இயல்பாகலின், அங்ஙனம் கிரமப்படி ஆடுதலால் "நற்சூதர்" என்றும், இவ்வுலகம் குறிஞ்சி முல்லை மருதம் நெய்தலென்னும் நால்வகை நிலங்களையுடைமையால் "நானிலம்" என்றும் கூறினர். (௯)

சூதினில்வென்றெய்துபொருடுரிசற்றநல்லுணர்விற்
றீதகலவமுதாக்குவார்கொள்ளத்தாந்தீண்டார்
காதலுடனடியார்களமுதுசெய்யக்கடைப்பந்தி
யேதமிலாவகைதாமுமமுதுசெய்தங்கிருக்குநாள்.

(இ-ள்.) சூதினில்வென்றெய்துபொருள் = சூதாட்டத்தில் வெல்லுதலால் வந்த பொருளை; துரிசற்றநல்லுணர்விற்றீதகலவமுதாக்குவார்கொள்ள = குற்றமற்ற நல்லுணர்ச்சியோடு பழுதகலத் திருவமுதுசமைப்போர் கைக்கொள்ள; தாந்தீண்டார் = தாம் அப்பொருளைத் தொடாதவராய்; காதலுடனடியார்களமுதுசெய்ய = விருப்பத்தோடு திருத்தொண்டர்கள் திருவமுதுசெய்ய; ஏதமிலாவகை = தம்மைக் குற்றம் அடையாவண்ணம்; கடைப்பந்திதாமுமமுதுசெய்தங்கிருக்குநாள் = கடைப்பந்தியிலே தாமும்அருந்தி அங்குவசிக்குங்நாளில்.—எ-று.

வென்று வினையெச்சத்திரிபு. தீண்டார் = முற்றெச்சம். அடியவர்பொருட்டு அப்பொருளீட்டுதலின் அதனைத் தாம் தொடாதவராகி, பரிசனங்களும் தக்கவரோயாகலின் அவர்களால் அப்பொருள்கொண்டு திருவமுது அமைப்பித்து, அடியவர் உண்டபின், எஞ்சியசேடத்தைத் தாம் அருந்துவர் என்றபடி. (௧0)

நாதன்றனடியார்க்குநல்லடிசிலூட்டு
மாதரவினலமுதுசெய்வித்தங்கருளாலே
யேதங்கள்போயகலவிவ்வுலகைவிட்டதற்பின்
பூதங்களிசைபாடவாடுவார்புரம்புக்கார்.

(இ-ள்.) நாதன்றனடியார்க்கு = சிவனடியவர்களுக்கு; நல்லடிசிஞேடோறு மாதரவிஞலமுதுசெய்வித்து = சிறந்தவுணவைத் தினமும் அன்பினுல் அமுதுசெய் வித்து; அருளாலேயேதங்கள்போயகல=(விமலர்) திருவருளால் தம்முடைய துன் பமெல்லாம் விட்டொழிய; இவ்வுலகைவிட்டதற்பின் = இவ்வுலகையகன்றதன்பின் னர்; பூதங்களிசைபாட = பூதகணங்கள் தம்முடைய புகழைப்பாடும்படி; ஆடுவார் புரம்புக்கார் = நிருத்தஞ்செய்வாராகிய நிமலரது சிவலோகத்தையடைந்தார்-எ-று.

நல்லடிசிலாவது-முறியாமூரலொடு முப்பழமுடையதாய்அறுசுவையும்அமை ந்த அரியவுணவு. அங்கு ஏ-அசைகள். (கக)

வல்லார்கடமைவென்று சூதினுல்வந்தபொரு
ளல்லாருங்கறைக்கண்டரடியவர்கடமக்காககு
நல்லார்நற்சூதாடுமூர்க்கர்கழுலும்வணங்கிச்
சொல்லார்சீர்ச்சோமாசிமாறர்திறஞ்சொல்லுவாம்.

(இ-ள்.) சூதினுல்வல்லார்கடமைவென்றுவந்தபொருள் = சூதாட்டத்திலே வல்லவர்களைவென்று அதனுல்வந்தபொருளை; அல்லாருங்கறைக்கண்டரடியவர்க டமக்கு = இருள்போலுங் காளகண்டத்தையுடைய இறைவரடியவர்களுக்கு; ஆக் குநல்லார் = (திருவமுதுக்கு) ஆக்கிய செவ்வியகுணமுடையவராய்; நற்சூதாடு மூர்க்கர்கழலும்வணங்கி = முறைப்படி சூதாடிய மூர்க்கநாயனார் திருவடிகளை யாம் வணங்கிக்கொண்டு; சொல்லார்சீர்ச்சோமாசிமாறர்திறஞ்சொல்லுவாம் = சீர்த்தி பெற்ற சிறப்பையுடைய சோமாசிமாறநாயனார் திருத்தொண்டைச் செப்புவாம்.

வல்லார்-சூதாடுகருவியர் என்னலும் ஒன்று. (கஉ)

மூர்க்கநாயனார்புராணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௪எரு.

திருச்சிற்றம்பலம்.

# சோமாசிமாறநாயனார்புராணம்.

சூதம்பயிலும்பொழிலம்பரிற்றூயவாய்மை
வேதம்பயிலுமறையாளர்குலத்தின்மேலோ
ரேதம்புரியுமெயிலெய்தவர்க்கன்பர்வந்தாற்
பாதம்பணிந்தாரமுதூட்டுநற்பண்பின்மிக்கார்.

(இ-ள்.) சூதம்பயிலும்பொழிலம்பரில் = மாமரங்களடர்ந்த சோலைகள்வாய் ந்த திருவம்பர் என்னுந் திருத்தலத்தில்; தூயவாய்மை வேதம்பயிலு மறையாளர் குலத்தின்மேலோர் = சுத்த சத்தியநிலைமையுடைய வேதங்களிற்பயிலும் அந்தண குலத்திலே மேம்பட்டவர்; ஏதம்புரியுமெயிலெய்தவர்க்கன்பர்வந்தால் = தேவர்முத லியவர்க்குத் தீங்கியற்றிய முப்புரங்களையழித்த முதல்வருக்குரிய அன்பர்வ ரின் = பாதம்பணிந்தாரமுதூட்டுநற்பண்பின்மிக்கார் = அவர் திருவடிகளில் வண ங்கி அரிய உணவை உண்பிக்கும் நற்குணத்திற்சிறந்தார்.—எ-று.

எல்லாக்கலைக்குமுதலாகி யாவுந்தரித்தும் பொய்ப்பொருண்மை புல்லாத தாகலின் "தூயவாய்மைவேதம்" என்றும், திரிபுராதியர் செல்லும் உலகங்களில்



சோமாசிநாயனர்.

தாமுஞ்சென்று, அவற்றையும் அவற்றிற்குத் தலைவராதியரையும் அழிவுசெய்தமை யின, "ஏதம்புரியுமெயில்"என்றும், அடியவரைவணங்கி அமுதூட்டலினும் அருங்கு ணமின்மையின் "அன்பர்வந்தாற்பாதம்பணிந்தாரமுதூட்டு நற்பண்பின் மிக்கார்" என்றும் கூறினார். புரியும்-காலமயக்கம். (ச)

யாழின்மொழியாடனிப்பாகனைப்போற்றும்யாக
மூழின்முறைமைவழுவாதுலகங்களான
வேழுமுவப்பப்புரிந்தின்புறச்செய்தபேற்றால்
வாழுந்திறமீசன்மலர்க்கழல்வாழ்த்தலென்பார்.

(இ-ள்.) யாழின்மொழியாடனிப்பாகனை = யாழிசைபோலும் இனியமொழி யமைந்த உமாதேவியாரை ஒருபாகத்திலுடைய இறைவனை; போற்றும்யாகமூ ழின்முறைமைவழுவாது = வழிபடும் யாகங்களைக் கிரமத்தினிலைமைதவறாமல்; உல கங்களான வேழுமுவப்பப்புரிந்தின்புறச்செய்தபேற்றால் = ஏழுலகங்களுமகிழ இய ற்றி இன்புறுவித்தசெயலால்; வாழுந்திறம் = வாழும்பயன்யாதெனில்?; ஈசன்மலர் க்கழல் வாழ்த்தலென்பார் = சிவபெருமானுடைய செந்தாமரைமலர்போலும் திருவ டிகளைத் துதித்தலேயென்பார்.—எ-று.

இந்நாயனார் எழுலகமும் இன்புறப் பற்பலயாகம் இயற்றியதுமன்றி, ஒரு யாகத்திலே, தமது பிரார்த்தனைப்படி சிவபெருமான் பிறர்க்குப்புலப்படாவண்ணம் தம்முடைய கணங்கள் புலையுருத்தாங்கி மருங்குவரத், தாமும் அங்குள்ள அந்த ணரெல்லாம் அநுசிதமென ஓட்டமெடுக்கும்படி அத்தசையராய்வந்து, தமக்கு மாத்திரம் உண்மை விளங்க, அவிப்பாகம் ஏற்று அருந்தித் திருவருள்பாலிக்க; யா கத்தால் சோமயாசி எனப்பெயர்பெற்றவராகலின் "யாகமியற்றியபேற்றால் வாழுந் திறமீசன் மலர்க்கழல்வாழ்த்தலென்பார்"என்றார். இச்சரித்திரவிரிவை உபமன்னிய பக்தவிலாசமுதலியவற்றுட்காண்க. சோமாசி சோமயாஜி என்பதன்மரூஉ. சோம லதைகொண்டு யாகத்தைச்செய்தவரென்பது பொருள். லதை - கொடி. இவர்க்கு சோமாசியென்பது சிறப்புப்பெயரும் மாறரென்பது இயற்பெயருமாக இருக்கலாம்.

எத்தன்மையராயினுமீசருக்கன்பரென்றா
லத்தன்மையராநம்மையாள்பவரென்றுகொள்வார்
சித்தந்தெளியச்சிவனஞ்செழுத்தோதுவாய்மை
நித்தந்நியமமெனப்போற்றுநெறியினின்றார்.

(இ-ள்.) ஈசருக்கன்பரென்றால் = இறைவருக்கன்பராயின்; எத்தன்மையரா யினுமத்தன்மையர்நம்மையாள்பவரென்றுகொள்வார் = எவ்வியல்புடையோரும்அவர் நம்மை அடிமைகொள்ளத்தக்கவரென்று சிந்திப்பவர்; சித்தந்தெளியச்சிவனஞ்செழுத் தோதுவாய்மை = அந்தக்கரணசுத்தியாக அமலருக்குரிய பஞ்சாக்கரத்தை உச்சரிக் கும் உண்மைநெறியை; நித்தந்நியமமெனப்போற்றுநெறியினின்றார் = அநுதினமும் நியமமாகப்பாராட்டும் அவ்வொழுக்கத்தில் நிலைபெற்றவர்.—எ-று.

எத்தன்மையரென்றது உறுப்பிலாதவர் இழிகுலத்தவர் நல்லொழுக்கமில்ல வர் முதலிய பலதிறத்தரையும் தழுவிநின்றது. உம்மை இழிவுசிறப்பு. ஆம்-அசை. அந்தக்கரணசுத்தியாவது உலகவாஞ்சையொழிதல், * "ஊனி லுயிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்-ஞான விளக்கினை யேற்றி நன்புலத்தேனை வழிதிறந் தேத்து வார்க் கிடர்-ஈன கெடுப்பன வஞ்செ ழுத்துமே" ஆகலின் "சித்தந்தெளியச்சிவனஞ்செழுத்

* தேவாரம் பஞ்சாக்கரத்திருப்பதிகம்.

தோழவாய்மை" என்றும், துஞ்சலுந் துஞ்சலிலாதபொழுதினும், நெஞ்சகனைந்து நாடொறுநினைத்தல் வேண்டுமாகலின்,"நித்தநியமமெனப்போற்றுநெறியினின்றார்" என்றுங்கூறினார். (௩)

சீருந்திருவும்பொழியுந்திருவாரூரெய்தி
யாரந்திகழ்மார்பினனுக்கவன்றொண்டர்க்கன்பாற்
சாரும்பெருநண்புசிறப்பவடைந்துதங்கிப்
பாரும்விசும்பும்பணியும்பதம்பற்றியுள்ளார்.

(இ-ள்.) சீருந்திருவும்பொழியுந்திருவாரூரெய்தி = வேண்டியவர்க்குப் பல சிறப்புகளையும் ஐசுவரியங்களையும் வேண்டியாங்கு அளிக்கும் திருவாரூரென்னும் திவ்வியதலத்தையடைந்து; ஆரந்திகழ்மார்பினனுக்கவன்றொண்டர்க்கு=மணிமாலை விளங்கப்பெற்ற மார்பினையுடையராய்ச் சிவபெருமானுக்கு அணுக்கத்தொண்டராகிய திருநாவலூராரிடத்து; அன்பாற்சாரும்பெருநண்பு சிறப்பவடைந்துதங்கி=அன்பாலுண்டாகிய அரியநட்பைப் பெரிதும்பேணி உடன்வசித்து; பாரும்விசும்பும்பணியும்பதம்பற்றியுள்ளார் = மண்ணுலகமும் விண்ணுலகமும் வந்துவணங்கும் அத்திருநாவலூரர் திருவடிகளையே சார்பாகப்பற்றியுள்ளவர்.—எ-று.

வன்றொண்டர்க்கு வேற்றுமைமயக்கம். தேவரும்முனிவரும்நடுங்கச் சீறிவந்த ஆலாகலத்தைப் பூர்வம் சிற்றுருவாக்கிய சீர்மையோடு, இப்பொழுதும் தம்பிரான் தோழருமாகி, யாவரும் இறைஞ்சும் இறைமைபெற்றுடைமையின், "பாரும்விசும்பும்பணியும்பதம்" என்றார். விசும்பும்பணிதலுடைமை வெள்ளானைச்சருக்கத்து முணர்க. பற்றுதலாவது-எளிதிற் சிவகதியுய்ப்பதெனத் தேர்ந்துதுணைக்கோடல்.(௪)

துன்றும்புலனைந்துடனாறுதொகுத்தகுற்றம்
வென்றிங்கிதுநன்னெறிசேரும்விளக்கமென்றே
வன்றொண்டர்பாதந்தொழுதானசிறப்புவாய்ப்ப
வென்றுங்கிலவுஞ்சிவலோகத்திலின்பமுற்றார்.

(இ-ள்.)துன்றும்புலனைந்துடன்=கலந்தசத்தாதிவிடயங்களைந்தோடு; தொகுத்தகுற்றமாறுவென்று=செறித்தகாமாதி ஆறுகுற்றங்களையும் வென்று; இது நன்னெறிசேரும்விளக்கமென்றே=இவ்வழிபாடு முத்திநெறியடைதற்கு ஏதுவாகிய தீபமாகுமெனச் சிந்தித்தே; வன்றொண்டர்பாதந்தொழுது = வன்றொண்டப்பெருமானுடைய திருவடிகளை வழிபட்டு; ஆனசிறப்புவாய்ப்ப=(அதனால்) தமக்குரிய முத்தி சித்தித்தலால்; என்றுங்கிலவுஞ்சிவலோகத்திலின்பமுற்றார் = எக்காலத்தும் அழிவின்றிவிளங்கும் சிவலோகத்தையடைந்து பேரின்பம்பெற்றார்.—எ-று.

சத்தாதி-சத்தபரிசரூபரசகந்தங்கள். காமாதி-காமக்குரோதலோபமோகமதமாச்சரியங்கள். இங்கு-அசை. ஏ-தேற்றம். சிறப்பு-முத்தி. வாய்த்தல்-சித்தித்தல். வாய்ப்ப வினையெச்சத்திரிபு. வன்றொண்டர்பாதவழிபாடு அந்தகாரத்தையோட்டி நன்னெறியைவிளக்கலின் "நன்னெறிசேரும்விளக்கம்" என்றும், அதனாற் பெற்ற முத்தி சலனமின்றிச் சித்தித்தமையின் "சிறப்புவாய்ப்ப" என்றும், இவ்வழிபாடே சிவபதவிக்கு ஏதுவாகலின் "சிவலோகத்திலின்பமுற்றார்" என்றும் இயம்பினார். (௫)

வேறு.

பணையுந்தடமும்புடைசூழுமொற்றியூரிற்பாகத்தோர்
துணையுந்தாமும்பிரியாதார்தோழர்தம்பிரானுரா

பிணையுங்கொங்கைச்சங்கிலியாரெழிலின்மென்பணைத்தோளெய்துவிக்க
வணையுமொருவர்சரணமேயரணமாகவடைந்தோமே.

(இ-ள்.) பணையுந்தடமும் புடைசூழு மொற்றியூரில் = வயல்களும் குளங்களும் மருங்கிலே நெருங்கிய திருவொற்றியூரில்; பாகத்தோர்துணையுந்தாமும்பிரியாதார் = ஓர்பாகத்திலே தமக்குத்துணையாகிய உமாதேவியாருந் தாமும் பிரியாதவராய்; தோழத்தம்பிரானுரை = தமக்குத்தோழருமாகிய தலைவரை; இணையுங் கொங்கைச்சங்கிலியார் = ஒன்றற்கொன்று ஒப்பாகவிளங்கும் தனங்களைப்பெற்ற சங்கிலிநாச்சியாருடைய; எழின்மென்பணைத்தோள் = அழகையும் மென்மையையும் அமைந்த மூங்கில்போலுந் தோள்களை; எய்துவிக்கவணையுமொருவர் சரணமே = அணைவிக்கும்படி அடைந்து பிரார்த்தித்த திருநாவலூரர் திருவடிகளையே; அரணமாகவடைந்தோம் = ஆபத்துவராமற்காக்கும் கோட்டையாக அணுகினோம்.—எ-று.

ஒற்றியூரில் தம்பிரானுரை அணையுமொருவரென இயையும். இணைதல்-வேறு ஒப்பின்றித் தமக்குத்தாமே ஒத்தல்.அன்றிப்,புடைபரந்து ஈர்க்கு இடைபுகப் பெருமையுமாம். தம்பிரானுர் எய்துவிக்க அணையுமொருவர் எனினும் அமையும். இங்ஙனங்கொள்ளின் ஐ சாரியையென்க. (௪)

சோமாசிமாறநாயனுர்புராணம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௪அக.

வம்பறுவரிவண்டுச்சருக்கம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

௨

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## வார்கொண்ட வனமுலையாள்சருக்கம்.

# சாக்கியநாயனுர்புராணம்.

அறுசமயத்தலைவராய்நின்றவருக்கன்பராய்
மறுசமயச்சாக்கியர்தம்வடிவினுல்வருந்தொண்ட
ருறுதிவரச்சிவலிங்கங்கண்டுவந்துகல்லெறிந்து
மறுவில்சரண்பெற்றதிறமறிந்தபடிவழுத்துவாம்.

(இ-ள்.) அறுசமயத்தலைவராய்நின்றவருக்கன்பராய் = ஆறுசமயங்கட்குந்தாமே கருத்தாவாய் நிலைபெற்ற சிவபெருமானுக்கு அன்புடையராகி; மறுசமயச்சாக்கியர்தம் வடிவினுல் வருந்தொண்டர் = அந்நியசமயத்தராகிய பௌத்தர்வடிவத்தால்விளங்கிய சாக்கியநாயனுரென்பவர்; உறுதிவரச்சிவலிங்கங்கண்டுவந்து = திண்ணியபத்திமேலோங்கச் சிவலிங்கப்பெருமானைக்கண்டு மகிழ்ந்து; கல்லெறிந்து மறுவில்சரண்பெற்றதிறமறிந்தபடிவழுத்துவாம் = (தினமும்) ஒருகல்லெறிந்து சிறந்த திருவடியை அடைந்த சரித்திரத்தைத் தெரிந்தவண்ணஞ்செப்புவாம்.—எ-று.

எத்தெய்வங்களை யாவர்வழிபடினும் அத்தெய்வங்களிடமாக இருந்து அவ்வழிபாட்டையேற்று வேண்டியவற்றை அளிக்குமுதற்கடவுள் சிவபெருமானொருவரேயென்பார் "அறுசமயத்தலைவராய்" என்றுர். இதனை "அறிவினுள்மிக்க வறுவகைச்சமய மவ்வவர்க்கங்கே யாரருள்புரிந்து" என நம்பியாரூரரருளிய திருப்புன்கூர்த்தேவாரத்தானுமுணர்க. (௧)

தாளாளர்திருச்சங்கமங்கையினிற்றகவுடைய
வேளாளர்குலத்துதித்தார்மிக்கபொருடெரிந்துணர்ந்து
கேளாகிப்பல்லுயிர்க்குமருளுடையராய்க்கெழுமி
நீளாதுபிறந்திறக்குநிலையொழிவேனெனநிற்பார்.

(இ-ள்.) தாளாளர் = தொழின்முயற்சியுடையவர்; திருச்சங்கமங்கையினிற்றகவுடைய வேளாளர்குலத்துதித்தார் = திருச்சங்கமங்கையென்னும் பதியிலே சிறப்பமைந்த வேளாளர்மரபிலே அவதரித்தவர்; மிக்கபொருடெரிந்துணர்ந்து = அறியவேண்டும் உண்மைப்பொருளை ஆராய்ந்தறிந்து; கேளாகிப்பல்லுயிர்க்குமருளுடையராய்க்கெழுமி = நட்பாய்ப் பலவுயிர்களிடத்தும் இரக்கமுடையராய் நண்ணி; பிறந்திறக்குநிலைநீளாது = உதித்து மரிக்கும் இயல்பு (காரணகாரியத்தொடர்ச்சியாய்) ஓங்கிவளராமல்; ஒழிவேனெனநிற்பார் = இப் பிறப்பிலேயே ஒழிப்பேனென அதற்குரிய நெறியிலே நிற்பாராயினார். —எ-று.

தாள்-முயற்சி. உண்மைப்பொருளுணர்ந்தவர்க்கு இயல்பு, உயிர்கண்மாட்டு அருளுடையராய்ப் பெருமானை வழிபட்டுப் பிறப்பிறப்பைக்கடந்து பேரின்பக் கதி பெறுதலே என்பார் "மிக்கபொருடெரிந்துணர்ந்து அருளுடையராய்ப் பிறந்திறக்குநிலையொழிவேனெனநிற்பார்" என்றார். (௨)

அந்நாளிலெயிற்காஞ்சியணிநகரஞ்சென்றடைந்து
நன்ஞானமடைவதற்குப்பலவழியுநாடுவார்
முன்னாகச்சாக்கியர்தாமொழியறத்தின்வழிச்சார்ந்து
மன்னாதபிறப்பறுக்குந்தத்துவத்தின்வழியுணர்வார்.

(இ-ள்.) அந்நாளிலெயிற்காஞ்சியணிநகரஞ்சென்றடைந்து=அக்காலத்திலே அரண்சூழ்ந்த அலங்காரம்அமைந்த காஞ்சிநகரத்திற்போயடைந்து; நன்ஞானமடைவதற்குப் பலவழியுநாடுவார் = சிறந்தஞானத்தைப்பெறுவதற்குப் பலமார்க்கங்களையும் ஆராயுமறிவினராய்; முன்னாகச் சாக்கியர் மொழியறத்தின்வழிச்சார்ந்து= முன்பு பௌத்தர்கூறும் தருமநெறியையடைந்து; மன்னாதபிறப்பறுக்குந் தத்துவத்தின்வழியுணர்வார் = நிலைபெறாத பிறவியை ஒழிக்கும் நிச்சயநெறியை ஆராய்வார். —எ-று.

தாம். அசை. *"உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி - விழிப்பது போலும் பிறப்பு" ஆகலின் "மன்னாதபிறப்பு" என்றார். தத்துவம்-உண்மை. (௩)

அந்நிலைமைச்சாக்கியர்தமருங்கலைநூலோதியது
தன்னிலையும்புறச்சமயச்சார்புகளும்பொருளல்ல
வென்னுமதுதெளிந்தீசரருள்கூடவீறில்சிவ
நன்னெறியேபொருளாவதெனவுணர்வுநாட்டுவார்.

(இ-ள்.) அந்நிலைமைச்சாக்கியர்தமருங்கலைநூலோதி = அச்சமயக்கோட்பாட்டின்படி பௌத்தருக்குரிய பிடகமுதலிய அரியநூல்களைப் (பெரிதும்) ஆய்ந்து; அது தன்னிலையும்புறச்சமயச்சார்புகளும் = அந்நூற்பொருள்களும் மற்றைய புறச்சமயநூற்பொருள்களும்; பொருளல்லவென்னுமதுதெளிந்து = உண்மையல்லவென்

* திருக்குறள்-நிலையாமை.

னும் அதனையுணர்ந்து; ஈசரருள்கூட = பரமர்திருவருள் அப்பொழுதுபதிதலால்; ஈறில் சிவநன்னெறியே = அழிவின்றிவிளங்கும் அரியசைவநெறியே; பொருளாவ தெனவுணர்வுநாட்டுவார் = உண்மையாவதெனத்துணிந்து அதனிடத்தே உள்ளத் தைச்செலுத்துவார்.—எ-று.

பொருள் - உண்மை. இதனை †"இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" என்னுந்திருக்குறளானுந்தெளிக. (ச)

செய்வினையுஞ்செய்வானுமதன்பயனுங்கொடுப்பானு
மெய்வகையானன்காகும்விதித்தபொருளெனக்கொண்டே
யிவ்வியல்புசைவநெறியல்லவருக்கில்லையென
வுய்வகையாற்பொருள்சிவனென்றருளாலேயுணர்ந்தறிந்தார்.

(இ-ள்.) செய்வினையும் = ஈட்டப்படும்நல்வினைதீவினைகளும்; செய்வானும் = அவற்றையீட்டும்பசுவும்; அதன்பயனும் = அவற்றின்பயனாகிய சுகதுக்காதிகளும்; கொடுப்பானும் = அவற்றைக்கொடுப்பவனாகியபதியும் என்ன; மெய்வகைவிதித்தபொருளுனன்காகுமெனக்கொண்டு = நூல்களிலே உள்ளபடிவகுத்தபொருள் நால்வகையாகுமெனத்துணிந்து; இவ்வியல்பு சைவநெறியல்லவருக்கில்லையென=இக்கொள்கை சைவநெறியை மேற்கொண்டவருக்கல்லது ஏனையருக்கு இல்லையெனச்சிந்தித்து; உய்வகையால்=தாம் உய்யுந்தன்மையுடைமையால்; பொருள்சிவனென்றருளாலே யுணர்ந்தறிந்தார் = சிவபெருமானே பரம்பொருளென அக்கடவுளருளாலே ஆய்ந்துதெளிந்தார்.—எ-று.

வினை ஈட்டப்படுவனவென்பார் "செய்வினை" என்றும், அதனை ஆன்மாவே செய்ததென்பார் "செய்வான்" என்றும், சுகதுக்காதிகள் அதனால்விளையும்பயனென்பார் "அதன்பயன்" என்றும்,வினை சடமாதலால் தானேபயனைவிளையாமையானும், செய்வான் தற்சுதந்தரமில்லாச் சிற்றறிவினனாகலின், அதனைவிளைத்துக்கொள்ளும் ஆற்றல் இன்மையானும்,தற்சுதந்தரமும் முற்றறிவுமுள்ளகடவுளே அப்பயனைவிளைத்துத்தரவேண்டுமென்பார "கொடுப்பான்" என்றும், இந்நான்கும் கொள்ளாவழி பெறுவானும் பேறும் பேற்றிற்கேதுவும் பேறளிப்பானும் இன்றாமாகலின் இவற்றை மேற்கொண்ட சைவநெறியினரோ மெய்ந்நெறியினரென்பார் "இவ்வியல்பு சைவநெறியல்லவருக்கில்லை" என்றும், இங்ஙனந்துணிந்து சிவபெருமானே பரம்பொருளெனத்தெளிந்தமை அவருய்தற்கேதுவாகிய புண்ணியம் உடைமையானும் திருவருள்பதிதலானும் என்பார் "உய்வகையாற்பொருள்சிவனென்றருளாலேயுணர்ந்தறிந்தார்" என்றும் உரைத்தாரென்க. ஆல், ஏ-அசைகள். (ரு)

எந்நிலையினின்றாலுமெக்கோலங்கொண்டாலு
மன்னியசீர்ச்சங்கரன்றாண்மறவாமைபொருளென்றே
துன்னியவேடந்தன்னைத்துறவாதேதூயசிவந்
தன்னைமிகுமன்பினான்மறவாமைதலைநிற்பார்.

(இ-ள்.) எந்நிலையினின்றாலும் = எந்த ஆச்சிரமத்திலேயிருந்தாலும்; எக்கோலங்கொண்டாலும் = எவ்வகைவேடங்களை இயைந்தாலும்; சீர்மன்னியசங்கரன்றாண்மறவாமை = சீர்த்திநிலைபெற்ற சிவபெருமானுடைய திருவடிகளை மறவாதிருத்தலே; பொருளென்று = உண்மையாகக்கொள்ளற்பாலதென்று; துன்னியவேட

‡ ஷை. கடவுள்வாழ்த்து.

க்தன்னைத்துறவாது = தாம் மேற்கொண்டுள்ள சாக்கியவேடத்தைத் தவிராமலே; தூயசிவந்தன்னை = விசுத்ததேகியாகிய சிவபெருமானை; மிகுமன்பினால் மறவாமை தலைநிற்பார் = நெடிய அன்பினால் மறவாதிருத்தலில் நிற்பாராயினர்.—எ-று.

நிலை - ஆச்சிரமம். கோலம் - அதற்குரியவேடம். உம்மைகள் இழிவுசிறப்பு. இறைவர் என்றும் அழியாநிலைமையராகலின் அவர்புகழும் அத்தகைடவாதல்பற்றி "மன்னியசீர்" என்றும், எந்த ஆச்சிரமத்தையடைந்து, எக்கோலங்கொள்ளினும் அவ்விறைவன்றாளைச்சிந்தியாவழி, அவற்றாற்பயனின்மையின், "சங்கரன்றாண்மறவாமைபொருள்" என்றும் சாற்றினர். ஏ-அசைகள். முந்தியதுதேற்றமுமாம்.சங்கரன்-சுகஞ்செய்பவன். (சு)

வேறு.

எல்லாமுடையவீசனேயிறைவனென்னவறியாதார்
பொல்லாவேடச்சாக்கியரோயாகிப்புல்லராகுவா
ரல்லார்கண்டர்தமக்கிந்தவுலகெல்லாமாளென்ன
வல்லாரிவரவ்வேடத்தைமாற்றாதன்பின்வழிநிற்பார்.

(இ-ள்.) எல்லாமுடையவீசனேயிறைவனென்னவறியாதார்=எவ்வகை ஆன்மாக்களையும் அடிமையாகவுடைய சிவபெருமானே முதற்கடவுளென்று தேராதவர்; பொல்லாவேடச்சாக்கியரோயாகிப்புல்லராகுவார் = பொலிவில்லாத வேடத்தையுடைய புத்தரோயாகிப் புல்லியருமாவர்; அல்லார்கண்டர்தமக்கு = இருள்போலுங் கண்டத்தையுடைய இறைவருக்கு; இந்தவுலகெல்லாமாளென்னவல்லாரிவர்= இவ்வுலகமுற்றும் அடிமையென்னத்துணிந்தவராகிய இந்நாயனார்; அவ்வேடத்தை மாற்றாதன்பின்வழிநிற்பார் = அச்சாக்கியவேடத்தையகற்றாது அன்பின்வழியே நிற்பார்.—எ-று.

ஏகாரங்களுள் முந்தியது பிரிநிலை; பிந்தியதுதேற்றம். பொல்லாமை - சிறப்பின்மை. புன்மை-அன்பின்வழியொழுகி அருங்கதிபெறாமை. ஈசனேஇறைவனென அறியாதவர் சாக்கியராவரோயன்றி, அறிந்தவர், அவர்போலவேடமுடையராய் நடிப்பினும், அவர் சிவவேடத்தரேயாகலின், அச்சாக்கியவேடத்தை அகற்றாராயினரென்க. (எ)

வேறு.

காணாதவருவினுக்குமுருவினுக்குங்காரணமாய்
நீணாகமணிந்தார்க்குநிகழ்குறியாஞ்சிவலிங்க
நாணாதுநேடியமாலுன்முகனுங்காணநடுச்
சேணாருந்தழற்பிழம்பாய்த்தோன்றியதுதெளிந்தாராய்.

(இ-ள்.) காணாதவருவினுக்கும்= கண்ணிற்குப்புலப்படாத அருவத்திற்கும்; உருவினுக்குங் கணமாய் =(கண்ணிற்குப் புலப்படும்) உருவத்திற்கும் மூலமாகி; நீணாகமணிந்தார்க்கு =நீண்டஅரவை ஆபரணமாகவணிந்த நிமலனையறிதற்கு; நிகழ்குறியாஞ்சிவலிங்கம்= சிறந்தஅடையாளமாகுஞ் சிவலிங்கமானது; நாணாது நேடியமாலுன்முகனுங்காண = நாணுதலின்றி (வராகமாயும் அன்னமாயும் முன்னர்) நாடிய திருமாலும் பிரமதேவருங்கண்டு தரிசிக்கும்படி; நடுச் சேணாருந்தழற்பிழம்பாய்த் தோன்றியது தெளிந்தாராய் = அவர்க்கிடையே அண்டத்தையளாவிய அக்கினித்திரட்சியாய்த் தோன்றிய உருவமென்பதைத் தெளிந்தவராகி.—எ-று.

சிவலிங்கமே எவையும் உதித்தற்குமூலமாய், எவரும்வழிபட்டுக் கதிபெறு தற்குஅறிகுறியும் ஆகலின், "காணாத வருவினுக்கு முருவினுக்குங் காரணமாய் நீணு கயனிந்தார்க்கு நிகழ்குறியாஞ் சிவலிங்கம்" என்றும், திருமாலும் பிரமதேவரும் தம்மைத்தாமே பரம்பொருளெனச்கூறித் தருக்கியவழி, பெருமான் தழற்பிழம்பாய்த் தோற்றியருள; அதன் அடிமுடிகாணத்தொடங்கிக் காணாராய்த் துயருழந்து, பின் சிவலிங்கருபமாகிய அப்பெருமானை வழிபட்டு, முந்தியநிலைமைபெற்றனராகலின், "நாணாது நேடியமாலுன்முகனுங் காணாடிச்-சேணுருந்தழற்பிழம்பாய்த் தோன்றியது" என்றும் கூறினர். இதனைக் கந்தபுராணம் அடிமுடிதேடுபடலத்திற்காண்க. (அ)

நாடோறுஞ்சிவலிங்கங்கண்டுண்ணுமதுநயந்து
மாடோர்வெள்ளிடைமன்னுஞ்சிவலிங்கங்கண்டுமன
நீடோடுகளியுவகைநிலைமைவரச்செயலறியார்
பாடோர்கற்கண்டதனைப்பதைப்போடுமெடுத்தெறிந்தார்.

(இ-ள்.) நாடோறுஞ்சிவலிங்கங்கண்டுண்ணுமதுநயந்து = தினமும் சிவலிங்கத்தைத் தரிசித்துப்புசிக்கும் செந்நெறியைவிரும்பி; மாடோர்வெள்ளிடைமன்னுஞ்சிவலிங்கங்கண்டு = பக்கத்திலே ஒருவெளியிடத்திற்பொருந்திய சிவலிங்கத்தைப் பார்த்து; மனநீடோடுகளியுவகைநிலைமைவர = மனத்திலே அளவிறந்தபேருவகைத் தன்மை அதிகரித்தலால்; செயலறியார் = இன்னது செயற்பாலதென்பது உணராராய்; பாடோர்கற்கண்டு = அருகிலுள்ளதொரு கல்லைநோக்கி; அதனைப்பதைப்போடுமெடுத்தெறிந்தார் = அக்கல்லைப் பதைப்போடுமெடுத்து அச்சிவலிங்கத்தின்மீது எறிந்தார்.—எ-று.

நீடோடல் - நீடுதலாக ஓடுதல். அதாவது, அளவுகடத்தல். நீடு முதனிலைத் தொழிற்பெயர்- வர வினையெச்சத்திரிபு எல்லையிறந்தமகிழ்ச்சியெய்தியவழி, மனம் அதன்வழித்தாய்த் தற்போதமிழந்துநிற்றலின், இன்னதுசெயற்பாலதென்னும் உணர்ச்சிதோன்றாது இதனைச்செய்தனரென்பார், "சிவலிங்கங்கண்டு களியுவகைவரச் செயலறியார் கல்லெறிந்தார்" என்றார். பதைப்பு-அன்புமேலீட்டால் நிகழ்வதொரு நடுக்கம். (கூ)

அகநிறைந்தபேருவகையடங்காதவாதரவால்
மகவுமகிழ்ந்துவப்பார்கள்வன்மைபுரிசெயலினு
லிகழ்வனவேசெய்தாலுமிளம்புதல்வர்க்கின்பமே
நிகழுமதுபோலதற்குநீள்சடையோர்தாமகிழ்வார்.

(இ-ள்.) அகநிறைந்தபேருவகையடங்காதவாதரவால் = அகத்தே நிரம்பிய பெருமகிழ்ச்சிகுன்றாத அன்பு காரணமாக; மகவுமகிழ்ந்துவப்பார்கள் = இளம்புதல்வர்மாட்டு இன்புற்றுக்களிக்கும் தந்தையர்; வன்மைபுரிசெயலினுலிகழ்வனவேசெய்தாலும் = கடுமையைவிளைக்கும்செயலால் அவமதிப்பனவற்றையே அப்புதல்வர்புரியினும்; இளம்புதல்வர்க்கின்பமே நிகழுமதுபோல் = அப்புதல்வர்செயலுக்கு அகமகிழ்ச்சியே அடையப்பெறும் அத்தன்மைபோல; நீள்சடையோர் = நீண்டசடைமுடியையுடைய நிமலரும்; அதற்குத்தாமகிழ்வார் = (அன்பினுனிகழ்ந்த) அச்செய்கைக்குத் தாம் உவப்பாராயினர்.—எ-று.

தந்தையர்மகிழ்தற்குத் தனயரன்பேகாரணமாகலின் "ஆதரவான்மகிழ்ந்து வப்பார்" என்றும், கல்லெறிதல்போல்வன கடுந்தொழிலாய் இகழ்ச்சிபயப்பனவாக லின், "வன்மைபுரிசெயலினு மிகழ்வனவேசெய்தாலும்" என்றும், அன்புபிறழா திருந்தும் அறியாமையாற்றலால் இத்தகைய செயலும் இன்பமேபயப்பதாய் முடிதலின் "இன்பமேநிகழும்" என்றும், இங்ஙனமியற்றியும் அவர் அன்பின்னிலைமை யறிந்து உள்ளுவர்தனராகலின் "தாமகிழ்வார்" என்றும் கூறினர். ஏகாரங்கள்-பிரிநிலை. புத ல்வரென்பது அவர்செயலையுணர்த்தலின் ஆகுபெயர். ஆதரவு தந்தையரது அன்பு மாம். மகவுசெய்தாலும் தந்தையராவாருவப்பர்: அதனால் அம்மகவுக்கும் இன் பமே நிகழும்:அதுபோல, இறைவர் மகிழ்வாராயினமையின் இனி இவர்க்கும் இன்ப மேநிகழுமென்பதை இசையெச்சமாக்கலும் ஒன்று. நிகழ்தல்=நிகழப்பெறுதல். (கo)

அன்றுபோய்ப்பிற்றைநாளன்னியதிக்கணையுங்காற்
கொன்றைமுடியார்மேற்றாங்கல்லெறிந்தகுறிப்பதனை
நின்றுணர்வாரெனக்கப்போதிதுநிகழ்ந்ததவாருளே
யென்றதுவேதொண்டாகவென்றுமதுசெயநினைந்தார்.

(இ-ள்.) அன்றுபோய்ப்பிற்றைநாளன்னியதிக்கணையுங்கால் = அன்றுகழிந்து மறுதினம் வேறொரு திக்கிலடையும்போது: கொன்றைமுடியார்மேல் = கொன்றை மாலிகைசூடிய திருமுடியையுடைய சிவலிங்கப்பெருமான்மீது; தாங்கல்லெறிந்த குறிப்பதனைநின்றுணர்வார் = தாம் கல்லெறிந்தகருத்தை நின்று ஆலோசிப்பாராய்; எனக்கப்போதிதுநிகழ்ந்ததவாருளேயென்று = எளியேனுக்கு அத்தருணத்தில் இச் செய்கைஉண்டாயது அக்கடவுளருளேயெனத் துணிந்து: அதுவேதொண்டாகவெ ன்றுமதுசெயநினைந்தார் = அக்கல்லெறிதலே தொண்டாக எக்காலத்தும் அதனையிய ற்ற நினைந்தார்.—எ-று.

குறிப்பு - கருத்து. உணர்வார் - முற்றெச்சம். ஏகாரங்கள் - தேற்றம். (கக)

தொடங்கியநாளருளியவத்தொழிலொழியாவழிதொடருங்
கடன்புரிவாரதுகண்டுகல்லெறிவார்துவராடைப்
படம்புனைவேடந்தவிரார்பசுபதியார்தஞ்செயலே
யடங்கலுமென்பதுதெளிந்தாராதலினன்மாதவர்தாம்.

(இ-ள்.) மாதவர் = மிக்கதவத்தையுடையநாயனார்; அடங்கலும்பசுபதியார் தஞ்செயலேயென்பதுதெளிந்தாராதலினால் = எவையும் பசுபதியாகிய இறைவர் செயலேஎன்பது தெளிந்தாராகையால்; தொடங்கியநாளருளியவத்தொழில்=ஆரம் பித்ததினத்தில் அவ்விறைவர் உண்ணின்றுணர்த்திய அத்தொழிலை; ஒழியாவழிதொ டருங்கடன்புரிவார் = நீங்காவண்ணம் அநுட்டிக்கும் நியமத்தைவிரும்புவாராய்; அதுகண்டுகல்லெறிவார் = (தினமும்) சிவலிங்கத்தைநோக்கி ஒருகல் எறிவார்: துவ ராடைப்படம்புனைவேடந்தவிரார் = கடுக்காய்ச்சாயமேற்றிய ஆடையாகிய சுரிய துகிலைத்தரிக்கும் வேடத்தை அகற்றார்.—எ-று.

அது என்பது சிவலிங்கத்தின்மேற்று. பசுக்கள்செய்வன அனைத்தும் பதியி னேவலினன்றி நிகழாவெனத்துணிந்தனரென்பார் "பசுபதியார்தஞ்செயலே" என் றும், சாக்கியவேடத்தராயே இருந்தனரென்பார் "துவராடைப்படம்புனைவேடந் தவிரார்" என்றுங் கூறினர். புரிவாரென்பதும் பாடம். தாம் அசை. (கஉ)

இந்தியதிபரிவோடும்வழுவாமலிவர் செய்ய
முன்னுதிருத்தொண்டாகிமுடிந்தபடி தான்மொழியிற்
றுன்னியமெய்யன்புடனேயெழுந்தவினை தூயவர்க்கு
மன்னுமிகுபூசனையேயாமன்புநெறிவழக்கினால்.

(இ-ள்.) இந்தியதிபரிவோடும்வழுவாமலிவர்செய்ய = இந்தநியமத்தை அன்போடும் தவறாமல் இவர்செய்துவர; முன்னுதிருத்தொண்டாகிமுடிந்தபடிமொழியில் = (இது எவரும்) சிந்திக்கும் திருத்தொண்டாகி முடிந்தவியல்பைக்கூறின்; துன்னியமெய்யன்புடனெழுந்தவினை = செறிந்தமெய்யன்போடு உதித்தசெய்கை; தூயவர்க்கு மன்னுமிகுபூசனையாமன்புநெறிவழக்கினால் = அநாதிமலமுத்தராகிய சிவபெருமானுக்கு நிலைபெற்ற மிக்க பூசனையேயாகும் அன்பின்முறைமையாற் (போலும்).—எ-று.

அன்போடுதித்தசெயல் யாதேனும் அது பெருமானுக்குப் பூசனையேயாகலின் இதுவும் தொண்டாகிமுடிந்ததென்பது கருத்து. தான் ஏ-அசைகள். போலும் என்பது சொல்லெச்சம். (கங)

கல்லாலேயெறிந்ததுவுமன்பானபடிகாணில்
வில்வேடர்செருப்படியுந்திருமுடியின்மேவிற்றும
நல்லார்மற்றவர்செய்கையன்பாலேநயந்ததனை
யல்லாதார்கல்லென்பாரரனார்க்கதுமலராமால்.

(இ-ள்.) கல்லாலேயெறிந்ததுவுமன்பானபடிகாணில் = கல்லினாலெறிந்ததும் பிரீதியானநிலைமையைக் கருதின்; வில்வேடர்செருப்படியுந்திருமுடியினமேவிற்றும்- வில்லையேந்திய கண்ணப்பநாயனாருடைய செருப்படியும் திருமுடியிலேமேவியது போலும்; நல்லாரவரன்பாலேநயந்தது செய்கைதனை = நற்குணமுடையராகிய அந்நாயனார் அன்பினாலே விரும்பிச்செய்ததாகிய அச்செய்கையை; அல்லாதார்கல்லென்பார் = உண்மையாக வுணராதவர் (எறிந்தது) கல்லெனவழங்குவர்; அரனார்க்கதுமலராம் = பெருமானுக்கு அது மலராகும்.—எ-று.

ஏகாரங்களும் மற்றும் ஆலும் - அசைகள். உம்மைகள் இழிவுசிறப்பு. (கச)

அங்கொருநாளருளாலேயயர்த்துண்ணப்புகுகின்றா
ரெங்கள்பிரான்றனையெறியாதயர்த்தேனியானெனவெழுந்து
பொங்கியதோர்காதலுடன்மிகவிரைந்துபுறப்பட்டு
வெங்கரியினுரிபுனைந்தார்திருமுன்புமேவினார்.

(இ-ள்.) அங்கொருநாளருளாலேயயர்த்துண்ணப்புகுகின்றார் = அங்கொருதினம் திருவருட்சோதனையாலேமறந்து அமுதருந்துதற்குச்செல்கின்றவர்; எங்கள்பிரான்றனையானெறியாதயர்த்தேனெனவெழுந்து = எங்கட்குத்தலைவராகிய கடவுளையான் கல்லெறியாது மறந்தேனென்று இருக்கைவிட்டெழுந்து; பொங்கியதோர் காதலுடன்மிகவிரைந்துபுறப்பட்டு = பெருகியவிருப்பத்தோடு பெரிதும் விரைந்து வெளிப்பட்டு; வெங்கரியினுரிபுனைந்தார்திருமுன்புமேவினார் = வெவ்விய யானைத்தோலைத்தரித்த இறைவர்திருமுன்னர் எய்தினார்.—எ-று. (கரு)

---

கங-கச-வது செய்யுட்கள் சில ஏட்டுப்பிரதிகளில் இல்லை.

கொண்டதொருகல்லெடுத்துக்குறிகூடும்வகையெறிய
வுண்டிவினையொழிந்தஞ்சியோடிவரும்வேட்கையொடுங்
கண்டருளுங்கண்ணுதலார் கருணைபொழிதிருநோக்காற்
றொண்டரெதிர்நெடுவிசும்பிற் றுணைவியொடுந்தோன்றுவார்.

(இ-ள்.) கொண்டதொருகல்லெடுத்து = கையிலடங்கத்தக்கதொரு கல்லை யெடுத்து; குறிகூடும்வகையறிய = சிவலிங்கப்பெருமான் திருமேனியிற் படும்படி வீச; உண்டிவினையொழிந்தஞ்சியோடிவரும் வேட்கையொடும் = உணவு அருந்துதலைவிடுத்துப் பயந்து விரைந்து ஓடிவரும் விருப்பத்தோடும்; கண்டருளுங்கண்ணுதலார் = அவரைநோக்கியருளிய நெற்றிக்கண்ணையுடைய நிமலர்; தொண்டரெதிர் கருணைபொழிதிருநோக்கால் = அந்நாயனார்க்கெதிரே திருவருளைச்சொரியும் திருப்பார்வையோடு; நெடுவிசும்பிற்றுணைவியொடுந்தோன்றுவார் = பெரிய ஆகாயத்திலே உமாதேவியாருடன் பிரசன்னராவாராய்.—எ-று.

குறி- சிவலிங்கம். அதிற்குறிப்புள்ளதானமுமாம். உணவைமறந்து நியமந்தவறிற்றேயெனஅஞ்சி ஆராக்காதலோடும் ஓடிவந்தமைகண்டுழி, அவர்மாட்டுக் கிருபாநோக்கமுடையராய்த் தோன்றுவாரென்பதாம். (கசு)

மழவிடைமேலெழுந்தருளிவந்தொருசெயலாலே
கழலடைந்ததிருத்தொண்டர்கண்டுகரங்குவித்திறைஞ்சி
விழுவருக்கு அளித்தருளிமிக்கசிவலோகத்திற்
பழவடிமைப்பாங்கருளிபரமரொழுந்தருளினார்.

(இ-ள்.) பரமர்கழலடைந்த திருத்தொண்டர் = சிவபெருமான் திருவடிகளையே அடைக்கலமாகச்சேர்ந்த நாயனார்; மழவிடைமேலெழுந்தருளிவந்தொருசெயலால் கண்டு = இளமைபெற்ற இடபவாகனத்திலே இவர்ந்து எழுந்தருளியசெயலைநோக்கி; கரங்குவித்திறைஞ்சிவிழுவருக்களித்தருளி = கைகளைக்குவித்து வணங்கிப்பணிய அப்பெருமான் கிருபாநோக்கம் அருளி; பழவடிமைப்பாங்கருளி = பழமையாயுள்ள அடிமைத்தன்மையை (அவர்க்குப்) பாலித்து; மிக்க சிவலோகத்திலெழுந்தருளினர் = சிறந்த சிவலோகத்திலே எழுந்தருளினர்.—எ-று.

செயலால் வேற்றுமைமயக்கம். ஏ. அசை. பாங்குப்பழவடிமை எனமாற்றி அணுக்கத்தொண்டரெனக்கொள்ளலும் ஒன்று. (கஎ)

வேறு.

ஆதியார்தம்மைநாளுங்கல்லெறிந்தணுகப்பெற்ற
கோதில்சீர்த்தொண்டர்கொண்டகுறிப்பினையவர்க்குநல்குஞ்
சோதியாரறிதலன்றித்துணிவதென்னவர்தாள்சூடித்
தீதினைநீக்கலுற்றேன்சிறப்புவியாரைச்செப்பி.

(இ-ள்.) நாளுங்கல்லெறிந்தாதியார்தம்மையணுகப்பெற்ற = தினமும் கல்லாலெறிந்து முதற்பொருளாகிய சிவபெருமானை அடையப்பெற்ற; கோதில்சீர்த்தொண்டர்கொண்ட குறிப்பினை = குற்றமற்ற சீர்த்தியையுடைய சாக்கியநாயனார் உட்கொண்ட கொள்கையை; அவர்க்கு நல்குஞ்சோதியாரறிதலன்றி = அவர்க்குத்திருவடிப்பேறளித்த சோதிசொரூபராகிய அக்கடவுள் அறிவதல்லது; துணிவதென் = யான்

1. சிவபிரான் வைரவராய்ச் சிறுத்தொண்டர் திருமாளிகை யடைந்தது. 2. வைரவர்விருப்பப்படி அமுதுபடைக்க விசைந்தது. 3. பள்ளியில் வசிக்கும் புதல்வனை யழைக்கச்சென்றது. 4. சீராளனை அன்னை சீராட்டிப் பாராட்டித் திருமஞ்சனமாட்டித் தன் பதியினிடம் அளித்தது. 5. ஓர் மறைவிடத்தில் சீராளனைத் தாய் மடிமீதிருத்தி கைகால்களைப் பற்ற, பிதா சிரசைச் சேதிப



சாக்கியநாயனார்.

சிறப்புலிநாயனார்.

நிச்சயித்துரைப்பதுயாது; அவர்தாள்சூடி = அந்நாயனார் திருவடிகளைச் சிரமேற்றரி த்துக்கொண்டு; சிறப்புலியாரைச்செப்பித்தீவினைநீக்கலுற்றேன் = சிறப்புலிநாயனாரைப் புகழ்ந்து எனது தீங்கையொழிக்கலுற்றேன்.—எ-று.

துணிவதென்பது அதின்காரியமாகிய உரைத்தலையும் உணர்த்திற்று. எவனென்னும் வினாப்பெயர் என்னென்றாகி, உரைக்கமுடியாமையை விளக்கிநின்றது. (கஅ)

சாக்கியநாயனார்புராணம் முற்றிற்று,

ஆகத் திருவிருத்தம் ௪௯௯.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புலிநாயனார்புராணம்.

பொன்னிநீர்நாட்டினீடுபொற்பதிபுவனத்துள்ளோ
ரின்மையாலிரந்துசென்றோர்க்கில்லையென்னாதேயீயுந்
தன்மையாரென்றுநன்மைசார்ந்தவேதியரைச்சண்பை
மன்னனாருளிச்செய்தமறைத்திருவாக்கூரவ்வூர்.

(இ-ள்.) புவனத்துள்ளோர் இன்மையாலிரந்துசென்றோர்க்கு=இப்பூமியிலுள்ளோர்களில் வறுமையாற்போந்து யாசித்தவர்க்கு; இல்லையென்னாதேயீயுந்தன்மையாரென்று = இல்லையென்றுரையாது அவர் வேண்டியதைக்கொடுக்கும் இயல்புடையவரென்று; நன்மைசார்ந்த வேதியரை = நற்குணமமைந்த அந்தணரைச்சுட்டி, சண்பைமன்னனாருளிச்செய்த =சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பெருமான் திருவாய்மலர்ந்தருளிய; மறைத்திருவாக்கூரவ்வூர்=தமிழ்வேதத்தைப்பெற்ற திருவாக்கூரென்னும் அத்திவ்வியதலமானது; பொன்னிநீர்நாட்டினீடும்பொற்பதி=காவிரிநதிசூழ்ந்த சோழநாட்டிற்சிறந்த அழகியநகரமாகும்.—எ-று.

பொன்னிநதியால் நீர்வளம் மிகுதலின் சோணாடு நீர்நாடெனப்பட்டது. மறை - வேதமுமாம். சண்பைமன்னரருளியது-"நன்மையா நாரணனு நான்முகனுங் காண்பரிய - தொன்மையான் றோற்றங்கே டில்லாதான் றொல்கோயில்-இன்மையாற் சென்றிரந்தார்க் கில்லையென்னா தீந்துவக்குந் - தன்மையா ராக்கூரிற் றான்றோன்றி மாடமே." என்பதாம். (க)

தூமலர்ச்சோலைதோறுஞ்சுடர்த்தொடுமாடந்தோறு
மாமழைமுழக்கந்தாழமறையொலிமுழக்கமோங்கும்
பூமலிமறுகிலிட்டபுகையகிற்றூபந்தாழ
வோமநல்வேள்விச்சாலையாகுதித்தூபமோங்கும்.

(இ-ள்.) தூமலர்ச்சோலைதோறும்=சுத்தமாகிய மலர்செறிந்த சோலைகளினும்; சுடர்த்தொடுமாடந்தோறும் = சூரியமண்டலத்தையளாவிய மாளிகைகளினும், மாமழைமுழக்கந்தாழ = பெருமைபெற்ற மேகங்களின் ஒலியடங்கும்படி; மறையொலி

முழக்க மோங்கும் = வேதாத்தியயனவொலிமிகும்; பூமலிமறுகில்விட்ட புகையகிற் றூபந்தாழ = பொலிவுமிக்க வீதிகளில்விட்ட புகைதலையுடைய அகிற்புகைகுறையும் படி; ஓமநல்வேள்விச்சாலை = ஓமஞ்செய்கின்ற நல்ல யாகசாலைகளிலே; ஆகுதித்தூப மோங்கும் = ஆகுதிசெய்தலினாலுண்டாகும் புகை அதிகரிக்கும்.—எ-று.

தோறுமென்பன எச்சோலைகளினும் எம்மாடங்களினும் ஒலியும்புகையும் என்று சாதிருத்தலை விளக்கிநின்றன. மறைமுழக்கத்தினும் மறைமுழக்கமும், அகிற்புகையினும் ஆகுதிப்புகையும் மிகுமென்னுங்குறிப்பால் அந்தணர் மிகுதியை அறிவித்ததாம். பூவென்பது மங்கலத்தின்பொருட்டுச்சிறந்திய பூவுமாம். (உ)

ஆலைசூழ்பூகவேலியத்திருவாக்கூர்தன்னின்
ஞாலமார்புகழின்மிக்கார்நான்மறைக்குலத்தினுள்ளார்
நீலமார்கண்டத்தெண்டோணிருத்தர்தந்திருத்தொண்டேற்ற
சீலராய்ச்சாலுமீகைத்திறத்தினிற்சிறந்தநீரார்.

இ-ள்) ஆலைசூழ்பூகவேலியத்திருவாக்கூர்தன்னில் = கரும்பாலைகள் சூழப்பெற்ற கமுகுகள் அடர்ந்த அத்திருவாக்கூரிலே; ஞாலமார்புகழின்மிக்கார் = உலகத்தில் நிறைந்த கீர்த்தியில் உயர்ந்தவர்; நான்மறைக்குலத்தினுள்ளார் = நான்குவேதங்கட்குமுரிய அந்தணகுலத்திலே நண்ணியவர்; நீலமார்கண்டத்தெண்டோள் = கருமைமிக்ககண்டத்தையும் எட்டுப்புயங்களையுமுடைய; நிருத்தர்தந்திருத்தொண்டேற்ற சீலராய் = நடராஜப்பெருமானது திருத்தொண்டுகளை மேற்கொண்ட நல்லொழுக்கமுடையவராய்; சாலுமீகைத்திறத்தினிற்சிறந்தநீரார் = மிகுந்த கொடைவகையிலே உயர்ந்த மேன்மையையுடையவர் —எ-று. (௩)

ஆளுமங்கணருக்கன்பரணைந்தபோதடியிற்றாழ்ந்து
மூளுமாதரவுபொங்கமுன்புநின்றினியகூறி
நாளுநல்லமுதூமூட்டிநயந்தனவெல்லாநல்கி
நீளுமின்பத்துட்டங்குநிதிமழைமாரிபோன்றார்.

(இ-ள்.) ஆளுமங்கணருக்கு = அடிமைகொண்ட அருட்கண்ணராகிய பெருமானுக்கு; அன்பரணைந்தபோதடியிற்றாழ்ந்து = அன்பராயுள்ளோர் அணுகுங்காலையில் அவர்பாதங்களில்வணங்கி; மூளுமாதரவுபொங்க முன்புநின்றினியகூறி = மூதிர்க்க அன்புபெருக எதிர்நின்று இனியவார்த்தையுரைத்து; நாளுநல்லமுதூமூட்டி = தினமும் சிறந்த உணவையும் அருத்தி; நயந்தனவெல்லாநல்கி = அவர் விரும்பியவெல்லாம் அளித்தலால்; நீளுமின்பத்துட்டங்கும் = முதிர்ந்த மகிழ்ச்சியுள்ளே முழுகுதற்கேதுவாகிய; நிதிமழைமாரிபோன்றார் = பொன்மழையைப் பொழியும் மேகத்தையொத்தார்.—எ-று.

தங்குநிதிமழையெனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார். நல்கி- வினையெச்சத்திரிபு. நல்கிபோன்றாரென இயையும். (௪)

அஞ்செழுத்தோதியங்கிவேட்டுநல்வேள்வியெல்லா
நஞ்சணிகண்டர்பாதநண்ணிடச்செய்துஞாலத்
தெஞ்சலிலடியார்க்கென்றுமிடையறாவன்பால்வள்ளற்
றஞ்செயல்வாய்ப்பவீசர்தாணிழற்றங்கினாரே.

(இ-ள்.) நஞ்சணிகண்டர்பாதநண்ணிட = நஞ்சத்தை யணிந்த கண்டத்தையுடைய நம்பெருமான் திருவடிகளை அடைதற்பொருட்டு; அஞ்செழுத்தோதியங்கிவேட்டும் = பஞ்சாக்கரத்தை உச்சரித்துக்கொண்டு அக்கினிகாரியம்புரிந்தும்; நல்வேள்வியெல்லாஞ்செய்தும் = நல்லயாகமுற்றும் இயற்றியும்; ஞாலத்தெஞ்சலிலடியார்க்கு = பூமியிலே குறைவில்லாத அடியவர்கட்கு; என்றுமிடையறுவன்பால் = அநுதினமும் நிரந்தரமாகிய அன்பினால்; வள்ளற்றஞ்செயல்வாய்ப்ப = அவர் வேண்டியவைகொடுக்கும் தம்முடைய அத்தொண்டு பூர்த்தியாயினமையால்; ஈசர்தாணிழற்றங்கினார் = சிவபெருமானுடைய திருவடிநீழலையடைந்தார்.—எ-று.

அங்கி என்றது நித்தியாக்கினியை. சுவர்க்காதிபதங்களை வெஃகாமல் பெருமானது துணையடிப்பேற்றையே விரும்பி யாகமுற்றும் இயற்றினரென்பார் "வேள்வியெல்லா நஞ்சணிகண்டர்பாத நண்ணிடச்செய்து" என்றும், அஞ்செழுத்தோதியங்கிவேட்டலும் அரியவேள்வியியற்றலும் சாதகமாகக்கொண்டு, அன்பர்வேண்டிய அளித்தலையே தமக்குரிமையாகக்கொண்டனரென்பார், அவ்வளித்தலை "தஞ்செயல்" என்றும், அவர்பணிசெய்தலே அரனடியடைதற்கு ஏதுவாயிற்றென்பார் "வள்ளற்றஞ்செயல்வாய்ப்ப வீசர்தாணிழற்றங்கினார்" என்றும் கூறினார். வாய்ப்ப - வினையெச்சத்திரிபு. (கு)

அறத்தினின்மிக்கமேன்மையந்தணராக்கூர்தன்னின்
மறைப்பெருவள்ளலார்வண்சிறப்புலியார்தாள்வாழ்த்திச்
சிறப்புடைத்திருச்செங்காட்டங்குடியினிற்செம்மைவாய்த்த
விறற்சிறுத்தொண்டர்செய்த்திறத்தினைவிளம்பலுற்றேன்.

(இ-ள்.) அறத்தினின்மிக்க மேன்மையந்தணராக்கூர் தன்னில் = தருமத்தின் மிக்க தகைமைவாய்ந்த மறையவர்வாழும் திருவாக்கூரிலே; மறைப்பெருவள்ளலார் வண்சிறப்புலியார்தாள்வாழ்த்தி = அவ்வந்தணமரபில் அவதரித்த அரியகொடையையுடையவராகிய சிறப்புலிநாயனாருடைய சேவடிகளைத்துதித்து; சிறப்புடைத்திருச்செங்காட்டங்குடியினில் = செல்வமிக்க திருச்செங்காட்டங்குடியென்னுந்தலத்தில்; செம்மைவாய்த்தவிறற்சிறுத்தொண்டர்செய்த = நல்லொழுக்கம்அமைந்த வெற்றிமிக்க சிறுத்தொண்டநாயனாரியற்றிய; திறத்தினைவிளம்பலுற்றேன் = திருத்தொண்டை இனிச்செப்புவேன்.—எ-று.

செம்மைவாய்த்தவிறல் பகைவரை வெல்லுதலில் நீதிவழுவா ஆற்றலுமாம். (கூ)

சிறப்புலிநாயனார்புராணம்.

முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-ருOரு

# சிறுத்தொண்டநாயனார்புராணம்.



உருநாட்டுஞ்செயல்காமனொழியவிழிபொழிசெந்தீ
வருநாட்டத்திருநுதலார்மகிழ்ந்தருளும்பதிவயலிற்
கருநாட்டக்கடைசியர்தங்களிகாட்டுங்காவேரித்
திருநாட்டுவளங்காட்டுஞ்செங்காட்டங்குடியாகும்.

(இ-ள்.) உருநாட்டுஞ்செயல்காமனொழிய = தனதுவடிவத்தைத்தோற்றுவிக்குஞ்செய்கையை மன்மதனகலும்படி; விழிபொழிசெந்தீவரும் = விழித்துச்சொரிந்த சிவந்த அக்கினி விரியப்பெற்ற; நாட்டத்திருநுதலார் மகிழ்ந்தருளும்பதி = கண்படைத்த திருநெற்றியுள்ள கடவுள்விரும்பியருளும் தலம்யாதெனில்; வயலில் கருநாட்டக்கடைசியர்தங்களிகாட்டும் = வயல்களிலே கரியகண்களையுடைய மருதநிலப்பெண்களின் மகிழ்வைக்காட்டி விளங்கும்; காவேரித்திருநாட்டு = காவேரிநதிசூழ்ந்த சோழநாட்டிலே; வளங்காட்டுஞ் செங்காட்டங்குடியாகும் = பலவளங்களையும் தோற்றுவிக்கும் திருச்செங்காட்டங்குடியாகும்.—எ-று.

மன்மதனைத் தீப்பொறிகான்று உருவிலியாகச்செய்ததாகலின், "உருநாட்டுஞ்செயல் காமனொழிய விழிபொழிசெந்தீவருநாட்டம்" என்றார். விழி - வினையெச்சப்பொருள்படநின்றது. வரு - வினைத்தொகை. நீர்வருவாய் குறைவின்மையால் வயல்களிலே நிரந்தரமும் கடைசியர் கள்ளுண்டுகளித்துப் பற்பல தொழின்முயற்சியுடையராயிருத்தலின் "வயலிற்கடைசியர்தங்களிகாட்டுநாடு" என்றார். திருநாட்டுவளங்காட்டுஞ் செங்காட்டங்குடி என்பதற்கு, அத்திருநாட்டுவளமுற்றும் தன்னிடத்தே தோற்றுவிக்கும் திருச்செங்காட்டங்குடி எனினும் அமையும். (க)

நிலவியவத்திருப்பதியினெடுஞ்சடையார்நீற்றடைவா
லுலகில்வளருயிர்க்கெல்லாமுயர்காவற்றொழில்பூண்டு
மலர்புகழ்மாமாத்திரர்தங்குலம்பெருகவந்துள்ளார்
பலர்புகழுந்திருநாமம்பரஞ்சோதியாரென்பார்.

(இ-ள்.) நிலவியவத்திருப்பதியில் = சிறந்த அத்திருப்பதியிலே; நெடுஞ்சடையார் நீற்றடைவால் = நீர்க்கசடையையுடைய சிவபெருமானுக்குரிய திருநீற்றுச்சார்பேதும்; உலகில்வளருயிர்க்கெல்லா முயர்காவற்றொழில்பூண்டு = உலகத்திலே ஓங்கும் உயிர்களுக்கெல்லாம் உயர்ந்தகாத்தற்றொழிலை மேற்கொண்டமையால்; மலர்புகழ் மாமாத்திரர்தங்குலம்பெருக வந்துள்ளார் = விரிந்த கீர்த்திபெற்ற மாமாத்திரர்குலம்விர்த்திக்க அவதரித்தவர்; புகழுந்திருநாமம் பரஞ்சோதியாரென்பார் = பலருந் துதிக்குந் திருநாமம் பரஞ்சோதியாரென்று சொல்லப்படுபவர். எ-று.

சிவபத்தியோடு எவ்வுயிர்கண்மாட்டும் அருளுடையரென்பார் "நீற்றடைவாலுலகில்வளருயிர்க்கெல்லா முயர்காவற்றொழில்பூண்டு" என்றார். காவற்றொழிலாவது - ஆயுள்வேதநூல் ஆராய்ச்சியுடைமையின் உயிர்கட்கு நோயணுகாவண்ணம் பரிகாரங்களைத் தக்கவாறியற்றிப் பாதுகாத்தல். அடைவாலென்புழி ஆலுருபுஉடனி

1. வைரவர் முன் பரிகலந் திருத்திப் பின் தலைக்கறியும் படைக்க உடனுண்ண நாயனாருக்கு வேறு பரிகலந் திருத்தச்சொன்
2. வைரவர் நாயனாருடனுண்ண புதல்வனில்லாவிடில் வெளியில் போயழையுமென அழைக்கவே சீராளன் பள்ளியிலிருந்து



2



3



னன். வைரவரையும் பரிகலத்தையும் காணாது திகைத்தது. 3. வைரவராய் வந்த சிவபிரான் பார்ப்பதியுடன் தருமவிடைமீதும்,
வேள் தேவியருடன் மயில்மீதுந் தோன்றி. நாயனர் பத்தினி புதல்வன் தாதி இவர்கட்கு அனுக்கிரகஞ்செய்தது.

கழ்ச்சிக்கண்வந்தது. பூணுதல் - விரதமாகக்கோடல். பூண்டு வினையெச்சத்திரிபு. எனப்படுவோர் எனற்பாலது-செயப்பாட்டுவினைப்பொருளுணர்த்தும் படுவிகுதிதொக்கு என்பார் எனநின்றது.                                                    (உ)

ஆயுள்வேதக்கலையுமலகில்வடநூற்கலையுந்
தூயபடைக்கலத்தொழிலுந்துறைநிரம்பப்பயின்றுள்ளார்
பாயுமதகுஞ்சரமும்பரியுமுகைக்கும்பண்பு
மேயதொழில்விஞ்சையினுமேதினியின்மேலானார்.

(இ-ள்.) ஆயுள்வேதக்கலையுமலகில்வடநூற்கலையும் — ஆயுள்வேதநூலும் அளவுபடாத வடமொழியிலுள்ள பலநூல்களும்; தூயபடைக்கலத்தொழிலும் = களங்கமற்ற ஆயுதச்செயல்களும்; துறைநிரம்பப்பயின்றுள்ளார் = அவ்வவற்றிற்குரிய அங்கங்களெல்லாம் அமைய ஆராய்ந்துள்ளவர்; பாயுமதகுஞ்சரமும் பரியுமுகைக்கும் பண்புமேய = தாக்குகின்ற மதயானைகளையும் குதிரைகளையுஞ்செலுத்தும் தன்மையமைந்த; தொழில்விஞ்சையினுமேதினியின்மேலானார் = தொழில்கட்குரிய வித்தைகளினும் பூமியிலே சிறந்தவர்.—எ-று.

தூய்மை-பொருதலில் வஞ்சகமின்மை.                                                    (௩)

உள்ளநிறைகலைத்துறைகளொழிவின்றிப்பயின்றவற்றாற்
றெள்ளிவடித்தறிந்தபொருள்சிவன்கழலிற்செறிவென்றே
கொள்ளுமுணர்வினின்முன்னேகூற்றுதைத்தகழற்கன்பு
பள்ளமடையாயென்றும்பயின்றுவரும்பண்புடையார்.

(இ-ள்.) உள்ளநிறைகலைத்துறைகளொழிவின்றிப்பயின்று = மனம் அமைதிபெறுதற்கு ஏதுவாகிய பலகலைகளினும் ஒழிவின்றிப்பழகி; அவற்றாற்றெள்ளிவடித்தறிந்தபொருள் = அக்கலைகளால் திரட்டிச் சாரமாகவடித்துத் தேர்ந்தபொருள்; சிவன்கழலிற்செறிவேயென்றுகொள்ளுமுணர்வினில்=சிவபெருமான் திருவடிகளில் ஒடுங்குதலேயென்றுகொண்ட உணர்ச்சியால்; பள்ளமடையாய் = பள்ளத்திலே திருப்பிய மடைவெள்ளம்போல; முன்னே கூற்றுதைத்தகழற்கு = பண்டு இயமனையுதைத்த திருவடியினிடத்தே; அன்புபயின்றுவரும்பண்புடையார்=அன்பு குடிகொள்ளும் அமைதியுடையவர்.—எ-று.

நிறைதற்கேதுவாகியகலையை நிறைகலையென்றார். என்றே யென்னும் தேற்றேகாரம் செறிவென்புழிச் சேர்க்கப்பட்டது. கழற்கு-வேற்றுமைமயக்கம். மடை அதன்கண்ணதாகிய நீரையுணர்த்தலின் ஆகுபெயர். ஆய்-உவமவுருபு. உண்மை நூலுணர்ச்சியாற்றெளிந்தபொருள் சிவனடியிற்செறிதலேயென்றுதேர்ந்து அத்திருவடிகளில் என்றும் அகலாத அன்புடையராயினாரென்பது கருத்து.                                                    (௪)

ஈசனடியார்க்கென்றுமியல்பானபணிசெய்தே
யாசில்புகழ்மன்னவன்பாலணுக்கராயவற்காகப்
பூசன்முனைக்களிறுகைத்துப்போய்வென்றுபொருமரசர்
தேசங்கள்பலகொண்டுதேர்வேந்தன்பாற்சிறந்தார்.

(இ-ள்.) ஈசனடியார்க்கென்றுமியல்பானபணிசெய்து=சிவனடியவர்களுக்கு எப்பொழுதும் உரிமையான திருத்தொண்டுகளை இயற்றி; ஆசில்புகழ்மன்னவன்பா

லணுக்கராய் = மாசில்லாதபுகழையுடைய சோழமன்னவனிடத்தே மந்திரியாராகி; அவற்காகப்பூசன்முனைக்களிறுகைத்துப்போய் = அவ்வரசன்பொருட்டாகப் போர் முனையிலே ஆனையைச்செலுத்திச்சென்று; பொருமரசர்வென்று=எதிர்த்துப்போர் புரியும் அரசரைவென்று; தேசங்கள்பலகொண்டுதேர்வேந்தன்பாற்சிறந்தார்=அவர் தேசங்கள்பலவற்றைக் கைவசமாக்கித் தேரையுடைய தமதரசர்பாற் சிறந்துவிளங் கினார்.—எ-று.

ஏ - அசை. மந்திரியர்க்குரிய அமாத்தியரென்னும் வடமொழிப்பெயர்க்கு அணுக்கரென்பதே பொருளாகலின் "அணுக்கராய்" என்றார். அமா-அணுக்கம். (ரு)

மன்னவர்க்குத்தண்டுபோய்வடபுலத்துவாதாவித்
தொன்னகரந்துகளாகத்துளைநெடுங்கைவரையுகைத்துப்
பன்மணியுநிதிக்குவையும்பகட்டினமும்பரித்தொகையு
மின்னனவெண்ணிலகவர்ந்திங்கியலரசன்முன்கொணர்ந்தார்.

(இ-ள்.) மன்னவர்க்குத்தண்டுபோய் = தமது அரசன்பொருட்டுச் சேனைக ளுடன்சென்று; வடபுலத்து வாதாவித்தொன்னகரந்துகளாக = வடபூமியிலுள்ள வாதாவியென்னும் மன்னவனது பழையநகரம் துகளாகும்படி; துளைநெடுங்கைவ ரையுகைத்து = நெடிய துளைக்கரத்தையுடைய யானையை நேர்செலுத்தி (வென்று); பன்மணியுநிதிக்குவையும் = பல இரத்தினங்களும் திரவியக்குவியல்களும்; பகட்டி னமும் பரித்தொகையும் = யானைக்கூட்டங்களும் குதிரைக்கூட்டங்களும்: இன்ன னவெண்ணிலகவர்ந்து = இவைபோல்வன பிறவும் எல்லையில்லாதன கவர்ந்து ; இய லரசன்முன்னிங்குக் கொணர்ந்தார் = இலக்கணமமைந்த தமதரசன்முன் இங்கே கொண்டுவந்தார்.—எ-று.

உகைத்து என்பது அதன்காரியமாகிய வெல்லுதலை யுணர்த்திநின்றது. இலக் கணமாவது - அரசர்க்குரிய உத்தமகுணமுதலியன நிரம்புதலுடைமை. (சு)

கதிர்முடிமன்னனுமிவர்தங்களிற்றுரிமையாண்மையினை
யதிசயித்துப்புகழ்ந்துரைப்பவறிந்தவமைச்சர்களுரைப்பார்
மதியணிந்தார்திருத்தொண்டுவாய்த்தவலியுடைமையினு
லெதிரிவருக்கிவ்வுலகிலில்லையெனவெடுத்துரைத்தார்.

(இ-ள்.) கதிர்முடிமன்னனும் = காந்திபெற்றகிரீடத்தையுடைய அரசனும்; இவர்தங்களிற்றுரிமையாண்மையினை = யானையூர்ந்து வெல்லும் இவராற்றலை; அதி சயித்துப் புகழ்ந்துரைப்ப = வியந்துபுகழ்ந்துகூற; அறிந்தவமைச்சர்களுரைப்பார்= இவர் நிலைமையையறிந்த ஏனைமந்திரிகள் இயம்புவார்; மதியணிந்தார் = பிறைமதிய ணிந்த பெருமானுடைய; திருத்தொண்டுவாய்த்த வலியுடைமையினால் = திருத் தொண்டு சித்திக்கப்பெற்ற வன்மையை வாய்ந்திருத்தலால்; இவ்வுலகிலிவருக்கெதி ரில்லையென வெடுத்துரைத்தார் = இவ்வுலகத்திலே இப்பரஞ்சோதியாருக்கு எதிரி யாவார் இல்லையென்று எடுத்துக்கூறினார்.—எ-று. (எ)

தம்பெருமான்றிருத்தொண்டரெனக்கேட்டதார்வேந்த
னும்பர்பிரானடியாரையுணராதேகெட்டொழிந்தேன்
வெம்புகொடும்போர்முனையில்விட்டிருந்தேனெனவெருவுற்
றெம்பெருமானிதுபொறுக்கவேண்டுமெனவிறைஞ்சினான்.

(இ-ள்.) தம்பெருமான் திருத்தொண்டனெனக்கேட்ட தார்வேந்தன் = தமது பிரானுடைய திருத்தொண்டனென்று சாற்றக்கேட்ட அரசன்; உம்பர்பிரானடியாரையுணராது = தேவாதிபருடைய அடியவரை (இதுகாறும்) தெரிந்துகொள்ளாமல்; கெட்டொழிந்தேன் = நிலைமைகெட்டு அழிந்தவனாயினேன்; வெம்புகொடும்போர் முனையில் விட்டிருந்தேனெனவெருவுற்று = (அன்றியும்) சினக்கும் கொடிய யுத்த முனையிலே செலுத்தியிருந்தேனென்று அச்சமுற்று; எம்பெருமா னிதுபொறுக்க வேண்டுமென விறைஞ்சினான் = எம்பெருமானே எளியேனியற்றிய இவ்வபராதத்தைப் பொறுத்தருளல்வேண்டுமென்று வணங்கினான்.—எ-று.

ஏ-அசை, அடியவரை ஏவல்கொள்ளுதல் தனது அழிவிற்கு ஏதுவாகலின் "உணராதே கெட்டொழிந்தேன்" என்றும், செவ்விய நெறியினில் நிற்பாரைச் சீற்ற விளைவிற்கு ஏதுவாகிய தீத்தொழிலிற்செலுத்துதல் அதனினுங் கொடிதாகலின், "வெம்புகொடும்போர்முனையில் விட்டிருந்தேனெனவெருவுற்றிறைஞ்சினான்." என்றும் விளம்பினர். (அ)

இறைஞ்சுதலுமுன்னிறைஞ்சியென்னுரிமைத்தொழிற்கடுத்த
திறம்புரிவேனதற்கென்னோதீங்கென்னவாங்கவர்க்கு
நிறைந்தநிதிக்குவைகளுடனீடுவிருத்திகளளித்தே
யறம்புரிசெங்கோலரசனஞ்சலிசெய்துணைக்கின்றான்.

(இ-ள்.) இறைஞ்சுதலு முன்னிறைஞ்சி = (அரசன்) வணங்குதலும் (நாயனாரும்) எதிர்வணங்கி; என்னுரிமைத்தொழிற்கடுத்த திறம்புரிவேன் = எனக்குரிமையாகிய செயலுக்கிசைந்த செய்கைகளைச்செய்வேன்; அதற்கென் தீங்கென்ன = அதனாற் கெடுதியாதென்றுகூற; அறம்புரிசெங்கோலரசன் = நீதியைவிளைக்கும் செங்கோலையுடைய அரசன் (உடனே); அவர்க்கு நிறைந்தநிதிக்குவைகளுடன் = அந்நாயனார்க்கு மிக்க திரவியக்குவியல்களோடு; நீடுவிருத்திகளளித்து = மிகுந்த விருத்திகளுங்கொடுத்து; அஞ்சலிசெய்துணைக்கின்றான் = கரங்குவித்து வணங்கி விண்ணப்பஞ்செய்வான்.—எ-று.

அதற்கு - வேற்றுமைமயக்கம். ஓ - ஆங்கு - ஏ-அசைகள். விருத்திகளாவன-பரம்பரையாக அநுபவிக்குமாறு விருத்திக்கும்பொருள். அவை மானியமாகவிடப்படும் நிலமுதலியவை. விருத்திகள்-அடிமைகளென்னலும் ஒன்று. (கூ)

உம்முடையநிலைமையினையறியாமைகொண்டுய்த்தீ
ரெம்முடையமனக்கருத்துக்கினிதாகவிசைந்துமது
மெய்ம்மைபுரிசெயல்விளங்கவேண்டியவாறேசரித்துச்
செம்மைநெறித்திருத்தொண்டுசெய்யுமெனவிடைகொடுத்தான்.

(இ-ள்.) உம்முடையநிலைமையினையறியாமைகொண்டுய்த்தீர் = தேவரீரது கொள்கையைச் சிறியேன்அறியாவண்ணம் உட்கொண்டுசெலுத்தினீர்; எம்முடைய மனக்கருத்துக்கினிதாகவிசைந்து = எமது இஷ்டத்துக்கு இனிமையாக உடன்பட்டு; மெய்ம்மைபுரியுமதுசெயல்விளங்கவேண்டியவாறுசரித்து = உண்மையாக அநுட்டிக்கப்படும் உம்முடையசெய்கை எவர்க்கும்புலப்பட இஷ்டப்படி மேற்கொண்டு; செம்மைநெறித்திருத்தொண்டுசெய்யுமெனவிடைகொடுத்தான் = ஞானமார்க்கத்துக்குரிய திருத்தொண்டுகளை நடத்தக்கடவீரென்றுவிடைதந்தான்.—எ-று.

ஏகாரம்-அசை. செம்மை-ஞானம். (௧௦)

மன்னவனைவிடைகொண்டுதம்பதியின்வந்தடைந்து
பன்னுபுகழ்ப்பரஞ்சோதியார்தாமும்பனிமதிவாழ்
சென்னியரைக்கணபதீச்சரத்திறைஞ்சித்திருத்தொண்டு
முன்னைநிலைமையில்வழுவாமுறையன்பிற்செய்கின்றார்.

(இ-ள்.) பன்னுபுகழ்ப்பரஞ்சோதியாரும் = (பலராலும்) புகழப்படும் புகழையுடைய பரஞ்சோதியாரென்னும் இந்நாயனாரும்; மன்னவனைவிடைகொண்டுதம்பதியின் வந்தணைந்து = அரசன்பால் அநுமதிபெற்றுக்கொண்டு தமதுநகரத்தில் வந்து சார்ந்து; பனிமதிவாழ்சென்னியரை = குளிர்ந்தசந்திரன்குடிகொள்ளும் திருமுடியையுடைய சிவபெருமானை; கணபதீச்சரத்திறைஞ்சி = கணபதீச்சரமென்னுந் தலத்தில்வணங்கி; திருத்தொண்டுமுன்னைநிலைமையின்வழுவாமுறையன்பிற்செய்கின்றார் = அரியதொண்டுகளை முன் அநுட்டித்ததன்மையிற் குறையாதபடி அன்பினால் இயற்றுகின்றார்.—எ-று.

மன்னவனை - வேற்றுமைமயக்கம். தாம் - அசை. இத்தலம் கயமுகாசுரனை அழித்தபின்னர்க் கணபதி பூசித்ததாகலின் கணபதீச்சரம் எனப் பெயர்பெற்றது. இதனைக் கந்தபுராணம் கயமுகனுற்பத்திப்படலத்துட்காண்க. (௧௧)

வேதகாரணரடியார்வேண்டியமெய்ப்பணிசெய்யத்
தீதில்குடிப்பிறந்ததிருவெண்காட்டுநங்கையெனுங்
காதன்மனைக்கிழத்தியார்கருத்தொன்றவருமபெருமை
நீதிமனையறம்புரியுநீர்மையினைநிலைநிற்பார்.

(இ-ள்.) வேதகாரணரடியார்வேண்டிய = வேதத்திற்கு மூலகாரணராகிய விமலரது அடியவர்கள்விரும்பிய; மெய்ப்பணிசெய்ய = உண்மைத்திருத்தொண்டுகளை இயற்றுதற்கு; தீதில்குடிப்பிறந்ததிருவெண்காட்டுநங்கையெனும் = தீங்கற்ற நற்குடியிற்பிறந்த திருவெண்காட்டுநங்கையென்னும் பெயரையுடைய; காதன்மனைக்கிழத்தியார்கருத்தொன்ற = காதலதிகரித்த மனைவியார் கருத்து ஒற்றுமைப்பட்டிருத்தலால்; அரும்பெருமைநீதிமனையறம்புரியும் = அரியமேன்மையோடும் ஒழுக்கம் அமைந்த இல்லறத்தைநடாத்தும்; நீர்மையினைநிலைநிற்பார் = தன்மையிலே தவறாதவராயினர்.—எ-று.

காதலி கருத்தொவ்வாவழி கணவன் இல்லறத்தை இனிதுநடத்த இயலாமையின் கருத்தொன்றலால் நடத்தினரென்பார் "காதன்மனைக்கிழத்தியார் கருத்தொன்ற மனையறம்புரியு நீர்மையினைநிலைநிற்பார்" என்றார். ஒன்ற - வினையெச்சத்திரிபு. நீர்மையினை வேற்றுமைமயக்கம். நிலைநிற்றல் - சிறிதும்வழுவாமை. (௧௨)

நறையிதழித்திருமுடியாரடியாரைநாடோறு
முறைமையினிற்றிருவமுதுமுன்னூட்டிப்பின்னுண்ணு
நிறையுடையபெருவிருப்பானியதியாகக்கொள்ளுந்
துறைவழுவாவகையொழுகுந்தூயதொழிற்றலைநின்றார்.

(இ-ள்.) நறையிதழித்திருமுடியாரடியாரை = தேன்பொழியும் கொன்றைமாலிகையணிந்த திருமுடியையுடைய சிவபெருமானது திருத்தொண்டர்களை; நாடோறுமுறைமையினிற்றிருவமுதுமுன்னூட்டி = தினமும் கிரமமாகத் திருவமுது முன்

னருண்பித்து; பின்னுண்ணுநிறையுடையபெருவிருப்பால் = தாம் பின்னருந்தும் நிலைமையையுடைய மிக்ககாதலால்; நியதியாகக்கொள்ளுந்துறைவழுவாவகையொழுகும்=நியமமாகக்கொண்ட செய்கைவழுவாது நடக்கும்; தூயதொழிற்றலைநின்றார்= செவ்வியதொழிலிலே நிலைபெற்றார்.—எ-று.

ஊட்டியுண்ணும் விருப்பாற் கொள்ளுந்துறை என இயையும். (௪௩)

தூயதிருவமுதுகனிகன்னலறுசுவைக்கறிநெய்
பாயதயிர்பாலினியபண்ணியமுண்ணீரமுத
மேயபடியாலமுதுசெய்விக்கமிசைந்தடியார்
மாயிருஞாலம்போற்றவருமிவர்பான்மனமகிழ்ந்தார்.

(இ-ள்.) தூயதிருவமுதுகனிகன்னலறுசுவைக்கறிநெய் = சுத்தமாகியதிருவமுது முக்கனி சர்க்கரை அறுசுவையமைந்தகறியமுது நெய்; பாயதயிர்பாலினியபண்ணியமுண்ணீரமுதம் = உறைந்ததயிர் பால் இனியபலகாரம் உண்ணுமியல்பையுடைய நீர் (ஆகியஇவற்றை); மேயபடியமுதுசெய்விக்க மிசைந்தடியார் = அவரவர் விரும்பியவண்ணம் திருவமுதுசெய்விக்க அடியவர்அருந்தி; மாயிருஞாலம்போற்றவருமிவர்பான்மனமகிழ்ந்தார் = மிகப்பெரிய உலகம்வியக்க அவதரித்த இந்நாயனார் பால் உள்ளம் உவந்தார்.—எ-று.

மேவல் - விரும்பல்' ஆல்-அசை. (௪௪)

சீதமதியரவினுடன்செஞ்சடைமேற்செறிவித்த
நாதனடியார்தம்மைநயப்பாட்டுவழிபாட்டான்
மேதகையாரவர்முன்புமிகச்சிறியராயடைந்தா
ராதலினாற்சிறுத்தொண்டரெனநிகழ்ந்தாரவனியின்மேல்.

(இ-ள்.) சீதமதியரவினுடன்செஞ்சடைமேற்செறிவித்தநாதன் = தண்ணிய சந்திரனைப் பாம்போடு சிவந்தசடைமேற்றங்குவித்த தலைவரது; அடியார்தம்மை நயப்பாட்டுவழிபாட்டால் = அடியவர்களை உயர்த்தும் வழிபாட்டோடு; மேதகையாரவர்முன்பு = சிறப்புடையாராகிய அத்திருத்தொண்டரெதிரே; மிகச்சிறியராயடைந்தாராதலினால் = பெரிதும்சிறுமையுடையராய்ப் பேணிநடந்தாராகலின்; அவனியின்மேற்சிறுத்தொண்டரெனநிகழ்ந்தார்=இவ்வுலகத்திலே சிறுத்தொண்டரென்னத் திருநாமம்பெற்று விளங்கினர்.—எ-று.

செறிவித்தலாவது பாம்போடுதிங்களைப் பகைதீர்த்தாளுதல். நயப்பாடு-நயம்படுத்தல். வழிபாட்டால் என்புழி ஆலுருபு உடனிகழ்ச்சிக்கண்வந்தது. (௪௫)

கண்ணுதலார்கணபதீச்சரத்தின்கட்கருத்தமரா
வுண்ணிறையன்பினிற்பணிசெய்தொழுகுவார்வழுவின்றி
யெண்ணில்பெருஞ்சீரடியாரிடைவிடாதமுதுசெய
நண்ணியபேருவகையுடனயந்துறையுநாளின்கண்.

(இ-ள்.) கண்ணுதலார்கணபதீச்சரத்தின்கண் = கண்படைத்த நெற்றியையுடைய கடவுளது கணபதீச்சரமென்னும் ஆலயத்திலே; கருத்தமரவுண்ணிறையன்பினில் = சித்தம் ஒற்றுமைப்பட உள்ளேசெறிந்த அன்பினால்; பணிசெய்தொழுகு

வார்=இயைந்ததொண்டுகளை இயற்றிவருவாராய்; எண்ணில்பெருஞ்சீரடியார்=அளவில்லாத மிக்கசீர்த்தியையுடைய அடியவர்கள்; இடைவிடாதவழுவின்றியமுதுசெய= எப்பொழுதும் தவறுதலின்றித் திருவமுதுகொள்ள; நண்ணியபேருவகையுடனயந்துறையுநாளின்கண் = நிலைபெற்ற நிறைமகிழ்ச்சியோடு இன்பமுற்று இருக்குங் காலத்தில்.—எ-று.

ஒழுகுவார் உறையுநாளின்கண் எனஇயையும். (௧௬)

நீராருஞ்சடைமுடியாரருளினானிறைதவத்துப்
பேராளரவர்தமக்குப்பெருகுதிருமனையறத்தின்
வேராகிவிளங்குதிருவெண்காட்டுநங்கைபாற்
சீராளதேவரெனுந்திருமைந்தரவதரித்தார்.

(இ-ள்.) நீராருஞ்சடைமுடியாரருளினால் = கங்கைதங்கிய சடைமுடியையுடைய கடவுளதுகிருபையால்; நிறைதவத்துப்பேராளரவர்தமக்கு = நிரம்பியதவத்தாற் பெருமைபெற்ற அந்நாயனாருக்கு; பெருகுதிருமனையறத்தின்வேராகிவிளங்கு திருவெண்காட்டுநங்கைபால் = சிறந்தஇல்லறத்திற்கு மூலமாகிவிளங்கும் திருவெண்காட்டுநங்கையினிடத்தே; சீராளதேவரெனுந் திருமைந்தரவதரித்தார் = சீராளதேவரென்னுந் திருநாமம்பெற்ற அரியபுத்திரர் அவதரித்தார்.—எ-று. இவ்விரண்டுங் குளகம்.

தவத்தென்புழி மூன்றனுருபுவிரிக்க. ஈண்டுத்தவமென்றது தம்முயிர்க்குவருந் துன்பங்களைப்பொறுத்துப் பிறவுயிர்களையோம்புதல். இத்தகைமையுடையார்க்கன்றி ஏனையர்க்குப் பெருமையாளுதலின்றென்பார், "நிறைதவத்துப்பேராளர்." என்றும், அறனெனப்பட்டது இல்வாழ்க்கையேயென்பார், "பெருகுதிருமனையறம்" என்றும், இல்லறமென்பன இத்தகையனவென்று எவருமுணர இந்நங்கையாற்றழைத்தனவென்பார் "திருமனையறத்தின்வேர்" என்றும் கூறினார். (௧௭)

அருமையினிற்றனிப்புதல்வர்பிறந்தபொழுதலங்கரித்த
பெருமையினிற்கிளைகளிப்பப்பெறற்கரியமணிபெற்று
வருமகிழ்ச்சிதாதையார்மனத்தடங்காவகைவளரத்
திருமலிநெய்யாடல்விழாச்செங்காட்டங்குடியெடுப்ப.

(இ-ள்,) அருமையினிற்றனிப்புதல்வர்பிறந்தபொழுது = அருமையாக ஒப்பற்றபுத்திரர் அவதரித்தபொழுது; அலங்கரித்தபெருமையினில்=(அப்புத்திரப்பேறு அச்சந்ததியை அணிகலம்போன்று) அலங்கரித்தமேன்மையால்; கிளைகளிப்ப = சுற்றத்தார்களிக்க; தாதையார்பெறற்கரியமணிபெற்று=தந்தையாரும் பெறுதற்கரியமணி போலும் புதல்வனைப்பெறுதலால்; வருமகிழ்ச்சிமனத்தடங்காவகைவளர = ஓங்கும் உவகையானது உள்ளத்தில் அடங்காதபடி வளரப்பெற; செங்காட்டங்குடி திருமலி நெய்யாடல்விழாவெடுப்ப = திருச்செங்காட்டங்குடியிலுள்ளவர் சிறப்புமிக்க எண்ணெயாடல்விழாவை எங்குஞ்செய்விக்க.—எ-று.

புத்திரப்பேறு இல்வாழ்க்கைக்கு ஒரு அணிகலமென்பதனை "மங்கல மென்ப மனைமாட்சி மற்றத - னன்கல நன்மக்கட் பேறு." என்னுந்திருக்குறளானுமுணர்க. பெருமானுக்குப் பிரீதியாகுதற்சிறப்புடைமையின் "பெறற்கரியமணி" என்றார். பெ

• ற்று - வினையெச்சத்திரிபு. செய்யாடல் -புத்திரோற்சவங்கொண்டாடுங்கால் நிகழுஞ்செயல். ஆடல் - மூழ்குதல். செங்காட்டங்குடி இடவாகுபெயர். (௧௮)

மங்கலநல்லியமுழக்கமறைமுழக்கம்வானளப்ப
வங்கணார்தஞ்சீரடியார்க்களவிறந்தநிதியளித்துத்
தங்கண்மரபினிலுரிமைச்சடங்குதசதினத்தினிலும்
பொங்குபெருமகிழ்ச்சியுடன்புரிந்துகாப்பணிபுனைந்தார்.

(இ-ள்.) நல்மங்கலஇயமுழக்கமறைமுழக்கம்வானளப்ப = அரியமங்கலவாத்தியமுழக்கமும் வேதமுழக்கமும் ஆகாயத்தையளவிட; அஙகணார்தஞ்சீரடியார்க்கு= அருட்கண்ணராகியஅமலரது சிறந்த அடியவர்கட்கு; அளவிறந்தநிதியளித்து=அளவுகடந்த திரவியங்கொடுத்து; தங்கண்மரபினிலுரிமைச்சடங்கு = தங்களுடையமரபிற்குரிய சடங்குகளை; தசதினத்திலும்பொங்குபெருகுமகிழ்ச்சியுடன்புரிந்து =பத்துதினத்திலும் பெருகியமகிழ்ச்சியோடுஞ்செய்து; காப்பணிபுனைந்தார் = இரக்ஷாபந்தனந்தரித்தார்.எ-று. இவ்விரண்டுங்குளகம். சடங்கு சாதகன்மமுதலியகிரியை.(௧௯)

ஆர்வநிறைபெருஞ்சுற்றமகமலரவளித்தவர்தாம்
பார்பெருகுமகிழ்ச்சியுடன்பருவமுறைப்பாராட்டுச்
சீர்பெருகச்செய்யவளர்திருமகனார்சிறடியிற்
றூர்வளர்கிண்கிணியசையத்தளர்நடையின்பதஞ்சார்ந்தார்.

(இ-ள்.) அளித்தவர்=(அப்புதல்வரைப்)பெற்றஅந்நாயனார்; ஆர்வநிறைபெருஞ்சுற்றமகமலர = காதல்நிரம்பியபெரியசுற்றத்தார்மனங்களிப்படைய; பார்பெருகுமகிழ்ச்சியுடன் = உலகத்திலே எல்லையிறந்த உவப்போடு; பருவமுறைப்பாராட்டுச்சீர்பெருகச்செய்ய = அவ்வப்பருவங்களுக்கு அமைந்தசடங்குகளை அரிதியற்ற; வளர்திருமகனார் = (தினமும்) வளரும் சீராளதேவர்; சிறடியிற்றூர்வளர்கிண்கிணியசைய = சிற்றடிகளில் அரும்புபோலுங்கிண்கிணிஅசைந்தொலிக்கும்படி; தளர்நடையின்பதஞ்சார்ந்தார்=தளர்ந்த நடையினைக்கொண்ட பருவமடைந்தார்.—எ-று.

அளித்தவர்அகமலரச்சீர்செய்யமகனார் சார்ந்தார்என இயையும். தாம். அசை. 'ஆர்வநிறைந்தசுற்றத்தாரக மலரவேண்டுவனவளித்து அவர்சீர்செய்ய' எனினும் அமையும். உலகிலில்லாத உவகையுற்றனர் என்பார் "பார்பெருகுமகிழ்ச்சி"என்றார். பாராட்டுச்சீராவன - சந்திமிதிப்பித்தல் அன்னப்பிராசனமுதலியவை. வளர் - உவமவுருபு. தார்-மாலையுமாம். (உ०)

சுருளுமயிர்நுதற்சுட்டிதுணைக்காதின்மணிக்குதம்பை
மருவுதிருக்கண்டநாண்மார்பினிலைம்படைகையிற்
பொருவில்வயிரச்சரிகள்பொன்னரைஞாண்புனைசதங்கை
தெருவிலொளிவிளங்கவளர்திருவிளையாட்டினிலமர்ந்தார்.

(இ-ள்.) சுருளுமயிர்நுதற்சுட்டி=சுருண்டமயிரோடுங்கூடிய நெற்றியிலணிந்த சுட்டியும்; துணைக்காதின்மணிக்குதம்பை=இருகாதுகளிலும்அணிந்த இரத்தின குதம்பைகளும்; மருவுதிருக்கண்டநாண் = சிறப்பமைந்த கண்டசரமும்; மார்பினிலைம்படை = மார்பிலணிந்த பஞ்சாயுதமும்; கையில்பொருவில்வயிரச்சரிகள் = கரத்திலணிந்த ஒப்பில்லாத வயிரத்தாலமைத்தவளைகளும்; பொன்னரைஞாண்=பொன்னாலாகிய அரைஞாணும்; புனைசதங்கை=அவ்வரையிற்புனைந்த சதங்கைகளும்; தெ

ருவிலொளிவிளங்க = வீதியிலே காந்தியைவீசும்படி; வளர்திருவிளையாட்டினிலமர்ந்தார் = மிக்கதிருவிளையாட்டில் விரும்பினார்.—எ-று.

குதம்பை= காதின்வளர்ச்சிக்கிடுங்கருவி. ஐம்படையாவது - சங்கு சக்கரம் கோதண்டம் தண்டம் கட்கம் என்னும் பஞ்சாயுதவடிவமாகச்செய்த ஒருஆபரணம். அவை காவற்கடவுளாகிய திருமாலுக்குரியபடையாகலின் அவ்வடிவாக அமைத்தணிதல் தொன்றுதொட்டவழக்கு. (உக)

வந்துவளர்மூவாண்டின்மயிர்வினைமங்கலஞ்செய்து
தந்தையாரும்பயந்ததாயாருந்தனிச்சிறுவர்
சிந்தைமலர்சொற்றெளிவிற்செழுங்கலைகள்பயிலத்தம்
பந்தமறவந்தவரைப்பள்ளியினிலிருத்தினார்.

(இ-ள்.) பயந்ததாயாருந்தந்தையாரும்=பெற்றெடுத்த அன்னையும்பிதாவும்; வந்துவளர்மூவாண்டில் = பூர்த்தியாகிய மூன்றாம்வயதிலே; மயிர்வினைமங்கலஞ்செய்து = சௌளமாகிய மங்கலக்கிரியையினை இயற்றி; தனிச்சிறுவர் சிந்தைமலர் = சிறந்தபுத்திரராது சிந்தைமலர்தற்கேதுவாகிய; சொற்றெளிவிற் செழுங்கலைகள்பயில் = தெளிவாகியசொற்களோடு செழித்தகலைகளிற்பழகும்படி; தம்பந்தமறவந்தவரை = தம்முடையபந்தம் நிவர்த்தியாகும்படி அவதரித்த அப்புதல்வரை; பள்ளியினிலிருத்தினார் = கல்விக்கழகத்திலே வைத்தார்.—எ-று.

சிந்தைமலர்சொல்லெனக் காரியத்தைக்காரணமாக உபசரித்தார். சிந்தைமலர்தல்-அறிவுவிகசித்தல். அப்புதல்வரால் இருவரும் அரனடியடைந்தாராகலின் "பந்தமறவந்தவர்" என்றார். (உஉ)

அந்நாளிற்சண்பைநகராண்டகையாரெழுந்தருள
முன்னாகவெதிர்கொண்டுகொடுபுகுந்துமுந்நூல்சேர்
பொன்மார்பிற்சிறுத்தொண்டர்புகலிகாவலனார்த
நன்மைச்சேவடிகள்போற்றிசைத்துநலஞ்சிறந்தார்.

(இ-ள்.) முந்நூல்சேர்பொன்மார்பிற்சிறுத்தொண்டர்=உபவீதமணிந்த அழகியமார்பினையுடையசிறுத்தொண்டநாயனார்; அந்நாளிற்சண்பைநகராண்டகையாரெழுந்தருள = அக்காலத்திலே சீர்காழிக்குத்தலைவராகிய ஆளுடையபிள்ளையார் எழுந்தருள; முன்னாகவெதிர்கொண்டுகொடுவந்து = முற்படஎதிர்கொண்டு அழைத்துவந்து; புகலிகாவலனார்த நன்மைச்சேவடிகள்போற்றிசைத்து=அப்பிள்ளையாருடைய சிறந்த கீர்த்திபெற்ற திருவடிகளை வழிபட்டு; நலஞ்சிறந்தார் = புண்ணியத்திற் பொலிவுற்றவராயினார்.—எ-று.

பொன்முந்நூல்சேர்மார்பெனினும்பொருந்தும். சீர்த்தியாவது-ஏனைத்தவங்களினும் எளிதிற்கதிபயப்பனவாகலின் எவராலும் புகழப்படுதல். இதனை * "முத்தனவெண்ணகையார் மயன் மாற்றி முறைவழுவா, தெத்தனை காலமின் றேத்து மவரிலு மென்பணிந்த, பித்தனை யெங்கள் பிரானை யணைவ தெளிதுசண்டை, யத்தனை ஞானசம் பந்தனைப் பாத மடைந்தவர்க்கே." என்றருளியவாற்றானுமுணர்க. (உ௩)

சண்பையர்தம்பெருமானுந்தாங்கரியபெருங்காதற்
பண்புடையசிறுத்தொண்டருடன்பயின்றுமற்றவரை

* திருஞானசம்பந்தர் திருவந்தாதி, ௬0.

மண்பரவுந்திருப்பதிகத்தினில்வைத்துச்சிறப்பித்து
நண்பருளியெழுந்தருளத்தாமினிதுநயப்புற்றார்.

(இ-ள்.) சண்பையர்தம்பெருமானும்=ஆளுடையபிள்ளையாரும்; தாங்கரிய பெருங்காதற்பண்புடைய=அளவிறந்த பெரிய காதற்குணம்அமைந்த; சிறுத்தொண்டருடன்பயின்று=சிறுத்தொண்டநாயனாரோடும் அளவளாவிவசித்து; மண்பரவுந்திருப்பதிகத்தினில்=உலகத்தார் துதிக்கும் தமது திருப்பதிகத்திலே; அவரைவைத்துச்சிறப்பித்து = அந்நாயனாரையமைத்துச்சிறப்பித்துப்பாடி; நண்பருளியெழுந்தருள =நட்பையளித்து எழுந்தருளலும்; தாமினிதுநயப்புற்றார் = இப்பேறுபெற்ற இந்நாயனார் இனிமையாகக் குதூகலித்தார்.—எ-று.

அடியவர்பத்தியில் இவர்போலும் ஆராவன்பினர் இலரென்பார் "தாங்கரிய பெருங்காதற்பண்புடையசிறுத்தொண்டர்." என்றார். இவரைச்சிறப்பித்தமை, "பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்-சங்காட்டுத் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே-செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய - வெங்காட்டு ளனலேந்தி விளையாடும் பெருமானே." என்னும் திருச்செங்காட்டங்குடித் திருப்பதிகத்துட்காண்க. மற்று-அசை. (உ௪)

இத்தன்மைநிகழுநாளிவர்திருத்தொண்டிருங்கயிலை
யத்தர்திருவடியிணைக்கீழ்ச்சென்றணையவவருடைய
மெய்த்தன்மையன்புநுகர்ந்தருளுதற்குவிடையவர்தாஞ்
சித்தமகிழ்வயிரவராய்த்திருமலைநின்றணைகின்றார்.

(இ-ள்.) இத்தன்மைநிகழுநாள் = இவ்வாறுவிளங்குங்காலத்தில்; இவர்திருத்தொண்டு=இந்நாயனார் திருத்தொண்டானது: இருங்கயிலையத்தர்திருவடியிணைக்கீழ்ச்சென்றணைய=பெருமைபெற்ற கயிலையில்வீற்றிருக்கும் பிரானுடைய இரண்டுதிருவடிகளின்கீழ்ப் போயணுகலும்; விடையவர் = இடபவாகனத்தையுடைய அவ்விறைவர்; அவருடையமெய்த்தன்மையன்பு=அந்நாயனாரது உண்மையியல்பமைந்த அன்பென்னும்அமுதை; நுகர்ந்தருளுதற்குச்சித்தமகிழ் = உண்டருளுதற்குத் திருவுளங்கொண்டருளி; வயிரவராய்த்திருமலைநின்றணைகின்றார் = வயிரவசங்கமராகி அத்திருமலையினின்றும் வருவாராயினார்.—எ-று.

இவர்தொண்டு இறைவர்திருவடிகட்கு உரிமையாக இவ்வளவுகாலஞ்சென்றதென்பார், "இத்தன்மைநிகழுநா ளிவர்திருத்தொண்டிருங்கயிலை-யத்தர்திருவடியிணைக்கீழ்ச்சென்றணைய" என்றும், அடிமையை ஆண்டவர்போல அபேதமாக உபசரித்துக்கூறுவது ஆன்றோர்வழக்காகலின் வயிரவசங்கமரென்றது "வயிரவர்" என்றும்,அமலர் பற்பலதலங்களினும்அருட்டிருமேனிகொண்டு வதியினும்,ஆங்காங்கு வழிபட்டாரால் அடையப்படும்பதவியாயுள்ள திருக்கயிலையில் நிக்கிரகானுக்கிரககர்த்தராய்ச்சாநித்தியராய் விளங்கல்பற்றிஆண்டுநின் றெழுந்தருளினாரென்பார்,"திருமலைநின்றணைகின்றார்" என்றும் விதந்தனர். நுகர்தலென்பதற்கிணங்க அன்பை அமுதென்னுமை ஏகதேசவுருவகம். தாம்-அசை. மகிழென்னும்பகுதி மகிழ்ந்தென வினையெச்சப்பொருளில்வந்தது. அன்றி, மகிழ்வை வயிரவர்க்கு விசேடணமாக்கி, நுகர்ந்தருளுதற்கு அணைகின்றாரெனினும் அமையும். (உ௫)

மடல்கொண்டமலரிதழிநெடுஞ்சடையைவனப்பெய்தக்
கடன்மண்டிமுகந்தெழுந்தகாளமேகச்சுருள்போற்
றொடர்பங்கிசுருண்டிருண்டுதூறிநெறித்தசைந்துசெறி
யடர்துஞ்சின்கருங்குஞ்சிகொந்தளமாகப்பரப்பி.

(இ-ள்.) மடல்கொண்டமலரிதழிநெடுஞ்சடையை = இதழ்கள்வாய்ந்த கொன்றைமலர்களையணிந்த நெடியசடைகளை; கடன்மண்டிமுகந்தெழுந்தகாளமேகச் சுருள்போல்=கருங்கடலிற்செறிந்து நீரையருந்தி மேலோங்கிய கருமேகத்தின் சுருள் போல; தொடர்பங்கிசுருண்டிருண்டுதூறி = தொடர்ச்சியுள்ளகேசமாகிச்சுருண்டு இருளையுடையதாய்க் காடடர்ந்து; நெறித்தசைந்துசெறி = நெறிப்பையுங்கொண்டு அசைவும்வாய்ந்து கற்றையாகிய; அடர்துஞ்சின்கருங்குஞ்சிகொந்தளமாக=நெருங்கிய நிலைபெறுதலையுடைய கரியமயிரின் கொத்துப்போல; வனப்பெய்தப்பரப்பி = அழகுண்டாகவிடுத்து.—எ-று.

நெடுஞ்சடையைக் காளமேகச்சுருள்போற்செறிந்த கருங்குஞ்சிக்கொந்தளமாக வனப்பெய்தப்பரப்பி எனஇயையும். காளமேகச்சுருள்போல் தொடர்பங்கியாய்ச் சுருளலாவது. குறுகியமயிர் ஓர் அடுக்கும் நெடுகியமயிர்ஓர்அடுக்கும் அதனினெடியமயிர் மற்றோரடுக்குமாக இங்ஙனம் அடுக்கடுக்காகச்சுருளுதல். துஞ்சல் அவ்வவ்வடுக்குகளின் நிலைபேறு. பிற்செய்யுளில் துஞ்சின்னுனியென வருதலுங்காண்க. ஆயென்பது சொல்லெச்சம். செறி அடர் என்பன வினைத்தொகைகள். குஞ்சியென் புழி ஆறனுருபுவிரிக்க. ஆக உவமவுருபு. சடையை அங்ஙனமே பரப்பாது கருங் குஞ்சிக் கொந்தளமாகப்பரப்பினரென்பது கருத்து. (உ௬)

அஞ்சனமஞ்சனஞ்செய்ததனையவணிகிளர்பம்பை
மஞ்சினிடையிடையெழுந்தவானமீன்பரப்பென்னப்
புஞ்சநிரைவண்டுதேன்சுரும்புபுடைபடர்ந்தார்ப்பத்
துஞ்சினுனித்தனிப்பரப்புந்தும்பைநறுமலர்தோன்ற.

(இ-ள்.) அஞ்சனமஞ்சனஞ்செய்ததனைய = மைக்குழம்பையூட்டியதையொத்த; அணிகிளர்பம்பைமஞ்சின் = அடுக்கமைந்த சுருண்டமயிராகிய மேகத்தினது; இடையிடையெழுந்தவானமீன்பரப்பென்ன = இடையிடையேதோன்றிய நட்சத்திரங்களின் பரப்பைப்போல; புஞ்சநிரைவண்டு தேன்சுரும்பு=திரட்சியாக வரிசைப்பட்ட கருவண்டும் தேன்வண்டும் பொறிவண்டும்; புடைபடர்ந்தார்ப்ப = பக்கங்களிற்சூழ்ந்து ஒலிக்கும்படி; துஞ்சின்நுனி=நிலைபெறுதலாகிய ஒவ்வோரடுக்குகளின் நுனியிலும்; தனிப்பரப்புந்தும்பைநறுமலர்தோன்ற= தனித்தனியாகப்பரப்பிய வாசனைதங்கிய தும்பைமலர்விளங்க.—எ-று.

வானமீன்பரப்பென்னத் தும்பைமலர்தோன்ற எனஇயையும். மேகச்சுருள் போலுதலின் பம்பையை மேகமென்றார். பம்பை - சுருண்டமயிர். புஞ்சம்-திரட்சி. மயிர்களின் ஒவ்வோரடுக்குகளின் நுனியும் சுருண்டிருத்தலால் தனித்தனிசூட்டிய தும்பைமலர் சரியாதுநிற்றல்பற்றி மஞ்சினிடையிடையெழுந்த வானமீன்பரப்பை ஒப்பாக்கினாரென்க. (உ௭)

அருகுதிருமுடிச்செருகுமந்தியிளம்பிறைதன்னைப்
பெருகுசிறுமதியாக்கிப்பெயர்த்துஞ்சாத்தியதென்ன

விரிசுடர்ச்செம்பவளவொளிவெயில்விரிக்கும்விளங்குசுடர்த்
திருநுதன்மேற்றிருநீற்றுத்தனிப்பொட்டுத்திகழ்ந்திலங்க.

(இ-ள்.) திருமுடியருகுசெருகுமந்தியிளம்பிறைதன்னை = திருமுடியின் அருகே செருகிய அந்திக்காலத்திலுதித்தற்குரிய இளஞ்சந்திரனை; பெருகுசிறுமதியாக்கிப்பெயர்த்துஞ்சாத்தியதென்ன = பெருகியசிறியசந்திரனைக்கிப் பின்னரும் (நெற்றியிலே) தரித்ததுபோல; விரிசுடர்ச்செம்பவளவொளிவெயில்விரிக்கும் = விரிந்த காந்திபெற்ற செம்பவளத்தினொளிபோலக் கிரணங்களைப்பரப்புகின்ற; விளங்குசுடர்த்திருநுதன்மேல் = பிரகாசம்பெற்ற சூரியனைநிகர்த்த திருநெற்றியின்மீது; திருநீற்றுத்தனிப்பொட்டுத்திகழ்ந்திலங்க = திருநீற்றாலணிந்த தனித்தபொட்டானது ஒளிபெற்றுவிளங்க.—எ-று.

சாத்தியதென்னத் திருநீற்றுப்பொட்டுத் திகழ்ந்திலங்க என இயையும். பிறையைப் பெருகிய சிறுமதியாக்கலாவது - பூரணசந்திரன்போலும் வட்டவடிவத்தோடு சிறுமையாக்கல். இதனைத் திருநீற்றுத்தனிப்பொட்டுக்கு உவமித்தது அபூதவுவமை. ஒளியென்புழி உவமவுருபுவிரிக்க. (உ-அ)

வெவ்வருக்கன்மண்டலமும்விளங்குமதிமண்டலமு
மவ்வனற்செய்மண்டலமுமுடனணைந்ததெனவழகை
வவ்வுதிருக்காதின்மணிக்குழைச்சங்குவளைந்ததனுட்
செவ்வரத்தமலர்செறித்ததிருத்தோடுபுடைசிறக்க.

(இ-ள்.) வெவ்வருக்கன்மண்டலமும் = வெப்பமிக்க சூரியமண்டலமும்; விளங்குமதிமண்டலமும் = பிரகாசம்பெற்ற சந்திரமண்டலமும்; அவ்வனற்செய்மண்டலமும் = அந்த அக்கினிமண்டலமும்; உடனணைந்ததென = ஒருங்குகூடியதுபோல; அழகைவவ்வுதிருக்காதில் = அழகைத் தன்வயமாக்குந் திருச்செவியிலே; மணிச்சங்குக்குழைவளைத்து = அழகிய சங்கக்குழையணிந்து; அதனுட்செவ்வரத்தமலர்செறித்ததிருத்தோடுபுடைசிறக்க = அதனுள்ளே செவ்வரத்தம்பூவாலணிந்த திருத்தோடு இருபக்கத்தும் சிறந்துபிரகாசிக்க.—எ-று.

அருக்கமண்டலமுதலியமூன்றையும் முறையே திருக்காதுக்கும் சங்கக்குழைக்கும் திருத்தோட்டுக்கும் உவமையாக்கியபடி. மலரென்புழி மூன்றனுருபுவிரிக்க.

களங்கொள்விடமறைத்தருளக்கடலமுதக்குமிழிநிரைத்
துளங்கொளிவெண்டிரட்கோவைத்தூயவடமணிந்ததென
வுளங்கொள்பவர்களாந்துடலுமுயிருமுருகப்பெருக
விளங்குதிருக்கழுத்தினிடைவெண்பளிங்கின்வடந்திகழ.

(இ-ள்.) களங்கொள்விடமறைத்தருள = திருக்கழுத்திற்கொண்டருளிய நஞ்சத்தை மறைத்தற்பொருட்டு; கடலமுதக்குமிழி = திருப்பாற்கடலிலுதித்த அமிர்தமயமாகிய குமிழிகளென்னும்; நிரைத்துளங்கொளிவெண்டிரட்கோவைத்தூயவடமணிந்ததென = வரிசையாகவிளங்கும் ஒளிவாய்ந்த வெள்ளிய திரண்டகோவையாகிய சுத்தவடத்தைச்சூட்டியதுபோல; உளங்கொள்பவருடலுமுயிருங்கரைந்துருக = உள்ளேசிந்திப்பவரது உடலுமுயிரும் இளகியுருகும்படி; பெருகவிளங்குதிருக்கழுத்தினிடை = மிகவும் விளங்குகின்ற திருக்கழுத்தினிடையே; வெண்பளிங்கின்வடந்திகழ = வெள்ளிய பளிங்குமாலை விளங்க.—எ-று.

அமுதக்குமிழிநிரைக்கோவைவடமணிந்தென வெண்பளிங்கின்வடந்திகழ எனஇயையும். விடத்தை இலதாக்குதல் அமுதத்திற்கேயுளதாகலின் "களங்கொள் விடமறைத்தருளக்கடலமுதக்குமிழிநிரைக்கோவைவடமணிந்தென" என்றும்,தேவர்முதலியோர் சிதைவுறும்படி சீறிவந்த ஆலகாலவிடத்தைப் பெருமான்அருந்திய வழி இத்திருக்களம் அதனைத்தானேற்று யாவரையும்உய்வித்ததாகலின் அக்கருணைத் திறத்தைச்சிந்திப்பார்க்கு ஆராமையால் ஊனும் உயிரும்உருகுதல்பற்றி "உளங்கொள்பவர்களைந்தடலுமுயிருமுருகப்பெருகவிளங்குதிருக்கழுத்து" என்றும் விதந்தனர். இத்தகைமைநோக்கியே திருநீலகண்டநாயனார் இக்கண்டத்தில் அன்புவைத்தமையுமுணர்க. அன்றி, உடலுமுயிருமுருகும்படி மிகஅழகுபெற்றுவிளங்கும் கண்டமென்னலும் ஒன்று. அமுதக்குமிழிவடமணிந்தென என்றது அபூதவுவமை. (௫0)

செம்பரிதிகடலளித்தசெக்கரொளியினையந்தி
பம்புமிருள்செறிபொழுதுபடர்ந்தணைந்துசூழ்வதெனத்
தம்பழையகரியுரிவைகொண்டுசமைத்ததுசாத்து
மம்பவளத்திருமேனிக்கஞ்சுகத்தினணிவிளங்க.

(இ-ள்) செம்பரிதிகடலளித்தசெக்கரொளியினை = சிவந்தசூரியன் கடலைச் சேர்ந்து ஈன்ற செவ்வானஒளியை; அந்திபம்புமிருள்செறிபொழுது=அந்திக்காலத்தில் அதிகரிக்கும் இருளடர்ந்தஇரவானது; படர்ந்தணைந்துசூழ்வதென = விரிந்து நெருங்கிச் சூழ்தல்போல; அம்பவளத்திருமேனி=அழகியபவளம்போலும் திருமேனியிலே; தம்பழையகரியுரிவைகொண்டு = தமக்குப்பழமையாயுள்ள யானைத்தோலைக் கொண்டு; சமைத்ததுசாத்துங்கஞ்சுகத்தினணிவிளங்க = சமைத்ததாகத்தரித்த சட்டையினழகுபிரகாசிக்க.—எ-று.

சிவந்தசூரியன் மேற்கடலிற்சேருங்காற்றோன்றலின் "செம்பரிதிகடலளித்த செக்கர்" என்றும், எவர்க்கும் இடுக்கண்புரிந்த கயமுகாசுரனை உரித்துப்போர்த்த தோலையே இப்பொழுதும் சட்டையாக்கினாராகலின், "தம்பழையகரியுரிவைகொண்டுசமைத்ததுசாத்துங்கஞ்சுகம்" என்றும் சாற்றினாரென்க. செக்கரொளி திருமேனிக்கும் இரவு சட்டைக்கும் உவமித்தவாறு. (௫௧)

மிக்கெழுமன்பர்களன்புதிருமேனிவிளைந்ததென
வக்குமணியாற்சன்னவீரமுமாரமும்வடமுங்
கைக்கணிகொள்வளைச்சரியுமரைக்கடிசூத்திரச்சரியுந்
தக்கதிருக்காற்சரியுஞ்சாத்தியவொண்சுடர்தயங்க.

(இ-ள்.) அன்பர்கண்மிக்கெழுமன்பு=அடியவர்களிடத்தே ஓங்கியெழுகின்ற அன்பானது; திருமேனிவிளைந்ததென = அண்ணலார்திருமேனியிலே உருவமைந்து விளங்கினாற்போல; அக்குமணியாற்சாத்தியசன்னவீரமும் = எலும்புமணியாலமைத்துச்சாத்திய வெற்றிமாலையும்; ஆரமும்வடமுங்கைக்கணிகொள்வளைச்சரியும்=ஆரங்களும் கோவைகளும் கைக்குஆபரணமாகிய கங்கணங்களும்; அரைக்கடிசூத்திரச்சரியும் = அரையின்அணியாகிய கடிசூத்திரமணிகளும்; தக்கதிருக்காற்சரியும் = தகுதிபெற்ற திருவடிகளின் அணிகளும்; ஒண் சுடர் தயங்க=அழகிய சுடர்விட்டு விளங்க. எ-று.

அடியவர்பால்விளையும் அன்பெல்லாம் பெருமானையடைதற்கே உரியவாகலானும், அன்பை வெண்ணிறத்ததாகக்கூறுதல் ஆன்றோர்வழக்காகலானும், அக்கு

மணியாற்சமைத்துச்சாத்திய இவ்வாபரணமனைத்தையும்அன்பின்விளைவென உருவகித்தார். கைச்சரி கடிசரி காற்சரி என அவ்வவ்வணிகளுக்குப் பெயர்போந்தமை ஆங்காங்குச் சரித்தலுடைமையிற்போலும். கடி-அரை. (௯உ)

பொருவிறிருத்தொண்டர்க்குப்புவிமேல்வந்தருள்புரியும்
பெருகருளின்றிறங்கண்டுபிரானருளேபேணுவீர்
வருமன்பின்வழிநிற்பீரெனமறைபூண்டறைவனபோற்
றிருவடிமேற்றிருச்சிலம்புதிசைமுழுதுஞ்செலவொலிப்ப.

(இ-ள்.) பொருவிறிருத்தொண்டர்க்குப்புவிமேல்வந்தருள்புரியும் = நிகரற்ற அடியவர்கட்குப் பூமியிலெழுந்தருளி அநுக்கிரகிக்கும்; பெருகருளின்றிறங்கண்டு = மிக்ககிருபையின் மேன்மையைநோக்கி; பிரானருளேபேணுவீர் = பெருமானருளையே பெரிதும்விரும்பிய உலகீர்; வருமன்பின்வழிநிற்பீரென = வளராநின்ற அன்பின்வழியேவதியக்கடவீரென்று; மறைபூண்டறைவனபோல் = வேதம் நியதிகொண்டு ஒலிப்பனபோல; திருவடிமேற்றிருச்சிலம்புதிசைமுழுதுஞ்செலவொலிப்ப = திருவடியிலணிந்த திருச்சிலம்புகள் திக்குமுழுதும் ஒலிபரம்பும்படி முழங்க.—எ-று.

அன்பர்க்கருள்புரியுந்திறங்கண்டு அருளைவிரும்புவீர் அன்பின்வழிநிற்பீரென்றது, அன்பின்வழிநின்றதொண்டர்க்கு அருள்புரியச்செல்லுதலால் நீயிரும் அருள்பெறுதற்கு இதுவே சாதனமாகலின் அவ்வன்பின்வழிநிற்பீர் என்னுங்கருத்தது.

பூண்டு என்பதற்குத் திருச்சிலம்பாகப் பூணப்பட்டு என்னலுமொன்று. (௯௩)

அயன்கபாலந்தரித்தவிடத்திருக்கையாலணைத்த
வயங்கொளிமூவிலைச்சூலமணித்திருத்தோண்மிசைப்பொலியத்
தயங்குசுடர்வலத்திருக்கைத்தமருகத்தினொலிதழைப்பப்
பயன்றவத்தாற்பெறும்புவியும்பாததாமரைசூட.

(இ-ள்) அயன்கபாலந்தரித்தவிடத்திருக்கையாலணைத்த = பிரமதேவரது கபாலத்தையேந்திய இடதுதிருக்கரத்தாலணைத்த; வயங்கொளிமூவிலைச்சூலம் = துலங்குங் காந்திபெற்ற முத்தலைச்சூலமானது; மணித்திருத்தோண்மிசைப்பொலிய = அழகிய அவ்விடப்பாகத்திருத்தோண்மீது விளங்க; தயங்குசுடர்வலத்திருக்கைத் தமருகத்தினொலிதழைப்ப = மலிந்த ஒளியையுடைய வலதுதிருக்கரத்திலேந்திய உடுக்கையின் ஒலிபரவ; தவத்தாற்பயன்பெறும்புவியும் பாததாமரைசூட = தவத்தால் பெருமான் திருவடிகளைத் தாங்கப்பெற்ற பூமியும் அத்திருவடிகளைத்தாங்க.—எ-று.

திருவடிகளைத் தாங்கப்பெறுதலின் மிக்க தவப்பேறின்மையின் அதனைத் தவப்பயனென்றார். (௯௪)

அருள்பொழியுந்திருமுகத்தினணிமுறுவனிலவெறிப்ப
மருள்பொழியும்மலஞ்சிதைக்கும்வடிச்சூலம்வெயிலெறிப்பப்
பொருள்பொழியும்பெருகன்புதழைத்தோங்கிப்புவியேத்தத்
தெருள்பொழிவண்டமிழ்நாட்டுச்செங்காட்டங்குடிசேர்ந்தார்.

(இ-ள்.) அருள்பொழியுந்திருமுகத்தினணிமுறுவனிலவெறிப்ப = திருவருளைச்சொரியுந் திருமுகத்திலே அழகியபுன்முறுவல் சந்திரிகையைப்பரப்ப; மருள்பொழியும்மலஞ்சிதைக்கும்வடிச்சூலம்வெயிலெறிப்ப = விபரீதத்தைவிளைக்கும் மும்

மலங்களை முற்றஅழிக்கும் வடித்தசூலம் காந்தியைவீச; பொருள்பொழியும்பெரு கன்புதழைத்தோங்கிப்புவியேத்த = (கண்டமாத்திரத்தே) உண்மையாகவிளையும் மிக்கஅன்பு விருத்தியாகி உலகிலுள்ளோர்துதிக்க; தெருள்பொழிவண்டமிழ்நாட்டுச் செங்காட்டங்குடிசேர்ந்தார்=யாவர்க்கும் தெளிவைநல்கும் செந்தமிழ்நாட்டிலுள்ள திருச்செங்காட்டங்குடியைச் சேர்ந்தார்.—எ-று.

விபரீதமாவது-பொருளல்லவற்றைப் பொருளெனத்துணிதல். மும்மலங்களைச்சிதைத்தற்கே முத்தலைபடைத்ததென்பார் "மும்மலஞ்சிதைக்கும்வடிச்சூலம்" என்றும், ஓதற்கெளிதாகியும் உணர்தற்கரிதாகியும்விளங்கி வேதாகமப் பொருள்களைத் தெள்ளிதிற்புலப்படுத்துவதென்பார், "தெருள்பொழிவண்டமிழ்" என்றும் கூறினார். பொருள்- உண்மை. (௯௫)

தண்டாதவொருவேட்கைப்பசியுடையார்தமைப்போலக்
கண்டாரைச்சிறுத்தொண்டர்மனைவினவிக்கடிதணைந்து
தொண்டானார்க்கென்னாளுஞ்சோறளிக்குந்திருத்தொண்டர்
வண்டார்பூந்தாரார்இம்மனைக்குள்ளாரோவென்ன.

(இ-ள்.) தண்டாதவொருவேட்கை = நீக்கமில்லாதவொரு நிகரற்றவிருப்ப மிக்க; பசியுடையார்தமைப்போல=பசியைக்கொண்டவர்போல; கண்டாரைச்சிறுத் தொண்டர் மனைவினவி = எதிர்ப்பட்டவர்களையெல்லாம் சிறுத்தொண்டரது திருமனை யாண்டுளதென வினவிக்கொண்டு; கடிதணைந்து = விரைந்துபோந்து; தொண்டானார்க் கென்னாளுஞ் சோறளிக்குந் திருத்தொண்டர் = அடியவர்களுக்கு எப்பொழுதும் அமுதளிக்கும் திருத்தொண்டராகிய; வண்டார்பூந்தாரார் = வண்டுகள்மொய்க்கும் மலர்மாலையணிந்தநாயனார்; இம்மனைக்குள்ளாரோவென்ன=இந்த க்கிருகத்திலே இருக்கின்றாரோவென்றுகேட்க.—எ-று.

தண்டாமை நீங்காமை. ஒரு அசையுமாம். மனைக்கு வேற்றுமைமயக்கம். தொண்டர் இம்மனைக்குரியவரோவெனினும் அமையும். (௯௬)

வந்தணைந்துவினவுவார்மாதவரேயாமென்று
சந்தனமாங்கையலார்முன்வந்துதாள்வணங்கி
யந்தமில்சீரடியாரைத்தேடியவர்புறத்தணைந்தா
ரெந்தமையாளுடையவரேயகத்துளெழுந்தருளுமென.

(இ-ள்.) வந்தணைந்துவினவுவார்மாதவரேயென்று = ஈண்டடைந்துகேட்ப வர் பெரியவரேயென்று; சந்தனத்தையலார்முன்வந்துதாள்வணங்கி=சந்தனநங்கை யார் எதிர்வந்து திருவடிகளிற்றாழ்ந்து, எந்தமையாளுடையவரே=எங்களையடிமை யாகக்கொண்டவிறைவரே; அந்தமில்சீரடியாரைத்தேடியவர்புறத்தடைந்தார்=அள வுபடாதகீர்த்தியையுடைய அடியவர்களைத்தேடிக்கொண்டு அவர் வெளியேசென் றார்; அகத்துளெழுந்தருளுமென = வீட்டினுள்ளே தேவரீர் எழுந்தருளுமென்று வேண்ட.—எ-று.

ஏ-தேற்றம். ஆம் இரண்டும் அசைகள். (௯௭)

மடவரலைமுகநோக்கிமாதரார்தாமிருந்த
விடவகையிற்றனிப்புகுதோமென்றருளவதுகேட்டு

விடவகல்வார்போலிருந்தாரெனவெருவிவிரைந்துமனைக்
கடனுடையதிருவெண்காட்டம்மைகடைத்தலையெய்தி.

(இ-ள்.) மடவரலைமுகநோக்கி = இளம்பருவத்தளாகிய சந்தனநங்கையை முகம்பார்த்து; மாதராரிருந்தவிடவகையிற்றனிப்புகுதோமென்றருள=மங்கையர்களிருக்கும் பலவகைப்பட்ட இடங்களில் தனியே வரமாட்டேமென்றுரைத்தருள; மனைக்கடனுடையதிருவெண்காட்டம்மை=இல்லத்திற்குரியசெயலைஇயற்றிக்கொண்டிருந்த திருவெண்காட்டம்மையார்; அதுகேட்டு = அவ்வார்த்தையை (உள்ளிருந்து) கேட்டு; விடவகல்வார்போலிருந்தாரெனவெருவி= அகன்று செல்வார்போலிருக்கின்றாரென்று அச்சமுற்று; விரைந்துகடைத்தலையெய்தி=அதிவிரைவாகக் கடைவாயிலையடைந்து.—எ-று.

மடவரல் - இளம்பருவப்பெண். தாம்-அசை. விட்டென்பது விடவெனத் திரிந்தது. இருந்தாரென்பது காலமயக்கம். விரைவுபற்றி இறந்தகாலத்தாற்கூறினாரெனினும் பொருந்தும். (௬௪)

அம்பலவரடியாரையமுதுசெய்விப்பாரிற்றைக்
கெம்பெருமான்யாவரையுங்கண்டிலர்தேடிப்போனார்
வம்பெனநீரெழுந்தருளிவருந்திருவேடங்கண்டாற்
றம்பெரியபேறென்றேமிகமகிழ்வரினித்தாழார்.

(இ-ள்.) எம்பெருமான் = எங்கட்குத்தலைவரே; அம்பலவரடியாரையமுதுசெய்விப்பார் = அம்பலத்தின்கண்ணேநடிக்கும் பெருமானது அடியவரை (நியமமாக) அமுதுசெய்விப்பார்; இற்றைக்கியாவரையுங்கண்டிலர்தேடிப்போனார் = இன்றைக்கு எவரையும் பார்த்திலராய்த் தேடிச்சென்றார்; வம்பெனநீரெழுந்தருளிவருந்திருவேடங்கண்டால் = புதிதாக எழுந்தருளிவரும் தேவரீருடைய திருவேடத்தை நோக்கினால்; தம்பெரியபேறென்றுமிகமகிழ்வர் = தம்முடைய மிக்கதவப்பேறென்று சாலவுவப்பர்; இனித்தாழார் = இனித்தாமதியார்.—எ-று.

எளியரையும் என்பார் "யாவரையும்" என்றும், அத்தகையர் கிடைப்பினும் அமையுமெனத்தேடிச்சென்றவர் இதுகாறுங்காணப்பெறாத உமது அற்புதத்திருவேடத்தைக்காணின் தமதுதவப்பயனெனச் சாலமகிழ்வரென்பார் "திருவேடங்கண்டாற்றம்பெரியபேறென்றே மிகமகிழ்வர்" என்றும், தேவரீர்வந்தமை பிறரால் முன்னரே அறிந்திருப்பரென்பார் "இனித்தாழார்" என்றும் கூறினாரென்க. வம்பு-புதுமை. நீர் என்பது நும்மெனத்திரியாதுநின்றது. ஏகாரம்-தேற்றம். தாழாமை - தாமதியாமை. (௬௫)

இப்பொழுதேவந்தணைவரெழுந்தருளியிருமென்ன
வொப்பின்மனையறம்புரப்பீருத்தராபதியுள்ளோஞ்
செப்பருஞ்சீர்ச்சிறுத்தொண்டர்தமைக்காணச்சேர்ந்தனம்யா
மெப்பரிசுமவரொழியவிங்கிரோமென்றருளி.

(இ-ள்.) இப்பொழுதேவந்தணைவரெழுந்தருளியிருமென்ன = இக்கணமே வந்துவிடுவர் எழுந்தருளியிருமென்று வேண்ட; ஒப்பின்மனையறம் புரப்பீர்=இணையற்ற இல்லறத்தை நடாத்தும் நங்கையே; யாம் உத்தராபதியுள்ளோம்=யாம் வடதேயத்திலுள்ளோம்; செப்பருஞ்சீர்ச் சிறுத்தொண்டர்தமைக் காணச்சேர்ந்தனம்=

துவலுதற்கரிய சீர்த்தியையுடைய சிறுத்தொண்டனை நோக்குதற்கே வந்தனம்; இங் கவரொழிய வெப்பரிசுமிரோமென்றருளி = இங்கே அவரில்லாதிருக்க (யாம்) உமது எவ்வகைப் பிரயத்தனத்தானும் இருக்கமாட்டேம் என்றருளிச்செய்து.—எ-று.

ஏகாரம் - தேற்றம். உத்தராபதி - வடக்கின்கண்ணுள்ளது. உத்தராபதம் - வடக்கு. காணவே என்னும் தேற்றேகாரம் விகாரத்தாற்றொக்கது. பரிசென்புழி மூன்றனுருபுவிரிக்க. உம்மை - உயர்வு சிறப்பு. (௬௦)

கணனுதல்விறகாட்டாதார்கணபதீச்சரத்தின்கண்
வண்ணமலராத்தியின்கீழிருக்கின்றேமற்றவர்தா
நண்ணினுமிருந்தபரிசுரைப்பீரொன்றருளி
யண்ணலார்திருவாத்தியணைந்தருளியமர்ந்திருந்தார்.

(இ-ள்.) கண்ணுதலிற்காட்டாதார் = நேத்திரத்தை நெற்றியிலே தோற்ற மல் மறைத்துவந்தநிமலர்; கணபதீச்சரத்தின்கண் = (யாம்) கணபதீச்சரமென்னும் ஆலயத்திலே; வண்ணமலராத்தியின்கீழிருக்கின்றேம் = செவ்விய மலர்களையு டைய திருவாத்திமரத்தின்கீழே வசிக்கின்றேம்; அவர் நண்ணினு முமிருந்தபரிசு ரைப்பீரொன்றருளி = அச்சிறுத்தொண்டர் வந்தால் நாமிருக்கின்றமையை அறிவிப்பீ ரென்று அருளிச்செய்து; அண்ணலார் திருவாத்தியணைந்தருளியமர்ந்திருந்தார் = அப் பெருமான் திருவாத்தியையடைந்தருளி வீற்றிருந்தார்.—எ-று.

மற்று - தாம் - அசைகள். இருக்கின்ற பரிசென்பதனை விரைவுபற்றி இற ந்தகாலத்தாற் கூறினார். (௬௧)

வேறு.

நீரார்சடையானடியாரைநேடியெங்குங்காணது
சீரார்தவத்துச்சிறுத்தொண்டர்மீண்டுஞ்செல்வமனையெய்தி
யாராவின்பமனைவியார்க்கியம்பியழிவெய்திடவவரும்
பாராதரிக்குந்திருவேடத்தொருவர்வந்தபடிபகர்ந்தார்.

(இ-ள்.) சீரார்தவத்துச் சிறுத்தொண்டர் = சிறப்புமிக்க தவத்தையுடைய சிறுத்தொண்டநாயனார்; நீரார்சடையானடியாரை = கங்கைதங்கிய சடையையு டைய கடவுளின் திருத்தொண்டரை; எங்குநேடிக்காணது = எங்குந்தேடிக்கா ணமையால்; மீண்டுஞ் செல்வமனையெய்தி = மீட்டும் செல்வநிரம்பிய தமது வீட் டையடைந்து; ஆராவின்பமனைவியார்க்கியம்பியழிவெய்திட = அளவுபடாத மகிழ் ச்சியிலே மூழ்கியுள்ள தேவியார்க்கு அறிவித்துவருந்த; அவரும் = அத்தேவியா ரும்; பாராதரிக்குந் திருவேடத்தொருவர் வந்தபடி பகர்ந்தார் = உலகத்தவரெல் லாம் விரும்பும் திருவேடப்பொலிவையுடைய அடியவரொருவர்வந்த தன்மையை அறைந்தார்.—எ-று.

ஆராவின்பமாவது - அமலனைத்தரிசிக்கப்பெற்றதால் அடைந்த பேருவகை. அழிவெய்தல் - மிக்க துயருறல். பார் - ஆகுபெயர். (௬௨)

அடியேனுய்ந்தேனெங்குற்றருரையாயென்னவவர்மொழிவார்
வடிசேர்சூலகபாலத்தர்வடதேசத்தோமென்றார்வண்
டடிசேர்காரத்துப்பயிரவர்யாஞ்சொல்லவிங்குமிராதேபோய்க்
கடிசேர்திருவாத்தியினிழற்கீழிருந்தார்கணபதீச்சரத்து.

(இ-ள்.) அடியேனுய்ந்தேன் = அடியேன் உய்ந்தவனுயினேன்; எங்குற்ரு ருரையாரென்ன வவர்மொழிவார்=அவர் எங்கேவதிந்தனர் அறைவாயென்றுகேட்க மனேவியார்கூறுவர்; வடிசேர் சூல கபாலத்தர் = கூர்மைபெற்ற சூலத்தோடு கபால த்தையுமுடையவராய்; வண்டுடிசேர்கரத்துப்பயிரவர் = வளமையமைந்த உடுக்கை சேர்ந்த கரத்தையுமுடைய வயிரவசங்கமர்; வடதேசத்தோமென்ருர்=வடதேசத்தி லுள்ளேமென்றுகூறினர்; யாம் சொல்லவும் இங்கு இராதுபோய் = யாம் வருந்தி வேண்டவும் இங்கேயிராமற்சென்று; கணபதீச்சரத்துக் கடிசேர்திருவாத்தியினிழ ற்கீழிருந்தார் = கணபதீச்சரத்திலே வாசனைமிக்க திருவாத்தியினிழலின்கீழ் வதிந் தார்.—எ-று.

உயிர் உடலொடுவாழினும் விரதம் முட்டியவழி வாழ்க்கைப்பயனெய்தாமை யின் இறந்ததோடொக்கும்; இப்பொழுது விரதமுட்டாமையின் அத்தகைமையைவாய் ந்திலனென்பார், "உய்ந்தேன்" என்ருரென்க. சொல்லவிங்குமென்பது சொல்லவும் இங்கு என உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. ஏ - அசை. (௬௩)

என்றுமனேவியாரியம்பவெழுந்தவிருப்பால்விரைந்தெய்திச்
சென்றுகண்டுதிருப்பாதம்பணிந்துநின்ருர்சிறுத்தொண்டர்
நின்றதொண்டர்தமைநோக்கிநீரோபெரியசிறுத்தொண்ட
ரென்றுதிருவாய்மலர்ந்தருளவிறைவர்தம்மைத்தொழுதுரைப்பார்.

(இ-ள்.) என்று மனேவியாரியம்பச் சிறுத்தொண்டர் = என்று மனேவியார் இசைக்க (அதுகேட்ட) சிறுத்தொண்டநாயனுர்; எழுந்தவிருப்பால் விரைந்தெய்திச் சென்று கண்டு=அதிகரித்த காதலால் விரைவாய்ப்போந்து அணுகித் தரிசித்து; திரு ப்பாதம்பணிந்து நின்ருர் = திருவடிகளிற் சேவித்துநின்ருர்; நின்றதொண்டர்தமை நோக்கி=அங்ஙனம்நின்ற தொண்டரைப்பார்த்து; நீரோ பெரிய சிறுத்தொண்டரெ ன்று திருவாய்மலர்ந்தருள = நீர்தானே சிறந்த சிறுத்தொண்டரென்று திருவாய்மலர ந்துகேட்டருள; இறைவர்தம்மைத்தொழுதுரைப்பார் = அப்பெருமானை வணங்கி அறைவார்.—எ-று. (௬௪)

பூதியணிசாதனத்தவர்முன்போற்றப்போதேனுயிடினு
நாதனடியார்கருணையினுலருளிச்செய்வர்நானென்று
கோதிலன்பர்தமையமுதுசெய்விப்பதற்குக்குலப்பதியிற்
காதலாலேதேடியுமுன்காணேனவத்தானுமைக்கண்டேன்.

(இ-ள்.) பூதியணிசாதனத்தவர்முன் = அணியப்படும் விபூதியையே முத்தி சாதனமாகக்கொண்டுள்ள அடியவர்கள்முன்பு; போற்றப்போதேனுயிடினும்=வண ங்குதற்கும் தகுதியற்றவனுயிருப்பினும்; நாதனடியார் கருணையினுல்=சிவனடியார் கள் என்பால் வைத்த திருவருளால்; நானென்று அருளிச்செய்வர்=சிறுத்தொண் டனென்பவன் யானேயென்றுகூறுவர்; கோதிலன்பர் தமை யமுதுசெய்விப்பதற் கு=சிறந்த அடியவரைத் திருவமுதுசெய்வித்தற்கு; குலப்பதியிற் காதலாலே தேடி யும் = மேன்மைபெற்ற இந்நகரமுற்றும் விருப்பத்தோடுதேடியும்; முன்காணேன்= முன்னே காணப்பெற்றிலேன்; தவத்தானுமைக்கண்டேன் =முற்றிய தவப்பயனுல் தேவரீரைத் தரிசிக்கப்பெற்றேன்.—எ-று.

சாதனங்களுள்ளே நீறுமுந்தியதாகலின் "பூதியணி சாதனத்தவர்" என்ருர். சாதனம் என்பது உருத்திராக்கமெனவுங் கூறுவர். போதல் - தகுதியாதல். கோதின்

மை - சிறப்புடைமை. குலம் - சாதிகளுமாம். தவமுடையார்க்கன்றி ஏனையோர்க்கு நுமது தரிசனம் அரிதென்பார் "தவத்தானுமைக்கண்டேன்" என்றுரொன்க. (சரு)

அடியேன்மனையிலெழுந்தருளியமுதுசெய்யவேண்டுமென
நெடியோனறியாவடியார்தாநிகழுந்தவத்திருமைக்காணும்
படியால்வந்தோமுத்தராபதியோமெம்மைப்பரிந்தூட்ட
முடியாதுமக்குச்செய்கையரிதொண்ணாதென்றுமொழிந்தருள.

(இ-ள்.) அடியேன்மனையி லெழுந்தருளி யமுதுசெய்யவேண்டுமென = சிறியேனது கிருகத்திலே எழுந்தருளித் திருவமுதுசெய்யவேண்டுமெனப் பிரார்த்திக்க; நெடியோனறியாவடியார் = அச்சுதமூர்த்தியாலும் அறியப்படாத அமலர் (நாயனாரைநோக்கி); நிகழுந்தவத்தீ ருமைக்காணும்படி வந்தோம் = விளங்குகின்ற தவத்தையுடைய தொண்டரோ! உம்மைக் காணவே வந்தோம்; உத்தராபதியோம்=உத்தரதேசத்திலுள்ளோம்; எம்மைப்பரிந்தூட்ட வுமக்கு முடியாது = எம்மை விரும்பி யுண்பிக்க உமக்கு இயலாது; செய்கையரிதொண்ணாதென்று மொழிந்தருள=அச்செயல் அரிது: அன்றியும் அப்பொருளுங் கிட்டாது என்று கூறியருள.—எ-று.

தாம் - ஆல் - அசைகள். காணும்படியெனச் செயவென் வாய்பாடுபெற்றிப் படியென்னும்விகுதி வந்தது. காணவே என்னும் தேற்றேகாரம் விகாரத்தாற்றொக்கது. ஒண்ணாமை - ஈண்டுக் கிடையாமையின்மேற்று. (சசு)

எண்ணாதடியேன்மொழிந்தேனீரமுதுசெய்யுமியல்பதனைக்
கண்ணார்வேடநிறைதவத்தீரருளிச்செய்யுங்கடிதமைக்கத்
தண்ணார்தழிமுடியார்தமடியார்தலைப்பட்டாற்றேட
வொண்ணாதனவுமுளவாகுமருமையில்லையெனவுரைத்தார்.

(இ-ள்.) கண்ணார்வேட நிறைதவத்தீர் = நேத்திரங்களையெல்லாம் தம்வயமாக்கும் திருவேடப்பொலிவோடு நிறைந்த தவத்தையுமுடையவரே; எண்ணாதடியேன் மொழிந்தேன் = (திருவமுதுசெய்தற்கு) ஆலோசியாது அடியேன் கூறேன்; கடிதமைக்க நீரமுதுசெய்யுமியல்பதனை யருளிச்செய்யும் = சீக்கிரமே அமைத்தற்குத் தேவரீர் திருவமுதுசெய்யுந் திறத்தைக் கட்டளையிடுவீர்; தண்ணார்தழிமுடியார்தம் = குளிர்மைநிரம்பிய கொன்றைமாலையையணிந்த திருமுடியையுடைய இறைவரது; அடியார்தலைப்பட்டால் = அடியவர் எழுந்தருளிவரின்; தேடவொண்ணாதனவுமுளவாகும்=தேடமுடியாதனவும் தன்வயத்திற்செறிந்தனவாகும்; அருமையில்லையெனவுரைத்தார் = (எதும்) அருமையில்லையென்றிசைத்தார்—எ-று. (சஎ)

அரியதில்லையெனக்கேட்டபொழுதினழகுபொழிகின்ற
பெரியவயிரவக்கோலப்பெருமானருளிச்செய்வாரியாம்
பரியுந்தொண்டர்மூவிருதுகழிந்தாற்பசுவீழ்த்திடவுண்ப
தரியநாளுமதற்கின்றுநூட்டவரிதாமுமக்கென்றார்.

(இ-ள்.) அரியதில்லையெனக்கேட்டபொழுதின் = அரியதியாதுமில்லையென அறையக்கேட்டபொழுது; அழகுபொழிகின்றபெரியவயிரவக்கோலப்பெருமானருளிச்செய்வார் = அழகைச்சொரியும் சிறந்தவயிரவக்கோலத்தையுடைய அமலர் அருளிச்செய்கின்றார்; பரியுந்தொண்டர் = விரும்புந்தொண்டையுடையவரோ; மூவிருதுகழிந்தால் = மூன்று இருதுக்களாகிய ஆறுமாதஞ்சென்றால்; பசுவீழ்த்திடயாமுண்

பது = பசுவையழித்துப் (பாகமாக்கிப்) படைக்க யாம் அருந்துவது; அதற்குரிய நாளுமின்று = அவ்வாறுண்ணுதற்குரிய தினமும் இத்தினமே; ஊட்டவுமக்கரிதா மென்றார் = உண்பிக்க உமக்குமுடியாது என்றுகட்டளையிட்டார்.—எ-று.

இருது இருமாதங்கொண்டகாலம். ஆறுமாதத்துக்கொருமுறை அருந்துவது நியமம் என்றபடி. ஆல்-அசை. (௩௮)

சாலநன்றுமுந்நிரையுமுடையேன்றாழ்விங்கெனக்கில்லை
யாலமுண்டாரன்பருமக்கமுதாம்பசுத்தானின்னதென
வேலவருளிச்செயப்பெற்றால்யான்போயமுதுகடிதமைத்துக்
காலந்தப்பாமேவருவேனென்றுமொழிந்துகைதொழுதார்.

(இ-ள்.) ஆலமுண்டாரன்பர்சாலநன்று = ஆலத்தை நுகர்ந்தபெருமானது அன்பரோ மிகநன்று; முந்நிரையுமுடையேன் = ஆன் எருமை ஆடென்னும் மூவகைப் பசுக்களையுமுடையேன்; தாழ்விங்கெனக்கில்லை = இங்கே எனக்கு ஒருகுறைவுமில்லை; உமக்கமுதாம்பசுவின்னதென வேலவருளிச்செயப்பெற்றால் = உமக்கு அமுதாகும்பசு இன்னதென்று இசைய அருளிச்செய்யப்பெறின்; யான்போயமுதுகடிதமைத்து = யான்சென்று விரைவிற் றிருவமுதமைத்து; காலந்தப்பாமேவருவேனென்றுமொழிந்துகைதொழுதார் = போசனகாலந்தவறாமல் வருவேனென்றுபுகன்று அஞ்சலிசெய்தார்.—எ-று.

எருமையும் ஆடும் பசுவிற்கு இனமாகும் ஒற்றுமைநோக்கி உடன்படுத்து முந்நிரையென்றாரென்க. இதனை நக்கீரதேவநாயனாரருளிய நெடுநல்வாடையில் "ஏறுடை இனம் நிரை வேறுபுலம் பரப்பி" என்பதற்கு நச்சினார்க்கினியரெழுதிய உரையானும் உணர்க. தான்-அசை. (௩௯)

பண்புமிக்கசிறுத்தொண்டர்பரிவுகண்டுபயிரவரு
நண்புமிக்கீர்நாமுண்ணப்படுக்கும்பசுவுநரப்பசுவா
மூண்பதஞ்சுபிராயத்துளூறுப்பின்மறுவின்றேலின்னம்
புண்செய்நோவில்வேலெறிந்தாற்போலும்புகல்வதொன்றென்றார்.

(இ-ள்.) பயிரவரும்பண்புமிக்கசிறுத்தொண்டர்பரிவுகண்டு = வயிரவரும் நற்குணத்தின்மேம்பட்ட நாயனாரது அன்பைக்குறித்து; நண்புமிக்கீர் = உரிமைமிக்கவரே; நாமுண்ணப்படுக்கும்பசுவு நரப்பசுவாம் = நாம் அருந்தும்படிசேதிக்கும் பசுவும் நரப்பசுவேயாகும்; அஞ்சுபிராயத்துளூறுப்பின்மறுவின்றேலுண்பது = (அதுவும்) அஞ்சுவயதுக்கு உட்பட்டதாய் அவயவங்களிலே குறைபாடில்லையாயின் (யாம்) அருந்துவது; இன்னம்புண்செய்நோவில்வேலெறிந்தாற்போலும்மொன்றுபுகல்வதென்றார் = இஃதன்றியும் நோயைவிளைக்கும்புண்ணிலே வேலைச்செருகினாற்போலும் ஒருவிடயம் (இதுபற்றிப்) புகலுவதுளது என்றார்.—எ-று.

ஒன்று - எண்ணுகுபெயர். (௪௦)

யாதுமரியதில்லையினியீண்டவருளிச்செய்யுமென
நாதன்றானுமொருகுடிக்குநல்லசிறுவனொருமகனைத்
தாதையரியத்தாய்பிடிக்கும்பொழுதிற்றம்மின்மனமுவந்தே
யேதமின்றியமைத்தகறியாமிட்டுண்பதெனமொழிந்தார்.

(இ-ள்.) யாதுமரியதில்லை = (அமுதமைத்தலில்) அரியசெயல் ஒன்றுமில்லை (ஆகையால்); இனியீண்டவருளிச்செய்யுமென = இனி விரைய அருளிச்செய்யவேண்டுமெனப் பிரார்த்திக்க; நாதனும் = பெருமானும்; ஒருகுடிக்குநல்லசிறுவனொருமகனை = ஒருகுடிக்கு ஒருபுத்திரனுயுள்ள சிறந்தசிறுவனை; தாதையரியத்தாய்பிடிக்கும்பொழுதில் = தந்தையரியத்தாய்பிடிக்குங்கால்; தம்மினேதமின்றிமனமுவந்தமைத்தகறியே = தங்களுள்ளே வருத்தமில்லாது மனமகிழ்ச்சியுற்று(அரிந்து)சமைத்தகறியே; இட்டியாமுண்பதெனமொழிந்தார் = படைக்க யாம் உண்பதென இசைத்தருளினார்.—எ-று.

இத்தகைய அரியபுதல்வனை இங்ஙனம்அரிந்து சமைத்தகறியே யாமுண்பதென்பதைக் கேட்புழி எத்தகைய வன்மனத்தருக்கும் பெரிதும் இடர்விளையுமாகலின் "புண்செய்நோவில்வேலெறிந்தாற்போலும்" என மேற்செய்யுளில் விதந்துகூறினாரென்க. ஈண்டல் - விரைதல். தான் - அசை. நல்லசிறுவனொருமகனையென்பது ஒருமகன் நல்லசிறுவனையென மாற்றப்பட்டது. உவந்தே யென்னும் பிரிநிலையேகாரம் கறியென்புழிக்கூட்டப்பட்டது. இட்டு - வினையெச்சத்திரிபு. (௫௧)

> அதுவுமுனைவர்மொழிந்தருளக்கேட்டதொண்டரடியேனுக்
> கிதுவுமரிதன்றெம்பெருமானமுதுசெய்யப்பெறிலென்று
> கதுமென்விரைவிலவரிசையப்பெற்றுக்களிப்பார்காதலொடு
> மதுமென்கமலமலர்ப்பாதம்பணிந்துமனையில்வந்தணைந்தார்.

(இ-ள்.) அதுவுமுனைவர்மொழிந்தருளக்கேட்டதொண்டர் = அதனையும் முதல்வனாருளிச்செய்யக்கேட்டசிறுத்தொண்டநாயனார்; எம்பெருமானமுதுசெய்யப்பெறில்=எமதுதலைவராகியதேவரீர் திருவமுதுசெய்யப்பெற்றால்; அடியேனுக்கிதுவுமரிதன்றென்றவரிசையப்பெற்று = அடியேனுக்கு இச்செயலும் அரியசெயலல்லவென்றுவிண்ணப்பித்து அவருடன்பாடுபெற்று; களிப்பார்காதலொடும்= அகமலர்ச்சியோடு முகமலர்ச்சியுமுடையராய்; மதுமென்கமலமலர்ப்பாதம்பணிந்து=தேன்குடிகொள்ளும் மெல்லிய செந்தாமரைமலர்போலும் திருவடிகளைப்பணிந்து; கதுமென்விரைவில்மனையில்வந்தணைந்தார் = அதிகவிரைவாகவந்து திருமாளிகையை அடைந்தார்.—எ-று.

மொழியத்தக்கதன்றென்பார், "அதுவுமொழிந்தருள" என்றும், எவரும் இசைதற்கரிய இச்செய்கைக்கும் அன்புமேலீட்டால உடன்பட்டனரென்பார் "இதுவுமரிதென்றார்" என்றும், உள்ளும்புறம்பும் ஒற்றுமைப்பட்டு உவகையொடும் ஏற்றனரென்பார் "அவரிசையக்களிப்பார்காதலொடும்பணிந்து" என்றும், இதற்கு என்செய்வேமென ஏங்கினாரில்லையென்பார் "கதுமென்விரைவில்வந்தணைந்தார்" என்றும் கூறினார். இறந்ததுதழீஇநின்றஉம்மை இரண்டனுள் முந்தியது இழிவுசிறப்பும் பிந்தியது உயர்வுசிறப்புமாம். கதுமென்விரைவு ஒருபொருட்பன்மொழி. (௫௨)

> அன்புமிக்கபெருங்கற்பினணங்குதிருவெண்காட்டம்மை
> முன்புவந்துசிறுத்தொண்டர்வரவுநோக்கிமுன்னின்றே
> யின்பம்பெருகமலர்ந்தமுகங்கண்டுபாதமிசையிறைஞ்சிப்
> பின்புகணவர்முகநோக்கிப்பெருகுந்தவத்தோர்செயல்வினவ.

(இ-ள்.) அன்பிற்பெருங்கற்பின்மிக்க=அன்பினும் அரியகற்பினும் மேம்பட்ட, அணங்குதிருவெண்காட்டம்மை = தெய்வீகம்பெற்ற திருவெண்காட்டம்மையார்;

முன்புவந்துசிறுத்தொண்டர்வரவுநோக்கிமுன்னின்று = எதிர்கொண்டுவந்து நாய னார்வருகையைப்பார்த்து எதிர்நின்று; இன்பம்பெருகமலர்ந்தமுகங்கண்டு=சந்தோ ஷமிக மலர்ச்சியுள்ளமுகத்தைப் பொதுவகையால் நோக்கி; பாதமிசையிறைஞ்சி = திருவடிகளில்வணங்கி; பின்புகணவர்முகநோக்கி = பின்னர்க் கணவர்முகத்தைச்சிற ப்புவகையால்நோக்கி; பெருகுந்தவத்தோர்செயல்வினவ = மிக்கதவத்தையுடையவ ரது நிலைமையை வினவ.—எ-று.

இன்னுருபு அன்பென்புழியும் கூட்டப்பட்டது. ஏ-அசை. பொதுநோக்கம் பெரிதும் சுட்டுதலின்மைநோக்கமும், சிறப்புநோக்கம் சுட்டுதலுடைமைநோக்கமும் ஆம். அகத்துள்ளது குறிப்புவகையான் முகத்தே காணப்படுமாகலான் எதிர்நின்று முகநோக்கினாரென்க. * "அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங் - கடுத்தது காட்டு முகம்." என்றார் தெய்வப்புலவரும். (௫௩)

வள்ளலாருமனையாரைநோக்கிவந்தமாதவர்தா
முள்ளமகிழவமுதுசெய்யவிசைந்தார்குடிக்கோர்சிறுவனாய்க்
கொள்ளும்பிராயமைந்துளனாயுறுப்பிற்குறைபாடின்றித்தாய்
பிள்ளைபிடிக்கவுவந்துபிதாவரிந்துசமைக்கப்பெறிலென்றார்.

(இ-ள்.) வள்ளலாருமனையாரைநோக்கி = நாயனாரும் மனைவியாரைப்பார் த்து; குடிக்கோர்சிறுவனாய் = ஒருகுடிக்கு ஒருபுதல்வனாயும்; பிராயமைந்துளனாய் = வயது ஐந்துடையனாயும்; உறுப்பிற்குறைபாடின்றிக்கொள்ளும்பிள்ளை = அங்கவீன முதலியவையின்றிக் கொண்டபிள்ளையை; தாய்பிடிக்கப்பிதாவுவந்தரிந்துசமைக்கப் பெறில் = தாய்பிடிக்கத் தந்தை மகிழ்ந்துஅரிந்து சமைக்கப்பெற்றால்; வந்தமாதவரு ள்ளமகிழவமுதுசெய்யவிசைந்தாரென்றார் = வந்த அடியவர் மனங்களிப்பத் திருவ முதுசெய்தற்கு இசைந்தாரென்று இயம்பினார்.—எ-று.

தாம்-அசை. செய்கையருமையைக்குறிப்பிப்பார்"சமைக்கப்பெறில்"என்றார்.

அரியகற்பின்மனைவியாரவரைநோக்கியுரைசெய்வார்
பெரியவயிரவத்தொண்டரமுதுசெய்யப்பெறுமதற்கிங்
குரியவகையாலமுதமைப்போமொருவனாகியொருகுடிக்கு
வருமச்சிறுவன்றனைப்பெறுமாறெங்ஙனெனன்றுவணங்குதலும்.

(இ-ள்.) அரியகற்பின்மனைவியாரவரைநோக்கியுரைசெய்வார் = அடைதற் கரிய கற்பினையுடைய மனைவியார் அந்நாயனாரைப்பார்த்துக் கூறுவார்; பெரியவயிர வத்தொண்டரமுதுசெய்யப்பெறுமதற்கு = சிறந்த வயிரவசங்கமர் திருவமுதுசெ ய்யப்பெறும் அதனுக்கு; இங்குரியவகையமுதமைப்போம் = இங்கே அவருக்கு உரிய கிரமப்படித் திருவமுதுசெய்விப்போம்; ஒருகுடிக்கொருவனாகிவருமச்சிறுவன்றனை = ஒரு குடிக்கு ஒரு புத்திரனாகிப்பிறந்த ஒரு சிறுவனை; பெறுமாறெங்ஙனென்று வண ங்குதலும் = பெறும்வகை எப்படியென்று வினவியிறைஞ்சுதலும்.—எ-று.

கற்பெனப்படுவது கணவர்சொற்றிறம்பாமையே யாகலின் அதுவாய்த்தலரிதெ ன்பார். "அரியகற்பு"என்றார். ஆல் அசை. எங்ஙனமென்பது ஈறு குறைந்தது.(௫௫)

மனைவியார்தம்முகநோக்கிமற்றித்திறத்துமைந்தர்தமை
நினைவுநிரம்பநிதிகொடுத்தாற்றருவாருளரோநேர்நின்று

* திருக்குறள் - ௭௦௬.

தனையன்றன்னைத்தந்தைதாயரிவாரில்லைத்தாழாமே
யெனையிங்குய்யநீபயந்தான்றன்னையழைப்போமியாமென்றார்.

(இ-ள்.) மனைவியார்தம் முகநோக்கி = (நாயனார்) மனைவியார் முகத்தைப்பார்த்து; நினைவுநிரம்ப நிதிகொடுத்தால் = தம்முடைய எண்ணம் பூர்த்தியாகும்படி திரவியந்தந்தால்; இத்திறத்து மைந்தர்தமைத் தருவாருளர் = இத்தன்மைவாய்ந்த புதல்வனை ஈவோர் உளர்; நேர்நின்று தனையன்றன்னை யரிவார் தந்தைதாயில்லை = தாமே எதிர்நின்று தம்புதல்வனையரிவாராகிய பிதாமாதாக்களில்லை (ஆகையால்); எனையிங்குய்ய நீபயந்தான்றன்னை = என்னை இப்பூமியிலே உய்வித்தற்பொருட்டு நீபெற்ற புதல்வனை; யாந் தாழாமே யழைப்போமென்றார் = யாம் தாமதியாமல் அழைப்போமென்று கூறினார்.—எ-று,

நிரம்ப நிதிகொடுத்தால் இத்தகைய புதல்வனைத் தருவாருளர்; இச்செய்கை மாத்திரம் இயற்ற வுடன்படாராகலின் நமது புதல்வனை நாமே இங்ஙனஞ் செய்வோம் என்றுசொன்பதாம். மற்று, ஏ-அசைகள். உய்விக்கவென்னும் பிறவினை விவ்விகுதிதொக்கு உய்யவெனத் தன்வினையாய்நின்றது. "குடிமடிந்து குற்றம்பெருகும்" என்னுந் திருக்குறளிற்போல. (௬௬)

என்றுகணவர்கூறுதலுமதனுக்கிசைந்தெம்பிரான்றொண்ட
ரின்றுதாழாதமுதுசெய்யப்பெற்றிங்கவர்தமலர்ந்தமுக
நன்றுகாண்பதெனநயந்துநம்மைக்காக்கவருமணியைச்
சென்றுபள்ளியினிற்கொண்டுவாருமென்றார்திருவனையார்.

(இ-ள்.) என்று கணவர் கூறுதலும் = என்று நாயனார் இசைத்தலும்; திருவனையாரதனுக்கிசைந்து = இலக்குமிபோலும் மனைவியாரும் அதற்குடன்பட்டு; எம்பிரான்றொண்டர் தாழாதின்றிங் கமுதுசெய்யப்பெற்று = வயிரவசங்கமர் தாமதியாமல் இப்பொழுது இங்கே திருவமுதுகொண்டருளப்பெற்று; அவர்த மலர்ந்த முகங்காண்பது நன்றென நயந்து = அவரது மலர்ச்சியோடு கூடிய திருமுகத்தைக் காண்பதே தகுதியென விரும்பி; பள்ளியினிற்சென்று நம்மைக் காக்கவரு மணியைக் கொண்டுவாருமென்றார் = (தேவரீர்) வித்தியாசாலையிற்போய் எம்மைப்புரக்க வந்த இரத்தினம்போலும் புதல்வனை எடுத்துவாருமென்று விண்ணப்பித்தார்.-எ-று.

திருவனையார் காண்பது நன்றெனநயந்து கொண்டுவாருமென்றார் என இயையும். நன்றென்பது ஈண்டுத் தகுதியின்மேற்று. (௬௭)

காதன்மனையார்தாங்கூறக்கணவனாருங்காதலனை
யேதமகலப்பெற்றபேறெல்லாமெய்தினார்போல
நாதர்தமக்கங்கமுதாக்கநறுமென்குதலைமொழிப்புதல்வ
னோதவணைந்தபள்ளியினிலுடன்கொண்டெய்தக்கடிதகன்றார்.

(இ-ள்.) காதன்மனையார்கூறக் கணவனாரும் = அன்புமிக்க மனைவியார் இங்ஙனம் மொழிய அந்நாயனாரும்; காதலனைப்பெற்றபேறெல்லா மேதமகலவெய்தினார்போல = புதல்வனைப்பெற்றமையால் அடையும் பயனனைத்தும் துன்புநீங்க அன்றே அடைந்தார்போல (மகிழ்ந்து); நாதர்தமக்கு அமுதாக்க = சிவபிரானுக்குத் திருவமுதமைத்தற்கு; நறுமென்குதலைமொழிப்புதல்வன் = இனிய மெல்லிய குதலைச் சொற்களையுடைய புத்திரனை; ஓதவணைந்தபள்ளியினி லுடன்கொண்டெய்தக் கடித

கன்றூர் = ஓதுதற்குச்சென்ற பள்ளியினின்றும் உடனே கொண்டுவர விரைவிற் சென்றூர்.—எ-று. தாம் அங்கு ஆசைகள்.

புதல்வனை உடன்கொண்டெய்த அகன்றூரென இயையும். பெற்றமையாலடையும்பேற்றைப் பெற்றபேறென்றூர். புதல்வனென்புழி இரண்டனுருபுவிரிக்க.

பள்ளியினிற்சென்றெய்துதலும்பாதசதங்கைமணியொலிப்பப்
பிள்ளையோடிவந்தெதிரேதழுவவெடுத்துப்பியலின்மேற்
கொள்ளவணைத்துக்கொண்டுமீண்டில்லம்புகுதக்குலமாதர்
வள்ளலார்தமுன்சென்றுமைந்தன்றன்னையெதிர்வாங்கி.

(இ-ள்.) சென்று பள்ளியினிலெய்தலும் = போய் வித்தியாசாலையிற் புகுதலும்; பாதசதங்கைமணியொலிப்ப = கால்களிலணிந்த சதங்கைமணிகள் கலிக்கும்படி; பிள்ளையோடிவந் தெதிரே தழுவவெடுத்து = சீராளதேவர் ஓடிவந்து எதிரே அணைத்துக்கொள்ள நாயனுரெடுத்து; பியலின்மேற்கொள்ள வணைத்துக்கொண்டு= தோளின்மீதிருக்கும்படி இறுகப்பற்றிக்கொண்டு; மீண்டில்லம்புகுத = திரும்பி வந்து வீட்டினுட்செல்ல; குலமாதர்வள்ளலார்த முன்சென்று = திருவெண்காட்டு நங்கையார் கணவனுர்முன்பு அணுகி; மைந்தன் றன்னை யெதிர்வாங்கி=புதல்வனை எதிரேவாங்கி.—எ-று,

பியல் - தோண்மேல். (௬௯)

குஞ்சிதிருத்திமுகந்துடைத்துக்கொட்டையரைநாண்டுகணீக்கி
மஞ்சளழிந்தவதற்கிரங்கிமையுங்கண்ணின்மருங்கொதுக்கிப்
பஞ்சியஞ்சுமெல்லடியார்பரிந்துதிருமஞ்சனமாட்டி
யெஞ்சலில்லாக்கோலஞ்செய்தெடுத்துக்கணவர்கைக்கொடுத்தார்.

(இ-ள்.) பஞ்சியஞ்சுமெல்லடியார் பரிந்து=பஞ்சியிற் வைத்தற்கும் அஞ்சும் மெல்லிய திருவடிகளையுடைய திருவெண்காட்டம்மையார் பரிவுற்று; குஞ்சிதிருத்தி= கலைந்திருந்தகுடுமியைச் செவ்விதாக்கி, முகந்துடைத்து=வியர்த்துள்ள முகத்தைத் துடைத்து; கொட்டையரைநாண்டுகணீக்கி = பஞ்சியைநூற்று முறுக்கிய அரைநாணிலுள்ள மலினத்தைமாற்றி, மஞ்சளழிந்தவதற்கிரங்கி = (அணிந்தவண்ணமின்றி) கலவைச்சாந்து அழிந்ததற்கு வருந்தி; மையுங்கண்ணின்மருங்கொதுக்கி=கண்ணிறபடாவண்ணம் மையையும் அருகொதுக்கி; திருமஞ்சனமாட்டி = நீராட்டி; எஞ்சலில்லாக்கோலஞ்செய்து=குறைதலில்லாதபடி அலங்கரித்து; எடுத்துக்கணவர் கைக்கொடுத்தார் = தாங்கிக் கணவரகரங்களிலே தந்தார்.—எ-று.

குஞ்சிதிருத்தல்முதலியவை குழந்தைகளைத் தாய்மார்கண்டுழிப் பரிந்துசெய்யுஞ் செயல்களாகலின் இவரும் அங்ஙனஞ்செய்தாரென்க. (௭0)

அச்சமெய்திக்கறியமுதாமென்னுமதனலரும்புதல்வ
னுச்சிமோவாரமார்பின்கணணைத்தேதமுத்தந்தாமுண்ணூர்
பொச்சமில்லாத்திருத்தொண்டர்புனிதர்தமக்குக்கறியமைக்க
மெச்சுமனத்தாலடுக்கலையின்மேவார்வேறுகொண்டணைவார்.

(இ-ள்-) பொச்சமில்லாத் திருத்தொண்டர் = தவறற்ற திருத்தொண்டராகிய நாயனுர்; கறியமுதென்னு மதனு லச்சமெய்தி = வயிரவருக்குரிய கறியமுதெ

ன்னுஞ் சிந்தனையால் (உச்சிட்டமயங்குமென்று) பயந்து; அரும்புதல்வ னுச்சிமோ வார் = அரிய புதல்வரது உச்சியையும் மோக்கார்; மார்பின்கணணைத்துமுத்தமுண் ணார் = மார்பிலே தழுவிக்கொண்டு முத்தமுங்கொள்ளார்; புனிதர்தமக்குக் கறிய மைக்க மெச்சுமனத்தால்=வயிரவருக்குக் கறியமைக்கப்பூராட்டும் மனத்தால்=அடு க்களையின்மேவார் =(ஆண்டுஅசுத்தங்கலக்குமென) மடைப்பள்ளியை அடையா ராய்; வேறுகொண்டணைவார் = வேறிடத்திற்கொண்டுசெல்வார்.—எ-று.

ஆம்-ஏ - தாம் - அசைகள். (௬௧)

ஒன்றுமனத்தாரிருவர்களுமுலகறியாரொனமறைவிற்
சென்றடுக்குப்பிள்ளைதனைப்பெற்றதாயார்செழுங்கலங்க
ணன்றுகழுவிக்கொடுசெல்லநல்லமகனையெடுத்துலகை
வென்றதாதையார்தலையைப்பிடிக்கவிரைந்துமெய்த்தாயர்.

(இ-ள்.) ஒன்றுமனத்தாரிருவர்களும்=ஒருமையுற்ற சித்தத்தையுடைய இரு வரும்; உலகறியாரொன மறைவிற்சென்றடுக்கு = (இச்செய்கையை) உலகத்தவர் உணராரொன்று மறைவாகிய ஓரிடத்திற்சென்றடைந்து; பிள்ளைதனைப்பெற்ற தா யார் = அப்புதல்வனை ஈன்ற அன்னையார்; செழுங்கலங்க ணன்று கழுவிக்கொடு செல்ல = அரியபாத்திரங்களைச் சுத்தமாகக் கழுவிக் கையிற்கொண்டு அணுக; உல கைவென்ற தாதையார் = உலகியல்பைக்கடந்த பிதாவாகிய நாயனார்; நல்லமகனை யெடுத்துத்தலையைப்பிடிக்க=சிறந்தபுதல்வனை யெடுத்துச் சிரசைப்பிடிக்க; மெய்த் தாயர் விரைந்து = சத்திய நிலைமையையுடையதாயார் விரைவுற்று.—எ-று.

சிறிது ஒவ்வாவழியும் இது செயற்கரியதென்பார், "ஒன்றுமனத்தார்" என் றும், உலகறி பிரசித்தமாகும் இத்தொழிலை இயற்றச்செல்பவர் இதனைப் பிறரறியா ரொன மறைவிற்சேறல் அதிவியப்பென்பார், "உலகறியாரொன மறைவிற்சென்று" என்றும்; தொன்றுதொட்ட உலகியல்பைக்கடந்து இதுபுரியத்துணிந்தனரொன்பார், "உலகைவென்ற தாதையார்" என்றும், கணவர் கற்பித்தவழியே சத்தியநெறியெ னச் சார்தற்குரியரொன்பார் "மெய்த்தாயர்" என்றும் விதந்தனர். (௬௨)

இனியமழலைக்கிண்கிணிக்காலிரண்டுமடியின்புடையிடுக்கி ... க்க ...ர்.-எ-று.
கனிவாய்மைந்தன்கையிரண்டுங்கையாற்பிடிக்கக்காதல ... மன்றூர் என
னனிநீடுவகையுறுகின்றாரென்றுமகிழ்ந்துநகைசெ...
தனிமாமகனைத்தாதையார்கருவிகொண்டுதலை... (௬௩)

...கொதலனை

(இ-ள்.) கனிவாய்மைந்தன் = கொவ்வை... ...னார்போல
ல்வரது: இனியமழலைக்கிண்கிணிக்காலிரண்டும்=இ... ...லமொழிப்புதல்வ
சதங்கையணிந்த இருபதங்களையும்; மடியின்புடை... ...ண்டெய்தக்கடிதகன்றார்.
ண்டு; கையிரண்டுங்கையாற்பிடிக்க = இருகரங்க... ...ம் = அன்புமிக்க மனைவியார் இங்
லும்பிடிக்க; சாதலனுநனிநீடுவகையுறுகின்றாரென்...
ரும் நமதிடத்திலே ஒருவிளையாட்டாக மிக்கம...றுபேறெல்லா மேதமகலவெய்தினார்
துப் புன்முறுவல்புரிய; தனிமாமகனை = பெரு... பயனனைத்தும் துன்புநீங்க அன்
ண்டுதலையரிவார் = அரிவாள்கொண்டு சிரசைஅ...வமுதாக்க = சிவபிரானுக்குத் திரு

இனியமதலையென்பதும்பாடம்.

வன் = இனிய மெல்லிய குதலைச்
...னி லுடன்கொண்டெய்தக் கடித

பொருவில்பெருமைப்புத்திரன் மெய்த்தன்மையளித்தானெனப்பொ
லிருவுமகிழ்ச்சியெய்தவவர்மனைவியாருங்கணவனு [லிந்து
ரருமையுயிரையெனக்களித்தானென்றுமிகவுமகமலர
விருவர்மனமும்பேருவகையெய்தியரியவினைசெய்தார்.

(இ-ள்.) பொருவில்பெருமைப்புத்திரன்=ஒப்பில்லாத மேன்மையையுடைய புதல்வன்; மெய்த்தன்மையளித்தானெனப்பொலிந்து = உண்மைத்தன்மையை அளித்தானென்று முகமலர்ச்சியுற்று; மருவுமகிழ்ச்சியெய்த = நிலைபெற்ற அகமகிழ்ச்சியையும் அடைய; அவர்மனைவியாரும் = அவரதுதேவியாரும்; கணவனாரருமையுயிரை யெனக்களித்தானென்றுமிகவுமகமலர = கணவனாருடைய அரியஉயிரை எனக்குத்தந்தளித்தானென்று சாலவும் அகமலர்ச்சியடைய; இருவருமனம்பேருவகையெய்தி=இங்ஙனம் இருவரும் உள்ளம் பெருங்களிப்படைந்து; அரியவினைசெய்தார்=செயற்கரிய இத்தொழிலைச் செய்தார்.—எ-று.

கணவன் உயிர்வாழ்தலில் கற்புடைமகளிர்க்கு விருப்பமாதலின் இங்ஙனம் புதல்வனைப்புரியாவழி விரதம்முட்டுதலின் கணவனார்உயிர்வாழாரென்பதுநோக்கி, மைந்தரிறத்தலில் தாயார்மனந்துணிந்தாரேனும், தமக்குரிய மூவகைக்கடன்களுள் பிதிர்க்கடனை நிவர்த்தித்தற்குரிய புதல்வர் இறத்தலில் தந்தையார் உடன்பட்டமை எங்ஙனமெனின்,அன்பரை ஊட்டி யுபசரித்தல்முதலிய அறத்தின்வழுவாமையே பிதிரர்க்குப் பேருவகைவிளைப்பதும் பெரும்பயனைநல்குவதும் ஆதலன்றி, இங்ஙனம்புரிதல் இப்புதல்வரும் எளிதிலே நற்கதிசேர்தற்கு ஏதுவாகலின், இதிலுடன்பட்டு, "பொருவில்பெருமைப்புத்திரன் மெய்த்தன்மையளித்தானெனப்பொலிந்து செய்தார்" என்பது. இருவர் மனமுமென்புழி உம்மைபிரிந்துக்கூட்டி உரைக்கப்பட்டது. (௬௪)

அறுத்ததலையினிறைச்சிதிருவமுதுக்காகாதெனக்கழித்து
மறைத்துநீக்கச்சந்தனத்தார்கையிற்கொடுத்துமற்றையுறுப்
பிறைச்சியெல்லாங்கொத்தியறுத்தெலும்புமூளைதிறந்திட்டுக்
கறிக்குவேண்டும்பலகாயமரைத்துக்கூட்டிக்கடிதமைப்பார்.

தும (இ-ள்.) அறுத்ததலையினிறைச்சிதிருவமுதுக்காகாதெனக்கழித்து = சேஷிணிலுள்ளினிறைச்சி திருவமுதுக்காகாதென்று (திருவெண்காட்டுநங்கையார்)கழித்து; கலவைச்சாந்துச் சந்தனத்தார்கையிற்கொடுத்து=அதனை மறைத்தொழிக்கும்படி சந்தனத்தாரிடம் கொடுத்துவிட்டு; மற்றையுறுப்பிறைச்சியெல்லாம் = ஏனை அவயவங்களிலுள்ள இறைச்சியெல்லாவற்றையும்; கொத்தியறுத்தெலும்புமூளைதிறந்திட்டு = கொத்தி அறுத்து எலும்பைத் திறந்து அதனிடத்துள்ள மூளைகளை எடுத்துக்கூட்டியும்; கறிக்குவேண்டும்பலகாயமரைத்துக் கூட்டிக்கடிதமைப்பார் = கறிக்குவேண்டிய பல காயங்களை அரைத்துக் கூட்டிக் குஞ்சிதிருத்தல்முதலிய பலவுஞ் செயல்களாகலின் இவரும் அரைவிலே பாகஞ்செய்வார்.—எ-று. (௬௫)

அச்சமெய்திக்கறியமுதுவாரடுப்பிலேற்றிமனமகிழ்ந்தே
னுச்சிமோவார்மார்பின்ங்கிழிச்சிவேறோருங்கலத்துப்
பொச்சமில்லாத்திருத்தப்பலவுமற்றுங்கறிசமைத்துச்
மெச்சுமனத்தாலடுக்களமுஞ்சமைத்துக்கணவர்தமக்குரைத்தார்.

(இ-ள்.) பொச்சமில்லாத் மடவார்மனமகிழ்ந்து = நறுமணமிக்க கூந்தலையுடைய நாயனார்; கறியமுதென்னு மதயா ருளங்களித்து; அடுப்பிலேற்றியட்டகறியின்

பதமறிந்திழிச்சி = அடுப்பிலேற்றிச்சமைத்த கறிகளின்பதம்பார்த்திறக்கி; வேறோ ருருங்கலத்துப்பட்டநறையாற்றாளித்து = வேறொரு அரியபாத்திரத்திலே மிக்கவா சனையோடு தாளித்து; பலவுமற்றுங்கறிசமைத்து = வேறுபலகறிகளும் சமைத்து; சட்டவிரைந்துபோனகமுஞ்சமைத்துக்கணவர்தமக்குணர்த்தார் = அதிகவிரைவாக அன்னமும்பாகஞ்செய்து கணவருக்கறிவித்தார்.—எ-று.

ஏ-அங்கு-அசைகள். நறையாலென்புழி ஆலுருபு உடனிகழ்ச்சிப்பொருளது.

உடையநாதரமுதுசெயவுரைத்தபடியேயமைத்தவதற்
கடையுமின்பமுன்னையிலுமார்வம்பெருகிக்களிகூர
விடையில்வருவார்தொண்டர்தாம்விரைந்துசென்றுமென்மலரின்
புடைவண்டறையுமாத்தியின்கீழிருந்தபுனிதர்முன்சென்றார்.

(இ-ள்.) விடையில்வருவார்தொண்டர் = இடபவாகனத்திலெழுந்தருளும் இறைவரது திருத்தொண்டராகியநாயனார்; உடையநாதரமுதுசெய = தம்மையடிமையாகவுடைய தலைவர் திருவமுதுசெய்தற்கு; உரைத்தபடியேயமைத்தவதற்கு = பகர்ந்தபடியே பாகஞ்செய்ததற்கு; அடையுமின்பமுன்னையிலுமார்வம்பெருகிக்களிகூர = முன்னரடைந்துள்ள இன்பத்திலும் ஆசைமிக்கு உவகைமீதூர; விரைந்துசென்று = விரைந்துபோய்; மென்மலரின்புடைவண்டறையுமாத்தியின்கீழ் = மெல்லியமலர்களில் வண்டுகள் மிகஒலிக்கும் திருவாத்தியின்கீழ்; இருந்தபுனிதர்முன்சென்றார் = வீற்றிருந்தசிவபெருமான்முன்னே சென்றார்.—எ-று.

அடையுமின்பமுன்னையிலுமென்பது முன்னையடையுமின்பத்தினுமென உருபும் உம்மையும் பிரித்துக்கூட்டியுரைக்கப்பட்டது. தாம்-அசை. (௬எ)

அண்ணறிருமுன்பணிந்திறைஞ்சியன்பர்மொழிவாரடியேன்பா
னண்ணிநீரிங்கமுதுசெயவேண்டுமென்றுநான்பரிவு
பண்ணினேனுய்ப்பசித்தருளத்தாழ்த்ததெனினும்பணிசமைத்தே
னெண்ணம்வாய்ப்பவெழுந்தருளவேண்டுமென்றங்கெடுத்துரைப்பார்

(இ-ள்.) அன்பரண்ணறிருமுன்பணிந்திறைஞ்சிமொழிவார் = நாயனார் விமலர்சந்நிதிமுன்னர் அடைந்துவணங்கி விண்ணப்பிப்பார்; நீரடியேன்பானண்ணியமுதுசெயவேண்டுமென்று = தேவரீர் சிறியேனிடத்திற்கு எழுந்தருளித் திருவமுது செய்யவேண்டுமென்று; நான்பரிவுபண்ணினேனாய் = அடியேன்வேண்டினவனாய்; பசித்தருளத்தாழ்த்ததெனினும் = தேவரீர்பசித்திருக்கும்படி காலதாமதஞ்செய்தல் நிகழ்த்தினும்; பணிசமைத்தேன் = கட்டளையிட்டகாரியத்தைச்செய்தேன்; எண்ணம் வாய்ப்பவெழுந்தருளவேண்டுமென்றெடுத்துரைப்பார் = எளியேனுடைய சிந்தனை பூர்த்தியாகும்படி எழுந்தருளவேண்டுமென்று எடுத்துக்கூறுவார்.—எ-று.

அடியவர்க்கு அமுதுசெய்விக்கநேர்ந்து அவர்பசித்திருக்குமாறு காலதாமதமாக்கல் பெரிதும் அபசாரமென்பார், "பசித்தருளத்தாழ்த்ததெனினும்" என்றும், அங்ஙனந்தாழ்க்கினும் செய்கையரிதெனத் தேவரீர்கட்டளையிட்டதை ஒருவாறுபூர்த்திசெய்தேனென்பார், "பணிசமைத்தேன்" என்றும், இத்தாழ்ச்சிநோக்கி முனியற்கவென்பார், "எண்ணம்வாய்ப்பவெழுந்தருளவேண்டும்" என்றும்பிரார்த்தித்தாரென்க. இங்கு-அங்கு-அசைகள். (௬அ)

இறையுந்தாழாதெழுந்தருளியமுதுசெய்யுமென்றிறைஞ்சக்
கறையுங்கண்டத்தினின்மறைத்துக்கண்ணுநுதலிற்காட்டாதார்
நிறையும்பெருமைச்சிறுத்தொண்டர்போதுமென்னநிதியிரண்டுங்
குறைவனொருவன் பெற்றுவந்தாற்போலக்கொண்டுமனைபுகுந்தார்.

(இ-ள்.) இறையுந்தாழாதெழுந்தருளியமுதுசெய்யுமென்றிறைஞ்ச = சிறிதும் தாமதியாமல் எழுந்தருளித் திருவமுதுகொண்டருளுமென்றுபணிய; கறையுங்கண்டத்தினின்மறைத்து = திருக்கழுத்திலே நஞ்சத்தையும்ஒளித்து; கண்ணுநுதலிற்காட்டாதார் = தீக்கண்ணையும் நெற்றியிற்காட்டாத சிவபெருமான்; நிறையும்பெருமைச்சிறுத்தொண்டர் = நிரம்பிய மேன்மைபெற்ற சிறுத்தொண்டையுடையவரோ; போதுமென்ன = வருவோமென்றுபுகன்றருள; குறைவனொருவனிதியிரண்டும்பெற்றுவந்தாற்போல = தரித்திரனொருவன் சங்கநிதி பதுமநிதியென்னும் இருநிதிகளையும் பெற்றுப் பெருமகிழ்வடைந்தாற்போல; கொண்டுமனைபுகுந்தார் = அழைத்துக்கொண்டு திருமனையினுள்ளேயணுகினார்.—எ-று. (௬௯)

வந்துபுகுந்துதிருமனையின்மனைவியார்தாமாதவரை
முந்தவெதிர்சென்றடிவணங்கிமுழுதுமழகுசெய்தமனைச்
சந்தமலர்மாலைகள்முத்தின்றாமநாற்றித்தவிசடுத்த
கந்தமலராசனங்காட்டிக்கமழ்நீர்க்கரகமெடுத்தேந்த.

(இ-ள்.) திருமனையின்வந்துபுகுந்து = திருமாளிகையிலே வந்துசேர்ந்து (பின்பு); மனைவியார்மாதவரைமுந்தவெதிர்சென்றடிவணங்கி = தமதுமனைவியார் அவ்வடியவரை முற்படஎதிர்வந்து திருவடிகளிலேதாழ்ந்து; முழுதுமழகுசெய்தமனை = முற்றும் அலங்கரிக்கப்பட்ட மனையிலே; சந்தமலர்மாலைகண்முத்தின்றாமநாற்றி = அழகியபூமாலைகளும் முத்தாரங்களும் தொங்கவிடுத்து; கந்தமலர்த்தவிசடுத்தவாசனங்காட்டி = நறுமணமிக்கமலர்கள் அணைபோற்செறிந்த ஆசனத்தைக்காட்டி; கமழ்நீர்க்கரகமெடுத்தேந்த = (எழுந்தருளியபின்)வாசனைநிறைந்த நீர்க்கரகத்தையெடுத்துத் தாங்கிநிற்க.—எ-று.

புகுந்தென்னும்வினையெச்சம் பிற்செய்யுளில் கழல்விளக்கி என்பதனோடியையும். மனைவியாரசெயலாகிய ஏனையவை இடைப்பிறவரலாய்வந்தன. தாம் - அசை.

தூயநீராற்சிறுத்தொண்டர்சேரதியார் தங்கழல்விளக்கி
யாயபுனிதப்புனறங்கடலைமேலாரத்தெளித்தின்ப
மேயவில்லமெம்மருங்கும்வீசிவிரைமென்மலர்சாந்த
மேயுந்தூபதீபங்கண்முதற்பூசனைசெய்திறைஞ்சுவார்.

(இ-ள்.) சிறுத்தொண்டர்தூயநீராற்சேரதியார்தங்கழல்விளக்கி = சிறுத்தொண்டநாயனார் சுத்தோதகத்தினாலே சிவபெருமான் திருவடிகளைவிளக்கி; ஆயபுனிதப்புனறங்கடலைமேலாரத்தெளித்து = அப்புனிதநீர்த்தத்தைத் தங்கள்சிரசின்மேலே மிகவும் புரோக்ஷித்துக்கொண்டு; இன்பமேயவில்லமெம்மருங்கும்வீசி = இன்பமமைந்த திருமனையின் எவ்விடங்களினும் தெளித்து; விரைமென்மலர்சாந்தமேயுந்தூபதீபங்கண்முதல் = வாசனையமைந்த மெல்லிய மலர் சந்தனம் தூபம் தீபம்முதலிய பூஜோபகரணங்களால்; பூசனைசெய்திறைஞ்சுவார் = பூசித்துவணங்குவாராயினார்.—எ-று.

புனிதப்புனல் = யாவரையும் புனிதமாக்கும் புனல். (௭௧)

பனிவெண்டிங்கட்சடைவிரித்தபயில்பூங்குஞ்சிப்பயிரவராம்
புனிதர்தம்மைப்போனகமுங்கறியும்படைக்கும்படிபொற்பின்
வனிதையாருங்கணவருமுன்வணங்கிக்கேட்பமற்றவர்தா
மினியவன்னமுடன்கறிகளெல்லாமொக்கப்படைக்கவென.

(இ-ள்.) பனிவெண்டிங்கட்சடைவிரித்த = குளிர்ந்த வெள்ளிய சந்திரன் குடிகொண்ட சடையை விரித்தனவாகிய; பூப்பயில்குஞ்சிப்பயிரவராம்புனிதர்தம்மை = பொலிவுபெற்ற மயிரையுடைய வயிரவசங்கமரை; பொற்பின்வனிதையாருங்கணவருமுன்வணங்கி = எழிலமைந்தமனைவியாரும் கணவரும் எதிரேபணிந்து; போனகமுங்கறியும்படைக்கும்படிகேட்ப = திருவமுதும் கறியமுதும் படைக்கும் படி (உத்தரவுசெய்யவேண்டுமெனப்) பிரார்த்திக்க; அவரினியவன்னமுடன்கறிகளெல்லாமொக்கப்படைக்கவென = எம்பெருமானும் இனிய அன்னத்தோடு கறிகளெல்லாவற்றையும் ஒருங்குபடைக்கவென்று உத்தரவுகொடுத்தருள.—எ-று.

சடையையேமயிர்முடியாகத் தாங்கிவந்தமையின், "சடைவிரித்தபூங்குஞ்சி" என்றார். மற்று-தாம்-அசைகள். (எஉ)

பரிசுவிளங்கப்பரிகலமுந்திருத்திப்பாவாடையிலேற்றித்
தெரியும்வண்ணஞ்செஞ்சாலிச்செழும்போனகமுங்கறியமுதும்
வரிசையினின்முன்படைத்தெடுத்துமன்னும்பரிகலக்கான்மேல்
விரிவெண்டுகிலின்மிசைவைக்கவிமலர்பார்த்தங்கருள்செய்வார்.

(இ-ள்.) பரிசுவிளங்கப்பரிகலமுந்திருத்திப்பாவாடையிலேற்றி = பண்புவிளங்கும்படி உண்கலத்தைச்சுத்திசெய்து பாவாடையில்வைத்து(அதிலே); செழுஞ்செஞ்சாலிப்போனகமுங்கறியமுதும் = செழித்த செவ்விய சம்பாஅன்னத்தையும் கறியமுதையும்; தெரியும்வண்ணம்வரிசையினின்முன்படைத்தெடுத்து = விளக்கமுறும் படி கிரமமாக முன்னர்ப்படைத்து அதனையெடுத்து; மன்னும்பரிகலக்கான்மேல் = நிலைபெற்ற பரிகலம்வைத்தற்குரிய பீடத்தின்மேல்; விரிவெண்டுகிலின்மிசைவைக்க= விரித்த வெள்ளிய ஆடையின்மீதுவைக்க; விமலர்பார்த்தருள்செய்வார்=நிமலர்நோக்கி அருளிச்செய்வார்.—எ-று.

பண்பு - அப்பாத்திரத்திற்குரியநிறம். அங்கு - அசை. (எ௩)

சொன்னமுறையிற்படுத்தபசுத்தொடர்ந்தவுறுப்பெல்லாங்கொண்டு
மன்னுசுவையிற்கறியாக்கிமாணவமைத்தீரேயென்ன
வன்னமனையார்தலையிறைச்சியமுதுக்காகாதெனக்கழித்தே
னென்னவதுவுங்கூடநாமுண்பதென்றாரிடர்தீர்ப்பார்.

(இ-ள்.) சொன்னமுறையிற்படுத்தபசுத்தொடர்ந்த=யாம் கூறியபடியே சேதித்த பசுவின்கண்ணுள்ள; உறுப்பெல்லாங்கொண்டு = அவயவங்களனைத்தையுங் கொண்டு; மன்னுசுவையிற்கறியாக்கி = நிலைபெற்றசுவையோடு பாகஞ்செய்து; மாணவமைத்தீரேயென்ன=மாட்சிமைப்படப் படைத்தீரா என்றுவின்வ; அன்னமனையார்=அன்னம்போல்வாராகிய திருவெண்காட்டம்மையார்; தலையிறைச்சியமுதுக்காகாதெனக்கழித்தேனென்ன=தலையூன் திருவமுதுக்காகாதென்று தவிர்த்துவிட்டேனென்று கூறுதலும்; இடர்தீர்ப்பார் = அன்பர் இடரை அகற்றுவாராகிய இறைவர்; நாமதுவுங்கூடவுண்பதென்றார்=நாம் அதையும் ஒருங்கு உண்பது என்று கூறினார்.

சுவையிற்கறியாக்கலாவது = பலகாயங்களுமிட்டுச் சுவைப்படப் பாகமாக்கல். அன்னமனையார்-அந்தமனைவியார் எனினும் அமையும். ஏகாரம் - வினா. (எச)

சிந்தைகலங்கிச்சிறுத்தொண்டர்மனையாரோடுந்திகைத்தயரச்
சந்தனத்தாரெனுந்தாதியார்தாமந்தத்தலையிறைச்சி
வந்ததொண்டரமுதுசெயும்பொழுதுநினைக்கவருமென்றே　　[ர்.
முந்தவமைத்தேன்கறியமுதென்றெடுத்துக்கொடுக்கமுகமலர்ந்தா

(இ-ள்.) சிறுத்தொண்டர்மனையாரோடுஞ்சிந்தைகலங்கி=நாயனார் மனைவியாரோடு மனக்கலக்கமுற்று; திகைத்தயர=என்செய்வேமெனத் திகைப்புடையராய்ச் சோர்ந்துநிற்க; சந்தனத்தாரெனுந்தாதியார் = சந்தனநங்கையென்னுந்தாதியார்; வந்ததொண்டரமுதுசெயும்பொழுது = எழுந்தருளிய திருத்தொண்டர் திருவமுது செய்யுங்காலத்தில்; அந்தத்தலையிறைச்சிநினைக்கவருமென்றே = அந்தத்தலையூனைச் சிந்திக்க நேரிடுமென்று கருதியே; முந்தவமைத்தேன்கறியமுதென்று = முன்னர்க்கறியமுதாக்கினேனென்று மொழிந்து; எடுத்துக்கொடுக்கமுகமலர்ந்தார் = (வினைய) எடுத்துக்கொடுத்தலும் முகமலர்ச்சியடைந்தார்.—எ-று.

தாம் - அசை. ஏகாரம் - தேற்றம்.　　(எரு)

வாங்கிமகிழ்ந்துபடைத்ததற்பின்வணங்குஞ்சிறுத்தொண்டரைநோ
யீங்குநமக்குத்தனியுண்ணவொண்ணாதீசனடியாரிப்　　[க்கி
பாங்குநின்றார்நமைக்கொணர்வீரென்றுபரமர்பணித்தருள
வேங்கிக்கெட்டேனமுதுசெய்யவிடையூறிதுவோவெனநினைவார்.

(இ-ள்.) வாங்கிமகிழ்ந்துபடைத்ததற்பின்=அதனைவாங்கிக் களிகூர்ந்து படைத்ததற்குப்பின்; வணங்குஞ்சிறுத்தொண்டரைநோக்கி=பணியுஞ் சிறுத்தொண்டநாயனாரைப்பார்த்து; ஈங்குநமக்குத்தனியுண்ணவொண்ணாது=இங்குத் தனித்து அருந்த நமக்கு இயலாது; ஈசனடியாரிப்பாங்குநின்றார் நமைக்கொணர்வீரென்று = சிவனடியவர்களாய்ச் சமீபத்துள்ளவரைக் கொண்டுவருவீரென்று; பரமர்பணித்தருள= சிவபிரான் கட்டளையிட; அமுதுசெய்யவிடையூறிதுவோவெனவேங்கிநினைவார் = (இவ்வடியவர்) திருவமுது செய்தற்கு இதுவோ விக்கினமென்று ஏக்கமுற்றுச் சிந்திப்பார்.—எ-று.

கெட்டேன் என்பது தன்னை இழித்தற்கண்வருவதோர் இடைச்சொல். ஓகாரம் - ஐயத்தின்மேற்று.　　(எசு)

அகத்தின்புறத்துப்போயருளாலெங்குங்காணாரழிந்தணைந்து
முகத்தில்வாட்டமிகப்பெருகப்பணிந்துமுதல்வர்க்குரைசெய்வா
ரிகத்தும்பரத்துமினியாரைக்காணேன்யானுந்திருநீறு
சகத்திலிடுவார்தமைக்கண்டேயிடுவேனென்றுகாழ்ந்திறைஞ்ச.

(இ-ள்.) அகத்தின்புறத்துப்போய்=இல்லின்புறத்தே சென்று தேடியும்; அருளாலெங்குங்காணாரழிந்தணைந்து = திருவருளால் எங்கும் ஒருவரையுங்காணாராய்த் தியங்கிவந்து; முகத்தில்வாட்டமிகப்பெருகப்பணிந்து=திருமுகத்திலே வாட்டம் மிகமலியவணங்கி; முதல்வர்க்குரைசெய்வார்=பெருமானுக்கு விண்ணப்பிப்பார்; இகத்தும்பரத்துமினியாரைக்காணேன் = இம்மையிலும் மறுமையிலும் இனிமையைத் தருவாராகிய அடியவரை (எங்கும்) கண்டிலேன்; சகத்திற்றிருநீறிடுவார்தமைக்கண்

ழ=இப்பூமியிலே விபூதியைத் தரிப்பவரைப் பார்த்து; யானுமிடுவேனென்றுதாழ்ந்திறைஞ்ச=அடியேனுந்தரிப்பேனென்று தாழ்ந்துவணங்க.—எ-று.

திருத்தொண்டரைக்காணுவகைசெய்தது திருவருளேயாகலின், "அருளாலெங்குங்காணுது" என்றார். அமுதுகொள்ளாது அகல்வரோஎன்னும் ஏக்கத்தால் இசைதற்குரித்தல்லாததொழிலினும் இசைந்துபணிந்து, விபூதிமுதலிய சிவசின்னங்களில் விருப்புடையனல்லேன் ஆயினும், விருப்புடையன்போல நடித்துநிற்றலின் அடியேனையே ஒருதொண்டனுக அங்கீகரிக்கவேண்டுமெனப் பிரார்த்தித்தாரென்பது கருத்து. ஏகாரம் தேற்றம். இது உள்ளபடி திருநீறிடுதலின்மையராகத் தம்மை இழித்துரைத்தவாறு. (எஎ)

உம்மைப்போலநீறிட்டாருளரோவுண்பீர்நீரொன்று
செம்மைக்கற்பிற்றிருவெண்காட்டம்மைதம்மைக்கலந்திருத்தி
வெம்மையிறைச்சிசோறிதனின்மீட்டுப்படையுமெனப்படைத்தார்
தம்மையூட்டவேண்டியவருண்ணப்புகலுந்தடுத்தருளி.

(இ-ள்.) உம்மைப்போலநீறிட்டாருளரோநீருண்பீரொன்று= உம்மைப்போல விபூதியணிந்ததொண்டர் உளரோ நீர் அருந்துவீரொன்று; செம்மைக்கற்பிற்றிருவெண்காட்டம்மைதம்மை=செவ்வியகற்பினையுடைய திருவெண்காட்டம்மையை (நோக்கி); கலந்திருத்திவெம்மையிறைச்சி சோறிதனின் = கலந்திருத்திவைத்து விருப்பத்தை விளைக்கும் கறியும் சோறுமாகிய இப்படையலில்; மீட்டுப்படையுமென=எடுத்து இவருக்கும்படையுமென்று பணிக்க; படைத்தார்=அவ்வம்மையாரும் அங்ஙனமே படைத்தார்; தம்மையூட்டவேண்டியவருண்ணப்புகலுந்தடுத்தருளி=அமலரை உண்பிக்கவேண்டி நாயனார் உண்ணத்தொடங்கலும் அவரைத்தடுத்து—எ-று.

ஓ - எதிர்மறை. வெம்மையிறைச்சி - சூட்டிறைச்சியுமாம். (எஅ)

ஆறுதிங்களொழிந்துண்போமுண்ணுமளவுந்தரியாது
சோறுநாளுமுண்பீர்முன்னுண்பதென்னம்முடன்றுய்ப்ப
மாறின்மகவுபெற்றீரேன்மைந்தன்றன்னையழையுமென
வீறுமுதலுமில்லார்க்கிப்போதுதவானவனென்றார்.

(இ-ள்.) ஆறுதிங்களொழிந்துண்போமுண்ணுமளவுந்தரியாது=ஆறுமாதங்கழிந்தபின்பு அருந்துவோமாகிய யாம்அருந்துமளவுந் தரியாமல்; சோறுநாளுமுண்பீர்முன்னுண்பதென் = தினமும் சோறுண்ணும் நீர் முன்னேயுண்பது என்னை; மாறின்மகவுபெற்றீரேல் = மாறுபடுதலில்லாத மைந்தனைப் பெற்றுள்ளீரானால்; மைந்தன்றன்னை நம்முடன்றுய்ப்பவழையுமென = அப்புதல்வனை நம்மோடருந்த அழையுமென்றுரைக்க; ஈறுமுதலுமில்லார்க்கு=அந்தமும் ஆதியுமில்லாத அண்ணலாருக்கு; அவனிப்போதுதவானென்றார்=அவன் இவ்வேளை உதவமாட்டானென்று விண்ணப்பித்தார்.—எ-று.

*"புரைதீர்ந்தநன்மைபயக்குமெனின் பொய்மையும்வாய்மையிடத்த" ஆகலின் இப்போதுதவானென்றாரென்க. நன்மைபயத்தல் முற்காண்க. (எகூ)

நாமிங்குண்பதவன்வந்தாலுடியழையுமெனநம்பர்
தாமங்கருளிச்செயத்தரியார்தலைவரமுதுசெய்தருள
யாமிங்கென்செய்தாலாகுமென்பார்விரைவுற்றெழுந்தருளாற்
பூமென்குழலார்தம்மோடும்புறம்போயழைக்கப்புகும்பொழுது.

---

* திருக்குறள் - உகஉ.

(இ-ள்.) அவன்வந்தானுமுண்பது = அவன் வந்தபின்புதான் நாம் அருந்துதலாகும் ஆகலின்; நாடியழையுமெனநம்பரருளிச்செய = தேடியழையுமென்று சிவபெருமான்கட்டளையிட; தரியார்=நாயனார்சகியாதவராகி; தலைவரமுதுசெய்தருள= இறைவர் திருவமுதுகொள்ளுதற்கு; யாமென்செய்தாலாகுமென்பார்=யாம் யாதுகாரியமியற்றின்கைகூடுமென்றெண்ணி; விரைவுற்றெழுந்துபூமென்குழலார்தம்மோடும் புறம்போய் = சீக்கிரமெழுந்து பூக்களையணிந்த மெல்லியகூந்தலையுடைய தேவியாரோடும் வெளியேசென்று; அருளாலழைக்கப்புகும்பொழுது = அப்பெருமான் கட்டளையால் அழைக்குந்தருணத்தில்.—எ-று.

வந்தாலேயென்னும் தேற்றேகாரம் விகாரத்தாற்றொக்கது. இங்கு - தாம் - அங்கு. அசைகள். தரியார் என்பார் என்பன முற்றெச்சங்கள்.                (அ0)

வையநிகழுஞ்சிறுத்தொண்டர்மைந்தாவருவாயெனவழைத்தார்
தையாலாருந்தலைவர்பணிதலைநிற்பாராய்த்தாமழைப்பார்
செய்யமணியேசீராளாவாராய்சிவனாரடியார்யா
முய்யும்வகையாலுடனுண்ணவழைக்கின்றாரென்றோலமிட.

(இ-ள்.) வையநிகழுஞ்சிறுத்தொண்டர் = உலகில் கீர்த்தியுற்று விளங்கும் நாயனார்; மைந்தாவருவாயெனவழைத்தார் = மைந்தனே வரக்கடவாயென்று அழைத்தார்; தையலாருந்தலைவர்பணிதலைநிற்பாராய்த்தாமழைப்பார் = அவர்மனைவியாரும் கணவர்கற்பித்தவழியிலே நிற்பாராய் அழைக்கத்தொடங்கி; செய்யமணியேசீராளா = சிவந்த இரத்தினமே சீராளனே; சிவனாரடியார்யாமுய்யும்வகை = சிவனடியார் யாம் நற்கதியுறும்வண்ணம்; உடனுண்ணவழைக்கின்றார் = உடன் அருந்துதற்கு உன்னையழைக்கின்றாராகலின்; வாராயென்றோலமிட = வரக்கடவாயென்று பெருங்குரலிட்டழைக்க.—எ-று.

அழைப்பார் - முற்றெச்சம். ஆல்-அசை.                (அக)

பரமாருளாற்பள்ளியினின்றோடிவருவான்போல்வந்த
தரமில்வனப்பிற்றனிப்புதல்வன்றன்னையெடுத்துத்தழுவித்தங்
கரமுன்னணைத்துக்கணவனார்கையிற்கொடுப்பக்களிகூர்ந்தார்
புரமூன்றெரித்தார்திருத்தொண்டருண்ணப்பெற்றோமெனும்பொலிவால்.

(இ-ள்.) பரமாருளால் = சிவபெருமான்கிருபையால்; பள்ளியினின்றோடிவருவான்போல்வந்த = கல்விக்கழகத்தினின்றும் ஓடிவருபவனைப்போல வந்த; தரமில்வனப்பிற்றனிப்புதல்வன்றன்னை யெடுத்துத்தழுவி=இணையில்லாத அழகினையுடைய ஏகபுத்திரனைத் தாங்கியணைத்து; தங்கரமுன்னணைத்துக்கணவனார்கையிற்கொடுப்ப = தம்முடையகரத்திலணைத்துத்தலைவர்கையிலேகொடுக்க; புரமூன்றெரித்தார்திருத்தொண்டருண்ண = திரிபுரதகனராகிய சிவபெருமானடியவர் திருவமுது செய்ய; பெற்றோமெனும்பொலிவாற்களிகூர்ந்தார் = பெற்றனமென்னும் உள்ளக்கிளர்ச்சியாற் பேருவகையுற்றார்.—எ-று.

தரம்-ஒப்பு-முன்-எழனுருபு-பொலிவு-உள்ளக்கிளர்ச்சியின்மேற்று.                (அஉ)

வந்தமகனைக்கடிதிற்கொண்டமுதுசெய்விப்பான்வந்தார்
முந்தவேயப்பயிரவராமுதல்வரங்கண்மறைந்தருளச்
சிந்தைகலங்கிக்காணுதிகைத்தார்வீழ்ந்தார்தெருமந்தார்
வெந்தவிறைச்சிக்கறியமுதுங்கலத்திற்காணார்வெருவுற்றார்.

(இ-ள்.) வந்தமகனைக்கொண்டமுதுசெய்விப்பான்கடிதில்வந்தார்=வந்தபுதல்வனைத்தாங்கிக்கொண்டு அடியவரை அமுதுசெய்விக்க விரைவிலணுகினார்; முந்தவேயப்பயிரவராமுதல்வராங்கண்மறைந்தருள = இவர்வருமுன்னமே அவ்வயிரவக்கோலங்கொண்ட இறைவர் அங்கேமறைந்தருளலால்; காணாதுசிந்தைகலங்கித்திகைத்தார் = காணமையால் மனங்கலங்கி மருண்டார்; வீழ்ந்தார்=மண்ணிலேவிழுந்தார்; தெருமந்தார் = மனச்சுழற்சியடைந்தார்; வெந்தவிறைச்சிக்கறியமுதுங்கலத்திற்காணார்வெருவுற்றார் = பாகஞ்செய்த ஊன்கறியமுதும் பாத்திரத்திற்காணாராய்ப் பயந்தார்.—எ-று. (அ௬)

செய்யமேனிக்கருங்குஞ்சிச்செழுங்கஞ்சுகத்துப்பயிரவர்யா
முய்யவமுதுசெய்யாதேயொளித்ததெங்கேயெனத்தேடி
மையல்கொண்டுபுறத்தணையமறைந்தவவர்தாமலைபயந்த
தையலோடுஞ்சரவணத்துத்தனயரோடுந்தாமணைவார்.

(இ-ள்.) செய்யமேனிக்கருங்குஞ்சி = சிவந்ததிருமேனியையும் கறுத்தமயிர்முடியையும்; செழுங்கஞ்சுகத்துப்பயிரவர் = செழித்தசட்டையையுமுடைய வயிரவசங்கமர்; யாமுய்யவமுதுசெய்யாது = யாம் உண்மைக்கதிபெறுமாறுதிருவமுதுகொள்ளாமல்; எங்கேயொளித்ததெனத்தேடி = எங்கேமறைந்தனரென்று தேடிக்கொண்டு; மையல்கொண்டுபுறத்தணைய = மயக்கமுடையராய்ப் புறத்தேவர; மறைந்தவவர்=மறைந்தஅப்பரமர்; மலைபயந்ததையலோடுஞ்சரவணத்துத்தனயரோடுமணைவார்=பார்வதிதேவியாரோடும் பாலசுப்பிரமணியக்கடவுளாகிய புதல்வரோடும் எழுந்தருள்வார்.—எ-று.

ஏ-தாம்-அசைகள். (அச)

தனிவெள்விடைமேனெடுவிசும்பிற்றலைவர்பூதகணநாதர்
முனிவாமரர்விஞ்சையர்கண்முதலாயுள்ளோர்போற்றிசைப்ப
வினியகறியுந்திருவமுதுமமைத்தார்காணவெழுந்தருளிப்
பனிவெண்டிங்கண்முடிதுளங்கப்பரந்தகருணைநோக்களித்தார்.

(இ-ள்.) பூதகணநாதர்முனிவரமரர் = பூதகணநாதர்களும் முனிவர்களும் தேவர்களும்; விஞ்சையர்கண்முதலாயுள்ளோர்போற்றிசைப்ப = வித்தியாதரர்களும் முதலாயுள்ளவர் வழிபட; இனியகறியுந்திருவமுதுமமைத்தார்காண = இனிய கறியமுதும் திருவமுதும் அமைத்த இருவருங் காணும்படி; தலைவர்தனிவெள்விடைமேல் = இறைவர் தனித்த வெள்ளிய இடபவாகனத்திலே; நெடுவிசும்பிலெழுந்தருளி = நெடிய ஆகாயத்திலே எழுந்தருளிவந்து; பனிவெண்டிங்கண்முடிதுளங்க = தண்ணிய வெள்ளிய சந்திரனையணிந்த திருமுடியையசைத்து; பரந்தகருணைநோக்களித்தார் = பரவிய கிருபாநோக்கம் பாலித்தார்.—எ-று.

விடைமேல் எழுந்தருளி என இயையும். துளக்கியென்னும்பிறவினை துளங்கவெனத் தன்வினையாய் நின்றது. திருத்தொண்டரனைவியந்து திருமுடியசைத்துக் கருணைநோக்களித்தாரென்பது கருத்து. (அ௫)

அன்பின்வென்றதொண்டரவர்க்கமைந்தமனைவியார்மைந்தர்
முன்புதோன்றும்பெருவாழ்வைமுழுதுங்கண்டுபரவசமா
யென்புமனமுங்கரைந்துருகவிழுந்தாரெழுந்தாரேத்தினார்
பின்புபரமர்தருதியினற்பெரியோரவருக்கருள்புரிவார்.

(இ-ள்.) அன்பின்வென்றதொண்டர் = அன்பிலே மேம்பட்ட நாயனாரும்; அவர்க்கமைந்தமனைவியார்மைந்தா=அவர்க்கு ஒத்த மனைவியாரும் புதல்வரும் ஆகிய மூவரும்; முன்புதோன்றும்பெருவாழ்வை=தமக்கெதிரே விளங்கும் சோமாஸ்கந்தமூர்த்தியை; முழுதுங்கண்டிபரவசமாய்=முற்றுந்தரிசித்துப் பரவசப்பட்டு; என்புமனமுங்கரைந்துருகவிழுந்தார்=எலும்பும் மனமும் இளகியுருகப்பணிந்தார்; எழுந்தாரேத்தினர்=மீட்டும் எழுந்தார் துதித்தார்; பின்புபரமர்=பின்னர் அப்பெருமான்; பெரியோரவருக்குத்தகுதியினலருள்புரிவார்=நாயனருக்கு அவர் தகுதிக்குத்தக்கபடி திருவருள் அளிப்பார்.—எ-று.

வெல்லல் மேம்படல். வாழ்வுக்கேதுவாகிய சிவக்காட்சியை வாழ்வென்றும், இத்தகைய தொண்டை இயற்றினாரின்மையின் அத்தகையருக்குத்தக்க அருங்கதியளிக்க உன்னினரென்பார் "தகுதியினலருள்புரிவார்" என்றும் கூறினர். (அ௬)

கொன்றைவேணியார்தாமும்பாகங்கொண்டகுலக்கொடியும்
வென்றிநெடுவேள்மைந்தருந்தம்விரைப்பூங்கமலச்சேவடிக்கீழ்
நின்றதொண்டர்மனைவியார்சிறுமகனார்தாதியா
ரென்றும்பிரியாதேயிறைஞ்சியிருக்கவுடன்கொண்டேகினர்.

(இ-ள்.) கொன்றைவேணியாரும்=கொன்றைமாலையையணிந்த சடைமுடியையுடைய பெருமானும்; பாகங்கொண்டகுலக்கொடியும்=வாமபாகம்பெற்று விளங்கும் உமாதேவியாரும்; வென்றிநெடுவேள்மைந்தரும்=வெற்றிபெற்ற நெடிய வேலையேந்திய குமாரக்கடவுளும் ஆகிய மூவரும்; தம்விரைப்பூங்கமலச்சேவடிக்கீழ்நின்ற=வாசனைமிக்க தாமரைமலர்போலும் தமது சிவந்த திருவடியின் கீழ்நின்ற; தொண்டர்மனைவியார்சிறுமகனார்தாதியார்=அந்நாயனார் அவர்மனைவியார் அவர்புத்திரனார் அவர்தாதியாராகிய நால்வரும்; என்றும்பிரியாதிறைஞ்சியிருக்க வுடன்கொண்டேகினர்=எக்காலத்தும் பிரிவின்றி வணங்கித் தம்பக்கலிருக்கும்படி உடன்கொண்டு சென்றார்.—எ-று.

மூவரும் நால்வரையுங்கொண்டேகினரென்க. தாம்-ஏ-அசைகள். (அஎ)

ஆறுமுடிமேலணிந்தவருக்கடியாரென்றுகறியமுதா
வூறிலாததனிப்புதல்வன்றன்னையரிந்தங்கமுதூட்டப்
பேறுபெற்றார்சேவடிகடலைமேற்கொண்டுபிறவுயிர்கள்
வேறுகழறிற்றறிவார்தம்பெருமைதொழுதுவிளம்புவாம்.

(இ-ள்.) ஆறுமுடிமேலணிந்தவருக்கு=கங்கையைத் திருமுடிமேலணிந்த கடவுளுக்கு; அடியாரென்று=இவரடியவரென்னும் பாவனையினால்; ஊறிலாததனிப்புதல்வன்றன்னையரிந்து=யாதொருகுறைபாடும் இல்லாத ஏகபுத்திரனை யரிந்து சமைத்து; கறியமுதாவூட்ட=கறியமுதாகத் திருவமுது செய்விக்க; பேறுபெற்றார்சேவடிகடலைமேற்கொண்டு=பேறுபெற்ற சிறுத்தொண்டநாயனாருடைய திருவடிகளைச் சிரமேற்கொண்டு; பிறவுயிர்கள்வேறுகழறிற்றறிவார்தம்பெருமை=வேற்றுயிர்கள் வெவ்வேறு வசனிப்பதையும் அறிவாராகிய சேரமான்பெருமாணயனார் சிறப்பைத் தொழுதுவிளம்புவாம்=அவரை வணங்கிக்கொண்டு அறைவோம்.—எ-று.

ஆறுமுடிமேலணிந்தவருக்கமுதூட்ட என இயையும். அங்கு-அசை. (அஅ)

சிறுத்தொண்டநாயனார்புராணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௩௬௬.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சேரமான்பெருமாணாயனார்புராணம்.

மாவீற்றிருந்தபெருஞ்சிறப்பின்மன்னுந்தொன்மைமலைநாட்டுப்
பாவீற்றிருந்தபல்புகழார்பயிலுமியல்பிற்பழம்பதிதான்
சேவீற்றிருந்தார்திருவஞ்சைக்களமுநிலவிச்சேரர்குலக்
கோவீற்றிருந்துமுறைபுரியுங்குலக்கோமூதூர்கொடுங்கோளூர்.

(இ-ள்.) மாவீற்றிருந்தபெருஞ்சிறப்பின்=இலக்குமி குடிகொள்ளும் மிக்க மேன்மையோடு; தொன்மைமன்னுமலைநாட்டு=பழமைவாய்ந்த மலைநாட்டிலே; பாவீற்றிருந்தபல்புகழார்=பாவினங்களில் வதிவுற்ற பலவகைப்புகழையுடையவர்கள்; பயிலுமியல்பிற்பழம்பதி=வசிக்கும் வளமைவாய்ந்த தொன்றுதொட்ட நகரம் யாதெனின்; சேவீற்றிருந்தார்திருவஞ்சைக்களமுநிலவி=இடபவாகனத்தி லாரோகணிக்கும் இறைவரது திருவஞ்சைக்களமும் தன்னிடத்தே திகழப்பெற்று; சேரர்குலக்கோவீற்றிருந்துமுறைபுரியும்=சேரகுலத்தரசர் நிலைபெற்றுச் செங்கோலைச் செலுத்தப்பட்ட; குலக்கோமூதூர்கொடுங்கோளூர்=பலகுடிகள் நெருங்கிய தலைமைபெற்ற நகரமாகிய கொடுங்கோளூராகும்.—எ-று.

பதி நிலவி புரியுங் கோமூதூர் என இயையும். இடையிலுண்டாக்கப்பட்டதன்றென்பார் "தொன்மைமலைநாடு" என்றும், ஒவ்வொருமரபினரும் புலவர்செய்யுளிற் புகழ்பெற்றவரென்பார் "பாவீற்றிருந்த பல்புகழார்" என்றும், பெறுதற்கரிய திவ்வியதலமென்பார் "திருவஞ்சைக்களமுநிலவி" என்றும், இது சேரர்க்கு இராஜதானியென்பார் "சேரர்குலக்கோவீற்றிருந்து முறைபுரியுங்குலக்கோமூதூர்" என்றும் கூறினார். தான்-அசை. உம்மை-உயர்வுசிறப்பு. (க)

காலையெழும்பல்கலையினொலிகளிற்றுக்கன்றுவடிக்குமொலி
சோலையெழுமென்சுரும்பினொலிதுரகச்செருக்காற்சுலவுமொலி
பாலைவிபஞ்சிபயிலுமொலிபாடலாடன்முழவினொலி
வேலையொலியைவிழுங்கியெழவிளங்கியோங்கும்வியப்பினதால்.

(இ-ள்.) காலையெழும்பல்கலையினொலி=காலையில் எங்கும் மிகும் வேதமுதலிய பலகலைகளின் முழக்கமும்; களிற்றுக்கன்றுவடிக்குமொலி=யானைக்கன்றுகள் பிளிறிடும் முழக்கமும்; சோலையெழுமென்சுரும்பினொலி=சோலையிலே மேலெழும்பும் மெல்லிய வண்டுகளின் முழக்கமும்; துரகச்செருக்காற்சுலவுமொலி=குதிரைகளின் கனைப்பாலுண்டாகும் முழக்கமும்; பாலைவிபஞ்சிபயிலுமொலி=பாலையாழ்முதலிய பண்கள் பயிலும் முழக்கமும்; பாடலாடன்முழவினொலி=பாடுதலோடு ஆடுதலின் கண்ணிகழும் மத்தளமுழக்கமும்; வேலையொலியைவிழுங்கியெழவிளங்கியோங்கும்=சமுத்திரமுழக்கத்தையும் கீழ்ப்படுத்தி விளக்கமுற்று மேற்படும்; வியப்பினது=மேன்மையையுடையது அந்நகரம்.—எ-று.

பலகலைகளும் அபிவிருத்தியடையுமாறு ஓதுதற்குரியகாலம் காலையேயாகலின் "காலையெழும்பல்கலையினொலி" என்றார். பாலைப்பண் எழுவகைப்பட்டு, நூற்று

மூன்றுபேதமாம். அவையாவன=செம்பாலைப்பண் - எட்டு; படுமாலைப்பண் - இருபத்திரண்டு; செவ்வழிப்பாலைப்பண் - பன்னிரண்டு; அரும்பாலைப்பண்-இருபத்தாறு; கொடிப்பாலைப்பண் - பன்னிரண்டு; விளரிப்பாலைப்பண்-ஐந்து; மேற்செம்பாலைப்பண் - பதினெட்டு; என்பனவாம். இவற்றினியல்பை இசைநூலுட்காண்க. (உ)

மிக்கசெல்வமனைகடொறும்விழை யுமின்பம்விளங்குவன
பக்கநெருங்குஞ்சாலைதொறும்பயிலெனட்டறங்கள்பல்குவன
தக்கவணிகொண்மடங்கடொறுஞ்சைவமேன்மைசாற்றுவன
தொக்கவளங்கொளிடங்கடொறுமடங்கநிதியந்துவன்றுவன.

(இ-ள்-) பக்கநெருங்குசாலைதொறும்=அருகே நெருங்கிய சாலைகடோறும்; பயிலெனட்டறங்கள்பல்குவன=அமைதிபெற்ற நெடிய தருமங்கள் வளர்வன; தொக்கவளங்கொளிடங்கடொறும்=செறிந்த வளப்பம்வாய்ந்த இடங்கடோறும்; நிதியமடங்கத்துவன்றுவன=திரவியமுற்றும் நெருங்குவன; செல்வமிக்கமனைகடொறும்=செல்வம் ஓங்கிய திருமனைகடோறும்; விழையுமின்பம்விளங்குவன=விரும்பத்தக்க இன்பங்கள் விளங்குவன; தக்கவணிகொண்மடங்கடொறும்=சிறந்த அங்கங்களமைந்த திருமடங்கடோறும்; சைவமேன்மைசாற்றுவன = சிவசமயத்திற்குரிய மேன்மைகள் கூறப்படுவன.—எ-று.

எனவே, அறம்பொருளின்பம்வீடென்னும் உறுதிப்பொருட்பேறு நான்கும் ஒருங்கு நிரம்பப்பெற்றது அந்நகரென்றபடி. வீட்டிலக்கணங்களை உள்ளவாறு விளக்கவல்லதாகலின் சைவநூலாராய்ச்சியே அந்நகரத்தின் மிக்கதென்பார் “சைவமேன்மைசாற்றுவன” என விதந்தாரென்க. இச்செய்யுள் அடிமறிமாற்றுப் பொருள்கோளாய் நின்றது. சட்டறங்களென்பதும் பாடம்; சத்தாகிய அறங்கள் என்று இதற்குப் பொருளுரைப்பர். (ங)

வேதநெறியின்முறைபிறழாமிக்கவொழுக்கந்தலைநின்ற
சாதிநான்குநிலைதழைக்குந்தன்மைத்தாகித்தடமதில்சூழ்
சூதவகுளசரளநிரைதுதையுஞ்சோலைவளநகர்தான்
கோதையரசர்மகோதையெனக்குலவுபெயருமுடைத்துலகில்.

(இ-ள்.) வேதநெறியின்முறைபிறழாமிக்கவொழுக்கந்தலைநின்ற=வேதமார்க்கத்தின் நியதிதவறாது மேம்பட்ட ஒழுக்கத்திනிலைபெற்ற; சாதிநான்கும்=மறையவர் முதலிய நான்குவருணத்தாரும்; நிலைதழைக்குந்தன்மைத்தாகி=அவரவர்க்குரிய ஆச்சிரமநிலைகளில் அபிவிர்த்தியடையும் இயல்பையுடையதாய்; தடமதில்சூழ்சூதவகுளசரளம்=மலேம்பாலும் மதில்களைச்சூழ்ந்த மா மகிழ் நறுவிலிமுதலிய மரங்கள்; நிரைதுதையுஞ்சோலைவளநகர்=வரிசையாக நெருங்கிய சோலைகளையுமுடைய அக்கொடுங்கோளூரானது; கோதையரசர்மகோதையெனக்குலவுபெயருமுலகிலுடைத்து=கோதையெனப் பெயர்பெற்ற சேரரால் ஆளப்படுதலின் மகோதையென விளங்கும் பெயரையும் உலகிலுடையது.—எ-று.

நிலை - ஆச்சிரமம். தான் - அசை. (ச)

முருகுவிரியுமலர்ச்சோலைமூதூரதன்கண்முறைமரபி
னருகியழியுங்கலிநீக்கியறங்கொள்சைவத்திறந்தழைப்பத்
திருகுசினவெங்களியானைச்சேரர்குலமுமுலகுஞ்செய்
பெருகுதவத்தாலரனருளாற்பிறந்தார்பெருமாக்கோதையார்.

(இ-ள்.) முருகுவிரியுமலர்ச்சோலைமூதூரதன்கண்=மணம்விரியும் பூஞ்சோலைகளையுடைய அவ்வளநகரத்தின்கண்; முறைமரபினருகியழியுங்கலிநீக்கி=தொன்றுதொட்ட மரபுகளில் சிறுகத்தொடர்ந்து அழிக்கும் கெடுதிகளையொழித்து; அறங்கொள்சைவத்திறந்தழைப்ப=தருமநெறியைக்கொண்ட சைவத்தின் கூறுபாடுகள் தழைக்கும்படி; திருகுசினவெங்களியானைச்சேரர்குலமும்=மாறுபட்ட கோபத்தையுடைய வெவ்விய மதயானையைவாய்ந்த சேரரது குலத்தாரும்; உலகுஞ்செய்பெருகுதவத்தால்=உலகிலுள்ளவரும் புரிந்த உயர்ந்த தவத்தினாலே; அரனருளாற்பிறந்தார்பெருமாக்கோதையார்=சிவகிருபையால் பெருமாக்கோதையாரென்பவர் திருவவதாரஞ்செய்தார்.—எ-று.

* "குடிமடிந்து" என்பதுபோல அழியுமென்னும் தன்வினை பிறவினைப்பொருளில் வந்தது. † "அல்லவைதேயவறம்பெருகும்" என்றாங்கு, கலிநீங்கச் சைவத்திறந்தழைப்பவென்னாது "கலிநீக்கிச்சைவத்திறந்தழைப்ப" என்றது கலியை நீக்குதற்றன்மை சைவத்திற்கும் உண்மையிற்போலும். இங்ஙனமே ‡ "என்பி லதனை வெயில்போலக் காயுமே-யன்பி லதனை யறம்" எனவருதல் அறிக. குலமும் உலகும் இடவாகுபெயர். (௫)

திருமாநகரந்திருவவதாரஞ்செய்விழவின்சிறப்பினால்
வருமாகளிகூர்நெய்யாடலெடுப்பவானமலர்மாரி
தருமாவிசும்பின்மிகநெருங்கத்தழங்குமொலிமங்கலந்தழைப்பப்
பெருமாநிலத்திலெவ்வுயிரும்பெருகுமகிழ்ச்சிபிறங்கினவால்.

(இ-ள்.) திருமாநகரம்=சிறந்த அந்நகரத்திலுள்ளார்; திருவவதாரஞ்செய்விழவின்சிறப்பினால்=பெருமாக்கோதையார் திருவவதாரஞ்செய்த மங்கலவிசேடத்தால்; கூர்களிவருமாநெய்யாடலெடுப்ப=மிகு களிப்போங்கும்படி எண்ணெயாடலை எங்குஞ்செய்ய; வானத்தருமலர்மாரி=பொன்னுலகத்துள்ள பஞ்சதருக்களின் புஷ்பவருஷமானது; மாவிசும்பின்மிகநெருங்க=பெருமைபெற்ற ஆகாயத்திலே பெரிதும் நிரம்ப; தழங்குமொலிமங்கலந்தழைப்ப=ஒலிக்கின்ற மங்கலவாத்தியமுழக்கம் எங்கும் ஓங்க; பெருமாநிலத்திலெவ்வுயிரும்பெருகுமகிழ்ச்சிபிறங்கின=மிகப் பெரிய இப்பூமியிலே எவ்வகை யுயிர்களும் மிக்க மகிழ்ச்சி விளங்கப்பெற்றன.—எ-று.

இந்நாயனார் தெய்வீகமுடையராகலின் புஷ்பவருஷம் பொழிதலும் மங்கலவாச்சியமுழங்கலும் எவ்வுயிரு மின்புறுதலும் எங்கும் நிகழ்ந்தன என்க. வருமாறு கடைக்குறையாயிற்று. ஆல்-அசை. (௬)

மண்மேற்சைவநெறிவாழவளர்ந்துமுன்னைவழியன்பாற்
கண்மேல்விளங்குநெற்றியினார்கழலேபேணுங்கருத்தினரா
யுண்மேவியவன்பினராகியுரிமையரசர்தொழில்புரியார்
தெண்ணீர்முடியார்திருவஞ்சைக்களத்திற்றிருத்தொண்டேபுரிவார்.

(இ-ள்.) மண்மேற் சைவநெறிவாழவளர்ந்து = உலகத்திலே சிவசமயநெறி தழைத்தோங்க வளர்ச்சியுற்று; முன்னைவழியன்பால் = தொன்றுதொட்டுத் தொடர்ந்துவந்த அன்பினால்; கண்மேல்விளங்குநெற்றியினார் = நெற்றிக்கண்வாய்ந்த நிமலருடைய; கழலேபேணுங்கருத்தினராய்= திருவடிகளையே நேசிக்கும் சிந்தனையுடையராய்; உண்மேவிய வன்பினராகி = உள்ளத்திலே குடிகொண்ட அன்பையுடைய

* திருக்குறள், ௬௦௪. † ஷை ௯௬. ‡ ஷை ௭௭.

ராய்; அரசருரிமைத்தொழில் புரியார் = அரசர்க்குரிமையாகிய அத்தொழில்களை இயற்றார்; தெண்ணீர்முடியார் = தெளிந்த கங்கையையணிந்த திருமுடியையுடைய சிவபெருமானது; திருவஞ்சைக்களத்திற் றிருத்தொண்டேபுரிவார் = திருவஞ்சைக்களத்திலே திருத்தொண்டுகளையே செய்வார்.—எ-று.

ஏகாரம் இரண்டும் பிரிநிலை. உண்மேவிய அன்பு - இயற்கையன்பு. (எ)

உலகினியல்புமரசியல்புமுறுதியல்லவெனவுணர்வார்
புலரியெழுந்துபுனன்மூழ்கிப்புனிதவெண்ணீற்றினுமுழுகி
நிலவுதிருநந்தனவனத்துநீடும்பணிகள்பலசெய்து
மலருமுகையுங்கொணர்ந்துதிருமாலைசாத்தமகிழ்ந்தமைத்து.

(இ-ள்.) உலகினியல்பு மரசியல்பு முறுதியல்லவென வுணர்வார் = நிலவுலகின்சிறப்பும் அரசின்சிறப்பும் நிலையல்லவென்று சிந்திப்பாராகிய அந்நாயனார்; புலரியெழுந்து புனன்மூழ்கி = விடியலில்எழுந்து தீர்த்தநீராடி; புனிதவெண்ணீற்றினுமுழுகி = சுத்தமாகிய திருவெண்ணீற்றினும் முழுகி; நிலவுதிருநந்தனவனத்து நீடும்பணிகள் பலசெய்து = விளங்குகின்ற திருநந்தனவனத்திலே அதற்குரிய மிக்கதிருப்பணிகள் பலவுமியற்றி; மலருமுகையுங்கொணர்ந்து = மலர்களையும் அரும்புகளையுங் கொண்டுவந்து; மகிழ்ந்து திருமாலைசாத்தவமைத்து = மகிழ்ந்து திருமாலைதொடுத்தணிதற்கு இருத்தி;—எ-று.

நித்தியாநித்தியப் பொருள்களின் நிலைமையுணர்ந்தமையால் அநித்தியப்பொருள்களில் அவாவுதலொழிந்து நித்தியப்பொருளாகும் நிமலருக்குரிய நியதியையே மேற்கொண்டாரென்பதாம். எண்வகை ஸ்நானத்துள் வெண்ணீற்றின் முழுகலும் ஒன்றாகலின் "வெண்ணீற்றினுமுழுகி" என்றார். அவ்வெண்வகையுள் வாருணஸ்நானம்-சலத்தில்மூழ்குவது; ஆக்கினேயஸ்நானம்-அக்கினிசம்பந்தமான பஸ்மத்தை உத்தூளனஞ்செய்வது; மந்திரஸ்நானம்-சத்தியோசாதாதி மந்திரங்களை உச்சரிப்பது; மானசஸ்நானம்-பிரணவோச்சாரத்துடன் தியானம்புரிவது; திவ்வியஸ்நானம் சூரியகிரணத்துடன் சேற்றியமழையில் கிழக்காக ஏழடிநடப்பது; இது (மகேந்திரமெனவும்பெயர்பெறும்) மாருதஸ்நானம் - காற்றிற்கலந்த பசுவின்பாததூளியில எதிரிட்டுச்செல்வது; (இதுவாயவ்யமெனவும் பெயர்பெறும்) பார்த்திபஸ்நானம் - சிவாலயங்களில் அல்லது நதிகளிலுள்ள மிருத்திகையைக்குழைத்துத் திரிபுண்டரமாகத்தரித்தலும்,குழைத்ததீர்த்தத்தைப் புரோக்ஷித்துக் கொள்ளுதலுமாம். கௌரவஸ்நானம்-ஆசிரியர்பாததீர்த்தத்தை மூழ்குதலும், புரோக்ஷித்துக்கொண்டு உட்கொள்ளுதலுமாம். இவற்றுள் முந்தியநான்கும் நித்தியமெனவும் பிந்தியநான்கும் நைமித்திகமெனவும் பெயர்பெறும். இவை சைவபூஷணத்துக்கண்டன. (அ)

திருமஞ்சனமுங்கொணர்ந்துதிருவலகுமிட்டுத்திருமெழுக்கு
வருமன்புடனின்புறச்சாத்திமற்றுமுள்ளதிருப்பணிகள்
பெருமைபிறங்கச்செய்தமைத்துப்பேணும்விருப்பிற்றிருப்பாட்டு
மொருமைநெறியினுணர்வுவரவோதிப்பணிந்தேயொழுகுநாள்.

(இ-ள்.) திருமஞ்சனமுங் கொணர்ந்து திருவலகுமிட்டு= திருமஞ்சனத்தையுங்கொண்டுவந்து திருவலகுமிட்டு; வருமன்புடனின்புறத்திருமெழுக்குச்சாத்தி= வளருகின்ற அன்போடு இன்பமலியத் திருமெழுக்குமிட்டு; பெருமைபிறங்கமற்றுமுள்ள திருப்பணிகள்செய்தமைத்து= பெருமை மிகும்படி மற்றைத்திருப்பணிகளையும்

செய்துமுடித்து; பேணும்விருப்பி னொருமைநெறியினுணர்வுவர = உரிமையாகக் கொண்ட விருப்பத்தோடும் ஒற்றுமைப்பட்ட ஒழுக்கத்தால் அறிவுமுதிர்தலின்; திருப்பாட்டுமோதிப்பணிந்தேயொழுகுநாள் = திருப்பாடல்களாலும் துதித்துவணங்கி ஒழுகுங்காலத்தில்.—எ-று.

அரசுரிமையையகன்று அமலர்திருத்தொண்டை மேற்கொண்டமையாற் பெரிதும் பெருமைபெற்றனரென்பார் "பெருமைபிறங்கச்செய்து" என்றும், ஒற்றுமைப்பட்ட ஒழுக்கமே உண்மைஞானத்திற்கேதுவென்பார் "ஒருமைநெறியினுணர்வுவர" என்றும் கூறினார். வர - வினையெச்சத்திரிபு. (கூ)

நீரின்மலிந்தகடலகழிநெடுமால்வரையின்கொடிமதில்சூழ்
சீரின்மலிந்ததிருநகரமதனிற்செங்கோற்பொறையனெனுங்
காரின்மலிந்தகொடைநிழன்மேற்கவிக்குங்கொற்றக்குடைநிழற்கீழ்த்
தாரின்மலிந்தபுயத்தரசன்றரணிநீத்துத்தவஞ்சார்ந்தான்.

(இ-ள்.) நீரின்மலிந்த கடலகழி = நீர்நிரம்பியகடல்போலும் (நெடிய) அகழியும்; நெடுமால்வரையின் கொடிமதில்சூழ் = பெருமைபெற்ற சக்கரவாளகிரிபோலக் கொடிநாட்டப்பட்ட பெரியமதில்களும் சூழ்ந்த; சீரின்மலிந்ததிருநகரமதனில் = சிறப்பின்மிக்க அத்திருநகரத்தின்கண்ணே; நிழன்மேற்கவிக்குங் கொற்றக்குடைநிழற்கீழ் = மேலேநிழலைப்பரப்பும் வெண்கொற்றக்குடை நீழலிலே; காரின்மலிந்த கொடைத்தாரின்மலிந்தபுயத்து = மேகத்தின்மிக்க கொடையையும் மாலையாற்சிறந்த புயங்களையும் வாய்ந்த; செங்கோற்பொறையனெனுமரசன் = செங்கோற்பொறையனெனப்பெயர்பெற்ற அரசன்; தரணிநீத்துத் தவஞ்சார்ந்தான் = இவ்வுலகவாஞ்சையையொழித்துத் தவத்தையடைந்தான்.—எ-று.

இந்நகரம் மேலைச்சமுத்திரதீரமாகிய மலைநாட்டதாகலின் கடலாகியஅகழியையும் மலையாகியமதிலையும் வாய்ந்தநகரென்னலும் ஒன்று. செங்கோற்பொறையன் செங்கோலைப் பொறுத்தவன். எனவே, செங்கோல் எவர்க்கும்பொதுவாகாது தமக்கேசிறப்பாகக்கொண்டு உலகமுழுதும்புரந்தவன் என்பதுகருத்து. (கo)

வந்தமரபினரசளிப்பான்வனஞ்சார்தவத்தின்மருவியபின்
சிந்தைமதிநூறேரமைச்சர்சிலநாளாய்ந்துதெளிந்தநெறி
முந்தைமரபின்முதல்வர்திருத்தொண்டுமுயல்வார்முதற்றாக
விந்துமுடியார்திருவஞ்சைக்களத்திலவர்பாலெய்தினார்.

(இ-ள்.) வந்தமரபினரசளிப்பான் = அச்சேரமரபிலுதித்தவனாய் அரசளித்தஅவ்வரசன்; வனஞ்சார்தவத்தின் மருவியபின் = வானப்பிரத்தனாய்ச்சென்றபின்; சிந்தைமதிநூறேரமைச்சர் = இயற்கையாகிய மனவுணர்ச்சியோடு நூலுணர்ச்சியையுமுடைய மந்திரிகள்; சிலநாளாய்ந்துதெளிந்தநெறி = சிலதினம் ஆராய்ந்துதெளிந்தவழி; முதல்வர்திருத்தொண்டுமுயல்வார் = சிவபெருமான் திருத்தொண்டிலே முயல்வாராகிய அந்நாயனாரே; முந்தைமரபின்முதற்றாக = முதன்மையாகிய அம்மரபிற்குரிய முதல்வராகப்புலப்பட; இந்துமுடியார் = இளம்பிறையணிந்த திருமுடியையுடைய அவ்விறைவரது; திருவஞ்சைக்களத்திலவர்பாலெய்தினார் = திருவஞ்சைக்களத்திலே அவர்பாற் சேர்ந்தார்.—எ-று.

முதலாகவென்பது உச்சாரியைபெற்று முதற்றாகவென நின்றது. (கக)

எய்தியவர்தமெதிரிறைஞ்சியிருந்தண்சாரன்மலைநாட்டுச்
செய்திமுறைமையாலுரிமைச்செங்கோலரசுபுரிவதற்கு
மைதீர்நெறியின்முடிசூடியருளுமரபால்வந்ததெனப்
பொய்தீர்வாய்மைமந்திரிகள்போற்றிப்புகன்றபொழுதின்கண்.

(இ-ள்.) பொய்தீர்வாய்மைமந்திரிகள் = அசத்தியத்தினீங்கிய சத்தியநிலைமையுடைய மந்திரிமார்கள்; அவர்தமெதிரெய்தியிறைஞ்சி = அந்நாயனார்முன்னர் அடைந்துபணிந்து; இருந்தண்சாரன்மலைநாட்டுச்செய்திமுறைமையால் = வளமையோடு குளிர்ச்சியும் சாரல்களும்வாய்ந்த மலைநாட்டுக்குரிய செய்கையின் முறைப்படி; செங்கோலரசுரிமைபுரிவதற்கு = செங்கோலையுடைய அரசுரிமையைச் செய்தற்கு; மைதீர்நெறியின்முடிசூடி = குற்றமற்றநெறிப்படி தேவரீர் முடிசூடிக்கொண்டு; அருளுமரபால்வந்ததென = (உயிர்களைக்) காத்தருளு முறைமையின்பொருட்டு (யாங்களெல்லாம்) வந்ததென்று; போற்றிப்புகன்ற பொழுதின்கண் = பணிந்து கூறியதருணத்தில்.—எ-று.

நீதிகள் அந்தந்தநாட்டுக்கியையச் சில வேறுபடுதலுளவாகலின் "மலைநாட்டுச்செய்திமுறைமையா லரசுபுரிவதற்கு" என்றார். மரபால் வேற்றுமைமயக்கம். (௬௨)

இன்பம்பெருகுந்திருத்தொண்டுக்கிடையூறாகவிவர்மொழிந்தா
ரன்புநிலைமெய்வழுவாமையரசுபுரக்குமருளுண்டே
லென்புமரவும்புனைந்தாரையிடைபெற்றறிவேனெனப்புக்கு
முன்புதொழுதுவிண்ணப்பஞ்செய்தார்முதல்வரருளினால்.

(இ-ள்.) இன்பம்பெருகுந் திருத்தொண்டுக் கிடையூறாக விவர்மொழிந்தார் = இன்பத்தைவிளைக்கும் இறைவர்திருத்தொண்டுக்குத் தடையாக இவர் இதனைக்கூறினார்; மெய்யன்புநிலைவழுவாமை யரசுபுரக்குமருளுண்டேல் = உண்மையாகிய பத்தியினுறுதிமாறாமல் அரசைச்செலுத்தும் திருவருளளிப்பதாயின்; என்புமரவும்புனைந்தாரை = எலும்பையும் பாம்பையுமணிந்த எம்பெருமான்பால்; இடைபெற்றறிவேனெனப்புக்கு = விண்ணப்பிக்கும் சமயம்வாய்க்கப்பெற்றுத் திருவுளப்பாங்கறிவேனென்றுசென்று; முன்புதொழுது விண்ணப்பஞ்செய்தார் = முன்னேபணிந்து விண்ணப்பஞ்செய்தார்; முதல்வரருளினால் = அம்முதற்கடவுளின் திருவருளால்.—எ-று.

அரசுரிமையை மேற்கொளின் அநவரதமும் அரியதொண்டுகளியற்றற்கு அருமையால் "தொண்டுக்கிடையூறாக விவர்மொழிந்தார்" என்றும், அன்புவழுவாது அரசுபுரியப் பெருமான்திருவருள்வழங்கின் அங்கீகரிக்கலாமென்பார் "அருளுண்டேலறிவேன்" என்றும் குறித்தாரென்க. புனைந்தாரை வேற்றுமைமயக்கம். இடை-சமயம். (௬௩)

மேவுமுரிமையரசளித்தேவிரும்புகாதல்வழிபாடும்
யாவும்யாருங்கழறினவுமறியுமுணர்வுமீறில்லாத்
தாவில்விறலுந்தண்டாதகொடையும்படைவாகனமுதலாங்
காவன்மன்னர்க்குரியனவுமெல்லாங்கைவந்துறப்பெற்றார்.

(இ-ள்.) உரிமைமேவுமரசளித்தே = தமக்குரிமைவாய்ந்த அரசைச்செலுத்திக்கொண்டே; விரும்புகாதல்வழிபாடும் = தம்பெருமானை விரும்பிய அன்போடுவழிபடுதலும்; யாரும்யாவுங்கழறினவுமறியுமுணர்வும் = மனிதர்தேவர்நரகராகிய உய

ர்திணையும் ஏனையுயிர்களாகிய அஃறிணையும் கூறியவார்த்தைகளை அறியுமுணர்ச்சியு. ம்; ஈறில்லாத்தாவில்விறலும் = அளவுபடாததாய் அழிதலுமில்லாதவெற்றியும்; தண் டாதகொடையும்=நீக்கமில்லாத ஈகையும்; படைவாகனமுதலாங்காவன்மன்னர்க்கு ரியனவும் = ஆயுதம் வாகனமுதலாகிய அரசர்க்குரிய அரும்பொருள்களும்; கைவர அறப்பெற்றார் = எதிர்வரப்பெற்றார்.—எ-று.

யாரும்யாவுங்கழறினவற்றைத் தமதுதானத்திலிருந்துகொண்டே அறிதற்றன் மையடைந்தமையால் கழறிற்றறிவாரெனப் பெயர்பெற்றனர். கழறல் பேசலேயாயி னும் ஈண்டு மனத்தோடு உசாவலின்மேற்று. இதனைப் பின்னர் "அளவில்பெருமைய இலயோனிகளுங்கழறிற்றறிந்தவற்றி - னுளமன்னியமெய்யுறுதுயர மொன்றுமொழி யாவகையகற்றி" எனவருதலானுமுணர்க. (௧௪)

ஆனவருள்கொண்டஞ்சலிசெய்திறைஞ்சிப்புறம்போந்தரசளித்தா
லூனமாகுந்திருத்தொண்டுக்கெனினுமுடையானருளாலே
மேன்மைமகுடந்தாங்குதற்குவேண்டுமமைச்சர்க்குடன்படலு
மானவமைச்சர்தாள்பணிந்தவ்வினைமேற்கொண்டுமகிழ்ந்தெழுந்தார்.

(இ-ள்.) ஆனவருள்கொண்டஞ்சலிசெய்திறைஞ்சிப் புறம்போந்து=இங்ஙன ம்பாலித்த திருவருளையேற்றுக்கொண்டு கரங்குவித்துவணங்கி வெளியேவந்து; அர சளித்தாற்றிருத்தொண்டுக் கூனமாகுமெனினும் = அரசைமேற்கொள்ளின் அரியதி ருத்தொண்டுகளுக்கு இடையூறு அணுகுமாயினும்; உடையானருளாலே மேன்மைம குடந்தாங்குதற்கு வேண்டுமமைச்சர்க்குடன்படலும் = சிவபிரான் திருவருளினாலே சிறந்ததிருமுடிபுனைதற்குப் பிரார்த்திக்கும் மந்திரிமார்க்கு உடன்படுதலும்; மானவ மைச்சர்தாள்பணிந்து = மாட்சிமைபபட்ட அம்மந்திரிமார் அவர்பாதங்களைவணங்கி; அவ்வினைமேற்கொண்டு மகிழ்ந்தெழுந்தார்=அத்தொழிலைமேற்கொண்டு களித்துச் செல்வாராயினார்.—எ-று.

அருளாலே உடன்படலுமென இயையும். (௧௫)

உரிமைநாளிலோரைநலனெய்தமிக்கவுபகரணம்
பெருமைசிறக்கவேண்டுவனவெல்லாம்பிறங்கமங்கலஞ்செய்
திருமையுலகுக்கொருமைமுடிகவித்தாரெல்லாவுயிருமகிழ்
தருமநிலைமையறிந்துபுவிதாங்குகழறிற்றறிவார்தாம்.

(இ-ள்.) உரிமைநாளி லோரைநலனெய்த = உரிமைபெற்றதினத்திலே இலக் கினப்பொருத்தமும் ஒருங்குஅமைய; மிக்கவுபகரணம் பெருமைசிறக்கவேண்டுவன வெல்லாம்பிறங்க=மேம்பட்ட உபகரணங்களால் மேன்மைமிகச் செய்யவேண்டும் இசயல்களெல்லாம் நடக்க; மங்கலஞ்செய்திருமையுலகுக்கொருமை முடிகவித்தார்= நாயனாரைஅலங்கரித்துச் சித்தும் அசித்துமாகிய பிரபஞ்சத்திற்கு ஒற்றுமைப்பட்ட திருமுடியைச்சூட்டினார்; எல்லாவுயிருமகிழ்தருமநிலைமையறிந்து=எவ்வுயிர்களும் மகி ழ்தற்கு ஏதுவாகிய நீதியினியல்பையுணர்ந்து; புவிதாங்குங்கழறிற்றறிவார்=இப்பூபா ரந்தாங்குங் கழறிற்றறிவார்நாயனார்.—எ-று.

உபகரணம் என்புழி மூன்றனுருபு விரிக்க. யாரும் யாவுங் கழறிற்றறிந்து ஆளுதலின் "இருமையுலகுக்கொருமைமுடி" என்றார். * "மறத்திற்குமஃதேதுணை"

* திருக்குறள் - ௭௬. அறத்திற்கே.



சேரமான்பெருமான் பவனிவர, ஏகாலி உவர்ப்பொதி தாங்கிவர, மழையினாற் கரைந்த விபூதி முழுதுமணிந்த சிவனடியார்போற் றோன்ற, நாயனார் நமஸ்கரிக்கவே வண்ணான் முன் வணங்கி அடிவண்ணானென நாயனார் அடிச்சேரனென்றது.

என்பதில் நீக்குதலென்னுந் தொழிற்பெயர் எஞ்சிநின்றாற்போல, உலகுக்கென்பதில் ஆளுதலென்பது எஞ்சிநின்றதெனக்கொள்ளலும் ஒன்று. இங்ஙனம் நடுவே ஒருசொற்பெய்து பொருளுரைத்துத் தமாத்புமெனக்கொள்கவென்றார் பிரயோகவிவேகநூலாரும். மகிழ் எதுப்பொருள் விரியநின்ற வினைத்தொகை. மகிழ்தருமமெனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார். கழறிற்றறிவாரென்பது பிறசெய்யுளில்வருங் கொண்டென்பதனோடு முடிவுறும். தாம்-அசை. (௧௬)

தம்பிரானார்கோயில்வலங்கொண்டுதிருமுன்றாழ்ந்தெழுந்து
கும்பயானைமேல்கொண்டுகொற்றக்குடையுஞ்சாமரையு
நம்புமுரிமையவர்தாங்கநலங்கொணகர்சூழ்வலங்கொள்வார்
மொய்ம்பிலுவரின்பொதிசுமந்தோர்வண்ணான்முன்னேவரக்கண்டார்.

(இ-ள்.) தம்பிரானார்கோயில்வலங்கொண்டுதிருமுன்றாழ்ந்தெழுந்து=சிவபெருமான் திருக்கோயிலை வலம்வந்து சந்நிதிமுன்னர் வணங்கி எழுந்து; கும்பயானைமேல்கொண்டு=மத்தகத்தையுடைய யானையில் ஆரோகணித்து; கொற்றக்குடையும் சாமரையும் = வெண்கொற்றக்குடையையும் சாமரைகளையும்; நம்புமுரிமையவர்தாங்க = விரும்பும் உரிமையவர் ஏந்திவர; நலங்கொணகர்சூழ்வலங்கொள்வார் = மங்கலம்வாய்ந்த நகர்ப்புறத்திலே வலம்வருவாராயினார்; ஓர்வண்ணான்மொய்ம்பிலுவரின் பொதிசுமந்துமுன்னேவரக்கண்டார் = (அங்ஙனம் வருபவர்) ஒருவண்ணான் தோளில் உவர்மண்மூட்டை சுமந்துகொண்டு எதிரேவர நோக்கினார்.—எ-று.

சூழ் - புறம். (௧௭)

மழையிற்கலாந்தவுவருறிமேனிவெளுத்தவடிவினா
லுழையிற்பொலிந்ததிருக்கரத்தாரடியார்வேடமென்றுணர்ந்தே
யிழையிற்சிறந்தவோடைநுதல்யானைக்கழுத்தினின்றிழிந்து
விழைவிற்பெருகுங்காதலினால்விரைந்துசென்றுகைதொழுதார்.

(இ-ள்.) மழையிற்கலாந்தவுவருறிமேனிவெளுத்தவடிவினால்=மழையினாலே கரைவுற்று உவர்மண்படிந்து உடல்வெளுத்த வுருவத்தால். உழையிற்பொலிந்ததிருக்கரத்தார்=மானாற்சிறந்த திருக்கரத்தையுடைய சிவபெருமானது; அடியார்வேடமென்றுணர்ந்து=திருத்தொண்டர் திருவேடமெனச் சிந்தித்து; இழையிற்சிறந்தவோடைநுதல்=ஆபரணங்களிற் சிறந்த முகபடாமணிந்த நெற்றியையுடைய; யானைக்கழுத்தினின்றிழிந்து = யானைப்பிடரினின்றும் இறங்கி; விழைவிற்பெருகுங் காதலினால் = விருப்பத்தோடு விளையும் அன்பினால்; விரைந்துசென்றுகைதொழுதார் = விரைவாகப்போய்க் கரங்குவித்து வணங்கினார். —எ-று.

அங்கு-ஏ-அசைகள். (௧௮)

சேரர்பெருமான்றொழக்கண்டுசிந்தைகலங்கிமுன்வணங்கி
யாரென்றடியேனைக்கொண்டதடியேனடிவண்ணானென்னச்
சேரர்பிரானுமடிச்சேரனடியேனென்றுதிருநீற்றின்
வாரவேடநினைப்பித்தீர்வருந்தாதேகுமெனமொழிந்தார்.

(இ-ள்.) சேரர்பெருமான்றொழக்கண்டு=சேரகுலாதிபர் வணங்கநோக்கி; சிந்தைகலங்கிமுன்வணங்கி=(அவ்வண்ணான்) மனக்கலக்கமுற்று எதிரேவணங்கி; அடி

யேனையாரென்றுகொண்டது=அடியேனை யாரென்று கருதியது; அடியேனடிவண்ணனென்ன=அடியேன் அடித்தொண்டுபுரியும் வண்ணனென்று விண்ணப்பிக்க; சேரர்பிரானுமடிச்சேரனடியேனென்று=அச்சேரகுலாதிபரும் அடியேன் அடித்தொண்டுபுரியும் சேரனென்று கூறி; திருநீற்றின்வாரவேடநினைப்பித்தீர்=திருநீற்றின் உரியவேடத்தை இப்பொழுது சிந்திக்கச் செய்தீர்; வருந்தாதேகுமெனமொழிந்தார்=வருத்தமுறாது செல்லுமெனச் செப்பினார்.—எ-று. (௧௯)

மன்னர்பெருமான்திருத்தொண்டுகண்டுமதிநீடமைச்சரொலாஞ்
சென்னிமிசையஞ்சலிசெய்துபோற்றச்சினமால்களிறேறி
மின்னுமணிப்பூண்கொடிமாடவீதிமூதூர்வலங்கொண்டு
பொன்னின்மணிமாளிகைவாயில்புக்கார்புனைமங்கலம்பொலிய.

(இ-ள்.) மதிநீடமைச்சரொலாம்=அறிவின்மிக்க மந்திரிமார்களெல்லாம்; மன்னர்பெருமான்திருத்தொண்டுகண்டு=அரசர்க்கரசராகிய அந்நாயனாரது திருத்தொண்டைநோக்கி; சென்னிமிசையஞ்சலிசெய்துபோற்ற=சிரமேற் கரங்குவித்து வணங்க; சினமால்களிறேறி=கோபமிக்க பெருமைவாய்ந்த யானைமேற்கொண்டு; மின்னுமணிப்பூண்கொடிமாடம்=பிரகாசிக்கும் இரத்தினக்கோவைகளையுடைய கொடிநாட்டிய மாடங்கள் நெருங்கிய; வீதிமூதூர்வலங்கொண்டு=வீதிகளையுடைய வியன் நகரை வலங்கொண்டு; புனைமங்கலம்பொலிய=அலங்கரிக்கப்பட்ட அட்டமங்கலம் ஏந்த; பொன்னின்மணிமாளிகைவாயில்புக்கார்=பொன்னாலும் மணியாலும் பொலிந்த அரண்மனைவாயில் அணுகினார்.—எ-று.

அஷ்டமங்கலமாவன - கண்ணாடி, இடபம், தீபம், ஸ்ரீவற்சம், சாமரம், வலம்புரி, சுவஸ்திகம், பூரணகும்பம் என்பன. இவற்றுள், இடபம் ஸ்ரீவற்சம் வலம்புரி சுவஸ்திகம் என்பவற்றை நீக்கி, கொடி, முரசு, மணி அல்லது இணைக்கயல், அங்குசம் என்பவற்றைக்கொள்ளலும், இவ்விருவகை மங்கலங்களையும் தனித்தனி ஒருங்கேந்துதலும் உண்டு: ஒருங்கேந்துதலைக் சந்தபுராணம் திருக்கலியாணப்படலத்தில் "இருவகைப்படுமெண்வகைமங்கலப் - பொருண்மைமுற்றவும்பூவையர்பற்பல - வரிசையிற்கொடுவந்தெதிரெய்தினா - ரரியயற்கரிதாகியவண்ணன்முன்." என்பதனானுமுணர்க. ஸ்ரீவற்சம்-பெண்குழந்தையை இடையில் வைத்திருக்கும் ஒருபெண்வடிவம். சுவஸ்திகம் மண்டபவடிவம்; அல்லது மேழிவடிவம். (௨௦)

யானைமிசைநின்றிழிந்தருளியிலங்குமணிமண்டபத்தின்கண்
மேன்மையரியாசனத்தேறிவிளங்குங்கொற்றக்குடைநிழற்றப்
பானல்விழியார்சாமரைமுன்பணிமாறப்பன்மலர்தூவி
மானவரசர்போற்றவீற்றிருந்தார்மன்னர்பெருமானார்.

(இ-ள்.) யானைமிசைநின்றிழிந்தருளி=யானையினின்றும் இறங்கியருளி; இலங்குமணிமண்டபத்தின்கண்=ஒளிவிளங்கும் மணிகளாலாகிய கொலுமண்டபத்திலே; மேன்மையரியாசனத்தேறி=சிறந்த சிங்காதனத்திலேறி; விளங்குங்கொற்றக்குடைநிழற்ற=பிரகாசிக்கும் வெண்கொற்றக்குடை நிழலைவிளைக்கவும்; பானல்விழியார்சாமரைமுன்பணிமாற=கருங்குவளைபோலுங் கண்களையுடைய பெண்கள் எதிரே சாமரை வீசவும்; மானவரசர்பன்மலர்தூவிப்போற்ற=மாட்சிமைப்பட்ட மன்னவர் பல மலர்களைத்தூவிப் பணியவும்; மன்னர்பெருமானார்வீற்றிருந்தார்=சேரமான்பெருமாணயனார் சிறப்பமர்ந்திருந்தார்.—எ-று. மிசை - ஏழனுருபு. (௨௧)

உலகுபுரக்குங்கொடைவளவருரிமைச்செழியருடன்கூட
நிலவுபெருமுக்கோக்களாய்நீதிமனுநூனெறிநடத்தி
யலகிலரசர்திறைகொணரவகத்தும்புறத்தும்பகையறுத்து
மலருந்திருநீற்றொளிவளர மறைகள்வளரமண்ணளிப்பார்.

(இ-ள்.) உலகுபுரக்குங்கொடைவளவர்=உலகைக்காக்கும் கொடையின் மிக்கசோழரும்; உரிமைச்செழியருடன்கூட=உரிமைபெற்ற பாண்டியரும் தம்மொடு நட்புப்பேண; நிலவுபெருமுக்கோக்களாய்=விளங்கும் பெருமைபெற்ற மூவேந்தர்களாய்; நீதிமனுநூனெறிநடத்தி=மனுநூலிற்கூறிய நீதிநெறிகளை நடாத்தி; அலகிலரசர்திறைகொணர=அளவுபடாத பலதேசத்து அரசரும் திறைகொண்டுவந்து அளக்க; அகத்தும்புறத்தும்பகையறுத்து= உள்ளும்புறம்பும் பகைகளை ஒருங்குகளைந்து ; மலருந்திருநீற்றொளிவளர=விரிந்தவிபூதிப்பிரகாசம் எங்கும்விர்த்திக்க; மறைகள்வளர =வேதமார்க்கம் எங்கும்பரவ; மண்ணளிப்பார்= உலகைக் காப்பாராயினார்.—எ-று.

அகப்பகை - காமாதி யறுவகைக்குற்றங்கள். அன்றி, வெளிப்படுதலில்லாத உட்பகையினையென்னலும் ஒன்று. புறப்பகை-சத்துருக்கள். அறுத்தலாவது - அப்பகை நிகழா நிலைமையி னொழுகல். (உ௪.)

நீடுமுரிமைப்பேரரசாணிகழும்பயனுநிறைதவமுந்
தேடும்பொருளும்பெருந்துணையுந்தில்லைத்திருச்சிற்றம்பலத்து
ளாடுங்கழலேயெனத்தெளிந்தவறிவாலெடுத்ததிருப்பாதங்
கூடுமன்பிலர்ச்சனைமேற்கொண்டார்சேரர்குலப்பெருமாள்.

(இ-ள்.) சேரர்குலப்பெருமாள் = சேரமான்பெருமாணாயனார்; நீடுமுரிமைப்பேரரசாணிகழும்பயனும் = மிக்கவுரிமைபெற்ற பெரியஅரசினால் விளையும்பேறும்; நிறைதவமும் = நிறைந்ததவமும்; தேடும்பொருளும் = தேடப்படுந்திரவியமும்; பெருந்துணையும்=சிறந்தபற்றுக்கோடாயுள்ளனவும்; தில்லைத்திருச்சிற்றம்பலத்துள்=தில்லையிலுள்ள சிற்சபையின்கண்ணே; ஆடுங்கழலேயெனத்தெளிந்தவறிவால்=நடிக்குந்திருவடிகளேயென்றுதெளிந்த நல்லுணர்ச்சியால்; எடுத்ததிருப்பாதங்கூடுமன்பினர்ச்சனைமேற்கொண்டார் = குஞ்சிதமாகத்தூக்கிய திருவடிகளை அடைதற்கேதுவாகிய அன்பினால் வழிபடுதலைமேற்கொண்டார்.—எ-று.

அரசாலுந் தவத்தாலும் பொருளாலுந் துணையாலும் பெறும்பயன் திருவடிப்பேறேயென்பார் "ஆடுங்கழலே" என்றும், இங்ஙனங்கொண்டது மயக்கவுணர்வன்றென்பார் "தெளிந்தவறிவால்" என்றும், அத்திருவடியர்ச்சனையே எவையுஞ்சித்தித்தற்கு ஏதுவெனப்பூண்டனரென்பார் "அர்ச்சனைமேற்கொண்டார்" என்றும் கூறினார். திருவடிஞானமே எவையுஞ்சித்தித்தற்கு ஏதுவென்பதை "திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்குந் - திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்குந் - திருவடி ஞானஞ் சிறைமல மீட்குந் - திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே." என்னும் திருமந்திரத்தானுமுணர்க. ஏகாரம் - தேற்றம். (உரு)

வாசத்திருமஞ்சனம்பள்ளித்தாமஞ்சாந்தமணித்தூபந்
தேசிற்பெருகுஞ்செழுந்தீபமுதலாயினவுந்திருவமுது
மீசர்க்கேற்றபரிசினாலருச்சித்தருளவெந்நாளும்
பூசைக்கமைந்தபெருங்கூத்தர்பொற்பார்சிலம்பினொலியளித்தார்.

(இ-ள்.) வாசத்திருமஞ்சனம் = மணம் ஊட்டியதிருமஞ்சனமும்; பள்ளித் தாமஞ்சாந்தமணித்தூபம் = திருமாலையும் சந்தனமும் செவ்வியதூபமும்; தேசிற் பெருகுஞ்செழுந்தீபமுதலாயினவும் = ஒளிவிட்டுவிளங்கும் செழித்ததீபமும் முதலிய உபகரணங்களும்; திருவமுதும் = நிவேதனமுங் (கொண்டு); ஈசர்க்கேற்றபரிசினலருச்சித்தருள = சிவபெருமானுக்கு இயைந்த சிவாகமவிதிப்படி தினமும் பூசித்துவர; பூசைக்கமர்ந்த பெருங்கூத்தர் = அந்நாயனார்பூசைக்கு விருப்பங்கொண்டநடேசப்பெருமான்; பொற்பார்சிலம்பினொலி யெந்நாளுமளித்தார் = அழகுமிக்க சிலம்பினொலியைத் தினமும் (பரிசிலாக) அளித்தார்.—எ-று.

வாசமாவன-திருமஞ்சனப்புல் வெட்டிவேர் முதலியன. சிற்சபேசர் இந்நாயனார் பூசையிற் றிருவுளமகிழ்ந்து அதற்குப்பரிசிலாகத் தினமும் திருநடம்புரிதலை அவர்க்குச் செவியறிவுறுத்துவார் சிலம்பொலியளித்தார் என்பதுகருத்து. (உச)

நம்பர்தாளின்வழிபாட்டானாளுமின்புற்றமர்கின்று
ரிம்பருலகிலிரவலர்க்கும்வறியோரெவர்க்குமீகையினாற்
செம்பொன்மழையாமெனப்பொழிந்துதிருந்துவென்றியுடன்பொருந்தி
யும்பர்போற்றத்தம்பெருமாற்குரியவேள்விபலசெய்தார்.

(இ-ள்.) நம்பர்தாளின்வழிபாட்டா னாளுமின்புற்றமர்கின்றார் = சிவபெருமான்திருவடித்தொண்டினால் தினமும் இன்பமுற்றுறையும் அந்நாயனார்; இம்பருலகிலிரவலர்க்கும் வறியோரெவர்க்கும் = இவ்வுலகிலே யாசகருக்கும் எவ்வகைத்தரித்திரர்களுக்கும்; ஈகையினாற்செம்பொன்மழையெனப்பொழிந்து = கொடையினாலே செவ்வியபொன்னை மழையெனச்சொரிந்து; திருந்துவென்றியுடன்பொருந்தி = திருத்தம் மிக்க வெற்றியோடும் அமர்ந்து; தம்பெருமாற்குரியவேள்விபல = தமது தலைவராகிய சிவபெருமானுக்குரிய யாகங்கள்பலவற்றை; உம்பர்போற்றச் செய்தார் = தேவர்கள்புகழும்படி செய்துமுடித்தார்.—எ-று.

ஆம்-அசை. பொன்மழைபொழியுங் கொண்டலைநிகர்ப்பக் கைம்மாறுகருதாது பொன்னைச்சொரிந்தார் என்றபடி. (உரு)

இன்னவண்ணமிவரொழுகவெழில்கொள்பாண்டிநன்னாட்டு
மன்னுமதுரைத்திருவாலவாயிலிறைவர்வருமன்பாற்
பன்னுமிசைப்பாடலிற்பரவும்பாணனார்பத்திரனார்க்கு
நன்மைநீடுபெருஞ்செல்வநல்கவேண்டியருள்புரிவார்.

(இ-ள்.) இன்னவண்ணமிவரொழுக = இவ்வாறு இவர்நடக்க; எழில்கொள் பாண்டிநன்னாட்டு = அழகுவாய்ந்த பாண்டிவளநாட்டிலே; மன்னுமதுரைத் திருவாலவாயிலிறைவர் = நிலைபெற்ற மதுரையெனப்படும் திருவாலவாயிலமரும் சிவபிரான்; வருமன்பாற் பன்னுமிசைப்பாடலிற்பரவும் பாணனார்பத்திரனார்க்கு = சிறந்த அன்பினாலே சீர்த்திபெற்ற இசைப்பாவாற்றுதிக்கும் பாணபத்திரருக்கு; நன்மை நீடுபெருஞ்செல்வ நல்கவேண்டி யருள்புரிவார் = அறத்தின்வழியீட்டிய அரியசெல்வத்தைத் தந்தருளவேண்டித் திருவருள்புரிவார்.—எ-று. (உசு)

இரவுகனவிலெழுந்தருளியன்பாலன்பாலெப்பொழுதும்
பரவுசேரன்றனக்குனக்குப்பைம்பொன்காணம்பட்டாடை
விரவுகதிர்செய்நவமணிப்பூண்வேண்டிற்றெல்லாங்குறைவின்றித்
தரநம்மோலைதருகின்றோந்தாழாதேகிவருகென்று.



சொக்கலிங்கப்பெருமானைத்தொழும் பாணபத்திரர் வறுமை நீங்கச் சேரமானுக்குத் திருமுகங்கொடுக்க, அதைத் தொழு

(இ-ள்.) இரவுகனவிலெழுந்தருளி = இரவிலே அவர்சொப்பனத்தில் எழுந்தருளி; பைம்பொன்காணம்பட்டாடை = பொற்காசுகளும் பட்டாடைகளும்; விரவுகதிர்செய் நவமணிப்பூண்வேண்டிறதெல்லாம் = பொலிந்தகாந்தியைப் பரப்பும் நவரத்தினாபரணங்களும் மற்றும்வேண்டியவைகளும்; குறைவின்றியுனக்குத்தர = குறைவில்லாமல் நினக்குக்கொடுத்தற்பொருட்டு; என்பாலன்பாலெப்பொழுதும் பரவுசேரன்றனக்கு = எம்மிடத்துவைத்த அன்பினால் எக்காலமும் எம்மைவழிபடுகின்ற சேரமானுக்கு; நம்மோலைதருகின்றோம் = நமது திருமுகமொன்று நல்குகின்றோம்; தாழாதேகிவருகென்று = தாமதியாமற்சென்று வரக்கடவாயென்று கட்டளையிட்டு.—எ-று. (உஎ)

வேறு.

அதிர்கழலுதியர்வேந்தர்க்கருள்செய்தபெருமையாலே
யெதிரில்செல்வத்துக்கேற்றவிருநிதிகொடுக்கவென்று
மதிமலிபுரிசையென்னும்வாசகம்வரைந்தவாய்மை
கதிரொளிவிரிந்தவோட்டுத்திருமுகங்கொடுத்தார்காண.

(இ-ள்.) அதிர்கழலுதியர்வேந்தர்க்கு = ஒலிக்கின்றவீரக்கழலையணிந்த சேரமான்பெருமாணாயனாருக்கு; அருள்செய்தபெருமையாலே = திருவருள்பாலித்துள்ளசிறப்பால்; எதிரில்செல்வத்திற்கேற்ற விருநிதிகொடுக்கவென்று = நிகரில்லாதவனது செல்வத்திற்குத்தக்கபடி பெரியதிரவியம் அளிப்பாயாக என்று; மதிமலிபுரிசையென்னும் வாய்மைவாசகம்வரைந்த = "மதிமலிபுரிசை" என்கின்ற உண்மைப்பாசுரத்தை எழுதிய; கதிரொளிவிரிந்த வோட்டுத்திருமுகங்காண கொடுத்தார் = பிரகாசிக்கின்ற ஒளிபரம்பிய இதழாலமைந்த திருமுகத்தைப் பிரத்தியக்ஷமாகத்தந்தார்.—எ-று.

இந்நாயனார்பால்வைத்த திருவருட்சிறப்பால் இத்திருமுகப்பாசுரத்தை ஏனையோர்க்கருளாது இவர்க்கேவிடுத்தருளினாரென்பார் "அருள்செய்தபெருமையாலேகொடுத்தார்" என்றும், இத்திருமுகத்தில் வரைந்தமைமுற்றும் உண்மையேயென்பார் "வாய்மைவாசகம்" என்றும் கூறினார். இந்நாயனார் இத்திருமுகப்பாசுரமேற்றுப் பாணபத்திரருக்குத் திரவியமளித்தமை மாணிக்கவாசகசுவாமிகள் முதலிய மூவர்காலத்திற்கும் முந்தியென்பது திருவிளையாடற் புராணத்தினும், சுந்தரமூர்த்திநாயனாருக்குத் தோழராயினமை அம்மூவருக்கும் பிந்தியகாலத்தென்பது இப்புராணத்தினும் பெறப்படுதலின், உற்றுநோக்குங்கால இவர் சிவகிருபையால் நீண்ட ஆயுளையுடையராய் நெடுங்காலமிருந்து இந்நிலவுலகைப் புரந்தவரெனப் புலப்படுகின்றது. (உஅ)

---

## சோமசுந்தரக்கடவுள் அருளிய திருமுகப்பாசுரம்.

திருச்சிற்றம்பலம்,

மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிற
கன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யா மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்

குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
றன்போ லென்பா லன்பன் றன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

திருச்சிற்றம்பலம்.

---

சங்கப்புலவர்திருமுகந்தந்தலைமேற்கொண்டுபத்திரனா
ரங்கப்பொழுதேபுறப்பட்டுமலைநாடணையவந்தெய்தித்
துங்கப்புரிசைக்கொடுங்கோளூர்தன்னிற்புகுந்துதுன்னுகொடி
மங்குற்றொடக்குமாளிகைமுன்வந்துமன்னர்க்கறிவித்தார்.

(இ-ள்.) சங்கப்புலவர் திருமுகம் பத்திரனார் தந்தலைமேற்கொண்டு=சங்கப்புலவருட் டலைவராய்விளங்கிய தம்பெருமானளித்த திருமுகத்தைப் பாணபத்திரர்சிரமேற்கொண்டு; அப்பொழுதே யங்குப்புறப்பட்டு மலைநாடணையவந்தெய்தி = அப்பொழுதே அங்குநின்றும் புறப்பட்டு மலைநாட்டைஅடைந்து; துங்கப்புரிசைக்கொடுங்கோளூர் தன்னிற்புகுந்து = உயர்ந்தமதில்களையுடைய கொடுங்கோளூரென்னும் திருப்பதியினுட்புகுந்து; துன்னுகொடிமங்குற்றொடக்குமாளிகைமுன்வந்து மன்னர்க்கறிவித்தார் = அடர்ந்த துகிற்கொடிகள் மேசமண்டலத்தைத்தாக்கும் அரண்மனைக்குமுன்வந்து அரசர்க்கறிவித்தார்.—எ-று.

சங்கப்புலவர் சரித்திரமும் சிவபெருமான் அவர்க்குத்தலைவராயினமையும் திருவிளையாடற்புராணத்தும் இறையனாரகப்பொருளுரைப்பாயிரத்தும் காண்க. விரிப்பிற்பெருகும். (உ௯)

கேட்டபொழுதேகைதலைமேற்கொண்டுகிளர்ந்தபேரன்பா
னோட்டம்பொழிநீர்வழிந்திழியவெழுந்துநடுக்கமிகவெய்தி
யோட்டத்தம்பொன்மாளிகையின்புறத்திலுருகுஞ்சிந்தையுடன்
பாட்டின்றலைமைப்பாணனார்பாதம்பலகாற்பணிகின்றார்.

(இ-ள்.) கேட்டபொழுதே கைதலைமேற்கொண்டு = கேட்டவுடனே கரங்களைச்சிரமேற்குவித்து; கிளர்ந்தபேரன்பானோட்டம் பொழிநீர்வழிந்திழிய= ஓங்கிய பேரன்பினாற் கண்கள் ஆனந்தபாஷ்பம் ஓய்வின்றிச்சொரிய; நடுக்கமிகவெழுந்து= நடுக்கம் அதிகரிக்க ஆசனம்விட்டெழுந்து; ஓட்டத்தம்பொன்மாளிகையின்புறத்திலெய்தி= உருக்கிஓடவிட்டெடுத்த மாற்றுயர்ந்தபொன்னாலமைந்த அரண்மனையின் புறத்தே அணுகி; பாட்டின்றலைமைப் பாணனார் பாதம்=இசைப்பாடலிற்றலைமைபூண்ட பாணபத்திரருடைய திருவடிகளை; உருகுஞ்சிந்தையுடன் பலகாற்பணிகின்றார்= உருகும்மனத்துடன் பலமுறைபணிவாராயினார்.—எ-று.

உருக்கி ஓடவிட்டெடுத்தபொன்னே உயர்ந்ததாகலின் "ஓட்டத்தம்பொன்" என்றார். பொருள்அளிக்குமாறு அப்பாசுரத்திற் சுட்டப்பட்டவர் பாணபத்திரரேயாகலின் "பாட்டின்றலைமைப்பாணனார்" என்றாரெனினும் அமையும். (௩௦)

அடியேன்பொருளாத்திருமுகங்கொண்டணைந்ததென்னவவர் தாமுங்
கொடிசேர்விடையார்திருமுகங்கைக்கொடுத்துவணங்கக்கொற்றவனார்
முடிமேற்கொண்டுகூத்தாடிமொழியுங்குழறிப்பொழிகண்ணீர்
பொடியார்மார்பிற்பரந்துவிழப்புவிமேற்பலகால்வீழ்ந்தெழுந்தார்.

(இ-ள்.) அடியேன் பொருளாத் திருமுகங்கொண்டணைந்ததென்ன=அடியேனை ஒருபொருளாகப் பாராட்டித் திருமுகங்கொண்டு அணுகியது (வியப்பு) என்று கூற; அவருங்கொடிசேர்விடையார்திருமுகங்கைக்கொடுத்துவணங்க= அப்பாணபத்திரரும் இடபக்கொடியையுடைய எம்பிரான் திருமுகத்தைக் கரத்திலே ஈந்து பணிய; கொற்றவனார்முடிமேற்கொண்டுகூத்தாடி=நாயனார் அதனைத் திருமுடிமேற்சூடிக் கூத்தாடி; மொழியுங்குழறி = வார்த்தையுங் குழறுதலடைந்து; கண்பொழிநீர்பொடியார்மார்பிற்பரந்துவிழ=கண்பொழியும் நீரானது விபூதியையணிந்த மார்பிலே விரவிச்சிந்த; புவிமேற்பலகால்வீழ்ந்தெழுந்தார்—மண்ணிற் பலமுறை வணங்கி எழுந்தார்.—எ-று.

வியப்பு என்பது சொல்லெச்சம். தாம்-அசை. (௯௧)

பரிவிற்போற்றித்திருமுகத்தைப்பலகாற்றொழுதுபடியெடுக்க
வுரியவகையாலெடுத்தோதியும்பர்பெருமானருள்போற்றி
விரிபொற்சுடர்மாளிகைபுக்குமேவுமுரிமைச்சுற்றமெலாம்
பெரிதுவிரைவிற்கொடுபோந்துபேணுமமைச்சர்க்கருள்செய்வார்.

(இ-ள்.) பரிவிற்போற்றி=இங்ஙனம் அன்பினால் எம்பெருமானைப் பரவிப் பின்னர்; திருமுகத்தைப் பலகாற்றொழுது=திருமுகத்தைப் பலமுறைவணங்கி; படியெடுக்கவுரியவகையாலெடுத்தோதி=பிரதியெடுத்தற்குரியபடி பிரித்து அதில் வரைந்தபாடலை வாசித்து; உம்பர்பெருமானருள்போற்றி=தேவநாயகராகிய சிவபிரான் திருவருளைப் புகழ்ந்து; விரிபொற்சுடர்மாளிகைபுக்கு=விரிந்த காந்தியையுடைய பொன்மாளிகையினுள்ளே புகுந்து; மேவுமுரிமைச்சுற்றமெலாம்பெரிதுவிரைவிற்கொடுபோந்து=அன்புமிக்க உரிமைச்சுற்றத்தவரையெல்லாம் அதிகவிரைவில் அழைத்துவந்து (பணிவித்து); பேணுமமைச்சர்க்கருள்செய்வார்=தம்மை வழிபடும் மந்திரிமார்க்குப் பணிப்பார்.—எ-று.

வந்த திருமுகம் சிதைவுறினும் பிரதிவேண்டுமாதலின் "படியெடுக்கவுரியவகையாலெடுத்து" என்றார். படி - பிரதி. சுற்றத்தவரை அழைத்துவந்தது பணிவித்தற்கேயாதலின் பணிவித்தல் வருவிக்கப்பட்டது. (௯௨)

நங்கள்குலமாளிகையிதனுணலத்தின்மிக்கநிதிக்குவையாய்ப்
பொங்கிநிறைந்தபலவேறுவகையிற்பொலிந்தபண்டார
மங்கணொன்றுமொழியாமையடையக்கொண்டுபுறப்பட்டுத்
தங்கும்பொதிசெய்தாளின்மேற்சமயமேற்றிக்கொணருமென.

(இ-ள்.) நங்கள் குலமாளிகையிதனுள்=நம்முடைய குலத்தவர்க்குரிய இவ்வரண்மனையினுள்ளே; நலத்தின்மிக்கநிதிக்குவையாய்=உயர்வின்சிறந்த திரவியக்குவிய

ல்களாகி; பொங்கிநிறைந்தபலவேறுவகையிற்பொலிந்தபண்டாரம்=மிக்கு நிறைந்தவாகிப் பலவேறுவகையால் விளக்கமுற்ற பொக்கிஷங்களை; அங்கணொன்றுமொழியாமேயடையக்கொண்டுபுறப்பட்டு=அவ்விடத்திலே ஒன்றுந் தவறியிராமல் அனைத்தையுங் கொண்டுவந்து; தங்கும்பொதிசெய்து=தனித்தனி தொகுத்துக்கட்டி; ஆளின்மேற்சுமையயேற்றிக்கொணருமென=ஆட்களின் தலையிலே தக்கபடி யேற்றிக்கொண்டுவாருமென்று ஆஞ்ஞாபிக்க.—எ-று.

சாமானியப்பொருள்களில் சிலதவறினும் உயர்ந்த பொருள்களில் ஒன்றுந்தவறாது கொணர்க என்பார் "மிக்கநிதிக்குவையாய்ப்பொலிந்த பண்டாரமடையக்கொணரும்" என்றார். (௩௩)

சேரர்பெருமானருள்செய்யத்திருந்துமதிநூன்மந்திரிகள்
சாருமணிமாளிகையுள்ளாற்றலங்களெல்லாநிறைந்தபெருஞ்
சீர்கொணிதியமெண்ணிறந்தவெல்லாம்பொதிசெய்தாளின்மேற்
பாரினெருங்கமிசையேற்றிக்கொண்டுவந்துபணிந்தார்கள்.

(இ-ள்) சேரர்பெருமானருள்செய்ய=நாயனார் இங்ஙனம் கட்டளையிடுதலும்; திருந்துமதிநூன்மந்திரிகள்=திருத்தமாகிய அறிவைவளர்க்கும் செவ்விய நூலாராய்ச்சியில்வல்ல மந்திரிகள்; சாருமணிமாளிகையுள்=அமைந்த அழகுமிக்க மாளிகையினுள்ளே; தலங்களெல்லாநிறைந்த=அவ்வவ்விடங்டோறும் நிறைவுற்ற; பெருஞ்சீர்கொணிதியமெண்ணிறந்தவெல்லாம்பொதிசெய்து=மிக்க சிறப்புவாய்ந்த அளவிறந்த திரவியங்களையெல்லாம் பொதியாக்கி; பாரினெருங்க=பூமிமுற்றும் பரம்பும்படி; ஆளின்மேன் மிசையேற்றிக்கொண்டுவந்து பணிந்தார்கள்=ஆள்களின்மீது அடுக்காக ஏற்றிக்கொண்டுவந்து வணங்கினார்கள்.—எ-று. ஆல்-அசை. (௩௪)

பரந்தநிதியின்பரப்பெல்லாம்பாணனார்பத்திரனார்க்கு
நிரந்ததனங்கள்வெவ்வேறுநிரைத்துக்காட்டிமற்றிவையு
முரந்தங்கியவெங்கரிபரிகண்முதலாவுயிருள்ளனதனமும்
புரந்தவரசுங்கொள்ளுமெனமொழிந்தார்பொறையர்புரவலனார்.

(இ-ள்.) பரந்தநிதியின்பரப்புநிரந்ததனங்களெல்லாம்=சேர்ந்துசெறிந்த நிதிகளாய்த் தழைந்த திரவியங்களையெல்லாம், பாணனார்பத்திரனார்க்குவெவ்வேறுநிரைத்துக்காட்டி=பாணபத்திரருக்கு (ஒவ்வொன்றையும்) வெவ்வேறு வரிசையாகவைத்துக் காட்டி; இவையுமுரந்தங்கியவெங்கரிபரிகண்முதலாவுயிருள்ளனதனமும்=இவைகளையும் வலிய யானைகள் குதிரைகள்முதலிய உயிருள்ள பொருள்களையும்; புரந்தவரசும் = அடியேனாண்டுவந்த அரசையும்; கொள்ளுமெனப்பொறையர்புரவலனார்மொழிந்தார் = ஏற்றருளுமென்று சேரமான்பெருமாணாயனார் விண்ணப்பித்தார்.—எ-று.

ஏண்டு நிதி என்பது பொதியின்மேற்று. மற்று-அசை. பொறையர்-சேரர்.

பாணனார்பத்திரனாரும்பைம்பொன்மௌலிச்சேரலனார்
காணக்கொடுத்தவிவையெல்லாங்கண்டுமகிழ்வுற்றதிசயித்துப்
பேணவெனக்குவேண்டுவனவடியேன்கொள்ளப்பின்றுகணா
ராணையரசுமரசுறுப்புங்கைக்கொண்டருளுமெனவிறைஞ்ச.



சேரமான் பெருமாளையனார் சிவபூசையும் வன்றொண்டருடன் சிநேகமானது.

(இ-ள்.) பைம்பொன்மவுலிச்சேரலனார் காணக்கொடுத்த விலையெல்லாம்= பசும்பொன்முடியையணிந்தநாயனார் எதிர்கொடுத்த இவற்றையெல்லாம்; பாணனார் பத்திரனாருங்கண்டு மகிழ்வுற்றதிசயித்து = பாணபத்திரரும்பார்த்துத் திருவுளமகிழ்ந்து ஆச்சரியமுற்று; எனக்குப்பேணவேண்டுவன வடியேன்கொள்ள = அடியேனுக்கு விரும்பத்தகுதியுள்ளவற்றை அடியேன் பெற்றுக்கொள்ளும்படி; பிஞ்ஞகனாராணை = ஆலவாய்க்கடவுள் ஆஞ்ஞாபித்திருத்தலின்; அரசுமரசுறுப்புங்கைக்கொண்டருளுமெனவிறைஞ்ச = அரசையும் அரசின்உறுப்புக்களாயுள்ளவற்றையும் ஏற்றருளுமென்று எதிரேவணங்க.—எ-று.

அரசும் அரசுறுப்பும் தமக்குத்தகுதியன்மையின் அதுபெறுதல் ஆணையன்றென்பார் "அரசுமரசுறுப்புங் கைக்கொண்டருளுமென" அவரை இறைஞ்சினாரென்க. (௩௬)

இறைவராணைமறுப்பதனுக்கஞ்சியிருந்தாரிகல்வேந்தர்
நிறையுநிதியின்பரப்பெல்லாநிலத்தைநெளியவுடன்கொண்டே
யுறைமும்மதத்துக்களிறுபரியுள்ளிட்டனவேண்டுவகொண்டோர்
பிறைவெண்கோட்டுக்களிற்றுமேல்கொண்டுபோந்தார்பெரும்பாணர்.

(இ-ள்.) இகல்வேந்தர் = வலிமைபெற்ற கழறிற்றறிவார் நாயனார்; இறைவராணை மறுப்பதனுக்கஞ்சியிருந்தார் = எம்பெருமானுக்கிணையைத் தடுத்தற்குப்பயந்து இருந்தனர்; பெரும்பாணர் = பெருமைவாய்ந்தபாணபத்திரர் (அப்பொழுது); நிறையுநிதியின் பரப்பெல்லாம் = செறிந்ததிரவியக்குவியல்களையெல்லாம்; நிலத்தை நெளியவுடன்கொண்டு = பூமிநெளியும்படி உடனேகொண்டு; உறைமும்மதத்துக்களிறுபரியுள்ளிட்டன வேண்டுவகொண்டு = துளிக்கும்மும்மதங்களையுடைய யானை குதிரைமுதலியவற்றுள் வேண்டுவனவற்றைக் கைக்கொண்டு; பிறைவெண்கோட்டோர்களிற்று மேல்கொண்டு போந்தார் = இளமதியையொத்த வெண்கோட்டையுடைய ஒருயானையின்மேல் ஏறிக்கொண்டுசென்றார்.—எ-று.

நிலத்தைஎன்புழி அத்தும் ஐயும் சாரியை. அன்றி, நெளியஎன்பதைப் பிறவினையாக்கி நிலத்தைநெளிவிக்க என்னலுமொன்று. ஏ-அசை. (௩௭)

பண்புபெருகும்பெருமானும்பாணனார்பத்திரனார்பின்
கண்கள்பொழிந்தகாதனீர்வழியக்கையாற்றொழுதணைய
நண்புசிறக்குமவர்தம்மைநகரின்புறத்துவிடைகொண்டு
திண்பொற்புரிசைத்திருமதுரைபுக்கார்திருந்துமிசைப்பாணர்.

(இ-ள்.) பண்புபெருகும் பெருமானும்= பத்தியின்மேம்பட்ட சேரமான்பெருமாணயனாரும்; பாணனார்பத்திரனார்பின்=பாணபத்திரருக்குப்பின்னே; கண்கள் பொழிந்தகாதனீர்வழிய = கண்களாற்பொழியப்பட்ட அன்புவெள்ளம்பெருக; கையாற்றொழுதணைய = கரங்களாற்றொழுதுகொண்டுவர; திருந்துமிசைப்பாணர் = திருந்திய இசையிற்சிறந்த பாணபத்திரர்; நண்புசிறக்குமவர்தம்மை = நட்பின்மேம்பட்ட அந்நாயனாரை; நகரின்புறத்துவிடைகொண்டு = அந்நகர்ப்புறத்தை யடைந்தவுடன் விடைபெற்றுக்கொண்டு; திண்பொற்புரிசைத் திருமதுரைபுக்கார் = திண்ணியபொன்மதிலையுடைய திருமதுரையையடைந்தார்.—எ-று.

நல்லோரொருவர் நண்ணியவழி அவரை உபசரித்தனுப்புங்கால் பதினெண்கடி அல்லது ஏழடியேனும் நடந்துவழிவிடல்வேண்டுமென்பது நூற்றுணிபாகவும்,

இப்பாணபத்திரர் இறைவர் திருவருட்குப் பாத்திரராயிருந்தமையின் நகர்ப்புறமளவும் நண்ணியிறைஞ்சி விடைபெற்று மீண்டனரென்க. (௩௮)

வானவரம்பர்குலம்பெருக்குமன்னனாருமறிந்தேகிக்
கூனலிளவெண்பிறைக்கண்ணிமுடியாரடிமைகொண்டருளும்
பான்மையருளின்பெருமையினைநினைந்துபலகாற்பணிந்தேத்தி
மேன்மைவிளங்குமாளிகைமண்டபத்துளரசுவீற்றிருந்தார்.

(இ-ள்.) வானவரம்பர் குலம்பெருக்கு மன்னனாரு மறிந்தேகி=சேரர்குலத்தை அபிவிர்த்திசெய்யும் நாயனாரும் மீண்டுசென்று; கூனலிளவெண்பிறைக்கண்ணி முடியார் = வளைதலும் இளமையும்வாய்ந்த வெண்பிறையாகிய அரும்பையணிந்தமுடியையுடைய முதல்வர்; அடிமைகொண்டருளும் = தம்மைத்திருமுகம்விடுத்துஅடிமைகொண்டருளிய; பான்மையருளின் பெருமையினைநினைந்து = செவ்வியதிருவருட்பெருமையைச் சிந்தித்து; பலகாற்பணிந்தேத்தி = பலமுறைவணங்கித்துதித்து; மேன்மைவிளங்குமாளிகைமண்டபத்து ளரசுவீற்றிருந்தார் = தகுதிபெற்ற அரண்மனையிலுள்ள சபாமண்டபத்திலே அரசுசெலுத்தினார்.—எ-று.

இவர் அவதரித்தமையால் வானவரம்பர்குலம் மேன்மைவாய்ந்தமைபற்றி அக்குலம்பெருக்கு மன்னனாரென்றார். வானவரம்பர்-சேரர். (௩௯)

அளவில்பெருமையகிலயோனிகளுங்கழறிற்றறிந்தவற்றி
னுளமன்னியமெய்யுறுதுயரமொன்றுமொழியாவகையகற்றிக்
களவுகொலைகண்முதலானகடிந்துகழறிற்றறிவார்தாம்
வளவர்பெருமானுடன்செழியர்மகிழுங்கலப்பில்வைகுநாள்.

(இ-ள்.) கழறிற்றறிவார்=கழறிற்றறிவார் நாயனார்; அளவில்பெருமை யகிலயோனிகளுங்கழறிற்று=எல்லையில்லாத விருத்தியையுடைய எவ்வகையுயிர்களும்பேசுதலை; அறிந்து=தமது தானத்திலிருந்தேயுணர்ந்து; அவற்றினுளமன்னிய மெய்யுறுதுயரம் = அவற்றின் உள்ளத்தேநிலைபெற்ற உண்மைத்துயரங்களுள்ளே; ஒன்றுமொழியாவகையகற்றி = ஒன்றும் எஞ்சியிராமல் ஒழித்து; களவுகொலைகள் முதலானகடிந்து = களவுகொலைமுதலியவை தந்நாட்டிலே நிகழாதுநீக்கி; வளவர்பெருமானுடன்செழியர் மகிழுங்கலப்பின்வைகுநாள் = சோழமன்னரோடு பாண்டிமன்னரும் மகிழ்ச்சியுறுங்கலப்போடு வாழும்நாளில்.—எ-று.

தாம்-அசை. (௪0)

வானக்கங்கைநதிபொதிந்தமல்குசடையார்வழிபாட்டுத்
தூநற்சிறப்பினர்ச்சனையாந்தொண்டுபுரிவார்தமக்கொருநாட்
டேனக்கலர்ந்தகொன்றையினாராடற்சிலம்பினொலிமுன்போன்
மானப்பூசைமுடிவின்கட்கேளாதொழியமதிமயங்கி.

(இ-ள்.) வானக்கங்கைநதிபொதிந்த மல்குசடையார் = தேவகங்கையாகியநதியொடுங்கிய செறிந்தசடைமுடியையுடைய சிவபெருமானுக்குரிய; வழிபாட்டுத் தூநற்சிறப்பினர்ச்சனையாந்தொண்டு = வழிபாடாகிய தூய்மைவாய்ந்த மிக்கசிறப்பையுடைய அருச்சனைத்தொண்டை; புரிவார் தமக்கொருநாள் = செய்துவரும் அந்நாயனாருக்கு ஒருதினத்திலே; தேனக்கலர்ந்தகொன்றையினார் = தேனைச்சொரிந்து மலர்ந்த கொன்றைமாலையையணிந்த சிவபெருமானுடைய; ஆடற்சிலம்பினொலி = ந

.டனச்சிலம்பொலியானது; மானப்பூசைமுடிவின்கண் = மாட்சிமைப்பட்டசிவபூசையின்முடிவிலே; முன்போற்கேளாதொழிய மதிமயங்கி = வழக்கம்போலக் கேளாது நீங்க நாயனார் மதிமயக்கமுற்று —எ-று.

வழிபாட்டுத்தொண்டுபுரிவார் தமக்குக் கேளாதொழிய என இயையும். (சுக)

பூசைகடிதுமுடித்தடியேனென்னோபிழைத்ததெனப்பொருமி
யாசையுடம்பான்மற்றினிவேறடையுமின்பமியாதென்று
தேசில்விளங்குமுடைவாளையுருவித்திருமார்பினிலூட்ட
வீசர்விரைந்துதிருச்சிலம்பினோசைமிகவுமிசைப்பித்தார்.

(இ-ள்.) பூசைகடிதுமுடித்து = பூசையை விரைவிலேபூர்த்திசெய்து; அடியேன் பிழைத்ததென்னோவெனப்பொருமி = எளியேன்தவறியது யாதோவென்று துக்கமுற்று; ஆசையுடம்பாலினிவேறடையுமின்பமியாதென்று = அவாவுதற்குரிய இவ்வுடலினால் வேறு இனியடையுமின்பம் யாதெனக்கருதி; தேசின்விளங்குமுடைவாளையுருவித் திருமார்பினிலூட்ட = ஒளியொடுவிளங்கும் உடைவாளையுருவித் தமது திருமார்பத்திலூன்றுதலும்; ஈசர்விரைந்து திருச்சிலம்பினோசை மிகவு மிசைப்பித்தார் = சிவபெருமான் அதிசீக்கிரமாகத் திருச்சிலம்பினொலியை மிகுதியும் திருச்செவியிற்கேட்பித்தார்.—எ-று.

சிவகதிபெறுதற்குச்சிவபுண்ணியமியற்றிப்பெற்ற இவ்வுடல்கொண்டு அக்கதியின்பமார்ந்து அனுபவித்தலொழிந்து வேற்றின்பத்தை விரும்பிநுகர்தலினும் உயிர்விடுதலே சிறந்ததாகலின் "ஆசையுடம்பால் மற்றினிவேறடையுமின்பமியாதென்று உடைவாளையுருவி மார்பினூட்ட" லும் அன்பர்க்கு ஆபத்துவாராமற்காத்தலையுடையராதலின் விரைந்து முன்னையிலும் மிகச்சிலம்போசை செவியுறுத்தாரென்றவாறு. மற்று-அசை. (சுஉ)

ஆடற்சிலம்பினொலிகேளாவுடைவாளகற்றியங்கைமலர்
கூடத்தலைமேற்குவித்தருளிக்கொண்டுவிழுந்துதொழுதெழுந்து
நீடப்பரவிமொழிகின்றார்நெடுமால்பிரமனருமறைமுன்
றேடற்கரியாய்திருவருண்முன்செய்யாதொழிந்ததென்னென்றார்.

(இ-ள்.) ஆடற்சிலம்பினொலிகேளா வுடைவாளகற்றி = நடனச்சிலம்பொலி கேட்டு உடைவாளை நீக்கி; அங்கைமலர்கூடத்தலைமேற்குவித்தருளிக்கொண்டு = இரு கரங்களையும் ஒருங்கு சிரமேற்குவித்துக்கொண்டு; விழுந்துதொழுதெழுந்து நீடப்பரவிமொழிகின்றார் = விழுந்து வணங்கியெழுந்து மிகத்துதித்துவிண்ணப்பஞ்செய்வாராய்; நெடுமால்பிரமனருமறை முன்றேடற்கரியாய் = திருமாலும் பிரமதேவரும் சிறந்தஇருக்காதிவேதங்களும் முன்தேடுதற்கரியவரே; முன் திருவருள் செய்யாதொழிந்ததென்னென்றார் = முன்னமே திருவருள்புரியாதுவிடுத்தமை யாதென்று வினவினார்.—எ-று.

மொழிகின்றார் முற்றெச்சம். (சுங)

என்றபொழுதிலிறைவர்தாமெதிர்நின்றருளாதெழுமொலியான்
மன்றினிடைநங்கூத்தாடல்வந்துவணங்கிவன்றொண்ட
னென்றுமுணர்வானமைப்போற்றியுரைசேர்பதிகம்பாடுதலா
னின்றுகேட்டுவரத்தாழ்ந்தோமென்றாரவரைநினைப்பிப்பார்.

(இ-ள்.) என்றபொழுதி லிறைவரெதிர்நின்றருளாது = என்றுவினாவியபொழுது எம்பெருமான் எதிர்தோன்றியருளாமல்; அவனைநினைப்பிப்பார் = ஆளுடைய நம்பிகளைச் சிந்திக்கும்படிசெய்தற்பொருட்டு; எழுமொலியால் = அசரீரியினால்; மன்றினிடை நங்கூத்தாடல் = சிற்சபையின்கண்ணே நமது நடனத்தை; வன்றொண்டன்வந்துவணங்கி = (நமதுதோழனாகிய) வன்றொண்டனென்பவன் வந்துவணங்கி; ஒன்றுமுணர்வானமைப்போற்றி = ஒற்றுமைப்பட்ட வுணர்ச்சியால் நம்மைத்துதித்து; உரைசேர்பதிகம்பாடுதலால் = சீர்த்திபெற்ற திருப்பதிகம் பாடுதலால்; நின்றுகேட்டுவரத்தாழ்ந்தோமென்றார் = அங்கே நிலைபெற்று அப்பதிகத்தைக்கேட்டு வருதற்குத்தாமதித்தோமென்று அநுக்கிரகித்தார்.—எ-று.

தாம்-அசை. கூத்தாடல்-அபிநயங்களோடுநடித்தல். (சச)

என்னேயடியார்க்கிவரருளுங்கருணையிருந்தவாறென்று
பொன்னேர்சடையார்திருநடஞ்செய்புலியூர்ப்பொன்னம்பலமிறைஞ்சித்
தன்னேரில்லாவன்றொண்டர்தமையுங்காண்பனெனவிரும்பி
நன்னீர்நாட்டுச்செலநயந்தார்நாமச்சேரர்கோமானார்.

(இ-ள்.) நாமச்சேரர்கோமானார் = அதுகேட்ட கீர்த்திபெற்ற அந்நாயனார்; அடியார்க்கிவரருளுங்கருணையிருந்தவாறென்னேயென்று = திருத்தொண்டர்களுக்கு இப்பெருமானருளுந் திருவருள் இருந்தவாறு வியப்பேயென்று சிந்தித்து; பொன்னேர்சடையார்திருநடஞ்செய் புலியூர்ப்பொன்னம்பலமிறைஞ்சி=பொன்போலுஞ்சடைமுடியையுடைய பெருமான் திருநிருத்தஞ்செய்தருளும் சிதம்பரத்திலுள்ள கனகசபையை வணங்கிக்கொண்டு; தன்னேரில்லாவன்றொண்டர்தமையுங் காண்பனென விரும்பி = தனக்கொப்பில்லாத ஆளுடையநம்பிகளையும் தரிசிக்கப்பெறுவேனென்று காதலித்து; நன்னீர்நாட்டுச்செல நயந்தார் = சிறந்த(காவிரியினால்) நீர்வளமிக்கசோணாட்டிற்செல்ல விரும்பினார்.—எ-று.

என்றுவிரும்பி நயந்தாரென இயையும். என்னேயென்பது வியப்பிடைச்சொல். பெருமானால் வியக்கப்பெற்றமையின் தன்னேரில்லாவன்றொண்டரென்றார்.

பொன்னார்மவுலிச்சேரலனார்போற்றுமமைச்சர்க்கீதியம்பி
நன்னாட்கொண்டுபெரும்பயணமெழுகவென்றுநலஞ்சாற்ற
மின்னாரயில்வேற்குலமறவர்வென்றிநிலவுஞ்சிலைவீர
ரந்நாட்டுள்ளாரடையநிரந்தணைந்தார்வஞ்சியகநகர்வாய்.

(இ-ள்.) பொன்னார்மவுலிச் சேரலனார் = பொன்னாலாகிய திருமுடியையுடைய நாயனார்; போற்றுமமைச்சர்க்கீதியம்பி = தம்மையிறைஞ்சும் மந்திரிகளுக்கிதனைக்கூறி; நன்னாட்கொண்டு = சுபதினநிச்சயித்து; பெரும்பயணமெழுகவென்று நலஞ்சாற்ற = எவரும்புறப்படுகவென்று இனிதுபணித்தலும்; மின்னாரயில்வேற்குல மறவர் = மின்போல ஒளிரும் கூரியவேற்படையையுடைய சேனைகளும்; வென்றி நிலவுஞ் சிலைவீரர் = வெற்றிவிளங்கப்பெற்ற வில்லையுடைய சேனாபதிகளும்; அந்நாட்டுள்ளாரடையநிரந்து = அந்நாட்டிலுள்ளார் பலரும் ஒருங்குசேர்ந்து; வஞ்சியகநகர்வாயணைந்தார் = கொடுங்கோளூரென்னும் நகரத்தில்வந்து கூடினார்.—எ-று.

வஞ்சி - கொடுங்கோளூர். (சசு)

இட்டநன்னாளோரையினிலிறைவாதிருவஞ்சைக்களத்து
மட்டுவிரிபூங்கொன்றையினார்தம்மைவலங்கொண்டிறைஞ்சிப்போய்ப்

பட்டநுதல்வெங்களியானைப்பிடர்மேற்கொண்டுபனிமதியந்
தொட்டகொடிமாளிகைமூதூர்கடந்தாருதியர்தோன்றலார்.

(இ-ள்.) உதியர்தோன்றலார் = சேரர்குலத்தலைவராகியநாயனார்; இட்டநன்னாளோரையினில் = நிச்சயித்தசுபதினத்திலே சுபலக்கினத்தில்; திருவஞ்சைக்களத்து = திருவஞ்சைக்களத்தில்வீற்றிருக்கும்; மட்டுவிரிபூங்கொன்றையினாரிறைவர் தம்மை = வாசனைவிரிந்த கொன்றைப்பூமாலையணிந்த இறைவரை; வலங்கொண்டிறைஞ்சிப்போய் = பிரதக்ஷிணஞ்செய்து பணிந்துசென்று; பட்டநுதல்வெங்களியானைப்பிடர்மேற்கொண்டு = முகபடாமணிந்தநெற்றியையும் முதிர்ந்தகளிப்பையுமுடைய ஆனைப்பிடரின்மேல் ஆரோகணித்து; பனிமதியந்தொட்ட = குளிர்ந்தசந்திரமண்டலத்தையளாவிய; கொடிமாளிகைமூதூர்கடந்தார் = கொடிகளையுடைய மாடங்களமைந்த கொடுங்கோளூரையகன்றார்.—எ-று. (சஎ)

யானையணிகள்பரந்துவழியெங்குநிரந்துசெல்லுவன
மானமலைநாட்டினின்மலிந்தமலைகளுடன்போதுவபோன்ற
சேனைவீரர்புடைபரந்துசெல்வதங்கண்மலைசூழ்ந்த
கானமடையவுடன்படர்வபோலுங்காட்சிமேவினதால்.

(இ-ள்.) யானையணிகள்பரந்துவழியெங்குநிரந்துசெல்லுவன = யானைவரிசைகள்பரவி வழிமுற்றும்நிரம்பிச்செல்வன; மானமலைநாட்டினின்மலிந்தமலைகளுடன்போதுவபோன்ற = பெருமைபெற்றமலைநாட்டிலே நிறைந்த மலைகள் உடன் வருவனவற்றையொத்தன; சேனைவீரர்புடைபரந்துசெல்வது = சேனைவீரர்கள் அவற்றின்அருகே செறிந்துசெல்லுதல்; அங்கண்மலைசூழ்ந்தகானமடையவுடன்படர்வபோலுங்காட்சிமேவினது = அவ்விடத்தில் அம்மலைகளைச்சூழ்ந்த காடுமுற்றும் உடனேசெல்வனபோலும் தோற்றத்தையொத்தது.—எ-று. ஆல்-அசை. (சஅ)

புரவித்திரள்களாயோகப்பொலிவினசைவிற்போதுவன
வரவச்சேனைக்கடற்றரங்கமடுத்துமேன்மேலடர்வனபோல்
விரவிப்படர்ந்துசென்றனவான்மிசையுமவலுமொன்றாக
நிரவிப்படர்ந்தநெடுஞ்சேனைநேமிநெளியச்சென்றனவால்.

(இ-ள்.) புரவித்திரள்களாயோகப்பொலிவினசைவிற்போதுவன = குதிரைக்கூட்டங்கள் கரைபோலுந்தோற்றத்தோடு அசைவுடன்செல்வன; அரவச்சேனைக்கடற்றரங்கமடுத்துமேன்மேலடர்வனபோல் = ஒலிபெற்றசேனாசமுத்திரத்தின்அலைகள்நெருங்கி ஒன்றன்மேலொன்று தாக்குவனபோல(விளங்க); விரவிப்படர்ந்துசென்றன = கலந்துவிரிந்துநடந்தன; மிசையுமவலுமொன்றாகநிரவிப் படர்ந்தநெடுஞ்சேனை = மேடும்பள்ளமும்ஒற்றுமைப்படும்படி நிரவிக்கொண்டு சென்றபெருஞ்சேனைகள்; நேமிநெளியச்சென்றன = (பாரம்பொறாமல்) பூமிநெளியும்படி போர.—எ-று.

ஆயோகம்-கரை. ஆலிரண்டும் அசைகள். மிசை-மேடு. அவல்-பள்ளம். புரவித்திரள்கள் கரையும் அவற்றினசைவு அலைகளும் சேனை கடலுமாக உவமித்தவாறு.

அந்நாட்டெல்லைகடந்தணையுமமைச்சர்க்கெல்லாம்விடையருளி
மின்னார்மணிப்பூண்மன்னவனார்வேண்டுவாரையுடன்கொண்டு
கொன்னாரயில்வேன்மறவர்பயில்கொங்கர்நாடுகடந்தருளிப்
பொன்னாட்டவருமணைந்தாடும்பொன்னிநீர்நாட்டிடைப்போவார்.

(இ-ள்.) மின்னார்மணிப்பூண்மன்னவனார் = ஒளிவிடும்இரத்தினாபரணங்களைப்புனைந்த நாயனார்; அந்நாட்டெல்லைகடந்து = அம்மலைநாட்டின் எல்லையைஅகன்று; அணையுமமைச்சர்க்கெல்லாம்விடையருளி = உடன்வந்தமந்திரிமார்களுக்கெல்லாம் உத்தரவுதந்தனுப்பிவிட்டு; வேண்டுவாரையுடன்கொண்டு = வேண்டியபரிசனங்களைமாத்திரம் உடனழைத்துக்கொண்டு; கொன்னாரயில்வேன்மறவர்பயில்=அச்சத்தைவிளைக்கும் கூரியவேற்படையையுடைய வேடருறையும்; கொங்கர்நாடுகடந்தருளி = கொங்கதேசத்தையகன்று; பொன்னாட்டவருமணைந்தாடும்பொன்னிநீர்நாட்டிடைப்போவார் = தேவரும்செறிந்தமூழ்கும் காவிரிநதிசூழ்ந்த சோணாட்டிற் செல்வார்.—எ-று.

கொன்-அச்சம். ஆர்-ஆர்விக்குமெனவிரிதலின் பிறவினைவிகுதியும் உடன்றொக்க வினைத்தொகை. மறவர் - பாலைநிலமாக்களென்னலுமொன்று. உம்மை உயர்வுசிறப்பு. (௫௦)

சென்றதிசையிற்சிவனடியார்சிறப்பினோடுமெதிர்கொள்ளக்
குன்றுங்கானுமுடைக்குறும்பரிடங்கடோறுங்குறைவறுப்பத்
துன்றுமுரம்புங்கான்யாறுந்துறுகற்சுரமும்பலகடந்து
வென்றிவிடையாரிடம்பலவுமேவிப்பணிந்துசெல்கின்றார்.

(இ-ள்.) சென்றதிசையிற்சிவனடியார்சிறப்பினோடுமெதிர்கொள்ள=சென்ற இடங்களிலுள்ள சிவனடியவர்கள் பலவகைச்சிறப்புகளோடு எதிர்கொண்டுபசரிக்க; குன்றுங்கானுமுடைக்குறும்பர் = மலைகளையுங்காடுகளையும் தமக்குரிமையாகக்கொண்ட குறுநிலமன்னவர்கள்; இடங்கடோறுங்குறைவறுப்ப = அவ்வவ்விடங்களினும் வேண்டியவற்றைமுடிக்க; துன்றுமுரம்புங்கான்யாறும் = செறிந்தபாலைநிலங்களும் கான்யாறுகளும்; துறுகற்சுரமும்பலகடந்து = நெருங்கியகற்களையுடைய குறிஞ்சிநிலங்களுமாகியபலவற்றையும் நீங்கி; வென்றிவிடையார்=வெற்றிபெற்றஇடபத்தையுடைய சிவபிரான்வீற்றிருக்கும்; இடம்பலவுமேவிப்பணிந்துசெல்கின்றார் = தலங்கள்பலவற்றையும் சார்ந்துவணங்கிக்கொண்டு செல்வார்.—எ-று.

இவ்வரசர்பெருந்தகையும் சிவனடியவருட்சிறந்த பிரசித்திபெற்றிருத்தலின் ஆங்காங்குள்ள அடியவரெதிர்கொண்டுபசரித்தனரென்க. (௫௧)

பொருவில்பொன்னித்திருநதியின்கரைவந்தெய்திப்புனிதநீர்
மருவுதீர்த்தமகிழ்ந்தாடிமருங்குவடபாற்கரையேறித்
திருவிற்பொலியுந்திருப்புலியூர்ச்செம்பொன்மன்றுணடம்போற்ற
வுருகுமனத்தினுடன்சென்றாரொழியாவன்பின்வழிவந்தார்.

(இ-ள்.) ஒழியாவன்பின்வழிவந்தார் = அழிவில்லாத அன்புவாய்ந்தமரபில் அவதரித்த அந்நாயனார்; பொருவில்பொன்னித்திருநதியின்கரைவந்தெய்தி = நிகரற்றகாவிரிநதியின்கரையையடைந்து; புனிதநீர்மருவுதீர்த்தமகிழ்ந்தாடி = அப்புனிதத்தன்மைவாய்ந்ததீர்த்தத்திலே களித்துமூழ்கி; மருங்குவடபாற்கரையேறி = அதனருகிலுள்ள வடகரையைக்கடந்து; திருவிற்பொலியுந்திருப்புலியூர்ச்செம்பொன்மன்றுள் = சிறப்பொடுவிளங்கும் சிதம்பரத்திலே கனகசபையில்; நடம்போற்ற = சிவபெருமான்செய்தருளும் திருநிருத்தத்தைச்சேவித்தற்பொருட்டு; உருகுமனத்தினுடன்சென்றார் = உருக்கம்பெற்றஉள்ளத்தோடு சென்றார்.—எ-று.

நீர் - நீர்மை. (௫௨)

வந்துதில்லைமூதூரினெல்லைவணங்கிமகிழ்ச்சியினு
லந்தணளர்தொண்டர்குழாமணைந்தபோதினெதிர்வணங்கிச்
சந்தவிரைப்பூந்திருவீதியிறைஞ்சித்தலைமேற்கரமுகிழ்ப்பச்
சிந்தைமகிழவெழுநிலைக்கோபுரத்தையணைந்தார்சேரலனார்.

(இ-ள்.) சேரலனார்வந்துதில்லைமூதூரினெல்லைவணங்கி = சேரமான்பெருமாணயனார்வந்து சிறந்தசிதம்பரத்தின் திருவெல்லையைப்பணிந்து; மகிழ்ச்சியினுலந்தணளர்தொண்டர்குழாமணைந்தபோதின்=மகிழ்ச்சியோடு தில்லைவாழந்தணர்களும் திருத்தொண்டர்கூட்டங்களும்செறிந்துவருங்கால்; எதிர்வணங்கி = அவர்க்கெதிரே பணிந்து; சந்தவிரைப்பூந்திருவீதியிறைஞ்சி = வாசனைமிக்க சந்தனக்கலவையும் மலர்களும்சொரிந்த திருவீதியைவணங்கி; தலைமேற்கரமுகிழ்ப்பச்சிந்தைமகிழவெழுநிலைக்கோபுரத்தையணைந்தார் = சிரமேற்கைகள்குவியவும் சிந்தையுவப்பவும் எழுநிலைகளையுடையகோபுரத்தை அடைந்தார்.—எ-று. (ரு௩)

நிலவும்பெருமையெழுநிலைக்கோபுரத்தின்முன்னர்நிலத்திறைஞ்சி
மலருங்கண்ணீர்துளிததும்பப்புகுந்துமணிமாளிகைவலங்கொண்
டுலகுவிளக்குந்திருப்பேரம்பலத்தைவணங்கியுள்ளணைந்தா
ரலகிலண்டமளித்தவர்நின்றாடுந்திருச்சிற்றம்பலமுன்.

(இ-ள்.) எழுநிலைநிலவும்பெருமைக்கோபுரத்தின்முன்னர்நிலத்திறைஞ்சி = ஏழுநிலைகள்விளங்கும் மேன்மையையுடைய திருக்கோபுரத்தின்முன்பு பூமியில்வணங்கி; மலருங்கண்ணீர்துளிததும்பப்புகுந்து=விரிந்தகண்ணீர் திவலைகளாகப்பெருக உட்புகுந்து; மணிமாளிகைவலங்கொண்டு = திருமாளிகையைவலம்வந்து; உலகுவிளக்குந்திருப்பேரம்பலத்தைவணங்கியுள்=உலகத்தைப்பிரகாசிப்பிக்கும் திருப்பேரம்பலத்தைப்பணிந்து உள்ளணுகி; அலகிலண்டமளித்தவர்நின்றாடும்=அளவுபடாத அண்டங்களையெல்லாம் தோற்றுவித்த சிவபெருமான்நின்று நடித்தருளும்; திருச்சிற்றம்பலமுன்னணைந்தார் = சிற்சபையின்முன்னர்ச்சேர்ந்தார்.—எ-று.

உலகினர்க்கு வேண்டியசித்தியை யளித்துவிளங்கலின் "உலகுவிளக்கும்பேரம்பலம்" என்றும், பரமர்நடித்துநிற்பது பஞ்சகிர்த்தியத்தின்பொருட்டேயாகலின் "அலகிலண்டமளித்தவர்நின்றாடும்" என்றும் கூறினார். சிற்றம்பலம் - ஞானசபை. சித் சிற்றெனத்திரிந்தது. (ருச)

அளவிலின்பப்பெருங்கூத்தராடவெடுத்தகழல்காட்ட
வுளமும்புலமுமொருவழிச்சென்றுருகப்போற்றியுய்கின்றார்
களனில்விடம்வைத்தளித்தவமுதன்றிமன்றிற்கழல்வைத்து
வளருந்திருக்கூத்தமுதுலகுக்களித்தகருணைவழுத்தினார்.

(இ-ள்.) அளவிலின்பப்பெருங்கூத்தர் = அளவுபடுதலில்லாத இன்பமயமாகிய அரியநிர்த்தனத்தையுடையபெருமான்; ஆடவெடுத்தகழல்காட்ட = நடித்தற்பொருட்டுக் குஞ்சிதமாகத்தூக்கிய திருவடிகளைக்காட்டியருள; உளமும்புலனுமொருவழிச்சென்றுருகப்போற்றியுய்கின்றார்=மனமும் பஞ்சேந்திரியங்களும் ஒருவழிப்பட்டுருக வணங்கிஉய்யும் அந்நாயனார்; களனில்விடம்வைத்து = தமது கண்டத்திலே விடத்தைவைத்தருளி; அளித்தவமுதன்றி = (திருமாலாதிதேவருய்யுமாறு)முன்னளித்த அமுதம்போல்வதன்றி; மன்றிற்கழல்வைத்து = சிற்சபையிலே ஒருதிருப்

பதம்ஊன்றி; வளருந்திருக்கூத்தமுது = குறைவில்லாத திருநடனமென்னும்அமுதத்தை; உலகுக்களித்தகருணைவழுத்தினர் = உலகத்தார் உய்தற்களித்த திருவருளின் திறத்தைத்துதித்தார்.—எ-று.

உய்கின்றார்வழுத்தினரொன இயையும். அவ்வமுதம் தேவலோகத்தார்க்கே யுரியதாய் அவர்க்குமாத்திரம் நீண்டஆயுளைத்தருவது. இது அதுபோல்வதன்றி எத்தகையரும் எக்காலத்தும் அழிவின்றிவிளங்கத் தரிசனமாத்திரத்தானே நிரதிசயவின்பந்தருவதாகலின் "களனில்விடம்வைத்தளித்தவமுது" என அதனைவறிதுகூறி, "திருக்கூத்தமுதுலகுக்களித்தகருணை"என இதனைவிசேடித்தனரென்க. "களனில்விடம்வைத்தவரளித்தவமுதமன்றில்" என்பதுபாடமேல் கண்டத்திலே நஞ்சத்தையிருவியபெருமான் தம்மாலுண்டாக்கப்பட்ட அமிர்தமயமாகிய மன்றத்திலேயெனப் பொருள்கொள்க. களனில்விடம்வைத்துலகளித்தவமுதனென்பதும்பாடம். (௫௯)

ஆராவாசையானந்தக்கடலுட்டிளைத்தேயமர்ந்தருளாற்
சீரார்வண்ணப்பொன்வண்ணத்திருவந்தாதிதிருப்படிக்கீழ்ப்
பாராதரிக்கவெடுத்தேத்திப்பணிந்தார்ப்ருவமழைபொழியுங்
காரானிகர்க்கவரியகொடைக்கையார்கழறிற்றறிவார்தாம்.

(இ-ள்.) பருவமழைபொழியுங்கார்நிகர்க்கவரியகொடைக்கையார்கழறிற்றறிவார்= வேண்டியகாலங்களில் மழையைப்பொழியும் மேகமும்நிகர்த்தற்கரிய பெருங்கொடைநிலவும் கையினராகியகழறிற்றறிவார்நாயனார்; ஆராவாசையானந்தக்கடலுட்டிளைத்து = அளவுபடாத ஆசையாகிய ஆனந்தசாகரத்திலேமூழ்கி; அமர்ந்து= அவ்வானந்தமயமாய்நின்று ; திருப்படிக்கீழ் = திருவணுக்கன்றிருவாயிற்படியின்கீழ்; சீரார்வண்ணப்பொன்வண்ணத்திருவந்தாதி = சீர்த்திபெற்ற அழகிய பொன்வண்ணத்திருவந்தாதியென்னும் பிரபந்தத்தை; பாராதரிக்கவெடுத்துத்திருவருளாலேத்திப்பணிந்தார் = எவரும்பாராயணஞ்செய்துய்யுமாறு தொடங்கித் திருவருளாற்றுதித்து இறைஞ்சினார்.—எ-று.

ஆராமையாவது - திருநடனதரிசனத்திலே தெவிட்டுதலின்மை. காருமென்னுமுயர்வுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. ஆல்-தாம்-அசைகள். (௬௰)

---

## பொன்வண்ணத்தந்தாதி.

திருச்சிற்றம்பலம்.

பொன்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமேனிபொலிந்திலங்கு
மின்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணம்வீழ்சடைவெள்ளிக்குன்றந்
தன்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமால்விடைதன்னைக்கண்ட
வென்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமாகியவீசனுக்கே.

மாயனன்மாமணிகண்டன்வளர்சடையாற்கடிமை
யாயினதொண்டர்துறக்கம்பெறுவதுசொல்லுடைத்தே
காய்சினவானைவளருங்கனகமலையருகே
போயினகாக்கையுமன்றேபடைத்ததுபொன்வண்ணமே.

திருச்சிற்றம்பலம்.

---

தம்பிரானுர்க்கெதிர்நின்றுதமிழ்ச்சொன்மாலைகேட்பிக்க
வும்பர்வாழநடமாடுமொருவரதற்குப்பரிசிலெனச்
செம்பொன்மணிமன்றினிலெடுத்தசெய்யபாதத்திருச்சிலம்பி
னிம்பர்நீடவெழுந்தவொலிதாமுமெதிரேகேட்பித்தார்.

(இ-ள்.) தம்பிரானுர்க்கெதிர்நின்று = நாயனுர் சபாநாயகருக்கெதிரேநின்று; தமிழ்ச்சொன்மாலைகேட்பிக்க = தமிழ்ச்சொற்களாலமைந்த திருவந்தாதியென்னும் பாமாலையைத் திருச்செவிஎற்பித்தலும்; உம்பர்வாழநடமாடுமொருவர் = தேவருமுய்யத்திருநடம்புரியுஞ் சிவபெருமான்; அதற்குப்பரிசிலென = அப்பிரபந்தத்திற்குப் பரிசிலளிப்பார்போல; செம்பொன்மணிமன்றினிலெடுத்தசெய்யபாதத்திருச்சிலம்பின் = செவ்வியகனகசபையிலே தூக்கியதிருப்பாதச்சிலம்பினின்றும்;இம்பர்நீடவெழுந்தவொலி = இங்கே பெரிதும்ஓங்கிய பேரொலியை; தாமுமெதிரேகேட்பித்தார் = தாமும் எதிராக அந்நாயனுரைக்கேட்கப்புரிந்தார்.—எ-று.

இத்திருச்சிலம்பு வேதவடிவாய்விளங்கி நாதமயமாகச் சிவானந்தப்பெருக்கை நல்குவதாகலின், இத்திருவந்தாதிக்குப் பரிசிலாகச் சிவானந்தத்தைநல்கின ரென்பார் "அதற்குப்பரிசிலெனத்திருச்சிலம்பினெலிகேட்பித்தார்." என்ருர். (௫௭)

ஆடற்சிலம்பினெலிகேட்பாரளவிலின்பவானந்தங்
கூடப்பெற்றபெரும்பேற்றிற்கொள்கைவாய்ப்பக்கும்பிடுவார்
நீடப்பணியுங்காலமெலாநின்றுதொழுதுபுறம்போந்து
மாடத்திருமாளிகைவீதிவணங்கிப்புறத்துவைகினர்.

(இ-ள்.) ஆடற்சிலம்பினெலிகேட்பார் = நடனச்சிலம்பொலிகேட்பாராகிய நாயனுர்; அளவிலின்பவானந்தங்கூடப்பெற்றபெரும்பேற்றின் = எல்லையில்லாத இன்பமயமாகிய சிவானந்தம் எய்தப்பெற்றபெருமபயனேடு; கொள்கைவாய்ப்பக்கும்பிடுவார்நீடநின்று=தமதுநியதியும் முற்றுப்பெறப் பணிவாராய் நெடுநேரநின்று; பணியுங்காலமெல்லாந்தொழுதுபுறம்போந்து = வணங்குதற்குரிய அற்றைக்காலங்களெல்லாம்வணங்கிப்புறத்தேவந்து; மாடத்திருமாளிகை வீதிவணங்கிப்புறத்துவைகினர்=அடுக்கமைந்த திருமாளிகைகளையுடைய திருவீதியைவணங்கிப் புறம்பிலேதங்கினர்.—எ-று.

தரிசனமாத்திரத்தால் இங்ஙனம் ஆனந்தம்பெருகுதலை, "புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோற் - களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாந் - துளிக்குங் கண் ணீருடன் சோருநெஞ் சத்திரு - ளொளிக்குமா னந்த வமுதூறு முள்ளத்தே." என்னுந் திருமந்திரத்தாலுணர்க. கொள்கையாவது தினமும் திருநடனச்சிலம்பொலி அளிக்கப்பெறுதல். (௫௮)

பரவுந்தில்லைவட்டத்துப்பயில்வார்பைம்பொனம்பலத்து
ளரவும்புனலுஞ்சடையாடவாடுவார்கூத்தாராமை
விரவுங்காதன்மிக்கோங்கவேதம்படியுந்திருப்படிக்கீ
ழிரவும்பகலும்பணிந்தேத்தியின்பஞ்சிறக்குமந்நாளில்.

(இ-ள்.) பரவுந்தில்லைவட்டத்துப்பயில்வார் = எவருந்துதிக்கும் சிதம்பரத்தினெல்லையிலே வசிப்பாராகியநாயனுர்; அரவும்புனலுஞ்சடையாட=பாம்புங்கங்கையும் சடையிலேயசையும்படி; பைம்பொனம்பலத்துளாடுவார்கூத்து = கனகசபை

யில்நடனம்புரியும் கடவுளின்திருக்கூத்திலே; ஆராமைவிரவுங்காதன்மிக்கோங்க= தெவிட்டுதலின்றிச்செறிந்த விருப்பமானது தினமும் அதிகரிக்க; வேதம்படியுந்திருப்படிக்கீழ்=வேதங்குடிகொண்டுவசிக்கும் திருப்படியின்கீழடைந்து; இரவும்பகலும் பணிந்தேத்தி=இரவும்பகலுமாகிய ஆறுகாலங்களினும்வணங்கித்துதித்து; இன்பஞ் சிறக்குமந்நாளில் = இன்பமிக்கிருக்கும் அக்காலத்திலே.—எ-று. (ருக)

ஆடும்பெருமான்பாடல்கேட்டருளித்தாழ்த்தபடிதமக்குக்
கூடும்பரிசான்முன்பருளிச்செய்தநாவலூர்க்கோவை
நீடும்பெருங்காதலிற்காணநிறைந்தநினைவுநிரம்பமா
றேடும்பாதரருளினாற்றிருவாரூர்மேற்செலவெழுந்தார்.

(இ-ள்.) ஆடும்பெருமான்பாடல்கேட்டருளித்தாழ்த்தபடி = நடராஜப்பெருமான் நம்பியாரூரர்திருப்பாடலைத் திருச்செவியேற்றருளித் தாமதித்ததன்மையை; தமக்குக்கூடும்பரிசான்முன்பருளிச்செய்தநாவலூர்க்கோவை = தமக்குவிளங்கும் வகையால் முன்பருளிச்செய்யப்பட்ட திருநாவலூர்த்தலைவனை; நீடும்பெருங்காதலிற்காணநிறைந்தநினைவுநிரம்ப = நீண்டமிக்கவிருப்பத்தால் தரிசித்தற்கு நிறைவுற்ற சிந்தனையானது பூர்த்தியாதலும்; மாறேடும்பாதரருளினால் = திருமாலுந்தேடிய சீர்பாதங்களையுடைய சிற்சபேசர்திருவருள்பெற்று; திருவாரூர்மேற்செலவெழுந்தார் = திருவாரூரிற்செல்லுதற்குப் புறப்பட்டார்.—எ-று.

ஆடும்பெருமான்முன்பருளிச்செய்த என இயையும். செயப்பட்டவென்னும் செயப்பாட்டு வினைப்பெயரெச்சம் செய்வினைப்பெயரெச்சமாய் நின்றது. நிரம்பலாவது தரிசிக்குங்காதல் மீதூர்தல். (ருo)

அறிவினெல்லையாயதிருத்தில்லையெல்லையமர்ந்திறைஞ்சிப்
பிறிவிலாததிருவடியைப்பெருகுமுள்ளத்தினிற்பெற்றுச்
செறியுஞானபோனகர்வந்தருளும்புகலிசென்றிறைஞ்சி
மறிசேர்கரத்தார்கோயில்பலவணங்கிமகிழ்ந்துவழிக்கொள்வார்.

(இ-ள்.) அறிவினெல்லையாயதிருத்தில்லையெல்லையமர்ந்திறைஞ்சி = அறிவுக்கு எல்லையாய்விளங்கும் சிதம்பரத்தினெல்லையை விரும்பிவணங்கி; பிறிவிலாததிருவடியைப்பெருகுமுள்ளத்தினிற்பெற்று = தம்பால் நீக்கமில்லாத சபாநாதர்திருவடிகளைத் தமதுள்ளத்தில்நிறுத்திக்கொண்டு; செறியுஞானபோனகர்வந்தருளும் புகலிசென்றிறைஞ்சி = ஞானமயமாகியபாலையருந்திய ஆளுடையபிள்ளையாரவதரித்த சீர்காழியையடைந்து வணங்கி; மறிசேர்கரத்தார்கோயில் பலவணங்கிமகிழ்ந்து வழிக்கொள்வார் = மானைமேயந்திய திருக்கரத்தையுடையபெருமான் வீற்றிருக்கும் திருத்தலங்கள்பலவற்றையும்வணங்கிக் களித்துவழிச்செல்வார்.—எ-று.

சிவகதிபெறுதற்குரிய திவ்வியதலங்களுள் சிறந்ததுயாதெனஅறிவினராயுங்கால் எத்தலமும் ஒப்பாகப்பெறும் இச்சிதம்பரமேசிறந்தது இதனின்மேம்பட்டதில்லையென அறிவு அமைதிபெறுதலின் "அறிவினெல்லையாயதிருத்தில்லை" என்றார்.

வழியிற்குழியிற்செழுவயலின்மதகின்மலர்வாவிகளின்மடுச்
சுழியிற்றரளந்திரைசொரியுந்துறைநீர்ப்பொன்னிகடந்தேறி
விழியிற்றிகழுந்திருநுதலார்விரும்புமிடங்களிறைஞ்சியுகக்
கழியிற்பெருவெள்ளமுங்கொள்ளாக்கழனியாரூர்கண்ணுற்றார்.

(இ-ள்.) வழியிற்குழியிற்செழுவயலில் = வழிகளினும் குழிகளினும் செழித்தவயல்களினும்; மதகின்மலர்வாவிகளின்மடுச்சுழியில் = மதகுகளினும்மலர்வாவிகளினும் மடுச்சுழிகளினும்; தரளந்திரைசொரியுந்துறைநீர்ப்பொன்னிகடந்தேறி = முத்துக்களை அலைகளொதுக்கும் துறைகளையுடைய காவிரிநதியைக்கடந்தேறி; விழியிற்றிகழுந்திருநுதலார்விரும்புமிடங்களிறைஞ்சி = நெற்றிக்கண்ணுடைய நிமலர் வீற்றிருக்கும் பலதலங்களைவணங்கி; யுகக்கழிவிற்பெருவெள்ளமுங்கொள்ளா = யுகாந்தத்திலே உலகழியுமாறுபெருகும் பெருவெள்ளமும் அணுகப்பெறாத; கழனியாரூர்கண்ணுற்றார் = வயல்கள்செறிந்த திருவாரூரைக் காணப்பெற்றார்.—எ-று.

அனைத்தும் அழியும் அக்காலத்தும் அழிவின்றி அநாதியாகவுள்ளதென்பார் "யுகக்கழிவிற்பெருவெள்ளமுங்கொள்ளாவாரூர்" என்றார். இங்ஙனமே ஆளுடைய அரசும், "ஒருவனாய்" என்னுந்திருத்தாண்டகத்துள் திருவாரூர்கோயிலாக்கொண்டநாள் வரையறுக்கப்படாதென அநாதித்துவம் கூறியிருப்பதுணர்க. (கூஉ)

நம்பிதாமுமங்நாட்போய்நாகைக்காரோணம்பாடி
யம்பொன்மணிப்பூணவமணிகளாடைசாந்தமடற்பரிமா
பைம்பொற்சுரிகைமுதலானபெற்றுமற்றும்பலபதியிற்
றம்பிரானைப்பணிந்தேத்தித்திருவாரூரிற்சார்ந்திருந்தார்.

(இ-ள்.) நம்பியுமங்நாட்போய் = நம்பியாரூரரும் அந்நாளிற்சென்று; நாகைக்காரோணம்பாடி = திருநாகைக்காரோணமென்னுந்தலத்தைச்சுட்டித் திருப்பதிகமருளிச்செய்து; அம்பொன்மணிப்பூணவமணிகள் = அழகியபொன்னும் இரத்தினாபரணமும் நவரத்தினங்களும்; ஆடைசாந்தமடற்பரிமா = துகிலும் சந்தனமும் வெற்றிபெற்றதுரகமும்; பைம்பொற்சுரிகைமுதலானபெற்று = பசும்பொன் உறையோடுகூடிய உடைவாள்முதலியவும்பெற்று; மற்றும்பலபதியிற்றம்பிரானைப்பணிந்தேத்தி = மற்றும்பலதலங்களில் பெருமானைவணங்கித்துதித்து; திருவாரூரிற்சார்ந்திருந்தார் = திருவாரூரிலடைந்திருந்தார்.—எ-று. தாம் - அசை. (கூங)

## திருநாகைக்காரோணம் - பண் - கொல்லிக்கவ்வாணம்.

திருச்சிற்றம்பலம்.

பத்தூர்புக்கிரந்துண்டுபலபதிகம்பாடிப்பாவையரைக்கிறிபேசிப்படிறாடித்திரிவீர், செத்தார்தமெலும்பணிந்துசேவேறித்திரிவீர்செல்வத்தைமறைத்துவைத்தீரெனக்கொருநாளிரங்கீர்,முத்தாரமிலங்கிமிளிர்மணிவயிரக்கோவையவைபூணத்தந்தருளிமெய்க்கினிதாநாறுங், கத்தூரிகமழ்சாந்துபணித்தருளல்வேண்டுங்கடனாகைக்காரோணமேவியிருந்தீரே.

பண்மயத்தமொழிப்பரவைசங்கிலிக்குமெனக்கும்பற்றாயபெருமானேமற்றாரையுடையேனுண்மயத்தவுமக்கடியேன்குறைதீர்க்கவேண்டுமொளிமுத்தம்பூணாரமொண்பட்டும்பூவுங், கண்மயத்தகத்தூரிகமழ்சாந்தும்வேண்டுங்கடனாகைக்காரோணமேவியிருந்தீரென்,மண்மயத்தாலணிநாவலாரூரன்சொன்னவருந்தமிழ்களிவைவல்லாரமருலகாள்பவரே.

திருச்சிற்றம்பலம்.

க்வதுசேரர்பெருமானார்மன்னுந்திருவாரூரெய்த
வந்தணாளர்பெருமானுமரசர்பெருமான்வரப்பெற்றுச்
சிந்தைமகிழவெதிர்கொண்டுசென்றுகிடைத்தார்சேரலனார்
சந்தவிரைத்தார்வன்றொண்டர்முன்புவிருப்பினுடன்றாழ்ந்தார்.

(இ-ள்.) சேரர்பெருமானார்வந்துமன்னுந்திருவாரூரெய்த = சேரமான்பெருமாணாயனார்வந்து நிலைபெற்றதிருவாரூரையடைய; அந்தணாளர்பெருமானுமரசர்பெருமான்வரப்பெற்று = ஆளுடையநம்பிகளும் அந்நாயனார்வரவையுற்று; சிந்தைமகிழவெதிர்கொண்டுசென்றுகிடைத்தார் = திருவுளமகிழ எதிரெழுந்தருளிச்சென்று சமீபித்தார்; சேரலனார் = உடனேசேரமான்பெருமாணாயனார்; சந்தவிரைத்தார் வன்றொண்டர்முன்பு = அழகியவாசனைமிக்க மாலையையணிந்த அவ்வன்றொண்டப் பெருமான்முன்பு; விருப்பினுடன்றாழ்ந்தார் = காதலோடுநமஸ்கரித்தார்.—எ-று.

முன்புபணிந்தபெருமானைத்தாமும்பணிந்துமுகந்தெடுத்தே
யன்புபெருகத்தழுவவிரைந்தவருமார்வத்தொடுதழுவ
வின்பவெள்ளத்திடைநீந்தியேறமாட்டாதலைவார்போ
லென்புமுருகியுயிரொன்றியுடம்புமொன்றுமெனவிசைந்தார்.

(இ-ள்.) முன்புபணிந்தபெருமானை = தமதுமுன்னர்வணங்கிய அந்நாயனாரை; தாமும்பணிந்துமுகந்தெடுத்துஅன்புபெருகத்தழுவ = ஆளுடையநம்பிகளும் எதிர்பணிந்து தூக்கியெடுத்து அன்புமிகத்தழுவ; விரைந்தவருமார்வத்தொடுதழுவ= விரைவுற்று அந்நாயனாரும் காதலோடுதழுவ; இன்பவெள்ளத்திடைநீந்தி = இருவரும் இன்பப்பெருக்கிலேமுழுகி; ஏறமாட்டாதலைவார்போல் = அதைக்கடந்து கரையேறமுடியாது அதிலேமிதத்தலுடையார்போல; என்புமுருகியுயிரொன்றியுடம்புமொன்றுமெனவிசைந்தார்=எலும்புகளும் உருகி உயிரும்ஒற்றுமைப்பட்டு உடம்பும் ஒன்றுபோலுமென்றுகூறக் கலந்தார்.—எ-று. (௬௫)

ஆனநிலைமைகண்டதிருத்தொண்டரளவின்மகிழ்வெய்த
மானச்சேரர்பெருமானார்தாமும்வன்றொண்டருங்கலந்த
பான்மைநண்பாற்சேரமான்றோழரென்றுபார்பரவு
மேன்மைநாமமுனைப்பாடிவேந்தர்க்காகிவிளங்கியதால்.

(இ-ள்.) ஆனநிலைமைகண்டதிருத்தொண்டரளவின்மகிழ்வெய்த=அவ்வியல்பைநோக்கிய அடியவர்கள் எல்லையில்லாத இன்பத்தையடைய; மானச்சேரர்பெருமானாரும்=மாட்சிமைப்பட்டசேரமான்பெருமாணாயனாரும்; வன்றொண்டருங்கலந்த பான்மைநண்பால் = வன்றொண்டப்பெருமானும் ஒற்றுமைவாய்ந்த நிலைமையையுடைய நட்பினால்; முனைப்பாடிவேந்தர்க்கு = திருமுனைப்பாடிநாட்டுத்தலைவராகிய நம்பியாரூரருக்கு; சேரமான்றோழரென்று = சேரமான்றோழரென்று; பார்பரவு மேன்மைநாமமாகிவிளங்கியது = உலகினர்துதிக்கும் உயர்வுபெற்ற ஒருதிருநாமம் உண்டாகிவிளங்கியது.—எ-று. தாம்-ஆல்-அசைகள். (௬௬)

ஒருவரொருவரிற்கலந்தவுணர்வாலின்பமொழியுரைத்து
மருவவினியார்பாற்செய்வதென்னென்னுமகிழ்ச்சியினாற்
பருவமழைச்செங்கைபற்றிக்கொண்டுபரமர்தாள்பணியத்
தெருவுநீங்கிக்கோயிலினுட்புகுந்தார்சேரமான்றோழர்.

(இ-ள்.) ஒருவரொருவரிற்கலந்தவுணர்வால் = ஒருவரோடொருவர் கலப்புற்றவுணர்ச்சியால்; இன்பமொழியுரைத்துமருவ = இனியவார்த்தையிசைத்துப் பொருந்தியவழி; சேரமான்றோழர் = சேரமான்றோழராகிய ஆரூரர்; நாமினியார் பாற்செய்வதென்னென்னுமகிழ்ச்சியினால் = நாம் இனியஇத்தோழர்பால் இயற்றத் தக்கதுயாதென்னும் உவகையோடு; பருவமழைச்செங்கைபற்றிக்கொண்டு = காலமழைபோலும் கைம்மாறுகருதாக்கொடையையுடைய கழறிற்றறிவார்நாயனார் கரத்தைப்பற்றிக்கொண்டு; தெருவுநீங்கி = தெருவைக்கடந்து; பரமர்தாள்பணியக்கோயிலினுட்புகுந்தார் = தியாகேசப்பெருமான்திருவடிகளைவணங்கத் திருக்கோயிலுட் சென்றார்.—எ-று.

மருவியவழியென்னும் வினையெச்சம் மருவவெனத்திரிந்தது· ஆம்-அசை. இத்தோழருக்கு யாமியற்றற்பாலது வேறுயாது உடன்சென்று எம்பெருமானைத்தரிசிப்பித்தலேயெனக் கொண்டனரென்றவாறு. (௬௭)

சென்றுதேவாசிரயனைமுன்னிறைஞ்சித்திருமாளிகைவலங்கொண்
டொன்றுமுள்ளத்தொடும்புகுவாருடையநம்பிமுன்னாக
நின்றுதொழுதுகண்ணருவிவீழநிலத்தின்மிசைவீழ்ந்தே
யென்றுமினியதம்பெருமான்பாதமிறைஞ்சியேத்தினார்.

(இ-ள்.) சென்றுதேவாசிரயனைமுன்னிறைஞ்சி = போந்து தேவாசிரயனை முன்வணங்கிக்கொண்டு; திருமாளிகைவலங்கொண்டு = திருமாளிகையைவலஞ்செய்து; ஒன்றுமுள்ளத்தொடும்புகுவார் = ஒற்றுமைப்பட்டகருத்தோடும் உட்புகுவாராகிய சேரமான்பெருமாணாயனார்; உடையநம்பிமுன்னாகநின்றுதொழுது = ஆளுடையநம்பிகள்முன்னிற்கத் தாம்பின்னின்று அஞ்சலிசெய்து; கண்ணருவிவீழநிலத்தின்மிசைவீழ்ந்து=கண்ணீர் அருவிபோலச்சிந்தப் பூமியில்வீழ்ந்துபணிந்து; என்றுமினியதம்பெருமான்பாதமிறைஞ்சியேத்தினார் = எக்காலத்தும் தமக்கினியராய்வினங்கும் தியாகேசப்பெருமான்றிருவடிகளை வணங்கித்துதித்தார்.—எ-று. ஏ-அசை.

தேவர்முனிவர்வந்திறைஞ்சுந்தெய்வப்பெருமாள்கழல்வணங்கி
மூவர்தமக்குமுதலாகுமவரைத்திருமும்மணிக்கோவை
நாவலூரர்தம்முன்புநன்மைவிளங்கக்கேட்பித்தார்
தாவில்பெருமைச்சேரலனார்தம்பிரானார்தாங்கொண்டார்.

(இ-ள்.) தாவில்பெருமைச்சேரலனார் = சிதைதலில்லாதபெருமைவாய்ந்த சேரமான்பெருமாணாயனார்; தேவர்முனிவர்வந்திறைஞ்சும் = தேவரும் முனிவரும் வந்துவணங்கும்; தெய்வப்பெருமாள்கழல்வணங்கி = தியாகேசப்பெருமாள்திருவடிகளைவணங்கி; மூவர்தமக்குமுதலாகுமவரை = திரிமூர்த்திகளுக்கும் முதற்பொருளாய்விளங்கும் சிவபெருமானை; திருமும்மணிக்கோவை = திருமும்மணிக்கோவையென்னும்பிரபந்தத்தை; நன்மைவிளங்க = யாவர்க்கும் இன்பம்விளையும்படி; நாவலூரர்தம்முன்புகேட்பித்தார் = நம்பியாரூரருக்கெதிரேகேட்பித்தார்; தம்பிரானார் கொண்டார் = பெருமானும் அப்பிரபந்தத்தை அங்கீகரித்தருளினார்.—எ-று.

தாம் - அசை. வணங்கி முன்பு விளங்க அவரைக்கேட்பித்தார் என இயையும். (௬௯)

அங்கணருள்பெற்றெழுவாரைக்கொண்டுபுறம்போந்தாரூரர்
நங்கைபரவையார்திருமாளிகையினண்ணநன்னுதலார்

*பொங்குவிளக்குநிறைகுடமும்பூமாலைகளும்புகையகிலு*
*மெங்குமடவாரெடுத்தேந்தவணைந்துதாமுமெதிர்கொண்டார்.*

(இ-ள்.) ஆரூரரங்கணருள்பெற்றெழுவாரைக்கொண்டுபுறம்போந்து = நம்பியாரூரர் அங்கே திருவருள்பெற்றுவணங்கியெழும் அந்நாயனுரை உடன்கொண்டு வெளியேவந்து; நங்கைபரவையார்திருமாளிகையினண்ண = பரவைநாச்சியாரது திருமாளிகையிலடைய; நன்னுதலார் = அந்நாச்சியாரும்; பொங்குவிளக்குநிறைகுடமும் பூமாலைகளும்புகையகிலும் = சுடர்விளக்கும் பூரணகும்பமும் புஷ்பமாலிகைகளும் அகிற்புகையுமாகிய இவற்றை; எங்குமடவாரெடுத்தேந்த = எவ்விடத்தும் மடவார்தாங்கிச் சூழ்ந்துவர; தாமுமணைந்தெதிர்கொண்டார் = தாமும்வந்து எதிர்கொண்டார்.—எ-று. (எ0)

*சோதிமணிமாளிகையின்கட்சுடரும்பசும்பொற்காலமளி*
*மீதுபெருமாடமையிருத்திநம்பிமேவியுடனிருப்பக்*
*கோதில்குணத்துப்பரவையார்கொழுநனுர்க்குந்தோழர்க்கு*
*நீதிவழுவாவொழுக்கத்துநிறைபூசனைகண்முறையளித்தார்.*

(இ-ள்.) சோதிமணிமாளிகையின்கண் = ஒளிபரப்பும் மணிகளிழைத்த மாளிகையிலே; சுடரும்பசும்பொற்காலமளிமீது = பிரகாசிக்கும் பசும்பொற்கால்களையுடைய தவிசின்மீது; பெருமாடமையிருத்திநம்பிமேவியுடனிருப்ப = சேரமான் பெருமாணுயனுரையிருத்தி நம்பியாரூரும் உடனேவீற்றிருக்க; கோதில்குணத்துப் பரவையார் = குற்றமில்லாத நற்குணமமைந்தபரவைநாச்சியார்; கொழுநனுர்க்குந் தோழர்க்கும் = தங்கணவருக்கும் அவர்தோழருக்கும்; நீதிவழுவாவொழுக்கத்து நிறைபூசனைகண்முறையளித்தார் = விதிதவருதநியதியோடு விசேடமாகியவழிபாட்டைக் கிரமமாகச்செய்தார்.—எ-று. (எக)

*தாண்டுபுரவிச்சேரர்குலப்பெருமாடமக்குத்திருவமுது*
*தூண்டுசோதிவிளக்கனையாரமைக்கத்துணைவர்சொல்லுதலும்*
*வேண்டும்பரிசுவெவ்வேறுவிதத்துக்கறியும்போனகமு*
*மீண்டச்சமைப்பித்துடன்வந்தார்க்கெல்லாமியல்பின்விருந்தமைத்தார்.*

(இ-ள்.) தாண்டுபுரவிச்சேரர்குலப்பெருமாடமக்கு = தாவிச்செல்லும் குதிரையையுடைய சேரமான்பெருமாணுயனுர்க்கு; திருவமுதமைக்கத்துணைவர்சொல்லுதலும் = திருவமுதமைக்கும்படி திருநாவலூரர்கட்டளையிடுதலும்; தூண்டுசோதிவிளக்கனையார் = தூண்டப்பட்ட சுடர்விளக்கனைய காந்திபெற்ற பரவைநாச்சியாரும்; வேண்டும்பரிசுவெவ்வேறுவிதத்துக்கறியும்போனகமுமீண்டச்சமைப்பித்து = வேண்டும்படி பலவகைப்பட்டகறிவர்க்கங்களும் அன்னமும் விரையச்சமைப்பித்து; உடன்வந்தார்க்கெல்லாமியல்பின்விருந்தமைத்தார் = உடன்வந்தவர்களுக்கும் கிரமப்படியே விருந்துக்குரியவை அமைப்பித்தார்.—எ-று.

வேண்டும்பரிசமைத்தலாவது அரசபோகத்தைநுகரும் அவரும்விரும்பும்படி அரிதிற்சமைத்தல். (எஉ)

*அரசர்க்கமைத்தசிறப்பினுமேலடியார்க்கேற்கும்படியாக*
*விரவிப்பெருகுமன்பினுடன்விரும்புமமுதுசமைத்ததற்பின்*

புரசைக்களிற்றுச்சேரலனார்புடைசூழ்ந்தவரோடமுதுசெய்யப்
பரவைப்பிறந்ததிருவனையபரவையார்வந்தறிவித்தார்.

(இ-ள்.) விரவிப்பெருகுமன்பினுடன் = செறிந்தோங்கிய அன்போடு; அரசர்க்கமைத்தசிறப்பினுமேல் = சேரமான்பெருமாளுயனார்க்கமைத்த உயர்ச்சியினும் மேலாக; அடியார்க்கேற்கும்படியாக = அடியவர்களுக்குத்தக்கவண்ணம்; விரும்புமமுதசமைத்ததற்பின்=விரும்பத்தக்கதிருவமுது அமைத்ததன்பின்; பரவைப்பிறந்த திருவனையபரவையார்வந்து = பாற்கடலிலுதித்தஇலக்குமியையொத்த பரவைநாச்சியார்வந்து; புரசைக்களிற்றுச்சேரலனார் = கழுத்தணிகயிறுவாய்ந்தயானையையுடைய கழறிற்றறிவார்நாயனார்; புடைசூழ்ந்தவரோடமுதுசெய்யவறிவித்தார்=உடன்வந்தவரோடு திருவமுதுசெய்தற்கு விண்ணப்பித்தார்.—எ-று. (௭௩)

சேரர்பெருமானெழுந்தருளியமுதுசெய்யச்செய்ததவத்
தாரின்மலிபூங்குழன்மடவாய்தாழாதமுதுசெய்வியெனப்
பாரின்மலிசீர்வன்றொண்டரருளிச்செய்யப்பரிகலங்க
ளேரின்விளங்கத்திருத்திக்காலிரண்டிற்படியாவேற்றுதலும்.

(இ-ள்.) சேரர்பெருமானெழுந்தருளியமுதுசெய்ய = சேரமான்பெருமானெழுந்தருளித் திருவமுதுசெய்தற்கு; செய்ததவத்தாரின்மலிபூங்குழன்மடவாய் = செய்ததவத்தையுடையநங்கையே; தாழாதமுதுசெய்வியென = தாமதியாமல் அவர்க்குத் திருவமுதுசெய்வியென்று; பாரின்மலிசீர்வன்றொண்டரருளிச்செய்ய = உலகிற்பரம்பிய கீர்த்தியையுடைய நம்பியாரூரர் உரைத்தருள; பரிகலங்களேரின்விளங்கத்திருத்தி = பரிகலங்களை அழகோடுவிளங்கச் சுத்திசெய்து; காலிரண்டிற்படியாவேற்றுதலும் = இரண்டுபீடங்களிலே சமமாகவைத்தலும்.—எ-று.

பூந்தாரின்மலிகுழல் = பூமாலையாற்சிறந்தகூந்தல். கால் - பரிகலம்வைத்தற்குரிய பீடம். படி - சமம். (௭௪)

ஆண்டநம்பிபெருமானையுடனேயமுதுசெய்தருள
வேண்டுமென்னவாங்கவரும்விரைந்துவணங்கிவெருவுறலு
நீண்டதடக்கைபிடித்தருளிமீண்டுநேரேகுறைகொள்ள
வீண்டவமுதுசெய்வதனுக்கிசைந்தார்பொறையர்க்கிறையவனார்.

(இ-ள்.) ஆண்டநம்பிபெருமானையுடனேயமுதுசெய்தருளவேண்டுமென்ன= நம்பியாரூரர் சேரமான்பெருமாளுயனாரை உடனே திருவமுதுசெய்யவேண்டுமென்றவழி; அவரும்விரைந்துவணங்கிவெருவுறலும் = அந்நாயனாரும் விரைவாகப் பணிந்து அஞ்சுதலும்; நீண்டதடக்கைபிடித்தருளி = அவரது நீண்டதிருக்கரத்தைப் பிடித்துக்கொண்டு; மீண்டுநேரேகுறைகொள்ள = பின்னரும் நேரேவேண்டிக்கொள்ள; பொறையர்க்கிறையவனாரீண்டவமுதுசெய்வதனுக்கிசைந்தார் = அச்சேரமான்பெருமாளுயனாரும் உடனே திருவமுதுசெய்தற்கு உடன்பட்டார்.—எ-று.

ஆளுடையநம்பிகள் அந்தணருட்சிறந்த ஆதிசைவரும் தாம் அரசருமாதல் பற்றி உடனமுதுசெய்ய அஞ்சினரென்க. (௭௫)

ஒக்கவமுதுசெய்தருளவுயர்ந்ததவத்துபபரவையார
மிக்கவிருப்பாலமுதுசெய்வித்தருளிமேவும்பரிசனங்க

டக்கவகையாலறுசுவையுந்தாம்வேண்டியவாறினிதருந்தத்
தொக்கமகிழ்ச்சிகளிசிறப்பத்தூயவிருந்தின்கடன்முடித்தார்.

(இ-ள்.) உயர்ந்ததவத்துப்பரவையார் = மிக்கதவத்தையுடையபரவைநாச்சியார்; ஒக்கவமுதுசெய்தருள = இருநாயன்மார்களும் ஒருங்கிருந்து திருவமுது கொண்டருளும்படி; மிக்கவிருப்பிலமுதுசெய்வித்தருளி = மிகுந்தவிருப்பத்தாற்றிருவமுதுசெய்வித்து; மேவும்பரிசனங்கள் = உடன்வந்தபரிசனங்களும்; தக்கவகையாலறுசுவையுந்தாம்வேண்டியவாறினிதருந்த = தக்கபடிஅறுசுவையமைந்தஉணவுகளைத் தாம்விரும்பியவாறு இனிதுஉண்ண; தொக்கமகிழ்ச்சிகளிசிறப்ப = செறிந்த மகிழ்ச்சியோடு களிப்பும் மிக; தூயவிருந்தின்கடன்முடித்தார் = செவ்விய விருந்தின் செயலைமுடித்தார்.—எ-று.

உமமை முற்றும்மை. மகிழ்ச்சி - உணர்ச்சியுமிழக்கும் பேருவகை. களிப்பு - அவ்வுணர்ச்சியிழவாதஉவகை. விருந்துசெய்வித்தலில் இப்பரவைநாச்சியாருக்கு இவ்விருதிறமும் ஏககாலத்தில் ஒருங்குநிகழ்ந்தன என்றபடி. மகிழ்ச்சியுங்களிப்பும் இப்பொருள்படுதலை "உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங் - கள்ளுக்கில் காமத் திற் குண்டு." என்னுந்திருக்குறளானுமுணர்க. (எசு)

பனிநீர்விரவுசந்தனத்தின்பசுங்கர்ப்பூரவினைக்கலவை
வனிதையவர்கள்சமைத்தெடுப்பக்கொடுத்துமகிழ்மான்மதச்சாந்தும்
புனிதநறும்பூமாலைகளும்போற்றிக்கொடுத்துப்பொற்கொடியா
ரினியபஞ்சவாசமுடனடைக்காயமுதுமேந்தினார்.

(இ-ள்.) பொற்கொடியார் = பொற்கொடிபோல்வாராகியபரவைநாச்சியார்; பனிநீர்விரவுசந்தனத்தின்பசுங்கர்ப்பூரவினைக்கலவை=பனிநீர்கலந்தசந்தனத்தோடு பச்சைக்கர்ப்பூரமுங்கூட்டியவாசனைக்கலவைகளை; வனிதையவர்கள்சமைத்தெடுப்பக்கொடுத்து = தாதியர் கூட்டியெடுத்தேந்த இருவருக்குங்கொடுத்து; மகிழ்மான்மதச்சாந்தும் = களித்தற்கேதுவாகிய கஸ்தூரிக்கலவையும்; புனிதநறும்பூமாலைகளும் போற்றிக்கொடுத்து = பரிசுத்தமாகிய பரிமளமிக்கமலர்மாலைகளும் வணங்கிக்கொடுத்து; இனியபஞ்சவாசமுடன் = இனிமைபெற்ற பஞ்சவாசங்களோடும்; அடைக்காயமுதுமேந்தினார் = தாம்பூலமும் தாங்கினார்.—எ-று.

பஞ்சவாசம் "தக்கோல மேலந் தகைசா லிலவங்கங் - கர்ப்பூரஞ் சாதியோ டைந்து" என்பதனுலுணர்க. கர்ப்பூரம் - பச்சைக்கர்ப்பூரம். அடை - வெற்றிலை. காய் - பாக்கு. (எஎ)

ஆயசிறப்பிற்பூசனைகளளித்தவெல்லாமமர்ந்தருளித்
தூயநீறுதங்கடிருமுடியில்வாங்கித்தொழுதணிந்து
மேயவிருப்பினுடனிருப்பக்கழறிற்றறிவார்மெய்த்தொண்டின்
சேயநீர்மையடைந்தாராய்நம்பிசெம்பொற்கழல்பணிந்தார்.

(இ-ள்.) ஆயசிறப்பிற்பூசனைகளளித்தவெல்லாமமர்ந்தருளி = இவ்வகைச் சிறப்போடுசெய்த வழிபாடுகளையெல்லாம் ஏற்றருளி; தூயநீறுவாங்கித்தொழுது தங்கடிருமுடியிலணிந்து = பின்னர்ச் சுத்தமாகியவிபூதியைவாங்கிப் பெருமானைத் தொழுதுகொண்டே தங்கள்திருநெற்றியிற்றரித்து; மேயவிருப்பினுடனிருப்ப=நிலைபெற்றவிருப்பத்தோடிருப்ப; கழறிற்றறிவார் = கழறிற்றறிவார்நாயனார் ; மெய்த்

தொண்டின்சேயநீர்மையடைந்தாராய் = தாம்அனுட்டித்த உண்மைத்தொண்டினுடையசெவ்வியதன்மை பூர்த்தியாகப்பெற்றாராய்; நம்பிசெம்பொற்கழல்பணிந்தார் = வன்றொண்டப்பெருமானுடைய செம்பொன்போலும்திருவடிகளை வணங்கினார்.

ஆளுடையநம்பிகளின் அரியநட்பு அடையப்பெற்றமையால் தமது அரியதவம் நிறைவேறிற்றென அன்புமேலீட்டாற் பணிந்தனரென்பதுகருத்து. மெய்த்தொண்டின்சேயநீர்மையடைந்தாராய் என்பதற்குத், தூரத்ததாகஇருந்த மெய்த்தொண்டினை இப்பொழுது அடையப்பெற்றாராய்ச்சிந்தித்து எனினும் அமையும். (எஅ)

மலைநாட்டரசர்பெருமானார்வணங்கவணங்கியெதிர்தழுவிக்
கலைநாட்பெருகுமதிமுகத்துப்பரவையார்தங்கணவனார்
சிலைநாட்டியவெல்கொடியாரைச்சேரத்தந்தாரெனக்கங்கை
யலைநாட்கொன்றைமுடிச்சடையாரருளேபோற்றியுடனமர்ந்தார்.

(இ-ள்.) மலைநாட்டரசர்பெருமானார்வணங்க = மலைநாட்டரசர்களுக்குத் தலைவராகிய சேரமான்பெருமானாயனார்வணங்க; கலைநாட்பெருகுமதிமுகத்துப்பரவையார்தம் = தினமும் கலைநிரம்பப்பெற்ற மதிபோலும் திருமுகத்தையுடைய பரவைநாச்சியாரது; கணவனார் = கணவராகியவன்றொண்டப்பெருமான்; எதிர்வணங்கித்தழுவி = தாமும் எதிர்வணங்கித் தழுவிக்கொண்டு; கங்கையலைநாட்கொன்றைமுடிச்சடையார் = தேவகங்கைநதியும் அன்றலர்ந்தகொன்றைமாலிகையும் செறிந்த சடைமுடியையுடைய சிவபெருமான்; சிலைநாட்டியவெல்கொடியாரை = வில்லைவரைந்த வெற்றிக்கொடியையுடைய இச்சேரமான்பெருமானாயனாரை; சேரத்தந்தாரென = சினேகமாகக்கூட்டுவித்தாரென்று; அருளேபோற்றியுடனமர்ந்தார் = அக்கடவுளருளையேதுதித்து அவருடன்வசித்தார்.—எ-று. (எகூ)

செல்வத்திருவாரூர்மேவுஞ்செம்பொற்புற்றிலினிதமர்ந்த
வில்வெற்புடையார்கழல்வணங்கிவீதிவிடங்கப்பெருமானை
மல்லற்பவனிசேவித்துவாழ்ந்துநாளுமனமகிழ்ந்து
சொல்வித்தகர்தாமிருவர்களுந்தொடர்ந்தகாதலுடன்சிறந்தார்.

(இ-ள்.) சொல்வித்தகரிருவர்களும் = சீர்த்திபெற்ற ஞானசொரூபிகளாகிய இருவர்களும்; செல்வத்திருவாரூர்மேவும் = செல்வமிக்க திருவாரூரிலுள்ள; செம்பொற்புற்றிலினிதமர்ந்த வில் வெற்புடையார் கழல்வணங்கி = செம்பொற்புற்றை இடமாகக்கொண்டு மேருமலையைவில்லாகவுடையராய் இனிது வதிந்தருளும் திருமூலத்தானப்பெருமான்றிருவடிகளைவணங்கி; வீதிவிடங்கப்பெருமானைமல்லற்பவனி நாளுஞ்சேவித்து = தியாகேசப்பெருமானது வளப்பம்பொருந்திய திருவுலாவையும் தினமும்பணிந்து; மனமகிழ்ந்துவாழ்ந்து = களித்துவாழ்வுற்று; தொடர்ந்தகாதலுடன்சிறந்தார் = இடைவிடாக்காதலோடும் வீற்றிருந்தார்.—எ-று.

பெருமானை - வேற்றுமைமயக்கம். (அ0)

இவ்வாறொழுகுநாளின்கணிலங்குமணிப்பூண்வன்றொண்டர்
மைவாழ்களத்துமறையவனார்மருவுமிடங்கள்பலவணங்கிச்
செய்வார்கன்னித்தமிழ்நாட்டுத்திருமாமதுரைமுதலான
மொய்வார்சடையார்மூதூர்களிறைஞ்சமுறைமையானினைந்தார்.

(இ-ள்.) இவ்வாறொழுகுநாளின்கண் = இங்ஙனம் வசிக்கும்நாளில்; இலங்குமணிப்பூண்வன்றொண்டர் = பொலிவுற்ற இரத்தினாபரணங்களைப்புனைந்த நம்

பியாரூரர்; மைவாழ்களத்துமறையவனூர்மருவும் = விடந்தங்கியகண்டத்தையுடைய வேதநாயகர்வீற்றிருக்கும்; இடங்கள்பலவணங்கி = தலங்கள் பலவற்றைப் பணிந்து கொண்டு; செய்வார்கன்னித்தமிழ்நாட்டு = வயல்மிகப்பெற்ற தமிழ்நாடாகிய பாண்டிநாட்டிலே; மொய்வார்சடையார் = செறிந்தநீண்டசடையையுடைய சிவபெருமானுக்குரிய; திருமாமதுரைமுதலானமூதூர்கள் = சிறந்த திருமதுரைமுதலாகிய பூர்வ தலங்களை; முறைமையாலிறைஞ்சநினைந்தார் = முறைப்படிவணங்குதற்குச் சிந்தித்தார்.—எ-று. (அக)

சேரர்பிரானுமாரூரர்தம்மைப்பிரியாச்சிறப்பானு
மார்வம்பெருகத்தமக்கன்றுமதுரையாலவாயமர்ந்த
வீரரளித்ததிருமுகத்தால்விரும்புமன்பின்வணங்குதற்குச்
சாரவெழுந்தகுறிப்பானுந்தாமுமுடனேசெலத்துணிந்தார்.

(இ-ள்.) சேரர்பிரானும் = கழறிற்றறிவார்நாயனாரும்; ஆரூரர்தம்மைப்பிரியாச்சிறப்பாலும் = நம்பியாரூரரை விட்டுப்பிரியாக்காதலாலும்; தமக்கார்வம்பெருக = தமக்கு அன்புமிகும்படி; மதுரையாலவாயமர்ந்தவீரரன்றளித்ததிருமுகத்தால் = மதுரைத்திருவாலவாயின்கணமர்ந்த பெருமானளித்த திருமுகங்காரணமாக; விரும்புமன்பின்வணங்குதற்கு = விரும்பத்தக்க அன்பினால் அப்பெருமானை வணங்குதற்கு; சாரவெழுந்தகுறிப்பாலும் = (அத்தலத்தை) அடையவேண்டுமென உண்டாகிய கருத்தினாலும்; தாமுமுடனேசெலத்துணிந்தார் = தாமும் உடனேபுறப்படுதற்குத் துணிந்தார் —எ-று.

சிறப்பாலும் குறிப்பாலும் செலத்துணிந்தாரென இயையும். திருமுகத்தால் வணங்குதற்கெழுந்தகுறிப்பென முடிக்க. (அஉ)

இருவர்திருவுள்ளமுமிசைந்தபொழுதிலெழுந்துதிருவாரூ
ரொருவர்திருத்தாள்புக்கிறைஞ்சியுடன்பாட்டருளாற்போந்தருளி
மருவுமுரிமைப்பெருஞ்சுற்றம்வரம்பில்பணிகள்வாகனங்கள்
பொருவில்பண்டாரங்கொண்டுபோதுவார்களுடன்போத.

(இ-ள்.) இருவர்திருவுள்ளமுமிசைந்தபொழுதிலெழுந்து = இரண்டுநாயன்மார்களுடையதிருவுள்ளமும் ஒற்றுமைப்பட்டவேளையில் எழுந்து; திருவாரூரொருவர்திருத்தாள்புக்கிறைஞ்சி = திருவாரூரிலெழுந்தருளியிருக்கும் ஒப்பற்றகடவுளின் திருவடிகளைச்சேர்ந்துவணங்கி; உடன்பாட்டருளாற்போந்தருளி = அப்பெருமானுடைய திருவருளனுமதியும் பெற்றுப் புறம்வந்து; உரிமைமருவும்பெருஞ்சுற்றம் = உரிமையமைந்த பெரியசுற்றத்தார்களும்; வரம்பில்பணிகள்வாகனங்கள்பொருவில் பண்டாரம் = அளவில்லாத ஆபரணங்களும் வாகனங்களும் நிகரில்லாததிரவியங்களுமாகிய இவற்றை; கொண்டுபோதுவார்களுடன்போத = தாங்கிவருபவர்களும் உடனேவர.—எ-று. (அங)

சேவித்தணையும்பரிசனங்கள்சூழத்திருவாரூரிறைஞ்சிக்
காவிற்பயிலும்புறம்பணையக்கடந்துபோந்துகீழ்வேளூர்
மேவிப்பரமர்கழல்வணங்கிப்போந்துவேலைக்கழிக்கானற்
பூவிற்றிகழும்பொழினாகைபுகுந்துகாரோணம்பணிந்தார்.

(இ-ள்.) சேவித்தணையும்பரிசனங்கள்சூழ = தம்மைவழிபட்டுவரும் பரிச

யிலும்புறம்பணையைக்கடந்துபோந்து = சோலையோடுபொருந்திய நகர்ப்புறத்தை நீங்கிச்சென்று; கீழ்வேளூர்மேவிப்பரமர்கழல்வணங்கிப்போந்து = கீழ்வேளூரென்னுந்தலத்தையடைந்து சிவபெருமான்றிருவடிகளைவணங்கிச்சென்று; வேலைக்கழிக்கானற்பூவிற்றிகழும்பொழில் சூழ் கடலோடுகழிகளும்வாய்ந்த நெய்தனிலத்தோடு பூஞ்சோலைகளும்விளங்கும்; நாகைபுகுந்துகாரோணம்பணிந்தார் = திருநாகையென்னுந்தலத்தையடைந்து காரோணமென்னும் ஆலயத்தில் அமரும்பெருமானைப் பணிந்தார்.—எ-று. (௮௪)

திருக்காரோணச்சிவக்கொழுந்தைச்சென்றுபணிந்துசிந்தையினை
யுருக்கார்வச்செந்தமிழ்மாலைசாத்திச்சிலநாளுறைந்துபோய்ப்
பெருக்காறுலவுசடைமுடியாரிடங்கள்பிறவும்பணிந்தேத்தி
யருட்காரணர்தந்திருமறைக்காடணைந்தார்சேரராரூரர்.

(இ-ள்.) திருக்காரோணச்சிவக்கொழுந்தைச்சென்றுபணிந்து = திருக்காரோணத்திலேவீற்றிருக்கும் சிவக்கொழுந்தாகியபெருமானைச் சேர்ந்துவணங்கி; சிந்தையினையுருக்கார்வச்செந்தமிழ்மாலைசாத்தி = யாவர்சித்தத்தையும் உருக்குகின்ற அன்புமயமாகியசெந்தமிழ்மாலையைப் பெருமானுக்கணிந்து; சிலநாளுறைந்துபோய் = அங்கே சிலநாள்வசித்தகன்று; பெருக்காறுலவுசடைமுடியாரிடங்கள்பிறவும்பணிந்தேத்தி = பெருகியகங்கைகுடிகொண்ட சடைமுடியையுடைய பெருமானமரும் பிறதலங்களையும்வணங்கித்துதித்து; அருட்காரணர்தந்திருமறைக்காடு = அருள்விளைதற்கு மூலப்பொருளாகிய அமலர்வீற்றிருக்கும் திருமறைக்காட்டை; சேரராரூரரணைந்தார் = சேரமான்பெருமாணயனாரும் நம்பியாரூரரும் சேர்ந்தார்.—எ-று. (௮௫)

முந்நீர்வலங்கொண்மறைக்காட்டுமுதல்வர்கோயில்சென்றிறைஞ்சிச்
செந்நீர்வாய்மைத்திருநாவுக்கரசும்புகலிச்சிவக்கன்று
மந்நேர்திறக்கவடைக்கவெனப்பாடுந்திருவாயிலையணைந்து
நன்னீர்பொழியும்விழியினராய்நாயன்மாரைநினைந்திறைஞ்சி.

(இ-ள்.) முந்நீர்வலங்கொண்மறைக்காட்டுமுதல்வர்கோயில்சென்றிறைஞ்சி = கடல்புடைசூழ்ந்த திருமறைக்காட்டிலெழுந்தருளிய கடவுளது ஆலயத்தையடைந்து வணங்கி; செந்நீர்வாய்மைத்திருநாவுக்கரசும் = செவ்வியநிலைமை உண்மையாகவாய்ந்த திருநாவுக்கரசுநாயனாரும்; புகலிச்சிவக்கன்றும் = சீர்காழியிலவதரித்த சிவகுமாரராகிய திருஞானசம்பந்தப்பெருமானும்; திறக்கவடைக்கவெனப்பாடும் = அபிமுகவாயில் திறக்கவும் அடைக்கவும் அருள்பாலிக்கவேண்டுமென்று அமலனைப்பாடிய; அந்நேர்திருவாயிலையணைந்து = அத்தகையதிருவாயிலையடைந்து; நன்னீர்பொழியும்விழியினராய் = நல்லநீரைச்சொரியும் கண்களையுடையராய்; நாயன்மாரைநினைந்திறைஞ்சி = அவ்விரண்டுநாயன்மார்களையும் சிந்தித்துவணங்கி.—எ-று.

முந்நீர் - ஆக்கல் காத்தல் அழித்தலென்னும் முத்தொழிற்றன்மையுடைய கடல். செந்நீர்மையாவது கந்தையும்மிகையெனக்கொள்ளுங்கருத்தொடு ஒழுக்கமும் வழுவாப் பெருந்துறவுஉடைமை. கண்ணீர் அன்புமயமாகலின் நன்னீரென்றார். (௮௬)

நிறைந்தமறைகளர்ச்சித்தநீடுமறைக்காட்டருமணியை
யிறைஞ்சிவீழ்ந்துபணிந்தெழுந்துபோற்றியாழைப்பழித்தென்னு
மறைந்தபதிகத்தமிழ்மாலைநம்பிசாத்தவருட்சேரர்
சிறந்தவந்தாதியிற்சிறப்பித்தனவேயோதித்தொழுதெழுந்தார்.

(இ-ள்.) நிறைந்தமறைகளர்ச்சித்த = எப்பொருளும்நிறைவுற்ற வேதங்கள் பூசித்த; நீடுமறைக்காட்டருமணியை = மிக்கவேதாரணியத்தில்வீற்றிருக்கும் அருமணிபோலும்பெருமானை; இறைஞ்சிவீழ்ந்துபணிந்தெழுந்துபோற்றி = அஞ்சலித்துப் பூமியிலேவீழ்ந்துவணங்கி எழுந்து துதித்து; யாழைப்பழித்தென்னும்அறைந்த பதிகத்தமிழ்மாலைநம்பிசாத்த = "யாழைப்பழித்து" என்னும் சீர்த்திபெற்ற திருப்பதிகத்தமிழ்மாலையை நம்பியாரூரர்தரிக்க; அருட்சேரர் = திருவருள்பெற்றசேரகுலாதிபர்; சிறந்தவந்தாதியில் = தாம் அருளிய சிறந்த பொன்வண்ணத்தந்தாதியில்; சிறப்பித்தனவே = சிறப்பித்தனவற்றையே; ஒதித்திளைத்தெழுந்தார் = எடுத்துத் துதித்து நமஸ்கரித்தெழுந்தார்.—எ-று.

அன்பர்சிந்தனையைநிரப்பலின் சிந்தாமணிபோல்பவரென்பார் "அருமணி" என்றார். பொன்வண்ணத்தந்தாதியிற் சிறப்பித்தவாவன. "தயருந் தொழுமழுஞ் சோருந் துகிலுங் கலையுஞ்செல்லப் - பெயரும் பிதற்று நகும்வெய் துயிர்க்கும் பெரும்பிணிகூர்ந் - தயரு மமர்விக்கு மூரி நிமிர்க்குமந் தோவிங்ஙனே - மயரு மறைக் காட் டிறைக்காட் டகப்பட்ட வாணுதலே" எனவும், "கொட்டுஞ் சிலபல சூழுநின் றார்க்குங்குப் புற்றெழுந்து - நட்ட மறியுங் கிரீடிக்கும் பாடு நகும்வெருட்டும் - வட்டம் வருமருஞ் சாரணை செல்லு மலர்தயங்கும் - புட்டங் கிரும்பொழில் சூழ்மறைக் காட்டரன் பூதங்களே." எனவும் உள்ளனவாம். (அஎ)

## திருமறைக்காடு - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

யாழைப்பழித்தன்னமொழிமங்கையொருபங்கன்
பேழைச்சடைமுடிமேற்பிறைவைத்தானிடம்பேணிற்
றாழைப்பொழிலூடேசென்றுபூழைத்தலைநுழைந்து
வாழைக்கனிகூழைக்குரங்குண்ணும்மறைக்காடே.

பாரூர்பலபுடைசூழ்வளவயனாவலர்வேந்தன்
வாரூர்வனமுலையாளுமைபங்கன் மறைக்காட்டை
யாரூரனதமிழ்மாலைகள்பாடும்மடித்தொண்டர்
நீரூர்தருநிலமேனுயர்புகழாகுவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

எழுந்துபணிந்துபுறத்தெய்தியிருவரும்பெருந்தொண்டருஞ்சிலநாட்
செழுந்தண்பழனப்பதியதனுளமர்ந்துதென்பாற்றிரைக்கடனஞ்
சுழுந்துமிடற்றாரகத்தியான்பள்ளியிறைஞ்சியவிர்மதியக்
கொழுந்துவளர்செஞ்சடைக்குழகர்கோடிக்கோயில்குறுகினார்.

(இ-ள்.) பெருந்தொண்டரிருவரும் = சிறந்ததொண்டர்களாகிய இருநாயன்மார்களும்; பணிந்தெழுந்துபுறத்தெய்தி = நமஸ்கரித்தெழுந்து புறத்தையடைந்து; செழுந்தண்பழனப்பதியதனுட்சிலநாளமர்ந்து = செழித்த குளிர்ந்த வயல்சூழ்ந்த அத்தலத்திலே சிலநாள்வதிந்தபின்பு; தென்பால் = அதற்குத்தென்பக்கத்திலுள்ள; திரைக்கடனஞ்சழுந்துமிடற்றார் = கடலிற்றோன்றியவிடந்தோய்ந்துள்ள கண்டத்தையுடையகடவுளமரும்; அகத்தியான்பள்ளியிறைஞ்சி = திருஅகத்தியான்பள்ளி

னயத்தொழுது; அவிர்மதியக்கொழுந்துவளர்செஞ்சடை = பிரகாசிக்கின்ற இளஞ் ்ந்திரன் றங்கிய செஞ்சடைமுடியையுடைய; குழகர்கோடிக்கோயில்குறுகினார்=குழ ர்வீற்றிருக்கும் கோடிக்கோயிலையடைந்தார்.—எ-று. (அஅ)

> கோடிக்குழகர்கோயிலயற்குடிகளொன்றும்புறத்தெங்கு
> நாடிக்காணுதுள்புக்குநம்பர்பாதந்தொழுதுள்ளம்
> வாடிக்கடிதாய்க்கடற்காற்றென்றெடுத்துமலர்க்கண்ணீர்வாரப்
> பாடிக்காடுகாள்புணர்ந்தபரிசும்பதிகத்திடைவைத்தார்.

(இ-ள்.) கோடிக்குழகர்கோயிலயற்புறத்தெங்குநாடி=கோடிக்குழகர்வீற்றிருக்கும் ஆலயத்தின் அயலிடமெங்கும்பார்த்து; குடிகளொன்றும்காணு துள்புக்கு= ஒருகுடியுங்காணமையால் உள்ளேபுகுந்து; நம்பர்பாதந்தொழுது = சிவபெருமான் றிருவடிகளைவணங்கி; உள்ளம்வாடி = திருவுள்ளத்திலேவாட்டமுற்று; கடிதாய்க் கடற்காற்றென்றெடுத்து = "கடிதாய்க்கடற்காற்று" என்றுதொடங்கி; மலர்க்கண் ணீர்வாரப்பாடி = அலர்போலுங்கண்களிலே நீர்பொழியப்பாடி; காடுகாள்புணர்ந்த பரிசும்பதிகத்திடைவைத்தார் = அங்கே காடுகாளென்னுந்தேவதை குடிகொண்டி ருக்குந்தன்மையையும் பதிகத்திலேவைத்தருளினார்.—எ-று.

இறைஞ்சுவாரின்மைநோக்கிப் பெருந்துயருழந்தனரென்பார், "குடிகளொன் றுங்காணுதுவாடினார்" என்றார். (அகூ)

## திருக்கோடிக்குழகர் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

> கடிதாய்க்கடற்காற்றுவந்தெற்றக்கரைமேற்
> குடிதானயலேயிருந்தாற்குற்றமாமோ
> கொடியேன்கண்கள்கண்டனகோடிக்குழகீ
> ரடிகேளுமக்கார்துணையாகவிருந்தீரே.
> பாரூர்மலிசூழ்மறைக்காடதன்றென்பா
> லேராார்பொழில்சூழ்தருகோடிக்குழகை
> யாரூரனுரைத்தனபத்திவைவல்லார்
> சீரூர்சிவலோகத்திருப்பவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - அமுதகடநாதர், தேவியார் - மையார்தடங்கண்ணயகியம்மை.

திருப்பதிகம் - க.

---

> அங்குவைகிப்பணிந்தருளாற்போவாரகன்சோணாட்டரனார்
> தங்குமிடங்கள்வணங்கிப்போய்ப்பாண்டிநாடுதனைச்சார்ந்து
> திங்கண்முடியார்திருப்புத்தூரிறைஞ்சிப்போந்துசேண்விளங்கு
> மங்குறவழுமணிமாடமதுரைமூதூர்வந்தணைந்தார்.

(இ-ள்.) அங்குவைகிப்பணிந்தருளாற்போவார் = அத்தலத்திலேவசித்து அண் ணலைப்பணிந்து திருவருள்பெற்றுச்செல்வாராகிய நம்பியாரூரர்; அகன்சோணாட் டரனார்தங்கும் = விசாலித்தசோழநாட்டிலே பெருமான்வீற்றிருக்கும்; இடங்கள் வணங்கிப்போய் = பலதலங்களையும் பணிந்துசென்று; பாண்டிநாடுதனைச்சார்ந்து= பாண்டிநாட்டையடைந்து; திங்கண்முடியார்திருப்புத்தூரிறைஞ்சிப்போந்து = சந்

இரனைச்சூடிய சடைமுடியுடைய சிவபெருமானுக்குரிய திருப்புத்தூரைவணங்கிப் போய்; சேண்விளங்குமங்குறவமும் = ஆரத்திலுள்ளமேகங்களும் படியப்பெற்ற; மணிமாடமதுரைமூதூர்வந்தடைந்தார் = மணிமாடங்களையுடைய பழமையாகிய மதுரையென்னுந்திருப்பதியைச் சமீபித்தார்.—எ-று. (கூ0)

சேரமான்றோழருமச்சேரனாரும்பணிப்பூ
ணாரமார்பரைமதுரையாலவாயினில்வணங்க
வாரமாவந்தணையவழுதியார்மனக்காதல்
கூரமாநகர்கோடித்தெதிர்கொண்டுகொடுபுக்கார்.

(இ-ள்.) சேரமான்றோழருமச்சேரனாரும் = சேரமான்றோழரும் அச்சேரமான்பெருமாணயனாரும்; மதுரையாலவாயினில் = மதுரையிலுள்ள திருவாலவாயின் கண்ணே; பணிப்பூணாரமார்பரைவணங்கவாரமாவந்தணைய = அரவாபரணத்தையணிந்த மார்பையுடைய அமலனைவணங்குதற்கு அன்போடுவந்துசேர; வழுதியார் மனக்காதல்கூரமாநகர்கோடித்து = பாண்டிமன்னவர் மனத்தில் அன்புபெருகத் தமதுபெருமைபெற்றநகரை அலங்கரித்து; எதிர்கொண்டுகொடுபுக்கார் = எதிர்கொண்டு அழைத்துச்சென்றார்.—எ-று.

கோடித்தல் - அலங்கரித்தல். (கூக)

தென்னவர்கோன்மகளாரைத்திருவேட்டுமுன்னரே
தொன்மதுரைநகரின்கணினிதிருந்தசோழனா
ரன்னவர்களுடன்கூடவணையவவருங்கூடி
மன்னுதிருவாலவாய்மணிக்கோயில்வந்தணைந்தார்.

(இ-ள்.) தென்னவர்கோன்மகளாரைத்திருவேட்டு = பாண்டிமன்னவரின் புத்திரியாரைத் திருமணமுடித்து; தொன்மதுரைநகரின்கணினிதுமுன்னரேயிருந்த சோழனார் = பழமையாகியமதுரைப்பதியிலே இனிதாக முன்னரேயிருந்த சோழமன்னவரும்; அன்னவர்களுடன்கூடவணைய = அவர்களோடுவந்துசேர; அவருங்கூடிவந்து = நால்வரும் ஒருங்குசேர்ந்துவந்து; மன்னுதிருவாலவாய்மணிக்கோயிலணைந்தார் = நிலைபெற்ற திருவாலவாயென்னும் மணிகளானமைத்த ஆலயத்தை அடைந்தார்.—எ-று. (கூஉ)

திருவாலவாயமர்ந்தசெஞ்சடையார்கோயில்வலம்
வருவார்முன்வீழ்ந்திறைஞ்சிவன்றொண்டர்வழித்தொண்டு
தருவாரைப்போற்றிசைத்துத்தாழ்ந்தெழுந்துவாழ்ந்ததமிழ்ப்
பெருவாய்மைமலர்புனைந்துபெருமகிழ்ச்சிபிறங்கினார்.

(இ-ள்.) வன்றொண்டர் = நம்பியாரூரர்; திருவாலவாயமர்ந்தசெஞ்சடையார் = திருவாலவாயின்கண்ணேவீற்றிருக்கும் சிவந்தசடைமுடியையுடைய சிவபெருமானது; கோயில்வலம்வருவார்முன்வீழ்ந்திறைஞ்சி = ஆலயத்தைவலம்வருவாராய்ச் சந்நிதிமுன் விரும்பியஞ்சலித்து; வழித்தொண்டுதருவாரைப்போற்றிசைத்துத் தாழ்ந்தெழுந்து = பரம்பரையாகிய அடிமையைத்தந்த பரமனைத் துதித்துப் பணிந்தெழுந்து; வாழ்ந்ததமிழ்ப்பெருவாய்மைமலர்புனைந்து = மங்கலம்பெற்ற மிக்கதமிழ்ப்பாமாலைதரித்து பெருமகிழ்ச்சிபிறங்கினார் = பெரிதும் மகிழ்ச்சியுற்றுவிளங்கி

வீழ்தல் - விரும்பல். வாய்மைமலர் - சொன்மலர்; அது ஆகுபெயராய்ப் பாமாலையையுணர்த்திற்று. (கூரு)

படியேறுபுகழ்ச்சேரர்பெருமானும்பார்மிசைவீழ்ந்
தடியேனைப்பொருளாகவளித்ததிருமுகக்கருணை
முடிவேதென் றுணர்ந்திலேனெனமொழிகடடுமாறக்
கடியேறுகொன்றையார்முன்பரவிக்களிகூர்ந்தார்.

(இ-ள்.) படியேறுபுகழ்ச்சேரர்பெருமானும்பார்மிசைவீழ்ந்து = தேசமுற்றும்பரம்பிய கீர்த்தியையுடைய சேரமான்பெருமாணயனாரும் பூமியிலேநமஸ்கரித்து; அடியேனைப்பொருளாகவளித்த = அடியேனை ஒருபொருளாகப்பாராட்டிப்பாலித்த; திருமுகக்கருணைமுடிவேதென்றறிந்திலேனென = திருமுகமென்னுந் திருவருளுக்கு முடிவு இன்னதென்றுணர்ந்திலேனென்று; மொழிகடடுமாற = வார்த்தைகள் தடுமாற்றமடைய; கடியேறுகொன்றையார்முன்பரவிக்களிகூர்ந்தார் = மணங்குடிகொண்ட கொன்றைமாலிகையணிந்த பெருமான்முன்னர்த்துதித்துப் பேருவகையுற்றார்.

திருமுகமளித்தகருணைக்கு அளவின்மையின் "முடிவேதென்றுணர்ந்திலேன்" என்றாரென்க. (கூச)

செம்பியனுருடன்செழியர்தாம்பணிந்துசேரருட
னம்பியுமுன்புறத்தணையநண்ணியபேருவகையா
லும்பர்பிரான்கோயிலினின் றுடன்கொடுபோயிருவர்க்கும்
பைம்பொன்மணிமாளிகையிற்குறைவறுத்தார்பஞ்சவனூர்.

(இ-ள்.) பஞ்சவனூர்செழியர்செம்பியனுருடன்தாம்பணிந்து = பஞ்சவனென்னும் பாண்டிவேந்தர் சோழவேந்தரோடு தாமும் (பெருமானைப்) பணிந்துகொண்டு; சேரருடனம்பியுமுன்புறத்தணைய = சேரமான்பெருமாணயனாரோடு நம்பியாரூரரும் முன்னர் புறத்தேவர; நண்ணியபேருவகையால் = நிலைபெற்ற மிகுகளிப்பால்; உம்பர்பிரான்கோயிலினின்றுடன்கொடுபோய் = தேவாதிபரது திருக்கோயிலிலிருந்து உடனழைத்துச்சென்று; இருவர்க்கும் = இருநாயன்மார்களுக்கும்; பைம்பொன்மணிமாளிகையிற்குறைவறுத்தார் = பசும்பொன்னாலும் மணிகளாலும் அமைத்த அரண்மனையிலே பெரிதும் உபசரித்தார்.—எ-று.

தாமென்புழி உம்மைதொக்கது. குறைவறுத்தல்-குறைவில்லையாக்கல். (கூரு)

உளமகிழக்கும்பிட்டங்குறையுநாளுதியருடன்
கிளரொளிப்பூண்வன்றொண்டர்தாமிருந்தவிடங்கெழுமி
வளவனார்மீனவனார்வளம்பெருகமற்றவரோ
டளவளாவியவிருப்பானமர்ந்துகலந்தினிதிருந்தார்.

(இ-ள்.) கிளரொளிப்பூண்வன்றொண்டர் = ஒளிதிகழப்பெற்ற ஆபரணங்களைத்தரித்த வன்றொண்டப்பெருமான்; உதியருடன் = கழறிற்றறிவார்நாயனாரோடு; உளமகிழக்கும்பிட்டு = திருவுளங்களிக்கச் சிவபெருமானைவணங்கிக்கொண்டு; அங்குறையுநாள் = அங்கேவசிக்குநாளில்; வளவனார்மீனவனார் = சோழவேந்தரும் பாண்டிவேந்தரும்; தாமிருந்தவிடங்கெழுமி = அவர்களிருந்த இடத்தையடைந்து; வளம்பெருக=பலவகைச்சிறப்பும் தமக்குவிர்த்தியாகும்படி; அவரோடளவளாவிய விருப்பால் = அவர்களோடு கலப்புற்றவிருப்பத்தால்; அமர்ந்துகலந்தினிதிருந்தார் = அமைந்து ஒற்றுமைப்பட்டு இனிமையுடனிருந்தார்.—எ-று. மற்று-அசை. (கூசு)

அந்நாளின் மதுரைநகர்மருங்கரனாமர்பதிகள்
பொன்னாரமணிமார்பிற்புரவலர்மூவரும்போதச்
செந்நாவின்முனைப்பாடித்திருநாடர்சென்றிறைஞ்சிச்
சொன்மாலைகளுஞ்சாத்தித்தொழத்திருப்பூவணத்தணைந்தார்.

(இ-ள்.) அந்நாளில்செந்நாவின்முனைப்பாடித்திருநாடர் = அக்காலத்திலே செவ்வியவாக்கையுடைய நம்பியாரூரர்; மதுரைநகர்மருங்கரனாமர்பதிகள்சென்று = மதுரையினருகிலே பெருமான்வீற்றிருக்குந்தலங்களைச்சேர்ந்து; இறைஞ்சிச்சொன்மாலைகளுஞ்சாத்தித்தொழ = துதித்துத் திருப்பதிகப் பாமாலைதரித்துவணங்குதற்கு; பொன்னாரமணிமார்பிற்புரவலர்மூவரும்போத = பொன்னாரம்அணிந்த மார்பினையுடைய மூவேந்தரும் புறஞ்சூழ்ந்துவர; திருப்பூவணத்தணைந்தார் = திருப்பூவணத்தைச்சேர்ந்தார்.—எ-று. (கஎ)

நீடுதிருப்பூவணத்துக்கணித்தாகநேர்செல்ல
மாடுவருந்திருத்தொண்டர்மன்னியவப்பதிகாட்டத்
தேடுமறைக்கரியானைத்திருவுடையாரென்றெடுத்துப்
பாடிசையிற்பூவணமீதோவென்றுபகர்ந்தணைந்தார்.

(இ-ள்.) நீடுதிருப்பூவணத்துக்கணித்தாகநேர்செல்ல = சிறந்ததிருப்பூவணத்துக்குச்சமீபமாக நேரேசெல்லுதலும்; மாடுவருந்திருத்தொண்டர்மன்னியவப்பதி காட்ட = அருகேசூழ்ந்துவரும் அடியவர்கள் நிலைபெற்ற அத்தலத்தைச் சுட்டிக்காட்ட; தேடுமறைக்கரியானை = தேடுகின்றவேதங்கட்கும் அரியபெருமானைக்குறித்து; திருவுடையாரென்றெடுத்துப்பாடிசையில் = "திருவுடையார்" என்றுதொடங்கி அருளிச்செய்த அப்பதிகத்திலே; பூவணமீதோவென்றுபகர்ந்தணைந்தார் = திருப்பூவணமென்னுந்தலம் இதுதானோவெனக்கூறிக்கொண்டு சேர்ந்தார்.—எ-று.

## திருப்பூவணம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

திருவுடையார்திருமாலயனாலு
முருவுடையாருமையாளையொர்பாகம்
பரிவுடையாரடைவார்வினைதீர்க்கும்
புரிவுடையாருறைபூவணமீதோ.
சீரின் மிகப்பொலியுந்திருப்பூவண
மாரவிருப்பிடமாவுறைவானை
யூரனுரைத்தசொன்மாலைகள்பத்திவை
பாரிலுரைப்பவர்பாவமறுப்பரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - பூவணநாதர், தேவியார் - மின்னம்மை. திருப்பதிகம். ௪.

---

சென்றுதிருப்பூவணத்துத்தேவர்பிரான்மகிழ்கோயின்
முன்றில்வலங்கொண்டிறைவர்முன்வீழ்ந்துபணிந்தெழுந்து
நின்றுபரவிப்பாடிநேர்நீங்கியுடன்பணிந்த
வென்றிமுடிவேந்தருடன்போந்தங்கண்மேவினார்.

(இ-ள்.) சென்றுதிருப்பூவணத்து = திருப்பூவணத்திலேசேர்ந்து; தேவர்பிரான்மகிழ்கோயின்முன்றில்வலங்கொண்டு = சிவபெருமான்விரும்பியருளும் திருக்கோயிலைச்சூழப் பிரதக்ஷணஞ்செய்து; இறைவர்முன்வீழ்ந்துபணிந்தெழுந்து = முதல்வர்சந்நிதிமுன்னர் நமஸ்கரித்தெழுந்து; நின்றுபரவிப்பாடிநேர்நீங்கி = நின்று துதித்துப்பதிகத்தைமுடித்து எதிர்விடைகொண்டு; உடன்பணிந்த = தம்மோடு உடனின்று அப்பெருமானைவணங்கிய; வென்றிமுடிவேந்தருடன்போந்து = வெற்றிபெற்றமுடியையுடைய மூவேந்தரோடும் வெளியேவந்து; அங்கண்மேவினார் = அத்தலத்தில்வீற்றிருந்தார்.—எ-று.

இல்முன் முன்றிலென்றாயது இலக்கணப்போலி. (௯௯)

அப்பதியிலமர்ந்திறைஞ்சிச்சிலநாளிலாரூரர்
முப்பெருவேந்தர்களோடுமுதன்மதுரைநகரெய்தி
மெய்ப்பரிவிற்றிருவாலவாயுடையார்விரைமலர்த்தா
ளெப்பொழுதும்பணிந்தேத்தியின்புற்றங்கமர்கின்றார்.

(இ-ள்) ஆரூரரப்பதியிலமர்ந்திறைஞ்சிச்சிலநாளில் = நம்பியாரூரர் அமலரைப்பணிந்துகொண்டு ஆங்குவசித்துச் சிலதினத்தில்; முப்பெருவேந்தர்களோடுமுதன்மதுரைநகரெய்தி = பெருமைபெற்றமூவரசர்களோடும் தலைமைவாய்ந்த மதுரையைச்சார்ந்து; திருவாலவாயுடையார் = திருவாலவாயின்கணமரும் சோமசுந்தரக்கடவுளின்; விரைமலர்த்தாள் = மணமிக்கதாமரைமலர்போலுந்திருவடிகளை; எப்பொழுதுமெய்ப்பரிவிற்பணிந்தேத்தியின்புற்றங்கமர்கின்றார் = அநுதினமும் உண்மையாகிய அன்பினால் வணங்கித்துதித்துக்களித்து அங்கேவசித்தார்.—எ-று.(௧௦௦)

செஞ்சடையார்திருவாப்பனூர்திருவேடகமுதலா
நஞ்சணியுங்கண்டரவர்தாநயந்தபதிநண்ணி
யெஞ்சலிலாக்காதலினால்லிறைஞ்சிமீண்டணைந்து
மஞ்சணையுமதின்மதுரைமாநகரின்மகிழ்ந்திருந்தார்.

(இ-ள்.) செஞ்சடையார்நஞ்சணியுங்கண்டரவர்நயந்த = சிவந்தசடையினரும் விடமணிந்தகண்டத்தருமான சிவபிரான்விரும்பிய; திருவாப்பனூர்திருவேடகமுதலாம்பதிநண்ணி = திருஆப்பனூர் திருவேடகமுதலாகிய திருத்தலங்களையடைந்து; எஞ்சலிலாக்காதலினாலிறைஞ்சிமீண்டணைந்து = குன்றுதலில்லாத அன்பினாலே விரும்பிவணங்கி மீட்டும்வந்து; மஞ்சணையுமதின்மதுரைமாநகரின்மகிழ்ந்திருந்தார் = மேகங்கள்படியும் மதில்களையுடைய மதுராபுரியிலே விருப்பமிக்குவசித்தார்.—எ-று. தாம்-அசை. (௧௦௧)

பரமர்திருப்பரங்குன்றிற்சென்றுபார்த்திபரோடு
புரமெரித்தார்கோயில்வலங்கொண்டுபுகுந்துள்ளிறைஞ்சிச்
சிரமலிமாலைச்சடையார்திருவடிக்கீழாட்செய்யு
மருமைநினைந்தஞ்சுதுமென்றாரூரர்பாடுவார்.

(இ-ள்.) ஆரூரர்பரமர்திருப்பரங்குன்றிற்பார்த்திபரோடுஞ்சென்று = நம்பியாரூரர் முதல்வர்க்குரியதிருப்பரங்குன்றத்திலே மூவரசரோடும்போய்; புரமெரித்தார்கோயில்வலங்கொண்டுள்புகுந்திறைஞ்சி = திரிபுரதகனராகிய அக்கடவுளின் திரு

வாலயத்தைவலம்வந்து உள்ளேபுகுந்துவணங்கி; சிரமலிமாலைச்சடையார்திருவடிக்கீழ் = மிக்கசிரமாலையையணிந்த சடைமுடியையுடைய சிவபிரான்திருப்பாதங்களில்; ஆட்செய்யுமருமைநினைந்து = அடிமைசெய்யும் அருமையைச்சிந்தித்து; அஞ்சுதுமென்றுபாடுவார் = பயப்படுகின்றேமென்று பாடுவாராய்.—எ-று.

கீழ் எழனுருபு. (க0உ)

கோத்திட்டையெனவெடுத்துக்கோதிறிருப்பதிகவிசை
மூர்த்தியார்தமைவணங்கிமுக்கோக்களுடன்முன்பே
யேத்தியவண்டமிழ்மாலையின்னிசைபாடிப்பரவிச்
சாத்தினார்சங்கரனார்தங்குதிருப்பரங்குன்றில்.

(இ-ள்.) சங்கரனார்தங்குதிருப்பரங்குன்றில் = சங்கரர்வீற்றிருக்கும் திருப்பரங்குன்றிலே; கோதிறிருப்பதிகவிசைமூர்த்தியார்தமை = குற்றமற்றதிருப்பதிகத்தமைந்த இசையையேதிருமேனியாகக்கொண்ட இறைவனை; முக்கோக்களுடன் வணங்கிமுன்பு = மூவரசர்களோடும் (தாமும்)வணங்கி அவர்முன்பு; கோத்திட்டையெனவெடுத்தேத்திய = "கோத்திட்டை" என்றுதொடங்கிப்புகழ்ந்த; வண்டமிழின்னிசைபாடிப்பரவிச்சாத்தினார் = வளப்பம்பொருந்திய தமிழ்மாலையை இனிய இசையாற்பாடித்துதித்து அவ்விறைவருக்குச்சூட்டினார்.—எ-று. (க0௩)

## கோத்திட்டையும் கோவலும் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

கோத்திட்டையுங்கோவலுங்கோயில்கொண்டருமைக்கொண்டுழல்கின்றதோர்கொல்லைச்சில்லைச்,சேர்த்திட்டுக்குத்தித்தெருவேதிரியுஞ்சில்பூதமுநீருந்திசைதிசையன, சோத்திட்டுவிண்ணோர்பலருந்தொழநும்மரைக்கோவணத்தோடொருதோல்புடைசூழ்ந், தார்த்திட்டதும்பாம்புகைக்கொண்டதும்பாம்படிகேளுமக்காட்செயவஞ்சுதுமே.

அடிகேளுமக்காட்செயவஞ்சுதுமென்றமரர்பெருமானையாரூரனஞ்சி, முடியாலுலகாண்டமூவேந்தர்முன்னேமொழிந்தாறுமோர்நான்குமோரொன்றினையும், படியாவிவைகற்றுவல்லவடியார்பரங்குன்றமேயபரமனடிக்கே, குடியாகிவாஞேர்க்குமோர்கோவுமாகிக்குலவேந்தராய்விண்முழுதாள்பவரே. திருச்சிற்றம்பலம்.

இறைவர்திருத்தொண்டுபுரியருமையினையிருநிலத்து
முறைபுரியுமுதல்வேந்தர்மூவர்களுங்கேட்டிறைஞ்சி
மறைமுந்நூன்மணிமார்பின்வன்றொண்டர்தமைப்பணிந்தார்
நிறைதவத்தோரப்பாலுநிருத்தர்பதிதொழநினைந்தார்.

(இ-ள்.) இருநிலத்துமுறைபுரியுமுதல்வேந்தர்மூவர்களும் = பெரிய இப்பூமியிலே செங்கோலைச்செலுத்தும் முதல்வேந்தர்மூவர்களும்; இறைவர்திருத்தொண்டுபுரியருமையினை = சிவபெருமானுக்குரிய திருத்தொண்டுசெய்யும் அருமையை; கேட்டிறைஞ்சி = கேட்டு அப்பெருமானைவணங்கி; மறைமுந்நூன்மணிமார்பின் =

வேதவிதிப்படி உபவீதமணிந்த மார்பினையுடைய; வன்றொண்டர்தமைப்பணிந்தார் = நம்பியாரூரரை நமஸ்கரித்தார்; நிறைதவத்தோர் = நிறைந்ததவத்தையுடைய அந்நாயனாரும்; அப்பாலுந்திருத்தர்பதிதொழநினைந்தார் = சிவபிரானுறையும் மற்றைத்திருத்தலங்களையும் வணங்கச்சிந்தித்தார்.—எ-று. (௧0௭)

அந்நாட்டுத்திருப்பதிகள்பிறவுமணைந்திறைஞ்சமலை
நன்னாட்டுவேந்தருடனம்பிதாமெழுந்தருள
மின்னாட்டும்பன்மணிப்பூண்வேந்தரிருவருமீள்வார்
தென்னாட்டுவேண்டுவனசெய்தமைப்பார்தமைவிடுத்தார்.

(இ-ள்.) நம்பிரன்மலைநாட்டுவேந்தருடன் = வன்றொண்டப்பெருமான் செவ்வியசேரமான்பெருமாளுயனாரோடு; அந்நாட்டுப்பிறதிருப்பதிகளுமணைந்திறைஞ்ச வெழுந்தருள = அந்நாட்டிலுள்ள பிறதலங்களையுஞ்சேர்ந்துபணிதற்குச் சென்றருள; மின்னாட்டும்பன்மணிப்பூண்வேந்தரிருவருமீள்வார் = ஒளியைப்பரப்பும் இரத்தினாபரணங்களையணிந்த ஏனையிரண்டரசருமீள்வாராய்; தென்னாட்டுவேண்டுவனசெய்தமைப்பார்தமைவிடுத்தார் = தென்னாட்டிலே வேண்டுங்காரியங்களைச் செய்துமுடிக்கத்தக்கவரைச் செலுத்தினார்.—எ-று. தாம்-அசை. (௧0௮)

இருபெருவேந்தருமியல்பின்மீண்டதற்பினெழுந்தருளும்
பொருவருஞ்சீர்வன்றொண்டர்புகழ்ச்சேரருடன்புனிதர்
மருவியதானம்பலவும்பணிந்துபோய்மலைச்சாரற்
குருமணிகள்வெயிலெறிக்குங்குற்றாலஞ்சென்றடைந்தார்.

(இ-ள்.) இருபெருவேந்தருமியல்பின்மீண்டதற்பின் = பெருமைபெற்ற இரண்டுமன்னவரும் இனிதுவணங்கிமீண்டபின்பு; புகழ்ச்சேரருடனெழுந்தருளும் = புகழ்பெற்ற சேரகுலாதிபரோடும் எழுந்தருளிய; பொருவருஞ்சீர்வன்றொண்டர் = நிகரற்றகீர்த்தியையுடைய நம்பியாரூரர்; புனிதர்மருவியதானம்பலவும்பணிந்துபோய் = இறைவர்வீற்றிருக்கும் தலங்கள்பலவற்றையும் இறைஞ்சிச்சென்று; மலைச்சாரற்குருமணிகள்வெயிலெறிக்குங்குற்றாலஞ்சென்றடைந்தார் = மலைச்சாரலிலுள்ள நிறம்பெற்ற இரத்தினங்கள் ஒளிபரப்பும் திருக்குற்றாலத்தைச்சேர்ந்தார்.—எ-று. ()

குற்றாலத்திடையமர்ந்தகூத்தர்குரைகழல்வணங்கிச்
சொற்றமலர்புனைந்துகுறும்பலாத்தொழுதிப்பான்
முற்றுவெண்மதிமுடியார்பதிபணிந்துமூவெயில்கள்
செற்றார்மன்னியசெல்வத்திருநெல்வேலியையணைந்தார்.

(இ-ள்.) குற்றாலத்திடையமர்ந்தகூத்தர் = திருக்குற்றாலத்தில் இனிதுவீற்றிருக்கும் கூத்தப்பிரானது; குரைகழல்வணங்கி = ஒலிக்கும் வீரக்கழலையணிந்த உபயதிருவடிகளைப்பணிந்து; சொற்றமலர்புனைந்து = சொற்களாகியமலர்களாற்றொடுக்கப்பட்ட திருப்பதிகப்பாமாலையைச்சூட்டி; குறும்பலாத்தொழுதிப்பால் = குறும்பலாவிலமரும் பெருமானையும்வணங்கிப் பின்பு; முற்றுவெண்மதிமுடியார் = இளஞ்சந்திரனையணிந்த முடியையுடையவரும்; மூவெயில்கள்செற்றார்மன்னிய = திரிபுரதகனருமாகிய இறைவரமர்ந்த ; பதிபணிந்து = மற்றைத்தலங்களையும் வணங்கிக்கொண்டு; செல்வத்திருநெல்வேலியையணைந்தார் = செல்வமிக்க திருநெல்வேலியைச் சேர்ந்தார்.—எ-று.

குறும்பலா இடவாகுபெயர். குறும்பலா என்பது அத்தலத்திலுள்ள பிறிதொருதலம். (௯௦௭)

நெல்வேலிநீற்றழகர்தமைப்பணிந்துபாடிநிகழ்
பல்வேறுபதிபிறவும்பணிந்தன்பால்வந்தணைந்தார்
வில்வேடராய்வென்றிவிசயனெதிர்பன்றிப்பின்
செல்வேதமுதல்வரமர்திருவிராமேச்சரத்து.

(இ-ள்.) நெல்வேலிநீற்றழகர்தமை = திருநெல்வேலியில்அமரும் விபூதிப்பிரகாசமுடைய விமலனை; பணிந்துபாடி = வணங்கிப் பதிகம்அருளிச்செய்து; நிகழ் பல்வேறுபதிபிறவும்பணிந்து = விளங்குகின்ற பலவேறுவகைப்பட்ட பிறதலங்களையும்வணங்கிக்கொண்டு; வில்வேடராய் = வில்லையேந்திய வேடவடிவத்தையுடையராகி; விசயனெதிர் = வெற்றிபெற்ற அருச்சுனனுக்கெதிரே; பன்றிப்பின்செல் = மூகாசுரனென்னும்பன்றியைத்துரத்திப்பின்சென்ற;வேதமுதல்வரமர்திருவிராமேச்சரத்துவந்தணைந்தார் = வேதகாரணராகிய விமலர்வதிந்தருளும் திருஇராமேச்சரத்தில் வந்துசேர்ந்தார்.—எ-று. (௯௦௮)

மன்னுமிராமேச்சரத்துமாமணியைமுன்வணங்கிப்
பன்னுதமிழ்த்தொடைசாத்திப்பயில்கின்றார்பாம்பணிந்த
சென்னியர்மாதோட்டத்துத்திருக்கேதீச்சரஞ்சார்ந்த
சொன்மலர்மாலைகள்சாத்தித்தூரத்தேதொழுதமர்ந்தார்.

(இ-ள்.) இராமேச்சரத்துமன்னுமாமணியைமுன்வணங்கி = திருஇராமேச்சரத்தில் வீற்றிருக்கும் சிந்தாமணிபோலும்பெருமானை எதிர்வணங்கி; பன்னுதமிழ்த்தொடைசாத்திப்பயில்கின்றார் = சீர்த்திபெற்றதமிழ்ப்பாமாலைசாத்தி வசிப்பவராகிய அந்நாயனார்; பாம்பணிந்தசென்னியர் = பாம்புகளையணிந்தசடையையுடைய பரமருறையும்; மாதோட்டத்துத்திருக்கேதீச்சரஞ்சார்ந்த = மாதோட்டநன்னகரிலுள்ள திருக்கேதீச்சரத்தைச்சுட்டிய; சொன்மலர்மாலைகள் = சொற்களாகியமலர்களாற்றொடுத்த திருப்பதிகப்பாமாலையை; தூரத்தேதொழுதுசாத்தியமர்ந்தார் = அங்கிருந்தேவணங்கிச் சாத்தியருளி அமர்ந்திருந்தார்.—எ-று.

பயில்கின்றார் சார்ந்தமாலைகள்சாத்தி அமர்ந்தார் என இயையும். (௯௦௯)

---

## திருக்கேதீச்சரம் - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

நத்தார்படைஞானன் பசுவேறிநனைகவிழ்வாய்
மத்தம்மதயானையுரிபோர்த்தமணவாளன்
பத்தாகியதொண்டர்தொழுபாலாவியின்கரைமேற்
செத்தாரெலும்பணிவான்றிருக்கேதீச்சரத்தானே.

கறையார்கடல்சூழ்ந்தகழிமாதோட்டநன்னகருட்
சிறையார்பொழில்வண்டியாழ்செய்யுங்கேதீச்சரத்தானை
மறையார்புகழூரன்னடித்தொண்டன்னுரைசெய்த
குறையாத்தமிழ்பத்துஞ்சொலக்கூடாகொடுவினையே.

திருச்சிற்றம்பலம்.

---

திருவிராமேச்சரத்துச்செழும்பவளச்சுடர்க்கொழுந்தை
பரிவினாற்றொழுதகன்றுபரமர்பதிபிறபணிந்து
"பெருவிமானத்திமையோர்வணங்குபெருந்திருச்சுழியன்
மருவினார்வன்றொண்டர்மலைவேந்தருடன்கூட.

(இ-ள்.) வன்றொண்டர்மலைவேந்தருடன்கூட = திருநாவலூர்த்தலைவர் சேரமான்பெருமாளுடனேராடும்; திருவிராமேச்சரத்து = திருவிராமேச்சரத்திலுறையும்; செழும்பவளச்சுடர்க்கொழுந்தை = செழித்தபவளம்போலும் ஒளிபெற்ற சிவக்கொழுந்தை; பரிவினாற்றொழுதகன்று = அன்பால்வணங்கிநீங்கி; பரமர்பதிபிறபணிந்து = பெருமானுக்குரிய பிறதலங்களையும் வணங்கிக்கொண்டு; பெருவிமானத்திமையோர்வணங்கு = பெரியவிமானங்களிலுலவும் தேவர்கள் இறைஞ்சும்; பெருந்திருச்சுழியன்மருவினார்=பெருமைபெற்றதிருச்சுழியலை அடைந்தார்.—எ-று. (௧௧௦)

திருச்சுழியலிடங்கொண்டசெம்பொன்மலைச்சிலையாரைக்
கருச்சுழியின்வீழாமைக்காப்பாரைக்கடல்விடத்தி
னிருட்சுழியுமிடற்றாரையிறைஞ்சியெதிரிதழிமலர்ப்
பருச்சுழியத்துடனாவூனாயுயிரெனும்பாமலர்புனைந்தார்.

(இ-ள்.) திருச்சுழியலிடங்கொண்ட = திருச்சுழியலை உரியதலமாகக்கொண்ட; செம்பொன்மலைச்சிலையாரை = மேருமலையாகிய வில்லையுடையவரும்; கருச்சுழியில்வீழாமைக்காப்பாரை = (அன்பரைப்)பிறவியென்னும் (பிரவாகச்) சுழியிலே வீழாமற்காப்பவரும்; கடல்விடத்தினிருட் சுழியுமிடற்றாரை = பாற்கடலிலுதித்த நஞ்சத்தின் இருள்கவிந்துள்ள கண்டத்தருமாகியகடவுளை; இறைஞ்சியெதிர் = தொழுது எதிர்நின்று; இதழிமலர்ப்பருச்சுழியத்துடன் = கொன்றைமலரையணிந்த பருத்தசுழியத்துடனே; ஊனாயுயிரெனும்பாமலர்புனைந்தார் = "ஊனாயுயிர்" என்னும் பாமாலையைச்சாத்தினார்.—எ-று.

கருச்சுழி - சுழிந்தகருப்பையென்னலும் ஒன்று. சுழியம்-உச்சிக்கொண்டை. இது சுழியமெனவும், சூழியெனவும் பெயர்பெறும். "ஊனாயுயிர்" என்னும் இத்திருப்பதிகத்தில் ஏழாவது திருப்பாடலில் "குழகன்றிருச்சுழியன்" எனவும், ஒன்பதாவது திருப்பாடலில் "செண்டாடுதல்புரிந்தான்" எனவும் குறிப்புப்பொருளாக இளம்பருவம் சுட்டப்படுதலின் "பருச்சுழியத்துடன்" என்றார். இதுபற்றியே இறைவரும் இக்கோலத்தோடு தரிசனந்தந்தளித்தமை பிற்செய்யுளானுணர்க. (௧௧௧)

## திருச்சுழியல் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

ஊனாயுயிர்புகலாயகலிடமாய்முகில்பொழியும்
வானாய்வருமதியாய்விதிவருவானிடம்பொழிலின்
றேனாதரித்திசைவண்டினமிழற்றுந்திருச்சுழிய
னானாவிதகிளைவார்தமைநலியார்நமன்றமரே.

நீரூர்தருநிமலன்றிருமலையார்க்கயலருகே
தேரூர்தருமரக்கன்சிரநெரித்தான்றிருச்சுழியல்

பேரூரெனவுறைவானடிபெயர்நாவலர்கோமா
னூரனதமிழ்மாலைபத்தறிவார்துயரிலரே.

திருச்சிற்றம்பலம்.

அங்கணரைப்பணிந்துறையுமாரூரர்க்கவ்வூரிற்
கங்குலிடைக்கனவின்கட்காளையாந்திருவடிவாற்
செங்கையினிற்பொற்செண்டுந்திருமுடியிற்சுழியமுட
னெங்குமிலாத்திருவேடமென்புருகமுன்காட்டி.

(இ-ள்.) அங்கணரைப்பணிந்துறையுமாரூரர்க்கு = அருட்கண்ணராகிய அண்ணலைவணங்கி அங்குஅமரும் நம்பியாரூரருக்கு; கங்குலிடைக்கனவின்கட்காளையாந் திருவடிவால் = இரவில் சொப்பனத்திலே காளைப்பருவமாகிய கோலத்தோடு; செங்கையினிற்பொற்செண்டுந்திருமுடியிற்சுழியமுடன் = செவ்வியதிருக்கரத்திலே பொற்செண்டும் திருமுடியிலணிந்தசுழியமும் உடையராய்; எங்குமிலாத்திருவேடம் = எங்குந்தரிசிக்கப்பெறாத இத்திருக்கோலத்தை; என்புருகமுன்காட்டி = எலும்பும் உருகும்படி எதிரேகாட்டியருளி.—எ-று.

எங்குமென்னும் உம்மை முற்றும்மை. எலும்புமென்னும் உயர்வுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. (௧௧௨)

கானப்பேர்யாமிருப்பதெனக்கழறிக்கங்கையெனும்
வானப்பேராறுலவுமாமுடியார்தாமகல
ஞானப்பேராளருணர்ந்ததிசயித்துநாகமுட
னேனப்பேரெயிறணிந்தாரருளிருந்தபரிசென்பார்.

(இ-ள்.) கங்கையெனும்வானப்பேராறுலவுமாமுடியார் = கங்கையெனப்படும் தேவநதியுலவும் திருமுடியையுடைய சிவபெருமான்; யாமிருப்பதுகானப்பேரெனக்கழறியகல = யாமிருப்பது திருக்கானப்பேரென்னுந்தலமாகுமென்று கட்டளையிட்டுநீங்க; ஞானப்பேராளருணர்ந்ததிசயித்து = ஞானத்தாற்பெருமைபெற்ற நம்பியாரூரருணர்ந்து ஆச்சரியமடைந்து; நாகமுடனேனப்பேரெயிறணிந்தாரருள் = அரவுகளோடு பெரியவராகத்தின்கோட்டையணிந்த அமலரது திருவருள்; இருந்தபரிசென்பார் = நம்பக்கலிலிருந்தவாறு நன்றென்பார்.—எ-று.

நன்றென்பது சொல்லெச்சம். கானப்பேர் காளையார்கோயில். காளையாரென்பது காளைப்பருவமுடையராய் வருதலிற்போந்த திருநாமம்போலும். தாம் - அசை.

கண்டருளும்படிகழறிற்றறிவார்க்குமொழிந்தருளிப்
புண்டரிகப்புனற்சுழியற்புனிதர்கழல்வணங்கிப்போ
யண்டர்பிரான்றிருக்கானப்பேரணைவாராரூரர்
தொண்டரடித்தொழலுமெனுஞ்சொற்பதிகத்தொடையெடுத்தார்.

(இ-ள்.) கண்டருளும்படிகழறிற்றறிவார்க்குமொழிந்தருளி = தாம் கண்டருளிய இயல்பைக் கழறிற்றறிவார் நாயனார்க்கு உணர்த்தியருளி; புண்டரிகப்புனற்சுழியல் = தாமரையடர்ந்த நீர்வளமிக்க திருச்சுழியலில்வீற்றிருக்கும்; புனிதர்கழல் வணங்கிப்போய் = பர[illegible]திருவடிகளைப் பணிந்துசென்று; அண்டர்பிரான்றிருக்கானப்பேரணைவாராரூரர் = தேவாதிபரது திருக்கானப்பேரை அணைவாராகிய திரு

நாவலூரர்; தொண்டரடித்தொழலுமெனுஞ்சொற்பதிகத்தொடையெடுத்தார்="தொண்டரடித்தொழலும்" என்னும் முதற்குறிப்பையுடைய திருப்பதிகத்தைத்தொடங்கினார். —எ-று. (௧௧௪)

## திருக்கானப்பேர் - பண் - புறநீர்மை.

தொண்டரடித்தொழலுஞ்சோதியிளம்பிறையுஞ்சூதனமென்முலையாள்பாகமுமாகிவரும், புண்டரிகப்பரிசாமேனியும்வானவர்கள்பூசலிடக்கடனஞ்சுண்டகருத்தமரும், கொண்டலெனத்திகழுங்கண்டமுமெண்டோளுங்கோலநறுஞ்சடைமேல்வண்ணமுமங்கண்குளிரக், கண்டுதொழப்பெறுவதென்றுகொலோவடியேன்கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே.

கன்னலையின்னமுதைக்கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையொண்சீருறைதண்டமிழா, லன்னிமனத்தயராவுள்ளுருகிப்பரவுமொண்பொழிலுவலர்கோனாகியவாரூரன், பன்னுமிசைக்கிளவிபத்திவைபாடவல்லார் பத்தர்குணத்தினராயெத்திசையும்புகழ, மன்னியிருப்பவர்கள்வானினிழிந்திடினும்மண்டலநாயகராய்வாழ்வதுநிச்சயமே.

திருச்சிற்றம்பலம்.

---

காளையார்தமைக்கண்டுதொழப்பெறுவதென்றென்று
தாளைநாளும்பரவத்தருவார்பாற்சார்கின்றா
ராளைநீளிடைக்காணவஞ்சியநீர்நாயயலே
வாளைபாய்துறைப்பழனமுனைப்பாடிவளநாடர்.

(இ-ள்.) ஆளைநீளிடைக்காணநீர்நாயஞ்சிய = மனிதர்களை நெடுந்தூரத்தே காண்டலும் நீர்நாய் அஞ்சியொளிக்க; அயலேவாளைபாய்துறைப்பழனம் = அதனருகே வாளைகள் தாமும்பயந்துபாயும் துவாரங்களையுடைய வயல்கள்சூழ்ந்த; முனைப்பாடிவளநாடர்=திருமுனைப்பாடிவளநாடராகிய நம்பியாரூரர்;காளையார்தமைக்கண்டுதொழப்பெறுவதென்றென்று= "காளையார்தமைக்கண்டுதொழப்பெறுவதென்று" என்றுபாடிக்கொண்டு; நாளும்பரவத்தாளைத்தருவார்பாற்சார்கின்றார்=தினமும்வழிபடும்படி திருக்கழல்களைத்தருவாராகிய சிவபெருமானிடத்தே செல்கின்றார்.—எ-று.

ஏனையோர்க்கு இப்பேறு எய்துதலரிதென்பார் "தாளைநாளும்பரவத்தருவார்" என்றார். நாளும் பரவுதலால் தாளைத்தருவார் என்னலும் ஒன்று. (௧௧௫)

மன்னுதிருக்கானப்பேர்வளம்பதியில்வந்தெய்திச்
சென்னிவளர்மதியணிந்தார்செழுங்கோயில்வலங்கொண்டு
முன்னிறைஞ்சியுள்ளணைந்துமுதல்வர்சேவடிதாழ்ந்து
பன்னுசெழுந்தமிழ்மாலைபாடினார்பரவினார்.

(இ-ள்.) மன்னுதிருக்கானப்பேர்வளம்பதியில்வந்தெய்தி = நிலைபெற்ற திருக்கானப்பேரென்னும் வளப்பம்பொருந்தியதலத்தில் வந்தடைந்து; சென்னிவளர்மதியணிந்தார்செழுங்கோயில்வலங்கொண்டு = திருமுடியிலே வளர்பிறையையணிந்தகடவுளின் செழித்த ஆலயத்தை வலம்வந்து ; முன்னிறைஞ்சியுள்ளணைந்துமுதல்

வர்சேவடிதாழ்ந்து = திருமுன்பணிந்து உள்ளேசேர்ந்து சிவபெருமான் திருவடிகளைவணங்கி; பன்னுசெழுந்தமிழ்மாலைபாடினார்பரவினார் = சீர்த்திபெற்ற சிறந்ததிருப்பதிகத்தை முடித்தருளித்துதித்தார்.—எ-று. (௧௧௬)

ஆராதகாதலுடனப்பதியிற்பணிந்தேத்திச்
சீராருந்திருத்தொண்டர்சிலநாளங்கமர்ந்தருளிக்
காராருமலர்ச்சோலைக்கானப்பேர்கடந்தணைந்தார்
போராரேனேற்றார்கயிலைப்பொருப்பர்திருப்புனவாயில்.

(இ-ள்,) சீராருந்திருத்தொண்டர் = சீர்த்திமிக்கவன்றொண்டப்பெருமான்; ஆராதகாதலுடன் = அளவுபடாத அன்பினால்; அப்பதியிற்பணிந்தேத்திச்சிலநாளமர்ந்தருளி = அப்பதியிலே பெருமானைப்பணிந்துதுதித்துச் சிலநாள்வசித்து; காராருமலர்ச்சோலைக்கானப்பேர்கடந்து = முகில்கள்படியும் மலர்கள்மொய்த்த சோலைகளையுடைய திருக்கானப்பேரையகன்று; போராரேனேற்றார் = போர்த்தொழில்மிக்க இடபக்கொடியை ஏந்தினவரும்; கயிலைப்பொருப்பர் = கயிலைமலையில் வீற்றிருப்பவருமாகிய கடவுளின்; திருப்புனவாயிலணைந்தார் = திருப்புனவாயிலை அடைந்தார்.—எ-று. அங்கு - அசை. (௧௧௭)

புனவாயிற்பதியமர்ந்தபுனிதராலயம்புக்கு
மனவார்வம்வரச்சித்தநீநினையென்னொடுவென்றே
வினவானதமிழ்பாடிவீழ்ந்திறைஞ்சியப்பதியிற்
சினவானையுரித்தணிந்தார்திருப்பாதந்தொழுதிருந்தார்.

(இ-ள்.) புனவாயிற்பதியமர்ந்தபுனிதராலயம்புக்கு = திருப்புனவாயிலென்னுந்தலத்திலே அமர்ந்த சிவபிரான் ஆலயத்தையடைந்து; மனவார்வம்வரச்சித்தநீநினையென்னொடுவென்று=மனத்திலே அன்புபெருக "சித்தநீநினையென்னொடு" என்றுதொடங்கி; வினவானதமிழ்பாடிவீழ்ந்திறைஞ்சி = வினவுதலமைந்த திருப்பதிகத்தையருளிச்செய்து விழுந்துபணிந்தெழுந்து; சினவானையுரித்தணிந்தார்திருப்பாதந்தொழுது = சினந்துவந்தயானையையுரித்துத் தோலையணிந்த சிவபெருமானுடைய திருவடிகளைவணங்கி; அப்பதியிலிருந்தார் = அப்பதியிலே வதிந்தார்.—எ-று.

சித்தநீடுமனமென்றெடுத்து என்பதும்பாடம். இது தேவாரமுதற்குறிப்பைச் சுட்டாமைதெளிக.வினவுதல் மனத்தைவிளித்து உணர்த்தலின்மேற்று.(௧௧௮)

## திருப்புனவாயில் - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

சித்தநீநினையென்னொடுசூளறும்வைகலு
மத்தயானையினீருரிபோர்த்தமணாளனூர்
பத்தர்தாம்பலர்பாடிநின்றாடும்பழம்பதி
பொத்திலாந்தைகள்பாட்டறாப்புனவாயிலே.

பொடியாடுமேனியன்பொன்புனஞ்சூழ்புனவாயிலை
யடியாரடியன்னாவலவூரனுரைத்தன
மடியாதுகற்றிவையேத்தவல்லார்வினைமாய்ந்துபோய்க்
குடியாகப்பாடிநின்றாடவல்லார்க்கில்லைகுற்றமே.

திருச்சிற்றம்பலம்.

திருப்புனவாயிற்பதியிலமர்ந்தசிவனார்மகிழும்
விருப்புடையகோயில்பலபணிந்தருளால்மேவினார்
பொருப்பினொடுகானகன்றுபுனற்பொன்னிநாடணைந்து
பருப்பதவார்சிலையார்தம்பாம்பணிமாநகர்தன்னில்.

(இ-ள்.) திருப்புனவாயிற்பதியிலமர்ந்தசிவனார்மகிழும் = திருப்புனவாயிலென்னுந்தலத்திலமர்ந்த சிவபெருமான் காதலிக்கும்; விருப்புடையகோயில்பலபணிந்தருளால் = விரும்பத்தக்க மற்றும்பல ஆலயங்களை வீழ்ந்துவணங்கித் திருவருள்பெற்று; பொருப்பினொடுகானகன்றுபுனற்பொன்னிநாடணைந்து = மலைகளையும் காடுகளையுங்கடந்து நீர்வளமலிந்தகாவிரிநாட்டையடைந்து; பருப்பதவார்சிலையார்தம் = மேருமலையாகிய பெரியவில்லையுடைய விமலர்வீற்றிருக்கும்; பாம்பணிமாநகர்தன்னின்மேவினார் = திருப்பாதாளேச்சரமென்னுந்தலத்திற் சேர்ந்தார்.—எ-று.

அருளால் என்னும் ஆலுருபை உடனிகழ்ச்சிப்பொருளாக்குக. பாதாளேச்சரமென்பது ஆதிசேஷன்முதலியோர்வழிபட்டு ஆபரணமாகப்பெற்றதலமாகலின் "பாம்பணிமாநகர்" எனப்பட்டது. (௧௧௧)

பாதாளீச்சரமிறைஞ்சியதன்மருங்குபலபதியும்
வேதாதிநாதர்கழல்வணங்கிமிகுவிறலினுடன்
சூதாருந்துணைமுலையார்மணிவாய்க்குத்தோற்றிரவு
சேதாம்பல்வாய்திறக்குந்திருவாரூர்வந்தணைந்தார்.

(இ-ள்.) பாதாளீச்சரமிறைஞ்சி = திருப்பாதாளீச்சரமென்னுந்தலத்தை வணங்கி; அதன்மருங்குபலபதியும் = அதன் பக்கத்திலுள்ள தலங்கள்பலவற்றினும்; வேதாதிநாதர்கழல்வணங்கி = வேதசிவாகமங்களையருளிய முதற்கடவுளின் திருவடிகளைவணங்கி; சூதாருந்துணைமுலையார்மணிவாய்க்குத்தோற்று = சூதாடுகருவிபோலுந்தனங்களையுடைய பெண்களின் அழகியவாய்க்குத்தோல்வியுற்று; சேதாம்பலிரவுவாய்திறக்குந்திருவாரூர் = செவ்வல்லிகளெல்லாம் இரவிலே வாய்மலருகின்ற திருவாரூரை; மிகுவிறலினுடன்வந்தணைந்தார் = மிகுவிறலோடு வந்துசேர்ந்தார்.—எ-று.

பகலில்வாய்திறத்தற்குநாணிச் சேதாம்பல் இரவில்வாய்திறக்கின்றன என்றபடி. ஆரும் உவமவுருபு. வேதஆதி வேதாதியென்றாயது தீர்க்கசந்தி. (௧௨௦)

திருநாவலூர்வேந்தர்சேரர்குலவேந்தருடன்
வருவாரைத்திருவாரூர்வாழ்வார்களெதிர்கொள்ளத்
தருகாதலுடன்வணங்கித்தம்பெருமான்கோயிலினுட்
பெருகார்வத்தொடுவிரும்பும்பெரும்பேறுபெறப்புகுந்தார்.

(இ-ள்.) சேரர்குலவேந்தருடன்வருவார்திருநாவலூர்வேந்தனை = சேரமான்பெருமாளையனாரோடும் எழுந்தருள்வாராகிய சுந்தரமூர்த்திநாயனாரை; திருவாரூர்வாழ்வார்களெதிர்கொள்ள = திருவாரூரிலுள்ளவர்கள் எதிர்கொள்ளுதலும்; தருகாதலுடன்வணங்கி = அவரை நிலைபெற்றகாதலால் அஞ்சலித்து; பெருகார்வத்தொடுவிரும்பும்பெரும்பேறுபெற = சிறந்த அன்போடு தினமும்சிந்தித்துள்ள பெரும்பயன் சித்தியாகும்படி; தம்பெருமான்கோயிலினுட்புகுந்தார் = தமதுபெருமானுடைய ஆலயத்துள்ளேசென்றார்.—எ-று.

எதிர்கொள்ளவணங்கி என்பது, அத்தலத்திலே இடையறாதுவசிக்கும் அருந்தவமுடைமைநோக்கி அன்புமேலீட்டால் அவர்வணங்குமுன் தாம்வணங்கினரென் [illegible], உங்கேகபெருமான் பிறர்பெறாப்பேறாகத் தமக்குப்பாலித்த, கருணைத் [illegible] சிந்தனையிலிருத்தலின் அச்சிந்தனைக்குரியபயன் அக்கடவுளை [illegible] பற்றி "பெருகார்வத்தொடுவிரும்பும்பெரும்பேறுபெறக் [illegible] என்றார். இந்நாயனார் அச்சிந்தனையுடையராதலே "திருவாரூ [illegible] திருவையாற்றுத்திருப்பதிகத்தில் அருளியவாற்றானுமுணர்க.

வாசமலர்க்கொன்றையார்மகிழ்கோயில் வலங்கொண்டு
நேசமுறமுன்னிறைஞ்சிநெடும்பொழுதெலாம்பரவி
யேசறவாற்றிருப்பதிகமெடுத்தேத்தியெழுந்தருளாற்
பாசவினைத்தொடக்கறுப்பார்பயில்கோயில்பணிந்தணைவார்.

(இ-ள்.) வாசமலர்க்கொன்றையார்மகிழ்கோயில்வலங்கொண்டு = சுகந்தத்தையுடைய கொன்றைமலரைச்சூடிய சூழகனார்விரும்புங் கோயிலைவலம்வந்து; நேசமுறமுன்னிறைஞ்சிநெடும்பொழுதெலாம்பரவி = அன்புமிகஎதிர்வணங்கி நெடுநேரந்துதித்து; ஏசறவாற்றிருப்பதிகமெடுத்தேத்தியெழுந்து = ஆவலின்மேலீட்டால் திருப்பதிகமெடுத்துத்துதித்து நீங்கி; பாசவினைத்தொடக்கருளாலறுப்பார்பயில் = எவ்வகைப்பந்தங்களையும் விளைவிக்கும் இருவினைத்தொடக்கைத் திருவருளாற்சேதிப்பாராகிய இறைவர்வீற்றிருக்கும்; கோயில்பணிந்தணைவார் = திருக்கோயிலைவணங்கிக்கொண்டு புறத்தேசெல்வார்.—எ-று.

ஏசறவு. அவாவின்மேலீடு. சுவர்க்கவின்பமுதலியவற்றைத்தரும் நல்வினையும் தீவினைபோலவே ஞானத்தைத்தடுத்துப் பந்தமுறுவிப்பதாகலின் இருவினையையுந்தொகுத்துப் பொதுப்பட வினைத்தொடக்கென்றார். (௪௨.௨)

பரவையார்மாளிகையிற்பரிசனங்கண்முன்னெய்த
விரவுபோலங்காரவிழுச்செல்வமிகப்பெருக
வரவெதிர்கொண்டடிவணங்கவன்றொண்டர்மலைநாட்டுப்
புரவலனையுங்கொண்டுபொன்னணிமாளிகைபுகுந்தார்.

(இ-ள்.) பரவையார்மாளிகையிற்பரிசனங்கண்முன்னெய்த = பரவைநாச்சியார்திருமாளிகையிலே பரிசனங்கள் முன்னே அடைய; விரவுபேரலங்காரவிழுச்செல்வமிகப்பெருக = (அவர் அங்கே) செறிந்த மிக்கமேன்மைபெற்ற அலங்காரச்சிறப்புக்களை அரிதியற்றி; வரவெதிர்கொண்டடிவணங்க = எழுந்தருளுங்கால் எதிர்கொண்டு திருவடிகளிற்பணிதலும்; வன்றொண்டர்மலைநாட்டுப்புரவலனையுங்கொண்டு = வன்றொண்டப்பெருமான் சேரமான்பெருமாணாயனாரையும் உடனழைத்துக்கொண்டு; பொன்னணிமாளிகைபுகுந்தார் = பொன்னாலலங்கரிக்கப்பட்ட திருமாளிகையினுள்ளே சென்றார்.—எ-று.

பெருக்கியென்னும் வினையெச்சம் பெருகவெனத்திரிந்தது. (௪௨௩)

பரவியேபரவையார்பரிந்துடனேபணிந்தேத்தி
விரவியபோனகங்கறிகள்விதம்பலவாகச்சமைத்துப்
பரிகலமும்பாவாடைபகல்விளக்குமுடனமைத்துத்
திருவமுதுசெய்வித்தார்திருந்தியதேன்மொழியினார்.

(இ-ள்.) பரவையார்பரவிப்பரிந்துடனேடணிந்தேத்தி = (உட்சென்றவுடன்) பரவைநாச்சியார்புகழ்ந்து அன்புமிகவணங்கித்துதித்து; விரவியபோனகங்கறிகள்விதம்பலவாகச்சமைத்து = கலந்தஅன்னங்களும் கறிகளும் பலவிதமாகப் பாகஞ்செய்து; பரிகலமும்பாவாடைபகல்விளக்குமுடனமைத்து = பரிகலங்களும் பாவாடைகளும் பகல்விளக்குகளும் உடனேயமைப்பித்து; திருந்தியதேன்மொழியினார் திருவமுதுசெய்வித்தார் = திருத்தமிக்க தேன்போலும் இனியமொழியினையுடையாராயுபசரித்துத் திருவமுதுசெய்வித்தார்.—எ-று.

விரவுதலாவது - நெய் சர்க்கரை பச்சைப்பருப்பு மிளகு தேங்காய்த்திருகல் முதலியவற்றை அவ்வவ்வன்னங்களுக்குத்தக இடுதல். இவை சித்திரான்னங்களெனப்படும். பாவாடை - பரிகலத்தின்கீழிடுவது. பகல்விளக்கு - மரியாதையின்பொருட்டு வைக்குந்தீபம்.                                                    (௩௨௪)

மங்கலமாம்பூசனைகள்பரவையார்செயமகிழ்ந்து
தங்கியினிதமர்கின்றார்தம்பிரான்கோயிலினுட்
பொங்குபெருங்காலமெலாம்புக்கிறைஞ்சிப்புறத்தணைந்து
நங்கள்பிரான்றமரவர்கணல்விளையாட்டினைநயந்தார்.

(இ-ள்.) நங்கள்பிரான்றமரவர்கள் = எம்பெருமானுக்கு உரிமையர்களாகிய இரண்டுநாயன்மார்களும்; பரவையார்மங்கலமாம்பூசனைகள்செயமகிழ்ந்து = பரவைநாச்சியார் சிறந்தவழிபாடுகளைச் செய்யமகிழ்ந்து; இனிதுதங்கியமர்கின்றார் = இனிதுநிலைபெற்று வசிப்பாராயிருந்துகொண்டு; தம்பிரான்கோயிலினுள் = சிவபெருமான் ஆலயத்துள்ளே; பொங்குபெருங்காலமெலாம்புக்கிறைஞ்சிப்புறத்தணைந்து = சிறந்தகாலங்டோறுஞ் சென்றுவணங்கிப் புறத்தேவந்து; நல்விளையாட்டினைநயந்தார் = மிக்கதிருவிளையாட்டை விரும்பியிருந்தார்.—எ-று.                                                    (௩௨௫)

நிலைச்செண்டும்பரிச்செண்டும்வீசிநிதமகிழ்வெய்தி
விலக்கரும்போர்த்தகர்ப்பாய்ச்சல்கண்டருளிவென்றிபெற
மலைக்குநெடுமுட்கணைக்கால்வாரணப்போர்மகிழ்ந்தருளி
யலைக்குமறப்பலபுள்ளினமர்விரும்பியமர்கின்றார்.

(இ-ள்.) நிதமகிழ்வெய்தி = தினமும்மகிழ்ச்சியுற்று; நிலைச்செண்டும்பரிச்செண்டும்வீசி = நிலைச்செண்டுகளும் பரிச்செண்டுகளும் வீசியும்; விலக்கரும்போர் = இடையே ஒருவராலும் விலக்குதற்கரிய போர்த்தொழிலையுடைய; தகர்ப்பாய்ச்சல் கண்டருளி = ஆட்டுக்கடாக்களின் சண்டைகளை நோக்கியருளியும்; வென்றிபெறமலைக்கும் = வெற்றிபெறும்படி போர்செய்கின்ற; நெடுமுட்கணைக்கால் = நெடியமுள்ளோடுகூடிய கணைக்கால்களையுடைய; வாரணப்போர்மகிழ்ந்தருளி = கோழிச்சண்டைகளைக் காதலித்தும்; அலைக்குமறம் = ஒன்றையொன்றலைக்கின்ற கொடுமைமிக்க; பலபுள்ளினமர்விரும்பியமர்கின்றார் = பலபறவைகளின் சண்டைகளைவிரும்பியும் வீற்றிருக்கின்றார்.—எ-று.

செண்டு-பந்துபோல்வதொரு விளையாட்டுக்கருவி. நின்றுவிளையாடுஞ்செண்டு நிலைச்செண்டு. பரியிலிவர்ந்து இடசாரிவலசாரியாகச்சுழன்று விளையாடுஞ்செண்டு பரிச்செண்டு. "புரவியிற்பொருவில்செண்டாடி" என்றார் பிறரும். யானைச்செண்டும் உண்டு.                                                    (௩௨௬)

வேறு.

விரவுகாதன்மீக்கூரமேவுநாள்கள்பலசெல்லக்
கரவிலீகைக்கேரளனார்தங்கள்கடல்சூழ்மலைநாட்டுப்
பரவையார்தங்கொழுநனார்தம்மைப்பணிந்துகொண்டணைவா
னிரவும்பகலுந்தொழுதிரக்கவிசைந்தாரவருமெழுந்தருள.

(இ-ள்.) விரவுகாதன்மீக்கூரமேவுநாள்கள்பலசெல்ல = கலப்புற்றகாதலோங்கவசிக்குநாள்கள் பலசெல்லுதலும்; கரவிலீகைக்கேரளனார் = கரத்தலில்லாதகொடையையுடைய கழறிற்றறிவார்நாயனார்; கடல்சூழ்தங்கண்மலைநாட்டு = சமுத்திரஞ்சூழ்ந்த தங்கள்மலைநாட்டுக்கு; பரவையார்தங்கொழுநனார்தம்மை = பரவைநாச்சியாரதுகணவராகிய நம்பியாரூரரை; கொண்டணைவான் = அழைத்துக்கொண்டு செல்லுதற்கு; இரவும்பகலும்பணிந்துதொழுதிரக்க=இரவும்பகலுமாகிய எப்பொழுதும் அஞ்சலித்துவணங்கிப் பிரார்த்திக்க; அவருமெழுந்தருளவிசைந்தார் = அச்சுந்தரமூர்த்திசுவாமிகளும் உடன்செல்லுதற்கு இசைந்தருளினார்.—எ-று.

கரவிலீகையாவது இந்நாயனார் ஒவ்வோருயிர்களின் உள்ளக்கருத்தும் அறிதலுடையாராகலின் அவற்றிற்குவேண்டியபொருளை வேண்டியவாறே தாமேமுற்பட்டுத்தருதல். கேரளம் மலைநாட்டுக்குரியதோர்பெயர மலைநாட்டுக்கு என நான்கனுருபுவிரிக்க. (சஉஎ)

நங்கள்பரவையாருள்ளத்திசைவானம்பியெழுந்தருளத்
திங்கணமுடியார்திருவருளைப்பரவிச்சேரமான்பெருமா
ளெங்குமுள்ளவடியாருக்கேற்றபூசைசெய்தருளிப்
பொங்குமுயர்ச்சியிருவரும்போய்ப்புக்கார்புனிதர்பூங்கோயில்.

(இ-ள்.) நம்பிநங்கைபரவையாருள்ளத்திசைவாலெழுந்தருள = நம்பியாரூரர் பரவைநாச்சியாரது கருத்தின்உடன்பாட்டினால் பிரயாணப்பட; சேரமான்பெருமாள் = சேரமான்பெருமாணாயனார் (அவரிசைந்தமையைக்குறித்து); திங்கண்முடியார் திருவருளைப்பரவி = இளம்பிறையணிந்த திருமுடியையுடைய இறைவர்திருவருளைப்பரவி; எங்குமுள்ளவடியாருக்கேற்றபூசைசெய்தருளியெழுந்தருள = எவ்விடங்களினுமுள்ள அடியவர்களுக்கு ஆராதனை செய்வித்துத் தாமும்பிரயாணப்பட; பொங்குமுயர்ச்சியிருவரும்போய் = மிக்கஉயர்வையுடைய இரண்டு நாயன்மார்களுஞ் சென்று; புனிதர்பூங்கோயில்புக்கார் = அமலர்வீற்றிருக்குங் கமலாலயத்தையடைந்தார்கள்.—எ-று.

புறப்படுங்காலம் மாகேசுரபூசை செய்வித்துக் கடவுளின் அநுஞைபெற்றுப் புறப்படுதலேவிதியாகலின், "அடியாருக்கேற்றபூசைசெய்தருளிப்புனிதர்கோயில் புக்கார்" என்றார். எழுந்தருளவென்பது பின்னுங்கூட்டப்படுது; கூட்டாவழி முடியாமையுணர்க. (சஉஅ)

தம்பிரானைத்தொழுதருளாற்போந்துதொண்டர்சாரந்தணைய
நம்பியாரூரருஞ்சேரர்நன்னாட்டரசனாராய
பைம்பொன்மணிநீண்முடிக்கழறிற்றறிவார்தாமும்பயணமுடன்
செம்பொனீடுமதிலாரூர்தொழுதுமேல்பாற்செல்கின்றார்.

(இ-ள்.) நம்பியாரூரருஞ்சேரர்நன்னாட்டரசனுராயபைம்பொன்மணிநீண் முடிக்கழறிற்றறிவார்தாமும் = சுந்தரமூர்த்திசுவாமிகளும் சேரநாட்டுத்தலைவராகிய கழறிற்றறிவார்நாயனாரும்; தம்பிரானைத்தொழுதருளாற்போந்து = தம்பெருமானை வணங்கித்திருவருள்பெற்றுமீண்டு; தொண்டர்சார்ந்தணையப்பயணமுடன் = அடியார்புடைசூழப் பிரயாணத்தோடு; செம்பொனீடுமதிலாரூர்தொழுது = செம்பொன்னுலாகிய நெடுமதில்களையுடைய திருவாரூரெல்லையைவணங்கிக்கொண்டு; மேல்பாற்செல்கின்றார் = மேற்றிசைநோக்கிச்செல்வார்கள்.—எ-று.

பைம்பொன்மணிநீண்முடி - பசும்பொன்னினாலும் இரத்தினங்களினாலுமமைத்த நீண்டமுடி. (௧௨௯)

வேறு.

பொன்பரப்பிமணிவரன்றிப்புனல்பரக்குங்காவேரித்
தென்கரைப்போய்ச்சிவன்மகிழ்ந்தகோயில்பலசென்றிறைஞ்சி
மின்பரப்புஞ்சடையண்ணல்விரும்புதிருக்கண்டியூ
ரன்புருக்குஞ்சிந்தையுடன்பணிந்துபுறத்தணைந்தார்கள்.

(இ-ள்.) பொன்பரப்பிமணிவரன்றிப்புனல்பரக்கும் = பொன்களைக்கொழித்துமணிகளைவாரிக்கொண்டு புனல்பரப்பிவருகின்ற; காவேரித்தென்கரைப்போய் = காவிரிநதியின் தென்கரையிலேசென்று; சிவன்மகிழ்ந்தகோயில்பலசென்றிறைஞ்சி = சிவபிரான்விரும்பிய ஆலயங்கள்பலவற்றை அடைந்துவணங்கி; மின்பரப்புஞ்சடையண்ணல்விரும்புதிருக்கண்டியூர் = மின்போற்பரப்பிய சடைமுடியையுடைய விமலர்விரும்பிய திருக்கண்டியூரை; அன்புருக்குஞ்சிந்தையுடன்பணிந்துபுறத்தணைந்தார்கள் = அன்பினாலே உருக்கப்படும் சித்தத்தோடுவணங்கிப் புறத்தே அணுகினார்.எ-று.

வடகரையிற்றிருவையாறெதிர்தோன்றமலர்க்கரங்க
ளுடலுருகவுள்ளுருகவுச்சியின்மேற்குவித்தருளிக்
கடல்பரந்ததெனப்பெருகுங்காவிரியைக்கடந்தேறித்
தொடர்வுடையதிருவடியைத்தொழுவதற்குநினைவுற்றார்.

(இ-ள்.) வடகரையிற்றிருவையாறெதிர்தோன்ற = வடகரையிலே திருவையாறு எதிரேதோன்றுதலும்; உடலுருகவுள்ளுருகமலர்க்கரங்களுச்சியின்மேற்குவித்தருளி = உடலும் உள்ளமும் ஒருங்குருக மலர்போலுந்திருக்கரங்களைச் சிரமேற்குவித்தருளி; கடல்பரந்ததெனப்பெருகுங்காவிரியைக்கடந்தேறி = கடல்பரந்தாற்போலப் பெருகிவருகின்ற காவிரியைக்கடந்துசென்று; தொடர்வுடையதிருவடியை = தம்மையடிமைகொண்ட சம்பந்தமுடைய திருவடிகளை ; தொழுவதற்குநினைவுற்றார் = வணங்குதற்கு இருவரும் சிந்தித்தார்.—எ-று. (௧௩௧)

வேறு.

ஐயாறதனைக்கண்டுதொழுதருளாரூரர்தமைநோக்கிச்
செய்யாள்பிரியாச்சேரமான்பெருமாளருளிச்செய்கின்றார்
மையார்கண்டர்மருவுதிருவையாறிறைஞ்சமனமுருகி
நையாநின்றதிவ்வாறுகடந்துபணிவோநாமென்ன.

(இ-ள்.) செய்யாள்பிரியாச்சேரமான்பெருமான் = இலக்குமிவிட்டுப்பிரியாத சேரமான்பெருமானாயனார்; ஐயாறதனைக்கண்டுதொழுது = திருவையாற்றை

நோக்கிவணங்கி; அருளாரூரர் தமைநோக்கி = திருவருளின்முதிர்ந்த நம்பியாரூரரை நோக்கி; மையார்கண்டர்மருவுதிருவையாறிறைஞ்ச = கருமைசெறிந்தகண்டத்தராகிய கடவுள்வதியும் திருவையாற்றைவணங்க; மனமுருகிநையாநின்றது = மனமுருகிநைகின்றது; நாமிவ்வாறுகடந்துபணிவோமென்ன = நாம் இந்நதியைக்கடந்து இறைஞ்சுவோமென்றுவிண்ணப்பிக்க.—எ-று.

உயிர்களைப்புரத்தலிற் றிருமாலையொப்பவரென்பார் "செய்யாள்பிரியாச்சேரமான்பெருமாள்" என்றார். (கூஉ)

ஆறுபெருகியிருகரையும்பொருது விசும்பிலெழுவதுபோல்
வேறுநாவாயோடங்கண்மீதுசெல்லாவகைமிகைப்ப
நீறுவிளங்குந்திருமேனிநிருத்தர்பாதம்பணிந்தன்பி
னுறுநெறியாச்செலவுரியார்தரியாதழைத்துப்பாடுவார்.

(இ-ள்.) ஆறுபெருகியிருகரையும்பொருது = நதிபெருக்கெடுத்து இருகரைகளையுமோதி; வேறுநாவாயோடங்கண்மீதுசெல்லாவகை = வேறுநாவாய்களும் ஓடங்களும் மேற்செலாதபடி; விசும்பிலெழுவதுபோன்மிகைப்ப = ஆகாயத்தெழுவது போலதிகரித்தல்கண்டு; நீறுவிளங்குந்திருமேனிநிருத்தர்பாதம்பணிந்து = விபூதி திகழும் திருமேனியையுடைய கூத்தப்பிரானது திருவடிகளைவணங்கி; அன்பினுறுநெறியாச்செலவுரியார் = அன்பின்வழியே வழியாகச்செல்லுதற்குரிய அவ்வன்றொண்டப்பெருமான்; தரியாதழைத்துப்பாடுவார்=சகியாது விளித்துப்பாடுவார்.

நாவாய் மரக்கலம். ஓடம் தெப்பம். சகியாமை - அங்குநின்றே தரிசித்துச்செல்லுதற்கு மனந்துணியாமை. (கூஙு)

பரவும்பரிசென்றெடுத்தருளிப்பாடுந்திருப்பாட்டின்முடிவி
லரவம்புனைவார்தமையையாறுடையவடிகளோவென்று
விரவும்வேட்கையுடனழைத்துவிளங்கும்பெருமைத்திருப்பதிக
நிரவுமிசையில்வன்றொண்டர்நின்றுதொழுதுபாடுதலும்.

(இ-ள்.) வன்றொண்டர் = வன்றொண்டப்பெருமான்; பரவும்பரிசென்றெடுத்தருளிப்பாடுந்திருப்பாட்டின்முடிவில் = "பரவும்பரிசு" எனறுதொடங்கிப்பாடும் ஒவ்வொருதிருப்பாட்டின்முடிவிலும்; அரவம்புனைவார்தமை = சர்ப்பாபரணராகிய பெருமானை; ஐயாறுடையவடிகளோவென்று விரவுவேட்கையுடனழைத்து="ஐயாறுடையவடிகளோ" என்று மிக்ககாதலோடழைத்து ; விளங்கும் பெருமைத்திருப்பதிகம் = பிரகாசிக்கும் பெருமையைக்கொண்ட திருப்பதிகத்தை; நிரவுமிசையினின்றுதொழுதுபாடுதலும் = நிரம்பிய இசையோடு எதிரேநின்று வணங்கிப்பாடுதலும்.—எ-று. நிரவல் - நிரம்பல். (கூஙச)

## திருவையாறு - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

பரவும்பரிசொன்றறியேனான்பண்டேயும்மைப்பயிலாதே
னிரவும்பகலுநினைந்தாலுமெய்தநினையமாட்டேனான்
கரவிலருவிகமுகுண்ணத்தெங்கங்குலைக்கீழ்க்கருப்பாலை
யரவந்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ.

கூடியடியாரிருந்தாலுங்குணமொன்றில்லீர்குறிப்பிலீ
ரூடியிருந்துமுணர்கிலேனும்மைத்தொண்டனாரனேன்
றேடியெங்குங்காண்கிலேன்றிருவாரூரேசிந்திப்பா
ரோடுத்திரைக்காவிரிக்கோட்டத்தையாறுடையவடிகளோ.

திருச்சிற்றம்பலம்.

மன்றினிறைந்துநடமாடவல்லார்தொல்லையாற்றிற்
கன்றுதடையுண்டெதிரழைக்கக்கதறிக்கனைக்கும்புனிற்றுப்போ
லொன்றுமுணர்வாற்சராசரங்களெல்லாங்கேட்கவோலமென
நின்றுமொழிந்தார்பொன்னிமாநதிபுநீங்கிநெறிகாட்ட.

(இ-ள்.) மன்றினிறைந்துநடமாடவல்லார் = சிற்சபையிலே வியாபகராய்ச் செறிந்து திருத்தஞ்செய்தலில் வல்லகடவுள்; பொன்னிமாநதியுநீங்கிநெறிகாட்ட = காவிரிநதியும் இடையேவிலகிவழிகாட்டத்(தாமும்); கன்றுதடையுண்டெதிரழைக்க = கன்றுதடைப்பட்டு எதிரேயழைத்தலும்; கதறிக்கனைக்கும் புனிற்றுப்போல் = (அவ்வொலிகேட்டுக்) கதறுதலோடு கனைக்கின்ற இளங்கன்றுப்பசுப்போல; ஒன்றுமுணர்வாற் சராசரங்களெல்லாம்கேட்க = ஒன்றிய வுணர்ச்சியோடு சராசரமாகிய சகலவுயிர்களும் கேட்கும்படி; ஓலமென = "ஓலம்" என்று; தொல்லையாற்றினின்றுமொழிந்தார் = தமது பழைய திருவையாற்றிலே நின்றும் சாற்றியருளினார்.—எ-று.

சரம் - இயங்கும்பொருள். அசரம். இயங்காப்பொருள். ஓலமென்பது அபயமென்னும் பொருளதாய் அபயம்வேண்டுவார்க்கும் அளிப்பார்க்கும் பொதுமையினிற்பதொருசொல். (௧௩௮)

விண்ணின்முட்டும்பெருக்காறுமேல்பாற்பளிக்குவெற்பென்ன
நண்ணிநிற்கக்கீழ்பானீர்வடிந்தநடுவுநல்லவழி
பண்ணிக்குளிர்ந்தமணல்பரப்பக்கண்டதொண்டர்பயின்மாரி
கண்ணிற்பொழிந்துமயிர்ப்புளகங்கலக்கக்கையஞ்சலிகுவித்தார்.

(இ-ள்.) விண்ணின்முட்டும்பெருக்காறு = விண்ணினையளாவிய பெருக்கையுடைய நதியானது; மேல்பானீர் பளிக்குவெற்பென்ன நண்ணிநிற்க = மேற்பக்கத்திலே நீர் பளிக்குமலைபோல மிகுந்துநிற்க; கீழ்பால்வடிந்த = கீழ்ப்பக்கத்திலே வடிந்தனவாக; நடுவுநல்லவழிபண்ணிக் குளிர்ந்தமணல்பரப்பக்கண்டதொண்டர் = நடுவே நல்லவழியையுண்டாக்கிக் குளிர்ந்தமணல்களைப் பரப்புதலைக்கண்ட அடியவர்கள்; கண்ணிற்பயின் மாரிபொழிந்து = கண்ணினீரம்பியநீரை மழைபோலப்பொழிந்து; மயிர்ப்புளகங்கலக்கக் கையஞ்சலிகுவித்தார் = மயிர்சிலிர்த்தலையடையக் கைகளை அஞ்சலியாகக்குவித்தார் —எ-று.

ஆறு பண்ணிப்பரப்ப என இயையும். வடிந்த - முற்றெச்சம். (௧௩௯)

நம்பிபாதஞ்சேரமான்பெருமாள்பணியநாவலூரச்
செம்பொன்முந்நூன்மணிமார்பர்சேரர்பெருமானெதிர்வணங்கி
யும்பர்நாதருமக்களித்ததன்றோவென்னவுடன்மகிழ்ந்து
தம்பிரானைப்போற்றிசைத்துத்தடங்காவேரிநடுவணைந்தார்.

(இ-ள்.) நம்பிபாதஞ்சேரமான்பெருமான்பணிய=நம்பியாரூரர் திருவடிகளைச்சேரமான்பெருமாணாயனார்பணிய; நாவலூர்ச்செம்பொன்முந்நூன்மணிமார்பர் = திருநாவலூரிலவதரித்தவரும் செம்பொன்னாலாகிய உபவீதத்தையணிந்த மார்பினையுடையவருமாகிய நம்பியாரூரர்; சேரர்பெருமானைதிர்வணங்கி = அவர்க்கெதிரே பணிந்து; உம்பர்நாதருமக்களித்ததன்றோவென்ன = (இது) தேவநாயகராகிய கடவுள் உமக்களித்ததிருவருளன்றோ என்னலும்; உடன்மகிழ்ந்து=இருவரும் ஒருங்கு மகிழ்ச்சியுற்றவர்களாய்; தம்பிரானைப்போற்றிசைத்து = சிவபிரானைத்துதித்துக்கொண்டு; தடங்காவேரிநடுவேணேந்தார்=விசாலித்த காவிரிநடுவேசென்றார்.—எ-று.

நதிகடந்துசென்று நம்பரைப்பணியவேண்டுமெனப் பெரிதுங்காதல்கொண்டது கழறிற்றறிவார் நாயனாரேயாகலின், "உம்பர்நாதருமக்களித்ததன்றோ" என்றாரென்க. (கஅஎ)

செஞ்சொற்றமிழ்நாவலர்கோனுஞ்சேரர்பிரானுந்தம்பெருமா
னெஞ்சலில்லாநிறையாற்றினிடையேயளித்தமணல்வழியிற்
றஞ்சமுடையபரிசனமுந்தாமுமேறித்தலைச்சென்று
பஞ்சநதிவாணரைப்பணிந்துவிழுந்தாரெழுந்தார்பரவினார்.

இ-ள்.) செஞ்சொற்றமிழ்நாவலர்கோனும் = செவ்விய சொற்களையுடைய தமிழைப்பரப்பிய நாவலர்பெருமானும்; சேரர்பிரானும் = சேரமான் பெருமாணாயனாரும்; எஞ்சலில்லாநிறையாற்றினிடையே = குறைதலில்லாத நிறைவையுடைய நதியினிடையே; தம்பெருமானளித்தமணல்வழியில் = தமது பெருமானளித்த மணல்வழியிலே; தஞ்சமுடைய பரிசனமுந்தாமுமேறித்தலைச்சென்று = தம்மைப்பற்றுக்கோடாகக்கொண்ட பரிசனங்களும் தாமும் கரையேறிப்போந்து; பஞ்சநதிவாணரை = திருவையாற்றில் வாழ்வாராகிய செம்பொற்சோதிநாதரை; பணிந்துவிழுந்தாரெழுந்தார்பரவினார் = அஞ்சலித்து நமஸ்கரித்தெழுந்து துதித்தார்.—எ-று.

தலைச்சென்று ஒருசொன்னீர்மைத்து. "செயிரிற்றலைப்பிரிந்த" என்னுந் திருக்குறளானுமுணர்க. தமிழென்பது சால இனிமையுடைமையிற்போந்த பெயரென்பார், "செஞ்சொற்றமிழ்" என்றார். சூரியபுஷ்கரணிதீர்த்தம் கங்காதீர்த்தம் சந்திரகிரணத்துதித்த அமிர்தநதி கௌரியம்பிகை தனத்திலுதித்த பாலாறு நந்திவாய்நுரைத்தீர்த்தம் என்னும் ஐந்து நதிகளையுடைமையின் இத்தலம் பஞ்சநதமெனப் பெயர்பெற்றது; இவ்வைந்தும் பின்வந்தகாவேரியிற் கலந்தன என்பது அத்தலமான்மியம். (கஅஅ)

அங்கணரனார்கருணையினையாற்றாதாற்றித்திளைத்திறைஞ்சித்
தங்கள்பெருமான்றிருவருளாற்றாழ்ந்துமீண்டுந்தடம்பொன்னிப்
பொங்குநதியின்முன்வந்தபடியேநடுவுபோந்தேறத்
துங்கவரைபோனின்றநீர்தூரந்துதொடரப்பெருகியதால்.

(இ-ள்.) அங்கணரனார்கருணையினை = அருட்கண்ணராகிய பெருமானருளிய கருணைத்திறத்தை; ஆற்றாதாற்றி = தாங்கமுடியாராய்த்தாங்கி; திளைத்திறைஞ்சி=அக்கருணைமயமாய் நின்றுவணங்கி; தங்கள்பெருமான் றிருவருளாற்றாழ்ந்து= தந்தலைவராகிய அக்கடவுளருளால் அவரைவணங்கி விடைபெற்று; மீண்டுந்தடம்பொன்னிப்பொங்குநதியில் = பின்னரும் விசாலித்தகாவிரிநதியிலே; முன்வந்தபடியேநடுவுபோந்தேற = முன்வந்தபடி நடுவேசென்று கரையேறலும்; துங்கவரை

போனின்றநீர் = உயர்ந்தபனிங்குமலைபோல நின்றநீரானது; தூர்ந்துதொடரப்பெருகியது = வேகங்கொண்டு இடைவெளியின்றிப் பெருகியது.—எ-று.

ஏ - ஆல். அசைகள். தொடர்ந்துதொடரப்பெருகியதென்பதும் பாடம். ()

ஆயசெயலினதிசயத்தைக்கண்டக்கரையிலையாறு
மேயபெருமானருள்போற்றிவீழ்ந்துதாழ்ந்துமேல்பாற்போய்த்
தூயமதிவாழ்சடையார்தம்பதிகள்பிறவுந்தொழுதேத்திச்
சேயகொங்கர்நாட்டணைந்தார்திருவாரூரர்சேரருடன்.

(இ-ள்.) திருவாரூரர்சேரருடன் = சுந்தரமூர்த்திசுவாமிகள் சேரமான்பெருமாளுடனேகூடி; ஆயசெயலினதிசயத்தைக்கண்டு = அவ்வளம்நிகழ்ந்த செய்கையின் வியப்பைக்கண்டு; ஐயாறுமேயபெருமானருளக்கரையிற்போற்றிவீழ்ந்துதாழ்ந்து = திருவையாற்றிலமரும் சிவபெருமான்றிருவருளை அக்கரையினின்றுந்துதித்து நமஸ்கரித்து; மேல்பாற்போய் = மேற்குத்திசையிற்சென்று; தூயமதிவாழ்சடையார்தம் = களங்கமற்ற சந்திரனையணிந்த சடைமுடியையுடைய அக்கடவுளின்; பதிகள்பிறவுந்தொழுதேத்தி = மற்றைத்தலங்களையும் வணங்கித்துதித்து; சேயகொங்கர்நாட்டணைந்தார் = செவ்வியகொங்குதேசத்தைச் சேர்ந்தார்.—எ-று. (௧௪௦)

கொங்குநாடுகடந்துபோய்க்குலவுமலைநாட்டெல்லையுற
நங்கள்பெருமான்றோழனார்நம்பிதம்பிரான்றோழ
ரங்கணுடனேயணையவெழுந்தருளாநின்றாரெனும்விருப்பா
லெங்குமந்நாட்டுள்ளவர்களெல்லாமெதிர்கொண்டின்புறுவார்.

(இ-ள்.) கொங்குநாடுகடந்துபோய் = கொங்கதேசத்தையகன்று சென்று; குலவுமலைநாட்டெல்லையுற = விளங்குகின்ற மலைநாட்டெல்லையை அடைய; அந்நாட்டுள்ளவர்களெல்லாம் = அந்நாடுமுற்றும் உள்ளவர்களனைவரும்; நங்கள்பெருமான் = நம்முடையதலைவர்; தோழனார் நம்பி தம்பிரான்றோழர் = தமதுதோழராகிய நம்பியாரூரரென்னும் தம்பிரான்றோழரானவர்; அங்கணுடனேயணைய = அவ்விடத்தினின்றும் உடனேவரும்படி; எழுந்தருளாநின்றாரெனும்விருப்பால் = எழுந்தருளுகின்றாரென்னுங்காதலால்; எங்குமெதிர்கொண்டின்புறுவார் = அங்கங்கே எதிர்கொண்டு களிப்பாராயினர்.—எ-று. (௧௪௧)

பதிகளெங்குந்தோரணங்கள்பாங்கரெங்கும்பலவளங்கள்
வதிகளெங்குங்குளிர்பந்தர்மனைகளெங்குமகிற்புகைக்கார்
நதிகளெங்குமலர்ப்பிறங்கன்ஞாங்கரெங்குமோங்குவன
நிதிகளெங்குமுழவினொலிநிலங்களெங்கும்பொலஞ்சுடர்ப்பூ.

(இ-ள்.) பதிகளெங்குந்தோரணங்கள் = நகர்முழுமையும் தோரணங்கள்; பாங்கரெங்கும்பலவளங்கள் = பக்கமுழுமையும் பலசிறப்புக்கள்; வதிகளெங்குங்குளிர்பந்தர் = வழிமுழுமையும் குளிர்ந்தபந்தல்கள்; மனைகளெங்குங்காரகிற்புகை = வீடுகள்முழுமையும் மேகம்போற்கவியும் அகிற்புகைகள்; நதிகளெங்குமலர்ப்பிறங்கல் = நதிகள்முழுமையும் மலர்க்குவியல்கள்; ஞாங்கரெங்குமோங்குவனநிதிகள் = அந்நதியோரங்கள் முழுமையும் அவற்றாலொதுக்கப்பட்ட திரவியங்கள்; எங்குமுழவினொலி = நோக்குமிடங்கள்முழுமையும் வாச்சியமுழக்கம்; நிலங்களெங்கும் பொலஞ்சுடர்ப்பூ = பூமிமுழுமையும் பொன்னாலமைக்கப்பட்ட புஷ்பவகுப்பும் —

பாங்கரெங்கும்பூவனங்கள் மலைகளெங்குமகிற்புகைக்கார் என்பதும்பாடம். முழவு-வாச்சியப்பொது. அந்நாட்டிலுள்ளார் பொற்பூவமைத்து மங்கலமாகத்தூவலின் "நிலங்களெங்கும்பொலஞ்சுடர்ப்பூ" என்றார். (௧௧௨)

திசைகடோறும்வரும்பெருமையமைச்சர்சேனைப்பெருவெள்ளங்
குசைகொள்வாசிநிரைவெள்ளங்கும்பயானையணிவெள்ள
மிசைகொள்பண்ணும்பிடிவெள்ளமேவுஞ்சோற்றுவெள்ளங்கண்
டசைவிலின்பப்பெருவெள்ளத்தமர்ந்துகொடுங்கோளூரணைந்தார்.

(இ-ள்.) திசைகடோறும் = திக்குகடோறும்; வரும்பெருமையமைச்சர்சேனைப்பெருவெள்ளம் = வருகின்ற பெருமைபெற்ற மந்திரிகளோடு சேனைகளின்செறிவும்; குசைகொள்வாசிநிரைவெள்ளம் = பிடர்மயிரைக்கொண்ட குதிரையணிகளின்பெருக்கமும்; கும்பயானையணிவெள்ளம் = மத்தகத்தையுடைய யானையணிகளின்மலிவும்; மிசைகொள்பண்ணும்பிடிவெள்ளம் = மேற்கொண்ட அலங்காரத்தையுடைய பெண்யானைகளின் மிகுதியும்; மேவுஞ்சோற்றுவெள்ளங்கண்டு = அனைவரும்விரும்பும் அன்னத்தின்குவியல்களும் நோக்கி; அசைவிலின்பப்பெருவெள்ளத்தமர்ந்து = குன்றுதலில்லாத இன்பப்பெருக்கிலேமுழுகி; கொடுங்கோளூரணைந்தார் = கொடுங்கோளூரைச்சேர்ந்தார்.—எ-று.

திசைகடோறுங்கண்டு என இயையும். வெள்ளம்-மிகுதிப்பொருட்டு. குசை-குதிரைப்பிடர்மயிர். பண்ணுதல் - அலங்கரித்தல். (௧௪௩)

கொடுங்கோளூரின்மதில்வாயிலணிகோடித்துமறுகிலுடுத்
தொடுங்கோபுரங்கண்மாளிகைகள்சூளிகுளிர்சாலைகடெற்றி
நெடுங்கோநகர்களாடரங்குநிரந்தமணித்தாமங்கமுகு
விடுங்கோதைப்பூந்தாமங்கணிரைத்துவெவ்வேறலங்கரித்து.

(இ-ள்.) கொடுங்கோளூரின்மதில்வாயிலணிகோடித்து = கொடுங்கோளூரிலே அரண்மனைவாயிலை அணிகளாலலங்கரித்து; மறுகிலுடுத்தொடும் = வீதிகளிலே நக்ஷத்திரமண்டலத்தையளாவிய; கோபுரங்கண்மாளிகைகள்சூளி = கோபுரங்களும் மாடங்களும் அரமியமாயுள்ள மேலிடங்களும்; குளிர்சாலைகடெற்றி = குளிர்ந்தசாலைகளும் மேடைகளும்; நெடுங்கோநகர்களாடரங்கு = நெடிய அரசநகரங்களும் கீர்த்தனசபைகளுமாகிய இவற்றை; நிரந்தமணித்தாமங்கமுகு = நிறைந்த இரத்தினக்கோவைகளும் கமுகுகளும், விடுங்கோதைப்பூந்தாமங்கள் = தொங்கவிடுதற்குரிய கொத்தமைந்த பூமாலைகளுமாகிய இவற்றைக்கொண்டு; நிரைத்துவெவ்வேறலங்கரித்து = வரிசைப்படுத்தித் தனித்தனி அலங்கரித்து.—எ-று.

அரண்மனைவாயில் ஊர்திகளினிழிந்து உள்ளெழுந்தருளுதற்கு உரியதானமாகலின் அதனை மிக அலங்கரித்தனரென்பார் "மதில்வாயிலணிகோடித்து" எனவேறுவிதந்தனர். (௧௪௪)

நகரமாந்தரெதிர்கொள்ளநண்ணியெண்ணிலரங்குதொறு
மகரக்குழைமாதர்கள்பாடியாடமணிவீதியிலணைவார்
சிகரநெடுமாளிகையணையார்சென்றுதிருவஞ்சைக்களத்து
நிகரிறொண்டர்தமைக்கொண்டுபுகுந்தாருதியர்நெடுந்தகையார்.

(இ-ள்.) நகரமாந்தர்நண்ணியெதிர்கொள்ள = நகரத்திலுள்ளவர்கள் வந்தெதிர்கொள்ள; எண்ணிலரங்குதொறும் = அளவில்லாதநடனசாலைகடோறும்; மகரக்

குழைமாதர்கள்பாடியாட = மகரக்குழைகளையணிந்த மடந்தையர் பாடிநடிக்க; மணிவீதியிலணைவாருதியர்நெடுந்தகையார் = அழகியவீதியில் அடைவாராகிய சேரமான்பெருமாணயனார்; சிகரநெடுமாளிகையணையார் = சிகரங்களோடுகூடிய நெடிய அரண்மனையையடையாராய்; கிகரிறொண்டர்தமைக்கொண்டுசென்று = ஒப்பற்ற வன்றொண்டப்பெருமானை உடன்கொண்டுபோய்; திருவஞ்சைக்களத்துப்புகுந்தார் = திருவஞ்சைக்களத்தைச் சேர்ந்தார்.—எ-று. (௧௪௫)

இறைவர்கோயின்மணிமுன் றில்வலங்கொண் டிறைஞ்சியெதிர்புக்கு
நிறையுங்காத லுடன்வீழ்ந்துபணிந்துநேர்நின் றாரூரர்
முறையில்விளம்புந்திருப்பதிகமுடிப்பதுகங்கையென்றெடுத்துப்
பிறைகொண்முடியார்தமைப்பாடிப்பரவிப்பெருமாளுடன்றொழுதார்.

(இ-ள்.) ஆரூரர்பெருமாளுடன் = நம்பியாரூரவள்ளலார் சேரமான்பெருமாணயனாரோடு; இறைவர்கோயில்வலங்கொண்டு = சிவபெருமான் கோயிலைவலம்வந்து; மணிமுன்றிலிறைஞ்சி = அழகியமுற்றத்திலேவணங்கி; எதிர்புக்கு = சந்நிதிமுன்னடைந்து; நிறையுங்காதலுடன்வீழ்ந்துபணிந்துநேர்நின்று = நிறைந்த அன்பால் வீழ்ந்துநமஸ்கரித்து எதிர்நின்று; முறையில்விளம்புந்திருப்பதிகம் = முறைப்படிபாடுந்திருப்பதிகத்தை; முடிப்பதுகங்கையென்றெடுத்து = "முடிப்பதுகங்கை" என்றுதொடங்கி; பிறைகொண்முடியார்தமை = இளம்பிறையணிந்த திருமுடியையுடைய இறைவனை; பாடிப்பரவித்தொழுதார் = பாடித்துதித்து இறைஞ்சினர்.-எ-று.

## முடிப்பதுகங்கை - பண் - கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்.

முடிப்பதுகங்கையுந்திங்களுஞ்செற்றதுமூவெயி
லொடிப்பதுமாத்திரைநீறெழக்கணை நாறினர்
கடிப்பதுமேறுமென்றஞ்சுவன்றிருக்கைகளாற்
பிடிப்பதுபாம்பன்றியில்லையோவெம்பிரானுக்கே.

காய்சினமால்விடைமாணிக்கத்தெங்கறைக்கண்டத்
தீசனையூரனெட்டோடிரண்டும்விரும்பிய
வாயினசீர்ப்பகைஞானியப்பனடித்தொண்டன்று
னேசினபேசுமின்றொண்டர்களெம்பிரானையே.

திருச்சிற்றம்பலம்.

---

தொழுதுதிளைத்துப்புறம்போந்துதோன்றப்பண்ணும்பிடிமேற்பார்
முழுதுமேத்தநம்பியைமுன்பேற்றிப்பின்புதாமேறிப்
பழுதின்மணிச்சாமரைவீசிப்பைம்பொன்மணிமாளிகையிலவரும
பொழுதுமருவிலிருபுடையுமிடைந்தார்வாழ்த்திப்புகல்கின்றார்.

(இ-ள்.) தொழுது = (சேரமான்பெருமாணயனார் தாமும் சிவபெருமானைப்) பணிந்து; திளைத்துப் புறம்போந்து = பரவசப்பட்டுநின்று வெளியேவந்து; தோன்றப்பண்ணும்பிடிமேல் = விளங்க அலங்கரித்த யானைமேல்; பார்முழுதுமேத்த நம்பியை முன்பேற்றி = உலகமுழுமையும் துதிக்க நம்பியாரூரரை முன்னரெழுந்தருளுவித்து; பின்புதாமேறி = பின்னர்த் தாம்இவர்ந்து; பழுதின்மணிச்சாமே

ரைவீசி = குற்றமற்ற மணிகளிழைத்த சாமரையைவீசிக்கொண்டு; பைம்பொன்மணிமாளிகையில்வரும்பொழுது — பசும்பொன்னாலும் மணிகளாலுமமைத்த மாளிகையையடையுங்கால்; மருங்கிருபுடையுமிடைந்தார் வாழ்த்திப்புகல்கின்றார் — வீதிகளின் இருபக்கத்திலும்நெருங்கியவர்கள் புகழ்ந்துவிளம்புவார்.—எ-று.

பிடியென்பது ஈண்டு யானைப்பொதுப்பெயராய் நின்றது. (௧௭௭)

நல்லதோழர்நம்பெருமாட்டமக்குநம்பியிவரென்பா
ரெல்லையில்லாத்தவமுன்பென்செய்தோமிவரைத்தொழவென்பார்
செல்வமினியென்பெறுவதுநஞ்சிலம்புநாட்டுக்கெனவுரைப்பார்
சொல்லுந்தரமோபெருமாள்செய்தொழிலைப்பாரீரெனத்தொழுவார்.

(இ-ள்.) நம்பெருமாட்டமக்கு நம்பியிவர் நல்லதோழரென்பார் = நமதுபெருமானுக்கு நம்பியாரூரரென்னுமிவர் நல்லதோழரென்றுசொல்வார்; இவரைத்தொழவெல்லையில்லாத்தவமுன்பென்செய்தோமென்பார் = இவ்விருவரையும் வணங்குதற்குமுற்காலத்திலே அளவுபடாததவமாக யாதுபுரிந்தோமென்று கூறுவர்; இனி நஞ்சிலம்புநாட்டுக்குப்பெறுவது செல்வமென்னெனவுரைப்பார் = இனி நமது மலைநாட்டுக்குப் பெறுவதாகியசெல்வம்யாது என்றிசைப்பர்; சொல்லுந்தரமோ பெருமாள்செய்தொழிலைப்பாரீரெனத்தொழுவார் = இதுசொல்லுந்தரத்ததோ நமது பெருமான்செய்யுந்தொழிலைக் காண்பீரென்றுரைத்து வணங்குவார்.—எ-று.

தம்பெருமான் பிறர்க்குச் சாமரைவீசுகின்றாரெனக்கூறுதல் தமக்கியல்பன்மையான் "சொல்லுந்தரமோ பெருமாள்செய்தொழிலைப் பாரீரெனத்தொழுவார்" என்றார். (௧௭அ)

பூவும்பொரியும்பொற்றுகளும்பொழிந்துபணிவார்பொருவிலிவர்
மேவும்பொன்னித்திருநாடேபுவிக்குத்திலகமெனவியப்பார்
பாவுந்துதிகளெம்மருங்கும்பயிலவந்துமாளிகையின்
மாவுங்களிறுநெருங்குமணிவாயில்புகுந்துமருங்கிழிந்தார்.

(இ-ள்.) பூவும் பொரியும் பொற்றுகளும் பொழிந்துபணிவார் — மலர்களையும் பொரிகளையும் பொற்சுண்ணங்களையும் சொரிந்துவணங்குவர்; பொருவிலிவர் மேவும்பொன்னித்திருநாடே = ஒப்பில்லாத இவர்வீற்றிருக்கும் காவிரிநதிசூழுஞ் சோணாடே; புவிக்குத்திலகமெனவியப்பார் = இவ்வுலகத்திற்குத் திலகமென்று வியந்துகூறுவர்; பாவுந்துதிகளெம்மருங்கும் பயிலவந்து = இத்தன்மையாகப்பரவிய துதிகள் எப்பக்கத்திலும் நிகழவந்து; மாவுங்களிறு நெருங்கும் = குதிரைகளும் யானைகளுஞ்செறிந்த; மாளிகையின் மணிவாயில்புகுந்து மருங்கிழிந்தார் = மாளிகையின் மணிவாயிற்புகுந்து அருகே இழிந்தருளினார்.—எ-று. (௧௭௯)

கழறிற்றறியுந்திருவடியுங்கலைநாவலர்தம்பெருமானு
முழவிற்பொலியுந்திருநெடுந்தோண்முனைவர்தம்மையுடன்கொண்டு
விழவிற்பொலியுமாளிகையில்விளங்குசிங்காசனத்தின்மிசை
நிழலிக்கொளிரும்பூணாரையிருத்தித்தாமுநேர்நின்று.

(இ-ள்.) கழறிற்றறியுந்திருவடியும் = கழறிற்றறிவார்நாயனாரும்; முழவிற்பொலியுந்திருநெடுந்தோள் = மத்தளம்போற்றிரண்டு விளங்குந் திருநெடுந்தோள்களையுடைய; கலைநாவலர்தம்பெருமானு முனைவர்தம்மை = கலையிற்சிறந்த நாவலர்பெருமானுமியற்றுதல்வரும்; திக்கொளிருநிழற்பூணாரை = திக்குமுழுமையும் காந்தியரம்பும்

திருவாபரணத்தையுடையவருமாகிய திருநாவலூரரை; உடன்கொண்டு = அழைத்துச்சென்று; விழவிற்பொலியுமாளிகையில் = மங்கலத்தோடு விளங்கும் திருமாளிகையிலே; விளங்குஞ் சிங்காசனத்தின்மிசையிருத்தித் தாமுநேர்நின்று = பிரகாசிக்கின்ற சிங்காசனத்தின்மீதிருத்தித் தாமும் எதிரேநின்று.—எ-று.

திருவடியென்பது அடிகளார் என்னும் பொருளது. (௧௫0)

செம்பொற்கரகவாசநீர்தேவிமார்களெடுத்தேந்த
வம்பொற்பாதந்தாம்விளக்கியருளப்புகலுமாரூரர்
தம்பொற்றாளைவாங்கியிதுதகாதென்றருளத்தரணியில்வீழ்ந்
தெம்பெற்றிமையாற்செய்தனவிங்கெல்லாமிசையவேண்டுமென.

(இ-ள்.) செம்பொற்கரக வாசநீர் தேவிமார்களெடுத்தேந்த = செம்பொன்னாலாகிய கரகத்திலுள்ளபரிமளநீரைத் தேவிமார்களெடுத்துவிடுக்க; அம்பொற்பாதந் தாம்விளக்கியருளப்புகலும் = அழகியபொன்போலுந்திருவடிகளைத் தாம்விளக்கத் தொடங்கலும்; ஆரூரர்தம்பொற்றாளைவாங்கி = நம்பியாரூரர் தம்முடையஅழகியதிருவடிகளைவாங்கிக்கொண்டு; இதுதகாதென்றருள = இக்கனம் இயற்றுதல் தகாதென்று இசைத்தருள; தரணியில்வீழ்ந்து = அவர்பூமியில்வீழ்ந்துபணிந்து; எம்பெற்றிமையாலிங்குசெய்தனவெல்லாம் = எமது அன்பு மேலீட்டால் இங்கு செய்தனயாவும்; இசையவேண்டுமென = அங்கீகரித்தருளவேண்டுமெனப் பிரார்த்திக்க.—எ-று.

பெற்றிமை ஈண்டு அன்புமேலீட்டின்மேற்று. (௧௫௧)

பெருமாள்வேண்டவெதிர்மறுக்கமாட்டாரன்பிற்பெருந்தகையார்
திருமாநெடுந்தோளுதியர்பிரான்செய்தவெல்லாங்கண்டிருந்தா
ரருமானங்கொள்பூசனைகளடைவேயெல்லாமளித்ததற்பி
னொருமாமதிவெண்குடைவேந்தருடனேயமுதுசெய்துவந்தார்.

(இ-ள்.) அன்பிற்பெருந்தகையார் = அன்பிலேபெருந்தகைமையுடைய நம்பியாரூரர்; பெருமாள்வேண்ட = சேரமான்பெருமாணாயனார் வேண்டிக்கொண்டமையால்; எதிர்மறுக்கமாட்டார் = எதிர்மறுக்க இயலாதவராய்; திருமாநெடுந்தோளுதியர்பிரான் = இலக்குமிகுடிகொண்ட பெரியநெடிய தோள்களையுடைய அந்நாயனார்; செய்தவெல்லாங் கண்டிருந்தார் = இயற்றிய வுபசாரங்களையெல்லாம் நோக்கிக்கொண்டிருந்தார்; அருமானங்கொள்பூசனைகளெல்லாம் = அரியமாட்சிமைப்பட்ட ஆராதனை முதலியபலவும்; அடைவேயளித்ததற்பின் = முறைப்படி முற்றுவித்ததன்பின்; ஒருமாமதிவெண்குடை = ஒப்பற்றபெரிய சந்திரன்போலும் வெண்கொற்றக்குடையையுடைய; வேந்தருடனே யமுதுசெய்துவந்தார் = சேரமான்பெருமாணாயனாரோடு திருவமுதுசெய்து மகிழ்ந்தார்.—எ-று.

அவர் இக்கனமியற்றத் தாம் ஏற்பதில் இசைவிலரென்பார் கொண்டிருந்தாரென்றது "செய்தவெல்லாங்கண்டிருந்தார்" என்றார். (௧௫௨)

சேரருடனேதிருவமுதுசெய்தபின்புகைகோட்டி
யாரநறுமென்கலவைமான்மதச்சாந்தாடையணிமணிப்பூ
ணீரவிரைமென்மலர்ப்பணிகளினையமுதலாயினவருக்கஞ்
சாரவெடுத்துவன்றொண்டர்ச்சாத்தியிக்கதமக்காக்கி.

(இ-ள்.) சேரருடனேதிருவமுதுசெய்தபின்பு = சேரமான்பெருமாணாயனார் திருமுனைப்பாடிநாடரோடு திருவமுதுசெய்தபின்; கைகோட்டி = கரங்களைச்சுத்தி செய்துகொண்டு; நறுமாரமென்கலவை = பரிமளமிக்க மெல்லியசந்தனக்கலவை;

மான்மதச்சாந்தாடை யணிமணிப்பூண் = கஸ்தூரிக்கூட்டு ஆடை அழகிய இரத்தின ஆபரணங்கள்; ஈரவிரை மென்மலர்ப்பணிகள் = குளிர்ந்த மெல்லிய பூமாலைகள்; இனையமுதலாயினவருக்கஞ்சாரவெடுத்து = இவைமுதலியவர்க்கங்களை மிகஎடுத்து; வன்றொண்டர்ச்சாத்தி = அவ்வன்றொண்டப் பெருமானுக்குத்தரித்து; மிக்கதமக்காக்கி = எஞ்சியவற்றைத் தமக்குரிமையாக்கி.—எ-று. (௧௫௩)

பாடலாடலின்னியங்கள்பயிறன்முதலாம்பண்ணையினி
னீடுமினியவிநோதங்கணெருங்குகாலந்தொறுநிகழ
மாடுவிரைப்பூந்தருமணஞ்செய்யாராமங்கள்வைகுவித்துக்
கூடமுனைப்பாடியர்கோவைக்கொண்டுமகிழ்ந்தார்கோதையார்.

(இ-ள்.) கோதையார்முனைப்பாடியர்கோவைக்கூடக்கொண்டு = சேரமான்பெருமாணாயனார் திருமுனைப்பாடிநாட்டுத்தலைவரை உடன்கொண்டு; பாடலாடலின்னியங்கள்பயிறன்முதலாம்பண்ணையினில் = பாடுதல்ஆடுதல் இனியவாத்தியங்கள்பழகுதல் முதலாகிய கோட்டியிலே; நீடுமினியவிநோதங்கள் = மிக்க இனியவிநோதச்செயல்கள்; நெருங்குகாலந்தொறுநிகழ = அவ்வக்காலங்கடோறும் வெவ்வேறுநடக்க; மாடுவிரைப்பூந்தரு=சூழச் சுகந்தங்களைவீசும் மலர்மரங்கள்; மணஞ்செய்யாராமங்கள்வைகுவித்துமகிழ்ந்தார் = பரிமளிக்கின்ற சோலைகளிலே வதிவித்துக்களித்தார்.—எ-று. (௧௫௪)

வேறு.

செண்டாடுந்தொழின்மகிழ்வுஞ்சிறுசோற்றுப்பெருஞ்சிறப்பும்
வண்டாடுமலர்வாவிமருவியநீர்விளையாட்டுந்
தண்டாமும்மதகும்பத்தடமலைப்போர்சலமற்போர்
கண்டாராவிருப்பெய்தக்காவலனார்காதல்செய்நாள்.

(இ-ள்.) காவலனார் = சேரமான்பெருமாணாயனார்; செண்டாடுந் தொழின்மகிழ்வும் = பந்துவிளையாடும்தொழின்மகிழ்ச்சியும்; சிறுசோற்றுப்பெருஞ்சிறப்பும் = பலசித்திரான்னங்களை உய்யானமுதலிய இடங்களிலே உண்டுகளிக்கும் பெருஞ்சிறப்புகளும்; வண்டாடுமலர்வாவி = வண்டுகள்சஞ்சரிக்கும் மலர்நிரம்பிய தடாகங்களிலே; மருவியநீர்விளையாட்டும் = பொருந்திய நீர்விளையாட்டும்; தண்டாமும்மதகும்பத்தடமலைப்போர் = வற்றாதமும்மதங்களோடு மத்தகத்தையுமுடைய யானைப்போரும்; சலமற்போர்கண்டு = தணியாக்கோபத்தாற் செய்யப்படும் மல்யுத்தங்களும் நோக்கி; ஆராவிருப்பெய்த = அளவுபடாதவிருப்பம்மிக; காதல்செய்நாள் = நம்பியாரூரருக்குக் காதலைவிளைக்கும் நாளில்.—எ-று. (௧௫௫)

நாவலர்தம்பெருமானுந்திருவாரூர்நகராளுந்
தேவர்பிரான்கழலொருநாண்மிகநினைந்தசிந்தையரா
யாவியையாரூரானைமறக்கலுமாமேயென்னு
மேவியசொற்றிருப்பதிகம்பாடியேவெருவுற்றார்.

(இ-ள்.) நாவலர்தம்பெருமானும் = நாவலர்பெருமானாகிய நம்பியாரூரரும் திருவாரூர் நகராளுந்தேவர்பிரான்கழல் = திருவாரூர்த்தலைவராகிய தேவநாயகருடைய திருவடிகளை; ஒருநாண்மிகநினைந்தசிந்தையராய் = ஒருதினம் மிகவும்சிந்தித்த சித்தத்தையுடையராய்; ஆவியையாரூரானை மறக்கலுமாமேயென்னும் சொல்மேவிய = என்னுயிர்போல்வாராகிய "ஆரூரானைமறக்கலுமாமே" என்னுந்திருவாக்கோடு

பொருந்திய; திருப்பதிகம்பாடி வெருவுற்றார் = திருப்பதிகத்தையருளிச்செய்து வெருவினார்.—எ-று.

ஏ-அசை. வெருவுதல் சின்னாள்பிரிந்தமையைச் சிந்தித்துஅஞ்சுதல். (௩௯௬)

## திருவாரூர் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

பொன்னுமெய்ப்பொருளுந்தருவானைப்போகமுந்திருவும்புணர்ப்பானைப்
பின்னையென்பிழையைப்பொறுப்பானைப்பிழையெலாந்தவிரப்பணிப்பானை
யின்னதன்மையனென்றறிவொண்ணாவெம்மானையெளிவந்தபிரானை
யன்னம்வைகும்வயற்பழனத்தணியாரூரானைமறக்கலுமாமே.

ஒரூரென்றுலகங்களுக்கெல்லாமுரைக்கலாம்பொருளாயுடன்கூடிக்
காரூருங்கமழ்கொன்றைநன்மாலைமுடியன்காரிகைகாரணமாக
வாரூரைம்மறத்தற்கரியானையம்மான்றன்றிருப்பேர்கொண்டதொண்ட
னாரூரன்னடிநாயுரைவல்லாரமரலோகத்திருப்பவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

திருவாரூர்தனைநினைந்துசென்றுதொழுவேனென்று
மருவார்வத்தொண்டருடன்வழிக்கொண்டுசெல்பொழுதி
லொருவாநண்புள்ளுருகவுடனெழுந்துகைதொழுது
பெருவானவரம்பனார்பிரிவாற்றார்பின்செல்வார்.

(இ-ள்.) திருவாரூர்தனைநினைந்துசென்றுதொழுவேனென்று = திருவாரூரைச்சிந்தித்து இப்பொழுதேபுறப்பட்டுப்போய் வணங்குவேனென்று; ஆர்வமருவுதொண்டருடன்வழிக்கொண்டுசெல்பொழுதில் = அன்புவாய்ந்த அடியவர்களோடுவழிபற்றிச்செல்லுங்காலையில்; பெருவானவரம்பனார் = உயர்ந்தசேரகுலாதிபர்; ஒருவாநண்புள்ளுருக உடனெழுந்து = நீக்கமில்லாதநட்பினால் உள்ளமுருக உடனே யெழுந்து; கைதொழுது பிரிவாற்றார்பின்செல்வார் = கரங்களைக்குவித்துக்கொண்டு பிரிவுசகியாராய்ப் பின்னேசெல்வார்.—எ-று.

நண்பென்புழி மூன்றனுருபுவிரிக்க. (௩௯௭)

வன்றொண்டர்முன்னெய்திமனமழிந்தவுணர்வினரா
யின்றுமதுபிரிவாற்றேனென்செய்கேன்யானென்னா
வொன்றுநீர்வருந்தாதேயுமதுபதியின்கணிருந்
தன்றினார்முனைமுருக்கியரசாளுமெனமொழிந்தார்.

(இ-ள்.) வன்றொண்டர்முன்னெய்தி = வன்றொண்டப்பெருமான் முன்னரடைந்து; மனமழிந்த வுணர்வினராய் = உள்ளமழிந்த வுணர்ச்சியையுடையராய்; இன்றுமதுபிரிவாற்றேன் = இப்பொழுது உம்முடைய பிரிவைச்சகியேன்; யானென்செய்கேனென்ன = யான் என்செய்யக்கடவேனென்று விண்ணப்பிக்க; ஒன்றுநீர்வருந்தாதே = நீர் சிறிதும் வருந்தாமல்; உமதுபதியின்கணிருந்து = உமது நகரத்திலிருந்துகொண்டு; அன்றினார் முனைமுருக்கி = பகைத்தவரைப் போரிலழித்து; அரசாளுமென மொழிந்தார் = அரசாளக்கடவீரென்று அருளினார்.—எ-று.

மனமழிந்த வுணர்வாவது - பிரிவைப் பலகாற்சிந்தித்தலான் ஆற்றுது மனங் கரைந்து தோற்றமில்லதாக அச்சிந்தனைமாத்திரம் நிற்பது. அன்றினர் - பகைவர். இதனை "அன்றினர் புரங்க ளழலிடை யவியக் - குன்றுவளைத் தெய்த குன்றாக் கொற்றவ" என்னும் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையானு முணர்க. (கரு௪)

ஆரூரர்மொழிந்தருளவதுகேட்டவருட்சேரர்
பாரோடுவிசும்பாட்சியெனக்குமதுபாதமலர்
தேரூருநெடுவீதித்திருவாரூர்க்கெழுந்தருள
நேரூருமனக்காதனீக்கவுமஞ்சுவனென்றார்.

(இ-ள்.) ஆரூரர்மொழிந்தருள வதுகேட்டவருட்சேரர் = நம்பியாரூரர் இங் ஙனம் அருளிச்செய்யக்கேட்ட திருவருள்பெற்ற சேரர்குலத்தலைவர்; எனக்குப்பா ரோடுவிசும்பாட்சி யுமது பாதமலர் = அடியேனுக்கு மண்ணுலகோடு விண்ணுலகா ட்சியும் தேவரீருடைய திருவடித்தாமரைமலர்களேயாகும்; தேரூருநெடுவீதித் திருவாரூர்க்கெழுந்தருள = தேர்களூருகின்ற நெடியவீதிகளையுடைய திருவாரூருக் கெழுந்தருளும்படி; நேரூருமனக்காதல் = ஒற்றுமைப்பட்டுச் செல்லும் தேவரீரது திருவுள்ளக்கருத்தை; நீக்கவு மஞ்சுவனென்றார் = அகற்றுதற்கும் அஞ்சுகின்றே னென்றார்.—எ-று.

எனவே, யானும் உடன்வரத்துணிகின்றேனென்பது. (கரு௫)

மன்னவனுரதுமொழியவன்றொண்டரெதிர்மொழிவா
ரென்னுயிருக்கின்னுயிராமெழிலாரூர்ப்பெருமானை
வன்னெஞ்சக்கள்வனேன்மறந்திரேன்மதியணிந்தா
ரின்னருளாலரசளிப்பீர்நீரிருப்பீரெனவிறைஞ்ச.

(இ-ள்.) மன்னவனுரதுமொழிய = சேரகுலக்குரிசிலார் அவ்வாறு விண்ண ப்பிக்க; வன்றொண்டரெதிர்மொழிவார் = வன்றொண்டப்பெருமான் எதிரேகூறு வார்; என்னுயிருக்கின்னுயிரா மெழிலாரூர்ப் பெருமானை = எனதுயிர்க்கு இனிய உயிராய்விளங்கும் அழகுமிக்க ஆரூரில் வீற்றிருக்கும் பெருமானை; வன்னெஞ்சக்க ள்வனேன் மறந்திரேன் = வலியநெஞ்சத்தையுடைய கள்வனாகியயான் மறந்திருக் கமாட்டேன்; மதியணிந்தாரின்னருளால் = சந்திரனையணிந்த சங்கரனாரது இனி யதிருவருளால்; அரசளிப்பீர் நீரிருப்பீரென விறைஞ்ச = இவ்வரசைப் பாதுகா ப்பீர் நீர் இருப்பீராகவென்று வணங்கலும்.—எ-று.

ஏனைக்கருவிகளை உயிரியக்கு மாறுபோல உயிரையியக்கும் தலைவரென்பார் "என்னுயிருக்கின்னுயிரா மெழிலாரூர்ப்பெருமான்" என்றும், இத்தகையபெருமான் என்பொருட்டுத் தூதுசென்று எனக்குப்பாலித்த திருவருளைமறந்த வலியசித்தத்தை யுடைய வஞ்சகன்யானென்பார் "வன்னெஞ்சக்கள்வனேன்" என்றுங்கூறினார்.

மற்றவரும்பணிந்திசைந்தேமந்திரிகடமையழைத்துப்
பொற்புநிறைதொன்னகரிலிற்றைக்குமுன்புகுந்த
நற்பெரும்பண்டாரநாலுவருக்கமானவெலாம்
பற்பலவாமாளின்மிசையேற்றிவரப்பண்ணுமென.

(இ-ள்.) அவரும்பணிந்திசைந்து மந்திரிகடமையழைத்து = கழறிற்றறிவா ர்நாயனாரும்வணங்கி யுடன்பட்டு மந்திரிமார்களையழைத்து; பொற்புநிறைதொன்ன

ளில் = அழகுநிரம்பிய நமது பழைமையாகிய நகரத்திலே; இற்றைக்கு முன்புகு ந்த = இன்றைக்குமுற்பட்ட காலங்க ளனைத்திலுஞ்சேர்ந்த; நற்பெரும்பண்டாரம் = சிறந்தனவாய்மிக்க திரவியக்குவியல்களும்; நாணுவருக்கமானவெலாம் = மற்றைப் பலவகைப்பட்ட பண்டங்களுமாகிய எல்லாவற்றையும்; பற்பலராமாளின்மிசையேற்றி = மிகப்பலராகிய ஆள்களின்மீதேற்றி; வரப்பண்ணுமெ(ன) = (விரைவில்) வரச்செய்வீராகவென்று ஆஞ்ஞாபிக்க.—எ-று.

மற்று - ஏ - அசைகள். அன்றையவருவாய் பொக்கிஷத்திலே அப்பொழுது சேர்ந்திராதாகலின் "இற்றைக்குமுன்புகுந்த பண்டாரம்" என்றார். (௧௩௪)

ஆங்கவருமன்றுவரையாயமாகியதனங்க
ளோங்கியபொன்னவமணிகளொளிர்மணிப்பூண்டுகில்வருக்க
ஞாங்கர்நிறைவிரையுறுப்புவருக்கமுதனலஞ்சிறப்பத்
தாங்குபொதிவினைஞர்மேற்றலமலியக்கொண்டணைந்தார்.

(இ-ள்.) அவருமன்றுவரையாயமாகியதனங்கள் = அம்மந்திரிமார்களும் அன்றளவும் திரண்டுள்ள பலவகைத்திரவியங்களும்; ஓங்கியபொன்னவமணிகள் = உயர்ந்தபொன்களும் நவரத்தினங்களும்; ஒளிர்மணிப்பூண்டுகில்வருக்கம் = ஒளிவிடும் இரத்தினாபரணங்களும் ஆடைவகைகளும்; ஞாங்கர்நிறை விரையுறுப்பு வருக்கமுதல் = அருகெங்குநிறைக்கப்பட்டுள்ள நானாவித வாசனைவருக்கங்களு முதலியவற்றை; நலஞ்சிறப்ப = சேரகுலாதிபருக்குச் சிறந்தவுவகைமிகும்படி; தாங்கு பொதிவினைஞர்மேல் = பொதிசுமக்குந் தொழிலாளிகள்மேலே; தலமலியக்கொண்டணைந்தார் = பூமிமுற்றும் நிரம்பக்கொண்டுவந்தார்.—எ-று. ஆங்கு - அசை. ()

மற்றவற்றின்பரப்பெல்லாம்வன்றொண்டர்பரிசனத்தின்
முற்படவேசெலவிட்டுமுனைப்பாடித்திருநாடர்
பொற்பதங்கள்பணிந்தவரைத்தொழுதெடுத்துப்புனையலங்கல்
வெற்புயர்தோளுறத்தழுவிவிடையளித்தார்வன்றொண்டர்.

(இ-ள்.) அவற்றின் பரப்பெல்லாம் = அப்பொதிகளனைத்தையும்; வன்றொண்டர் பரிசனத்தின்முற்படவே செலவிட்டு = வன்றொண்டப்பெருமானுடைய பரிசனங்களின்முன்னே செல்ல ஏவி; பொற்பதங்கள் பணிந்தவரை = தம்முடையபொன்போலுந் திருவடிகளிற்பணிந்த சேரர்குலக்குரிசிலாரை; முனைப்பாடித்திருநாடர் வன்றொண்டர் = திருமுனைப்பாடி நாட்டுத்தலைவராகிய நம்பியாரூரர்; தொழுதெடுத்து = தாமும்வணங்கி அவரையெடுத்து; அலங்கல்புனைவெற்புயர் தோளுறத்தழுவி விடையளித்தார் = மாலையையணிந்த மலைபோலும் உயர்ந்த தோள்களிலே பொருந்தத்தழுவி விடைதந்தார்.—எ-று. மற்று அசை. (௧௩௫)

ஆரூரரவர்தமக்குவிடையருளியங்ககன்று
காரூருமலைநாடுகடந்தருளிக்கற்சுரமு
நீரூருங்கான்யாறுநெடுங்கானும்பலகடந்து
சீரூருந்திருமுருகன்பூண்டிவழிச்செலவணைந்தார்.

(இ-ள்.) ஆரூரரவர்தமக்குவிடையருளி அங்ககன்று = நம்பியாரூரர் அந்நாயனார்க்கு விடையளித்து அவ்விடம்விட்டுநீங்கி; காரூருமலைநாடுகடந்தருளி = மேகங்கள்தவழும் மலைநாட்டை விரைந்தகன்று; கற்சுரமும் = பரல்கள்பரம்பிய

பாலைநிலங்களும்; நீளுருங்கான்யாறும் = நீர் சிறுகவோடும் கான்யாறுகளும்; நெடுங்கானும்பலகழிய = நெடியகாடுகளும் பலநீங்க; சீருருந்திருமுருகன் பூண்டிவழிச்செலவணைந்தார் = சிறப்புப்பெற்ற திருமுருகன் பூண்டியென்னுந் தலத்தின்வழியாகச் செல்லவந்தார்.—எ-று. (௧௩௪)

திருமுருகன்பூண்டியயற்செல்கின்றபோழ்தின்கட்
பொருவிடையார்நம்பிக்குத்தாமேபொன்கொடுப்பதலா
லொருவர்கொடுப்பக்கொள்ளவொண்ணுமைக்கதுவாங்கிப்
பெருகருளாற்றாங்கொடுக்கப்பெறுவதற்கோவதுவறியோம்.

(இ-ள்.) திருமுருகன்பூண்டியயல்செல்கின்ற போழ்தின்கண் = திருமுருகன் பூண்டிக்கு அருகேசெல்லுந் தருணத்தில்; பொருவிடையார் = போர்புரியும் இடபவாகனத்தையுடைய எம்பிரான்; நம்பிக்குத் தாமேபொன்கொடுப்பதால் = நம்பியாரூரருக்குத் தாமே பொன்கொடுப்பதன்றி; ஒருவர்கொடுப்பக் கொள்ளவொண்ணுமைக்கு = வேறொருவர்நல்க அவர்வாங்குதற்கு உடன்பாடின்மையால்; அதுவாங்கி = அவர்கொண்டுவரும் பொருளைக்கவர்ந்து; பெருகருளாற்றாங்கொடுக்க = மிக்க திருவருளால் பின்னர்த்தாங்கொடுக்க; பெறுவதற்கோவதுவறியோம் = அவர்பெறுவதன்பொருட்டோ (அல்லது வேறுகருதியோ) அவர் கருத்தையுணரேம்.—எ-று.

ஒண்ணுமைக்கு வேற்றுமைமயக்கம். (௧௩௫)

வென்றிமிகுபூதங்கள்வேடர்வடிவாய்ச்சென்று
வன்றொண்டர்பண்டாரங்கவரவருள்வைத்தருள
வன்றினார்புரமெரித்தாரருளால்வேட்டுவப்படையாய்ச்
சென்றவர்தாம்வருவழியிலிருபாலுஞ்செயிர்த்தெழுந்து.

(இ-ள்.) அன்றினார்புரமெரித்தார் = பகைவர் முப்புரங்களையெரித்த பரமர்; வென்றிமிகுபூதங்கள்வேடர்வடிவாய்ச்சென்று = (தம்முடைய) வெற்றிமிக்கபூதங்கள் வேடருருக்கொண்டுசென்று; வன்றொண்டர்பண்டாரங்கவர = வன்றொண்டப் பெருமானுடைய திரவியங்களைக்கவரும்படி; அருள்வைத்தருள = திருவுளத்திற் கொண்டருள; அருளால் = அக்கடவுளுடைய திருவருளால்; வேட்டுவப்படையாய்ச்சென்று = அப்பூதங்கள் வேடாகூட்டமாகச் சென்று; அவர்வருவழியிலிருபாலுஞ்செயிர்த்தெழுந்து = அந்நாயனார் வரும்வழியிலே இருபக்கத்திலும் சினந்தெதிர்த்து.—எ-று. தாம்-அசை. (௧௩௬)

வில்வாங்கியலகம்புவிசைநாணிற்சந்தித்துக்
கொல்வோமிங்கிட்டுப்போமெனக்கோபத்தாற்குத்தி
யெல்லையில்பண்டாரமெலாங்கவர்ந்துகொளவிரிந்தோடி
யல்லலுடன்பறியுண்டாராரூரர்மருங்கணைந்தார்.

(இ-ள்.) வில்வாங்கியலகம்புவிசைநாணிற்சந்தித்து = வில்லைவளைத்து கூர்மையுடைய அம்புகளை விசையோடுபொருந்திய நாணிலேதொடுத்து; கொல்வோமிங்கிட்டுப்போமென = உம்மைக்கொல்வோம்; இத்திரவியங்களை இங்கே எறிந்துவிட்டுச் செல்லுமென்று; கோபத்தாற்குத்தி = கோபத்தினாலேதாக்கி; எல்லையில் பண்டாரமெலாங்கவர்ந்துகொள = 'அளவுபடாத திரவியங்களையெல்லாம் அவர்கைப் பற்றிக்கொள்ள; பறியுண்டாரல்லலுடனிரிந்தோடி = பறிக்கப்பட்டவரெல்லாம் துன்பத்தோடுபிரிந்தோடி; ஆரூரர்மருங்கணைந்தார் = நம்பியாரூரர்பாங்கு நண்ணினார்.—எ-று. (௧௩௭)

ஆரூரர்தம்பாலவ்வேடுவர்சென்றணையாதே
நீரூருஞ்செஞ்சடையாரருளினானீங்கவவர்
சேரூராந்திருமுருகன்பூண்டியினிற்சென்றெய்திப்
போரூருமழவிடையார்கோயிலைநாடிப்புக்கார்.

(இ-ள்.) *நீரூருஞ்செஞ்சடையாரருளினால்* = கங்கைதவழப்பெற்றசிவந்தசடையையுடைய கடவுளின் திருவருளினால்; *ஆரூரர்தம்பாலவ்வேடுவர்சென்றணையாது நீங்க* = நம்பியாரூரர்பால் அவ்வேடர்களடைந்து நெருங்காமல் நீங்கிவிட; *அவர் சேரூராந்திருமுருகன்பூண்டியினிற் சென்றெய்தி* = அவ்வாரூரர் தாம் அடைந்த தலமாகிய திருமுருகன் பூண்டியிற் சேர்ந்து; *போரூருமழவிடையார் கோயிலைநாடிப்புக்கார்* = போர்த்தொழிலை மேற்கொண்ட இளமைபெற்ற இடபவாகனத்தையுடைய இறைவரது ஆலயத்தைநாடி அணுகினார்.—எ-று. ஏ-அசை. (௧௬௮)

அங்கணர்தங்கோயிலினையஞ்சலிகூப்பித்தொழுது
மங்குலுறநீண்டதிருவாயிலினைவந்திறைஞ்சிப்
பொங்குவிருப்புடன்புக்குவலங்கொண்டுபுனிதநதி
திங்கண்முடிக்கணிந்தவர்தந்திருமுன்புசென்றணைந்தார்.

(இ-ள்.) *அங்கணர்தங்கோயிலினை* = அருட்கண்ணராகிய அண்ணலாரது திருவாலயத்தை; *அஞ்சலிகூப்பித்தொழுது* = கண்டவுடன் கரங்குவித்துப்பணிந்து *மங்குலுறநீண்டதிருவாயிலினைவந்திறைஞ்சி* = மேகந்தவழவோங்கிய திருவாயிலையடைந்து வீழ்ந்துபணிந்து; *பொங்குவிருப்புடன்புக்குவலங்கொண்டு* = ஓங்கியகாதலால் உட்புகுந்துபிரதக்ஷிணஞ்செய்து; *புனிதநதிதிங்கண்முடிக்கணிந்தவர்தம்* = தூயகங்கையையும் இளம்பிறையையும் திருமுடியிற்சூடிய சிவபெருமானது; *திருமுன்புசென்றணைந்தார்* = சந்நிதானத்தின்முன்னர்ச்சார்ந்தார்.—எ-று. (௧௬௯)

உருகியவன்பொடுகைகள்குவித்துவிழுந்துமைபாக
மருவியதம்பெருமான்முன்வன்றொண்டர்பாடினார்
வெருவுறவேடுவர்பறிக்கும்வெஞ்சுரத்திலெத்துக்கிங்
கருகிருந்தீரெனக்கொடுகுவெஞ்சிலையஞ்சொற்பதிகம்.

(இ-ள்.) *வன்றொண்டர்* = வன்றொண்டப்பெருமான்; *உருகியவன்பொடுகைகள்குவித்துவிழுந்து* = (உடலும்உள்ளமும்) உருகும்படி அன்போடு கரங்களைக்குவித்துவணங்கி; *உமைபாகமருவியதம்பெருமான்முன்* = உமாதேவியாரை வாமபாகத்திற்கொண்ட பெருமான்முன்னர்நின்று; *வெருவுறவேடுவர்பறிக்கும்வெஞ்சுரத்திலருகு* = எம்போல்வாரஞ்ச வேடர்கள் திரவியங்களைக்கவருகின்ற வெவ்விய இப்பாலைநிலத்தினருகே; *எத்துக்கிங்கிருந்தீரென* = "எத்துக்கிங்கிருந்தீர்" என்று; *கொடுகுவெஞ்சிலையஞ்சொற்பதிகம்பாடினார்* = "கொடுகுவெஞ்சிலை" என்னும் முதற்குறிப்பையுடைய திருப்பதிகத்தைப்பாடியருளினார்.—எ-று. உருகிய-வினையெச்சம். ()

---

## திருமுருகன்பூண்டி - பண் - பழம்பஞ்சுரம்.

### திருச்சிற்றம்பலம்.

கொடுகுவெஞ்சிலைவடுகவேடுவர்விரவலாமைசொல்லித்
திடுகுமொட்டெனக்குத்திக்கூறைகொண்டாறலைக்குமிடம்

முடிகுநாறியவடிகேர்வாழ்முருகன்பூண்டிமாநகர்வா [ரானிரே.
யிடுகுறுண்ணிடைமங்கைதன்னொடுமெத்துக்கிங்கிருந் தீரெம்பி
முந்திவானவர்தாந்தொழுமுருகன்பூண்டிமாநகர்வாய்ப்
பந்தணைவிரற்பாவைதன்னையோர்பாகம்வைத்தவனைச்
சிந்தையிற்சிவதொண்டனூரனுரைத்தனபத்துங்கொண்
டெந்தம்மடிகளேயேத்துவாரிடரொன்றுந்தாமிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - ஆவுடைநாயகர். தேவியார் - ஆவுடைநாயகியம்மை. பதிகம்-க.

பாடியவர்பரவுதலும்பரம்பொருளாமவரருளால்
வேடுவர்தாம்பறித்தபொருளவையெல்லாம்விண்ணொருங்க
நீடுதிருவாயிலின்முன்குவித்திடலுநேரிறைஞ்சி
யாடுமவர்திருவருளாலப்படியேகைக்கொண்டார்.

(இ-ள்.) பாடியவர்பரவுதலும் = அவர்திருப்பதிகம்பாடித்துதித்தலும்; பரம்பொருளாமவரருளால் = பரம்பொருளாகிய அப்பரமரருளினால்; வேடுவர்தாம் பறித்தபொருளவையெல்லாம் = வேடுவர் தாம்கைக்கொண்ட பொருளனைத்தையும்; விண்ணொருங்க நீடுதிருவாயிலின்முன் குவித்திடலும் = ஆகாயத்தை யளாவும்படி நீண்ட திருவாயிலின் முன்னே செறித்தலும்; நேரிறைஞ்சி = அந்நாயனார் எதிர் வணங்கி; ஆடுமவர் திருவருளால் = அந்நடனப்பெருமான் திருவருளினால்; அப்படியே கைக்கொண்டார் = ஒன்றுங்குறையாமல் முழுமையும் ஏற்றுக்கொண்டார்.

எ-று. பரம்பொருள் - முன்னைப்பழம்பொருள். (கஎக)

கைக்கொண்டுகொடுபோமக்கைவினைஞர்தமையேவி
மைக்கொண்டமிடற்றாரைவணங்கிப்போய்க்கொங்ககன்று
மெய்க்கொண்டகாதலினால்விரைந்தேகிமென்கரும்புஞ்
செய்க்கொண்டசாலியுஞ்சூழ்திருவாரூர்சென்றணைந்தார்.

(இ-ள்.) கைக்கொண்டுகொடுபோமக் கைவினைஞர்தமையேவி — ஏற்றுக் கொண்டபின் அவற்றைச்சுமந்துசெல்லும் அத்தொழிலாளிகளைத் தாங்க ஏவி; மைக்கொண்டமிடற்றாரைவணங்கிப்போய் - கருமைசெறிந்த கண்டத்தராகிய அக்கடவுளைத்தொழுதுசென்று; கொங்ககன்று = கொங்கநாட்டைக்கடந்து; மெய்க்கொண்டகாதலினால்விரைந்தேகி = உண்மையாகியவிருப்பத்தால் அதிகவிரைவுடன்சென்று; மென்கரும்புஞ்செய்க்கொண்ட சாலியுஞ்சூழ் = மெல்லியகரும்புகளும் வயலின்கணிரம்பிய செந்நெற்பயிர்களுஞ்சூழ்ந்த; திருவாரூர்சென்றணைந்தார் = திருவாரூரைச்சென்றுசேர்ந்தார்.—எ-று. (கஎஉ)

நாவலர்மன்னவரருளால்விடைகொண்டநரபதியா
ராவியினொன்றாநண்பினூரர்தமைநினைந்து
மாவலருமலர்ச்சோலைமகோதையினின்மன்னிமலை
பூவலயம்பொதுநீக்கியரசுரிமைபுரிந்திருந்தார்.

(இ-ள்.) நாவலர்மன்னவரருளால் = நாவலர்தலைவராகிய நம்பியாரூரரருளால்; விடைகொண்டநரபதியார் = விடைபெற்றுச்சென்ற சேரர்குலக்குரிசிலார்; ஆவி

யிரெனுன்றாகண்பிஞரூரர்தமைநினேந்து = உயிரிரெனன்றாகிய நட்பினையுடைய நம்பியாரூரரைச்சிந்தித்து; மாவலருமலர்ச்சோலை = வண்டுகள்மொய்க்க அலருகின்றமலர் பரம்பியசோலைகளையுடைய; மகோதையினின் மன்னி = கொடுங்கோளூரிலே நிலைபெற்று; மலைப்பூவலயம் = தமக்குரிய மலைநாட்டிலே; பொதுநீக்கி யரசுரிமைபுரிந்திருந்தார் = பொதுத்தன்மையொழித்து அரசுரிமையைச்செலுத்தி இருந்தார்.—எ-று.

உடலால்வேறன்றி உயிரினுென்றென்பார் "ஆவியினுென்றாகண்பிஞரூரர்" என்றார். மா - வண்டு. பொதுநீக்கல் - பிறர்க்குச்சுதந்தரமின்றி முற்றும் தமக்குரிமையாகக்கோடல்.　　　　　　　　　　　　(௧௪௩)

இந்நிலைமையுதியர்பிரானெம்பிரான்வன்றொண்டர்
பொன்னிவளநாடகன்றுமகோதையினின்மேற்புகுந்து
மன்னுதிருக்கைலையினின்மதவரைமேலெழுந்தருள
முன்னர்வயப்பரியுகைக்குந்திருத்தொழில்பின்மொழிகின்றாம்.

(இ-ள்.) எம்பிரான்வன்றொண்டர் = எமதிறைவராகிய வன்றொண்டப்பெருமான்; பொன்னிவளநாடகன்று = சோணுட்டைநீங்கி; மகோதையினின்மேற்புகுந்து = கொடுங்கோளூரிற் பின்னரடைந்து; மதவரைமேன்மன்னுதிருக்கைலையினிலெழுந்தருள = வெள்ளையானையிலாரோகணித்து நிலைபெற்றதிருக்கைலைக்கு எழுந்தருள; முன்னர் = அப்பொழுது அவர்க்குமுன்பு; இந்நிலைமையுதியர்பிரான் = இத்தகைமையையுடைய சேரமான்பெருமாளுயனர்; வயப்பரியுகைக்குந்திருத்தொழில் = வெற்றிபெற்றகுதிரையைச்செலுத்தும் திருத்தொழிலை; பின்மொழிகின்றாம் = பின்னருரைப்பாம்—எ-று.

கயிலையினில் வேற்றுமைமயக்கம். புகுந்தாலென்பதும் பாடம்.　　　　　　　　　　　　(௧௪௪)

மலைமலிந்ததிருநாட்டுமன்னவனுர்மாகடல்போற்
சிலைமலிந்தகொடித்தானைச்சேரலனுர்கழல்போற்றி
நிலைமலிந்தமணிமாடநீண்மறுகுமாளிகைசூழ்
கலைமலிந்தபுகழ்க்காழிக்கணநாதர்திறமுரைப்பாம்.

(இ-ள்.) மலைமலிந்ததிருநாட்டுமன்னவனுர் = மிக்கமலைத்திருநாட்டுக்குத் தலைவரும்; மாகடல்போற்சிலைமலிந்தகொடித்தானை = பெருமைபெற்றகடல்போற்பெருகிய விற்கொடியேந்திய சேனைகளையுடைய; சேரலனுர்கழல்போற்றி = சேரகுலாதிபருமாகிய கழறிற்றறிவார்நாயனருடைய திருவடிகளைவணங்கி; நிலைமலிந்தமணிமாடம் - அடுக்கமைந்தமணிமாடங்களோடு; மாளிகைசூழ்நீண்மறுகு = தனிமாளிகைகளுஞ்சூழ்ந்த நீண்டவீதிகளையுடைய; கலைமலிந்தபுகழ்க்காழி = நூல்களிலேநிரம்பிய சீர்த்திவாய்ந்த சீர்காழியிலவதரித்த; கணநாதர்திறமுரைப்பாம் = கணநாதநாயனருடையசரித்திரத்தைக் கூறுவாம்.—எ-று.

சேரர்க்குவிற்கொடியாகலின் "சிலைக்கொடித்தானை" என்றார். கலைமலிந்தபுகழ் - எந்நூல்களாலும் புகழப்படும்புகழ்.　　　　　　　　　　　　(௧௪௫)

## சேரமான்பெருமாளுயனர்புராணம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௪௩அ.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# கணநாதநாயனார் புராணம்.

ஆழிமாநிலத்தகிலமீன்றளித்தவடிருமுலையமுதுண்ட
வாழிஞானசம்பந்தர்வந்தருளியவளப்பினதளப்பில்லா
வூழிமாகடல்வெள்ளத்துமிதந்துலகினுக்கொருமுதலாய
காழிமாநகர்த்திருமறையவர்குலக்காவலர்கணநாதர்.

(இ-ள்.) ஆழிமாநிலத்து = கடல்சூழ்ந்தபெருமைபெற்றபூமியின்கண்ணே; அகில மீன்றளித்தவ டிருமுலையமுதுண்ட = உலகங்களையெல்லாம் பெற்றளித்த உமாதேவி யாரது திருமுலைப்பாலையுண்டருளிய; ஞானசம்பந்தர்வந்தருளியவளப்பினது = ஞானசம்பந்தப்பெருமான் திருவவதாரஞ்செய்தருளியசிறப்பையுடையதாய்; ஊழியளப்பில்லா மாகடல்வெள்ளத்துமிதந்து = ஊழிக்காலத்திலோங்கிவரும் அளவுபடாத பெரியகடல்வெள்ளத்தும் தோணிபோல்மிதந்து; உலகினுக்கொருமுதலாயகாழிமாநகர் = உலகத்திற்கு ஒப்பற்ற முதன்மையுடைய சீர்காழியென்னும் திருப்பதியிலே; திருமறையவர்குலக்காவலர் கணநாதர் = அந்தணகுலத்திற்சிறந்தவர் கணநாதரென்னுந்திருநாமமுடையவர். எ-று.

வாழி மங்கல இடைச்சொல். உம்மை உயர்வுசிறப்பு. (க)

ஆயவன்பர்தாமணிமதிற்சண்பையினமர்பெருந்திருத்தோணி
நாயனார்க்குநற்றிருப்பணியாயினநாளுமன்பொடுசெய்து
மேயவத்திருத்தொண்டினில்விளங்குவார்விரும்பிவந்தணைவார்க்குத்
தூயகைத்திருத்தொண்டினிலவர்தமைத்துறைதொறும்பயில்விப்பார்.

(இ-ள்.) ஆயவன்பர் = அந்தஅன்பரானவர்; அணிமதிற்சண்பையினமர்பெருந்திருத்தோணிநாயனார்க்கு = அழகியமதில்சூழ்ந்த அச்சீர்காழியில் வீற்றிருக்கும் திருத்தோணியப்பருக்கு; நற்றிருப்பணியாயின நாளுமன்பொடுசெய்து = உரியதிருப்பணிகளாயுள்ளவற்றை அநுதினமும் அன்பினாற்செய்து; மேயவத்திருத்தொண்டினில்விளங்குவார் = விரும்பிய அத்திருத்தொண்டுகளில் விளக்கமுறுவார்; விரும்பிவந்தணைவார்க்குத்தூயகைத்திருத்தொண்டினில் = தம்மைவிரும்பிவந்து அடைந்தவர்களுக்கு அவர்க்குரியகைத்தொண்டுகளிலே; அவர்தமைத்துறைதொறும் பயில்விப்பார் = அவர்களை அவ்வவ்விடங்களிலே நியமித்துவிடுவார். எ-று.

தாம் அசை. தூய்மை ஈண்டு உரிமையின்மேற்று. துறை அவ்வத்தொண்டுகளின் கூறுபாடுமாம். (உ)

நல்லநந்தனவனப்பணிசெய்பவர்நறுந்துணர்மலர்கொய்வோர்
பன்மலர்த்தொடைபுனைபவர்கொணர்திருமஞ்சனப்பணிக்குள்ளோ
ரல்லுநன்பகலுந்திருவலகிட்டுத்திருமெழுக்கமைப்போர்க
ளெல்லையில்விளக்கெரிப்பவர்திருமுறையெழுதுவோர்வாசிப்போர்.

(இ-ள்.) நல்லநந்தனவனப்பணிசெய்பவர் = நல்ல நந்தனவனங்களின் தொண்டுகளைப்புரிவோரும்; நறுந்துணர்மலர்கொய்வோர் = வாசனைமிக்க கொத்தின்மலர்ந்த மலர்களைப்பறிப்போரும்; பன்மலர்த்தொடைபுனைபவர் = பலவாகிய மலர்மாலைதொடுப்போரும்; திருமஞ்சனங்கொணர்பணிக்குள்ளோர் = திருமஞ்சனங்கொண்டுவரும் திருப்பணிக்குரியோரும்; அல்லுநன்பகலுந் திருவலகிட்டுத் திருமெழுக்

துயிற்போர்கள் = இரவிலும் நல்லபகலிலும் திருவலகிட்டுத் திருமெழுக்கிடுவோரும்; எல்லையில்விளக்கெரிப்பவர் = அளவில்லாததீபமேற்றுவோரும்; திருமுறையெழுது வோர் = தேவாரதிருவாசகங்களாதிய திருமுறைகளையெழுதுவோரும்; வாசிப்போர் = அவற்றைவாசிப்போருமாக.—எ-று.

தொண்டுக்குரியகாலமாகலின் "நன்பகல்" என்றார். இந்நாயனார் ஆளுடையபி ள்ளையார்க்குத் தொண்டுபூண்டுடையராகலின் அவர் அருளிய தேவாரத்திருமுறைக ளையேயன்றி அவர்க்குமுற்காலத்துள்ள மாணிக்கவாசக சுவாமிகளருளிய திருவாசக த்தையும் அடியவரெழுதவும் வாசிக்கவும் பழக்குவித்திருப்பாராகலால் "திருமுறை" என்பதற்குத் தேவாரதிருவாசகங்களெனப் பொருள்வரையலாயிற்றென்க. (௬)

இனையபஃறிருப்பணிகளிலணைந்தவர்க்கேற்றவத்திருத்தொண்டின்
வினைவிளங்கிடவேண்டியகுறைபெலாமுடித்துமேவச்செய்தே
யனையவத்திறம்புரிதலிற்றொண்டரையாக்கியன்புறுவாய்மை
மனையறம்புரிந்தடியவர்க்கின்புறவழிபடுந்தொழின்மிக்கார்

(இ-ள்.) இனையபஃறிருப்பணிகளில் = இங்ஙனமாகிய பலவகைத்திருத்தொண் டுகளிலே; அணைந்தவர்க்கேற்ற வத்திருத்தொண்டின் வினைவிளங்கிட = வந்தவர்க ளுக்குத்தக்க திருத்தொண்டின்றொழில் விளங்கும்படி; வேண்டியகுறையெல்லாமு டித்து மேவச்செய்து = அவர்க்குவேண்டிய இன்றியமையாதனவற்றையெல்லாம் முடிப்பித்து அதில்விடுத்துத்தேர்ந்தபின்; அனையவத்திறம்புரிதலிற்றொண்டரையா க்கி = அத்தகைய அத்தொண்டைப்புரிதலிலே அவரை உரிமையாக்கி; அன்புறுவாய் மைமனையறம்புரிந்து = தாம் அன்புமிக்க உண்மையமைந்த இல்லறத்தைநடத்திக்கொ ண்டு; அடியவர்க்கின்புற வழிபடுந்தொழில் மிக்கார் = அடியவர்களுக்கு இன்பம்அதிக ரிக்கும்படி வழிபடுந்தொழிலால் (தவஞ்செய்வாரினும்) மேம்பட்டார்.—எ-று.

ஏ-அசை. குறை - இன்றியமையாமை. தொழில்என்புழி மூன்றனுருபுவிரிக்க. ஒவ்வொருவரையும் அவர்க்குரியதொழிலில்விடுத்து ஆராயவேண்டுமாகலின் "ஏற்ற வத்திருத்தொண்டின்மேவச்செய்து" என்றும், தொழிற்கு உரிமைநாடியபின் அவ ரை அத்தொழிற்கு உரிமையாக்கிவிடல்வேண்டுமாகலின் "அத்திறம்புரிதலிற்றொண் டரையாக்கி" என்றும், அஃதை அங்ஙனம்ஒழுகுவித்துத் தாமும் தமதறத்திற் றவறு தொழுகுதல் தவஞ்செய்வார்நிலையினும் மேன்மையுடைத்தாகலின் "மனையறம்புரிந் தடியவர்க்கின்புறவழிபடுந்தொழின்மிக்கார்" என்றும் கூறினார், இவற்றைமுறையே "இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந் - ததனை யவன்கண் விடல்" எனவும், "வினைக்குரிமை நாடிய பின்றை யவனை - யதற்குரிய னாகச் செயல்." எனவும், "ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை - நோற்பாரி னோன்மை யுடைத்து" எனவும் வருந்திருக்குறள்களாலுணர்க. (எ)

இப்பெருஞ்சிறப்பெய்தியதொண்டர்தாமேறுசீர்வளர்காழி
மெய்ப்பெருந்திருஞானபோனகர்கழன்மேவியவிருப்பாலே
முப்பெரும்பொழுதருச்சனைவழிபாடுமூன்றுமன்போடுநாளு
மொப்பில்காதல்கூருளங்களிசிறந்திடவொழுகினார்வழுவாமல்.

(இ-ள்.) இப்பெருஞ்சிறப்பெய்தியதொண்டர் = இத்தகைய மிகுசிறப்பமைந்த தொண்டரானவர்; ஏறுசீர்வளர்காழி = உயர்ந்த சீர்த்திவளரப்பெற்ற சீர்காழியிலே; மெய்ப்பெருந் திருஞானபோனகர்கழல் = பெருமைபெற்ற மெய்ஞ்ஞானப்பாலையு ண்டருளிய திருஞானசம்பந்தவள்ளலின்திருவடிகளை; மேவியவிருப்பால் = நிலைபெ

ற்ற விருப்பத்தால்; முப்பெரும்பொழுதருச்சனைவழிபாடு = முக்காலங்களினும்அருச்சித்தலாகியவழிபாட்டிலே; மூளுமன்பொடுநாளும் = அதிகரித்த அன்போடுதினமும்; ஒப்பில்காதல்கூருளங்களிசிறந்திட = நிகரற்ற ஆசைமிகப்பெற்ற உள்ளமானது மிகு மகிழ்ச்சியடைய; வழுவாமலொழுகினார் = அந்நெறியில் வழுவாமல் ஆசரித்துவந்தார்.—எ-று.

இந்நாயனார் ஞானபோனசர்திருவடிகளை முக்காலத்தும் அருச்சித்தலாகியவழிபாட்டிலே உள்ளம் களிசிறக்க அதில்வழுவாமல் ஒழுகினாரென்பது கருத்து. (௫)

ஆனதொண்டினிலமர்ந்தபேரன்பருமகலிடத்தினிலென்று
ஞானமுண்டவர்புண்டரீகக்கழலருச்சனைநலம்பெற்றுத்
தூநறுங்கொன்றைமுடியவர்சுடர்நெடுங்கயிலைமால்வரையெய்தி
மானநற்பெருங்கணங்கட்குநாதராம்வழித்தொண்டினிலைபெற்றார்.

(இ-ள்.) ஆன்தொண்டினிலமர்ந்தபேரன்பரும் = இத்தொண்டில் விருப்புற்ற நனிஅன்புடைய இந்நாயனாரும்; அகலிடத்தினிலென்றும் = இப்பூமியிலே எக்காலமும்; ஞானமுண்டவர் புண்டரீகக்கழல் = திருஞானசம்பந்தமூர்த்திகளுடைய தாமரைமலரையொத்த திருப்பாதங்களை; அருச்சனைநலம்பெற்று = அருச்சித்தமையால் புண்ணியவிர்த்தியையடைந்து; தூநறுங்கொன்றைமுடியவர் = சுத்தமாகிய சுகந்தமிக்க கொன்றைமாலைசூடிய திருமுடியையுடைய சிவபெருமானது; சுடர்நெடுங்கயிலைமால்வரையெய்தி = காந்திபெற்ற நெடியகயிலையங்கிரியையடைந்து; மானநற்பெருங்கணங்கட்கு = தகுதிபெற்ற நல்லபெரியகணங்களுக்கு; நாதராம்வழித்தொண்டினிலைபெற்றார் = தலைவராம்பதவியைப்பெற்றார்.—எ-று.

இப்பதவி வழித்தொண்டானிலைத்ததாகலின் அதனை "வழித்தொண்டினிலை" என்றார். வழித்தொண்டு பரம்பரைத்தொண்டு. நிலைத்தல்-சித்தித்தல். (௬)

உலகமுய்யநஞ்சுண்டவர்தொண்டினினுறுதிமெய்யுணர்வெய்தி
யலகிறொண்டருக்கறிவளித்தவர்திறமவனியின்மிசையாக்கு
மலர்பெரும்புகழ்ப்புகலியில்வருங்கணநாதனார்கழல்வாழ்த்திக்
குலவுநீற்றுவண் கூற்றுவனார்திறங்கொள்கையின்மொழிகின்றாம்.

(இ-ள்.) உலகமுய்யநஞ்சுண்டவர் = எவ்வுலகத்தாரும் உயிர்பிழைக்க நஞ்சத்தையுண்டருளிய நம்பெருமானது; தொண்டினினுறுதிமெய்யுணர்வெய்தி = அடிமைத்தொண்டிலே உறுதியாகிய மெய்யுணர்ச்சியை யடைந்து; அலகிறொண்டருக்கறிவளித்து = அளவில்லாத அடியவர்களுக்கு இத்தகையஉணர்ச்சியைஉண்டாக்கி; அவர்திறமவனியின்மிசையாக்கும் = அவ்வடியவர் கூறுபாடுகளைப் பூமியிலேவிர்த்தியாக்கிய; மலர்பெரும்புகழ்ப்புகலியில்வரும் = விரிந்த பெருங்கீர்த்தியையுடைய சீர்காழியிலவதரித்த; கணநாதனார் கழல்வாழ்த்தி = கணநாதநாயனாருடைய திருவடிகளைத்துதித்து; குலவுநீற்றுவண் = விளங்குகின்ற விபூதியையணிந்த வளப்பம்வாய்ந்த; கூற்றுவனார்திறங்கொள்கையின்மொழிகின்றாம் = கூற்றுவநாயனார் சரித்திரத்தை முறைப்படி கூறுகின்றோம்.—எ-று.

அடியவர்திறம் ஆக்கலாவது - பலவகைத்தொண்டுகளினும் அவரை விர்த்திக்கச்செய்தல். (௭)

## கணநாதநாயனார்புராணம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௭௭௫.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கூற்றுவநாயனார்புராணம்.

துன்னார்முனைகடோள்வலியால்வென் றுசூலப்படையார்த
நன்னாமந்தந்திருநாவினுனாநவிலுநலமிக்கார்
பன்னாளீசரடியார்தம்பாதம்பரவிப்பணிந்தேத்தி
முன்னாகியநற்றிருத்தொண்டின்முயன்றார்களந்தைமுதல்வனார்.

(இ-ள்.) களந்தைமுதல்வனார் = களந்தைப்பதிக்குத் தலைவராகிய கூற்றுவநாயனாரென்பவர் : துன்னார்முனைகடோள்வலியால்வென்று = சத்துருக்களின்போர்த்திறத்தைத் தம்முடைய புயவலியால்செயித்து ; சூலப்படையார்தநன்னாமம் = சூலாயுதத்தராகிய சிவபெருமானது நற்றிருநாமமானபஞ்சாக்கரத்தை ; தந்திருநாவினுனாநவிலுநலமிக்கார் = தினமும் தம்முடையநாவினால் உச்சரிக்கும் அரியவொழுக்கமுடையவர் ; பன்னாளீசரடியார்தம்பாதம்பரவிப்பணிந்தேத்தி = பலநாளும் சிவனடியார்களுடைய திருவடிகளைப்புகழ்ந்து வணங்கித்துதித்து ; முன்னாகியநற்றிருத்தொண்டின்முயன்றார் = சிறந்த நல்லதிருத்தொண்டுகளிலே முயன்றுவந்தார். எ-று.

அருளின்வலியாலரசொதுங்கவவனியெல்லாமடிப்படுப்பார்
பொருளின்முடிவுங்காண்பரியவகையாற்பொலிவித்திகல்சிறக்க
மருளுங்களிறுபாய்புரவிமணித்தேர்படைஞர்முதன்மாற்றார்
வெருளுங்கருவிநான்குநிறை வீரச்செருக்கின்மேலானார்.

(இ-ள்.) அருளின்வலியாலரசொதுங்க = திருவருளின்வலியினால் ஏனையரசுகளொதுங்க ; அவனியெல்லாமடிப்படுப்பார் = பூமிமுற்றும் தம்வயமாக்குவாராகி ; பொருளின்முடிவுங்காண்பரியவகையாற்பொலிவித்து = பொருளினெல்லையும் மதித்தற்கரியவகையாற்பெருக்கி ; இகல்சிறக்கமருளுங்களிறு = பகைமைமிக மருண்டு நிற்கும் யானைகளும் ; பாய்புரவி = பாய்ந்துசெல்லுங்குதிரைகளும் ; மணித்தேர் = மணிகளிழைத்ததேர்களும் ; படைஞர்முதல் = பதாதிகளும்முதலிய ; மாற்றார் வெருளுங்கருவிநான்குநிறை = பகைவரஞ்சும் நால்வகைச்சேனைகளும் நிறையப்பெற்ற ; வீரச்செருக்கின்மேலானார் = வீரக்களிப்பினால் மேம்பட்டார். எ-று.

முடிவுமென்னும் உம்மை எதிரதுதழீஇயது. படைஞர்முதல்கருவிஎன இயையும். நான்குமென்னும் உம்மை முற்றும்மை. வீரச்செருக்கு - வீரத்தால்விளையுங்களிப்பு.

வென்றிவினையின்மீக்கூரவேந்தர்முனைகள்பலமுருக்கிச்
சென்றுதும்பைத்துறைமுடித்துஞ்செருவில்வாகைத்திறங்கமழு
மன்றன்மாலைமிலைந்தவர்தம்வளநாடெல்லாங்கவர்ந்துமுடி
யொன்றுமொழியவரசர்திருவெல்லாமுடையராயினார்.

(இ-ள்.) வென்றிவினையின்மீக்கூரச்சென்றுவேந்தர்முனைகள்பலமுருக்கி = வெற்றித்தொழிலின்மேம்படப்போய் அரசர்தொடங்கிய யுத்தங்கள்பலவற்றை அழித்து ; தும்பைத்துறைமுடித்தும் = பலவகைப்படும் தும்பைமாலைசூடியும் ; செருவில்வாகைத்திறங்கமழுமன்றன்மாலைமிலைந்து = யுத்தத்திலே வெற்றித்திறம்விளங்கும் வாசனைமிக்க வாகைமாலைசூடி ; அவர்தம்வளநாடெல்லாங்கவர்ந்தும் = அப்பகைவரது சிறந்தநாடுமுற்றும் கைக்கொண்டும் ; முடியொன்றுமொழிய = மகுடமொன்றும்

நீங்கலாக; அரசர் திருவெல்லாமுடையராயினர் = அரசர்க்குரிய ஐசுவரியமெல்லாம் உடையராயினர். எ-று.

தும்பைமாலை - போர்வெல்வார்க்குரியது. வாகைமாலை - வெற்றிபெற்றார்க்குரியது. இவை பலதிறப்படுதலின் "தும்பைத்துறை" எனவும், "வாகைத்திறம்," எனவும் கூறினர். (௩)

மல்லன்ஞாலம்புரக்கின்றார் மணிமாமவுலிபுனைவதற்குத்
தில்லைவாழந்தணர்தம்மைவேண்டவவருஞ்செம்பியர்தந்
தொல்லைநீடுங்குலமுதலோர்க்கன்றிச்சூட்டோமுடியென்று
நல்காராகிச்சேரலன்றன்மலைநாடணையநண்ணுவார்.

(இ-ள்.) மல்லன்ஞாலம்புரக்கின்றார் = வளமைவாய்ந்த இப்பூமியைக்காக்கின்ற இந்நாயனார்; மணிமாமவுலிபுனைவதற்கு=மணிகளிழைத்த பெருமைபெற்றமுடிசூட்டும்படி; தில்லைவாழந்தணர்தம்மைவேண்ட = தில்லைவாழந்தணர்களை வேண்டிக்கொள்ள; அவரும் = அவர்களும்; தொல்லைநீடுசெம்பியர்தங்குலமுதலோர்க்கன்றி = தொன்றுதொட்டுவந்த நீண்டசோழகுலமுதல்வர்க்கல்லது; முடிசூட்டோமென்றுநல்காராகி = பிறர்க்குமுடிசூட்டோமென்று அவர்க்குத்தரியார்களாய்; சேரலன்றன்மலைநாடணையநண்ணுவார் = சேரர்குலக்குரிசிலது மலைநாட்டையடையச் செல்வாராகி.—எ-று.

அக்காலத்திலே சிற்சபாநாயகர் சந்நிதியில் தில்லைவாழந்தணர்களால் முடிசூட்டப்பெற்றவரே பேரரசுக்குரியராயிருந்தமையின் இவரும் அங்ஙனமாதற்கு அவரைவேண்டினரென்க, நண்ணுவார் முற்றெச்சம். (௪)

ஒருமையுரிமைத்தில்லைவாழந்தணர்கடம்மிலொருகுடியைப்
பெருமைமுடியையருமைபுரிகாவல்பேணும்படியிருத்தி
யிருமைமரபுந்தூயவர்தாஞ்சேரர்நாட்டிலெய்தியபின்
வருமையுறவான்மனந்தளர்ந்துமன்றுளாடுங்கழல்பணிவார்.

(இ-ள்.) ஒருமையுரிமைத்தில்லைவாழந்தணர்கடம்மிலொருகுடியை = ஒருமைப்பட்ட உரிமையையுடைய தில்லைவாழந்தணர்கள் தங்களுக்குள்ளே ஒருகுடியை; பெருமைமுடியையருமைபுரிகாவல்பேணும்படியிருத்தி = பெருமைபெற்றமுடியை அருமையாகக்காக்குங்காவலை மேற்கொள்ளும்படியிருத்திவிட்டு; இருமைமரபுந்தூயவர் = வைதிகம்சைவமென்னும் இருவகைமுறைமையினும் சுத்தராகியஅவர்; சேரர்நாட்டிலெய்தியபின் = சேரவேந்தர்நாட்டிலடைந்தபின்; வருமையுறவான்மனந்தளர்ந்து = வளரும் ஐயத்தால் மனத்தளர்ச்சியுற்று; மன்றுளாடுங்கழல்பணிவார் = சிற்சபையிலேநடிக்குந் திருவடிகளைப்பணிவாராயினர்.—எ-று.

ஐயுறவாவது நமதுஉத்தேசம் சித்தியாகாமையின் நம்பக்கலில் இறைவர்திருவருள் இல்லைபோலுமெனச் சந்தேகித்தல். மரபு-முறைமை. இருமைமரபென்பதற்கு இருபிறப்பு என்னலும், தாய்மரபு தந்தைமரபு என்னலும்உண்டு. ஈண்டிருப்பின் இந்நாயனார் ஏதேனும் தீங்குவிளைப்பரெனச்சிந்தித்துத் தில்லைவாழந்தணர் சென்றாரென்றபடி. (௫)

அற்றைநாளிலிரவின்கணடியேன்றனக்குமுடியாகப்
பெற்றபேறுமலர்ப்பாதம்பெறவேவேண்டுமெனப்பரவும்

பற்றுவிடா துயில்வோர்க்குக்கனவிற்பாதமலரளிக்க
வுற்றவருளாலவைதாங்கியுலகமெல்லாந்தனிப்புரந்தார்.

(இ-ள்.) அற்றைநாளிரவின்கண் = அன்றையிரவிலே; அடியேன்றனக்கு முடியாகப்பெற்றபேறு = அடியேனுக்கு முடியாகும்படி பெற்றபேறுயுள்ளது; மலர்ப்பாதம் = செந்தாமரை மலர்புரையும் திருச்சரணங்களேயாகையால்; பெறவேவேண்டுமெனப்பரவும் = அவற்றையே பெறவேண்டுமென்று துதிக்கும்; பற்றுவிடாதுயில்வோர்க்கு = அன்புஅகலாதவராய் நித்திரைசெய்யும் அந்நாயனார்க்கு; கனவிற்பாதமலரளிக்க = சொப்பனத்தில் (பெருமான்)திருவடிகளைச்சூட்டியருள; உற்றவருளாலவைதாங்கி = மிக்கதிருவருளால் அவற்றைமுடியாகத்தாங்கி; உலகமெல்லாந்தனிப்புரந்தார் = உலகமுற்றும் தனியேகாத்தார்.—எ-று.

பேறு - பெறுபயன். பற்று - அன்பு. உற்ற - மிக்க. (௬)

அம்பொனீடுமம்பலத்துளாராவமுதத்திருநடஞ்செய்
தம்பிரானார்புவியின்மகிழ்கோயிலெல்லாந்தனித்தனியே
யிம்பர்ஞாலங்களிகூரவெய்தும்பெரும்பூசனையியற்றி
யும்பர்மகிழவரசளித்தேயுமையாள்கணவனடிசேர்ந்தார்.

(இ-ள்.) அம்பொனீடுமம்பலத்துள் = அழகிய பொன்னாலோங்கிய கனகசபையிலே; ஆராவமுதத்திருநடஞ்செய்தம்பிரானார் = அளவுபடாத அமுதமயமாகிய திருநடனத்தைச்செய்கின்ற சிவபெருமான்; புவியின்மகிழ்கோயிலெல்லாந்தனித்தனி = பூமியில்விரும்பிவீற்றிருக்கும் ஆலயமுற்றும் தனித்தனியாக; இம்பர்ஞாலங்களிகூர = இவ்வுலகங்களிப்பெய்த; எய்தும் பெரும்பூசனையியற்றி = நித்திய நைமித்திக காமியங்களாகியமும் சிறந்தபூசனைகளை நடாத்தி; உம்பர்மகிழவரசளித்தே = தேவருவக்கச் செங்கோல்செலுத்தி; உமையாள்கணவனடிசேர்ந்தார் = உமாபதியாகிய கடவுளின் திருவடிகளையடைந்தார்.—எ-று.

ஏ - அசைகள். சிவாலயவழிபாடுதவறின் உலகிற்குத்தீங்குகள் பலவுளவாமாகலின் "இம்பர்ஞாலங்களிகூரவெய்தும்பெரும்பூசனையியற்றி" என்றார். இதனை "ஆற்றரு நோய்மிகு மவனி மழைகுன்றும், போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர், கூற்றுதைத் தான்றிருக் கோயில்களானவை, சாற்றிய பூசைகடப்பிடிற்றானே" எனவும் "முன்னவ னார்கோயிற் பூசைகண் முட்டிடின், மன்னர்க்குத் தீங்குள வாரிவளங்குன்றுங், கன்னங் களவு மிகுத்திடுங் காசினிக், கென்னரு ணந்தி யெடுத்துரைத் தானே" எனவும் வரும் திருமந்திரத்தாற்றெளிக. (௭)

காதற்பெருமைத்தொண்டினிலைக்கடல்சூழ்வையங்காத்தளித்துக்
கோதங்ககலமுயல்களந்தைக்கூற்றனார்தங்கழல்வணங்கி
நாதமறைதந்தளித்தானைநடைநூற்பாவினவின்றேத்தும்
போதமருவிப்பொய்யடிமையில்லாப்புலவர்செயல்புகல்வாம்,

(இ-ள்.) காதற்பெருமைத்தொண்டினிலை = காதலால் பெருமைபெற்றதொண்டின்நிலைமையோடு; கடல்சூழ்வையங்காத்தளித்து = சமுத்திரஞ்சூழ்ந்தஉலகைப்புரந்து; கோதங்ககலமுயல் = குற்றநீங்கமுயன்ற; களந்தைக்கூற்றனார் தங்கழல்வணங்கி = களந்தைப்பதித்தலைவராகிய கூற்றுவநாயனார்திருவடிகளைப் பணிந்து; நாதமறைதந்தளித்தானை = சுரங்களோடுகூடிய வேதங்களைத்தந்தருளிய விமலனை; நடைநூற்பாவினவின்றேத்தும்போதமேவி = நல்லியல்பமைந்த பிரபந்தப்பாடல்களால் நன்கு

துதிக்கும் ஞானத்தோடுபொருந்தி; பொய்யடிமையில்லா = பொய்யடிமையைமேற்கொள்ளாதமெய்த்தொண்டர்களாகிய; புலவர்செயல்புகல்வாம் = நக்கீரதேவர்முதலியகாற்பத்தொன்பதுபுலவர்நிலைமையைக் கூறுவாம்.—எ-று.

காதலென்புழி மூன்றனுருபுவிரிக்க. அங்கு - அசை. நாதம் - உதாத்தம் அநுதாத்தம் சுவரிதமென்பன. நடை - இயல்புவழாமை. (௮)

தேனுங்குழலும்பிழைத்ததிருமொழியாள்புலவிதீர்க்கமதி
தானும்பணியும்பகைதீர்க்குஞ்சடையார்தூதுதருந்திருநாட்
கூனுங்குருடுந்தீர்த்தேவல்கொள்வார்குலவுமலர்ப்பாதம்
யானும்பரவித்தீர்க்கின்றேனேழுபிறப்பின்முடங்குகூன்.

(இ-ள்.) தேனுங்குழலும்பிழைத்ததிருமொழியாள் = தேனினினிமையுங்குழலினிசையும் தோற்ற திருமொழியையுடைய பரவைநாச்சியாரது; புலவிதீர்க்க = ஊடலைத்தவிர்க்க; மதியும்பணியும்பகைதீர்க்குஞ்சடையார் = சந்திரனும்பாம்பும் சத்துருத்தன்மைநீங்குமாறுதரித்த சடையையுடையகடவுள்; தூதுதருந்திருநாள் = தூதாகச்சென்ற அத்திருநாளிலே; கூனுங்குருடுந்தீர்த்தேவல்கொள்வார் = ஏவலர் இருவர்க்குரிய கூனையும் குருடையும் நிவர்த்தித்து ஏவல்கொண்டநம்பியாரூரரது; குலவுமலர்ப்பாதம்பரவி = பிரகாசிக்கும் மலர்போலும் திருவடிகளைத் துதித்து; எழுபிறப்பின் முடங்குகூன்யானுந்தீர்க்கின்றேன் = எழுவகைப்பிறப்பினும் முடங்குகின்றகூனை யானும் நீக்குகின்றேன்.—எ-று.

சிவபெருமான் பரவைநாச்சியார்ஊடலைத் தீர்த்தநாளில் அவர்திருமாளிகையிலே சிலநாளாக நம்பியாரூரர்க்குத் திருமாலையும் இனியஅடைக்காயுங்கொடுத்து வந்த கூனனும் குருடனும் அந்நம்பியாரூரரால் கூனுங்குருடுந்தீர்த்து ஏவல்கொளப்பெற்றாரென்பது சரித்திரமாகலின், "புலவிதீர்க்கத்தூதுதருந்திருநாட்கூனுங் குருடுந்தீர்த்தேவல்கொள்வார்" என்றார். இதனை நம்பியாண்டார்நம்பிகளருளிய திருத்தொண்டர் திருவந்தாதியில் "கூற்றுக் கெவனோ புகறிரு வாரூரன் பொன்முடிமே - லேற்றுத் தொடையலு மின்னடைக் காயு மிடுதருமக் - கோற்றொத்து கூனனுங் கூன்போய்க் குருடனுங் கண்பெற்றமை. சாற்றித் திரியும் பழமொழி யாமித் தரணியிலே" என்பதனாலும் உணர்க. தேனுங் குழலும் ஆகுபெயர். யானும் என்னும் உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. எழுபிறப்பின் முடங்குகூனாவது எழுவகைத்தோற்றங்கட்குரிய கருப்பாசயங்களிலே உடலம்வளைவுபட ஒடுங்கிக் கிடத்தல். அவற்றைத் தீர்த்தலாவது - அத்தகைய கருப்போற்பத்தி அணுகாதொழித்தலாம். தான் - அசை. தீர்க்கத் தூதுதருமென இயையும். (௯)

கூற்றுவநாயனார்புராணம்முற்றிற்று,

ஆகத்திருவிருத்தம் - ௭௮௪.

வார்கொண்டவனமுலையாள்சருக்கம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## பொய்யடிமையில்லாதபுலவர்சருக்கம்.

# பொய்யடிமையில்லாதபுலவர்புராணம்.

செய்யுணிகழ்சொற்றெளிவுஞ்செவ்வியநூல்பலநோக்கு
மெய்யுணர்வின் பயனிதுவேயெனத்துணிந்துவிளங்கியொளிர்
மையணியுங்கண்டத்தார்மலரடிக்கேயாளானார்
பொய்யடிமையில்லாதபுலவரெனப்புகழ்மிக்கார்.

(இ-ள்.) செய்யுணிகழ்சொற்றெளிவும் = (இலக்கணநூலாராய்ச்சியால்) பாடல்களிலுள்ள மொழித்திறங்களின் முட்டறுத்துணர்தலும்; செவ்வியநூல்பலநோக்கும் = அவ்வுணர்ச்சியாற் செவ்வியஞானநூல்கள்பலவற்றைத் தேர்தலுமாகிய இவற்றிலுண்டாகும்; மெய்யுணர்வின்பயன் = தத்துவஞானத்தின்பயன்; இதுவேயெனத்துணிந்து = சிவபெருமானே பரமபதியென்று அக்கடவுளை வழிபடுதலே எனத் தெளிந்து; விளங்கியொளிர்மையணியுங்கண்டத்தார் = சுடர்விட்டுவிளங்கும் நஞ்சத்தையணிந்த கண்டத்தராகிய நம்பெருமானுடைய; மலரடிக்கேயாளானார் = மலர்போலும் திருவடிகளுக்கே ஆட்பட்டவராகையால்; பொய்யடிமையில்லாதபுலவரெனப்புகழ்மிக்கார் = பொய்யடிமையில்லாத புலவரென்றுகூறக் கீர்த்திபெற்றார்.

சொற்களைத்தெளிதற்கு இலக்கணநூலாராய்ச்சியே கருவியாகலின்அது ஈண்டு வருவிக்கப்பட்டது. வேதாகமங்களின் சாரமாயுள்ள ஞானநூலென்பார் "செவ்வியநூல்" என்றார். நோக்கு முதனிலைத்தொழிற்பெயர். மெய்யுணர்விற்கேதுவாகும் தெளிதலையும் நோக்கலையும் மெய்யுணர்வென்றது காரணத்தைக் காரியமாக உபசரித்தலாம். மெய்யுணர்வு-தத்துவஞானம். இதுவேயென்பது இறைவர்திருவடிகட்கு ஆட்படுதலென்பதைச்சுட்டிநின்றது. இதில் ஏகாரம் தேற்றம். அடிக்கேயென்னும் ஏகாரம் பிரிநிலை. இலக்கணநூலாராய்ச்சியால் மொழித்திறங்களின்முட்டறுத்து முதனூலுணர்ந்து விடுபெறுமாறு "எழுத்தறியத்தீரு மிழிதகைமை தீர்ந்தான்-மொழித்திறத்தின் முட்டறுப்பானாகு-மொழித்திறத்தின்-முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து-கட்டறுத்து வீடு பெறும்." என்பதனானுமுணர்க. இவர் விபூதிருத்திராக்ஷதாரணமும் பஞ்சாக்ஷரசெபமுமுடையராய்க் கடவுட்கு உண்மையடியராயிருந்தமையின் பொய்யடிமையில்லாப் புலவரெனப் புகழ்மிக்காரென்க. இப்புலவர் கபிலர் பரணர் நக்கீரர்முதலாக நாற்பத்தொன்பதின்மரெனப்படுவார். இவரவதாரமும் சங்கப்பலகைபெற்றதும் கடைச்சங்கப்புலவராயிருந்துகொண்டு அகத்தியம் தொல்காப்பியமென்னும் இலக்கணநூல்களின்படி ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் என்னும் நாற்கவிகளினால் பெருமானைக்குறித்துப் பலபிரபந்தங்களியற்றித் தமிழைவளர்த்ததும், சிவபெருமானும் இறையனாரென்னும் திருநாமத்தோடு தம்முள் ஒருவராக வீற்றிருக்கப்பெற்றதும் பிறவுமாகிய இவர்சரித்திரங்களை ஈண்டு விரிக்கிற் பெருகுமாகலின் திருவிளையாடற்புராணத்தும் இறையனாரகப்பொருளுரைப்பாயிர முதலியவற்றும் காண்க. (க)

பொற்பமைந்தவரவாரும்புரிசடையார்தமையல்லாற்
சொற்பதங்கள்வாய்திறவாத்தொண்டுநெறிதலைநின்ற
பெற்றியினின்மெய்யடிமையுடையாராம்பெரும்புலவர்
மற்றவர்தம்பெருமையாரறிந்துரைக்கவல்லார்கள்.

(இ-ள்.) பொற்பமைந்தவரவாரும்புரிசடையார்தமையல்லால் = அழகுநிரம்பிய அரவக்குடிகொண்ட முறுக்குச்சடையையுடைய முதற்கடவுளைச்சுட்டியல்லது; சொற்பதங்கள்வாய்திறவா = சொற்களையும் பொருள்களையும் திருவாக்கால்வெளிப்படுத்தாத; தொண்டுநெறிதலைநின்றபெற்றியினின் = அடிமைநெறியிலே நிலைபெற்ற அத்தன்மையால்; மெய்யடிமையுடையாராம்பெரும்புலவர் = உண்மையாகிய அடிமையையுடையராகும் பெரும்புலவராயினார்; அவர்தம்பெருமையாரறிந்துரைக்கவல்லார்கள் = அவர்களுடையமேன்மையை யாவர் உணர்ந்து கூறவல்லவர்கள்.

பெருமானைச்சுட்டியல்லது சொற்பொருள்களை வெளிப்படுத்தாத இவர், பிறரைச்சுட்டியும் பிரபந்தங்களியற்றியதென்னையெனின்; அவர் சிவபத்தியிற்சிறந்து சீர்த்திபெற்றிருந்தமையாற்போலும்: அல்லாவழி அவரைச்சுட்டி இயற்றாரென்க. சொற்பதங்கள் சொல்லும்பொருளுமாதல் "சொற்பதங்கடந்ததொல்லோன்" "சொல்லும்பொருளுமிறந்தசுடர்" என்னும் திருவாசகத்தாலுமுணர்க. வாய்திறவாமை - வெளிப்படுத்தாமை. தலைநிற்றல் ஒருசொன்னீர்மைத்து. மற்று-வினைமாற்று. (௨)

ஆங்கவர்தமடியிணைகடலைமேற்கொண்டவனியெலாந்
தாங்கியவெண்குடைவளவர்குலஞ்செய்ததவமனையா
ரோங்கிவளர்திருத்தொண்டினுண்மையுணர்செயல்புரிந்த
பூங்கழலார்புகழ்ச்சோழர்திருத்தொண்டுபுகல்கின்றாம்.

(இ-ள்.) அவர்தமடியிணைகடலைமேற்கொண்டு = அப்பொய்யடிமையில்லாப்புலவர்களுடைய இரண்டுதிருப்பதங்களையும் சிரமேற்கொண்டு; அவனியெலாந்தாங்கிய வெண்குடை = உலகமுற்றும்புரந்த வெண்கொற்றக்குடையையுடைய; வளவர்குலஞ்செய்ததவமனையார் = சோழர்குலஞ்செய்ததவம் உருக்கொண்டாலொத்தவர்; ஓங்கிவளர்திருத்தொண்டினுண்மை = உயர்ச்சிபெற்றுவளர்கின்ற திருத்தொண்டின் உண்மையை; உணர்செயல்புரிந்த = உணர்தற்கேதுவாகிய செய்கையை இயற்றிய; பூங்கழலார்புகழ்ச்சோழர்திருத்தொண்டுபுகல்கின்றாம் = பொலிவுபெற்ற வீரக்கழலையுடைய புகழ்ச்சோழநாயனாரது திருத்தொண்டைக் கூறுவாம்.—எ-று.

ஆங்கு - அசை. இவர் இயற்றிய அரும்பெருஞ்செய்கையால் மிக்க திருத்தொண்டினுண்மை வெளிப்பட்டதென்பார் காரியத்தைக்காரணமாக உபசரித்து "உண்மையுணர்செயல்" என்றார். (௩)

## பொய்யடிமையில்லாதபுலவர்புராணம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௭௮௭.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# புகழ்ச்சோழநாயனார்புராணம்.

குலகிரியின்கொடுமுடிமேற்கொடிவேங்கைக்குறியெழுதி
நிலவுதருமதிக்குடைக்கீழ்நெடுநிலங்காத்தினிதளிக்கு
மலர்புகழ்வண்டமிழ்ச்சோழர்வளநாடுமாமூதூ
ருலகில்வளரணிக்கெல்லாமுள்ளுறையூராமுறையூர்.

(இ-ள்.) குலகிரியின்கொடுமுடிமேற்கொடிவேங்கைக்குறியெழுதி = மேருமலையின்சிகரத்திலேதம்முடையகொடிநாட்டிப் புலியைவரைந்து; நிலவுதருமதிக்குடைக்கீழ் = நிலவைப்பரப்பும் சந்திரன்போலும் வெண்கொற்றக்குடையின்கீழ்; நெடுநிலங்காத்தினிதளிக்கும் = பெரியபூமியைப்புரந்து இனிதாகப்பேணும்; மலர்புகழ்வண்டமிழ் = மலர்ந்தகீர்த்தியையுடைய வண்மைமிக்க தமிழ்பரவிய; சோழர்வளநாடு மாமூதூர் = சோழருக்குரியவளநாட்டிலுள்ள பெருமைபெற்ற தொன்மைநகரம் யாதெனில்; உலகில்வளரணிக்கெல்லாமுள்ளுறையூராமுறையூர் = உலகத்திலோங்கிய மங்கலங்கட்கெல்லாம் ஆகரமாகிய ஊரெனப்படும் உறையூராகும்.—எ-று.

குலகிரியென்றது ஈண்டு மேருவை. அதன்முடியிலுள்ளகொடி தங்கொடியென்பதுதோன்ற வேங்கைக்குறியெழுதினரென்பது. எனவே, இப்பூமண்டலமுற்றும் இவர்களாணைசென்றதென்பது குறிப்பித்தவாறாயிற்று. குடைக்கீழ்நெடுநிலங்காத்தலாவது தனதரசுரிமையால் பூமிமுற்றுங்குளிரச்செய்தல். உறையூர் சோழர்க்குரிய இராஜதானியுட்சிறந்ததாகலின் "அணிக்கெல்லாமுள்ளுறையூராமுறையூர்" என்றார்.

அளவில்பெரும்புகழ்நகரமதனிலணிமணிவிளக்கு
மிளவெயிலின்சுடர்ப்படலையிரவொழியவெறிப்பனவாய்க்
கிளரொளிசேர்நெடுவானப்பேர்யாற்றுக்கொடிகெழுவும்
வளரொளிமாளிகைநிரைகண்மருங்குடையமறுகெல்லாம்.

(இ-ள்.) அளவில்பெரும்புகழ்நகரமதனில் = அளவில்லாத பெருங்கீர்த்தியமைந்த அந்நகரத்திலே; மறுகெல்லாம் = வீதிகளெல்லாம்; அணிமணிவிளக்கும் = அழகிய இரத்தினதீபங்களும்; இளவெயிலின்சுடர்ப்படலை = இளவெயில்போலக் காந்தியின்செறிவை; இரவொழியவெறிப்பனவாய் = இரவுநீங்குமாறு வீசுவனவாக கிளரொளி = அதிற்கிளர்ச்சியுற்ற ஒளியானது; சேர்நெடுவானப்பேர்யாற்று = அருகிலுள்ள நெடிய ஆகாயகங்கையிலே; கொடிகெழுவும் = கொடிபோலப்பிரதிவிம்பிக்கின்ற; வளரொளிமாளிகைநிரைகண்மருங்குடைய = இத்தகைய மிக்கபிரகாசம் பெற்ற மாடங்களின்வரிசைகளை இருபக்கத்துமுடையனவாம்.—எ-று.

ஆங்காங்கேற்றப்படும் ஒவ்வொருமணிவிளக்கே இரவொழிய இங்ஙனம் எறிப்பனவாக அவ்வொளி கொடிகெழுவுமாயின் அம்மாளிகைமுற்றும்பதித்துள்ள மணிகளினொளி இத்தகையவென இசைக்கலாகுங்கொலென்பது கருத்து. விளக்கும் என்னும் உம்மை இழிவுசிறப்பு. ஆய்-வினையெச்சத்திரிபு. மணிவிளக்கும் எறிப்பனவாக, ஒளிபெற்ற ஆற்றிலே அதிற்கொடிபடியும் மாளிகையெனினும் அமையும். (உ)

நாகதலத்தும்பிலத்துமானிலத்துகலஞ்சிறந்த
போகமனைத்தினுக்குமுப்பாம்பொருவிறந்தவளத்தினவாய்

மாகநிறைத்திடமலிந்தவரம்பில்பலபொருள்பிறங்கு
மாகரமொத்துளவளவிலாவணவீதிகளெல்லாம்.

(இ-ள்.) அளவிலாவணவீதிகளெல்லாம் = கணக்கிறந்தகடைவீதிகளெல்லாம்; நாகதலத்தும் பிலத்துநானிலத்தும் = விண்ணுலகத்திலும் பாதலத்திலும் இப்பூமியிலும் அனுபவிக்கப்படும்; நலஞ்சிறந்தபோகமனைத்தினுக்குறுப்பாம் = நன்குமிக்க போகங்களனைத்திற்கும் சாதனமாகிய; பொருவிறந்தவளத்தினவாய் = ஒப்பில்லாத வளங்களையுடையனவாகி; மாகநிறைத்திடமலிந்த = ஆகாயமளவும் நிறைக்கமிகுந்துள்ள; வரம்பில்பலபொருள்பிறங்குமாகரமொத்துள = எல்லையில்லாத பலபொருள்கள்விளங்கும் கருகூலத்தையொத்துள்ளன.—எ-று.

இப்பூமி குறிஞ்சிமுதலிய நால்வகைநிலங்களையுடைமையின் "நானிலம்" என்றார். அனைத்தினுக்கும் என்னும் முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. உறுப்பு-சாதனம். வளத்தினவாய் உள என இயையும். ஆகரம்-உறைவிடம். எவ்வுலகங்களினும் நுகரும் போகசாதனங்களெல்லாம் ஈண்டுள்ளனவெனவே இந்நகரம் எவற்றினும் மிக்கதென்பது பெற்றாம். (௩)

பார்நனையமதம்பொழிந்துபனிவிசும்புகொளமுழங்கும்
போர்முகவெங்கறையடியும்புடையினமென்றடையவருஞ்
சோர்மழையின்விடுமதத்துச்சுடருநெடுமின்னுடைக்
கார்முகிலும்பலதெரியாகளிற்றினிரைக்களமெல்லாம்.

(இ-ள்.) களிற்றினிரைப்பலகளமெல்லாம் = யானைகளை வரிசையாகப்பிணிக்கப்பட்டுள்ள பலகூடங்கள் முற்றும்; பார்நனையமதம்பொழிந்து = பூமிநனையும்படி மதத்தைப்பொழிந்து; விசும்புபனிசொளமுழங்கும் = மேகங்களும் நடுக்கமடையும்படி ஒலிக்கின்ற; போர்முகவெங்கறையடியும் = போர்த்தொழில்வாய்ந்த கோட்டினையும் வெவ்வியவுரல்போலுங்கால்களையுமுடைய யானையும்; புடையினமென்றடையவரும் = அதனருகே இனமென்றுகருதி அணுகுகின்ற; சோர்மழையின்விடுமதத்த = சொரிபுமழையாகிய சிந்துமதத்தையும்; சுடருநெடுமின்னுடை = விளங்கும் நெடிய மின்னலாகிய முகபடாத்தையுமுடைய; கார்முகிலுந்தெரியா = கருமேகமும் வேறாகமதிக்கப்படா.—எ-று.

கோட்டை ஆகுபெயரால் முகமென்றார். * "வேலாண்முகத்தகளிறு" என்றார் ஆன்றோரும். கறையடி - அன்மொழித்தொகை. இன்-தவிர்வழிவந்தசாரியை. யானையும் மேகமும் உருவம் நிறம் செயல் முதலியவற்றிற் பெரும்பாலும் ஒத்தலின் வேற்றுமைதெரியப்பட்டில என்றபடி. தெரியப்பட்டில வென்னும் செயப்பாட்டுவினை செய்வினையாய்நின்றது. பலகளிற்றினிரைக்களமெல்லாம் கறையடியும் கார்முகிலும் தெரியா எனஇயையும். (௪)

படுமணியும்பரிச்செருக்குமொலிகிளரப்பயில்புரவி
நெடுநிரைமுன்புல்லுண்வாய்நீர்த்தரங்கநுரைநிவப்ப
விடுசுடர்மெய்யுறையடுக்கன்முகில்படியவிளங்குதலாற்
றொடுகடல்களனையபலதுரங்கசாலைகளெல்லாம்.

(இ-ள்.) படுமணியும்பரிச்செருக்கும் = ஒலிக்கின்றமணிகளும் குதிரைகளின் கனைப்பும்; ஒலிகிளர=சமுத்திரவொலிபோலச்சத்திக்க; பயில்புரவிநெடுநிரைமுன்

* திருக்குறள் - ௫௦௦. காலாழ்களரின்.



புகழ்ச் சோழநாயனார்.

புல்லுண்வாய்நீர் = முன்பு உலவுகின்ற நெடியகுதிரைவரிசைகளும் புல்லையுண்கின்ற அவற்றின் வாய்நீரும்; தரங்கநுரைநிவப்ப = அலைகளையும் அவற்றினுரைகளையும் ஒப்பவோங்க; விடுசுடர்மெய்யுறை = காந்தியைப்பரப்பும் உடலமும் அதன்மேலணிந்தகவசமும்; அடுக்கன்முகில்படிய = மலைகளையும் அவற்றிற்படியும் மேகங்களையும் ஒப்ப; விளங்குதலால் = பிரகாசித்தலினால்; பலதுரங்கசாலைகளெல்லாம் = பலவாகிய குதிரைப்பந்திகளெல்லாம்; தொடுகடல்களனைய = சகரர்களால்வெட்டப்பட்ட சாகரங்களையொத்தன.—எ-று.

படுதல் - ஒலித்தல். படிய - ஒப்ப. (௩)

துளக்கையைராவதக்களிறுந்துரங்கவரசுந்திருவும்
விளைத்தவமுதுந்தருவும்விழுமணியுங்கொடுபோத
வுளைத்தகடலிவற்றொன்றுபெறவேண்டியும்பரூர்
வளைத்ததுபோன்றுளதங்கண்மதில்சூழ்ந்தமலர்க்கிடங்கு.

(இ-ள்.) அங்கண்மதில்சூழ்ந்த மலர்க்கிடங்கு = அந்நகரத்திலே மதிலைச்சூழ்ந்த மலர்செறிந்த அகழியானது; துளக்கையைராவதக்களிறும் = துதிக்கையையுடைய ஐராவதமென்னும் யானையையும்; துரங்கஅரசும் = குதிரைகளுட்சிறந்த உச்சைச்சிரவமென்னுங்குதிரையையும்; திருவும் = இலக்குமியையும்; விளைத்தவமுதும் = விளைவித்தவமுதத்தையும்; தருவும் = சந்தானமுதலிய பஞ்சதருக்களையும்; விழுமணியும் = மேன்மைபெற்ற சிந்தாமணியையும்; கொடுபோத = தேவர்கள் கொண்டுபோதலால்; உளைத்தகடலிவற்றொன்று பெறவேண்டி = இடருற்றபாற்கடலானது இவற்றுள்ளே ஒன்றைப்பெறவிரும்பி; உம்பரூர்வளைத்ததுபோன்றுளது = வானவருலகத்தை வளைத்தாற்போன்றுள்ளது.—எ-று.

எனவே வானவரூர்போனறு இத்தகைய அரியபொருளனைத்தும் இந்நகரத்துள்ளனவென்று குறிப்பித்தவாறுமாயிற்று. உளைத்தல் - இடர்ப்படல். (௪)

காரேறுங்கோபுரங்கள்கதிரேறுமலர்ச்சோலை
தேரேறுமணிவீதிதிசையேறும்வசையிலணி
வாரேறுமுலைமடவார்மருங்கேறுமலர்க்கணைபொன்
பாரேறும்புகழுறைந்தைப்பதியின்வளம்பகர்வரிதால்.

(இ-ள்.) கோபுரங்கள்காரேறும் = கோபுரங்களிலே மேகங்களேறுவதும்; மலர்ச்சோலைகதிரேறும் = மலர்நிரம்பியசோலைகளிலே சுடர்களேறுவதும்; அணிவீதிதேரேறும் = சிறந்தவீதிகளிலே தேர்களுலாவும்; வசையிலணிதிசையேறும் = இகழ்வற்ற அதனலங்காரம் திசைகளிலேசெல்லும்; வாரேறுமுலைமடவார்மருங்கு = கச்சணிந்ததனங்களையுடைய இளமங்கையர்பால்; மலர்க்கணையேறும் = மன்மதனேவும் மலரம்புகள்பாயும் (இங்ஙனம்சிறத்தலின்); பாரேறும்புகழ் = உலகமுற்றும்பரம்பியகீர்த்தியையுடைய; உறைந்தைப்பதியின்வளம்பகர்வரிது = உறையூரின்மேன்மை உரைத்தலரிதாகும்.—எ-று.

ஆல் - அசை. கதிரென்றது சூரியசந்திரர்களை; கதிர்ப்பது கதிர்; கதிர்த்தல்- ஒளிவிடுதல். கதிர் பொருளால் உயர்திணையேனும் சொல்லால் அஃறிணையாகலின் "கதிரேறும்" என்றார். வசையிலணிதிசையேறலாவது - எத்திசையினும் இழிவற்ற

இதன்சிறப்பே இசைக்கப்படுதல்· இந்நகரமடந்தையர் குறைவில்லாத இன்பநுகர்ச்சியுடையரென்பார் "மடவார்மருங்கேறுமலர்க்கணை." எனவிதந்தார். (எ)

அந்நகரிற்பாரளிக்குமடலரசராகின்றார்
மன்னுதிருத்தில்லைநகர்மணிவீதியணிவிளக்குஞ்
சென்னிநீடநபாயன்றிருக்குலத்துவழிமுதலோர்
பொன்னிநதிப்புரவலனார்புகழ்ச்சோழரெனப்பொலிவார்.

(இ-ள்.) அந்நகரிற்பாரளிக்குமடலரசராகின்றார் = அந்நகரிலிருந்துகொண்டு அவனியைப்புரக்கும் வெற்றிபெற்ற அரசர்யாவரெனின்; மன்னுதிருத்தில்லைநகர்மணிவீதி=நிலைபெற்ற திருநதில்லைநகரத்தையும் சிறந்தவீதிகளையும்; அணிவிளக்கும் = அலங்காரம் அடையப்புதுக்கிய; சென்னிநீடநபாயன் = சோழரிலுயர்ந்த அநபாயசோழமகாராஜாவின்; திருக்குலத்துவழிமுதலோர் = சிறந்தசந்ததியிலே முனைபுள்ளவர்; பொன்னிநதிப்புரவலனா = காவிரிநதிசூழ்ந்த சோணாட்டைப்புரப்பவர்; புகழ்ச்சோழரெனப்பொலிவார் = புகழ்ச்சோழநாயனார் என்றுகூறப் புகழ்பெற்றவர்.—எ-று. (அ)

ஒருகுடைக்கீழ்மண்மகளையுரிமையினின்மணம்புணர்ந்து
பருவரைத்தோள்வென்றியினாற்பார்மன்னர்பணிகேட்பத்
திருமலர்த்தும்பெருலகுஞ்செங்கோலின்முறைநிற்ப
வருமறைச்சைவந்தழைப்பவரசளிக்குமந்நாளில்.

(இ-ள்.) ஒருகுடைக்கீழ்=தமதுஒப்பற்றகுடையின்கீழே குளிர்தூங்கும்படி; மண்மகளையுரிமையினின் மணம்புணர்ந்து=பூதேவியைத் தமக்கேயுரிமையாகமணந்து; பருவரைத்தோள்வென்றியினாற்பார்மன்னர்பணிகேட்ப = பருத்தமலையைநிகர்த்த புயவெற்றியால் பாரிலுள்ளவரசரெல்லாம் தமதேவல்கேட்பவும்; திருமலர்த்தும்பெருலகுஞ்செங்கோலின்முறைநிற்ப = செல்வத்தாற்செழிப்புற்ற சிறந்தவுலகமும் செங்கோலினியதிதவறுமல் நிற்கவும்; அருமறைச்சைவந்தழைப்ப = அரியவேதத்திற்கூறும் சைவசமயம் அபிவிர்த்தியாகவும்; அரசளிக்குமந்நாளில் = அரசைச்செலுத்தும் அக்காலத்திலே.—எ-று.

திரு - இலக்குமியுமாம். உம்மை இறந்ததுதழீஇய எச்சவும்மை.

பிறைவளருஞ்செஞ்சடையார்பேணுசிவாலயமெல்லா
நிறைபெரும்பூசனைவிளங்கநீடுதிருத்தொண்டர்தமைக்
குறையிரந்துவேண்டுவனகுறிப்பின்வழிகொடுத்தருளி
முறைபுரிந்துதிருநீற்றுமுதனெறியேபாலிப்பார்.

(இ-ள்.) பிறைவளருஞ்செஞ்சடையார்பேணுசிவாலயமெல்லாம் = இளமதிவதியும்சிவந்தசடையையுடைய இறைவர்விரும்பியசிவாலயமுற்றும்; நிறைபெரும்பூசனைவிளங்க=நிறைவுற்றமிக்கநித்தியநைமித்திகங்கள்சிறக்க; நீடுதிருத்தொண்டர்தமைக்குறையிரந்து = பெருமைபெற்ற அடியவர்களைப் பெரிதும்பிரார்த்தித்து; வேண்டுவனகுறிப்பின்வழிகொடுத்தருளி = அவர்க்குவேண்டுவனவற்றை அவர்குறிப்பறிந்து கொடுத்து; முறைபுரிந்து = செங்கோலைச்செலுத்தி; முதற்றிருநீற்றுநெறியேபாலிப்பார்=முத்திபெறுதற்கு முதற்சாதனமாகிய திருநீற்றுநெறியேபாதுகாப்பார்.எ-று.

விளங்கப்புரிந்தனை இயையும். குறையிரத்தல் - தாம் தாழ்ந்துநின்றுகேட்டல்.

அங்கணினி துறையுநாளரசிறைஞ்சவீற்றிருந்து
கொங்கரொடுகுடபுலத்துக்கோமன்னர்திறைகொணரத்
தங்கள்குலமரபின்முதற்றனிநகராங்கருவூரின்
மங்கலநாளரசுரிமைச்சுற்றமுடன்வந்தணைந்தார்.

(இ-ள்.) அரசிறைஞ்சவீற்றிருந்து = பலமன்னவர்வந்துபணிய வீற்றிருந்து; அங்கணினிதுறையுநாள் = அந்நகரத்திலே இனிமையாக அமரும்நாளில்; கொங்கரொடுகுடபுலத்துக்கோமன்னர்திறைகொணர = கொங்கதேசத்தரசரும் குடகதேசத்தரசரும் திறைகொணர்ந்துகுவிக்க (அதைவாங்கும்பொருட்டு); தங்கள்குலமரபின்முதற்றனிநகராங்கருவூரில் = தங்களுடையகுலமரபினர்க்குத் தனித்தலைமைபெற்றநகரமாகுங் கருவூரிலே; மங்கலநாளரசுரிமைச்சுற்றமுடன்வந்தணைந்தார் = ஒருசுபதினத்தில் அரசுக்குரிமையாகிய சுற்றத்தோடுவந்து சேர்ந்தார்.—எ-று.

அரசுரிமைச்சுற்றமாவார் - மந்திரியர் புரோகிதர் சேனாபதியர் முதலியோர்.

வந்துமணிமதிற்கருவூர்மருங்கணைவார்வானவர்சூ
ழிந்திரன்வந்தமரர்புரியெய்துவதொன்னவெய்திச்
சிந்தைகளிகூர்ந்தரனார்மகிழ்திருவானிலைக்கோயின்
முந்துறவந்தணைந்திறைஞ்சிமொய்யொளிமாளிகைபுகுந்தார்.

(இ-ள்.) வந்துமணிமதிற்கருவூர்மருங்கணைவார் = வந்து மணிகளிழைத்த மதில்சூழ்ந்துடைய கருவூரருகே அணைபவர்; வானவர்சூழிந்திரன்வந்தமரர்புரியெய்துவதொன்னவெய்தி = அமரர்கள்சூழப்பெற்ற இந்திரன்வந்து அமராபதியையடைதல்போல அடைந்து; அரனார்மகிழ்திருவானிலைக்கோயின்முந்துறவந்தணைந்து = சிவபெருமான் விரும்பிய திருஆனிலையென்னும் திருவாலயத்தின் முன்புவந்தணுகி; சிந்தைகளிகூர்ந்திறைஞ்சி = மனங்களிகூர்ந்து வணங்கி; மொய்யொளிமாளிகைபுகுந்தார் = செறிந்தகாந்தியையுடைய அரண்மனையைச்சேர்ந்தார்.—எ-று.

எய்துவதொன்னவென்பதில் ஒன்ன தொழிற்பெயர் விகுதி. (௧௨)

மாளிகை முன்னைத்தாணிமண்டபத்தின்மணிபுனைபொற்
கோளரியாசனத்திருந்துகுடபுலமன்னவர்கொணர்ந்த
வோளிநெடுங்களிற்றினணியுலப்பில்பரிதுலைக்கனக
நீளிடைவில்விலகுமணிமுதலனைத்துந்திறைகண்டார்.

(இ-ள்.) மாளிகைமுன்னைத்தாணிமண்டபத்தில் = திருமாளிகைக்குமுன்னுள்ள அரசிருக்கைமண்டபத்திலே; மணிபுனைபொற்கோளரியாசனத்திருந்து = இரத்தினங்கள்குயிற்றிய பொற்சிங்காசனத்திலே வீற்றிருந்து; குடபுலமன்னவர்கொணர்ந்த = குடகதேசத்தரசர்கொண்டுவந்த; ஒளிநெடுங்களிற்றின் = ஒழுங்காகநிறுத்தப்பட்ட நெடியயானைகளோடு; அணியுலப்பில்பரி = அணிவகுத்துள்ள அளவுபடாத குதிரைகளும்; துலைக்கனகம் = துலையிலிட்டுநிறுக்கும் பொற்குவியல்களும்; நீளிடை வில்விலகு மணிமுதல் = நெடுந்தூரத்திலும் காந்திவிலகும் நவமணிகளுமாகிய இவைமுதலாக; அனைத்துந்திறைகண்டார் = செறிந்திருக்குந் திறைகளைக் கண்டார்.—எ-று.

ஒளி - ஒழுங்கு. (௧௩)

திறைகொணர்ந்தவரசர்க்குச்செயலுரிமைத்தொழிலருளி
முறைபுரியுந்தனித்திகிரிமுறைநில்லாமுரணரச

ருறையரணமுளவாகிற்றெரிந்துரைப்பீரெனவுணர்வு
நிறைமதிநீடமைச்சர்க்குமொழிந்தருளினிகழுநாள்.

(இ-ள்.) திறைகொணர்ந்தவரசர்க்குச் செயலுரிமைத்தொழிலருளி = திறைகொண்டுவந்தவேந்தர்களுக்குச் செயற்குரியதொழில்களைப் பணித்து; முறைபுரியுந் தனித்திகிரிமுறைநில்லா = நீதியாகச்செலுத்தப்படும் நமது நிகரற்ற ஆக்கினைசக்கரத்தின்வழிநில்லாத; முரணரசருளவரணமுளவாகில் = மாறுபட்ட அரசர்சன்னதியும் கோட்டைகளுண்டேல்; தெரிந்துரைப்பீரென = ஆராய்ந்து கூறுவீராகவென்று; உணர்வுநிறைமதிநீடமைச்சர்க்கு = ஆராய்ச்சிநிரம்பிய அறிவின்மேம்பட்ட மந்திரிமார்களுக்கு; மொழிந்தருளிநிகழுநாள் = ஆஞ்ஞாபித்து அமரும்நாளில்.—எ-று. (௧௪)

சென்றுசிவகாமியார்கொணர்திருப்பள்ளித்தாம
மன்றுசிதறுங்களிற்றையறவெறிந்துபாகரையுங்
கொன்றவெறிபத்தரெதிரென்னையுங்கொன்றருளுமென
வென்றவடிவாள்கொடுத்துத்திருத்தொண்டின்மிகச்சிறந்தார்.

(இ-ள்.) சிவகாமியார்சென்றுகொணர்திருப்பள்ளித்தாமம் = சிவகாமியாண்டாரென்பவர் திருநந்தனவனத்திற்குச்சென்று கொண்டுவந்தமலர்களை; அன்றுசிதறுங் களிற்றையறவெறிந்து = அப்பொழுதுசிதறிய யானைத்துதிக்கையை அறவெட்டி; பாகரையுங்கொன்ற=(குத்துக்கோற்காரர்மூவரோடு) பாகர் இருவரையுங்கொன்ற; எறிபத்தரெதிர் = எறிபத்தநாயனாருக்கெதிரே; என்னையுங்கொன்றருளுமென = (இவ்வபராதம்நீங்குமாறு) எளியேனையும் கொன்றருளுமென்று; வென்றிவடிவாள் கொடுத்து = வெற்றிபெற்ற வடித்தவாளாயுதத்தை அவர்கரத்திலளித்து; திருத்தொண்டின்மிகச்சிறந்தார் = திருத்தொண்டிலே மிகச்சிறந்தவராயினார்.—எ-று.

இச்சரித்திரம் எறிபத்தநாயனார்புராணத்தில் விரித்திருத்தலின் ஈண்டுச்சுருக்கியருளினார். உம்மையிரண்டும் இறந்ததுதழீஇயவை. (௧௫)

விளங்குதிருமதிக்குடைக்கீழ்வீற்றிருந்துபாரளிக்குந்
துளங்கொளிநீண்முடியார்க்குத்தொன்முறைமைநெறியமைச்ச
ரளந்ததிறைமுறைகொணராவரசனுளனொருவனென
வுளங்கொள்ளும்வகையுரைப்பவுறுவியப்பான்முறுவலிப்பார்.

(இ-ள்.) விளங்குதிருமதிக்குடைக்கீழ் = பொலிவுபெற்ற அழகியசந்திரன்போலும் குளிர்ச்சியைவிளைக்கும் குடைநிழலிலே; வீற்றிருந்துபாரளிக்கும் = அமர்ந்திருந்து அவனியைப்புரக்கின்ற; துளங்கொளிநீண்முடியார்க்கு = நிழலிடும் ஒளிநிரம்பிய நீண்டதிருமுடியையுடைய அரசர்க்கு; தொன்முறைமைநெறியமைச்சர் = தொன்றுதொட்ட ஒழுக்கம்வாய்ந்த மந்திரிமார்கள்; அளந்ததிறைமுறைகொணரா = வகுத்ததிறையை முறைப்படிகொண்டுவராத; அரசனொருவனுளனென வுளங்கொள்ளும் வகையுரைப்ப = அரசனொருவன் உள்ளானென்று உணரும்படியுரைப்ப; உறுவியப்பான்முறுவலிப்பார் = மிக்கவதிசயத்தோடு புன்முறுவலைவிளைப்பாராய்.—எ-று.

முறுவலிப்பார் - முற்றெச்சம். (௧௬)

ஆங்கவன்யாரென்றருளவதிகனவனணித்தாக
வோங்கெயில்சூழ்மலையரணத்துள்ளுறைவானெனவுரைப்ப

வீங்குறுமக்கெதிர்நிற்குமரணுளதோபடையெழுந்தப்
பாங்கரணந்துகளாகப்பற்றறுப்பீரெனப்பகர்ந்தார்.

(இ-ள்.) அவன்யாரென்றருள = அவன்யாவனென்று வினவியருள ; அவனதிகன் — அவன் அதிகனென்னும் பெயரையுடையவன் ; அணித்தாகவோங்கெயில்சூழ் மலையரணத்துள்ளுறைவானெனவுரைப்ப = இதற்குச்சமீபமாக உயர்ந்த மதில்சூழ்ந்த மலையரணத்திலே இருக்கின்றானென இயம்ப ; ஈங்குறுமக்கெதிர்நிற்குமரணுளதோ = இங்கே உங்கட்கு எதிரியாகநிற்கும் கோட்டையும் உளதோ; படையெழுந்து = சேனையோடு சென்று ; பாங்கரணந்துகளாகப் பற்றறுப்பீரெனப் பகர்ந்தார் = அருகிலுள்ள அம்மலையரண் துகள்படும்படி முற்றும் ஒழிப்பீரென்று மொழிந்தார்.—எ-று. ஆங்கு-அசை. (௧௭)

அடல்வளவனுணையினாலமைச்சர்களும்புறம்போந்து
கடலனையநெடும்படையைக்கைவகுத்துமேற்செல்வார்
படர்வனமுநெடுங்கிரியும்பயிலரணும்பொடியாக
மிடலுடைநாற்கருவியுறவெஞ்சமத்தைமிகவிளைத்தார்.

(இ-ள்.) அடல்வளவனுணையினாலமைச்சர்களும் புறம்போந்து = வெற்றிபெற்ற அந்நாயனாராக்கினையினால் மந்திரிமார்களும்வெளிப்பட்டு ; கடலனையநெடும்படையைக்கைவகுத்துமேற்செல்வார் = கடல்போலும் நெடியசேனையை அணிவகுத்து எதிர்ப்பாராகி; படர்வனமுநெடுங்கிரியும்பயிலரணும்பொடியாக = விரிந்தகாடுகளும் நெடியமலையும் அவன்பொருந்திய அரணும் பொடிபடும்படி; மிடலுடை நாற்கருவியுற = வன்மைபெற்ற ரதகஜதுரகபதாதிகளென்னும் நால்வகைச்சேனைகளைக்கொண்டு; வெஞ்சமத்தை மிகவிளைத்தார் = வெவ்வியபோரைமிகச் செய்தார்.—எ-று.

கைவகுத்தல் ஒருசொன்னீர்மைத்து. மேற்செல்வார் முற்றெச்சம். (௧௮)

வளவனார்பெருஞ்சேனைவஞ்சிமலர்மிலைந்தேற
அளவிலரணக்குறும்பினதிகர்கோனடற்படையு
முளநிறைவெஞ்சினந்திருகியுயர்காஞ்சிமிலைந்தேறக்
கிளர்கடல்களிரண்டென்னவிருபடையுங்கிடைத்தனவால்.

(இ-ள்.) வளவனார் பெருஞ்சேனை = புகழ்ச்சோழ நாயனாரது பொலிவுமிக்க சேனையானது; வஞ்சிமலர் மிலைந்தேற = வஞ்சிமாலைசூடி எதிர்க்க; அளவிலரண் = அளவுபடாத கோட்டையையுடைய; குறும்பினதிகர்கோனடற்படையும் = குறும்பசாதியிற்பிறந்த அதிகர்கோனது வெற்றிபெற்றபடையும்; உளநிறை வெஞ்சினந்திருகி = மனத்திலே நிறைந்த வெவ்வியகோபத்தால் மாறுபட்டு; உயர்காஞ்சி மிலைந்தேற = உயர்ந்த காஞ்சிமாலையைச்சூடி எதிர்த்தலும்; இருபடையுங் கிளர்கடல்களிரண்டென்னக் கிடைத்தன = இருசேனையும் கிளர்ச்சியுற்ற இரண்டு கடல்கள் போலக்கிட்டின. — எ-று.

வஞ்சி - பகைமேற் செல்வார்க்குரியமாலை. காஞ்சி படைமுன் எதிருன்றுஞ் சேவகர்க்குரியது. ஆல்-அசை. (௧௯)

வேறு.

கயமொத்துமதில் காப்போர் ... வயமுடனயமுனைமுட்டின
வயவர்கள். ... ஏ. அசை. ... வியனமர்வியலிடமிக்கதே.

(இ-ள்.) கயமொடு கயமெதிர்குத்தின = யானைகளோடு யானைகள் எதிரேகுத்தின; அயமுடனய முனைமுட்டின = குதிரைகளோடு குதிரைகள் போரிலே தாக்கின; வயவரும் வயவருமுற்றனர் = வீரரும் வீரருமெதிர்த்தனர்; வியனமர் வியவிடமிக்கது = இங்ஙனம்மிகுந்தபோர் விரிந்தபூமியிலே அதிகரித்தது. எ-று. ஏ-அசை. ()

மலையொடுமலைகண்மலைந்தென - வலைமதவருவிகொழிப்பொடு
சிலையினர்விசையின்மிசைத்தெற - கொலைமதகரிகொலையுற்றவே.

(இ-ள்.) அலைமதவருவி கொழிப்பொடு = அலைமோதும் மதவருவியைச் சொரிதலோடு; மலையொடு மலைகண் மலைந்தென = மலையோடு மலைகள் போர்புரிந்தாற்போல; சிலையினர் விசையின் மிசைத்தெற = மேலேறிய வில்வீரர் வேகத்தினும் மிக்குக்கொல்கின்ற; கொலைமதகரி கொலையுற்ற = கொலைத்தொழில் மிக்க மதயானைகள் ஒன்றையொன்று பொருது கொலையுண்டன. எ-று.

மலைந்தெனத்தெறும் மதகரியென இயையும். ஏ-அசை. (௨௧)

வேறு.

சூறைமாருதமொத்தெதி - ரேறுபாய்பரிவித்தகர்
வேறுவேறுதலைப்பெய்து - சீறியாவிசெகுத்தனர்.

(இ-ள்.) சூறைமாருத மொத்தெதிர் = சுழல்காற்றை நிகர்த்து எதிரேற்ற; பாய்பரியேறுவித்தகர் = பாய்தற்றொழிலையுடைய குதிரைகளிலுள்ள வீரர்கள்; வேறு வேறுதலைப்பெய்து = வெவ்வேறு எதிர்த்து; சீறியாவி செகுத்தனர் = சினந்து ஒருவரை யொருவர் மாய்த்தார். எ-று.

பாய்பரிகளை அவற்றிவர்ந்த வீரர்கள் எதிரெதிர் செகுத்தனரென்னலும் ஆம்.

மண்டுபோரின்மலைப்பவர் - துண்டமாயிடவுற்றெதிர்
கண்டராவிகழித்தன - ருண்டசோறுகழிக்கவே.

(இ-ள்.) மண்டுபோரின் மலைப்பவர் துண்டமாயிட = மிக்க யுத்தத்திலே சண்டைசெய்பவர் துண்டமாகும்படி: உற்றெதிர்கண்டர் = அணுகியெதிர்த்தவீரர்கள்; உண்டசோறுகழிக்க = தமதரசன்பாலருந்திய செஞ்சோற்றுக்கடன் கழிப்பதற்கு; ஆவிகழித்தனர் = தமதுயிரையுமிழந்தார். எ-று.

பகைவரையும் அழித்துத் தம்முயிரையும் இழந்தாரென்க. கண்டர் - பகைவரைத் துண்டிப்பவர். போரின்மலைப்பவர் பகைவருயிரை யொழித்தனர் எனினும் இயையும். ஏ-அசை. (௨௨)

வீடினருடலிற்பொழி - நீடுவார்குருதிப்புனல்
லோடும்யாறெனவொத்தது - கோடுபோல்வபிணக்குவை.

(இ-ள்.) வீடினருடலிற் பொழி = அழிந்தவர்களின் உடலிற்பொழியப்பட்ட; நீடுவார் குருதிப்புனல் = மிக்கவுதிரப்பெருக்கானது; ஓடும்யாறென வொத்தது = ஓடும் ஆற்றைப்போல நிகர்த்தது; பிணக்குவைகோடுபோல்வ = பிணப்பிணக்குவியல்கள் கரையையொத்தன.—எ-று. (௨௩)

வாணிலாவுகருங்கொடி - மேனிலா[illegible]த்தாக
மேனீள்கழுகின்குல - மானவூ[illegible]வானெனவ[illegible]

(இ-ள்.) வானிலாவுகருங்கொடி = ஆகாயத்திலுலவும் கரியகாக்கைகளும்; மேனிலாவு பருந்தினம் = மேலோங்கிப்பறக்கும் பருந்துக்கூட்டங்களும்; வினைநீள்கழுகின்குலம் = மற்றை நீண்ட கழுகின் கூட்டங்களும்; மானவூனொடெழுந்த = மாட்சிமைப்பட்ட ஊனுணவோடு பறந்தன. எ-று. ஏ-அசை. (௨௫)

வேறு.

வரிவிற்கதைசக்கரமுற்கரம்வாள்
சுரிகைப்படைசத்திகழுக்கடைவே
லெரிமுத்தலைகப்பணமெற்பயில்கோன்
முரிவுற்றனதுற்றனமொய்க்களமே.

(இ-ள்.) மொய்க்களம் = போர்க்களத்திலே; வரிவிற்கதை = கட்டப்பட்ட வில்லும் கதையும்; சக்கரமுற்கரம்வாள் = சக்கரமும் முற்கரமும் வாளும்; சுரிகைப்படை சத்தி கழுக்கடை = உடைவாளும் வேலும் சிறுசூலமும்; வேலெரிமுத்தலை = கைவேலும் அக்கினியைச்சொரியுஞ் சூலமும்; கப்பணம் = இரும்பினால் யானைநெருஞ்சில்முள் வடிவாகச்செய்த ஆயுதமும்; எற்பயில்கோன் முரிவுற்றன துற்றன = ஒளிபெற்ற அம்பும் முரிந்தனவாய் நெருங்கின. எ-று.

எற்பரிகோலென்பதும் பாடம். மொய்-போர். (௨௬)

வடிவேலதிகன்படைமாளவரைக்
கடிசூழரணக்கணவாயநிரவிக்
கொடிமாமதினீடுகுறும்பொறையூர்
முடிநேரியர்படைமுற்றியதே.

(இ-ள்.) வடிவேலதிகன் படைமாள = வடித்த வேற்படையையுடைய அதிகன் சேனைமடிதலும்; முடிநேரியர்படை = திருமுடியையுடைய புகழ்ச்சோழநாயனார் சேனைகள்; வரைக்கடிசூழரணக் கணவாய்நிரவி = மலையிலுள்ள காவலைக் கொண்ட கோட்டையோடு கணவாய்களையும் சமமாக்கி; கொடிமாமதினீடு குறும்பொறையூர் முற்றியது = கொடிநாட்டப்பட்ட பெரிய மதிலோங்கிய குறிஞ்சிநிலத்துள்ள அவ்வூரை வளைந்தது. எ-று.

கடி-காவல். கணவாய் - மலைகளுக்கு இடையிலுள்ள வழி. (௨௭)

முற்றுமபொருசேனைமுனைத்தலையிற்
கற்றிண்புரிசைப்பதிகட்டழியப்
பற்றுந்துறைநொச்சிபரிந்துடையச்
சுற்றும்படைவீரர்துணித்தனரே.

(இ-ள்.) சுற்றும் படைவீரர் = சூழ்ந்துகொண்ட படைவீரர்கள்; கற்றிண்புரிசைப்பதிகட்டழிய = வலிய மலையரணைக்கொண்ட குறிஞ்சிநிலத்தூர் முற்றும் தம்மாமடிய; முற்றும் பொருசேனை = அதிகன்வேலிக்க அமர்செய்தற்குரிய சேனைகளை; முனைத்தலையில் = யுத்தத்தினிடத்தே; பற்றுந் துறைநொச்சி பரிந்துடையத் துணித்தனர் = அவர்சூடிய கூறுபட்ட நொச்சிமாலை அறுபட்டுத் தோல்வியுற அவரைச் சேதித்தார். எ-று.

வீரர் முற்றுஞ்சேனையைத் துணித்தனர் என இயையும். நொச்சி மாற்றார்க்கு எதிருன்றித் தம்மதில் காப்போர்க்குரிய மாலை; அது பலதிறப்படுதலின் "துறை நொச்சி" என்றார். ஏ. அசை. (௨௮)

மாறுற்றவிறற்படைவாளதிக
னாறுற்றபெரும்படைநூழில்படப்
பாறுற்றவெயிற்பதிபற்றறவிட்
டேறுற்றனனோடியிருஞ்சுரமே.

(இ-ள்.) வாளதிகன்=வாளேந்திய அதிகனென்பவன்; மாறுற்றவிறற்படை = விரோதித்து எதிர்த்த வெற்றிபெற்ற சேனைகளையெல்லாம்; நூறுற்ற பெரும்படைநூழில்பட=அழித்துவென்ற தனதுபெருஞ்சேனைகள் இப்பொழுது கொல்லப்படுதலால்; பாறுற்ற வெயிற்பதி பற்றறவிட்டு = அழிவடைந்த தனது மதில்சூழ்ந்த நகரை ஆசையற விடுத்து; இருஞ்சுரமோடி யேறுற்றனன் = பெரிய ஒரு சுரத்திலே ஓடி யொளித்தனன். எ-று. ஏ-அசை.

சுரம் அருநெறி; பாலையென்னலும் ஒன்று. மூந்தியபடை ஆயுதமுமாம். (உ௧)

அதிகன்படைபோர்பொருதற்றதலைப்
பொதியின்குவையெண்ணிலபோயினபி
னிதியின்குவைமங்கையர்நீள்பரிமா
வெதிருங்கரிபற்றினரெண்ணிலரோ.

(இ-ள்.) அதிகன்படை = அதிகன்படையிலே; போர்பொருதற்ற தலைப்பொதியின் குவை = போர்புரிந்து வெட்டுண்ட தலைப்பொதிகளின் கூட்டம்; எண்ணில போயினபின் = அளவிறந்தன அனுப்பியபின்பு; நிதியின்குவை மங்கையர் நீள் பரிமா = திரவியக்குவியல்களும் பெண்களும் சிறந்த குதிரைகளும்; எதிருங்கரி = யுத்தத்திலே சீறிச்செல்லும் யானைகளுமாகிய இவற்றை; எண்ணிலர் பற்றினர்= அநேகர் கவர்ந்தார். எ-று. ஏ-அசை. (௩௦)

அரண்முற்றியெதிர்ந்தவமைச்சர்கடா
மிரணத்தொழில்விட்டெயில்சூழ்கருவூர்
முரணுற்றசிறப்பொடுமுன்னினர்நீ
டரணித்தலைவன்கழல்சார்வுறவே.

(இ-ள்.) அரண்முற்றியெதிர்ந்த வமைச்சர்கள் = மலையரணைவளைந்து எதிர்த்த மந்திரிகள்; இரணத்தொழில்விட்டு = (வெற்றிபெற்றமையால்) போர்த்தொழிலை விடுத்து; நீடரணித்தலைவன் கழல்சார்வுற = நீண்ட நிலவுலகையாளும் அரசரது திருவடிகளை அடைதற்பொருட்டு; முரணுற்ற சிறப்பொடு = வலிமைமிக்க மேன்மையோடும்; எயில்சூழ்கருவூர் முன்னினர் = மதில்சூழ்ந்த கருவூரை அடைந்தார். எ-று. தாம் ஏ-அசைகள். இரணம்-போர். முரண்-வலி. (௩௧)

மன்னுங்கருவூர்நகர்வாயிலின்வாய்
முன்வந்தகருந்தலைமொய்குவைதா
மின்னுஞ்சுடர்மாமுடிவேல்வளவன்
றன்முன்புகொணர்ந்தனர்தானையுளோர்.

(இ-ள்.) மன்னுங்கருவூர் நகர்வாயிலின்வாய் = நிலைபெற்ற கருவூரென்னும் நகரத்தினது வாயிலின்கண்ணே; முன்வந்த கருந்தலை மொய்குவை = முன்கொண்டுவந்த கரியதலைகள்செறிந்த பொதிகளை; மின்னுஞ்சுடர் மாமுடிவேல் = பிரகாசிக்

கும் காந்தியையுடைய பெருமுடியையும் வேற்படையையுமுடைய; வளவன்றன் முன்பு தானையுளோர் கொணர்ந்தனர் = புகழ்ச்சோழநாயனார்முன்பு சேனைகளாயுள்ளவர் கொண்டுவந்தார். எ-று. தான்-அசை. (௯௨)

மண்ணுக்குயிராமெனுமன்னவனா
ரெண்ணிற்பெருகுந்தலையாவையினு
நண்ணிக்கொணருந்தலையொன்றினடுக்
கண்ணுற்றதொர்புன்சடைகண்டனரே.

(இ-ள்.) மண்ணுக்குயிராமெனு மன்னவனார் = இவ்வுலகிலுள்ளார்க்கு உயிர் போல்வாரென்னும் அந்நாயனார்; நண்ணிக்கொணரும் = பகைவனது அரணையடைந்து கொண்டுவந்த; எண்ணிற்பெருகுந் தலையாவையினும் = அளவிறந்த தலைகளுள்ளும்; தலையொன்றினடு = ஒருதலையின்நடுவே; கண்ணுற்றதொர்புன்சடைகண்டனர் = தம்மாற் சிந்திக்கப்படுவதாகிய ஒருசிறிய சடையைக்கண்டார். எ-று.

மண். ஆகுபெயர். கண்ணுதல்-சிந்தித்தல். சிவசின்னங்களில் ஒன்றாகத் தினமும் சிந்திக்கப்படுவதென்பார் "கண்ணுற்றதொர் புன்சடை" என்றார். ஏ-அசை. ()

வேறு.

கண்டபொழுதேநடுங்கிமனங்கலங்கிக்கைதொழுது
கொண்டபெரும்பயத்தினுடன்குறித்தெதிர்சென்றதுகொணர்ந்த
திண்டிறலோன்கைத்தலையிற்சடைதெரியப்பார்த்தருளிப்
புண்டரிகத்திருக்கண்ணீர்பொழிந்திழியப்புரவலனார்.

(இ-ள்.) கண்டபொழுதே நடுங்கி மனங்கலங்கிக் கைதொழுது = பார்த்தமாத்திரத்தே நடுக்கமடைந்து சிந்தைதியங்கிக் கரங்குவித்து வணங்கி; கொண்டபெரும் பயத்தினுடன் குறித்தெதிர்சென்று = அதிகரித்த பயத்தோடு அதை நோக்கிக்கொண்டு எதிர்போந்து; அதுகொணர்ந்த திண்டிறலோன் கைத்தலையில் = அது கொண்டுவந்த மிக்கவலிமையனது கரத்திலுள்ள அத்தலையிலே; சடை தெரியப்பார்த்தருளி = சடையை விளங்கநோக்கி; புண்டரிகத் திருக்கண்ணீர் பொழிந்திழியப் புரவலனார் = செந்தாமரை மலர்போலுந் திருக்கண்களிலே நீர்பொழியப்பட்டிழிய அந்நாயனார். எ-று.

பொழியப்பட்டென்னும் செயப்பாட்டுவினை செய்வினையாய் நின்றது. (௯௩)

முரசுடைத்திண்படைகொடுபோய்முதலமைச்சர்முனைமுருக்கி
யுரைசிறக்கும்புகழ்வென்றியொன்றொழியவொன்றுமற்
றிரைசரித்தகடலுலகிற்றிருநீற்றினெறிபுரிந்தியா
னரசளித்தபடிசாலவழகிதெனவழிந்தயர்வார்.

(இ-ள்.) முதலமைச்சர் = முதன்மைபெற்ற மந்திரிகள்; முரசுடைத்திண் படைகொடுபோய் = வெற்றிமுரசையுடைய வலியசேனைகளைக் கொண்டுசென்று; முனைமுருக்கி = பகையை யழித்தலால்; உரைசிறக்கும்புகழ்வென்றியொன்றொழிய = பிறரால் புகழப்படும் பிரதாபவெற்றியொன்றுதவிர; ஒன்றுமல் = பிறிதொருபயனும் பெறாமல்; திரைசரித்தகடலுலகில் = அலைதவழுங்கடல்சூழ்ந்த அவனியிலே; யான் திருநீற்றினெறிபுரிந் தரசளித்தபடி = யான் திருநீற்று நெறியைப் பாதுகாத்து அரசைச் செலுத்தியவகை; சாலவழகிதென வழிந்தயர்வார் = நனி அழகியதென்று தம்வசமிழந்து தளர்வார். எ-று.

முருக்கி-வினையெச்சத்திரிபு. சத்துருக்களைவென்ற வெற்றியொன்றேயன்றிச் சன்மார்க்கநெறியொன்றுஞ் சார்ந்திலனென்பார், "திருநீற்றினெறிபுரிந்தியானரசளித்தபடி சாலவழகிது" எனத் தம்மைத்தாமே சாலப்பழித்தாரென்க. (௯௪)

தார்தாங்கிக்கடன்முடித்தசடைதாங்குந்திருமுடியார்
நீர்தாங்குஞ்சடைப்பெருமானெறிதாங்கண்டவாறன்றோ
சீர்தாங்குமிவர்வேணிச்சிரந்தாங்கிவரக்கண்டும்
பார்தாங்கவிருந்தேனோபழிதாங்குவேனென்றார்,

(இ-ள்.) தார்தாங்கிக் கடன்முடித்த = அமர்க்குரிய மாலையை வேய்ந்து அரசனுக்குச் செஞ்சோற்றுக் கடன்முடித்த; சடைதாங்குந் திருமுடியார் = சடைமுடியையுடைய இவர்; நீர்தாங்குஞ் சடைப்பெருமானெறிகண்டவராறன்றோ = கங்கையையேந்திய சடைமுடியையுடைய கடவுளின் நிலைமையைக் கண்டவராயிருக்கின்றார்; சீர்தாங்குமிவர் வேணிச்சிரந்தாங்கி வரக்கண்டும் = தகுதிபெற்ற இவருடையசடைமுடியைத் தாங்கிவரப்பார்த்தும்; பழிதாங்குவேன் பார்தாங்க விருந்தேனோ வென்றார் = இகழ்வைத்தாங்குவேனாகிய யான் இப்பூமியைத்தாங்க இருந்தேனோ என்றார். எ-று.

அதிகனுக்குச் செஞ்சோற்றுக் கடன்முடித்த இவர் சடைமுடியுடையராகலின் சிவபத்தியிற் சிறந்தவராயினார்:இத்தகையார் சிரசைக்கொய்துகொண்டுவரக்கண்டும் சுமந்தயான் இப்பூமியைத்தாங்குவேனோ, இப்பொழுதே இப்பாவம்நீங்க உயிர்விடுவேனெனக் குறித்தாரென்க. எனவே; தீராப்பாவங்கட்கு உயிர்விடுகையே பரிகாரம் என்றவாறு. கண்டும் என்னும் உம்மை இழிவு சிறப்பு. தாம் அசை. (௩௬)

என்றருளிச்செய்தருளியிதற்கிசையுமபடி துணிவார்
நின்றநெறியமைச்சர்க்குநீணிலங்காத்தரசளித்து
மன்றினடம்புரிவார்தம்வழித்தொண்டின்வழிநிற்ப
வென்றிமுடியென்குமரன்றனைப்புனைவீரெனவிதித்தார்.

(இ-ள்.) என்றருளிச்செய்தருளி யிதற்கிசையும்படித்துணிவார் = இங்ஙனம் அருளிச்செய்து இதற்குத் தக்கபரிகாரம் இயற்றத்துணிந்த அச்சோழர்குலக்குரிசிலார்; நீணிலங்காத் தரசளித்து = நீண்டபூமியைப் புரந்து அரசைச்செலுத்திக்கொண்டு; மன்றினடம்புரிவார்தம் = சிற்சபையிலே திருநிருத்தம்செய்தருள்வாராகிய சிவபெருமானுக்குரிய; வழித்தொண்டின்வழிநிற்ப = பரம்பரைத்தொண்டின் வழியே நிற்கும்படி; வென்றிமுடி யென்குமரன்றனைப் புனைவீரென = வெற்றிபெற்றமுடியை என்புதல்வனுக்குச் சூட்டுவீராகவென்று; நின்றநெறியமைச்சர்க்குவிதித்தார் = எதிர்நின்ற ஒழுக்கமிக்க மந்திரிமார்களுக்கு ஆஞ்ஞாபித்தார். எ-று.

குமரன்றனை வேற்றுமைமயக்கம். குமரனைப் புனையச்செய்வீரெனினும் அமையும். (௩௭)

அம்மாற்றங்கேட்டழியுமமைச்சரையுமிடரகற்றிக்
கைம்மாற்றுஞ்செயறாமேகடனாற்றுங்கருத்துடையார்
செம்மார்க்கந்தலைநின்றுசெந்தீமுன்வளர்ப்பித்துப்
பொய்ம்மாற்றுந்திருநீற்றுப்புனைகோலத்தினிற்பொலிந்தார்.

(இ-ள்.) அம்மாற்றங் கேட்டழியு மமைச்சரையு மிடரகற்றி = அவ்வுரைகேட்டு மிகவருந்தும் மந்திரிமார்களையும் பிறரையும் அல்லலினீக்கி; கைம்மாற்றுஞ் செயல் = தமக்குநேர்ந்த சிறுமையைப்போக்குந் தொழிலை; தாமேகடனாற்றுங் கருத்துடையார் = தாமே உரிமையாகப் புரியுஞ்சிந்தனை யுடையராய்; செம்மார்க்கந்தலைநின்று = செம்மைநெறியிலே நிலைபெற்று; செந்தீமுன் வளர்ப்பித்து = செவ்விய அக்கினியைத் தமக்குமுன்பாக வளர்க்கச்செய்வித்து; பொய்ம்மாற்றுந் திருநீற்றுப் புனைகோலத்தினிற் பொலிந்தார் = பொய்மையை யொழிக்கும் திருநீற்றைப்புனைந்த கோலத்தோடுவிளங்கினார். எ-று. பொய்ம்மாற்றல் - மெய்த்தொண்டுடையராக்கல்.

கண்டசடைச்சிரத்தினையோர்கனகமணிக்கலத்தேந்திக்
கொண்டுதிருமுடிதாங்கிக்குலவுமெரிவலங்கொள்வா
ரண்டர்பிரான்றிருநாமத்தஞ்செழுத்துமெடுத்தோதி
மண்டுதழற்பிழம்பினிடைமகிழ்ந்தருளியுள்புக்கார்.

(இ-ள்.) கண்டசடைச்சிரத்தினையோர் கனகமணிக்கலத்தேந்தி = தாம்கண்ட சடைமுடியை மணிகளிழைத்த ஒரு பொற்பாத்திரத்திலேந்தி; கொண்டு திருமுடிதாங்கி = திருமுடியிலே தாங்கிக்கொண்டு; குலவுமெரி வலங்கொள்வார் = பிரகாசிக்கும் அக்கினியைப்பிரதக்ஷிணஞ்செய்வாராகி; அண்டர்பிரான்றிருநாமத் தஞ்செழுத்து மெடுத்தோதி = தேவநாயகரது திருநாமங்களுள்ளே சிறந்தபஞ்சாக்ஷரங்களையுமுங்க உச்சரித்துக்கொண்டு; மண்டுதழற் பிழம்பினிடை = சுவாலித்தெழுகின்ற அக்கினித் திரட்சியிலே; மகிழ்ந்தருளி யுள்புக்கார் = உவகையோடும் உள்ளே பிரவேசித்தார். எ-று. வலங்கொள்வார முற்றெச்சம். (கூகூ)

புக்கபொழுதலர்மாரிபுவிநிறையப்பொழிந்திழிய
மிக்கபெருமங்கலதூரியம்விசும்பின்முழக்கெடுப்பச்
செக்கர்நெடுஞ்சடைமுடியார்சிலம்பலம்புசேவடியி
னக்கருணைத்திருநிழற்கீழாராமையமர்ந்திருந்தார்.

(இ-ள்.) புக்கபொழு தலர்மாரிபுவிநிறைய = உள்ளேபுகுந்தபொழுது புஷ்ப வருஷம் பூமிநிறையும்படி; பொழிந்திழிய = (தேவர்களாற்) சொரியப்பட்டிழிய; மிக்க பெருமங்கல தூரியம் விசும்பின் முழக்கெடுப்ப = அரியமங்கலவாத்தியங்கள் ஆகாயத்திலே ஒலிக்க; செக்கர் நெடுஞ்சடை முடியார் = செவ்வானம்போலுஞ் சிவந்த நெடிய சடைமுடியராகிய சிவபெருமானுடைய; சிலம்பலம்பு சேவடியின் = சிலம்புகள் ஒலிக்கும் செவ்விய திருவடிகளிலே; அக்கருணைத் திருநிழற்கீ ழாராமையமர்ந்திருந்தார் = அந்த கருணையாகிய திருநிழலின்கீழ் கலவாமற் கலந்திருந்தார். எ-று.

பொழிந்து பொழியப்பட்டு. சேவடிகளிரண்டும் திருவருண்மயமாகலின் அத்திருவருட் பெருக்கைத் திருநிழலென உருவகித்தார். கலவாமற் கலந்தல்-இரண்டறக்கலத்தல். (சo)

முரசங்கொள்கடற்றானைமூவேந்தர்தங்களின்முன்
பிரசங்கொணறுந்தொடையற்புகழ்ச்சோழர்பெருமையினைப்
பரசுங்குற்றேவலினலவர்பாதம்பணிந்தேத்தி
நரசிங்கமுனையர்திறநாமறிந்தபடியுரைப்பாம்.

(இ-ள்.) முரசங்கொள் கடற்றானை மூவேந்தர் தங்களின்முன் = மூவகை முரசைக்கொண்ட கடல்போலுஞ் சேனைகளையுடைய மூவரசர்களுள்ளே முதன்மை பெற்ற; பிரசங்கொணறுந் தொடையல் = தேன்செறிந்த பரிமளமிக்க திரு ஆத்தி மாலையை யணிந்த; புகழ்ச்சோழர் பெருமையினைப் பரசுங்குற்றேவலின் = புகழ்ச்சோழநாயனார் மேன்மையைப்புகழுந் தொண்டினால்; அவர் பாதம் பணிந்தேத்தி = அவர் திருவடிகளை வணங்கித்துதித்து; நரசிங்க முனையர்திறம் = நரசிங்கமுனையரைய நாயனார் சரித்திரத்தை; நாமறிந்த படியுரைப்பாம் = யாம் உணர்ந்த வகையே இசைப்பாம். எ-று. மும்முரசு-மங்கலமுரசு-வெற்றிமுரசு-கொடைமுரசு. மூவேந்தர்-சேரசோழபாண்டியர். (சக)

## புகழ்ச்சோழநாயனார்புராணம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - அ௨அ.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நரசிங்கமுனையரைய நாயனார் புராணம்.

கோடாதநெறிவிளங்குங்குடிமரபினரசளித்து
மாடாகமணிகண்டர்திருநீறேமனங்கொள்வார்
தேடாதபெருவளத்திற்சிறந்ததிருமுனைப்பாடி
நாடாளுங்காவலனார்நரசிங்கமுனையரையர்.

(இ-ள்.) கோடாதநெறிவிளங்குங் குலமரபினரசளித்து = மாறுபடாத நீதியோடு விளங்கும் குறுநிலமன்னவர் குலத்திலுதித்து அரசுரிமையைக்கொண்டு; மணிகண்டர்திருநீறே மாடாகமனங்கொள்வார் = நீலகண்டத்தராகிய நிமலரது விபூதியையே செல்வமாக மனதிலே சிந்திப்பவர்; தேடாதபெருவளத்திற் சிறந்த திருமுனைப்பாடி நாடாளுங் காவலனார் = தேடமுடியாத மிக்கவளங்களோடு சிறப்புற்ற திருமுனைப்பாடி நாட்டையாளும் அரசர்; நரசிங்கமுனையரையர் = நரசிங்கமுனையரையரென்னும் திருநாமத்தை யுடையவர். எ-று.

மாடு-ஐசுவரியம். ஏகாரம்-பிரிநிலை. (க)

இம்முனையர்பெருந்தகையாரிருந்தரசுபுரிந்துபோய்த்
தெம்முனைகள்பலகடந்துதீங்குநெறிப்பாங்ககல
மும்முனைநீளிலைச்சூலமுதற்படையார்தொண்டுபுரி
யம்முனைவரடியடைவேயரும்பெரும்பேறெனவடைவார்.

(இ-ள்.) இம்முனையர் பெருந்தகையார் = இப்பெருஞ்சிறப்புடைய நாயனார்; அரசுபுரிந்திருந்து = அரசைச்செலுத்திக்கொண்டிருந்து; போய்த் தெம்முனைகள் பலகடந்து = போந்து பலபகைவர்களைப் போரில்வென்று; தீங்குநெறிப்பாங்ககல= தீயநெறியாயுள்ள செயல்களொழிய; இலைமும்முனை நீள்சூல முதற்படையார் = தகட்டுவடிவினதாய் முத்தலைகளையுடைய நீண்டமுதன்மைபெற்ற சூலாயுதத்தராகிய சிவபெருமானுக்குரிய; தொண்டுபுரியம்முனைவரடியடைவே = தொண்டுகளைப்புரிகின்ற அவ்வடியவர்களுடைய திருவடிகளையடைதலே; அரும்பெரும்பேறெனவடைவார்=அரியபெரிய ஐசுவரியமென்று அவரையே அடைக்கலமாக அடைவார். எ-று.

பாங்ககல அடைவாரென இயையும். (உ)

சினவிடையார்கோயிறொறுந்திருச்செல்வம்பெருக்குநெறி
யனவிடையாருயிர்துறக்கவருமெனினுமவைகாத்து
மனவிடையாமைத்தொடையலணிமார்பர்வழித்தொண்டு
கனவிடையாகிலும்வழுவாக்கடனாற்றிச்செல்கின்றார்.

(இ-ள்.) சினவிடையார் கோயிறொறும் = வெகுளுதலையுடைய இடபவாகனத்தராகிய விமலர் ஆலயங்கள்தோறும்; திருச்செல்வம்பெருக்குநெறியனவிடை = சிறந்த ஐசுவரியங்களைப் பெருக்குதற்கரிய செயல்களிலே; ஆருயிர் துறக்கவருமெனினு மவைகாத்து = அரிய வுயிரை இழக்கநேரினும் அந்நெறிகளையே பாதுகாத்து; மனவிடை யாமைத்தொடையலணி = எலும்பு மணிகளினிடையே ஆமையோட்



நரசிங்கமுனையரையநாயனர்.

டைக்கோத்த மாலையையணிந்த; மார்பர்வழித்தொண்டு = மார்பராகிய சிவபிரானது பரம்பரைத்தொண்டிலே; கனவிடையாகிலும் வழுவாக்கடனாற்றிச் செல்கின்றார் = சொப்பனத்திலும் சோர்விலாது அநுட்டிக்கும் முறைமையைமேற்கொண்டு ஒழுகுவார். எ-று.

*"சங்கராலயத்திற்றவநுறினேசாகத்தாந்துணிந்தழிகைபாவகே,யவரமலன் புரியதனைச் சார்வார்." என்பது சிவாகமநூற்றுணிபாகலின் "கனவிடையார்கோயிற்றுந்திருச்செல்வம்பெருக்குநெறியனவிடையாருயிர்துறக்கவருமெனினுமவைகாத்துச்செல்கின்றார்" என்றாரென்க. இரண்டாமடியிலுள்ள இடை ஏழனுருபு.

ஆறணிந்தசடைமுடியார்க்காதிரைநாடொறுமென்றும்
வேறுநிறைவழிபாடுவிளங்கியபூசனைமேவி
நீறணியுந்தொண்டரணைந்தார்க்கெல்லாநிகழ்பசும்பொ
னூறுகுறையாமலளித்தின்னமுதுநுகர்விப்பார்.

(இ-ள்.) ஆறணிந்த சடைமுடியார்க்கு = கங்கையைத்தரித்த சடைமுடியையுடைய கடவுளுக்கு; என்றும் ஆதிரைநாடொறும் = எக்காலத்தும் திருவாதிரைநக்ஷத்திரந்தோறும்; வேறுநிறை வழிபாடு விளங்கிய பூசனைமேவி = வேறு சிறந்தவழிபாடாகிய விசேட பூசையை இயற்றி; நீறணியுந் தொண்டரணைந்தார்க்கெல்லாம் = திருநீற்றையணியும் அடியவர்களாய்ச் சேர்ந்தவர்களுக்கெல்லாம்; நிகழ்பசும்பொனூறுகுறையாமலளித்து = மாற்றுயர்ந்த செம்பொன் நூறுக்குக்குறையாமற் கொடுத்து; இன்னமுது நுகர்விப்பார் = இனியதிருவமுதை உண்பிப்பார். எ-று. (௪)

ஆனசெயன்முறைபுரிவாரொருதிருவாதிரைநாளின்
மேன்மைநெறித்தொண்டர்க்குவிளங்கியபொன்னிடும்பொழுதின்
மானநிலையழிதன்மைவருங்காமக்குறிமலர்ந்த
வூனநிகழ்மேனியராயொருவர்நீறணிந்தணைந்தார்.

(இ-ள்.) ஆனசெயன் முறைபுரிவார் = அங்ஙனம் அத்திருத்தொண்டைக் கிரமமாகச் செய்யும் அந்நாயனார்; ஒரு திருவாதிரைநாளில் = ஒருதிருவாதிரைநக்ஷத்திரத்திலே; மேன்மை நெறித்தொண்டர்க்கு = செவ்விய ஒழுக்கமுடைய திருத்தொண்டர்கட்கு; விளங்கியபொன்னிடும் பொழுதில் = உயர்ந்தபொனனைக் கொடுத்துவரும்பொழுது; மானநிலையழிதன்மைவரும் = மானநிலைமை அழியுமியல்பு வளர்தற்கேதுவாகிய; காமக்குறிமலர்ந்த வூனநிகழ்மேனியராய் = தூர்த்தவேடம்வாய்ந்த குற்றம்பெற்ற வடிவத்தையுடையராய்; ஒருவர் நீறணிந்தணைந்தார் = ஒருவர் விபூதியணிந்துகொண்டு உற்றார். எ-று.

வருங்காமக்குறியெனக் காரியத்தைக் காரணமாக வுபசரித்தார். (௫)

மற்றவர்தம்வடிவிருந்தபடிகண்டுமருங்குள்ளா
ருற்றவிகழ்ச்சியராகவொதுங்குவார்தமைக்கண்டு
கொற்றவனாரெதிர்சென்றுகைகுவித்துக்கொடுபோந்தப்
பெற்றியினார்தமைமிகவுங்கொண்டாடிப்பேணுவார்.

* சிவதருமோத்தரம் பரிகாரவியல்.

(இ-ள்.) அவர்தம்வடிவிருந்தபடி கண்டு = உற்றஅவருடைய உருவமிருந்ததன்மையை நோக்கி; மருங்குள்ளாருற்ற விகழ்ச்சியராக = அருகிலுள்ளவர்கள் பெரிதும் அவமதிப்பாராக; ஒதுங்குவார்தமைக்கண்டு = அதுகண்டு ஒதுங்குவாராகிய அவரைப்பார்த்து; கொற்றவனெதிர்நின்று கைகுவித்துக்கொண்டுபோந்து = அந்நாயனார் எதிர்நின்று அஞ்சலிசெய்து அழைத்துக்கொண்டுபோய்; அப்பெற்றியினார் தமை மிகவுங் கொண்டாடிப்பேணுவார் = அத்தன்மையரை மிகுதியும்பாராட்டி உபசரிப்பாராயினர். எ-று. மற்று அசை. (௬)

சீலமிலரேயெனினுந்திருநீறுசார்ந்தாரை
ஞாலமிகழ்ந்தருநரகநண்ணுமலெண்ணுவார்
பாலணைந்தார்தமக்களித்தபடியிரட்டிப்பொன்கொடுத்து
மேலவரைத்தொழுதினியமொழிவிளம்பிவிடைகொடுத்தார்.

(இ-ள்.) சீலமிலரேயெனினுந் திருநீறுசார்ந்தாரை = ஒழுக்கமில்லாதவரேயாயினும் திருநீறணிந்தவரை; ஞாலமிகழ்ந்தருநரகநண்ணுமல் = அவனியிலுள்ளார் அவமதித்து அரியநரகத்தை அடையாமல்; எண்ணுவார் = அவரிடத்துள்ள திருநீற்றின்கோலமே முக்கியமெனச் சிந்தித்த அவர்; பாலணைந்தார் தமக்களித்தபடி யிரட்டிப்பொன்கொடுத்து = அருகில் வந்துள்ளவர்களுக்குக் கொடுத்த அளவினும் இருமடங்குபொன் ஈந்து; மேலவரைத்தொழுதினியமொழிவிளம்பிவிடைகொடுத்தார் = பின்பு அவரைவணங்கி இன்சொற்கூறி அனுப்பினர். எ-று.

'மன்னனெப்படி மன்னுயிரப்படி' என்றவாறே அரசர் பெருந்தகையாகிய இந்நாயனார் இங்ஙனம் வழிபடக்கண்ட இவ்வுலகினரும் இங்ஙனமே பாராட்டி வழிபடுவராகலின் இவர் சிந்தனை உலகுய்தற்கேதுவாயிற் றென்பார் "சீலமிலரேயெனினுந் திருநீறுசார்ந்தாரை ஞாலமிகழ்ந்தருநரகநண்ணுமலெண்ணுவார்" என்றார். இங்ஙனம் பாராட்டுதலை,"எவரேனுந் தாமாக விலாடத் திட்ட திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி, யுவராதே யவரவரைக் கண்டபோது வுகந்தடிமைத் திறநினைந்தங்குவந்து நோக்கி, யிவர்தேவ ரவர்தேவ ரென்று சொல்லி யிரண்டாட்டா தொழிந்தீசன் றிறமே பேணிக்,கவராதே தொழுமடியார நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே" என்னும் திருநாவுக்கரசுநாயனார் தேவாரத்தானுந்தெளிக. ஏகாரம்-தேற்றம். உம்மை. உயர்வுசிறப்பு. ஞாலம் ஆகுபெயர், படி-விதம். (௭)

இவ்வகையேதிருத்தொண்டினருமைநெறியெந்நாளுஞ்
செவ்வியவன்பினிலாற்றித்திருந்தியசிந்தையராகிப்
பைவ்வளர்வாளரவணிந்தார்பாதமலர்நிழற்சேர்ந்து
மெய்வ்வகையவழியன்பின்மீளாதநிலைபெற்றார்.

(இ-ள்.) மெய்வகைய வழியன்பின் = உண்மையியல்புடையதாய்ப் பரம்பரையாகத் தொடர்ந்த அன்பினால்; இவ்வகையே யருமைத்திருத்தொண்டினெறி = இவ்வாறே அருமைத் திருத்தொண்டினெறிகளை; எந்நாளுஞ் செவ்விய வன்பினிலாற்றி = எக்காலமும் சிறந்த பத்தியோடியற்றி; திருந்திய சிந்தையராகி = அதனாலே ஞானமயமாகிய சித்தத்தையுடையராகி; பைவளர் வாளரவணிந்தார் = படம்வளர்

ந்த ஒளிவாய்ந்த பாம்பையணிந்த பரமரது; மலர்ப்பாத நிழற்சேர்ந்து = மலர்போலும் திருவடிநீழலை அடைந்து; மீளாத நிலைபெற்றார் = பின்னர்த்திரும்பாத பேரின்ப நிலைமையைப் பெற்றார். எ-று.

ஏகாரம் தேற்றம். பதமுத்திபெற்றோரேயன்றித் திருவடிப்பேறாகிய பரமுத்தி பெற்றோர் பின்னர் மீளாராகலின் "மீளாநிலைபெற்றார்" என்றார். * "பேராவியற்கை" என இங்ஙனமே பெரியாரும் பணித்தார். இப்பேறு பெறுதற்கேதுவாயதுமெய் வகைய வழியன்பு என்றபடி. (அ)

விடநாகமணிந்தபிரான்மெய்த்தொண்டுவிளைந்தநிலை
யுடனாகுநரசிங்கமுனையர்பிரான்கழலோதித்
தடநாகமதஞ்சொரியத்தனஞ்சொரியுங்கலஞ்சேரும்
கடனாகையதிபத்தர்கடனாகைக்கவினுரைப்பாம்.

(இ-ள்.) விடநாகமணிந்தபிரான் = நஞ்சத்தையுடைய நாகத்தையணிந்த நம் பெருமானது; மெய்த்தொண்டு விளைந்த நிலையுடனாகும் = உண்மைத்தொண்டு உதிக்கப்பெற்ற நிலைமை தொன்றுதொட்டே யமைந்த; நரசிங்கமுனையர்பிரான்கழலோதி = நரசிங்கமுனையரைய நாயனாரது திருவடிகளைத் துதித்து; தடநாகமதஞ்சொரிய = (தம்பால் வந்திறங்கும்) பெருமைபெற்ற யானைகள் மதநீரைப்பொழிய; தனஞ்சொரியுங் கலஞ்சேரும் = தாம் திரவியங்களைப் பொழிகின்ற மரக்கலங்கள் நெருங்கிய; கடனாகை=கடற்கரையிலுள்ளநாகைப்பட்டணத்தில் அவதரித்த; அதிபத்தர் கடனாகைக் கவினுரைப்பாம்=அதிபத்த நாயனாருடைய நியமமாதற் சிறப்பை அறைவாம். எ-று.

யானைகளும் தனங்களும் ஒருங்குவந்திறங்குங் கலமென்றவாறு. தலஞ்சொரியுமென்பது பாடமேல் யானைகள் மதஞ்சொரியத் துறைகளிலிறக்கும் கலமென்க. ஆகை ஆதலென் றுந் தொழிற்பெயர். (௯)

## நரசிங்கமுனையரைய நாயனார்புராணம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - அ௬௭.

திருச்சிற்றம்பலம்.

* திருக்குறள் - ௬௭0 - ஆராவியற்கை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அதிபத்தநாயனார்புராணம்.

மன்னிநீடியசெங்கதிரவன்வழிமரபின்
றொன்மையாமுதற்சோழர்தந்திருக்குலத்துரிமைப்
பொன்னிநாடெனுங்கற்பகப்பூங்கொடிமலர்போ
னன்மைசான்றதுநாகபட்டணத்திருநகரம்.

(இ-ள்.) மன்னிநீடிய செங்கதிரவன் வழிமரபின் = நிலைபெற்றோங்கிய சூரியவமிசத்திலே; தொன்மையா முதற்சோழர்தந்திருக்குலத்துரிமை = தொன்றுதொட்டதாகியமுதன்மைபெற்றசோழகுலத்துக்கு உரிமையமைந்த;பொன்னிநாடெனுங் கற்பகப்பூங்கொடி மலர்போல் = காவிரிநாடென்கின்ற கற்பகப்பூங்கொடியின் மலர்போல்; நன்மைசான்றது நாகபட்டணத்திருநகரம் = சிறப்பைப்பெற்றது நாகபட்டணம் என்னும் திருநகரம். எ-று.

கற்பகப்பூங்கொடிபோல இதுவும் வேண்டியவர்க்கு வேண்டியவைஅளிப்பதென்பார் "பொன்னிநாடெனுங் கற்பகப்பூங்கொடி" என்றும்,கொடிக்கு மலர்சிறத்தல்போல இந்நாட்டிற்கு இது சிறந்ததென்பார் "நன்மைசான்றது நாகபட்டணத்திருநகரம்" என்றும் கூறினார். (க)

தாமநித்திலக்கோவைகள்சரிந்திடச்சரிந்த
தேமலர்க்குழன்மாதர்பந்தாடுதெற்றிகள்சூழ்
காமர்பொற்சுடர்மாளிகைக்கருங்கடன்முகந்த
மாமுகிற்குலமலையெனவேறுவமருங்கு.

(இ-ள்.) தாமநித்திலக்கோவைகள் சரிந்திட= சரமாகக்கோக்கப்பட்டமுத்துமாலைகள் சரிய; தேமலர்க்குழல் சரிந்தமாதர் = வாசனைநிரம்பிய மலர்களையணிந்த கூந்தலும் உடன்சரிந்த மங்கையர்; பந்தாடுதெற்றிகள்சூழ் = பந்துவிளையாடுகின்ற மேடைகள் பாங்கர்சூழப்பெற்ற; காமர்பொற்சுடர்மாளிகை = அழகிய பொன்னாலாகிய காந்தியையுடைய மாளிகைகளை; கருங்கடன் முகந்த மாமுகிற்குலம்=கருங்கடலையுண்டெழுந்த கரியமேகக்கூட்டங்கள்; மலையென மருங்கேறுவ = மலையெனக்கருதி அருகேதவழ்வன. எ-று.

சரிந்திடச் சரிந்தவென்பது ஏதுப்பொருட்டாகாது இது நிகழாநிற்க இது நிகழ்ந்தது என்னும் நிகழ்காலப்பொருட்டாய் நின்றது. எனவே, இரண்டின் சரிவும் ஒருங்குநிகழப் பந்தாடுகின்றாரென்பதாம். மாளிகை மலைபோலும் உன்னதமுடைமையின் முகிற்குலம் மலையென மருண்டேறுவ வென்க. மாளிகை ஏறப்பெறுவ என முடித்தலும் ஒன்று. மா - கருமை. (உ)

பெருமையிற்செறிபேரொலிபிறங்கலிற்சிறந்து
திருமகட்குவாழ்சேர்விடமாதலில்யாவுந்
தருதலிற்கடறன்னினும்பெரிதெனத்திரைபோற்
கரிபரித்தொகைமணிதுகில்சொரிவதாங்கலத்தால்.



அதிபத்தநாயனார்.

(இ-ள்.) பெருமையிற்செறி பேரொலி பிறங்கலில் = பெரிய மேகங் டாகும் பெருமுழக்கம் நிகழ்தலாலும்; சிறந்த திருமகட்கு வாழ்சேர்விடமாதலில் = உயர்ச்சியுற்று இலக்குமிக்கு வாழும் உறைவிடமாதலாலும்; யாவுந்தருதலில் = விரும்பிய எப்பொருளையும் ஈதலாலும்; கடறன்னினும் பெரிதென = இது பாற்கடலினும் பெருமையதென்று சொல்லும்படி; திரைபோற்கலத்தால் = அக்கடல்போலவே மரக்கலத்தினால்; கரிபரித்தொகை = யானைத்தொகைகளையும் குதிரைத்தொகைகளையும்; மணிதுகில் சொரிவது = நவமணிகளையும் வஸ்திரங்களையும் சொரிவது (அந்நகரம்). எ-று.

ஒலிபிறங்கல்முதலியவை உடைமையானும் திருமகளுறைதலானும் கரிபரிமுதலியவற்றை மிகப்பலவாகக் கலத்தாற் சொரிதலானும் கடைந்தபாற்கடலினும் சிறப்புடைத்தாயிற்றென்பார் "கடலினும் பெரிதெனச் சொரிவது" என்றார். மை - மேகம். ஆம் - அசை. (௫)

நீடுதொல்புகழ்நிலம்பதினெட்டினுநிறைந்த
பீடுதங்கியபலபொருண்மாந்தர்கள்பெருகிக்
கோடிநீடனக்குடியுடன்குவலயங்காணு
மாடிமண்டலம்போல்வதவ்வணிகிளர்மூதூர்.

(இ-ள்.) அவ்வணிகிளர்மூதூர் = அவ்வலங்காரம்வாய்ந்த அப்பெருநகர்; நீடுதொல்புகழ் = நீண்டபழைமையாகிய கீர்த்திபடைத்த; நிலம்பதினெட்டினுநிறைந்த = பதினெண்பாஷை வழங்கும் பதினெண்ணிலத்தினுஞ் செறிந்த; பீடுதங்கிய பலபொருண் மாந்தர்கள் பெருகி = பெருமைபெற்ற பலபொருள்களைக் கைக்கொண்ட மனிதர்கள் ஒங்குதலால்; கோடிநீடனக்குடியுடன் = கோடியளவினும் மிக்க தனங்களையுடைய குடிகளோடு; குவலயங்காணு மாடிமண்டலம் போல்வது = இவ்வுலகமுற்றும் பிரதிவிம்பித்த கண்ணாடிவட்டத்தை ஒப்பது. எ-று.

ஆடி சிற்றுருவமாயிருந்து அரும்பெரும் பொருள்களையும் தனக்குள் அடக்கிக் காட்டுதல்போல, இந்நகரமும் எவ்வெத்தேசப் பொருள்களையும் அவற்றிற்குரியவரோடு உட்கொண்டு விளக்கலின் "ஆடிமண்டலம் போல்வது" என்றார். பெருகி-வினையெச்சத்திரிபு. மண்டலம்-வட்டம். (௬)

அந்நெடுந்திருநகர்மருங்கலைகடல்விளிம்பிற்
பன்னெடுந்திரைதுறைதவழ்பாங்கரின்ஞாங்கர்
மன்னுதொன்மையின்வலைவளத்துணையின்மலிந்த
தன்மைவாழ்குடிமிடைந்ததுகடநுளைப்பாடி.

(இ-ள்.) அந்நெடுந்திருநகர் மருங்கு = அந்த நெடிய திருநகரினருகே; அலைகடல்விளிம்பில் = அலைகளைமோதுங் கடற்கரையிலே; பன்னெடுந்திரைதுறைதவழ் பாங்கரின்ஞாங்கர் = பலநெடிய அலைகள் தவழ்கின்ற துறையிடத்தின் மருங்கு; தடநுளைப்பாடி = விசாலமாகிய நுளையர்சேரியானது; தொன்மையின்மன்னு = பழமையாக நிலைபெற்ற; வலைவளத்துணையினில் = வலைவீசுதலால் வரும் பொருளினால்; மலிந்ததன்மை வாழ்குடி மிடைந்தது = சிறந்த இயல்போடு வாழ்கின்ற குடிகள் செறியப்பெற்றது. எ-று.

மருங்கு பாங்கரின் ஞாங்கர் பாடி தொன்மையின் மன்னுகுடி மிடைந்தது என இயையும். நுளைப்பாடி-நெய்தனிலத்தவர் வசிக்குஞ் சிற்றூர். (௭)

புயலளப்பனவெனவலைபுறம்பணைகுரம்பை
யயலளப்பனமீன்விலைப்பசும்பொனினடுக்கல்
வியலளக்கரில்விடுந்திமில்வாழ்நர்கள்கொணர்ந்த
கயலளப்பனபரத்தியர்கருநெடுங்கண்கள்.

(இ-ள்.) புயலளப்பன வெனவலை புறம்பணை குரம்பையயல்=முகில்கள் அளவி ட்டாற்போல வலைகள் புறம்பே உலரப்பெற்ற சிறுகுடில்களின் மருங்கு; அளப்ப ன = அளக்கப்படுவன; மீன்விலைப் பசும்பொனினடுக்கல் = மீன்விற்றலால் வந்த பசும்பொற்குவியல்களே; வியலளக்கரில் விடுந்திமில் வாழ்நர்கள் கொணர்ந்த = வி ரிந்தகடலிலே செலுத்தும் மீன்படகினால் வாழ்தலையுடையவர்கள் கொண்டுவந்த; கயலளப்பன = கயல்களை மதிப்பன; பரத்தியர் கருநெடுங் கண்கள் = அந்நெய்த னிலப் பெண்களின் கரியநெடுங் கண்களே. எ-று.

வலைகள் மேகச்செறிவுபோல்வன என்பதே கருத்தாகலின், அளத்தல் ஈண்டுக் கவிதலென்னும் பொருட்டு. வியல் - விரிவு. கண்களளத்தலாவது - இம்மீன் கய லோ பிறிதோவென ஐயப்பட்டுழி இது கண்போலுதலின் கயலேயென மதிக்கச்செ ய்தல். அளத்தல் - அளவிடுதல். (௬)

உணங்கன்மீன்கவர்வுறுநசைக்குருகுடனணைந்த
கணங்களோதிமங்கருஞ்சினைப்புன்னையங்கான
லணங்குநுண்ணிடைநுளைச்சியரணிநடைக்கழிந்து
மணங்கொள்கொம்பரின்மருங்குநின்றிழியலமருளும்.

(இ-ள்.) உணங்கன்மீன் கவர்வுறுநசைக்குருகுடன் = உலர்தலையுடைய மீன் களைக் கவர்ந்துண்ணும் காதல்கொண்ட பறவைகளுடனே; அணைந்தவோதிமக்க ணங்கள் = வந்த அன்னக்கூட்டங்கள்; அணங்குநுண்ணிடை நுளைச்சியர் = (தன பாரம் பொறாமற்) றளர்கின்ற சிற்றிடையையுடைய பரத்தியர்களின்; அணிநடைக் கழிந்து = அழகிய நடைக்குத்தோற்று; கருஞ்சினைப் புன்னையங்கானல் = கரியகி ளைகளையுடைய புன்னைச்சோலையிலே; மணங்கொள் கொம்பரின் மருங்குநின்று = மலர்மணம்வாய்ந்த கிளைகளினிடத்தினின்றும்; இழியலமருளும் = இழியாதனவாகி மருண்டிருக்கும். எ-று.

நுளைச்சியர் அன்னத்தினும் மெல்லியநடையினரென்பது கருத்து. (௭)

வலைநெடுந்தொடர்வடம்புடைவலிப்பவரொலியும்
விலைபகர்ந்துமீன்குவைகொடுப்பவர்விளியொலியுந்
தலைசிறந்தவெள்வளைசொரிபவர்தழங்கொலியு
மலைநெடுங்கடலதிரொலிக்கெதிரொலியனைய.

(இ-ள்.) வலைநெடுந்தொடர்வடம் புடைவலிப்பவ ரொலியும் = வலைகளின் நெடிய சங்கிலியோடுகூடிய கயிறுகளை மருங்கு இழுப்பவர் முழக்கமும்; விலைபகர் ந்து மீன்குவைகொடுப்பவர் விளியொலியும் = விலைகூறி மீன்குவியல்களை விற்பவர் செல்பவரை யழைக்கும் முழக்கமும்; தலைசிறந்த வெள்வளைசொரிபவர் தழங்கொலி யும் = ஆங்காங்கு அரிய வெள்ளிய சங்குகளைக் கொண்டுவந்து குவிப்பவர்களின் மிக்கமுழக்கமும்; அலைநெடுங்கடலதிரொலிக் கெதிரொலியனைய = அலைமோதும் நெடியகடலின் அதிர்ச்சிபெற்ற ஒலிக்கு எதிரொலிசெய்தால் ஒப்பன. எ-று. (௮)

அனையதாகியவந்நுளைப்பாடியிலமர்ந்து
மனைவளம்பொலிநுளையர்தங்குலத்தினில்வந்தார்
புனையிளம்பிறைமுடியவரடித்தொண்டுபுரியும்
வினைவிளங்கியவதிபத்தரெனநிகழ்மேலோர்.

(இ-ள்.) அனையதாகிய அந்நுளைப்பாடியிலமர்ந்து = மேற்கூறிய அத்தன்மையதாகிய அந்த நுளைப்பாடியிலே தங்கி; மனைவளம்பொலி நுளையர்தங்குலத்தினில் வந்தார் = இல்வாழ்க்கையிலே மேம்பட்ட பரதவர்குலத்தி லவதரித்தவர்; இளம்பிறைபுனைமுடியார்=இளமதியணிந்த முடியையுடைய இறைவரது; அடித்தொண்டு புரியும் வினைவிளங்கிய = திருவடித்தொண்டை யியற்றும் செய்கையிற்சிறந்த; அதிபத்தரென நிகழ்மேலோர் = அதிபத்தரென்று கூறவிளங்கும் மேன்மையை யுடையவர். எ-று. (கூ)

ஆங்கவன்பர்தா நுளையாதநதலைவராயவர்க
ளோங்குதெண்டிரைக்கடலிடைப்பலபடவியக்கிப்
பாங்குசூழ்வலைவளைத்துமீன்படுத்துமுன்குவிக்கு
மோங்குபல்குவையுலப்பிலவுடையராயுயர்வார்.

(இ-ள்.) அவ்வன்பராங்கு நுளையர்தந் தலைவராய் = அவ்வதிபத்தரென்பவர் அப்பாடியிலே பரதவர்களுக்குத் தலைவராகி; ஏங்குதெண்டிரைக்கடலிடை = ஒலிக்கின்ற தெளிந்த அலைகளையுடைய கடலிலே; அவர்கள் பலபடவியக்கி = அப்பரதவர்கள் பலபடவுகளைச்செலுத்தி; பாங்குசூழ்வலைவளைத்து = பக்கங்களிலே வலைகளைச் சூழவளைத்து; மீன்படுத்துமுன்குவிக்கும் = மீன்களைப்பிடித்து எதிர்குவிக்கும்; ஓங்குபல்குவை யுலப்பிலவுடையராயுயர்வார் = உயர்ந்த அக்குவியல்கள் நீக்கமில்லாதனவாக உடையராய்ச் சிறந்தார். எ-று.

அவர்கள் இயக்கி வளைத்து படுத்து குவிக்கும் குவையென இயையும். அவ்வன்பர் தலைவராய் உடையராய் உயர்வாரெனக் கூட்டுக. தாம்-அசை. (கய)

முட்டின்மீன்கொலைத்தொழில்வளத்தவர்வலைமுகந்து
பட்டமீன்களிலொருதலைமீன்படுதோறு
நட்டமாடியநம்பருக்கெனநளிர்முந்நீர்
விட்டுவந்தனர்விடாதவன்புடனென்றும்விருப்பால்.

(இ-ள்.) முட்டின்மீன் கொலைத்தொழில் வளத்தவர் = குறைவில்லாத மீன்களைப்படுக்கும் தொழில்வளமையையுடைய பரதவர்; படுதோறும் வலைமுகந்து பட்ட மீன்களிலொருதலைமீன் = பிடிக்குந்தோறும் வலையாற்கவரப்பட்ட மீன்களிலே முந்திய ஒருமீனை; நட்டமாடிய நம்பருக்கென=இது திருநிருத்தஞ்செய்தருளிய நிமலருக்கு உரியதென்று; விடாதவன்புடனென்றும் விருப்பால் = நீக்கமில்லாத அன்போடு அநுதினமும் விருப்பத்தினால்; நளிர்முந்நீர் விட்டுவந்தனர் = குளிர்ந்தசமுத்திரத்திலே விடுத்துவந்தார். எ-று.

தலைமீன் விட்டுவந்தனரென இயையும். வலையென்புழி மூன்றனுருபு விரிக்க. முகக்கவென்பது முகந்தெனத்திரிந்தது. முகத்தல்-கவர்தல். (கஉ)

வாருமேசர்வலைநாளொன்றின்மீனொன்றுவரினு
மேகநாயகர்தங்கழற்கெனவிடுமியல்பா
லாகுநாள்களிலநேகநாளடுத்தொருமீனை
மேகநீர்படிவேலையிற்படவிட்டுவந்தார்.

(இ-ள்.) வாருசேர்வலைநாளொன்றின் மீனொன்றுவரினும் = ஒழுங்கியைந்தவலையிலே ஒருதினத்தில் ஒருமீனேகிடைப்பினும்; ஏகநாயகர்தங்கழற்கெனவிடும்=ஏகநாயகராகிய இறைவன் திருவடிக்கென்று விடுகின்ற; இயல்பாலாகு நாள்களில் = இத்தன்மையோடு செல்லும் தினங்களிலே; மேகநீர்ப்படிவேலையில் = முகில்கள் நீரைமுகக்கும் சமுத்திரத்திலே; அடுத்தனேகநாளொருமீனேபட = அடுத்து அனேகதினம் ஒருமீனே அகப்பட; விட்டுவந்தார் = அதை நியமப்படி விடுத்துவந்தார். எ-று.

வாரு - அழகுமாம். இயல்பால் - இயல்போடு. படிதல்-ஈண்டு முகத்தலின் மேற்று. (௧௨)

மீன்விலைப்பெருகுணவினின்மிகுபெருஞ்செல்வந்
தான்மறுத்தலினுணவின்றியருங்கிளைசாம்பும்
பான்மைபற்றியும்வருந்திலர்பட்டமீனொன்று
மான்மறிக்கரத்தவர்கழற்கெனவிட்டுமகிழ்ந்தார்.

(இ-ள்.) மீன்விலைப்பெருகுணவினின் மிகுபெருஞ்செல்வ மறுத்தலின் = மீன்விற்றலாலேபெருகுகின்ற உணவோடு மிக்குவருஞ்செல்வம் தடைப்பட்டமையால்; அருங்கிளையுணவின்றிச் சாம்பும் பான்மைபற்றியும் = அரியசுற்றத்தார் உணவின்றி வாடும் நிலைமையடைந்தும்; வருந்திலர்பட்ட மீனொன்றும் = தாம் வருந்திலாராய்ச் சார்ந்த அவ்வொருமீனையும்; மான்மறிக்கரத்தவர் கழற்கெனவிட்டு மகிழ்ந்தார் = மானையேந்திய கரத்தராகிய சிவபிரான் திருவடிக்கென்றுவிடுத்துமகிழ்ந்தார். எ-று.

தான் - அசை. உம்மை இரண்டனுள் முந்தியது உயர்வுசிறப்பும் பிந்தியது முற்றுமாம். மான்மறி-ஒருபொருட்பன்மொழி. மறி கன்றெனினும் ஒக்கும். (௧௩)

சாலநாள்களிப்படிவரத்தாமுணவயர்த்துக்
கோலமேனியுந்தளரவுந்தந்தொழில்குறையாச்
சீலமேதலைநின்றவர்தந்திறந்தெரிந்தே
யாலமுண்டவர்தொண்டரன்பெனுமமுதுண்பார்.

(இ-ள்.) சாலநாள்களிப்படிவரத் தாமுண வயர்த்து = நெடுநாள் இப்படியே கிடைத்துவருதலால் தாம் உணவு இழந்து; கோலமேனியுந்தளரவும் = அழகிய திருமேனியும் தளர்ச்சியடையவும்; தந்தொழில்குறையாச் சீலமேதலைநின்றவர்தந் திறந்தெரிந்து = தமது நியமத்திற்றவறுத ஒழுக்கத்திலேயே தங்கிய அந்நாயனார் உறுதியையறிந்து; ஆலமுண்டவர் தொண்டரன்பெனு மமுதுண்பார் =ஆலத்தை நுகர்ந்த அண்ணலார் அவ்வடியவரின் அன்பெனும் அமுதத்தை அருந்துவாராய். எ-று.

வர- வினையெச்சத்திரிபு. உம்மைகள் முறையே இறந்ததுதழீஇயதும் உயர்வுசிறப்புமாம். சீலமென்புழி ஏழனுருபுவிரிக்க. ஏகாரமிரண்டனுள் முந்தியதுதேற்றம் பிந்தியது இசைநிறை. ஆலமே நுகரப்பெற்றார்க்கு அமுதநுகர்தலில் அதிவிருப்பாகலின் "ஆலமுண்டவர் தொண்டரன்பெனு மமுதுண்பார்" என்றார். உண்பார் முற்றெச்சம். (௧௪)

ஆனநாளொன்றிலவ்வொருமீனுமங்கொழித்துத்
தூநிறப்பசுங்கனகநற்சுடர்நவமணியான்
மீனுறுப்புறவமைத்துலகடங்கலும்விலையாம்
பான்மையற்புதப்படியதொன்றிடுவலைப்படுத்தார்.

(இ-ள்.) ஆனநாளொன்றில் = வேறொருதினத்திலே; அவ்வொருமீனு மங்கொழித்து = கிடைத்த அவ்வொருமீனையும் வழக்கம்போல விடுத்துப் பின்னர்; நற்சுடர்நவமணியாலுறுப்புற = நல்ல காந்திபெற்ற நவரத்தினங்களால் உறுப்பமைய; தூநி

றப்பசுங்கனக மீனுறவமைத்து = மாற்றுயர்ந்தபசும்பொன்னால் உடலமைவித்து; உலகடங்கலும் விலையாம்பான்மை = உலகமுற்றும் விலையாகுந் தன்மையையுடைய; அற்புதப்படியதொன்று = அற்புதத்தகுதியதாகியமீனொன்றை; இடுவலைப்படுத்தார் = அவரிட்டவலையிலே அகப்படுவித்தார். எ-று.

மேற்செய்யுளில் ஆலமுண்டவரென்ற எழுவாய் இச்செய்யுளில் படுத்தாரென்னும் பயனிலைகொண்டது. நியமப்படி ஒரு மீனைவிடுத்த பின்னர்க் கிடைப்பதும் அரியமீனாயின் அதனையும் பெருமானுக்குரியதென விடுப்பதேயன்றித் தமக்குரிமையாக்காரென்பதை விளக்குதற்குச் சிவபெருமான் இங்ஙனஞ்செய்தருளினாரென்க.

> வாங்குநீள்வலையலைகடற்றிரையில்வந்தேற
> வோங்குசெஞ்சுடருதித்தெனவுலகெலாம்வியப்பத்
> தாங்குபேரொளிதழைத்திடக்காண்டலுமெடுத்துப்
> பாங்குநின்றவர்மீனொன்றுபடுத்தனமென்றார்.

(இ-ள்.) வாங்குநீள்வலை = இழுக்கும் நீண்டவலையானது; அலைகடற்றிரையில் வந்தேற = அலைகின்ற கடற்றிரைவழிவந்து கரையேற (அதிலுள்ளமீன்); உலகெலாம் வியப்ப வோங்குசெஞ்சுடருதித்தென = உலகமெல்லாம் அதிசயிக்கும்படி உயர்ந்த செவ்விய சூரியனுதித்தாற்போல; தாங்குபேரொளி தழைத்திடக்காண்டலுமெடுத்து = அமைந்தபேரொளி அதிகப்படக்காணுதலும் கையிலெடுத்து; பாங்குநின்றவர் மீனொன்று படுத்தனமென்றார் = அருகிலுள்ள பரதவர் ஒருமீனைப் பிடித்தோமென்றார். எ-று. (௧௬)

> என்றுமற்றுளோரியம்பவுமேறுசீர்த்தொண்டர்
> பொன்றிரட்சுடர்நவமணிபொலிந்தமீனுருப்பா
> லொன்றுமற்றிதுவென்னையாளுடையவர்க்காகுஞ்
> சென்றுபொற்கழல்சேர்கெனத்திரையொடுந்திரித்தார்.

(இ-ள்.) என்றுமற்றுளோரியம்பவும் = இங்ஙனம் அவர்கூறுதலும்; ஏறுசீர்த்தொண்டர் = மிகுந்த கீர்த்தியையுடைய அந்நாயனார்; பொன்றிரட்சுடர்மீன் = பொன்னாற்றிரண்ட காந்திமிக்க இம்மீன்; நவமணிபொலிந்தவுருப்பாலொன்றும் = நவரத்தினங்களாலமைந்தவுருப்பினால் நண்ணுகின்றது; இதுஎனையாளுடையவர்க்காகும் = இது என்னையடிமையாகவுடைய இறைவருக்கு உரித்தாகுமாதலால்; பொற்கழல்சென்றுசேர்கென = பொன்போலுந்திருவடிகளிற்போய்ச்சேர்கவென்று; திரையொடுந்திரித்தார் = அலையிற் சுழலவிடுத்தார். எ-று.

மற்று-அசை. திரையொடும் வேற்றுமைமயக்கம். (௧௭)

> அகிலலோகமும்பொருண்முதற்றாமெனுமளவிற்
> புகலுமப்பெரும்பற்றினைப்புரையறவெறிந்த
> விகலின்மெய்த்திருத்தொண்டர்முன்னிறைவர்தாம்விடைமேன்
> முகில்விசும்பிடையணைந்தனர்பொழிந்தனர்முகைப்பூ

(இ-ள்.) அகிலலோகமும்பொருண்முதற்றாமெனுமளவிற்புகலும் = எவ்வுலகமும் பொருளையே முதலாகவுடையதாகுமென்னும்பிரமாணத்தோடு கூறப்படுகின்ற; அப்பெரும்பற்றினை = அத்தகையபொருட்பற்றை; புரையறவெறிந்த = குற்றமறவொழித்த; இகலில்மெய்த்திருத்தொண்டர்முன் = ஒப்பிலாத உண்மைத்திருத்தொண்டராகிய அந்நாயனார்முன்பு; இறைவர்விடைமேன்முகில்விசும்பிடையணைந்தனர் = எம்பெருமான் இடபவாகனத்திலிவர்ந்து மேகங்களுலவும் ஆகாயத்தில் எழுந்தருளினார்; பொழிந்தனர்முகைப்பூ = (தேவர்கள்) மலர்மாரிசொரிந்தார். எ-று.

"முனிவருமன்னருமுன்னுவ பொன்னுன்முடியும்" என்றலின் பொருளில்வழி எவ்வுலகினும் யாதொருசெயலு மியலாதென்பார் "அகிலலோகமும்பொருண்முதற்று" என்றும், முன்னியவற்றை முடித்தற்கேதுவாதல்பற்றி முனிவர்க்கும் வேண்டற் பாலதாகிய அப்பொருட்பற்றை இவர் முற்றக்களைந்தவரென்பார், "அப்பெரும்பற் றினைப்புரையறவெறிந்தமெய்த்தொண்டர்" என்றும் கூறினர். அளவு-பிரமாணம். இகல் - ஒப்பு. தாம் - அசை. முகைப்பூ - மொட்டுமலர். தேவரென்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது, பூமழை பொழிதற்குரியவர் அவரேயாகலின். (கஅ)

பஞ்சகாதமுமெழுந்தனவதிபத்தர்பணிந்தே
வஞ்சலிக்கரஞ்சிரமிசையணைத்துநின்றவரை
நஞ்சுவாண்மணிமிடற்றவர்சிவலோகநண்ணி
யஞ்சிறப்புடையடியர்பாங்குறத்தலையளித்தார்.

(இ-ள்.) பஞ்சகாதமுமெழுந்தன = ஐவகைத்தேவதுந்துபிகளும் முழங்கின; பணிந்தஞ்சலிக்கரஞ்சிரமிசையணைத்துநின்றவதிபத்தரவரை = அவனியிற்பணிந்து குவித்தகைகளைச் சிரமேற்கொண்டுநின்ற அதிபத்தநாயனார்க்கு; நஞ்சுவாண்மணி மிடற்றவர் = விஷத்தாலொளிபெற்ற நீலமணிபோலும் கண்டத்தராகிய நிமலர்; சிவலோகநண்ணி = தமது சிவலோகத்தையடைந்து; அஞ்சிறப்புடையடியர்பாங்கு றத்தலையளித்தார் = அழகிய சிறப்புவாய்ந்த அடியவரோடுவசிக்கும்படித் திருவருள் பாலித்தார். எ-று.

ஏகாரம் இசைநிறை. நின்றவராகிய அதிபத்தரை எனக்கூட்டுக. நின்றவரை - வேற்றுமைமயக்கம். நின்றவரைப்புரந்தாரெனினும் அமையும். தலையளித்தல் - ஒரு சொன்னீர்மைத்து. (கக)

தம்மறம்புரிமரபினிற்றரும்பெருந்தொண்டு
மெய்ம்மையேபுரியதிபத்தர்விளங்குதாள்வணங்கி
மும்மையாகியபுவனங்கண்முறைமையிற்போற்றுஞ்
செம்மைநீதியார்கலிக்கம்பர்திருத்தொண்டுபகர்வாம்.

(இ-ள்.) மறம்புரிதம்மரபினிற்றரும்பெருந்தொண்டு= கொலைத்தொழில்புரியுந் தமது குலத்திற்கியைந்தபெருந்தொண்டை; மெய்ம்மையேபுரியதிபத்தர்விளங்குதா ள்வணங்கி = உண்மையாகவே இயற்றிய அதிபத்தநாயனாருடைய ஒளிபெற்றதிரு வடிகளைத்தொழுது; மும்மையாகியபுவனங்கண் முறைமையிற்போற்றுஞ் செம்மை நீதியார் = மூவுலகங்களும் கிரமமாகவணங்கும் செவ்வியமுறைமையையுடையவ ராகிய; கலிக்கம்பர்திருத்தொண்டுபகர்வாம் = கலிக்கம்பநாயனாருடையதிருத்தொ ண்டைச்செப்புவாம். எ-று.

தம்மரபிற்கியைந்ததொண்டைத் தவறுதியற்றலேவிதியாகலின் இவ்வதிபத்த நாயனாரும் இங்ஙனமியற்றினாரென்க. அடியவர்பத்தியிலே வழுவுதல்நோக்கித் தம் மனைவியின் கரத்தையுஞ்சேதித்துக் கண்டித்தவராகலின், "மும்மையாகியபுவனங் கண்முறைமையிற்போற்றுஞ்செம்மைநீதியார்" என்றார். (உ0)

## அதிபத்தநாயனார்புராணம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - அ௲ள.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கலிக்கம்பநாயனார் புராணம்.

உரிமையொழுக்கந்தலைநின்றவுயர்தொன்மரபினீடுமனைத்
தருமநெறியால்வாழ்குடிகடழைத்துவளருந்தன்மையதாய்
வருமஞ்சுறையுமலர்ச்சோலைமருங்குசூழ்ந்துவளம்புறவிற்
பெருமையுலகுபெறவிளங்குமேல்பாற்பெண்ணாகடமூதூர்.

(இ-ள்.) உரிமையொழுக்கந்தலைநின்ற = தமக்கு உரிமையாகிய ஒழுக்கத்திலே நிலைபெற்ற; உயர்தொன்மரபின் = உயர்ந்த தொன்றுதொட்ட அவ்வக்குலத்தின் படி; நீடுமனைத்தருமநெறியால்வாழ்குடிகள் = ஓங்கிய இல்லறமுறைமையால் இனிதுவாழும்குடிகள்; தழைத்துவளருந்தன்மையதாய் = விர்த்தித்துவளரும் மேம்பாடுடையதாய்; வருமஞ்சுறையுமலர்ச்சோலைமருங்குசூழ்ந்த = சஞ்சரிக்கும் மேகங்கள் தங்குகின்ற பூஞ்சோலைகள் புடைசூழ்ந்த; வளம்புறவில் = வளப்பம்பெற்ற முல்லை நிலத்திலே; மேல்பாற்பெண்ணாகடமூதூர் - மேற்பகுதியாகிய பெண்ணாகடமென்னும் வியன்பதியானது; உலகுபெருமைபெறவிளங்கும் = உலகம் மேன்மைபெற விளங்காநிற்கும். எ-று.

தன்மையதாய்ப் புறவில்விளங்கும் என இயையும். அத்தலம் எவரும்வழிபட்டு இஷ்டசித்திகளையடையவிளங்கலின், "உலகுபெருமைபெறவிளங்கும்பெண்ணாகடம்" என்றும், இந்நகரத்தின் இருபகுதியுள் இதுமேற்பகுதியாகலின், "மேல்பாற்பெண்ணாகடமூதூர்" என்றும் கூறினார். கன்னிகையரும் காமதேனுவும் வெள்ளையானையும் பூசிக்கப்பெற்றமையால் இத்தலம் பெண்ணாகடமெனப் பெயர்பெற்றது. (க)

மற்றப்பதியினிடைவாழும்வணிகர்குலத்துவந்துதித்தார்
கற்றைச்சடையார்கழற்காதலுடனேவளர்ந்தகருத்துடையா
ரற்றைக்கன்றுதூங்கானைமாடத்தமர்ந்தாரடித்தொண்டு
பற்றிப்பணிசெய்கலிக்கம்பரென்பார்மற்றோர்பற்றில்லார்.

(இ-ள்.) அப்பதியினிடைவாழும் வணிகர்குலத்தவர்துதித்தார் = அப்பதியிலேவாழ்கின்றவைசியகுலத்திலே வந்தவதரித்தவர்; கற்றைச்சடையார்கழற்காதல் = செறிந்தசடைமுடியராகிய சிவபெருமானுடைய திருவடிப்பத்தியானது; உடனே வளர்ந்தகருத்துடையார் = தாம் உதிக்கும்போதே உடனுதித்து வளர்ந்த சித்தத்தையுடையவர்; தூங்கானைமாடத்தமர்ந்தாரடித்தொண்டு = திருத்தூங்கானைமாடமென்னும் ஆலயத்திலமர்ந்த அமலர் திருவடித்தொண்டை; அற்றைக்கன்றுபற்றிப் பணிசெய் = அன்றைக்கன்றுமேற்கொண்டு பணிந்துசெய்கின்ற; கலிக்கம்பரென்பார் = கலிக்கம்பரென்னுந் திருநாமமுடையவர்; மற்றோர்பற்றில்லார் = இத்தொண்டையன்றிப் பிறிதொருபற்றுமில்லாதவர். எ-று.

மற்று இரண்டனுள் முந்தியது அசை, பிந்தியது பிறிது. தொண்டை ஒருநாள் செய்ததனையானேயமையாது ஒவ்வொருநாளும் விசேடித்துச்செய்தலையுடையரென்பார், "அற்றைக்கன்று அடித்தொண்டுபற்றிப் பணிசெய்கலிக்கம்பர்" என்றார். அன்றென்பது, "ஐயீற்றுடைக்குற்றுகரமுமுளவே" என்றபடி ஐகாரச்சாரியைபெற்று வலிந்தது. பணியென்னும் பகுதி வினையெச்சப்பொருளில்வந்தது. (உ)

ஆனவன்பர்தாமென்றுமரனாரன்பர்க்கமுதுசெய
மேன்மைவிளங்குபோனகமும்விரும்புகறிநெய்தயிர்தீம்பா
றேனினினியகனிகட்டிதிருந்தவமுதுசெய்வித்தே
யேனைநிதியம்வேண்டுவனவெல்லாமின்பமுறவளித்தார்.

(இ-ள்.) ஆனவன்பர்தாமென்றுமரனாரன்பர்க்கு = அத்தகையநாயனார் அநவரதமும் சிவனடியவர்களுக்கு; மேன்மைவிளங்குபோனகமும்விரும்புகறி=மேம்பட்ட அன்னமும் விழையும் கறிகளும்; நெய்தயிர்தீம்பால் = நெய்யும் தயிரும் இனியபாலும்; தேனினினியகனிகட்டி = தேனினுமினிய கனிகளும் சர்க்கரையுமாகிய இவற்றை; திருந்தவமுது செயவமுதுசெய்வித்து = சிறக்கவுண்ணும்படித் திருவமுதுசெய்வித்து; ஏனைநிதியம்வேண்டுவனவெல்லாம் = மற்றை வேண்டுவனவாகிய திரவியமும் பிறவும்; இன்பமுறவளித்தார் = மகிழும்படிகொடுத்தார். எ-று. (௫)

அன்னவகையாற்றிருத்தொண்டுபுரியுநாளிலங்கொருநாண்
மன்னுமனையிலமுதுசெயவந்ததொண்டர்தமையெல்லாந்
தொன்மைமுறைமையமுதுசெயத்தொடங்குவிப்பாரவர்தம்மை
முன்னரழைத்துத்திருவடிகளெல்லாம்விளக்கமுயல்கின்றார்.

(இ-ள்.) அன்னவகை திருத்தொண்டு புரியுநாளி லொருநாள் = அவ்வாறு திருத்தொண்டுசெய்யுங்காலத்தில் ஒருதினம்; மன்னுமனையிலமுதுசெயவந்ததொண்டர்தமையெல்லாம் = சிறந்த தமதுதிருகத்திலே திருவமுது செய்தற்குவந்த சிவனடியவர்களையெல்லாம்; தொன்மைமுறைமையமுதுசெயத்தொடங்குவிப்பார் = வழக்கம்போலத் திருவமுதுசெய்யும்படி தொடங்குவிப்பாராய்; அவர்தம்மைமுன்னரழைத்து = அவர்களை முன்பு அழைத்து; திருவடிகளெல்லாம்விளக்கமுயல்கின்றார் = அவர்திருப்பாதங்களையெல்லாம் சுத்தஞ்செய்ய முயல்வாராயினார். எ-று.

திருவமுதுசெய்வித்தற்குத் திருவடிகளை விளக்குவாராயினாரென்பது கருத்து. ஆல் - அங்கு - அசைகள். தொடங்குவிப்பார்-முற்றெச்சம். (௬)

திருந்துமனையார்மனையெல்லாந்திகழவிளக்கிப்போனகமும்
பொருந்துசுவையிற்கறியமுதும்புனிதத்தண்ணீருடன்மற்று
மருந்துமியல்பினுள்ளனவுமமைத்துக்கரகநீரளிக்க
விரும்புகணவர்பெருந்தவர்தாளெல்லாம்விளக்கும்பொழுதின்கண்.

(இ-ள்.) திருந்துமனையார்=நற்குணநற்செய்கையிற்றிருந்தியமனைவியார்; மனையெல்லாந்திகழவிளக்கி = கிருகமுற்றும் மங்கலமமையச்சுத்தஞ்செய்து; போனகமும்சுவையிற்பொருந்துகறியமுதும் = அன்னமும் அறுசுவைகளோடுஅமைந்தகறியமுதும்; புனிதத்தண்ணீருடன்மற்றுமருந்துமியல்பினுள்ளனவும் = சுத்தோதகத்தோடு பாகஞ்செய்யாதுதுய்க்குந்தன்மையினுள்ள கனிமுதலியவும் பிறவும்; அமைத்துக்கரகநீரளிக்க = சித்தஞ்செய்துகொண்டு கமண்டலநீர்விடுக்க; விரும்புகணவர்பெருந்தவர்தாளெல்லாம்விளக்கும்பொழுதின்கண் = அன்புமிக்கநாயனார் அடியவர் திருவடிகளையெல்லாம் சுத்தஞ்செய்யும்பொழுதில். எ-று. (௭)

முன்புதமக்குத்தொழில்செய்யுந்தமராயேவன்முனிந்துபோ
யென்புமரவுமணிந்தபிரானடியாராகியங்கெய்து
மன்பருடனேதிருவேடந்தாங்கியணைந்தாரொருவர்தாம்
பின்புவந்துதோன்றவவர்பாதம்விளக்கும்பெருந்தகையார்.



கலிக்கம்பநாயனார்.

(இ-ள்.) முன்புதமக்குத்தொழில்செய்யுந்தமராயேவன்முனிந்துபோய் = இதற்குமுன் தமக்குஏவல்செய்யும் சுற்றத்தவராயிருந்து ஏவலைவெறுத்துச்சென்று; என்புமரவுமணிந்தபிரானடியாராகி = எலும்பையும் பாம்பையுமணிந்த இறைவர்அடியவராகி; அங்கெய்துமன்பருடனேதிருவேடந்தாங்கியணைந்தாரொருவர் = அங்கணுகிய அடியவரோடு திருவேடம்பூண்டு வந்தவராகிய அவரொருவரும்; பின்புவந்துதோன்ற = பின்புவந்தெதிர்ப்பட; அவர்பாதம்விளக்கும்பெருந்தகையார் = அவர்திருப்பாதங்களையும் விளக்கும் மேன்மைத்தன்மையை யுடையராய். எ-று.

முனிதல் - வெறுத்தல்; அது அருளுஞ்சினமுமன்றி இடைநிகர்த்தாதல். தாம் - அசை. முன் ஏவலாயிருந்த அவரும் கூசுதலுடையராய்ப் பின்னிடைந்துவந்தனரென்பார் "பின்புவந்துதோன்ற" என்றும், அவர் முந்தியநிலைமையைச் சிறிதும் இவர் நோக்கிற்றிலரென்பார், "அவர்பாதம்விளக்கும்பெருந்தகையார்" என்றும் கூறினர்.

கையாலவர்தமடிபிடிக்கக்காதன்மனையார்முன்பேவல்
செய்யாதகன்றதமர்போலுமென்றுதேரும்பொழுதுமலர்
மொய்யார்வாசக்கரகநீர்வார்க்கமுட்டமுதற்றொண்டர்
மையார்கூந்தன்மனையாரைப்பார்த்துமனத்துட்கருதுவார்.

(இ-ள்.) கையாலவர்தமடிபிடிக்க = கையினால் அவருடைய கழல்களைப் பற்ற; காதன்மனையார் = அடியவர்பத்தியில்விருப்பமிக்க அவர் மனைவியார்; முன்பேவல்செய்யாதகன்றதமர்போலுமென்றுதேரும்பொழுது = இவர் முன்னே ஏவலியற்றாதுநீங்கிய சுற்றத்தார்போலுமென எண்ணுங்கால்; மலர்மொய்யார்வாசக்கரகநீர் = மலர்செறிந்த வாசனைமிக்க கமண்டலசலத்தை; வார்க்கமுட்ட = விடுத்தற்குச் சிறிது தாமதநிகழ; முதற்றொண்டர் = தலைமைபெற்றதொண்டராகிய அந்நாயனார்; மையார்கூந்தன்மனையாரைப்பார்த்துமனத்துட்கருதுவார் = கருமைசெறிந்தகூந்தலையுடையகாதலியாரைநோக்கிச் சித்தத்திற்சிந்திப்பார். எ-று. (எ)

வெறித்தகொன்றைமுடியார்தமடியாரவர்முன்மேவுநிலை
குறித்துவெள்கிநீர்வாராதொழிந்தாளென்றுமனங்கொண்டு
மறித்துநோக்கார்வடிவாளைவாங்கிக்கரகம்வாங்கிக்கை
தறித்துக்கரகநீரெடுத்துத்தாமேயவர்தாள்விளக்கினார்.

(இ-ள்.) வெறித்தகொன்றைமுடியார்தம் = வாசனையைவீசிய கொன்றைமாலிகையணிந்த முடியையுடையகடவுளின்; அடியாரவர்முன்மேவுநிலைகுறித்துவெள்கி = அடியவரது முந்தியஇயல்பைக்குறித்து வெட்கமுற்று; நீர்வாராதொழிந்தாளென்று மனங்கொண்டு = சலம்விடுக்கத் தாழ்த்தாளென்றுசிந்தித்து; மறித்துநோக்கார் = அம்மனைவியாரைப் பின்னும் ஒருமுறை பாராதவராய்; வடிவாளைவாங்கி = வடித்த வாளாயுதத்தைக்கரத்திலெடுத்து; கரகம்வாங்கி = மனைவியார்கையிலிருந்த கரகத்தைவாங்கிவைத்துவிட்டு; கைதறித்து = அக்கையைத் துண்டித்துவிட்டு; கரகநீரெடுத்துத்தாமேயவர்தாள்விளக்கினார் = கரகநீரைக்கைக்கொண்டு தாமே அவர்திருவடிகளைச் சுத்தஞ்செய்தார். எ-று. நோக்கார் - முற்றெச்சம். (அ)

விளக்கியமுதுசெய்வதற்குவேண்டுவனதாமேசெய்து
துளக்கில்சிந்தையுடன்றொண்டர்தம்மையமுதுசெய்வித்தா

ளப்பில்பெருமையவர்பின்னுமடுத்ததொண்டின்வழிநின்று
களத்தினஞ்சமணிந்தவர்தாணிழற்கீழடியாருடன்கலந்தார்.

(இ-ள்.) விளக்கியமுதுசெய்வதற்குவேண்டுவனதாமேசெய்து = சுத்தஞ்செய்த பின் அடியவர்திருவமுதுசெய்தற்கு வேண்டுவனவற்றைத் தாமேயமைத்துக்கொண்டு; துளக்கில்சிந்தையுடன்றொண்டர்தம்மையமுதுசெய்வித்தார் = நியங்குதலில்லாதசித்தத்துடன் அவர்களைத்திருவமுதுசெய்வித்தார்; அளப்பில்பெருமையவர் = எண்ணிறந்த பெருமையையுடைய இந்நாயனார்; பின்னுமடுத்ததொண்டின்வழிநின்று = பின்னரும் அத்தொண்டினைப்பேணி ஒழுகி; களத்தினஞ்சமணிந்தவர்தாணிழற்கீழடியாருடன்கலந்தார் = கண்டத்திலே விஷத்தையணிந்தகடவுளின் திருவடிநீழலின்கீழே கலப்புற்ற அடியவரோடு தாமும் ஒருவராகக் கலந்தார். எ-று.

தேவியின்கரத்தைச் சேதித்தமைபற்றிப் பின் சிந்தைகலங்கிலரென்பார், "துளக்கில் சிந்தையுடன்"என்றும், இயற்றற்கரிய இச்செயல்புரிந்தஅரும்பெருந்தகைமையரென்பார் "அளப்பில்பெருமையவர்" என்றும் கூறினார். (௯)

ஓதமலிநீர்விடமுண்டாரடியார்வேடமென்றுணரா
மாதரார்கைதடிந்தகலிக்கம்பர்மலர்ச்சேவடிவணங்கிப்
பூதநாதர்திருத்தொண்டுபுரிந்துபுவனங்களிற்பொலிந்த
காதலன்பர்கலிநீதியார்தம்பெருமைகட்டுரைப்பாம்.

(இ-ள்.) ஓதமலிநீர்விடமுண்டார் = பெருக்குமிக்கநீர்நிரம்பிய கடலின் விடமுண்டபெருமானது; அடியார்வேடமென்றுணராமாதரார்கைதடிந்தகலிக்கம்பர் = திருத்தொண்டர்வேடமென்று சிந்தியாது முந்நியநிலைமையைக்குறித்த தேவியார்கரத்தைத்துண்டித்த கலிக்கம்பநாயனாருடைய; மலர்ச்சேவடிவணங்கி = செந்தாமரைமலர்போலுந்திருவடிகளைப் பணிந்து; பூதநாதர்திருத்தொண்டுபுரிந்து = பூதநாயகராகிய சிவபெருமான் திருத்தொண்டையியற்றி; புவனங்களிற்பொலிந்த = எவ்வுலகத்தினும் கீர்த்திபெற்ற; நீதிக்காதலன்பர் = நீதியிற்காதலையுடைய அன்பராகிய; கலியார்தம்பெருமைகட்டுரைப்பாம் = கலியநாயனார்பெருமையை உறுதிப்படக் கூறுவாம். எ-று.

ஓதமலிநீர்-அன்மொழித்தொகை. உணராவென்பது உணராமைக்கேதுவாகிய பூர்வநிலைக்குறிப்பின்மேனின்றது. (௧௦)

## கலிக்கம்பநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம்-அ௭௭.

---

# கலியநாயனார்புராணம்.

பேருலகிலோங்குபுகழ்ப்பெருந்தொண்டைநன்னாட்டு
நீருலவுஞ்சடைக்கற்றைநிருத்தர்திருப்பதியாகுங்
காருலவுமலர்ச்சோலைக்கன்னிமதில்புடைசூழ்ந்து
சீருலவுநெடுவீதிசிறந்ததிருவொற்றியூர்.

(இ-ள்.) காருலவுமலர்ச்சோலை = மேகங்கள்தவழும் பூஞ்சோலைகளோடு; கன்னிமதில்புடைசூழ்ந்து = அழிவில்லாதமதில்களும் அருகேசூழப்பெற்று; சேருலவு

நெடுவீதிசிறந்ததிருவொற்றியூர் = தேர்கள்சஞ்சரிக்கும் நெடியவீதிகளும் சிறக்கப்பெற்ற திருவொற்றியூரானது; பேருலகிலோங்குபுகழ் = பெரிய உலகத்திலே உயர்ந்த கீர்த்தியைப்பெற்ற; பெருந்தொண்டைநன்னாட்டு = பெருமைவாய்ந்ததொண்டைநன்னாட்டிலே; நீருலவுஞ்சடைக்கற்றைநிருத்தர்திருப்பதியாகும் = கங்கையுலவுஞ்சடைத்தொகுதியையுடைய தியாகேசப்பெருமானது திருத்தலமாகும்-எ-று.

தியாகேசப்பெருமானும் திருநிருத்தமுடையாராகலின் நிருத்தரென்றார். கன்னி - அழிவின்மை. (௧)

*பீடுகெழும்பெருந்தெருவும்புத்தரொடுபீலியமண்
வேடமுடையவர்பொருள்போலாகாயவெளிமறைக்கு
மாடுகொடிமணிநெடுமாளிகைநிரைகளலைகமுகின்
காடனையகடல்படப்பையெனவிளங்குங்கவின்காட்டும்.

(இ-ள்.) புத்தரொடுபீலியமண்வேடமுடையவர்பொருள்போல் = பௌத்தர்களும் பீலியைக்கையிலேந்திய சமண்வேடத்தரும் ஆகாயமுளதாகவும் அதனை இன்மைப்பொருளாக காட்டுவதுபோல; பீடுகெழும்பெருந்தெருவும் = (இந்நகரத்திலுள்ள) பெருமைசெறிந்த பெரியவீதிகளும்; ஆகாயவெளிமறைக்கும் = ஆகாயவெளியென்பது இல்லையாக அதனை மறைப்பனவாகிற்பன; ஆடுகொடி மணிநெடுமாளிகைநிரைகள் = அசையுங்கொடிகளையுடைய நெடிய அரதனமாளிகை வரிசைகள்; அலைகமுகின்காடனைய = அசைகின்றுள்ள கமுகவனத்தையொப்பன; கடல் படப்பையெனவிளங்குங் கவின்காட்டும் = அடுத்தகடலானது (செழித்தசிறுபயிர்களையுடைய) தோட்டமெனத்திகழும் அழகைக்காட்டுவன-எ-று.

பிருதுவி அப்பு தேயு வாயுவென்னும் நான்குபூதங்களேயன்றி ஆகாயமென்பதொருபூதம் உண்டென்பது பௌத்தருக்கும் சமணருக்கும் உடன்பாடன்றென்பார், "புத்தரொடுபீலியமண்வேடமுடையவர்பொருள்போல்" என்றும், பெருந்தெருக்களும் மேலே காவணம் மேற்கட்டி முதலியவற்றாலும் கீழே சனநெருக்கம் பொருட்பெருக்கமுதலியவற்றாலும் இடைவெளியில்லையாயினவென்பார் "ஆகாயவெளிமறைக்கும்" என்றும், கொடியசைவு கமுகின்மடலசைவுபோல்வனவென்பார் "கமுகின்காடனைய" என்றும், சிறுபயிர்கள் செழித்த கொல்லையொடுகலந்து ஒப்பக்குலவுவதென்பார் "கடல்படப்பையெனக்கவின்காட்டும்" என்றுங்கூறினார். பெருந்தெருவும் ஆகாயவெளிமறைக்குமெனவே ஏனைத்தெருக்களின் பொருட்செறிவு இசைக்கவேண்டுவதில்லையாயிற்று. உம்மை-உயர்வுசிறப்பு. ஒடு-எண்ணிடைச்சொல். (௨)

பண்ணுதிருப்பதிகவிசைப்பாட்டோவாமண்டபத்து
ளன்னநடைமடவார்களாட்டோவாவணியரங்கு
பண்முறைதூரியமுழக்குமவிழவோவாவாயில்வீதி
செந்நெலடிசிற்பிறங்கலுணவோவாதிருமடங்கள்.

(இ-ள்.) மண்டபத்துள்பண்ணுதிருப்பதிகவிசைப்பாட்டோவா = மண்டபங்களிலே எவராலும் ஓதப்படுகின்ற தேவாரதிருவாசகமுதலியவற்றின் திருப்பதிகஇசைப்பாடல்கள் நீங்கா; அணியரங்குஅன்னநடைமடவார்களாட்டோவா = அலங்காரம்

---

* இப்பாடல் பழைய ஏட்டுப்பிரதிகளிற் காணப்படாமையால் வெள்ளிபாடலென்னும் வேற்றுப்பாடலென்பர்.

பெற்ற நடனசாலைகளில் அன்னநடையையுடைய யௌவனப்பெண்களின் ஆடல்கள் ஒழியா; பயில்வீதிபன்முறைதூரியமுழக்கும் விழவோவா = அந்நகரிலுள்ளவீதிகளில் பலமுறைவாத்தியங்களை முழக்கும் திருவிழாக்கள் அகலா; திருமடங்கள் செந்நெலடிசிற்பிறங்குணவோவா = திருமடங்களிலே செந்நெலரிசியாற்சமைத்து மலைபோலக்குவித்த அன்னமுதலிய உணவுகள் குறையா-எ-று.

செந்நெல்-ஆகுபெயர். (௬)

கெழுமலர்மாதவிபுன்னைகிளைஞாழற்றளையவிழுங்
கொழுமுகைய சண்பகங்கள்குளிர்செருந்திவளர்கைதை
முழுமணமேமுந்நீருங்கமழமலர்முருகுயிர்க்குஞ்
செழுநிலவின்றுகளனையமணற்பரப்புந்திருப்பரப்பு.

(இ-ள்.) கெழுமலர்மாதவிபுன்னைகிளைஞாழல் = பொருந்திய மலர்களையுடைய குருக்கத்தியும் புன்னையும் கிளைத்தகுங்குமமாமும்; தளையவிழுங்கொழுமுகையசண்பகங்கள் = முறுக்கவிழ்ந்த செழித்த அரும்புகள்மொய்த்த சண்பகங்களும்; குளிர்செருந்திவளர்கைதைமுழுமணமே = தண்ணியசெருந்திகளும்வளர்ந்ததாழைகளுமாகிய இவற்றின்முழுமணமே; முந்நீருங்கமழமலர்முருகுயிர்க்கும் = சடலினீருங்கமழும்படி மலர்கள்வாசனையைவீசும்; திருப்பரப்புப்பரப்புமணல் = அழகிய விசாலமாகிய இடங்களிலெல்லாம் பரம்பியுள்ள வெண்மணல்கள்; செழுநிலவின்றுகளனைய = செழித்த சந்திரிகையின்பராகங்களை ஒத்தன-எ-று.

ஞாழல் - புலிநகக்கொன்றையுமாம். முருகுயிர்க்குந்திருப்பரப்பென இயையும்.

எயிலணையுமுகின்முழக்குமெறிதிரைவேலையின்முழக்கும்
பயிறருபல்லியமுழக்குமுறைதெரியாப்பதியதனுள்
வெயிலணிபன்மணிமுதலவிழுப்பொருளாவனவிளக்குந்
தயிலவினைத்தொழின்மரபிற்சக்கரப்பாடித்தெருவு.

(இ-ள்.) எயிலணையுமுகின்முழக்கும் = மதில்களிற்றவழும் மேகங்களின் ஒலியும்; திரையெறிவேலையின்முழக்கும் = அலைமோதும் கடல்களின் ஒலியும்; பயிறருபல்லியமுழக்கும் = யாண்டும் பழகுகின்ற பலவாத்தியங்களின் ஒலியும்; முறைதெரியாப்பதியதனுள் = வேற்றுமையறியக்கூடாத அந்நகரத்திலே; தயிலவினைத்தொழின்மரபின் = தயிலம் ஆக்குந்தொழிலமைந்த மரபினரையுடைய; சக்கரப்பாடித்தெருவு = சக்கரப்பாடியென்னுந்தெருவானது; வெயிலணிபன்மணிமுதல = காந்தியைக்கொண்ட பலஇரத்தினமுதலிய; விழுப்பொருளாவனவிளக்கும் = மேன்மைபெற்ற பொருள்களை விளக்கிக்கொண்டிருக்கும்-எ-று.

அம்மரபினர் மிக்கசெல்வத்தரென்பார், அவர்வீதி "மணிமுதலவிழுப்பொருள் விளக்கும்" என்றார். சக்கரப்பாடி - செக்கார்தங்குமிடம். (௭)

அக்குலத்தின்செய்தவத்தாலவனிமிசையவதரித்தார்
மிக்கபெருஞ்செல்வத்துமீக்கூரவிளங்கினார்
தக்கபுகழ்க்கலியனாரெனுநாமந்தலைநின்றார்
முக்கணிறைவர்க்குரிமைத்திருத்தொண்டினெறிமுயல்வார்.

(இ-ள்.) அக்குலத்தின்செய்தவத்தாலவனிமிசையவதரித்தார் = அக்குலத்தவரியற்றியதவத்தால் பூமியிலே அக்குலத்திலவதரித்தவர்; மிக்கபெருஞ்செல்வத்துமீக்

கூரவிளங்கினர் = மேன்மைபெற்றசெல்வத்திலே விர்த்தியாகவிளங்கினவர்; தக்கபுகழ்க்கலியனாரெனு நாமந்தலைநின்றார் = சிறந்தபுகழையுடைய கலியநாயனாரென்னும் திருநாமமுடையவர்; முக்கணிறைவர்க்குரிமை = மூன்றுநேத்திரங்களையுடைய முதல்வருக்கு உரிமையாகிய; திருத்தொண்டினெறிமுயல்வார் = திருத்தொண்டுகளினெறியிலே முயற்சிசெய்பவர்-எ-று.

குலம் - ஆகுபெயர். (௬)

எல்லைபலகோடிதனத்திறைவராயிப்படித்தாஞ்
செல்வநெறிப்பயனறிந்துதிருவொற்றியூரமர்ந்த
கொல்லைமழவிடையார்தங்கோயிலினுள்ளும்புறம்பு
மல்லுநெடும்பகலுமிடுந்திருவிளக்கினணிவிளைத்தார்.

(இ-ள்.) பலகோடியெல்லைதனத்திறைவராய் = பலகோடியெனப்படும் தொகையையுடைய செல்வத்திற்குத்தலைவராகி; இப்படித்தாஞ்செல்வநெறிப்பயனறிந்து = இத்தன்மையதாகிய செல்வம்பெற்றதற்குரிய பயனைத்தேர்ந்து; திருவொற்றியூரமர்ந்தகொல்லைமழவிடையார்தம் = திருவொற்றியூரிலமரும் இடபவாகனராகிய இறைவருடைய; கோயிலினுள்ளும்புறம்பும் = ஆலயத்தினகத்தும் புறத்தும்; நெடுமல்லும்பகலுமிடுந்திருவிளக்கினணிவிளைத்தார் = நெடிய இரவும்பகலுமேற்றும் திருவிளக்கினலங்காரத்தைச் செய்வித்தார்-எ-று.

செல்வநெறிப்பயனுணர்தலாவது - பூர்வம் இறைவரைவழிபட்டுப்பெற்றஇது ஊழுள்ள அளவும் நிலைபெற்றுப் பின்னர் ஒழிதற்றன்மையதாகலின் நிலைபெறாத இச்செல்வம் நிற்கும்போதே நிலைபேறுடைய சிவகைங்கரிய முதலியவற்றைச் செய்யவேண்டுமெனத்துணிதல். இக்கருத்தைநோக்கியே நாயனாரும் "அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா - லற்குப வாங்கே செயல்" என்பதுணர்க. இடபம் முல்லைநிலத்திற்குரியதாகலின், "கொல்லைமழவிடை" என்றார். (௭)

எண்ணிறிருவிளக்குநெடுநாளெல்லாமெரித்துவரப்
புண்ணியமெய்த்தொண்டர்செயல்புலப்படுப்பாரருளாலே
யுண்ணிறையும்பெருஞ்செல்வமுயர்த்தும்வினைச்செயலோவி
மண்ணிலவரிருவினைபோன்மாண்டதுமாட்சிமைத்தாக.

(இ-ள்.) எண்ணிறிருவிளக்குநெடுநாளெல்லாமெரித்துவர = அளவிறந்ததிருவிளக்குகளை அநேகநாளாக இட்டுவருதலும்; புண்ணியமெய்த்தொண்டர்செயல் = புண்ணியசொரூபியாகிய அந்நாயனார்நிலைமையை; புலப்படுப்பாரருளால் = வெளிப்படுத்துவாராகிய விமலரது கிருபையால்; உண்ணிறையும்பெருஞ்செல்வம் = இல்லத்திலேநிறைவுற்ற பெரியசெல்வமானது; உயர்த்தும்வினைச்செயலோவி = தன்னையுயர்த்தும் காமியவினையின் செய்கை அகன்று; மாட்சிமைத்தாக = பெருமையையுடையதாகிய நிஷ்காமியவினைச்செயல் விர்த்தித்தலால்; மண்ணிலவரிருவினைபோன்மாண்டது = பூமியிலே அந்நாயனாரிருவினைகள் மடியுமாறுபோலத் தானும் மடிந்தது-எ-று.

எனவே இந்நாயனாருக்குப் பொருளைவிர்த்தியாக்கி இம்மைமறுமையின்பங்களைப்பயக்கும் காமியவினை போகூழாயும், அருளைவிர்த்தியாக்கி வீட்டின்பத்தைப்பயக்கும் நிஷ்காமியவினை ஆகூழாயும் நின்றதென்பார், "அருளாலே பெருஞ்செல்வம் உயர்த்தும்வினைச்செயலோவி மாட்சிமைத்தாக மாண்டது" என்றார். கண்டுக் காமி

யமென்றது நல்வினையும் நிஷ்காமியமென்றது சிவபுண்ணியமுமாம்: நல்வினைவேறு புண்ணியம்வேறு ஆதலை, "என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே யிருங்கடல் வையத்து - முன்ன நீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கண் - மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி வாணனை வாயாரப்-பன்னி யாதரித் தேத்தியும் பாடியும் வழிபடு மதனாலே." என்னும் தேவாரத்தானுந்தெளிக. மெய் - உருவம். புலப்படுத்தல் - பிரசித்தியாக்கல். செல்வம் மாண்டது எனஇயையும். ஒவி - ஆக - என்பன வினையெச்சத்திரிபுகள். இருவினைமாறுதலாவது - திருவருளால் சிவபுண்ணியம் விர்த்தித்தலின் தஞ்செயலறுதல். நிஷ்காமியமே மேன்மையுடைத்தாகலின் மாட்சிமைத்தென்றார். இதுகுறிப்புவினைப்பெயர். இதில் தச்சாரியையாக்கிப் பூமியில் பெருமைவிர்த்திக்கச் செல்வமாண்டது என்னலும் ஒன்று. (அ)

திருமலிசெல்வத்துழனிதேய்ந்தழிந்தபின்னையுந்தம்
பெருமைநிலைத்திருப்பணியிற்பேராதபேராளர்
வருமரபிலுள்ளோர்பாலெண்ணெய்மாறிக்கொணர்ந்து
தருமியல்பிற்கூலியினாற்றமதுதிருப்பணிசெய்வார்.

(இ-ள்.) திருமலிசெல்வத்துழனி = சிறப்புமிக்கசெல்வமுழக்கம்; தேய்ந்தழிந்த பின்னையும் = நாளுக்குநாள்குறைந்துவந்து முற்றும் இல்லையாயினபின்பும்; தம்பெருமைநிலைத்திருப்பணியில் = தம்முடைய தகுதியியல்புக்குத்தக்க திருப்பணியிலே; பேராதபேராளர் = அகலுதலில்லாத பெருங்கீர்த்தியையுடைய அந்நாயனார்; வருமரபிலுள்ளோர்பாலெண்ணெய்மாறி = உரியதம்மரபினரிடத்து எண்ணெய்வாங்கிவிற்று; கொணர்ந்துதருமியல்பிற்கூலியினால் = முதலைக்கொண்டுவந்து கொடுத்துவிட்டு முறைப்படி அவராற்பெற்றகூலியினாலே; தமதுதிருப்பணிசெய்வார் = தமதுதிருவிளக்குத்தொண்டை இயற்றுவார்-எ-று.

தம்முடைய திரவியமிகுதிக்குத்தக்கபடி உலோபமின்றித் திருத்தொண்டுகளை இயற்றவேண்டுமாகலின் இவர் அங்ஙனமேஇயற்றினாரென்பார், "தம்பெருமைநிலைத்திருப்பணியிற்பேராதபேராளர்" என்றார். (கூ)

வளமுடையார்பாலெண்ணெய்கொடுபோய்மாறிக்கூலி
கொளமுயலுஞ்செய்கையுமற்றவர்கொடாமையின்மாறத்
தளருமனமுடையவர்தாஞ்சக்கரவெந்திரம்புரியுங்
களனில்வரும்பணிசெய்துபெறுங்கூலிகாதலித்தார்.

(இ-ள்.) வளமுடையார்பாலெண்ணெய்கொடுபோய் = செல்வமுடையார்பால் எண்ணெய்வாங்கிச்சென்று; மாறிக்கூலிகொளமுயலுஞ்செய்கையும் = விற்றுக் கூலி பெறமுயலுந் தொழிலும்; அவர்கொடாமையின்மாற = அவர் எண்ணெய் கொடாமையால் அற்றமையின்; தளருமனமுடையவர் = அயர்வுமிக்கமனத்தையுடைய அந்நாயனார்; சக்கரவெந்திரம்புரியுங்களனில் வரும்பணிசெய்து = எண்ணெயாடுமிடத்திலே கிடைத்ததொழில்களையியற்றி; பெறுங்கூலிகாதலித்தார் = பெறுங்கூலியைவிரும்பினார்-எ.று.

மற்று - தாம் - அசைகள். மாற - வினையெச்சத்திரிபு. சக்கரவெந்திரம் - சக்கரமாகியகருவி. சக்கரம் - செக்கு. (க0)

செக்குநிறையெள்ளாட்டிப்பதமறிந்துதிலதயிலம்
பக்கமெழமிகவுழக்கும்பாண்டில்வருமெருதுய்த்துங்

தக்கதொழிற்பெறுங்கூலிதாங்கொண்டுதாழாமை
மிக்கதிருவிளக்கிட்டார்விழுத்தொண்டுவிளக்கிட்டார்.

(இ-ள்.) விழுத்தொண்டுவிளக்கிட்டார் = மேன்மைபெற்ற தொண்டை விளக்கினவராகிய அந்நாயனார்; செக்குநிறையெள்ளாட்டிப்பதமறிந்து = செக்கிலேநிறைத்த எள்ளையாடிச் சமயமறிந்து; நிலதயிலம்பக்கமெழுமிகவுழந்தும் = பக்கங்களிலே எண்ணெயெழும்படி மிகமுயன்றும்; பாண்டில்வருமெருதுய்த்தும் = செக்கிற்பூட்டப்பட்ட எருதுகளைச்செலுத்தியும்; தொழிற்றக்கபெறுங்கூலிகொண்டு = தொழிற்குத்தக்கபடிகொடுத்த கூலியைக்கொண்டு; மிக்கதிருவிளக்குத்தாழாமையிட்டார் = மேம்பட்ட திருவிளக்கைக் குறையாமலேற்றிவந்தார்-எ-று.

தாம் - அசை. * "விளக்கிட்டார்பேறுசொல்லின் மெய்ஞ்ஞெறிஞானமாகும்" என்பது விழுமியவேதநூற்றுணிபாகலின் திருவிளக்கிடுதற்றொண்டு எத்தொண்டினும் சிறத்தல்பற்றி விழுத்தொண்டென்றார். (கக)

அப்பணியால்வரும்பேறுமவ்வினைஞர்பலருளரா
யெப்பரிசுங்கிடையாதவகைமுட்டவிடருழந்தே
யொப்பின்மனைவிற்றெரிக்குமுறுபொருளுமாண்டதற்பின்
செப்பருஞ்சீர்மனையாரைவிற்பதற்குத்தேடுவார்.

(இ-ள்.) அவ்வினைஞர்பலருளராய் = அத்தொழிலாளிகள் பலருளராகலால்; அப்பணியால்வரும்பேறும் = அத்தொழிலால்வருங்கூலியும்; எப்பரிசுங்கிடையாத வகைமுட்டவிடருழந்து = எவ்விதமுயற்சியாலும் கிட்டாதபடி தவறுதலடைய இடருற்று; ஒப்பின்மனைவிற்று = நிகரற்றதமதுவீட்டைவிற்று; எரிக்குமுறுபொருளுமாண்டதற்பின் = திருவிளக்கு ஏற்றுதற்குரியதுவாகிய அம்மிக்கபொருளும் செலவழிந்தபின்; செப்பருஞ்சீர்மனையாரை = உரைப்பதற்கரிய சீர்த்தியையுடைய மனைவியாரை; விற்பதற்குத்தேடுவார் = விலைப்படுத்துதற்குப் பிரயத்தனிப்பார்.எ-று.

உளராயென்பது வினையெச்சத்திரிபு. பரிசு என்புழி மூன்றனுருபும் முற்றும்மையும் விகாரத்தாற்றொக்கன. ஏ - அசை. எரிக்குமுறுபொருளெனக் காரியத்தைக் காரணமாகவுபசரித்தார். தேடுதல் - ஈண்டுப் பிரயத்தனத்தின்மேற்று. (கஉ)

மனமகிழ்ந்துமனைவியார்தமைக்கொண்டுவளநகரிற்
றனமளிப்பார்தமையெங்குங்கிடையாமற்றளர்வெய்திச்
சினவிடையார்திருக்கோயிற்றிருவிளக்குப்பணிமுட்டக்
கனவினுமுன்பறியாதார்கையறவாலெய்தினார்.

(இ-ள்.) மனமகிழ்ந்துமனைவியார்தமைக்கொண்டு = சிந்தையுவந்து பத்தினியை வாங்கிக்கொண்டு; தனமளிப்பார்தமை = திரவியமளிப்பாரை; வளநகரிலெங்குங்கிடையாமற்றளர்வெய்தி = வளமைபெற்றநகரிலே எங்கும் பெறாமையால் மனம் வாடி; சினவிடையார் = சினத்தலையுடைய இடபவாகனராகிய சிவபெருமானது; திருக்கோயிற்றிருவிளக்குப்பணி = திருக்கோயிலிலிடும் திருவிளக்குத்தொண்டு; முன்கனவினுமுட்டவறியாதார் = இதற்குமுன் கனவினும் தடைப்படக்காணாத அந்நாயனார்; கையறவாலெய்தினார் = யாதொருசெயலுமின்றிமீண்டார்-எ-று.

கையறவு - செயலறுதல். (கங)

* திருநாவுக்கரசுநாயனார்தேவாரம் பொது திருநேரிசை.

பணிகொள்ளும்படம்பக்கநாயகர்தங்கோயிலினு
ளணிகொள்ளுந்திருவிளக்குப்பணிமாறுமமையத்தின்
மணிவண்ணச்சுடர்விளக்குமாளிலியான்மாள்வனெனத்
துணிவுள்ளங்கொளநினைந்தவ்வினைமுடிக்கத்தொடங்குவார்.

(இ-ள்.) பணிகொள்ளும்படம்பக்கநாயகர்தங்கோயிலினுள் = தம்மைத்தொண்டுகொள்ளும் படம்பக்கநாதர்சந்நிதியினுள்ளே; அணிகொள்ளுந்திருவிளக்குப்பணி மாறுமமையத்தில் = அலங்காரம்பெற்ற திருவிளக்குக்களை ஏற்றும் அவ்வேளையில்; மணிவண்ணச்சுடர்விளக்குமாளில்=இரத்தினம்போலும் செவ்வியகாந்திபெற்ற திருவிளக்குப்பணி தடைப்படின்; யான்மாள்வனெனத்துணிவுள்ளங்கொளநினைந்து= யான்மாளக்கடவேனென்று மனத்திலே துணிவுபெறச்சிந்தித்து; அவ்வினைமுடிக்கத்தொடங்குவார் = அத்தொண்டைமுடிக்கமுயல்வார்-எ-று.

பாம்பையணிந்தபடம்பக்கநாதரெனினும் அமையும். அணி - வரிசையுமாம். பணிமாறல்-ஏற்றுதல். அமையத்தில் தொடங்குவார் என இயையும். (௧௪)

திருவிளக்குத்திரியிட்டங்ககல்பரப்பிச்செயனிரம்ப
வொருவியவெண்ணெய்க்குடமாவுடலுதிரங்கொடுநிறைக்கக்
கருவியினான்மிடறரியவக்கையைக்கண்ணுதலார்
பெருகுதிருக்கருணையுடனேர்வந்துபிடித்தருளி.

(இ-ள்.) திருவிளக்குத்திரியிட்டு = திருவிளக்கேற்றுதற்குரிய திரிகளையிட்டு; அங்ககல்பரப்பி = அங்கே அகல்களைப்பரப்பி; செயனிரம்ப = தமதுதொண்டுபூர்த்தியாகும்படி; ஒருவியவெண்ணெய்க்குடமாவுடல் = கிட்டாதொழிந்த எண்ணெய் நிரம்பியகுடமாக உடலை எண்ணி; உதிரங்கொடுநிறைக்க=அதனுதிரத்தைக்கொண்டு அகல்களைநிறைத்தற்கு; கருவியினான்மிடறரிய=அரிவாளினால் கழுத்தையரிய; கண்ணுதலார் = கண்பெற்றநெற்றியையுடையகடவுளார்; பெருகுதிருக்கருணையுடனேர் வந்துஅக்கையைப்பிடித்தருளி=ஓங்கியதிருவருளுடன் பிரசன்னராகி அக்கரத்தைப்பற்றியருளி. எ-று.

செயனிரம்ப அரிய எனஇயையும். (௧௫)

மற்றவர்தமுன்னாகமழவிடைமேலெழுந்தருள
வுற்றவூறதுநீங்கியொளிவிளங்குமுச்சியின்மேற்
பற்றியவஞ்சலியினராய்நின்றவரைப்பரமர்தாம்
பொற்புடையசிவபுரியிற்பொலிந்திருக்கவருள்புரிந்தார்.

(இ-ள்.) அவர்தமுன்னாகமழவிடைமேலெழுந்தருள = அந்நாயனார்முன்பு இளமைவாய்ந்த இடபவாகனத்தின்மேலெழுந்தருளுதலும்; உற்றவூறதுநீங்கி = அரிதலாலுண்டாகிய பழுதகன்று; ஒளிவிளங்குமுச்சியின்மேல்=காந்திவிளங்கப்பெற்ற உச்சியின்மீது; பற்றியவஞ்சலியினராய்நின்றவரை=குவித்தகரங்களையுடையராய் நின்ற நாயனார்க்கு; பரமர்பொற்புடையசிவபுரியிற்பொலிந்திருக்கவருள்புரிந்தார்= சிவபெருமான் மேன்மைபெற்ற சிவலோகத்திலே சிறந்திருக்கும்படி திருவருள்பாலித்தார்.

கண்ணுதலார்நேர்வந்து முன்னர்க்கையைப்பிடித்தருளிப் பின்னர் அவரெதிரே இடபவாகனத்தில் விளங்கித் திருவருள் புரிந்தாரென்பது கருத்து. மற்று - அசை. நின்றவரை வேற்றுமை மயக்கம். (௧௬)

தேவர்பிரான்றிருவிளக்குச்செயன்முட்டமிடறரிந்து
மேவரியவினைமுடித்தார்கழல்வணங்கிவியனுலகில்
யாவரெனு தரனடியார்தமையிகழ்ந்துபேசினரை
நாவரியுஞ்சத்தியார்திருத்தொண்டினலமுரைப்பாம்.

(இ-ள்.) தேவர்பிரான்றிருவிளக்குச் செயன்முட்ட = தேவாதிபருக்குரியதிருவிளக்குப்பணிமுட்டுப்பட;மிடறரிந்து மேவரியவினைமுடித்தார் கழல்வணங்கி = உடனே கழுத்தையரிந்து தாம்மேற்கொண்ட அரியதொண்டைமுடித்த கலியநாயனருடைய திருக்கழல்களைப்பணிந்து; வியனுலகில் = விசாலமாகிய பூமியிலே; அரனடியார்தமையிகழ்ந்துபேசினரை = சிவனடியவர்களையிகழ்ந்துகூறினவர்களை; யாவரெனு துநாவரியும் = இவர் யாவரென்றுநோக்காது அவர்நாவையரியும்; சத்தியார்திருத்தொண்டினலமுரைப்பாம் = சத்திநாயனருடைய திருத்தொண்டின் சிறப்பைச் சாற்றுவாம். எ-று.

மேவரியவினை-பிறரால் செயற்கரியவினை என்னலுமொன்று. இகழ்ந்து பேசினோர் எத்துணைச்சிறப்பினரேனும் அவரியல்புநோக்காது நாவரிபவரென்பார் யாவரெனு து நாவரியுஞ் சத்தியார் என்றார். (௧௭)

## கலியநாயனார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் - ௮௬௭.

---

# சத்திநாயனார்புராணம்.

களமர்கட்டகமலம்பொழிந்ததேன்
குளநிறைப்பதுகோலொன்றிலெண்டிசை
யளவுமாணைச்சயத்தம்பநாட்டிய
வளவர்காவிரிநாட்டுவரிஞ்சையூர்.

(இ-ள்.) கோலொன்றில் = தமது செங்கோலொன்றினால்; எண்டிசையளவுமாணைச் சயத்தம்பநாட்டிய = எட்டுத்திக்கு வரையும் ஆக்கினையாகிய வெற்றித்தம்பம் நாட்டிய; வளவர் காவிரிநாட்டு வரிஞ்சையூர் = சோழமன்னவர்க்குரிய காவிரிசூழ்ந்த சோணாட்டிலுள்ள வரிஞ்சையூரானது; களமர்கட்டகமலம் பொழிந்ததேன் = மள்ளராற் களையப்பட்ட தாமரைமலர் சொரிந்ததேன்; குளநிறைப்பது = தடாகங்களை நிறைக்கத்தக்கது. எ-று.

கடுதல் - களைதல். செங்கோலுடைமையால் எண்டிசையளவும் தமதாக்கினை சென்றமையின், ஆங்காங்குத் தமதுவெற்றித்தம்பம் நாட்டினாரென்பார், "கோலொன்றி லெண்டிசையளவும் சயத்தம்ப நாட்டியவளவர்" எனச் சாதுரியம்பட வுரைத்தார். (௧)

வரிஞ்சையூரினில்வாய்மைவேளாண்குலம்
*பெருஞ்சிறப்புப்பெறப்பிறப்பெய்தினார்

விரிஞ்சன்மான்முதல்விண்ணவரெண்ணவு
மருஞ்சிலம்பணிசேவடிக்காட்செய்வார்.

(இ-ள்.) வரிஞ்சையூரினில் வாய்மைவேளாண்குலம் = வரிஞ்சையூரிலே சத்தி யந்தவறாத வேளாண்குலமானது; பெருஞ்சிறப்புப் பெறப்பிறப்பெய்தினர் = மிகு மேன்மைபெற அவதரித்தவர்; விரிஞ்சன் மான்முதல் விண்ணவர் = பிரமதேவரும் அச்சுதக்கடவுளும் பிறதேவரும்; எண்ணவுமரும் = சிந்தித்தற்குமரிய; சிலம்பணி சேவடிக்காட்செய்வார்=சிலம்பையணிந்த திருவடிகளுக்கு அடிமைசெய்பவர்.எ-று.

அத்தராகியவங்கணரன்பரை
யித்தலத்திலிகழ்ந்தியம்பும்முறை
வைத்தநாவைவலித்தரிசத்தியார்
சத்தியாரெனுநாமந்தரித்துளார்.

(இ-ள்.) அத்தராகியவங்கணரன்பரை = அனைவர்க்கும் பிதாவாகிய அருட் கண்ணராகும் அமலரது அடியவர்களை; இத்தலத்திலிகழ்ந்தியம்பும் முறைவைத்தநா வை = இப்பூமியிலே இகழ்ந்துகூறும் மொழியைக்கொண்ட நாக்களை; வலித்தரிச த்தியார் = இழுத்து அரிகின்ற வன்மையராகையால்; சத்தியாரெனு நாமந்தரித்து ளார் = சத்தியாரென்னும் திருநாமத்தை உடையவர். எ-று.

சத்தி-வன்மை. ஆயுதமுமாம். (௩)

தீங்குசொற்றதிருவிலர்நாவினை
வாங்கவாங்குதண்டாயத்திறல்வலித்
தாங்கயிற்கத்தியாலரிந்தன்புட
னோங்குசீர்த்திருத்தொண்டினுயர்ந்தனர்.

(இ-ள்.) தீங்குசொற்ற திருவிலர்நாவினை = சிவனடியவர்களை இகழ்ந்துகூறிய சிறப்பிலிகள் நாவை; வாங்கவாங்கு தண்டாயத்திறல் வலித்து = சேதித்தற்கு வளைந்த குறட்டினாலிழுத்து; அயிற்கத்தியாலரிந்து = கூரியகத்தியாலறுத்து; அன்புடனோங்குசீர் = அன்போடுயர்ந்த கீர்த்தி அமைந்த; திருத்தொண்டினுயர்ந்தனர் = திருத்தொண்டில் உயர்ச்சி பெற்றனர். எ-று.

தண்டாயம்-குறடுபோல்வதோர்கருவி - ஆங்கு - அசை. (௪)

அன்னதாகியவாண்மைத்திருப்பணி
மன்னுபேருலகத்தில்வலியுடன்
பன்னெடும்பெருநாள்பரிவாற்செய்து
சென்னியாற்றினர்செந்நெறியாற்றினர்.

(இ-ள்.) அன்னதாகிய வாண்மைத்திருப்பணி = அத்தன்மையதாகிய வன்மை வாய்ந்த திருத்தொண்டை; மன்னுபேருலகத்தில் = நிலைபெற்ற பெரிய இந்நிலவுலக த்திலே; வலியுடன் பன்னெடும் பெருநாள் பரிவாற்செய்து = ஆண்மையோடு மிக வும் நெடுங்காலம் அன்பினாற்செய்து; சென்னியாற்றினர் = திருமுடியிலே கங்கை யைச் செறித்தகடவுளின்; செந்நெறியாற்றினர் - திருத்தொண்டுகளை விர்த்திக்கச் செய்தார். எ-று. (௫)

ஐயமின்றியரியதிருப்பணி
மெய்யினாற்செய்தவீரத்திருத்தொண்டர்

வையமுய்யமணிமன் றுளாடுவார்
செய்யபாதத்திருநிழல்சேர்ந்தனர்.

(இ-ள்.) ஐயமின்றி யரியதிருப்பணிமெய்யினாற்செய்த = சந்தேகமுறாது செயற்கரிய இத்திருத்தொண்டை உள்ளபடியே செய்த; வீரத்திருத்தொண்டர் = ஆண்மைத்திருத்தொண்டராகிய அந்நாயனார்; வையமுய்யமணிமன்றுளாடுவார் = அவனியெல்லாம் ஈடேற அழகிய கனகசபையிலே நடித்தருளுங்கடவுளின்; செய்யபாதத்திருநிழல் சேர்ந்தனர் = சிவந்தபாதத்திருநிழலிலே அடைந்தார். எ-று.

ஐயமின்றிச்செய்தலாவது-சிவனடியவர்களை யிகழ்பவர் சிவாபராதிகளே யாகலின் இவர்நாவை யரிதல் சிவபுண்ணியமேயெனத் தேர்ந்தியற்றல். பல ஆன்மாக்களும் உய்தற்பொருட்டுப் பஞ்சகிர்த்திய பரமானந்ததாண்டவம் புரிபவரென்பார், "வையமுய்யமணிமன்றுளாடுவார்" என்றார். செய்யபாதம்-நடனத்தாற்சிவப்பேறிய பாதம். (௬)

நாயனார்தொண்டரைநலங்கூறலார்
சாயநாவரிசத்தியார்தாள்பணிந்
தாயமாதவத்தையடிகளெனுந்
தூயகாடவர்தந்திறஞ்சொல்லுவாம்.

(இ-ள்.) நாயனார் தொண்டரை நலங்கூறலார்சாய = சிவபெருமானடியவர்களைப் புகழ்ந்து கூறாதவர் சோர்வடைய, நாவரிசத்தியார் = அவர்நாவைத் துணிக்கும் சத்திநாயனாருடைய; தாள்பணிந்து = திருவடிகளைச் சேவித்துக்கொண்டு; ஆயமாதவத்து = ஓங்கிய மிக்கதவத்தினராகிய; ஐயடிகளெனுந் தூயகாடவர்தந்திறஞ் சொல்லுவாம் = தூய்மையமைந்த ஐயடிகள் காடவர்கோனாயனாருடைய சரித்திரத்தை அறைவாம். எ-று. (௭)

சத்திநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம். ௬௩௧.

---

# ஐயடிகள் காடவர்கோனாயனார் புராணம்.

வையநிகழ்பல்லவர்தங்குலமரபின்வழித்தோன்றி
வெய்யகலியும்பகையுமிகையொழியும்வகையடக்கிச்
செய்யசடையவர்சைவத்திருநெறியாலரசளிப்பா
ரையடிகணீதியாலடிப்படுத்துஞ்செங்கோலார்.

(இ-ள்.) ஐயடிகள் = ஐயடிகள்காடவர்கோனாயனார்; வையநிகழ்பல்லவர்தங்குலமரபின் வழித்தோன்றி = அவனியில் விளங்கும் பல்லவகுலமரபிலே அவதரித்து; வெய்யகலியும் பகையு மிகையொழியும் வகையடக்கி = வெவ்விய அநீதியும் பகைமையும் மிக்குப்பரவாவண்ணம் நீக்கி; செய்யசடையார் = சிவந்தசடையினராகிய சிவபெருமானுக்குரிய; சைவத்திருநெறியா லரசளிப்பார் = சைவநெறிவழுவாது அரசளிப்பாராகி; நீதியாலடிப்படுத்துஞ் செங்கோலார் = நீதியாலே உலகைத் தமது குடையின்கீழாக்கிய செங்கோலையுடையவர். எ-று. மிகை-மிகுதல். (௧)

திருமலியும்புகழ்விளங்கச்சேணிலத்திலெவ்வுயிரும்
பெருமையுடனினிதமரப்பிறபுலங்களடிப்படுத்துத்
தருமநெறிதனித்தோங்கத்தாரணிமேற்சைவமுட
னருமறையின்றுறைவிளங்கவரசளிக்குமந்நாளில்.

(இ-ள்.) திருமலியும் புகழ்விளங்க = சிறப்புமிக்கசீர்த்திவிளங்கவும்; சேணிலத்திலெவ்வுயிரும் பெருமையுடனினிதமர = நெடுந்தூரத்திலும் எவ்வகைப்பட்டவுயிர்களும் மேன்மையோடும் இன்புற்று வசிக்கவும்; தருமநெறிதனித்தோங்க = தருமவழிகள் நிகரின்றித் தழைக்கவும்; தாரணிமேற் சைவமுடனருமறையின் றுறைவிளங்க = உலகத்திலே சிவாகமநெறியோடு அரிய வைதிகநெறியும் ஓங்கவும்; பிறபுலங்களடிப்படுத்து = அன்னியதேசங்களையும் தம்வயமாக்கி; அரசளிக்குமந்நாளில் = அரசைச்செலுத்தும் அக்காலத்திலே. எ-று.

சேணிலத்திலுமென்னும் உயர்வுசிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. தனித்தோங்கல் - நிகரின்றித்தழைத்தல். வைதிகத்தின் சாரமாயுள்ளது சைவமாகலின் உடனிசழ்ச்சிப் பொருள்பயக்கும் சொல்லுருபாகிய உடனென்பது தலைமைப்பொருளில்வந்தது. எந்நூற்கும் முன்னூலாகலின் "அருமறை" என்றும், அது உயிர்த்திறங்கட்கியையப் பலதிறப்பட்டு விளங்கலின் "துறைவிளங்க" என்றும் கூறினர். (உ)

மன்னவரும்பணிசெய்யவடநூறென்றமிழ்முதலாம்
பன்னுகலைபணிசெய்யப்பாரளிப்பாரரசாட்சி
யின்னலெனவிகழ்ந்ததனையெழிற்குமரன்மேலிழிச்சி
நன்மைநெறித்திருத்தொண்டுநயந்தளிப்பாராயினார்.

(இ-ள்.) மன்னவரும்பணிசெய்ய = ஏனைஅரசர்களும் ஏவலின்படிநடக்கவும்; வடநூறென்றமிழ் = வடமொழியாகிய ஆரியமும் தென்மொழியாகியதமிழும்; முதலாம் பன்னுகலை பணிசெய்ய = ஆதியாகிய கீர்த்திபெற்ற கலைகள் தம்வயமாகவும்; பாரளிப்பார் = உலகுபுரப்பாராகிய அந்நாயனார்; அரசாட்சியின்னலெனவிகழ்ந்து = அரசைமேற்கொள்ளுதல் அல்லலெனக்கைவிடுத்து; அதனை யெழிற்குமரன்மேலிழிச்சி = அப்பூபாரத்தை அழகின்மிக்க புதல்வன்பாலிருத்தி; நன்மைநெறித்திருத்தொண்டு = நல்லொழுக்கமமைந்த திருத்தொண்டுகளையே; நயந்தளிப்பாராயினார் = காதலித்துப் பாதுகாப்பாராயினார். எ-று.

வடமொழி தென்மொழியென்பன அவ்வத்திசைகளில் பயிலுதல்பற்றிவந்தபெயரென்க. வடமொழிக்கு ஒத்ததென்பார் "தென்றமிழ்" என்றும், வடமொழி தென்மொழிமுதலியவற்றை முற்றுமுணர்ந்தாராகலின், அவை அவர்வசப்பட்டனவென்பார், "கலைபணிசெய்ய" என்றும், தம்முயிர்போல எவ்வுயிரையும் நாடி அநீதிகலவாதுகுறிக்கொண்டு ஆளவேண்டுவதாகிய அரசுரிமையைமேற்கொளின்சிவபிரானை அநவரதமும் வழிபடல்சித்தியாதென விடுத்தனரென்பார், "அரசாட்சியின்னலெனவிகழ்ந்து" என்றும் கூறினாரென்க. (ந)

தொண்டுரிமைபுரக்கின்றார்சூழ்வேலையுலகின்க
ணண்டர்பிரானமர்ந்தருளுமாலயங்களானவெலாங்
கண்டிறைஞ்சித்திருத்தொண்டின்கடனேற்றபணிசெய்தே
வண்டமிழின்மொழிவெண்பாவோரொன்றுவழுத்துவார்.

(இ-ள்.) தொண்டுரிமை புரக்கின்றார் = திருத்தொண்டுகளையே உரிமையாகப் பாதுகாக்கும் அந்நாயனார்; வேலைசூழுலகின்கண் = கடல்சூழ்ந்த இப்பூமியின்கண்ணே; அண்டர்பிரானமர்ந்தருளும் = தேவாதிபராகிய சிவபிரான் வீற்றிருக்கும்; ஆலயங்களானவெலாங்கண்டிறைஞ்சி = திருக்கோயில்களனைத்தையும் தெரிசித்துவணங்கி; திருத்தொண்டின் கடனேற்ற பணிசெய்து = திருத்தொண்டுகளில் அவ்வவ்விடங்கட்குத்தக்க முறைமையையுடைய திருத்தொண்டுகளை இயற்றி; வண்டமிழின்மொழிவெண்பா = செந்தமிழ்மொழியாலாகிய திருவெண்பாக்களை; ஒரொன்றுவமுத்துவார் = அவ்வத்தலங்களைச்சுட்டி ஒவ்வொருவெண்பாவாகப் பாடியருளுவாராய். எ-று. (௪)

பெருத்தெழுகாதலில்வணங்கிப்பெரும்பற்றத்தண்புலியூர்த்
திருச்சிற்றம்பலத்தாடல்புரிந்தருளுஞ்செய்யசடை
நிருத்தனார்திருக்கூத்துநேர்ந்திறைஞ்சிநெடுந்தகையார்
விருப்பினுடன்செந்தமிழின்வெண்பாமென் மலர்புனைந்தார்.

(இ-ள்.) நெடுந்தகையார் = உயர்ந்த தகுதியையுடைய அந்நாயனார்; தண்பெரும்பற்றப் புலியூர் = செவ்விய பெரும்பற்றப் புலியூராகிய சிதம்பரத்திலே; திருச்சிற்றம்பலத்தாடல் புரிந்தருளும் = சிற்சபையிலே திருநிருத்தம் செய்தருளுகின்ற; செய்யசடைநிருத்தனார் திருக்கூத்து = சிவந்தசடைமுடியையுடைய நடராஜப்பிரானது நடனத்தை; பெருத்தெழுகாதலில் நேர்ந்திறைஞ்சி = (தூரத்தேகண்டவுடன்) அதிகரித்த விருப்பால் அஞ்சலிசெய்துகொண்டணுகி; வணங்கி = சமீபித்து நமஸ்கரித்து; விருப்பினுடன் செந்தமிழின்வெண்பா மென்மலர் புனைந்தார் = விழைவினால் செந்தமிழ்த்திருவெண்பாவாகிய மெல்லியமலரைச் சூட்டினார். எ-று.

பதிகமன்றித் தனித்திருவெண்பாவாகலின் மாலையென்னாது மலரென்றார். (௫)

## க்ஷேத்திரத்திருவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

ஓடுகின்ற நீர்மை யொழிதலுமே யுற்றாருங்
கோடுகின்றார் மூப்புங் குறுகிற்று - நாடுகின்ற
நல்லச்சிற் றம்பலமே நண்ணாமு னன்னெஞ்சே
தில்லைச்சிற் றம்பலமே சேர்.

உய்ய மருந்திதனை யுண்மினென வுற்றாருங்
கையிற் பிடித்தெதிரே காட்டியக்கால் - பைய
வெழுந்திருமி யான்வேண்டே னென்னாமு னெஞ்சே
செழுந்திரும யானமே சேர்.

திருச்சிற்றம்பலம்.

அவ்வகையாலருள்பெற்றங்கமர்ந்துசிலநாள்வைகி
யிவ்வுலகிற்றம்பெருமான்கோயில்களெல்லாமெய்திச்
செவ்வியவன்பொடுபணிந்துதிருப்பணியேற்றனசெய்தே
யெவ்வுலகும்புகழ்ந்தேத்துமின்றமிழ்வெண்பாமொழிந்தார்.

(இ-ள்.) அவ்வகையாலருள்பெற்று = அவ்வாறு வழிபட்டுத் திருவருள்பெற்று; அங்கமர்ந்து சிலநாள்வைகி = அங்கே அவாமேலீட்டினால் சிலநாள் வசித்து; இவ்வு

லகிற்றம்பெருமான் கோயில்களெல்லாமெய்தி = இவ்வுலகத்திலே தமதிறைவரமரும் ஆலயங்களனைத்தையுமடைந்து; செவ்வியவன்பொடு பணிந்து ஏற்றன திருப்பணிசெய்து = சிறந்த அன்பினோடுதொழுது தக்க திருப்பணிகளைப் புரிந்து; எவ்வுலகும் புகழ்ந்தேத்து மின்றமிழ்வெண்பா மொழிந்தார் = எவ்வுலகினரும் புகழ்ந்து துதிக்கும் இனிய தமிழாலாகிய திருவெண்பாவைப் பாடியருளினார். எ-று.

ஒடு-கருவிப்பொருளில்வந்தது. ஏ-அசை. உலகு-ஆகுபெயர். (௬)

இந்நெறியாலரனடியாரின்பமுறவிசைந்தபணி
பன்னெடுநாளாற்றிப்பின்பரமர்திருவடிநிழற்கீழ்
மன்னுசிவலோகத்துவழியன்பர்மருங்கணைந்தார்
கன்னிமதில்சூழ்காஞ்சிக்காடவரையடிகளார்.

(இ-ள்.) கன்னிமதில்சூழ்காஞ்சி = அழிவில்லாத மதில்கள் சூழ்ந்த காஞ்சிநகரையாண்ட; காடவரையடிகளார் = ஐயடிகள்காடவர்கோனாயனார்; இந்நெறியாலரனடியாரின்பமுறவிசைந்தபணி = இவ்வாறு சிவனடியவரிதயங்களிக்கத்தக்க திருத்தொண்டை; பன்னெடுநாளாற்றிப்பின் = மிகப்பலதினமியற்றிப் பின்பு; மன்னுசிவலோகத்துப் பரமர்திருவடிநிழற்கீழ் = நிலைபெற்ற சிவலோகத்திலே சிவபெருமான் திருவடிநீழலின்கீழ்; வழியன்பர் மருங்கணைந்தார் = பரம்பரைத்தொண்டரோடு தாமும் ஒருவராக அடைந்தார். எ-று.

கீழணைந்தார் என இயையும். காஞ்சியையாண்ட பல்லவகுலத்தாரிற்சிலர் ஆர்க்காட்டை ஆண்டதுபற்றிக் காடவரெனவும் பெயர்பெற்றாராகலின் அப்பல்லவ குலமரபினராகிய இந்நாயனாரும் காடவர்கோனெனப்பெயர்பெற்றாரென்க. பிற்கூறும் கழற்சிங்கநாயனாரும் இத்தகையரேயாம். பல்லவர் ஆர்க்காட்டை யாண்டமை எட்டுத்தொகையிற் காண்க. (௭)

பையரவமணியாரமணிந்தார்க்குப்பாவணிந்த
வையடிகள்காடவனாரடியிணைத்தாமரைவணங்கிக்
கையணிமான்மழுவுடையார்கழல்பணிசிந்தனையுடைய
செய்தவத்துக்கணம்புல்லர்திருத்தொண்டுவிரித்துரைப்பாம்.

(இ-ள்.) பையரவமணியாரமணிந்தார்க்கு = படத்தையுடைய பாம்பை இரத்தினாபரணமாக அணிந்த இறைவருக்கு; பாவணிந்த = திருவெண்பாமலரைச்சூடிய; ஐயடிகள்காடவனாரடியிணைத்தாமரைவணங்கி = ஐயடிகள் காடவர்கோனாயனாருடைய செந்தாமரைமலர் நிகர்க்கும் உபயதிருவடிகளையும் பணிந்து; கையணிமான்மழுவுடையார் = கரங்களிலே அழகிய மானையும் மழுவையுமுடைய கடவுளின்; கழல்பணிசிந்தனையுடைய = திருப்பாதங்களை வழிபடும் சித்தத்தையுடைய; செய்தவத்துக்கணம்புல்லர் திருத்தொண்டு விரித்துரைப்பாம் = செய்தவத்தினராகும் கணம்புல்லநாயனார் திருத்தொண்டை விரித்துப்புகல்வாம். எ-று.

சிந்தனையுடைய செய்தவமாவது-அச்சிந்தனை மறவாதியற்றுந்தவம் என்க. (௮)

உளத்திலொருதுளக்கமிலோமுலகுய்யவிருண்டதிருக்
களத்துமுதுகுன்றர்தருகனகமாற்றினிலிட்டு
வளத்தின்மலிந்தேழுலகுவணங்குபெருந்திருவாரூர்க்
குளத்திலெடுத்தார்வினையின்குழிவாய்நின்றெனையெடுத்தார்.

(இ-ள்.) உலகுய்யவிருண்டதிருக்களத்து = உலகமுற்றும் பிழைக்க நஞ்சத்தாலிருளூற்ற திருக்கழுத்தையுடைய; முதுகுன்றர்தரு கனகமாற்றினில்விட்டு = பழமலைநாதர்தந்த பொன்னைத் திருமணிமுத்தாநதியிலேயிட்டு; வளத்தின்மலிந்தேழுலகும் வணங்கு = செல்வத்திற்சிறந்து ஏழுலகத்தாரும் இறைஞ்சப்பெறும்; திருவாரூர்ப் பெருங்குளத்திலெடுத்தார் = திருவாரூரிலுள்ள பெரிய கமலாலயதீர்த்தத்திலேயெடுத்த சுந்தரமூர்த்திநாயனார்; வினையின் குழிவாய்நின்றெனையெடுத்தார் = இருவினையாகிய குழியினின்றும் எளியேனை எடுத்தருளினாராகையால்; உளத்திலொரு துளக்கமிலோம் = இனி மனத்திலே ஒரு கலக்கமுமில்லேம். எ-று.

நஞ்சத்தையருந்தியிருளாக்கால் உலகுய்யாவாகலின் "உலகுய்ய விருண்டதிருக்களம்" என்றும், தக்காரையும் தடுமாறிவிழச்செய்வதாகலின் வினையைக் "குழி" என்றும், காரணமாகிய வினையகன்றவழிக் காரியமாகிய மனத்துளக்கம் சிறிதுமின்மையின் "உளத்திலொருதுளக்கமிலோம்" என்றுங்கூறினாரென்க. இட்டுஎடுத்தார் எனஇயையும். ஏழுலகுமருவுபெருந்திருவாரூரென்பது பாடமேல், அது பிருதிவித்தலமாகலின் ஏழுலகிற்கு மூலமாதலை விளக்கினாரெனப் பொருள் கொள்க. வினையின் என்புழி இன் தவிர்வழிவந்த சாரியை. வினை சாதியொருமை. எடுத்தல் மீட்டும் விழாதவண்ணம் உயர்த்தல். பொன்னை ஆற்றிலிட்டுக் குளத்திலெடுத்தார்க்கு என்னை வினைக்குழியிலெடுத்தது வியப்பன்றென்பது குறிப்பெச்சம். (௧)

## ஐயடிகள்காடவர்கோனாயனார்புராணம் முற்றிற்று.

பொய்யடிமையில்லாதபுலவர்சருக்கம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் - ௯௪௦.

கறைக்கண்ட சருக்கம்.

# கணம்புல்லநாயனார்புராணம்.

திருக்கிளர்சீர்மாடங்கடிருந்துபெருங்குடிநெருங்கிப்
பெருக்குவடவெள்ளாற்றுத்தென்கரைப்பாற்பிறங்குபொழில்
வருக்கைநெடுஞ்சுளைபொழிதேன்மடுநிறைத்துவயல்விளைக்கு
மிருக்குவேளூரென்பதிவ்வுலகில்விளங்குபதி.

(இ-ள்.) பெருக்குவடவெள்ளாற்றுத்தென்கரைப்பாற் பிறங்கு = பெருகுதலமைந்த வடவெள்ளாற்றின் தென்கரையிலே விளங்குகின்ற; பொழில்வருக்கைநெடுஞ்சுளைபொழிதேன் = சோலைகளிலுள்ளபலாச்சுளைகள்சொரிந்ததேன்; மடுநிறைத்து வயல்விளைக்கு மிருக்கு வேளூரென்பது = மடுக்களை நிறைத்துப் பயிரை விளைவிக்கும் இருக்குவேளூரெனப்படுவது; திருக்கிளர்சீர்மாடங்கடிருந்து பெருங்குடி நெருங்கி = செல்வம் நிரம்பிய சிறந்தமாடங்களோடு செழித்த பெரியகுடிகள் செறிந்து; இவ்வுலகில் விளங்குபதி = இப்பூமியிலே மிகப்பிரகாசிக்கும் நகரமாகும் எ-று.

பாண்டிநாட்டின் வடவெல்லையாகிய வெள்ளாறொன்று தெற்கிருத்தலின் நடுநாட்டிலுள்ள இது வடவெள்ளாறெனப் பெயர்பெற்றது. (௧)

அப்பதியிற்குடிமுதல்வர்க்கதிபராயளவிறந்த
வெப்பொருளுமுடிவறியாவெய்துபெருஞ்செல்வத்தா
ரொப்பில்பெருங்குணத்தினாலுலகின்மேம்படவெழுந்தார்
மெய்ப்பொருளாவனவீசர்கழலென்னும்விருப்புடையார்.

(இ-ள்.) அப்பதியிற் குடிமுதல்வர்க்கதிபராய் = அப்பதியிலுள்ள பலகுடித்தலைவர்களுக்கும் தாம் தலைவராகி; அளவிறந்த வெப்பொருளும் = எண்ணில்லாத எவ்வகைப்பொருள்களும்; முடிவறியாவெய்துபெருஞ் செல்வத்தார் = முடிவு உணரப்படாதனவாகமொய்த்த பெருஞ்செல்வமுள்ளவர்; ஒப்பில் பெருங்குணத்தினுலகின் மேம்பட நிகழ்ந்தார் = நிகரற்றமேன்மைக் குணத்தினாலே நிலவுலகத்திலேசிறப்புற விளங்கினவர்; மெய்ப்பொருளாவன = உண்மைப்பொருளாவன; ஈசர்கழலென்னும் விருப்புடையார் = உமாபதியினுடைய திருச்சரண்களே யென்னும் சிந்தனையுடையவர். எ-று.

உலகத்துள்ளபொருள்கள் அளவுபடாமையின் "அளவிறந்தவெப்பொருளும்" என்றும், அவற்றுள் ஒவ்வொன்றும் இவர்பால் விர்த்திப்புடையவாகலின், "முடிவறியா" என்றும், பொருளுடையார்க்குக் குணம்வாய்த்தலரிதாக இவர்க்கு அதுவும் மிக்குவாய்த்திருத்தலின், "ஒப்பில்பெருங்குணத்தினால்" என்றும், இத்தகைமைச்சிறப்பினால் எவரும்பாராட்டப்பட்டமையின், "உலகின்மேம்படநிகழ்ந்தார்" என்றும், ஏனைப்பொருளனைத்தும் அநித்தியமும் ஈசர்கழலொன்றும் நித்தியமுமாகலின், "மெய்ப்பொருளாவன ஈசர்கழலென்னும் விருப்புடையார்" என்றும் கூறினார். எப்பொருளுமென்னும் உம்மை முற்றும்மை. (௨)

தாவாதபெருஞ்செல்வந்தலைநின்றபயனிதுவென்
றோவாதவொளிவிளக்குச்சிவன்கோயிலுள்ளெரித்து
நாவாரப்பரவுவார்நல்குரவுவந்தெய்தத்
தேவாதிதேவர்பிரான்றிருத்தில்லைசென்றடைந்தார்.

(இ-ள்.) தாவாதபெருஞ்செல்வம் = குறைவிலாப்பெருஞ்செல்வம்; தலைநின்ற பயனிதுவென்று = நம்மிடத்தே குடிகொண்டதால் அடையப்படும் நலம் இத்தொண்டு புரிவதேயென்று; ஓவாத ஒளிவிளக்குச் சிவன்கோயிலுள்ளெரித்து = குன்றுதலில்லாத ஒளிமிக்கதீபங்களைச் சிவாலயங்களிலேற்றி; நாவாரப் பரவுவார் = வாய்நிரம்பத் துதிப்பார்; நல்குரவுவந்தெய்த = இங்ஙனம் இருக்குநாளில் தரித்திரம் சம்பவிக்க; தேவாதி தேவர்பிரான் = தேவர்க்கும் அவரதிபர்க்கும் தலைவராகிய சிவபிரான் வீற்றிருக்கும்; திருத்தில்லைசென்றடைந்தார் = சிதம்பரத்தை அடைந்தருளினார். எ-று.

நின்றபயனெனக் காரணத்தைக் காரியமாக உபசரித்தார். தேவ அதிதேவர் தேவாதிதேவரென்றாயது தீர்க்கசந்தி. (௩)

தில்லைநகர்மணிமன்றுளாடுகின்றசேவடிக
ளல்கியவன்புடனிறைஞ்சியமர்கின்றார்புரமெரித்த
வில்லியார்திருப்புலீச்சரத்தின்கண்விளக்கெரிக்க
வில்லிடையுள்ளனமாறியெரித்துவருமந்நாளில்.

(இ-ள்.) தில்லைநகர்மணிமன்று ளாடுகின்றசேவடிகள் = சிதம்பரத்தில் அழகிய சிற்சபையிலே நடிக்கும் திருவடிகளை; அல்கியவன்புடனிறைஞ்சி யமர்கின்றார் = நிலைபெற்ற அன்போடும்வணங்கி வசிக்கும் அந்நாயனார்; புரமெரித்தவில்லியார் = திரிபுரதகனஞ்செய்த மேருவில்லையுடைய விமலரது; திருப்புலீச்சரத்தின்கண் விளக்கெரிக்க = திருப்புலீச்சரத்திலே தீபமேற்றுதற்கு; இல்லிடையுள்ளனமாறியெரித்து வருமந்நாளில் = மனையிலுள்ள பொருள்களை விற்றுத் தீபமேற்றி வரும் அக்காலத்திலே. எ-று. (௪)

அல்குதல்-நிலைபெறுதல். திருப்புலீச்சரம்-சிதம்பரத்திலுள்ள வியாக்கிரபாத மாமுனிவருடைய ஆன்மார்த்த தலம். (௩)

ஆயசெயன்மாண்டதற்பினயலவர்பாலிரப்பஞ்சிக்
காயமுயற்சியிலரிந்தகணம்புல்லுக்கொடுவந்து
மேயவிலைக்குக்கொடுத்துவிலைப்பொருளானெய்மாறித்
தூயதிருவிளக்கெரித்தார்துளக்கறுமெய்த்தொண்டனர்.

(இ-ள்.) துளக்கறுமெய்த்தொண்டனர் = சோர்வில்லாத மெய்த்தொண்டராகிய அந்நாயனர்; ஆயசெயன்மாண்டதற்பின் = (விற்றற்குரிய பொருளின்மையால்) அச்செயலும் நீங்கியபின்; அயலவர்பாலிரப்பஞ்சி = அயலவரிடத்தே இரத்தலுக்கு நாணி; காயமுயற்சியலரிந்தகணம்புல்லுக் கொடுவந்து = தேகமுயற்சியாலறுத்த கணம்புல்லைக்கொண்டுவந்து; மேயவிலைக்குக்கொடுத்து = உரியவிலைக்குவிற்று; விலைப்பொருளானெய்மாறி = விற்பனையாலவந்தபொருளால் நெய்வாங்கி; தூயதிருவிளக்கெரித்தார் = பரிசுத்தமாகிய திருவிளக்கேற்றினர். எ-று.

கணம்புல்-ஓர்வகைப்புல். (௪)

இவ்வகையாற்றிருந்துவிளக்கெரித்துவரவங்கொருநாண்
மெய்வ்வருந்தியரிந்தெடுத்துக்கொடுவந்துவிற்கும்பு
லெவ்விடத்தும்விலைபோகாதொழியவுமிப்பணியொழியா
ரவ்வரிபுல்லினைமாட்டியணிவிளக்காயிடவெரிப்பார்.

(இ-ள்.) இவ்வகையாற்றிருந்துவிளக்கெரித்துவரவங்கொருநாள் = இவ்வாறு திருவிளக்கிட்டுவர அங்கொருதினத்திலே; மெய்வருந்தி யரிந்தெடுத்துக்கொடுவந்து விற்கும்புல் = திருமேனிவருந்தி அறுத்துத் தூக்கிக்கொண்டுவந்து விற்கும்அப்புல்; எவ்விடத்தும் விலைபோகாதொழியவும் = யாண்டும் விலைப்படாதாகவும்; இப்பணியொழியார் = இத்திருத்தொண்டு நீங்காராய்; அவ்வரிபுல்லினைமாட்டி = அரிந்து கொண்டுவந்த அப்புல்லையிட்டு; அணிவிளக்காயிட வெரிப்பார் = அழகியதீபம்போலாக எரிப்பாராயினர். எ-று. உம்மைகள் முறையே முற்றும் உயர்வுசிறப்புமாம். (௫)

முன்புதிருவிளக்கெரிக்குமுறையாமங்குறையாமன்
மென்புல்லும்விளக்கெரிக்கப்போதாமைமெய்யான
வன்புபுரிவாரடுத்தவிளக்குத்தந்திருமுடியை
யென்புருகமடுத்தெரித்தாரிருவினையின்றொடக்கெரித்தார்.

(இ-ள்.) இருவினையின்றொடக்கெரித்தார் மெய்யான அன்புபுரிவார் = இருவினைகளின் றொடர்ச்சியைத் தகித்தவரும் உண்மையன்பை விரும்பினவருமாகிய அந்நாயனர்; முன்பு திருவிளக்கெரிக்கு முறையாமம் = இதற்குமுன்னே திருவிளக்கெரிக்கும் யாமஅளவிலே; குறையாமல்விளக்கெரிக்க = குறையாமல்விளக்கெரித்தற்கு; மென்புல்லும்போதாமை = மெல்லிய அப்புல்லும் போதாமையால்; அடுத்தவிளக்குத்தந்திருமுடியை = சார்ந்துள்ள விளக்கிலே தமது திருமுடியை; என்புருக மடுத்தெரித்தார் = எலும்பும் உருகமாட்டி எரித்தார். எ-று.

போதாமை என்புழி மூன்றனுருபும் அடுத்த விளக்கென்புழி ஏழனுருபும் என்பெனபுழி உயர்வுசிறப்பும்மையும் தொக்கன. புல்லுவிளக்கெரிக்க என்பதும்பாடம்.

தங்கள்பிரான்திருவுள்ளஞ்செய்துதலைத்திருவிளக்குப்
பொங்கியவன்புடனெரித்தபொருவிறிருத்தொண்டர்க்கு
மங்கலமாம்பெருங்கருணைவைத்தருளச்சிவலோகத்
தெங்கள்பிரான்கணம்புல்லரினிதிறைஞ்சியமர்ந்திருந்தார்.

(இ-ள்.) தலைத்திருவிளக்கு = தலையாகிய திருவிளக்கை; பொங்கிய வன்புடனெரித்த பொருவிறிருத்தொண்டர்க்கு = ஓங்கிய அன்பினாலே எரித்த ஒப்பில்லாத அந்நாயனாருக்கு; தங்கள்பிரான் திருவுள்ளஞ்செய்து = அவர் குடித்தலைவராகிய சிவபிரான் திருவுள்ளம்விரும்பி; மங்கலமாம் பெருங்கருணை வைத்தருள = மங்கலமாகிய சிறந்த திருவருளைப்பாலிக்க; எங்கள்பிரான் கணம்புல்லர் = எமது முதல்வராகிய அக்கணம்புல்லநாயனார்; இனிதிறைஞ்சிச் சிவலோகத்தமர்ந்திருந்தார் = இனிதுதொழுது சிவலோகத்திலே இன்புற்றிருந்தார். எ-று. (அ)

மூரியார்கலியுலகின்முடியிட்டதிருவிளக்குப்
பேரியாறணிந்தாருக்கெரித்தார்தங்கழல்பேணி
வேரியார்மலர்ச்சோலைவிளங்குதிருக்கடலூரிற்
காரியார்தாஞ்செய்ததிருத்தொண்டுகட்டுரைப்பாம்.

(இ-ள்.) மூரியார்கலியுலகில் = வலியகடல்சூழ்ந்த உலகிலே; பேரியாறணிந்தாருக்கு = பெருங்கங்கையை யணிந்த பிரானுக்கு = முடியிட்ட திருவிளக்கெரித்தார்தம் = திருமுடியையே திருவிளக்காக எரித்த கணம்புல்லநாயனாருடைய; கழல் பேணி = திருக்கழல்களைத் தியானித்து; வேரியார் மலர்ச்சோலைவிளங்குதிருக்கடலூரில் = தேனார்ந்தமலர்செறிந்த சோலைகள்விளங்கும் திருக்கடலூரில் அவதரித்த; காரியார்செய்த திருத்தொண்டு கட்டுரைப்பாம் = காரிநாயனாரியற்றிய திருத்தொண்டை வற்புறுத்தியுரைப்பாம். எ-று. தாம்-அசை. (௯)

கணம்புல்லநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம்-௬௬௬.

## காரிநாயனார்புராணம்.

மறையாளர்திருக்கடலூர்வந்துதித்துவண்டமிழின்
றுறையானபயன்றெரிந்துசொல்விளங்கிப்பொருண்மறையக்
குறையாததமிழ்க்கோவைதம்பெயராற்குலவும்வகை
முறையாலேதொகுத்தமைத்துமூவேந்தர்பாற்பயில்வார்.

(இ-ள்.) மறையாளர்திருக்கடலூர் வந்துதித்து = இந்நாயனார் வைதிகப் பிராமணர் செறிந்த திருக்கடலூரிலே வந்தவதரித்து; வண்டமிழின்றுறையானபயன் றெரிந்து = பண்புவாய்ந்த தமிழின் கூறுபாட்டிலுள்ள பயன்களையுணர்ந்து; சொல் விளங்கிப்பொருண்மறைய = சொல்விளக்கமுற்றுப் பொருண்மறைந்துகிடக்கும்படி; குறையாத தமிழ்க்கோவை = குறைவில்லாத தமிழ்க்கோவைகளை; தம்பெயராற் குலவும்வகை=தம்பெயரால்வழங்குமாறு; முறையாலே தொகுத்தமைத்து=இலக்கணப்படியே கைக்கிளைமுதலிய உறுப்புக்களைத் தொகுத்துப்பாடி; மூவேந்தர்பாற் பயில்வார் =சேர சோழ பாண்டியரென்னும் மூவேந்தரிடத்துஞ் செல்வாராய். எ-று.

தெரிந்து கோவையமைத்து என இயையும். வண்மை-கவின்றோர்க்கு இனிமைபய த்தல் முதலிய குணமுடைமை. துறை-கோவைக்குரிய துறைகளுமாம். பயன்- அவ் வப் பொருட்பயன். (எ)

அங்கவர்தாமகிழும்வகையடுத்தவுரைநயமாக்கிக்
கொங்கலர்தார்மன்னவர்பாற்பெற்றநிதிக்குவைகொண்டு
வெங்கணராவொடுகிடந்துவிளங்குமிளம்பிறைச்சென்னிச்
சங்கரனரினிதமருந்தானங்கள்பலசமைத்தார்.

(இ-ள்.) அவர்மகிழும்வகை = அம்மன்னவர்களிக்கும்படி; அடுத்தவுரை நயமா க்கி = அக்கோவையி லமைந்த பொருள்களை நயமாகவிளக்கி; கொங்கலர்தார் = வாசனை விரிந்த மலர்மாலையணிந்த; மன்னவர்பாற்பெற்ற நிதிக்குவைகொண்டு = அவ்வரசரிடத்தேபெற்ற திரவியங்களைக்கொண்டு; வெங்கணராவொடுகிடந்துவிள ங்குமிளம்பிறை = வெவ்விய கண்களையுடைய பாம்போடு பகைநீங்கி விளங்கும் இளஞ்சந்திரனுறைகின்ற; சென்னிச்சங்கரனர் = திருமுடியையுடைய இறைவர்; இனிதமருந்தானங்கள்பலசமைத்தார் = இன்புற்று வீற்றிருக்கும் ஆலயங்கள்பல வற்றை அமைத்தார். எ-று. அங்கு-தாம்-அசைகள். உரை-ஆகுபெயர். (அ)

யாவர்க்குமனமுவக்குமின்பமொழிப்பயனியம்பித்
தேவர்க்குமுதற்றேவர்சீரடியாரெல்லார்க்கு
மேவுற்றவிருநிதியமிகவளித்துவிடையவர்தங்
காவுற்றதிருக்கயிலைமறவாதகருத்தினராய்.

(இ-ள்.) தேவர்க்குமுதற்றேவர் = தேவாதிபராகிய சிவபெருமானுடைய; சீரடி யாரெல்லார்க்கும் = சீர்த்திமிக்க அடியவர்க்கெல்லாம்; யாவர்க்கு மனமுவக்கும் = எவர்க்கும் உளமகிழ்தற் கேதுவாகிய; இன்பமொழிப் பயனியம்பி = இனிய சொற் களைப் பயனிரம்பவுரைத்து; மேவுற்ற விருநிதிய மிகவளித்து = விரும்பிய பெருந்தி ரவியங்களைமிகவுமீந்து; விடையவர்தங்காவுற்ற திருக்கயிலை = இடபவாகனராகிய இறைவர்வீற்றிருக்கும்சோலைசூழ்ந்த திருக்கயிலைமலையை; மறவாதகருத்தினராய் = மறவாதசிந்தனை யுடையராய். எ-று.

உவக்கும் இன்பமொழியெனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார். அடியா ரெல்லார்க்கும் இயம்பியளித்து என இயையும். மேவல்-விரும்பல். விடையவர் தாங் காவுற்ற என்பதுபாடமேல், விடையவர் அன்பரைக் காத்தலுடையராயமரும் கயிலை என்க. பயனிரம்பவுரைத்தல் - தம்போலவே பலரும் பெருமானுக்கு ஆலய மமைத் தலும் அடியரைப்பேணலுமாகிய பயனுடையராக இன்சொல்லால் இனிது கூறல். அங்ஙனம் இயம்பிப்பெற்ற நிதியம் என்னலுமாம். (௯)

ஏய்ந்தகடல்சூழுலகிலெங்குந்தம்மிசைநிறுத்தி
யாய்ந்தவுணர்விடையறாவன்பினராயணிகங்கை
தோய்ந்தநெடுஞ்சடையார்தமருள்பெற்றதொடர்பினால்
வாய்ந்தமனம்போலுடம்பும்வடகயிலைமலைச்சார்ந்தார்.

(இ-ள்.) ஏய்ந்த கடல்சூழுலகில் = நீர்நிரம்பிய கடல்சூழ்ந்த நிலவுலகத்திலே; எங்குந் தம்மிசைநிறுத்தி = யாண்டும் தமது கீர்த்தியைநாட்டி; ஆய்ந்தவுணர்வு = நூல்களை ஆராய்ந்துபெற்ற நுண்ணிய வுணர்ச்சியால்; இடையறாவன்பினராய் = இடைவிடாதஅன்பை இயைந்தவராகி; அணிகங்கைதோய்ந்தநெடுஞ்சடையார்தம் =

அழகிய கங்காநதிகுடிகொண்ட நெடுஞ்சடையாராகிய அமலரது; அருள்பெற்ற தொடர்பினால் = திருவருள்பெற்ற தொடர்ச்சியால்; வாய்ந்தமனம்போலுடம்பும் வடகயிலைமலைச் சார்ந்தார் = அமைதிபெற்றமனம்போலத் திருமேனியும் வடகயிலை மலையிலே அடையப்பெற்றார். எ-று.

நால் அவாய்நிலையாய்வந்தது. (அவாய்நிலை-ஒருசொல் மற்றொருசொல்லை அவாவிநிற்றல்.) உணர்வாலென மூன்றனுருபு விரிக்க. அன்பினரா யருள்பெற்ற என இயையும். முன்னர் மறவாக்கருத்தால் மனம் வதிந்தவாறு இப்பொழுது உடலமும் வடகயிலையில் வதியப்பெற்றார் என்பது கருத்து. (௪)

வேரியார்மலர்க்கொன்றைவேணியாரடிபேணுங்
காரியார்கழல்வணங்கியவரளித்தகருணையினால்
வாரியார்மதயானைவழுதியர்தமதிமரபிற்
சீரியார்நெடுமாறர்திருத்தொண்டுசெப்புவாம்.

(இ-ள்.) வேரியார்கொன்றைமலர் = வாசனைநிரம்பிய கொன்றைமலரையணிந்த; வேணியாரடிபேணும் = சடையையுடைய சிவபெருமான் திருவடிகளைச் சார்ந்த; காரியார்கழல்வணங்கி = காரிநாயனார் திருக்கழல்களைத் தொழுது; அவரளித்த கருணையினால் = அவர்பாலித்த திருவருள்கொண்டு; மதவாரியார்யானை = மதவெள்ளம்வாய்ந்த யானையையுடைய; வழுதியர்தமதிமரபில் = பாண்டியர்களுக்குரிய சந்திரவமிசத்தில் அவதரித்த; சீரியார்நெடுமாறர் திருத்தொண்டுசெப்புவாம் = நின்றசீர் நெடுமாறநாயனார் திருத்தொண்டைக் கூறுவாம். எ-று.

கருணையினால் செப்புவாம் என இயையும். வாரி-வெள்ளம். சீரியார்-சீரினர்.

காரிநாயனார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் - கஉ௪.

---

# நின்றசீர் நெடுமாறநாயனார் புராணம்.

தடுமாறுநெறியதனைத்தவமென்றுதமமுடலை
யடுமாறுசெய்தருளுமவர்வலையிலகப்பட்டு
விடுமாறுதமிழ்விரகர்வினைமாறுங்கழலடைந்த
நெடுமாறனார்பெருமையுலகேழுநிகழ்ந்ததால்.

(இ-ள்.) தடுமாறு நெறியதனைத் தவமென்று = தடுமாற்றத்தையுடைய நெறியைத்தவநெறியெனக்கொண்டு; தம்முடலை யடுமாறுசெய்தொழுகுமவர் வலையில் அகப்பட்டு = தமதுடலை வருத்துஞ் செய்கையைப்புரிந்தொழுகும் சமணர்வலையிலே முன்னர்ச்சிக்கி; விடுமாறு=பின்னர் அதுநீக்கும்படி; தமிழ்விரகர் = முத்தமிழுணர்ச்சியினராகிய ஆளுடைய பிள்ளையாரது; வினைமாறுங்கழலடைந்த = எவர்க்கும் இருவினையை நிவர்த்திக்கும் திருவடிகளையடைந்த; நெடுமாறனார்பெருமையுலகேழுநிகழ்ந்தது = நின்றசீர்நெடுமாறநாயனார் பெருமை ஏழுலகத்தும் விளங்கியது. எ-று.

தடுமாற்றநெறியாவது பொருட்டுணிவின்றி அஸ்திநாஸ்தியெனமயங்கிக்கூறுங் கொள்கை. அமண்சமயம் தவத்திற்கு முக்கிய அங்கமாகிய கொல்லாமையை உடை

யதுபோலக்காட்டி அணுகியவழி அனைவரையும் அகலாது பிணித்து அல்லற்படுத்துவதாகலின் அதனை வலையென்றார். மாற்றுமென்னும் பிறவினை மாறுமெனத் தன்வினையாய்த் திரிந்தது. வினைமாற்றுங் கழலென்பதனை, "சயமிக்குத்தரு சுரைமுருகிய தமிழ்பயிற்றிய நாவன்-வியலியற்றிரு மருகலிற்கொடு விடமழித்தருளீதன்-சயலுடைப்புனல் வயல்வளத்தகு கழுமலப்பதி நாத-னியல்புடைக்கழ றொழுகினைப் பல சிருவினைத்துயர் போமே" என நம்பியாண்டார் நம்பிகள் அருளியவாற்றானும் உணர்க. (க)

அந்நாளிலாளுடையபிள்ளையாரருளாலே
தென்னாடுசிவம்பெருகச்செங்கோலுய்த்தறமளித்துச்
சொன்னாமநெறிபோற்றிச்சுரர்நகர்க்கோன்றனைக்கொண்ட
பொன்னாரமணிமார்பிற்புரவலனார்பொலிகின்றார்.

(இ-ள்.) சுரர்நகர்க்கோன் றனைக்கொண்ட = தேவநகர்த்தலைவனாகிய இந்திரனாற்பெற்ற; பொன்னாரமணி மார்பிற் புரவலனார் = பொன்னாரமணிந்த மார்பினையுடைய அப்பாண்டியனார்; அந்நாளி லாளுடையபிள்ளையாரருளால் = அக்காலத்திலே திருஞானசம்பந்த வள்ளலாருடைய திருவருளினால்; தென்னாடுசிவம்பெருகச் செங்கோலுய்த்து=தென்னாடுமுழுமையும் சைவசமயம் அபிவிர்த்தியடையச் செங்கோல்செலுத்தி; அறமளித்து = தருமங்களைத் தழைப்பித்து; சொன்னாமநெறிபோற்றிப் பொலிகின்றார் = சீர்த்திபெற்ற பஞ்சாக்கர உச்சாரண நெறியைப்பாதுகாத்து விளங்கினார். எ-று.

சிவசம்பந்தமாகிய சைவசமயத்தைச் சிவமென்றுபசரித்தார். கோன்றனை-வேற்றுமைமயக்கம். தமிழ்நாட்டில் மழைமறுத்தலால் அகத்தியமாமுனிவ ரருளியபடியே சோமவாரவிரதமனுட்டித்து உக்கிரபாண்டியர் அம்மழைவேண்டிச் சேரசோழவேந்தர்களுடனே தாமும் இந்திரன்சபையை யடைந்து, அவன் காட்டிய தவிசில் ஏனையிருவர்போன்றிராது அவனுடன் ஒருங்கிருந்தவழி அவன் பொறாமைகொண்டு, வரிசையளிப்பான்போலளித்த தாங்குதற்கரிய பொன்னாரத்தை மலர்மாலைபோற்றாங்கினாராகலின், அவர்சந்ததியாராகிய இவரும் அதனையணிதல்பற்றி, "சுரர்நகர்க்கோன்றனைக்கொண்ட பொன்னாரமணி மார்பிற்புரவலனார்" என்றார். இச்சரித்திர விரிவையும் நான்காவது ஐந்தாவது செய்யுள்களிற் கூறும் சரித்திரவிரிவையும் திருவிளையாடற்புராணத்துணர்க. (உ)

ஆயவரசளிப்பார்பாலமர்வேண்டிவந்தேற்ற
சேயபுலத்தெவ்வரெதிர்நெல்வேலிச்செருக்களத்துப்
பாயபடைக்கடன்முடுகும்பரிமாவின்பெருவெள்ளங்
காயுமதக்களிற்றினிரைபரப்பியமர்கடக்கின்றார்.

(இ-ள்.) ஆயவரசளிப்பார்பால் = அபிவிர்த்தியாகிய அவ்வரசைச் செலுத்தும் அந்நாயனார் தம்மிடத்தே; அமர்வேண்டி வந்தேற்ற = போரைவிரும்பிவந்தெதிர்த்த; சேயபுலத்தெவ்வரெதிர் = வடதேசத்துப் பகைவரெதிரே; நெல்வேலிச்செருக்களத்து = திருநெல்வேலியுத்தகளத்தில்; பாயபடைக்கடல் = பரவியசேனாசமுத்திரங்களையும்; முடுகும்பரிமாவின் பெருவெள்ளம் = வேகங்கொண்ட குதிரைகளின் மிகுவெள்ளத்தையும்; காயுமதக்களிற்றினிரைபரப்பி = சீறுகின்றமதயானைகளின் அணிகளையும் எங்கும் செறிவித்து; அமர்கடக்கின்றார் = பகைவர் தொடங்கிய போரை ஒழிப்பாராயினார். எ-று.

தென்புலத்திற்குச் சேய்மையது வடபுலமேயாகலின், வடபுலத்தைச் சேயபுல மென்றார். பதாதிகளினும் பரிமாமுதலியவை குறையக்கொண்டு பொருதல் பொருதலில்வல்லா ரியல்பாகலின் பதாதியைக்கடலெனவும் பரிமாவை வெள்ளமெனவும் களிற்றை நிரையெனவும் கூறினார். நிரையைக் கரையாக உவமித்திருக்கலாம்.

எடுத்துடன்றமுனைஞாட்பினிருபடையிற்பொருபடைஞர்
படுத்தநெடுங்கரித்துணியும்பாய்மாவினறுகுறையு
மடுத்தமர்செய்வயவர்கருந்தலைமலையுமலைசெந்நீர்
மடுத்தகடன்மீளவுந்தாம்வடிவேல்வாங்கிடப்பெருக.

(இ-ள்.) எடுத்துடன்ற முனைஞாட்பின் = போர்தொடங்கிப்பொருத யுத்தகளத்திலே; இருபடையிற் பொருபடைஞர்படுத்த = இருசேனைகளிலும் போரியற்றும் வீரர்கள் துண்டித்த; நெடுங்கரித்துணியும் = நெடிய யானைக்குறைகளும்; பாய்மாவினறுகுறையும் = பாயுங் குதிரைகளின் அற்றகுறைகளும்; அடுத்தமர்செய் வயவர்கருந்தலைமலையும் = தலைகந்துபோர்புரிகின்ற வீரர்களின் பெரியதலைமலைகளும்; அலைசெந்நீர்மடுத்தகடல் = அலைகின்ற குருதிநீர் கலக்கப்பெற்ற கடலானது; மீளவும்தாம் = உக்கிரபாண்டியர்போலத் தாமும் பின்னும் ஒருமுறை; வடிவேல்வாங்கிடப்பெருக = வடித்தவேலாயுதத்தை எடுத்து விடுக்கும்படி பெருகுதலடைய. எ-று.

கருமை - பெருமை. மீளவுமென்னும் உம்மை இறந்ததுதழீஇயது. மீண்டும் என்பதும் பாடம். (௪)

வயப்பரியின்களிப்பொலியுமறவர்படைக்கலவொலியுங்
கயப்பொருப்பின்முழக்கொலியுங்கலந்தெழுபல்லியவொலியும்
வியக்குமுகக்கடைநாளின்மேகமுழக்கெனமீளச்
சயத்தொடர்வல்லியுமின்றுதாம்விடுக்கும்படிதயங்க.

(இ-ள்.) வயப்பரியின்களிப்பொலியும் = வெற்றிபெற்ற குதிரைகளின் களிப்பானிகழும் முழக்கமும்; மறவர்படைக்கலவொலியும் = வீரர்களுடைய ஆயுதங்கள் ஒன்றோடொன்று தாக்குதலிலுண்டாகிய முழக்கமும்; கயப்பொருப்பின் முழக்கொலியும் = மலைபோலும் யானைகளின் பிளிறுமுழக்கமும்; கலந்தெழு பல்லியவொலியும் = கலப்புற்றோங்கிய பலவாத்தியங்களின் முழக்கமும்; வியக்குமுகக்கடைநாளின் மேகமுழக்கென = அதிசயிக்கும் யுகாந்தநாளிலுண்டாகும் மேகமுழக்கம்போலுமெனச் சிந்தித்து; சயத்தொடர்வல்லியும் = வீரச்சங்கிலிகளையுடையதோர் விலங்கையும்; மீளவின்று தாம் விடுக்கும்படி தயங்க = மீட்டும் இப்பொழுது தாம் விடுக்கும் வண்ணம் ஒலிக்க. எ-று.

முழக்கெனத்தயங்க என இயையும். யுகாந்தமேகமுழக்கினும் மிக்கமுழக்கம் பிறிதின்மையின் அது வியத்தற்கேதுவாவ தென்பார், காரியத்தைக் காரணமாக உபசரித்து, "வியக்குமுகக்கடைநாளின் மேகமுழக்கு" என்றார். இது அம்மேகமுழக்கமோவெனக்கருதி (உக்கிரபாண்டியர்போல்) அவற்றைச் சிறையிடுதற்கு விலங்கை விடுக்கும்படி நால்வகையொலியும் ஒலிக்க எனமுடிக்க. வல்லியுமென்னும் உம்மை மேற்செய்யுளிற்போல இறந்ததுதழீஇய எச்சவும்மை. (௫)

தீயுமிழும்படைவழங்குஞ்செருக்களத்துமுருக்குமுடன்
றோயுநெடுங்குருதிமடுக்குளித்துநிணந்துய்த்தாடிப்
போயபருவம்பணிகொள்பூதங்களேயன்றிப்
பேயுமரும்பணிசெய்யவுணவளித்ததெனப்பிறங்க.

(இ-ள்.) போயபருவம் = நேர்ந்த அக்காலத்திலே; பணிகொள் பூதங்களே யன்றிப்பேயும் = போர்த்தொழிலைமேற்கொண்ட பூதங்களேயல்லாமற் பேய்களும்; தோயுநெடுங்குருதிமடுக்குளித்து = உறைந்துள்ள நெடிய உதிரமடுவிலே மூழ்கி; பிணந்துய்த்தாடி = பிணங்களையுருந்திக் கூத்தாடி; அரும்பணிசெய்ய = தம்முடைய அரிய ஏவலைச்செய்ய; உணவளித்ததென = அவற்றிற்கு உணவளித்ததுபோல; தீயுமிழும்படைவழங்குஞ் செருக்களத்து = அக்கினியைச் சொரிகின்ற ஆயுதங்களை விடுக்கும் யுத்தகளத்திலே; முருக்குமுடல் பிறங்க = அழித்தவுடல்கள் விளங்க. எ-று.

அளித்ததென வுடல் பிறங்க என இயையும். இவ்வடபுலவேந்தர்கள் சேனைப் பெருக்கமும் வன்மைத்திறமு முடையராதல்பற்றி, இந்நாயனார்திருநெல்வேலியுறையும் வேணுவனேசரைப் பிரார்த்தித்தவழி, அப்பெருமான் பூதகணமுதலியோரைவிடுக்க, அவர் படைத்துணைவராகி எதிர்த்துவந்த பகைவரை வென்றனரென்பது அத்தலபுராண சரித்திரமாகலின், போயபருவமென்பதற்கு நேர்ந்த அக்காலமெனப் பொருள்கொண்டு, அகரச்சுட்டுவருவிக்க. போதல்-ஈண்டு நேர்தலின்மேற்று. பேயுமென்னும் உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. (௬)

இனையகடுஞ்சமர்விளையவிகலுழந்தபறந்தலையிற்
பனைநெடுங்கைமதயானைப்பஞ்சவனார்படைக்குடைந்து
முனையழிந்தவடபுலத்துமுதன்மன்னர்படைசரியப்
புனையுநறுந்தொடைவாகைபூழியர்வேம்புடன்புனைந்து.

(இ-ள்.) இனையகடுஞ்சமர்விளைய விகலுழந்த பறந்தலையில் = இத்தன்மையவாகிய கடும்போர் நிகழப் பொருதயுத்தகளத்திலே; பனைநெடுங்கைமதயானை = பனைபோலும் நெடியகைபடைத்த மதகயத்தையுடைய; பஞ்சவனார்படைக்குடைந்து = இப்பாண்டிய குலாதிபரது சேனைக்குத்தோற்று; முனையழிந்த முதல்வடபுலத்து மன்னர்படைசரிய = போரிழந்த முதன்மைபெற்ற வடபுலவேந்தர்சேனை ஓடிப்போக; பூழியர் = அப்பாண்டியனார்; புனையுநறும் வாகைத்தொடை = அலங்கரித்த நன்மணமிக்க வெற்றிமாலையை; வேம்புடன்புனைந்து = தமக்குரிய வேப்பமாலையோடுந்தரித்து. எ-று. (எ)

வளவர்பிரான்றிருமகளார்மங்கையருக்கரசியார்
களபமணிமுலைதிளைக்குந்தடமார்பிற்கவுரியனா
ரிளவளவெண்பிறையணிந்தார்க்கேற்றதிருத்தொண்டெல்லா
மளவில்புகழ்பெறவிளக்கியருள்பெருகவரசளித்தார்.

(இ-ள்.) வளவர்பிரான்றிருமகளார் மங்கையருக்கரசியார் = சோழகுலாதிபரது திருமகளாராகிய மங்கையர்க்கரசியாருடைய; களபமணிமுலைதிளைக்கும் = கலவையணிந்த தனங்களனுபவிக்கும்; தடமார்பிற் கவுரியனார் = அகன்ற மார்பினையுடைய அப்பாண்டியனார்; வளவிளவெண்பிறையணிந்தார்க்கேற்ற = வளம்பெற்ற வெள்ளிய இளம்பிறையணிந்த அமலருக்கியைந்த; திருத்தொண்டெல்லாம் = திருத்தொண்டுகளையெல்லாம்; அளவில் புகழ்பெறவிளக்கி = எல்லையில்லாதகீர்த்தியுண்டாக இயற்றி; அருள்பெருகவரசளித்தார் = திருவருள்விர்த்தியாக அரசுசெலுத்தினார். எ-று.

திரைசெய்கடலுலகின்கட்டிருநீற்றினெறிவிளங்க
வுரைசெய்பெரும்புகழ்விளக்கியோங்குநெடுமாறனா
ரரசுரிமைநெடுங்காலமளித்திறைவரருளாலே
யரசுபெருஞ்சிவலோகத்தின்புற்றுப்பணிந்திருந்தார்.

(இ-ள்.) திரைசெய்கடலுலகின்கண் = அலைகள்மோதும் கடல்சூழ்ந்த அவனியிலே; திருநீற்றினெறிவிளக்க = திருநீற்றினெறியாகிய சைவசமயம் சிறக்க; உரைசெய் பெரும்புகழ்விளக்கி = எவரும் வியக்கும் பெரிய கீர்த்தியைப்பிரகாசப்படுத்தி; ஒன்குநெடுமாறனார் = மேன்மையுற்ற நெடுமாறநாயனார்; அரசுரிமைநெடுங்காலமளித்து = அரசுரிமையை வெகுகாலம் மேற்கொண்டு வீற்றிருந்து; இறைவரருளால் = சிவகிருபையால்; பரசுபெருஞ்சிவலோகத்து = துதிபெற்ற மிக்க சிவலோகத்திலே; பணிந்தினபுற்றிருந்தார் = சிவபெருமானை வணங்கிக்களித்திருக்கப் பெற்றார். எ-று. ()

பொன்மதில்சூழ்புகலிகாவலரடிக்கீழ்ப்புனிதராந்
தென்மதுரைமாறனார்செங்கமலக்கழல்வணங்கிப்
பன்மணிகடிரையோதம்பரப்புநெடுங்கடற்படப்பைத்
தொன்மயிலைவாயிலார்திருத்தொண்டினிலைதொழுவாம்.

(இ-ள்.) பொன்மதில்சூழ்புகலி = கனகமதில்கள் சூழ்ந்த சீர்காழிக்கு; காவலரடிக்கீழ்ப்புனிதராம் = தலைவராகிய ஆளுடையபிள்ளையார் திருவடியில் அடைக்கலம் புக்க சுத்தராகிய; தென்மதுரைமாறனார் = தென்மதுரையையாண்ட நெடுமாறநாயனாருடைய; செங்கமலக்கழல்வணங்கி = செந்தாமரை மலரன்ன திருவடிகளைப் பணிந்து; திரையோதம் = திரைகளையுடைய நீர்ப்பெருக்கானது; பன்மணிகள்பரப்பு நெடுங்கடற்படப்பை = பல இரத்தினங்களை யொதுக்கும் கடற்கரையிலுள்ள; தொன்மயிலை = அநாதித்தலமாகிய திருமயிலையிலவதரித்த; வாயிலார் திருத்தொண்டினிலை தொழுவாம் = வாயிலார் நாயனாருடைய திருத்தொண்டின் இயல்பை வழுத்துவாம். எ-று. (௪௦)

## நின்றசீர்நெடுமாறநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் . ௩௩௪.

---

# வாயிலார் நாயனார்புராணம்.

சொல்விளங்குசீர்த்தொண்டைநன்னாட்டிடை
மல்லனீடியவாய்மைவளம்பதி
பல்பெருங்குடிநீடுபரம்பரைச்
செல்வமல்குதிருமயிலாபுரி.

(இ-ள்.) சொல்விளங்கு சீர்த்தொண்டைநன்னாட்டிடை = சீர்த்திநிகழும் நல்ல சிறப்புற்ற தொண்டைநாட்டிலே; மல்லனீடிய வாய்மை வளம்பதி = வளங்களோங்கிய உண்மைத்திருத்தலமாவது; பல்பெருங்குடி = பலபெரியகுடிகள்; நீடு பரம்பரைச் செல்வமல்கு = நீண்ட சந்ததியாகச் செல்வங்களைநுகரும்; திருமயிலாபுரி = திருமயிலைத்திருப்பதியாகும். எ-று. (௧)

நீடுவேலைதன்பானிதிவைத்திடத்
தேடுமப்பெருஞ்சேமவைப்பாமென
வாடுபூங்கொடிமாளிகையப்பதி
மாடுதெள்ளுமரக்கலச்செப்பினால்.

(இ-ள்-) நீடுவேலை தன்பானிதிவைத்திட = பருத்தசமுத்திரமானது தன்பக்கலுள்ள திரவியங்களை வைத்தற்கு; தேடுமப்பெருஞ் சேமவைப்பாமென = தேடிக்

கொண்ட அச்சிறந்தகாவலையுடைய எல்லையாமென்று கூற; ஆடு பூங்கொடி = அசைகின்ற பொலிவமைந்த கொடிகள் காட்டிய; மாளிகையப்பதிமாடு = மாளிகைகளையுடைய அந்நகரமருங்கில்; மரக்கலச் செப்பினல் தன்னும்=மரக்கலமாகிய சிமிழால் குவிக்கும். எ-று.

வேலை தன்னுமென இயையும். கடல்படுதிரவியமுற்றும் ஈண்டுக் குவிக்கப்படுதலின், இது அதற்குச் செமவைப்பாமெனப் பிறர்கூற விளங்குகின்றதென்க. கடல் இரத்தினுகரமாகலின் பெரும்பாலும் அவ்விரத்தினங்களே குவிக்கப்படுவனவென்பார், அவைவருதற்குரிய சிமிழாக மரக்கலத்தை உருவகப்படுத்தினர். (உ)

கலஞ்சொரிந்தகரிக்கருங்கன்றுமுத்
தலம்புமுந்நீர்படிந்தவேமேகமு
நலங்கொண்மேதிகன்றுகுந்தெரிக்கொணு
சிலம்புதெண்டிரைக்கானலின்சேணெலாம்.

(இ-ள்.) சிலம்புதெண்டிரை = ஒலிக்கின்ற தெள்ளிய அலைகளையுடைய கடல் சூழ்ந்த; கானலின்சேணெலாம்=நீண்ட நெய்தனிலமுற்றும்; கலஞ்சொரிந்த = (பல தேசங்களினின்றும் கொணர்ந்து) மரக்கலங்களிறக்கிய; கருங்கரிக்கன்றும் = கரிய யானைக்கன்றுகளும்; முத்தலம்புமுந்நீர் படிந்தவேமேகமும் = முத்துக்களையொதுக்கும் சமுத்திரநீரைமுகந்துண்டு ஆங்குத்தவழும் மேகங்களும்; நலங்கொண்மேதிகன்றுகும்=எழிலமைந்த எருமைக்கன்றுகளும்; தெரிக்கொணு = நிறம் ஒத்திருத்தலின் வேற்றுமையறியக்கூடாவாம். எ-று.

கலமுடையவர் தொழில் கலத்தின்மேலேற்றப்பட்டது. கடல் உயிர்களை ஆக்கல் காத்தல் அழித்தலென்னும் முத்தொழிற்றன்மை யுடைமையால் முந்நீரெனப்பட்டது. (௩)

தவளமாளிகைச்சாலைமருங்கிறைத்
துவள்பதாகைநுழைந்தவேதூமதி
பவளவாய்மடவார்முகம்பார்த்தஞ்சி
யுவளகஞ்சேர்ந்தொதுங்குவதொக்குமால்.

(இ-ள்.) தவளமாளிகைச்சாலை மருங்கிறை = வெள்ளியமாளிகைகளையுடைய சாலைகளின்மருங்குள்ள இறப்புக்களில்; துவள்பதாகை நுழைந்தவே தூமதி = அசைகின்ற கொடிகளிலே புகுந்துசெல்லும் சுத்தமாகிய சந்திரன்; பவளவாய் மடவார் முகம்பார்த்தஞ்சி = பவளம் நிகாக்கும் வாயையுடைய இளம்பெண்களின் முகவொளியை நோக்கிப்பயந்து; உவளகஞ் சேர்ந்தொதுங்குவதொக்கும்=மறைவிடம் பார்த்துப் பதுங்குவதை நிகர்க்கும். எ-று.

இறை - வீட்டிறப்பு. உவளகம் - மறைவிடம். ஆல் - அசை. (௪)

வீதியெங்கும்விழாவணிக்காளையர்
தூதியங்குஞ்சுரும்பணிதோகைய
ரோதியெங்குமொழியாவணிநிதி
பூதியெங்கும்புனைமணிமாடங்கள்.

(இ-ள்.) வீதியெங்கும்=வீதிமுற்றும்; விழாவணிக்காளையர் தூதியங்கும் = மங்கலமும் அலங்காரமும் வாய்ந்த காளையர்கள் பொருட்டுத் தூதுசெல்லும்; சுரும்பணிதோகையர் = வண்டுகள் மொய்க்கும் கூந்தலையுடைய மங்கையர்களே; பூதியெங்கும் புனைமணிமாடங்களெங்கும் = சுண்ணத்தினுல் எங்குஞ்சுத்திசெய்த அழகிய மாடங்கள் முற்றும்; ஓதியொழியாவணிநிதி = சொல்லமுடியாத தொகுதிபெற்ற திரவியங்களே. எ-று.

காளையர் பரத்தையரைக் காமுறுதன்முதலியவற்றால் மனைவியர்க்கு ஊடல் நிகழ்ந்தவழி அதனைத்தணித்தற்கு விடுக்கப்பட்ட தோகையரே யாண்டும் பரவலின், "வீதியெங்கும் தூதியங்கும் தோகையர்" என்றும், அளவிடப்படாத திரண்ட செல்வமுடைமையின், "மாடங்களெங்கு மோதியொழியா வணிநிதி" என்றும் கூறினார். பூதி-சுண்ணச்சாந்து. யானை குதிரைமுதலியவை இடையறா தியங்கலின் புழுதிபடிந்த மாடமுமாம். வீதியெங்கும் விழாவணிகளும் தோகையர்களும் அணிநிதிகளும் மாடங்களுமே எனக்கொள்ளின் விழாவணிகாளையரெனப் பாடம் ஓதுக. (௫)

மன்னுசீர்மயிலைத்திருமாநகர்த்
தொன்மைநீடியசூத்திரத்தொல்குல
நன்மைசான்றநலம்பெறத்தோன்றினார்
தன்மைவாயிலாரென்னுந்தபோதனர்.

(இ-ள்.) சீர்மன்னுமயிலைத்திருமாநகர் = சீர்த்திநிலைபெற்ற திருமயிலைத் திருநகரத்திலே; தொன்மைநீடிய சூத்திரத்தொல்குலம்=பழைமையோங்கிய வேளாண் குலமானது; நன்மைசான்றநலம்பெறத் தோன்றினார் = நன்மை நிரம்பிய மேன்மையமைய அவதரித்தவர்; தன்மைவாயிலாரென்னுந் தபோதனர் = தகுதிவாய்ந்த வாயிலார்நாயனாரென்னும் தவப்பேறுடையவர். எ-று.

இவரால் அக்குலம் விளங்கிற்றென்பார் "சூத்திரத்தொல்குல நன்மைசான்ற நலம்பெறத் தோன்றினார்." என்றார். (௬)

வாயிலாரெனநீடியமாக்குடித்
தூயமாமரபின்முதற்றோன்றியே
நாயனார்திருத்தொண்டினையப்புறு
மேயகாதல்விருப்பின்விளங்குவார்.

(இ-ள்.) நீடியமாக்குடி = தொன்றுதொட்ட பெருமைபெற்ற குடியிலே; தூயமாமரபின் = சுத்தமாகிய உயர்ந்தமரபிலே; வாயிலாரென முதற்றோன்றி = வாயிலாரென்னுந் திருநாமத்தோடு முதன்மைபெற வந்துதித்து; நாயனார் திருத்தொண்டினையப்புறும் = சிவபெருமானுடைய திருத்தொண்டிலே அடைவும்; மேயகாதல் விருப்பின் விளங்குவார் = நிலைபெற்ற மிக்க ஆசையோடு நிகழ்வார். எ-று.

காதல் விருப்பு - ஒருபொருட் பன்மொழி. (௭)

வேறு.

மறவாமையானமைத்தமனக்கோயிலுள்ளிருத்தி
யுறவாதிதனையுணரு மொளிவிளக்குச்சுடரேற்றி
யிறவாதவானந்தமெனுந்திருமஞ்சனமாட்டி
யறவாணர்க்கன்பெனுமமுதமைத்தர்ச்சனைசெய்வார்.

(இ-ள்.) மறவாமையானமைத்த = இடையறாத் தியானத்தாலியற்றிய; மனக்கோயிலுள்ளிருத்தி = மனமென்னும் ஆலயத்திற் சிவபிரானை வதிவித்து; ஆதிதனையுறவுணரு மொளிவிளக்குச் சுடரேற்றி = அப்பெருமானை மிகவும் உணர்தற்கேதுவாகிய ஞானமென்னும் தீபவொளியை ஏற்றி; இறவாத வானந்தமெனுந் திருமஞ்சனமாட்டி = அழிவில்லாத ஆனந்தமென்னும் திருமஞ்சனத்தால் அபிஷேகித்து; அறவாணர்க்கு = அறத்தின்கண்ணே வாழ்வாராகிய அக்கடவுளுக்கு; அன்பெனுமமுதமைத் தர்ச்சனைசெய்வார் = அன்பென்னும் திருவமுதை அமைத்துப் பூசிப்பார். எ-று.

இடையறாத்தியானமுடைய மனதின்கண்ணேயே எம்பெருமான்வீற்றிருப்பதாகலின் அதனையே கோயிலாகவும், அத்தியானவுணர்வின்மிக்க ஒளியின்மையின் அதனையே தீபமாகவும், அத்தியானத்தாற் பெறும் ஆனந்தத்தின் மிக்க ஆனந்தப்பெருக்கின்மையின் அதனையே திருமஞ்சனமாகவும், அங்ஙனந்தியானிக்கும் அன்பொன்றையே யன்றிப் பெருமான் பிறிதை அவாவுதலின்மையின் அதனையே திருவமுதாகவும் பாவித்துப் பூசித்தாரென்க. ஒளிபோலப் பொருள்களை விளக்கலின் ஞானத்தை ஒளியெனவும், தருமமே சொரூபமாக அதில் நிலைபெறுதலின் அறவாணரெனவுங் கூறினார். ஒளி ஞானமாதலை, "சுடச்சுடப் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்-சுடச்சுட நோற்கிற் பவர்க்கு." என்னுந்திருக்குறளானும், அறவாணராதலை தருமதேவதையை இடபமாகக் கொண்டமையானும் உணர்க. அமைத்தல்-ஈண்டு பாவித்தல்.

அகமலர்ந்தவர்ச்சனையிலணணலார்தமைநாளு
நிகழவருமன்பினானிறைவழிபாடொழியாமே
திகழநெடுநாள்செய்துசிவபெருமானடிநிழற்கீழ்ப்
புகலமைத்துத்தொழுதிருந்தார்புண்ணியமெய்த்தொண்டனார்.

(இ-ள்.) புண்ணியமெய்த்தொண்டனார் = புண்ணிய சொரூபியாகிய அந்நாயனார்; நாளும் அகமலர்ந்த வர்ச்சனையின் = தினமும் மானதபூசனையாக; திகழநெடுநாளண்ணலார்தமை = விளக்கமுற நெடுங்காலம் இங்ஙனம் விமலரை; நிகழவருமன்பினானிறைவழிபாடொழியாமேசெய்து = பூர்த்தியாகவளரும் அன்பினாற் பூரணவழிபாடு அகலாதுபுரிந்து; சிவபெருமானடி நிழற்கீழ் = அப்பெருமானுடைய திருவடி நீழலின்கீழ்; புகலமைத்துத் தொழுதிருந்தார் = ஐக்கியமாகி இன்புற்றிருந்தார். எ-று.

அகமகிழ்ந்த வர்ச்சனையென்பதும் பாடம். வருதல்-வளர்தல். அநவரதமும் பூஜோபகரணங்களனைத்தும் பூர்த்தியாகக்கொண்டு இயற்றப்படுவது மானதபூஜையொன்றேயாகலின் அதனை நிறைவழிபாடென்றார். அமைத்து-வலித்தல்விகாரம். பெருமானாலமைக்கப்பட்டுளனச் செயப்பாட்டுவினையாக்கலும் ஒன்று. அடிநிழற்கீழ்த்தொழுதிருத்தலாவது-சிந்தனையிறந்து சிவானந்தமயமாய்க் களித்திருத்தல். (க)

நீராருஞ்சடையாரைநீடுமனவாலயத்து
ளாராதவன்பினாலர்ச்சனைசெய்தடியவர்பாற்
பேராதநெறிபெற்றபெருந்தகையார்தமைப்போற்றிச்
சீராருந்திருநீற்றார்முனையடுவார்திறமுரைப்பாம்.

(இ-ள்.) நீராருஞ்சடையாரை = கங்கைதங்கிய சடையினராகிய கடவுளை; நீடுமனவாலயத்துள் = நீண்ட மனக்கோயிலின்கண்ணே; ஆராதவன்பினாலர்ச்சனைசெய்து = அளவுபடாத அன்பினாற்பூசித்து; அடியவர்பாற்பேராத நெறிபெற்ற = அடியவரருகே அகலாத பதவிபெற்ற; பெருந்தகையார் தமைப்போற்றி = வாயிலார் நாயனாரைவழிபட்டு; சீராருந் திருநீற்றார் = சிறப்புமிக்க திருநீற்றிலவதரித்த; முனையடுவார் திறமுரைப்பாம் = முனையடுவார் நாயனார் சரித்திரத்தை மொழிவாம். எ-று.

## வாயிலார்நாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் - ௬௪௪.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முனையடுவார் நாயனார் புராணம்.

மாறுகடிந்துமண்காத்தவளவர்பொன்னித்திருநாட்டு
நாறுவிரைப்பூஞ்சோலைகளினனைவாய்திறந்துபொழிசெழுந்தே
னாறுபெருகிவெள்ளமிடுமள்ளல்வயலின் மள்ளருழுஞ்
சேறுநறுவாசங்கமழுஞ்செல்வநீடூர்திருநீடூர்.

(இ-ள்.) மாறுகடிந்து மண்காத்தவளவர் = பகைவரைவென்று பாரினைப்புரந்த சோழரது; பொன்னித்திருநாட்டு = காவிரிநதிசூழ்ந்த திருநாட்டிலே; நாறுவிரைப்பூஞ்சோலைகளில் = மணக்கும் வாசனைமலிந்த பூஞ்சோலைகளிலே; நனைவாய்திறந்துபொழிசெழுந்தேன் = செவ்விய அரும்புகள் வாய்விண்டுசொரிந்த செழியதேன்; ஆறுபெருகிவெள்ளமிடும் = ஆறாகப்பெருகி எக்கலிட்ட; அள்ளல் வயலின்=குழைந்தசேற்றையுடையவயலிலே; மள்ளருழுஞ்சேறு நறுவாசங்கமழும்=மள்ளரால் உழப்பட்ட சேறு நறுமணம் வீசுகின்ற; செல்வநீடூர் திருநீடூர் = செல்வமிக்கவூர் திருநீடூராகும். எ-று.

பொன்னித்திருநாட்டுச் செல்வநீடூர் திருநீடூர் எனஇயையும். வெள்ளமிடல் - ஈண்டு எக்கலிடல். அள்ளல் - குழைசேறு. நறுவாசம் தாமரை குவளைமுதலியவற்றின் நறுமணம்; தேன்மணமுமாம். (௧)

விளங்கும்வண்மைமிக்குள்ளவேளாண்டலைமைக்குடிமுதல்வர்
களங்கொண்மிடற்றுக்கண்ணுதலார்கழலிற்செறிந்தகாதன்மிகு
முளங்கொடிருத்தொண்டுரிமையினிலுள்ளார்நள்ளார்முனையெறிந்த
வளங்கொடிறைவரடியார்க்குமாறாதளிக்கும்வாய்மையார்.

(இ-ள்.) விளங்கும் வண்மைமிக்குள்ள = விளக்கமுற்ற ஈகையை மிகப்படைத்த; தலைமைவேளாண் குடிமுதல்வர் = தலைமைபெற்ற வேளாண்குடிக்குத்தலைவர்; களங்கொண்மிடற்று = நஞ்சத்தைக்கொண்ட கண்டத்தையும்; கண்ணுதலார் = கண்படைத்த நெற்றியையுமுடைய கடவுளின்; கழலிற்செறிந்த = திருப்பதங்களிற் செறிந்த; காதன்மிகுமுளங்கொடிருத்தொண்டு = அன்புமிக்க உள்ளத்தமைந்த திருத்தொண்டினை; உரிமையினிலுள்ளார் = உரிமையாக இயற்றுபவர்; நள்ளார்முனையெறிந்தவளங்கொடு=பகைவரைப் போரில்வெல்லுதலாற்பெற்ற பொருள்கொண்டு; இறைவரடியார்க்கு=சிவபெருமானடியவர்கட்கு வேண்டியவற்றை; மாறாதளிக்கும் வாய்மையார் = எப்பொழுதும் கொடுக்கும் சத்தியம் இயைந்தவர். எ-று.

எறிதலாற்பெற்றவளத்தை எறிந்தவளமென்றார். (௨)

மாற்றார்க்கமரிலழிந்துள்ளோர்வந்துதம்பான்மாநிதிய
மாற்றும்பரிசுபேசினாலதனைநடுவுநிலைவைத்துக்
கூற்றமொதுங்குமாள்வினையாற்கூலியேற்றுச்சென்றெறிந்து
போற்றும்வென்றிகொண்டிசைந்தபொன்னுங்கொண்டுமன்னுவார்.

(இ-ள்.) மாற்றார்க்கமரிலழிந்துள்ளோர் வந்து = பகைவர்கட்குப் போரிலே தோற்றவர்வந்து; தம்பான்மாநிதியமாற்றும் பரிசுபேசினால் = தம்மிடத்தே மிகுதிரவியம் கொடுப்பதாகக் கூறின்; அதனை நடுவுநிலைவைத்து = அத்திரவியத்தைத் (தக்கவரிடத்தே) பொதுநிலைமையாகவைத்து; கூலியேற்றுச்சென்று = அவர்பாற்

கூலிபெற்றுச்சென்று; கூற்றயொதுங்கு மாள்வினையாலெறிந்து = இயமனும் அஞ்சி யகலும் முயற்சியால் அப்பகைவரைப்பொருது; போற்றும் வென்றிகொண்டு=எவரு ம்துதிக்கும் வெற்றிபெற்று; இசைந்த பொன்னுங்கொண்டுமென்னுவார் = முன் பொரு திநிலைமையாகவைத்த பொன்னையும் பெற்றுக்கொண்டு நிலைபெறுவார். எ-று. (௩)

இன்னவகையாற்பெற்றநிதியெல்லாமீசனடியார்கள்
சொன்னசொன்னபடிநிரம்பக்கொடுத்துத்தூயபோனகமுங்
கன்னனறுநெய்கறிதயிர்பால்கனியுள்ளுறுத்தகலந்தளித்து
மன்னுமன்பினெறிபிறழாவழித்தொண்டாற்றிவைகினர்.

(இ-ள்.) இன்னவகையாற்பெற்ற நிதியெல்லாம் = இவ்வாறுபெற்ற திரவிய ங்களையெல்லாம்; ஈசனடியார்கள் சொன்னசொன்னபடிநிரம்பக்கொடுத்து = சிவன டியார்கள் விரும்பிக்கூறிய தொகையைக் கூறியவகையே பூர்த்தியாகக்கொடுத்து; தூயபோனகமுங்கன்னனறுநெய் = சுத்தமாகிய திருவமுதும் சர்க்கரையும் மணம் பெற்றநெய்யும்; கறிதயிர்பால்கனி = கறியமுதும் தயிரும் பாலும் கனிகளுமாகிய இவற்றை; உள்ளுறுத்தகலந்தளித்து = உள்ளிட்டஉணவுகளைக் கலந்து திருவமுது செய்வித்து; மன்னுமன்பினெறிபிறழாவழித்தொண்டாற்றிவைகினர் = நிலைபெற்ற பத்திநெறிவழுவாத பரம்பரைத்தொண்டுகளை இயற்றிவாழ்ந்தார். எ-று. (௪)

மற்றிந்நிலைமைபன்னெடுநாள்வையநிகழச்செய்துவழி
யுற்றவன்பின்செந்நெறியாலுமையாள்கணவன்றிருவருளாற்
பெற்றசிவலோகத்தமர்ந்துபிரியாவுரிமைமருவினர்
முற்றவுழந்தமுனையடுவாரென்னுநாமமுன்னுடையார்.

(இ-ள்.) முற்றவுழந்த முனையடுவாரென்னு நாமம் = செயம்பெறப்பொருத லாற்பெற்ற முனையடுவாரென்னும் திருநாமத்தை; முன்னுடையார் = இளமைதொ டுத்துடைய அந்நாயனர்; வழியுற்றவன்பின் செந்நெறியால் = பரம்பரையாகவந்த அன்பினியல்பமைந்த ஒழுக்கத்தால்; இந்நிலைமை பன்னெடுநாள் வையநிகழச் செ ய்து = இங்ஙனம் மிகநெடுங்காலம் இவ்வுலகில்விளங்கப் புரிந்து; உமையாள்கணவ ன்றிருவருளாற்பெற்ற; உமாபதியினுடைய திருவருளாலுறப்பெற்ற; சிவலோகத்த மர்ந்து பிரியாவுரிமை மருவினர் = சிவலோகத்தில் வதிந்து அகலாநிலைமையை அடைந்தார். எ-று.

மற்று - அசை. வையம் - ஏழாம்வேற்றுமைத்தொகை. முனையடுவார்-போ ரிற்பொருபவர். (௫)

யாவரெனினுமிகலெறிந்தேயீசனடியார்தமக்கின்ப
மேவவளிக்குமுனையடுவார்விரைப்பூங்கமலக்கழல்வணங்கித்
தேவர்பெருமான்சைவநெறிவிளங்கச்செங்கோன்முறைபுரியுங்
காவல்பூண்டகழற்சிங்கர்தொண்டினிலைமைகட்டுரைப்பாம்.

(இ-ள்.) யாவரெனினு மிகலெறிந்து = எதிர்த்தோர் எத்துணைச் சிறப்பின ரேனும் போரில்வென்று (அதனாற்பெற்றபொருள்களை); ஈசனடியார் தமக்கின்பமே வவளிக்கு முனையடுவார் = முதல்வனடியவர்களுக்குக் களிப்புண்டாகும்படி கொடு க்கும்முனையடுவார் நாயனருடைய;விரைப்பூங்கமலக்கழல்வணங்கி=பரிமளமிக்க தா மரைமலரொத்த திருப்பாதங்களைவணங்கி; தேவர்பெருமான் சைவநெறிவிளங்க= தேவாதிபனைவழிபடும் சைவநெறிதழைத்தோங்க; செங்கோன்முறைபுரியுங் காவல்

பூண்ட = செங்கோலைக் கிரமமாகச்செலுத்தும் அரசுரிமையைக்கொண்ட; கழற்சிங்கர்தொண்டினிலைமைகட்டுரைப்பாம் = கழற்சிங்கநாயனாருடைய திருத்தொண்டினிலைமையைத் திரமாகச்செப்புவாம். எ-று. (௬)

செறிவுண்டென்றுதிருத்தொண்டிற்சிந்தைசெல்லும்பயனுக்குங் [ல்
குறியுண்டொன்றாகிலுங்குறையொன்றில்லோ நிறையுங்கருணையினு
வெறியுண்சோலைத்திருமுருகன்பூண்டிவேடர்வழிபறிக்கப்
பறியுண்டவரெம்பழவினைவேர்பறிப்பாரென்னும்பற்றாலே.

(இ-ள்.) வெறியுண்சோலைத் திருமுருகன் பூண்டி=மணங்கமழும் மலர்ச்சோலையையுடைய திருமுருகன் பூண்டியிலே; வேடர் = சிவாக்ஞையால்வந்த பூதங்களாகிய வேடர்கள்; வழிபறிக்கப்பறியுண்டவர் = வழியிலே பறித்துக்கொள்ளப்பொருளைப்பறிகொடுத்த வன்றொண்டப்பெருமான்; நிறையுங்கருணையினுலெம்பழவினைவேர்பறிப்பாரென்னும் பற்றால் = பூரணகிருபையால் எம்முடைய பழவினைகளைப் பற்றறப்போக்குவரெனக் கொள்ளும் அன்பினால்; திருத்தொண்டிற் செறிவுண்டென்று சிந்தைசெல்லும் பயனுக்குங் குறியுண்டு = திருத்தொண்டிலே பலனுண்டென்று சித்தஞ்செல்லும் பிரயோசனத்திற்கும் ஏதுவுண்டு(அன்றியும்); ஒன்றாகிலுங்குறையொன்றில்லோம்=சிறிதாயினும் ஒருபொருளினும் குறைபாடும் இல்லோம். எ-று.

சிவாக்ஞையால்வந்த வேடரால் வழிபறிக்கப்பட்டாரேனும் பழவினைவேர் பறித்தலில் வல்லுநராகிய இந்நாயனார் உலகமெல்லாமுணரத் திருத்தொண்டர் பெருமையைவிளக்கி உய்வித்தபேரருளாளராகலின் அவர்பால்வைக்கும் அன்புடைமையால் இவ்விருபயனும் எய்தப்பெற்றேமென்பது கருத்து. பற்று-அன்பு. பற்றால்குறியுண்டு எனஇயையும். திருத்தொண்டாற் செறிவதாகலின் அதன்பலன் ஈண்டுச் செறிவெனப்பட்டது. பயனுக்குமென்னும் உம்மை குறைவொன்றில்லோமென்பதைத் தழீஇநிற்றலின் எதிரதுதழீஇய எச்சவும்மை. குறி-ஏதுவினமேற்று. ஒன்றில்லோமென்புழி எழனுருபும் உயர்வு சிறப்பும்மையும் தொக்கன. பயனுவக்குமெனவும் அன்றாகிலுமெனவும் பழவினைநோயெனவும் பாடங்களுண்டு. (எ)

## முனையடுவார்நாயனார்புராணம் முற்றிற்று.

கறைக்கண்டன்சருக்கம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் - ௬௫௯.

---

# கழற்சிங்கநாயனார்புராணம்.

படிமிசைநிகழ்ந்ததொல்லைப்பல்லவர்குலத்துவந்தார்
கடிமதின்மூன்றுஞ்செற்றகங்கைவார்சடையார்செய்ய
வடிமலரன்றிவேறென்றறிவினுங்குறியாசீர்மைக்
கொடிநெடுந்தானைமன்னர்கோக்கழற்சிங்கரென்பார்.

(இ-ள்.) கடிமதின்மூன்றுஞ்செற்றகங்கைவார்சடையார் = காவலைக்கொண்ட திரிபுரங்களையழித்தவராய்க் கங்கையையணிந்த நெடியசடையையுடைய

ராகிய கடவுளின்; செய்யவடிமலரன்றி = செந்தாமரைமலரை நிகர்க்கும் திருவடிக ளையன்றி; வேறொன்றறிவினுங் குறியாநீர்மை = பிறிதொன்றைச் சித்தத்திலும்பே ணாத இயல்போடு; கொடிநெடுந்தானைமன்னர்கோ = வெற்றிக்கொடிபடைத்த நெடி யசேனைகளையுடைய வேந்தர்களிற்றலைமைபெற்ற; கழற்சிங்கரென்பார் = கழற்சிங் கநாயனாரெனப் பெயர்பெற்றவர்; படிமிசைநிகழ்ந்ததொல்லைப் பல்லவர் குலத்துவந் தார் = பூமியிலே தொன்றுதொட்டுப்பொலிவுற்ற பல்லவகுலத்திலே அவதரித்தவர். எ-று. (௧)

காடவர்குரிசிலாராங்கழற்பெருஞ்சிங்கனார்தா
மாடகமேருவில்லாரருளினாலமரிற்சென்று
கூடலர்முனைகள்சாயவடபுலங்கவர்ந்துகொண்டு
நாடறநெறியில்வைகநன்னெறிவளர்க்குநாளில்.

(இ-ள்.) காடவர் குரிசிலாராங்கழற்பெருஞ்சிங்கனார்தாம் = காடவர்குலத்த லைவராகிய பெருமைபெற்ற கழற்சிங்கநாயனாரென்பவர்; ஆடகமேருவில்லார் = பொன்மேருமலையை வில்லாகவுடைய பெருமானது; அருளினாலமரிற்சென்று = தி ருவருளினாற் போரிற்போந்து; கூடலர்முனைகள் சாய = பகைவர்கள் யுத்தத்திலே தோற்க; வடபுலங்கவர்ந்துகொண்டு = அவராளும் வடதேசத்தைத் தம்வயமாக்கிக் கொண்டு; நாடறநெறியில்வைக = தமது நாட்டிலுள்ளார் தரும ஒழுக்கத்திலே தவ றாது நிலைபெற; நன்னெறிவளர்க்கு நாளில் = சன்மார்க்கங்களைத் தழைவிக்குங்கா லத்தில். எ-று. (௨)

குவலயத்தரனார்மேவுங்கோயில்கள்பலவுஞ்சென்று
தவலருமன்பிற்றாழ்ந்துதக்கமெய்த்தொண்டுசெய்வார்
சிவபுரியென்னமன்னுந்தென்றிருவாரூரெய்திப்
பவமறுத்தாட்கொள்வார்தங்கோயிலுட்பணியப்புக்கார்.

(இ-ள்.) குவலயத்தரனார் மேவுங் கோயில்கள்பலவுஞ்சென்று = பூமியிலே சிவபெருமானமரும் ஆலயங்கள் பலவற்றையுமடைந்து; தவலருமன்பிற்றாழ்ந்து = குன்றுதலில்லாத அன்பினாலேதொழுது; தக்கமெய்த்தொண்டுசெய்வார் = உரியஉ ணமைத்திருத்தொண்டுகளை இயற்றுவாராகிய அந்நாயனார்; சிவபுரியென்னமன்னுந் தென்றிருவாரூரெய்தி = சிவலோகம்போல நிலைபெற்ற அழகியதிருவாரூரையடை ந்து; பவமறுத்தாட்கொள்வார்தம் = பிறவியை யொழித்து அடிமைகொள்வாராகிய பெருமானது; கோயிலுட் பணியப்புக்கார் = ஆலயத்துள்ளே அக்கடவுளை வணங் கச் சென்றார். எ-று. (௩)

அரசியலாயத்தோடுமங்கணர்கோயிலுள்ளான்
முரசுடைத்தானைமன்னர்முதல்வரைவணங்கும்போதில்
விரைசெறிமலர்மென்கூந்தலுரிமைமெல்லியலார்தம்மு
ளொலரசிறந்துயர்ந்தபட்டத்தொருதனித்தேவிமேவி.

(இ-ள்.) முரசுடைத்தானைமன்னர் = மூவகை முரசுகளையுடைய சேனைவாய் ந்த கழற்சிங்கநாயனார்; அரசியலாயத்தோடும் = அரசியலுக்குரிய ஐவகைக்குழுக்க ளோடும்; அங்கணர் கோயிலுள் = அருட்கண்ணராகிய தியாகேசப்பெருமானுடை ய ஆலயத்தினுள்; முதல்வரை வணங்கும்போதில் = அப்பெருமானைப் பணியுந் தரு ணத்தில்; விரைசெறி மலர்மென்கூந்தல் = வாசனை நிரம்பிய மலரையணிந்த மெல்

லிய கூந்தலையுடைய; உரிமைமெல்லியலார் தம்முள் = உரியமனைவியருள்ளே; உரைசிறந்துயர்ந்த பட்டத்தொருதனித்தேவி மேவி = சீர்த்திபெற்றுயர்ந்த ஒப்பற்ற சிறப்புள்ள பட்டத்திற்குரிய மனைவியடைந்து. எ-று.

ஆல் - அசை. ஐவகைக்குழுக்கள் - மந்திரியர் புரோகிதர் சேனாபதியர் தூதர் சாரணரென்போர். (௪)

கோயிலைவலங்கொண்டங்கட்குலவியபெருமையெல்லாஞ்
சாயன்மாமயிலேபோல்வாடனித்தனிகண்டுவந்து
தூயமென்பள்ளித்தாமந்தொடுக்குமண்டபத்தின்பாங்கர்
மேயதோர்புதுப்பூவங்குவிழுந்ததொன்றெடுத்துமோந்தாள்.

(இ-ள்.) சாயன்மாமயிலே போல்வாள் = மேன்மைபெற்ற மயில்போலும் மென்மைத்தன்மையுடைய அவள்; கோயிலைவலங்கொண்டு = ஆலயத்தைவலம்வந்து; அங்கட்குலவிய பெருமையெல்லாந் தனித்தனிகண்டுவந்து = ஆங்குவிளங்கிய அற்புதங்களை யெல்லாம் தனித்தனி நோக்கிமகிழ்ந்து; தூயமென் பள்ளித்தாமந் தொடுக்குமண்டபத்தின் பாங்கர் = பரிசுத்தமாகிய மெல்லிய திருமாலை தொடுக்கும் மண்டபத்தின் பக்கத்திலடைந்து; அங்குவிழுந்தது மேயதோர் புதுப்பூவொன்றெடுத்து மோந்தாள் = அங்கே விழுந்ததாகிக் கிடந்ததொரு புதியபூவொன்றை யெடுத்துமோந்தாள். எ-று.

சாயல் மென்மையாதல் * "சாயல்மென்மை" என்பதனானுணர்க. ஒயிலுமாம்.

புதுமலர்மோந்தபோதிற்செருத்துணைப்புனிதத்தொண்ட
ரிதுமலர்த்திருமுற்றத்துளெடுத்துமோந்தனளாமென்று
கதுமெனவோடிச்சென்றுகருவிகைக்கொண்டுபற்றி
மதுமலர்த்திருவெரப்பாடன்மூக்கினைப்பிடித்துவார்ந்தார்.

(இ-ள்.) புதுமலர்மோந்தபோதில் = புதியமலரை மோந்தபொழுதில்; புனிதச் செருத்துணைத்தொண்டர் = சுத்தராகிய செருத்துணைநாயனாரென்பவர்; இது மலர்த்திருமுற்றத்து ளெடுத்து மோந்தனளாமென்று = இம்மலரை மலர் மண்டபத்தினின்றும் எடுத்து மோந்தாளென்று; கதுமெனவோடிச்சென்று = விரையவோடிப்போய்; கருவிகைக்கொண்டு=கத்தியைக்கைக்கொண்டு; பற்றிமதுமலர்த்திருவொப்பாடன் மூக்கினைப்பிடித்து வார்ந்தார்=அவளைப்பற்றி தேன்பொழியும்செந்தாமரை மலரில்வதியும் இலக்குமியையொத்த அவள்மூக்கைப்பிடித்து அரிந்தார். எ-று.

முற்றம் - ஈண்டு மண்டபத்தை யுணர்த்திநின்றது. சிவாலயத்திலே சிவபெருமானுக்கு உரிமையாகாது கிடக்கும் பொருள்களையும் பிறர் உபயோகித்தல் சிவாபராதமாகலின் இச்செருத்துணை நாயனார் இங்ஙனஞ் செய்தாரென்க. (௫)

வார்ந்திழிகுருதிசோரமலர்க்கருங்குழலுஞ்சோரச்
சோர்ந்துவீழ்ந்தாற்றுந்தோகைமயிலெனத்துளங்கிமண்ணிற்
சேர்ந்தயர்ந்துரிமைத்தேவிபுலம்பிடச்செம்பொற்புற்று
ளார்ந்தபேரொளியைக்கும்பிட்டரசருமணையவந்தார்.

(இ-ள்.) வார்ந்திழிகுருதிசோர = வடிந்திழிகின்ற உதிரமொழுகவும் மலர்க்கருங்குழலுஞ்சோர = மலரையணிந்த கரியகூந்தல் சரியவும்; சோர்ந்து வீழ்ந்து = சோர்வுற்று விழுந்து; அரற்றுந்தோகைமயிலென = கூச்சலிடுந் தோகையை யுடை

* தொல்காப்பியம் சொல்லதிகாரம் - ௩௨௫.

யமயில்போல; துளங்கி மண்ணிற்சேர்ந்தயர்ந் துரிமைத்தேவி புலம்பிட=அசை ந்து மண்ணிற்படிந்து வருந்தி உரிய மனைவிபுலம்ப; செம்பொற்புற்றுளார்ந்தபேரொ ளியைக் கும்பிட்டு=செவ்விய அழகிய புற்றிடங்கொண்ட பெருமானைத்தொழுது; அரசருமணையவந்தார் = கழற்சிங்கநாயனாரும் சமீபமாக அணுகினார். எ-று. (எ)

வந்தணையுற்றமன்னர்மலர்ந்தகற்பகத்தின்வாசப்
பைந்தளிர்ப்பூங்கொம்பொன்றுபார்மிசைவீழ்ந்ததென்ன
நொந்தழிந்தாற்றுவாளைநோக்கியிவ்வண்டத்துள்ளோ
ரிந்தவெவ்வினையஞ்சாதேயார்செய்தாரென்னுமெல்லை.

(இ-ள்.) மலர்ந்தவாசப்பைந்தளிர் = மலர்ந்த வாசனையையும் பசியதளிரையும் வாய்ந்த; கற்பகத்தின் பூங்கொம்பொன்று பார்மிசை வீழ்ந்ததென்ன = கற்பகமல ர்க்கொம்பொன்று பூமியிலே விழுந்ததுபோல விழுந்து; நொந்தழிந்தாற்றுவாளை = வருந்திச் சோகித்துப் புலம்புகின்ற மனைவியை; வந்தணையுற்ற மன்னர்நோக்கி = வந்துசமீபித்த கழற்சிங்கநாயனார் கண்டு; அஞ்சா திந்த வெவ்வினை=அஞ்சாமல் இ க்கடுந்தொழிலை; இவ்வண்டத்துள்ளோர் யார் செய்தாரென்னுமெல்லை = இவ்வண் டத்திலுள்ளவரில் எவர்புரிந்தாரென்று வினவுங்காலையில். எ-று.

இவ்வண்டத்துள்ளோர் யார்செய்தாரென்பது இவ்வண்டத்துள்ளவரேல் தமது ஆணைக்கு அஞ்சி இங்ஙனம்புரியத் துணியாரெனனும் குறிப்பின்மேற்று. ஏ-அசை.

அங்கிலேயணையவந்துசெருத்துணையாராமன்பர்
முன்னுறுநிலைமையங்குப்புகுந்ததுமொழிந்தபோது
மன்னருமவரைநோக்கிமற்றிதற்குற்றதண்டந்
தன்னையவ்வுடைவேயன்றோதடிந்திடத்தகுவதென்று.

(இ-ள்.) அங்கிலேசெருத்துணையாராமன்பரணையவந்து = அவ்விடத்திற் செரு த்துணைநாயனாரென்பவர் அணுகவந்து; அங்குப்புகுந்தது முன்னுறுநிலைமை மொழி ந்தபோது = அங்கே நிகழ்ந்ததாகிய பூர்வநிலையை அறிவித்தபொழுது; மன்னரும வரைநோக்கி = கழற்சிங்கநாயனாரும் அந்நாயனாரைப்பார்த்து; இதற்குற்ற தண்டந் தன்னை = இவ்வபராதத்திற்கு இயைந்த இத்தண்டத்தை; அவ்வுடைவேதடிந்தன் றோ = முன் நிகழ்ந்த முறைப்படியே அவ்வவ்வுறுப்புக்களைச் சேதித்தல்லவா; இடத் தகுவதென்று = செய்யவேண்டுவதென்று செப்பி. எ-று.

தண்டந்தன்னை இடத்தகுவதென இயையும். புகுந்ததென்னும் வினைப்பெயர் எச்சப்பொருளில்வந்தது. மற்று-அசை. ஏகாரம்-பிரிநிலை. ஓகாரம்-வினா. இடுதல்-ஈண்டுச் செய்தலின்மேற்று. (அ)

கட்டியவுடைவாடன்னையுருவியக்கமழ்வாசப்பூத்
தொட்டுமுன்னெடுத்தகையேமுற்படத்துணிப்பதென்று
பட்டமுமணிந்துகாதல்பயில்பெருந்தேவியான
மட்டவிழ்குழலாள்செங்கைவளையொடுந்துணித்தாரன்றே.

(இ ள்.) கட்டியவுடைவாடன்னையுருவி=அரையிற்கட்டிய உடைவாளையுருவி அக்கமழ்வாசப்பூ=அப்பரிமளிக்கும் வாசனையையுடையமலரை; தொட்டுமுன்னெடு த்தகையே முற்படத் துணிப்பதென்று = முன்னர்ப்பற்றியெடுத்தகையே முற்ப டச்சேதிப்பதாகுமென்று உரைத்து; பட்டமுமணிந்து காதல்பயில் பெருந்தேவி யான=பட்டத்தையுந்தரிக்கப்பெற்றுக் காதலையும்படைத்த மூத்தமனைவியாகிய; மட் டவிழ்குழலாள் செங்கை=மணம்விரிந்த கூந்தலையுடையஅவளது செவ்வியகையை; வளையொடுந் துணித்தார்=கைவளையோடும்சேதித்தார். எ-று. அன்று ஏ-அசைகள்

ஒருதனித்தேவிசெங்கையுடைவாளாற்றுணித்தபோது
பெருகியதொண்டரார்ப்பின்பிறங்கொலிபுவிமேற்பொங்க
விருவிசும்படையவோங்குமிமையவரார்ப்பும்விம்மி
மருவியதெய்வவாசமலர்மழைபொழிந்ததன்றே.

(இ-ள்.) ஒருதனித்தேவிசெங்கை=சிறந்த ஒப்பற்ற மனைவியின் செவ்வியகரத்தை; உடைவாளாற்றுணித்தபோது=உடைவாளினாற் றுண்டித்தபொழுது; பெருகியதொண்டரார்ப்பின்=மிக்கதொண்டர்கள் மிகுகளிப்பால் ஆரவாரித்தலினால்; பிறங்கொலிபுவிமேற்பொங்க=உண்டாகியமுழக்கம் பூமியில் ஓங்க; இருவிசும்படையவோங்குமிமையவரார்ப்பும்விம்மி=அகன்ற ஆகாயமுற்றும் உயர்ந்த தேவர்முழக்கமும் அதிகரித்து; தெய்வவாசமருவியமலர்மழைபொழிந்தது=தெய்வமணங்குடிகொண்ட புஷ்பவருஷமும் பொழியப்பட்டது. எ-று.

விசும்படையவிம்மிப் பொழிந்தது எனஇயையும். மழையும் என்னும் உம்மை விகாரத்தாற்றொக்கது. விம்மவென்னும் எச்சம் விம்மியெனவும் பொழியப்பட்டதென்னும் செயப்பாட்டுவினை செய்வினையாயும்நின்றன. அன்று ஏ-அசைகள். (௧௧)

அரியவத்திருத்தொண்டாற்றுமரசனாரளவில்கால
மருவியவுரிமைதாங்கிமாலயற்கரியார்மன்னுந்
திருவருட்சிறப்பினாலேசெய்யசேவடியினீழற்
பெருகியவுரிமையாகும்பேரருளெய்தினாரே.

(இ-ள்.) அரியவத்திருத்தொண்டாற்றுமரசனார்=செயற்கரிய அத்திருத்தொண்டைச்செய்த கழற்சிங்கநாயனார்; அளவில்காலமருவியவுரிமைதாங்கி=நெடுங்காலம் தமதரசுரிமையைத்தாங்கிவாழ்ந்து (பின்பு); மாலயற்கரியார்=திருமாலுக்கும் திசைமுகருக்கும் அரிய சிவபெருமான் (பாலித்த); மன்னுந்திருவருட்சிறப்பினால்=நிலைபெற்ற திருவருண்மேன்மையால்; செய்யசேவடியினிழல்=அக்கடவுளுடைய செவ்விய திருவடி நீழலில்; பெருகியவுரிமையாகும் பேரருளெய்தினார்=தமக்குச் சாலவுரிமையாகும் பேரின்பத்தைப்பெற்றார். எ-று.

திருவருட்சிறப்பினால் பேரருளெய்தினாரென இயையும். பேரின்பம் அருண்மயமாகலின் அதனைப் பேரருளென்றுபசரித்தார். ஏ-அசைகள். (௧௨)

வையகங்கழக்காதன்மாதேவிதனதுசெய்ய
கையினைத்தடிந்தசிங்கர்கழலிணைதொழுதுபோற்றி
யெய்தியபெருமையன்பரிடங்கழியாரென்றேத்து
மெய்யருளுடையதொண்டர்செய்வினைவிளம்பலுற்றாம்.

(இ-ள்.) காதன்மாதேவிதனதுசெய்யகையினை=காதலையுடைய சிறந்தமனைவியினது செவ்வியகையை; வையகங்கழத்தடிந்த=பூமியிலே புகழ்நிலைபெறச் சேதித்த; சிங்கர்கழலிணைதொழுதுபோற்றி=கழற்சிங்கநாயனாருடைய உபயதிருவடிகளையும் வணங்கித்துதித்து; பெருமையெய்திய மெய்யருளுடையவன்பர்=சிறப்புற்ற உண்மைத்திருவருளுடைய அன்பராகிய; இடங்கழியாரென்றேத்துந்தொண்டர்=இடங்கழியாரென்று துதிக்கும் நாயனாருடைய; செய்வினைவிளம்பலுற்றாம்=திருத்தொண்டைச்செப்புவோம். எ-று. வையகம் என்புழி ஏழனுருபுவிரிக்க. (௧௩)

## கழற்சிங்கநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் - ௩௫௪.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இடங்கழிநாயனார்புராணம்.

எழுந்திரைமாகடலாடையிருநிலமாமகண்மார்பி
லழுந்துபடவெழுதுமிலைத்தொழிற்றொய்யிலணியினவாஞ்
செழுந்தளிரின்புடைமறைந்தபெடைகளிப்பத்தேமாவின்
கொழுந்துணர்கோதிக்கொண்டுகுயிலுடுகோனாடு.

(இ-ள்.) செழுந்தளிரின்புடைமறைந்தபெடைகளிப்ப=வளம்பெற்ற தளிரின் அருகே மறைந்த பேடைகண்டு களிக்கும்படி; தேமாவின்கொழுந்துணர்கோதிக்கொண்டு=தேமாவின் செழுத்தபூங்கொத்தினைக் கோதிக்கொண்டு; குயிலுடுகோனாடு=குயில் குறிப்பாகப்பார்க்கும் கோனாடானது; எழுந்திரைமாகடலாடை=ஒங்கும் அலைகளையுடைய பெரிய சமுத்திரத்தை ஆடையாகக்கொண்ட; இருநிலமாமகண்மார்பில்=பெருமைபெற்ற பூதேவியின் மார்பிலே; அழுந்துபடவிலைத்தொழிலெழுதும்=பதியும்படி இலைபோலச் செயலமையச் சித்திரித்த; தொய்யிலணியின=தொய்யிலை நிகர்க்கும் அலங்காரத்தையுடையது. எ-று.

முகத்திற்குத் திலகம்போல மார்பிற்குத் தொய்யிலணி சிறத்தலின் இக்கோனாடு நிலமகள் மார்பைச் சிறப்பித்து நிற்பதென்பார், "மார்பிற்றொய்யிலணியின" என்றார். அழுந்துபடல்-ஒருசொன்னீர்மைத்து. அணியின ஒருமையிற் பன்மைமயக்கம். ஆம்-அசை. (க)

முருகுறுசெங்கமலமதுமலர்துதைந்தமொய்யளிகள்
பருகுறுந்தெண்டிரைவாவிப்பயில்பெடையோடிரையருந்தி
வருகுறுதண்டுளிவாடைமறையமாதவிச்சூழற்
குருகுறங்குங்கோனாட்டுக்கொடிநகரங்கொடும்பாளூர்.

(இ-ள்.) துதைந்தமொய்யளிகள்=செறிந்தனவாகி மொய்த்த வண்டுகள்; முருகுறுசெங்கமலமலர்மதுப்பருகுறும்=வாசனைமிக்க செந்தாமரைமலர்களின் மதுவை அருந்தும்; தெண்டிரைவாவி=தெள்ளிய அலைகளையுடைய தடாகங்களிலே; பயில்பெடையோடிரையருந்தி=உடனுறையும் பேடைகளோடு இரையுண்டு; வருகுறுதண்டுளிவாடைமறைய=வருகின்ற சிறிய குளிர்ந்த திவலைகளையுடைய வாடைக்காற்று மோதாவண்ணம்; மாதவிச்சூழற்குருகுறங்குங்கோனாட்டு=குருக்கத்திச்செடிகளின்செறிவிலே குருகுகள் நித்திரைசெய்கின்ற கோனாட்டிலே; கொடிநகரங்கொடும்பாளூர்=கொடிநாட்டப்பட்ட சிறந்தநகரம் கொடும்பாளூராகும். எ-று. (உ)

அந்நகரத்தினிலிருக்கும்வேளிர்குலத்தரசளித்து
மன்னியபொன்னம்பலத்துமணிமுகட்டிற்பாக்கொங்கிற்
பன்னுதுலைப்பசும்பொன்னாற்பயில்பிழம்பாமிசையணிந்த
பொன்னெடுந்தோளாதித்தன்புகழ்மரபிற்குடிமுதலோர்.

(இ-ள்.) அந்நகரத்தினிலிருக்கும்வேளிர்குலத்தரசளித்து=அந்நகரத்திலுள்ள குறுநிலமன்னவர்குலத்திலே அரசுபுரிந்து; பன்னுதுலைப்பாக்கொங்கிற்பசும்பொன்னால்=

உயர்த்துக்கூறும் நிறையையுடைய ஒளிபெற்ற கொங்கிற் பசும்பொன்னால்; மன்னிய பொன்னம்பலத்துமணிமுகட்டில்=நிலைபெற்ற கனகசபையின் அழகிய மேற்பரப்பு முற்றும்; பயில்பிழம்பாமிசையணிந்த=அமைந்த சோதிமயமாக அலங்கரித்த; பொன்னெடுந்தோள்=இலக்குமிவசிக்கும் நெடியதோள்களையுடைய; ஆதித்தன்புகழ்மரபிற் குடிமுதலோர்=சூரியவமிசமாகிய புகழ்பெற்ற குடிக்குத் தலைவர். எ-று.

வேளிர்-குறுநிலமன்னவர். பா-ஒளி. கொங்கிற்பொன்-அக்காலத்து வழங்கிய மாற்றுயர்ந்த ஓர்வகைப்பொன். துலை-நிறை. தோள்முதலோர் என இயையும்-கொடுங்கிற்பன்னுதுலைப்பசும்பொன் என்பதும்பாடம். (௫)

இடங்கழியாரெனவுலகிலேறுபெருநாமத்தா
ரடங்கலர்முப்புரமெரித்தாரடித்தொண்டினெறியன்றி
முடங்குநெறிகனவினிலுமுன்னுதாரெந்நாளுந்
தொடர்ந்தபெருங்காதலினாற்றொண்டர்வேண்டியசெய்வார்.

(இ-ள்.) இடங்கழியாரெனவுலகிலேறுபெருநாமத்தார்=இடங்கழிநாயனாரென இவ்வுலகிலோங்கிய மிக்க திருப்பெயரையுடையவர்; அடங்கலர்முப்புரமெரித்தார்=பகைவருக்குரிய திரிபுரங்களைத்தகித்த சிவபெருமானது; அடித்தொண்டினெறியன்றி=திருவடித்தொண்டினெறியையேயன்றி; முடங்குநெறிகனவினிலுமுன்னுதார்=பற்றத்தகாத வேறுநெறியைக் கனவிலும் விரும்பாதவர்; தொடர்ந்தபெருங்காதலினால்=இடைவிடாப் பெருவிருப்பத்தினால்; தொண்டர்வேண்டியவெந்நாளுஞ்செய்வார்=தொண்டர்வேண்டிய ஏவலை எப்பொழுதும் புரிபவர். எ-று.

பற்றத்தகாதநெறியென்பார் முடங்குநெறியென்றார். (௬)

சைவநெறிவைதிகத்தின்றருமநெறியொடுந்தழைப்ப
மைவளருந்திருமிடற்றார்மன்னியகோயில்களெங்கு
மெய்வழிபாட்டர்ச்சனைகள்விதிவழிமேன்மேல்விளங்க
மொய்வளர்வண்புகழ்பெருகமுறைபுரியுமந்நாளில்.

(இ-ள்.) வைதிகத்தின்றருமநெறியொடும் சைவநெறிதழைப்ப=வைதிகதருமநெறிகளோடு சைவநெறியும் விர்த்தியாகவும்; மைவளருந்திருமிடற்றார்மன்னியகோயில்களெங்கும்=கருமைமிகும்கண்டத்தாராகிய கடவுள்வீற்றிருக்கும் ஆலயமுற்றும்; மெய்வழிபாட்டர்ச்சனைகள்விதிவழிமேன்மேல்விளங்க = உண்மையாகியநைமித்திகத்தோடு நித்தியபூசைகளும் விதிப்படி மேன்மேலோங்கவும்; மொய்வளர்வண்புகழ்பெருக=செறிந்துவளர்கின்ற வண்மைபெற்ற புகழ் சிறக்கவும்; முறைபுரியுமந்நாளில்=செங்கோல்செலுத்தும் அக்காலத்திலே. எ-று.

நைமித்திகம் நித்தியத்திற்குழ்வுதிர உள்ளபடி நேசித்துச் செய்யப்படுவதாகலின் மெய்வழிபாடென்றார். வழிபாடென்புழி மூன்றனுருபுவிரிக்க. மொய்யென்னும் முதனிலை வினையெச்சப்பொருளில் வந்தது. வினைத்தொகையுமாம். (௭)

சங்கரன்றனடியாருக்கமுதளிக்குந்தவமுடையா
ரங்கொருவரடியர்தமக்கமுதொருநாளாக்கவுட
னெங்குமொருசெயல்காணுதெய்தியசெய்தொழின்முட்டப்
பொங்கியெழும்பெருவிருப்பாற்புரியும்வினைதெரியாது.

(இ-ள்.) அங்குசங்கரன்றனடியாருக்கமுதளிக்கும்=அந்நகரத்திலே சிவனடியவர்களுக்குத் திருவமுதுசெய்விக்கும்; தவமுடையாரொருவரொருநாள்=புண்ணிய

மூடையவரொருவர் ஒருதினம்; அடியர்தமக்கமுதாக்க=அடியவர்களுக்குத் திருவமுது செய்விக்கும்பொருட்டு; எங்குமொருசெயல்காணுது=எவ்விடத்தும் ஒருதொழில்காணுமையால்; எய்தியசெய்தொழில்முட்டவுடன்=தாம் மேற்கொண்ட திருத்தொண்டு தவறுபட உடனே; பொங்கியெழும்பெருவிருப்பால்=மாகேசுரபூசையின்கண் வளர்ந்தெழும் அத்தியந்த ஆசையால்; புரியும்வினைதெரியாது=செயற்பாலதாகிய தொழில் இதுவென்று தெரியாமல். எ-று

கற்றுணர்ந்தோர்க்கும் ஒன்றிற் காதன்மிக்கவழி கருத்து அதன்மயமாகலின் இன்னசெயற்பாலன இன்னவொழிதற்பாலனவென்னும் உணர்ச்சிதோன்றுவாகலின் இந்நாயனாரும் "பொங்கியெழும்பெருவிருப்பாற்புரியும்வினைதெரியாது" மேற்கூறுவதியற்றுவாராயினரென்பது. (கு)

அரசரவர்பண்டாரத்தந்நாட்டினெற்கூட்டி
னிறைசெறிந்தபுரிபலவாநிலைக்கொட்டகாரத்திற்
புரைசெறிநள்ளிருளின்கட்புக்குமுகந்தெடுப்பவரை
முரசெறிகாவலர்கண்டுபிடித்தரசன்முன்கொணர்ந்தார்.

(இ-ள்.) அரசரவர் பண்டாரத்து = அரசருடைய பண்டாரத்திலே; அந்நாட்டினெற்கூட்டி னிறைசெறிந்த = அந்நாட்டின் நெற்களைநிரப்பிய நெற்கூட்டினிரைகள் நெருங்கிய; புரிபலவா நிலைக்கொட்டகாரத்தில் = பலமதில்கள் சூழ்ந்த நிலைக்களமாகிய கொட்டகாரத்தில்; புரைசெறி நள்ளிருளின்கட்புக்கு = யாண்டுஞ்செறிந்த இருளையுடைய அர்த்தராத்திரியிற் புகுந்து; முகந்தெடுப்பவரை = நெல்லை முகந்தெடுக்கும் அவ்வடியவரை;முரசெறிகாவலர்கண்டுபிடித்து=பறைமுழக்கிவரும் காவலர் பார்த்துப் பிடித்து; அரசர்முன் கொணர்ந்தார் = அவ்வரசர்முன்பு கொண்டணுகினர். எ-று.

பண்டாரத்துக் கொட்டகாரத்திற் புக்கென இயையும். பண்டாரம் - பலபண்டசாலை. கொட்டகாரம்-அதில் நெற்கூடுகளிருக்கும் இடம். நிலை - இருப்பு. அந்நாட்டினெல் - அரசர்க்கு ஆறிலொருபங்காகவந்தது. (எ)

மெய்த்தவரைக்கண்டிருக்கும்வேன்மன்னர்வினவுதலு
மத்தனடியாரையானமுதுசெய்விப்பதுமுட்ட
வித்தகைமைசெய்தேனென்றியம்புதலுமிகவிரங்கிப்
பத்தரைவிட்டிவரன்றேபண்டாரமெனக்கென்பார்.

(இ-ள்.) மெய்த்தவரைக் கண்டிருக்கும் = அவ்வடியவரை முன்னரே நோக்கியுள்ள; வேன்மன்னர் வினவுதலும் = வேலேந்திய அவ்வரசர்குரிசிலார் வினவுதலும்; அத்தனடியாரை யானமுதுசெய்விப்பது முட்ட = அடியேன் சிவனடியவரைத் திருவமுது செய்விப்பது இன்றுதவறநேர்ந்தமையால்; இத்தகைமை செய்தேனென்றியம்புதலும் = இச்செயல் புரிந்தேனென்று அவர் இசைத்தலும்; மிகவிரங்கிப் பத்தரைவிட்டு=மிகவும்வருந்தி அவரை விடுவித்து; எனக்கிவரன்றே பண்டாரமென்பார் = எனக்கு இவரல்லவோ பண்டாரமென்று கூறுவாராகி. எ-று.

கொலுவிருக்கும் வேன்மன்னர் மெய்த்தவரைக்கண்டு வினவலும் என முதலடிக்குப் பொருள் கொள்ளலுமாம். நெல் நிதி முதலியவைகள் எனக்குப் பண்டாரமன்று, இவரே பண்டாரம் என்றபடி. பண்டாரம் - ஐசுவரியம். (அ)

நிறையழிந்தவுள்ளத்தானெற்பண்டாரமுமன்றிக்
குறைவினிதிப்பண்டாரமானவெலாங்கொள்ளைமுகந்

இறைவனடியார்கவர்ந்துகொள்கவெனவெம்மருங்கும்
பறையறையப்பண்ணுவித்தார்படைத்தநிதிப்பயன்கொள்வார்.

(இ-ள்.) படைத்த நிதிப்பயன் கொள்வார் = தாம்பெற்றுள்ள செல்வங்களின் பயனையடைவாராய்; நிறையழிந்த வுள்ளத்தால் = நிலைபெறுதலொழிந்த சிந்தனையினால் அந்நாயனார்; நெற்பண்டாரமுமன்றி = நெற்பண்டாரமே யல்லாமல்; குறைவினிதிப்பண்டார மானவெலாங் கொள்ளைமுகந்து=குறைவில்லாத நிதிப்பண்டாரமாக உள்ளவற்றையெல்லாம் கொள்ளைகொண்டு; இறைவனடியார் கவர்ந்துகொள்கவென = அரனடியவர்கள் தமக்கு உரிமையாக்கிக் கொள்ளுகவென்று; எம்மருங்கும் பறையறையப் பண்ணுவித்தார் = எவ்விடங்களிலும் பறைமுழக்கச்செய்வித்தார். எ-று.

உள்ளம் நிறையழிதலாவது - நமதுநாட்டில் சிவனடியவர் இங்ஙனம் வறுமையுடையராயினரே யென்னும் கவலையால் நிலைபேறின்றிச் சலித்தல். (௯)

எண்ணில்பெரும்பண்டாரமீசனடியார்கொள்ள
வுண்ணிறைந்தவன்பினாலுறுகொள்ளை மிகவூட்டித்
தண்ணளியாலெனடுங்காலந்திருநீற்றினெறிதழைப்ப
மண்ணிலருள்புரிந்திறைவர்மலரடியினிழல்சேர்ந்தார்.

(இ-ள்.) எண்ணில் பெரும் பண்டாரம் = அளவுபடாத பெரிய பண்டாரங்களைத்தையும்; ஈசனடியார்கொள்ள = சிவனடியவர்கைக்கொள்ளும்படி; உண்ணிறைந்தவன்பினாலுறுகொள்ளைமிகவூட்டி = அகத்திலே நிரம்பிய பத்தியினாற் பெருங்கொள்ளையாக மிகவுமளித்து; மண்ணில் நெடுங்காலம் = நிலவுலகத்திலே நெடுங்காலம்; திருநீற்றினெறிதழைப்பத் தண்ணளியா லருள்புரிந்து = சைவசமயஞ் செழித்தோங்கும்படி சீவகருணையோடு அரசுபுரிந்து; இறைவர் மலரடியினிழல் சேர்ந்தார் = சிவபெருமான் திருவடிநீழலை அடைந்தார். எ-று. (௧௦)

மைதழையுமணிமிடற்றார்வழித்தொண்டின்வழிபாட்டி
லெய்துபெருஞ்சிறப்புடையவிடங்கழியார்கழல்வணங்கி
மெய்தருவார்நெறியன்றிவேறொன்றுமேலறியாச்
செய்தவராஞ்செருத்துணையார்திருத்தொண்டின்செயன்மொழிவாம்.

(இ-ள்.) மைதழையுமணிமிடற்றார் = கருமைசெறிந்த அழகிய கண்டத்தராகிய கடவுளின்; வழித்தொண்டின் வழிபாட்டி லெய்துபெருஞ் சிறப்புடைய = பரம்பரைத்தொண்டின் வழிபாட்டினாற்படைத்த பெருஞ்சிறப்பையுடைய; இடங்கழியார்கழல்வணங்கி = இடங்கழிநாயனார் திருவடிகளை இறைஞ்சி; மெய்தருவார் நெறியன்றி = உண்மைக்கதியையளிக்கும் சிவபெருமானுக்கு உரிய தொண்டல்லது; மேல்வேறொன்றுமறியா = மேற்பிறிதொன்றும் உணராத; செய்தவராஞ் செருத்துணையார் = செய்தவத்தினராகிய செருத்துணைநாயனாருடைய; திருத்தொண்டின் செயன் மொழிவாம் = திருத்தொண்டினியல்பைச் செப்புவாம். எ-று. (௧௧)

## இடங்கழிநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம். ௩௬௫.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# செருத்துணைநாயனார்புராணம்.

உள்ளும்புறம்புங்குலமரபினொழுக்கம்வழுவாவொருமைநெறி
கொள்ளுமியல்பிற்குடிமுதலோர்மலிந்தசெல்வக்குலப்பதியாந்
தெள்ளுந்திரைகண்மதகுதொறுஞ்சேலுங்கயலுஞ்செழுமணியுந்
தள்ளும்பொன்னிநீர்நாட்டுமருகனாட்டுத்தஞ்சாவூர்.

(இ-ள்.) தெள்ளுந்திரைகள் = கொழிக்குந்திரைகளானவை; மதகுதொறுஞ் சேலுங்கயலுஞ் செழுமணியுந் தள்ளும்=மதகுதோறும் சேல்களையும் கயல்களையும் செழித்த முத்துக்களையும் ஒதுக்குகின்ற; பொன்னிநீர் நாட்டு = காவிரிநதி சூழ்ந்த சோணாட்டின் (உட்பிரிவாகிய); மருகனாட்டுத்தஞ்சாவூர் = மருகனாட்டிலுள்ள தஞ்சாவூரானது; குலமரபினொழுக்கம் வழுவா ஒருமைநெறி = குலமுறையினொழுக்கந் தவறாத ஒற்றுமைப்பட்ட நெறியை; உள்ளும் புறம்புங் கொள்ளுமியல்பில் = அகத்தும்புறத்தும் கொள்ளுகின்ற அவ்வியல்பினையுடைய; குடிமுதலோர் மலிந்தசெல்வக்குலப்பதியாம் = குடித்தலைவர்கள் குழுமியசெல்வமலிந்த சிறந்தநகரமாகும். எ-று.

அரசனாணை முதலியவற்றிற்கன்றி அருங்கதிவேண்டி அநுட்டிப்பவரென்பார், "உள்ளும் புறம்பும் ஒருமைநெறிகொள்ளுங் குடிமுதலோர்." என்றார். (க)

சீரின்விளங்குமப்பதியிற்றிருந்துவேளாண்குடிமுதல்வர்
நீரின்மலிந்தசெய்யசடைநீற்றர்கூற்றினெஞ்சிடித்த
வேரிமலர்ந்தபூங்கழல்சூழ்மெய்யன்புடையசைவரெனப்
பாரினிகழ்ந்தசெருத்துணையார்பரவுந்தொண்டினெறிநின்றார்.

(இ-ள்.) சீரின்விளங்குமப்பதியில் = சிறப்பிற்பொலியும் அந்நகரிலே; திருந்துவேளாண்குடிமுதல்வர்=திருத்தமிக்க வேளாண்குடிக்குத் தலைவராய்; நீரின்மலிந்த செய்யசடைநீற்றர் = கங்கையாற் சிறந்த சிவந்த சடையையும் திருநீற்றையுமுடையகடவுளின்; கூற்றினெஞ்சிடித்த = இயமன் மார்பிலுதைத்த; வேரிமலர்ந்த பூங்கழல்சூழ் = தேன்விரிந்த செந்தாமரைபுரையுந் திருவடியைச்சிந்திக்கின்ற; மெய்யன்புடைய சைவரென = மெய்யன்பையுடைய சைவரென்று வியக்க; பாரினிகழ்ந்த செருத்துணையார் = பூமியில் விளங்கிய செருத்துணைநாயனார்; பரவுந் தொண்டினெறிநின்றார் = எவருந்துதிக்கும் தொண்டினெறியிலே நிலைபெற்றார். எ-று.

குடிமுதல்வர் செருத்துணையாரெனக் கூட்டுக. சூழ்தல் - சிந்தித்தல். (உ)

ஆனவன்பர்திருவாரூராழித்தேர்வித்தகர்கோயின்
ஞானமுனிவரிமையவர்கணெருங்குநலஞ்சேர்முன்றிலினுண்
மானநிலவுதிருப்பணிகள்செய்துகாலங்களின்வணங்கிக்
கூனவிளவெண்பிறைமுடியார்தொண்டுபொலியக்குலவுநாள்.

(இ-ள்.) ஆனவன்பர்=அவ்வடியவர்; திருவாரூராழித்தேர்வித்தகர் கோயில்= திருவாரூரிலே சக்கரத்தேரையுடைய ஞானசொரூபராகிய சிவபெருமான் ஆலயத்திலே; ஞானமுனிவரிமையவர்க ணெருங்கும் = அறிவிற்சிறந்த முனிவர்களும் அமரர்களும் செறிந்த; நலஞ்சேர் முன்றிலினுள் = சிறப்பமைந்த திருமுற்றத்தினுள்;

மானவிவ்வு திருப்பணிகள் செய்து = மாட்சிமைப்பட்ட திருப்பணிகளை இயற்றி; காலங்களின்வணங்கி = அவ்வக்காலங்களினும் அண்ணலைத் தொழுதுகொண்டு; கூனலிளவெண்பிறை முடியார் = வளைவையும் இளமையையும் வெண்மையையும் வாய்ந்த திங்களைத்தரித்த திருமுடியையுடைய கடவுளின்; தொண்டுபொலியக்குலவுநாள் = திருத்தொண்டோங்கத் திகழுநாளில். எ-று.

திருவாரூரிலே தேர்சிறந்ததாகலின் ஆழித்தேர் வித்தகரென்றார். (௩)

உலகுநிகழ்ந்தபல்லவர்கோச்சிங்கருரிமைப்பெருந்தேவி
நிலவுதிருப்பூமண்டபத்துமருங்குநீங்கிக்கிடந்ததொரு
மலரையெடுத்துமோந்ததற்குவந்துபொறுமைவழித்தொண்ட
ரிலகுசுடர்வாய்க்கருவியெடுத்தெழுந்தவேகத்தாலெய்தி.

(இ-ள்.) வழித்தொண்டர் = பரம்பரைத்தொண்டராகிய இந்நாயனார்; உலகுநிகழ்ந்த பல்லவர்கோ = உலகில்விளங்கிய பல்லவர்குலத் தலைவராகிய; சிங்கருரிமைப்பெருந்தேவி = கழற்சிங்கநாயனாருடைய உரிய பெரிய மனைவியானவள்; நிலவுதிருப்பூமண்டபத்து மருங்கு = திகழுகின்ற திருமாலை மண்டபத்தினருகே; நீங்கிக்கிடந்ததொரு மலரையெடுத்து மோந்ததற்குப் பொறுமை = விழுந்துகிடந்ததாகிய ஒரு பூவை யெடுத்து மோந்ததற்குப் பொறாமல்; இலகுசுடர்வாய்க் கருவியெடுத்து = ஒளிவிடும் காந்திபெற்ற வாயையுடைய கத்தியைக்கைக்கொண்டு; எழுந்த வேகத்தால் வந்தெய்தி = ஓங்கிய வேகத்தால் வந்தடைந்து. எ-று. (௪)

கடிதுமுற்றிமற்றவடன்கருமென்கூந்தல்பிடித்தீர்த்துப்
படியில்வீழ்த்திமணிமூக்கைப்பற்றிப்பரமர்செய்யசடை
முடியிலேறுந்திருப்பூமண்டபத்துமலர்மோந்திடுமூக்கைத்
தடிவனென்றுகருவியினாலரிந்தார்தலைமைத்தனித்தொண்டர்.

(இ-ள்.) தலைமைத்தனித்தொண்டர் = முதன்மைசெறிந்த ஒப்பற்ற தொண்டராகிய அந்நாயனார்; கடிதுமுற்றி = விரைவிற்சமீபித்து; அவடன்கருமென்கூந்தல் பிடித்தீர்த்து = அவளுடைய கரிய மெல்லிய அளகத்தைப்பற்றி யிழுத்து; படியில் வீழ்த்தி மணிமூக்கைப்பற்றி = பூமியிலேதள்ளி அழகிய மூக்கைப்பிடித்து; பரமர்செய்யசடைமுடியிலேறும் = முதற்கடவுளுடைய சிவந்தசடைமுடியிலே தரித்தற்குரிய; திருப்பூமண்டபத்து மலர்மோந்திடு மூக்கை = திருமாலைமண்டபத்திலிருந்தபூவை மோந்தமூக்கை; தடிவனென்று கருவியினாலரிந்தார் = கொய்வேனென்றுகூறிக் கத்தியால் அரிந்தார். எ-று. மற்று - அசை. (௫)

அடுத்ததிருத்தொண்டுலகறியச்செய்தவடலேறனையவர்தாந்
தொடுத்ததாமமலரிதழிமுடியாரடிமைத்தொண்டுகட
லுடுத்தவுலகினிகழச்செய்துய்யச்செய்யபொன்மன்று
ளெடுத்தபாதநிழலடைந்தேயிறவாவின்பமெய்தினார்.

(இ-ள்.) அடுத்த திருத்தொண் டுலகறியச்செய்த = தாம்மேற்கொண்ட திருத்தொண்டை உலகினருணரப்புரிந்த; அடலேறனையவர் = வெற்றிபெற்ற சிங்கம்போலும் அந்நாயனார்; இதழிமலர் தொடுத்ததாமம் = கொன்றைமலராற் றொடுக்கப்பட்ட மாலையணிந்த; முடியாரடிமைத்தொண்டு = முடியையுடைய முதல்வர் திருத்தொண்டை; கடலுடுத்தவுலகி னிகழச்செய்து = சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகிலே தழைக்க இயற்றி; உய்யச்செய்ய பொன்மன்றுளெடுத்த = ஆன்மாக்களுய்யச் செம்

பொன்னம்பலத்திலே தூக்கியருளிய; பாதநிழலடைந்து இறவாவின்பமெய்தினர்= திருவடிநீழலையடைந்து சிதைவில்லாத பேரின்பத்தைப் பெற்றார். எ-று.

தாம் - ஏ - அசைகள். (௬)

செங்கண்விடையார்திருமுன்றில்விழுந்ததிருப்பள்ளித்தாம
மங்கணெடுத்துமோந்தவதற்கரசருரிமைப்பெருந்தேவி
துங்கமணிமூக்கரிந்தசெருத்துணையார்தூயகழலிறைஞ்சி
யெங்குநிகழ்ந்தபுகழ்த்துணையாருரிமையடிமையெடுத்துரைப்பாம்.

(இ-ள்) செங்கண்விடையார் = சிவந்தகண்களையுடைய இடபவாகனத்தரா கிய சிவபிரானது; திருமுன்றில்விழுந்த திருப்பள்ளித்தாமம் = திருமுற்றத்திலே விழுந்த திருமலரை; அங்கணெடுத்து மோந்தவதற்கு = அங்கே எடுத்து மோந்ததன் பொருட்டு; அரசருரிமைப்பெருந்தேவி = கழற்சிங்கநாயனாருக்குரிய பெரியதேவி யின்; துங்கமணிமூக்கரிந்த = உயர்ச்சியுற்ற அழகிய மூக்கையரிந்த; செருத்துணை யார் தூயகழலிறைஞ்சி = செருத்துணைநாயனாருடைய செவ்விய திருவடிகளைவண ங்கி; எங்குநிகழ்ந்த புகழ்த்துணையார்=எங்கும்விளங்கிய புகழ்த்துணைநாயனாருடைய உரிமையடிமையெடுத்துரைப்பாம்=உரிமைத்தொண்டைஎடுத்துக்கூறுவாம். எ-று.

செருத்துணைநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம். ௬௭௨.

---

# புகழ்த்துணைநாயனார்புராணம்.

செருவிலிபுத்தூர்மன்னுஞ்சிவமறையோர்திருக்குலத்தா
ரருவிவரை வில்லாளிக்ககத்தடிமையாமதனுக்
கொருவர்தமைநிகரில்லாருலகத்துப்பரந்தோங்கிப்
பொருவரியபுகழ்நீடுபுகழ்த்துணையாரெனும்பெயரார்.

(இ-ள்.) செருவிலிபுத்தூர்மன்னுஞ் சிவமறையோர் திருக்குலத்தார் = செருவி லிபுத்தூரிலே நிகழ்ந்த ஆதிசைவகுலத்திலே அவதரித்தவர்; அருவிவரை வில்லாளி க்கு=அருவிபாயும்மேருமலை வில்லாகக்கொண்ட விமலருக்கு; அகத்தடிமையாமதனு க்கொருவர் தமை நிகரில்லார் = அகத்தொண்டிடையில் ஒருவரும் தம்மை ஒவ் வாதவர்; உலகத்துப் பரந்தோங்கிப் பொருவரிய புகழ்நீடு = உலகமுற்றும் பரந்து உயர்ந்து நிகரற்ற புகழ்மிக்க; புகழ்த்துணையாரெனும் பெயரார் = புகழ்த்துணைநாய னாரென்னும் திருநாமமுடையவர். எ-று.

அகத்தடிமை-திருமேனிதீண்டிச்செய்யும் அணுக்கத்தொண்டு உடைமை. அத னுக்கு - வேற்றுமைமயக்கம். (௧)

தங்கோனைத்தவத்தாலேதத்துவத்தின்வழிபடுநாட்
பொங்கோதஞாலத்துவற்கடமாய்ப்பசிபுரிந்து
மெங்கோமான்றனைவிடுவேனல்லேனென்றிராப்பகலுங்
கொங்கார்பன்மலர்கொண்டுகுளிர்புனல்கொண்டர்ச்சிப்பார்.

(இ-ள்.) தங்கோனை = தமது தலைவராகிய சிவபெருமானை; தவத்தாலேதத்துவத்தின்வழிபடுநாள் = மனவொடுக்கத்தினால் உண்மையாக வழிபடுங்காலத்தில்; பொங்கோதஞாலத்துவற்கடமாய்ப்பசிபுரிந்தும் = பரந்தகடல்சூழ்ந்த பூமியிலே பஞ்சமுண்டாகிப் பசியைவிளைத்தும்; எங்கோமான்றனைவிடுவேனல்லேனென்று = எமது இறைவர்வழிபாட்டை விடக்கடவேனல்லேனென்று; கொங்கார்பன்மலர்கொண்டு குளிர்புனல்கொண்டிராப்பகலுமர்ச்சிப்பார் = வாசனைநிரம்பியமலர்களாலும் குளிர்ந்ததிருமஞ்சனத்தாலும் இரவும்பகலும் பூசிப்பார். எ-று.

தத்துவம்-உண்மை. கொண்டு இரண்டும் மூன்றும்வேற்றுமைச்சொல்லுருபுகள்.

மாலயனுக்கரியானைமஞ்சனமாட்டும்பொழுது
சாலவுறுபசிப்பிணியால்வருந்திநிலைதளர்வெய்திக்
கோலநிறைபுனலுங்குடந்தாங்கமாட்டாமை
யாலமணிகண்டத்தார்முடிமீதுவீழ்த்தயர்வார்.

(இ-ள்.) மாலயனுக்கரியானைமஞ்சனமாட்டும்பொழுது = திருமாலுக்கும் பிரமதேவருக்கும் காணுதற்கரியவிமலரைத் திருமஞ்சனம் ஆட்டும்பொழுது; சாலவுறுபசிப்பிணியால்வருந்தி = பெரிதும்மிக்க பசிப்பிணியினாலே துன்புற்று; நிலைதளர்வெய்தி = தமதுநிலைதளர்ந்து; நிறைபுனலுங்குகோலக்குடந்தாங்கமாட்டாமை = நிரம்பிய நீர்த்தத்தையுடைய அழகியகுடத்தைத் தாங்கமுடியாமையால்; ஆலமணிகண்டத்தார்முடிமீதுவீழ்த்தயர்வார் = விடத்தையணிந்த கண்டத்தராகிய வித்தகர் திருமுடிமீது விழவிட்டுச்சோர்வார். எ-று. நிலைதளர்தல் - ஊக்கமிழத்தல். (௩)

சங்கரன்றனருளாலோர்துயில்வந்துதமையடைய
வங்கணனுங்கனவின்கணருள்புரிவானருந்துணவு
மங்கியநாட்கழிவளவும்வைப்பதுநித்தமுமொருகா
சிங்குனக்குநாமென்னவிடர்நீங்கியெழுந்திருந்தார்.

(இ-ள்.) சங்கரன்றனருளாலோர்துயில்வந்துதமையடைய = சிவபெருமான் திருவருளினால் ஒருநித்திரைவந்து தம்மையணுக; அங்கணனுங்கனவின்கணருள்புரிவான் = அருட்கண்ணராகியஅப்பெருமானும் சொப்பனத்திலே திருவருள்புரிவாராய்; அருந்துணவுமங்கியநாட்கழிவளவும் = உண்ணத்தக்க உணவுகிடையாத இவ்வற்கடம் தீருமட்டும்; இங்குனக்கு நித்தமு நாம்வைப்ப தொருகாசென்ன = இங்கே உன்பொருட்டுத் தினமும் நாம்வைப்பது ஒருகாசுஎன்று கட்டளையிட; இடர்நீங்கியெழுந்திருந்தார் = துன்பநீங்கித் துயிலெழுந்தார். எ-று. (சு)

பெற்றமுகந்தேறுவார்பீடத்தின்கீழொருகா
சற்றமடங்கிடவளிப்பவன்பருமற்றதுகைக்கொண்
டுற்றபெரும்பசியதனுலுணங்குமுடம்புடனுவந்து
முற்றுணர்வுதலைநிரம்பமுகமலர்ந்துகளிகூர்ந்தார்.

(இ-ள்.) பெற்றமுகந்தேறுவார் = இடபத்தை விரும்பியேர்ந்தருளும் இறைவரும்; பீடத்தின்கீழொருகாசற்றமடங்கிடவளிப்ப = இலிங்கபீடத்தின்கீழே ஒரு காசை அவர்சோர்வுநீங்கும்படி வைத்தருள; அன்பருமதுகைக்கொண்டு = நாயனாரும் அக்காசைக் கையிற்கொண்டு; உற்றபெரும்பசியினாலுணங்குமுடம்புடனுவந்து=

மிக்கபெரும்பசியால்வாடிய உடலம் உடனேபூரித்து;" முற்றுணர்வுதலைநிரம்ப = முதிர்ந்தஉணர்ச்சி முன்போலநிறைய; முகமலர்ந்துகளிகூர்ந்தார் = முகமலர்ச்சியுற்றுப் பெருமகிழ்வடைந்தார். எ-று.

மற்று-அசை. உவத்தல்-மீண்டுப்பூரித்தல். முறுகியபசிப்பிணியாலிழந்த உடற்பூரிப்பும் முற்றுணர்ச்சியும் முகமலர்ச்சியும் இப்பொழுதுடையராய் இன்பமிக்காரென்பது கருத்து. (௯)

அந்நாள்போலெந்நாளுமளித்தகாசதுகொண்டே
யின்னாதபசிப்பிணிவந்திறுத்தநாணீங்கியபின்
மின்னார்செஞ்சடையார்க்குமெய்யடிமைத்தொழில்செய்து
பொன்னாட்டினமரர்தொழப்புனிதரடிநிழற்சேர்ந்தார்.

(இ-ள்.) அந்நாள்போலெந்நாளுமளித்தகாசதுகொண்டு = அத்தினம்போல எத்தினத்தும் வைத்தருளியகாசை ஏற்றுவாழ்ந்து; இன்னாதபசிப்பிணிவந்திறுத்தநாணீங்கியபின் = துன்பத்தைவிளைக்கும் பசிநோய்வந்துசூழ்ந்த பஞ்சகாலம் தொலைந்தபின்னும்; மின்னார்செஞ்சடையார்க்கு = மின்போலும் சிவந்தசடையையுடைய விமலருக்கு; மெய்யடிமைத்தொழில்செய்து = உண்மையாகிய அருச்சனைத்தொண்டை உஞற்றி; பொன்னாட்டினமரர்தொழ = தேவலோகத்துள்ள தேவர்கள் வணங்க புனிதரடி நிழற்சேர்ந்தார் = சிவபெருமான் திருவடிநீழலை அடைந்தார். எ-று.

காசது என்புழி அது பகுதிப்பொருள்விகுதி. ஏ-அசை. (௧௦)

பந்தணையுமெல்விரலாள்பாகத்தர்திருப்பாதம்
வந்தணையுமனத்துணையார்புகழ்த்துணையார்கழல்வாழ்த்திச்
சந்தணியுமணிப்புயத்துத்தனிவீரராந்தலைவர்
கொந்தணையுமலரலங்கற்கோட்புலியார்செயலுரைப்பாம்.

(இ-ள்.) பந்தணையுமெல்விரலாள்பாகத்தர் = விளையாடற்பந்துசெறிந்த மெல்லியவிரலையுடைய அம்பிகைபாகராகிய அமலரது; திருப்பாதம்வந்தணையுமனத்துணையார் = திருவடிகள்வந்துகுடிகொண்ட மனத்துணையையுடையராகிய; புகழ்த்துணையார்கழல்வாழ்த்தி = புகழ்த்துணைநாயனாருடைய திருவடிகளைப்போற்றி; சந்தணியுமணிப்புயத்து = களபமணிந்த அழகியதோள்களையுடைய; தனிவீரர்தலைவராம் = நிகரற்றவீரர்க்குத் தலைவராகிய; கொந்தணையுமலரலங்கல் = கொத்துக்கள் செறிந்த மலர்மாலையையணிந்த; கோட்புலியார்செயலுரைப்பாம் = கோட்புலிநாயனார் திருத்தொண்டைக் கூறுவாம். எ-று.

தலைவர்வழிபாட்டில் மனம் தம்வயப்படடுநிற்றலின் அதனைத்துணையென்றார். (௧௧)

## புகழ்த்துணைநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் . ௪௩௧.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கோட்புலிநாயனார்புராணம்.

நலம்பெருகுஞ்சோணாட்டுநாட்டியத்தான்குடிவேளாண்
குலம்பெருகவந்துதித்தார்கோட்புலியாரெனும்பெயரார்
தலம்பெருகும்புகழ்வளவர்தந்திரியாராய்வேற்றுப்
புலம்பெருகத்துயர்விளையப்போர்விளைத்துப்புகழ்விளைப்பார்.

(இ-ள்.) நலம்பெருகுஞ்சோணாட்டு = சகலவளங்களும்தழைந்த சோழநாட்டிலே; நாட்டியத்தான்குடிவேளாண்குலம்பெருகவந்துதித்தார் = நாட்டியத்தான் குடியிலே வேளாண்குலம் விர்த்தியாகவந்தவதரித்தவர்; கோட்புலியாரெனும்பெயரார் = கோட்புலிநாயனாரென்னுந் திருநாமத்தார்; தலம்பெருகும்புகழ் = பூமியிலே பொலிந்த கீர்த்தியையுடைய; வளவர்தந்திரியாராய் = சோழராஜாவினிடத்தே சேனாதிபதித்தொழில்பூண்டு; வேற்றுப்புலம்பெருகத்துயர்விளையப்போர்விளைத்து = வேற்றரசர்பால் துன்பம்விளையும்படி போர்த்தொழில்புரிந்து வென்று; புகழ்விளைப்பார் = தம்மரசர்க்குப் புகழையுண்டாக்குவார். எ-று.

புலம்-புலத்தரையுணர்த்தலின் ஆகுபெயர். (க)

மன்னவன்பாற்பெறுஞ்சிறப்பின்வளமெல்லாமதியணியும
பிஞ்ஞகர்தங்கோயிறொறுந்திருவமுதின்படிபெருகச்
செந்நென்மலைக்குவடாகச்செய்துவருந்திருப்பணியே
பன்னெடுநாள்செய்தொழுகும்பாங்குபுரிந்தோங்குநாள்.

(இ-ள்.) மன்னவன்பாற்பெறுஞ்சிறப்பின்வளமெல்லாம் = அரசனாற்பெற்ற உயர்வினையுடைய அத்திரவியங்களனைத்தையும்; மதியணியும்பிஞ்ஞகர்தங்கோயிறொறும் = சந்திரனைத்தரித்த சம்புவினுடைய ஆலயங்கடோறும்; திருவமுதின்படிபெருக = திருவமுதமைக்குஞ்செய்கை ஓங்குதற்கு; செந்நென்மலைக்குவடாகச்செய்துவருந்திருப்பணியே = செவ்வியநெற்களை மலைச்சிகரம்போலச் சேகரித்துவைக்கும் திருப்பணியையே; பன்னெடுநாள்செய்தொழுகும்பாங்குபுரிந்தோங்குநாள் = மிகவும் நெடுங்காலம் புரிந்தொழுகும் நிலைமையை விரும்பிவாழும் நாளில். எ-று. (உ)

வேந்தனேவலிற்பகைஞர்வெம்முனைமேற்செல்கின்றார்
பாந்தள்பூணெனவணிந்தார்தமக்கமுதுபடியாக
வேந்தலார்தாமெய்துமளவும்வேண்டுஞ்செந்நெல்
வாய்ந்தகூடவைகட்டிவழிக்கொள்வார்மொழிகின்றார்.

(இ-ள்.) வேந்தனேவலிற்பகைஞர்வெம்முனைமேற்செல்கின்றாரேந்தலார் = அரசன் ஏவலினால் வெவ்வியபகைவீர்போர்மேற் செல்கின்றவராகிய அந்நாயனார்; பாந்தள்பூணெனவணிந்தார்தமக்கமுதுபடியாக = அரவுகளை ஆபரணமாகவணிந்த பெருமானுக்குத் திருவமுதுபடியாக; தாமெய்துமளவும்வேண்டுஞ்செந்நெல்வாய்ந்தகூ

டவைகட்டி = தாம்வருங்காலமளவும் வேண்டிய செந்நெற்களைச் சேர்கட்டிவை த்து; வழிக்கொள்வார்மொழிகின்றார் = புறப்படுகின்றவர் புகல்கின்றார். எ-று.

முனை - போர். (ரு)

தந்தமர்களாயினாதமக்கெல்லாந்தனித்தனியே
யெந்தையார்க்கமுதுபடிக்கேற்றியநெல்லிவையழிக்கச்
சிந்தையாற்றுநினைவார்திருவிரையாக்கலியென்று
வந்தனையாலுரைத்தகன்றார்மன்னவன்மாற்றார்முனைமேல்.

(இ-ள்.) எந்தையார்க்கமுதுபடிக்கேற்றியநெல்லிவை = எமதுபிதாவாகிய இறைவர்க்குத் திருவமுதின்பொருட்டுக் கட்டப்பட்ட இந்நெல்லை; அழிக்கச்சிந்தையாற்றுநினைவார் = (பிறவற்றிலே) செலவிடுதற்கு மனஞ்சகியாத சிந்தனையுடையவராய்; தந்தமர்களாயினார்தமக்கெல்லாம் = தம்முடைய சுற்றத்தவராயுள்ளவர்கட்கெல்லாம்; தனித்தனியேதிருவிரையாக்கலியென்றுவந்தனையாலுரைத்து = தனித்தனியாகத் திருவாணையென்று வந்தனையோடு சாற்றி; மன்னவன்மாற்றார்முனைமேலகன்றார் = அரசனுடையபகைவர் அமரின்கண்சென்றார். எ-று.

திருவிரையாக்கலி - திருவாணை. இறைவர்திருவமுதுக்கன்றிப் பிறவற்றிற்செலவிடாதபடி ஆணையுரைத்தகன்றாரென்பது. (சு)

மற்றவர்தாம்போயினபின்சிலநாளில்வற்கால
முற்றலுமச்சுற்றத்தாருணவின்றியிறப்பதனிற்
பெற்றமுயர்த்தவரமுதுபடிகொண்டாகிலும்பிழைத்துக்
குற்றமறப்பின்கொடுப்போமெனக்கூடுகுலைத்தழித்தார்.

(இ-ள்.) அவர்போயினபின்சிலநாளில்வற்காலமுற்றலும் = அவர்சென்றபின் சிலதினத்தில் பஞ்சகாலம் அணுகலும்; அச்சுற்றத்தாருணவின்றியிறப்பதனில் = அவ்வுறவினர் யாம் ஆகாரமில்லாமல் இறத்தலினும்; பெற்றமுயர்த்தவரமுதுபடி = இடபத்தைக்கொடியாகவுயர்ந்திய இறைவர்திருவமுதுபடியை; கொண்டாகிலும்பிழைத்து = அருந்தியேனும் உயிர்பிழைத்து; குற்றமறப்பின்கொடுப்போமென = எடுத்தருந்தும் இத்தோஷம்நீங்கப் பின்னர் ஈந்துவிடுவோமென்று; கூடுகுலைத்தழித்தார் = நெற்கூட்டைப்பிரித்துச் செலவிட்டார். எ-று.

அதையருந்துதல் சிவாபராதமென அவரும் அறிந்துவைத்தும் பசிப்பிணியாற்றாது புசித்தனரென்பார். "குற்றமறப்பின்கொடுப்போமெனக்கூடுகுலைத்தழித்தார்" என்றார். ஆகிலும் என்னும் உம்மை இழிவுசிறப்பு. மற்று-தாம். அசைகள். (எ)

மன்னவன்றன்றெம்முனையில்வினைவாய்த்துமற்றவன்பா
னன்னிதியின்குவைபெற்றநாட்டியத்தான்குடித்தலைவ
ரந்நகரிற்றமர்செய்தபிழையறிந்ததறியாமே
துன்னினார்சுற்றமெலாந்துணிப்பனெனுந்துணிவினராய்.

(இ-ள்) மன்னவன்றன்றெம்முனையில்வினைவாய்த்து = வேந்தனுடைய பகைவர் யுத்தத்தில் வெற்றிபெற்று; அவன்பானன்னிதியின் குவைபெற்ற = அவ்வேந்தன் பால் வேண்டிய திரவியம்பெற்ற; நாட்டியத்தான்குடித்தலைவர் = நாட்டியத்தான் குடிமுதல்வராகிய கோட்புலிநாயனார்; அந்நகரிற்றமர்செய்த பிழையறிந்து = அந்

நகரிலே தம்முடைய சுற்றத்தவர் புரிந்த குற்றத்தை அறிந்து; அதறியாமே = தாம் அறிந்துவைத்தமை அவர்க்குப் புலப்படாவண்ணம்; சுற்றமெலாந் துணிப்பனெனுந் துணிவினராய்த்தன்னினார் = = அவ்வுறவின்ரையெல்லாம் சேதிக்கும் நிச்சயமுடையவராய் அணுகினர். எ-று. மற்று - அசை. (௬)

எதிர்கொண்டதமர்க்கெல்லாமினியமொழிபலமொழிந்து
மதிதங்குசுடர்மணிமாளிகையின்கண்வந்தணைந்து
பதிகொண்டசுற்றத்தார்க்கெல்லாம்பைந்துகினிதிய
மதிகந்தந்தளிப்பதனுக்கழைமின்களென்றுரைத்து.

(இ-ள்.) எதிர்கொண்ட தமர்க்கெல்லா மினியமொழிபலமொழிந்து = எதிர்வந்த சுற்றத்தவர்க்கெல்லாம் இனியவார்த்தைபல இசைத்து; மதிதங்குசுடர்மணி மாளிகையின்கண்வந்தடைந்து = சந்திரன்றவழும் காந்திபெற்ற தமது இரத்தின மாளிகையிலே வந்தடைந்து; பதிகொண்ட சுற்றத்தார்க்கெல்லாம் = நகரிலுள்ள நம்மவர்களுக்கெல்லாம்; பைந்துகினிதியமதிகந்தந்தளிப்பதனுக்கு = செவ்வியவஸ்திரமும் திரவியமும் விசேஷமாகக்கொடுப்பதற்கு; அழைமின்களென்றுரைத்து = அவரை அழையுங்களென்று கூறி. எ-று. (௭)

எல்லாரும்புகுந்ததற்பினிருநிதியமளிப்பார்போ
னல்லார்தம்பேரோன்முன்கடைக்காக்கநாதன்றன்
வல்லாணைமறுத்தமுதுபடியழித்தமறக்கிளையைக்
கொல்லாதேவிடுவேனோவெனக்கனன்றுகொலைபுரிவார்.

(இ-ள்.) நல்லார் எல்லாரும் புகுந்ததற்பின் = சிவபத்தியிற்சிறந்த அந்நாயனார் அனைவரும் புகுந்தபின்பு; இருநிதியமளிப்பார்போல் = அவர்க்கு மிகுதிரவியங்கொடுப்பவர்போல; தன்பேரோன் முன்கடைக்காக்க = கோட்புலியென்னும் தம்பெயரைக்கொண்ட காவலாளன் முந்தியவாயிலைக்காக்க; நாதன்றன்வல்லாணைமறுத்து = சிவபெருமானைச்சுட்டியிட்ட வலிய திருவாணையைக்கடந்து; அமுதுபடியழித்தமறக்கிளையை = அமுதுபடியைச் செலவிட்ட இக்கொடிய சுற்றத்தவரை; கொல்லாதே விடுவேனோ வெனக்கனன்று கொலைபுரிவார் = கொல்லாமல்விடுவேனோவென்று சீறிக் கொலைசெய்வாராயினர். எ-று.

இந்நாயனார் பெயரே கடைகாப்பாளனுக்கும் பெயராகலின் "தம்பேரோன்" என்றார். ஏ-அசை. ஓ-எதிர்மறை. (அ)

தந்தையார்தாயார்மற்றுடன்பிறந்தார்தாரங்கள்
பந்தமார்சுற்றத்தார்பதியடியார்மதியணியு
மெந்தையார்திருப்படிமற்றுண்ணவிசைந்தார்களை யுஞ்
சிந்தவாள்கொடுதுணித்தார்தீயவினைப்பவந்துணிப்பார்.

(இ-ள்.) தீயவினைப்பவந்துணிப்பார் = வினைகாரணமாகவரும் கொடியபிறவியை ஒழிப்பாராகிய அந்நாயனார்; தந்தையார்தாயாருடன்பிறந்தார்தாரங்கள் = பிதாமாதாக்களும் சகோதரர்களும் மனைவிமார்களும்; பந்தமார்சுற்றத்தார் பதியடியார் = உரிமைபெற்ற சுற்றத்தவர்களும் அந்நகரிலுள்ள ஏவலர்களும்; மதியணியுமெந்தையார் திருப்படி=சந்திரனைத்தரிக்கும் சம்புவின் திருவமுதுக்குரிய நெல்லை;

உண்ணவிசைந்தார்களையும் = அருந்த உடன்பட்டவர்களுமாகிய அனைவரையும்; சிந்தவாள்கொடு துணித்தார் = சிதறிவிழும்படி வாள்கொண்டு சேதித்தார். எ - று.

இசைந்தார்களையும் என்னும் உம்மை இறந்ததுதழீஇநின்றது. இழிவுசிறப்பு மாம். நல்வினையும் பிறவிக்கு ஏதுவாகலின் தீயவென்பது பிறவிக்கு விசேடணமாக்க ப்பட்டது. தேவப்பிறப்பு முதலிய எவற்றினும் தீமையே விளைதலின் தீயபவமென் றாரென்க. (௯)

பின்னங்குப்பிழைத்ததொருபிள்ளையைத்தம்பெயரோனவ்
வன்னந்துய்த்திலதுகுடிக்கொருபுதல்வனருளுமென
வின்னெல்லுண்டாண்முலைப்பாலுண்டதெனவெடுத்தெறிந்து
மின்னல்லவடிவாளாலிருதுணியாய்விழவேற்றார்.

(இ-ள்.) பின்னங்குப்பிழைத்ததொரு பிள்ளையை = பின்பு அங்கே எஞ்சியிருந்ததொரு குழந்தையை; தம்பெயரோன் = கோட்புலியென்னுங் காவலானன்; அவ்வன்னந்துய்த்திலது = இது அவ்வமுதை யுண்ணவில்லை; குடிக்கொருபுதல்வன் = அன்றியும் அக்குடிக்கு ஒருபுத்திரன்; அருளுமென = ஆகலின் கொல்லாது அளிக்கவென வேண்ட; இந்நெல்லுண்டாண் முலைப்பால் = இந்நெல்லையுண்டவளது முலைப்பாலை; உண்டதென = இதுவும் உண்டதென்று மறுத்து; எடுத்தெறிந்து = தூக்கி வீசி; மின்னல்லவடிவாளால் = மின்போலமிளிரும் நல்லவடித்தவாளினால்; இருதுணியாய் விழவேற்றார் = இருதுண்டாய் விழும்படி அவ்வாளில் ஏற்றார். எ-று.

வாளிற்குநன்மை - ஏற்றபோதே எவற்றையும் இருதுணியாக்கல். (௧௦)

அந்நிலையேசிவபெருமானன்பரெதிர்வெளியேநின்
றுன்னுடையகைவாளாலுறுபாசமறுத்தகிளை
பொன்னுலகின்மேலுலகம்புக்கணையப்புகழோய்நீ
யிந்நிலைநம்முடனணைகென்றேவியெழுந்தருளினார்.

(இ-ள்.) அந்நிலையே சிவபெருமா னன்பரெதிர் வெளியேநின்று = அப்பொழுதே சிவபெருமான் அந்நாயனார்க்கெதிரிற் பிரசன்னராகி; புகழோய் = கீர்த்தியையுடைய கோட்புலியே; உன்னுடைய கைவாளா லுறுபாசமறுத்தகிளை = உன் கைவாளினால் தம்முடைய பாசங்களை யொழித்த சுற்றத்தவர்; பொன்னுலகின் மேலுலகம் புக்கணைய = தேவலோகத்தினும் மேம்பட்ட சிவலோகத்தையடைய; நீ இந்நிலை நம்முடனணைகென்றேவி = நீ இப்பொழுதே நம்முடன் வருகவென்று ஆஞ்ஞாபித்து; எழுந்தருளினார் = அவருடன்வரப் பெருமான் எழுந்தருளினார். எ-று.

பொன்னுலகின் மேலுலகம்-பொன்னுலகிற்சிறந்த உலகம் என்னலும் ஒன்று.()

அத்தனையன்னையாயாருயிராயமிர்தாகி
முத்தனைமுதல்வன்றாளடைந்துகிளைமுதறடிந்த
கொத்தலர்தார்க்கோட்புலியாரடிவணங்கிக்கூட்டத்திற்
பத்தராய்ப்பணிவார்தம்பரிசினையாம்பகருவாம்.

(இ-ள்.) அத்தனையன்னையாய் = தந்தையாகியும் தாயாகியும்; ஆருயிராயமிர்தாகி = அரிய உயிராகியும் அமிர்தமாகியும்; முத்தனை முதல்வன்றாளடைந்து = பற்றற்றுவிளங்கும் பரம்பொருளாகிய சிவபெருமான் திருவடியைச்சேர்ந்து; கிளைமுதற

டிந்த = உறவினரை முதலறவொழித்த; கொத்தலர்தார்க் கோட்புலியார் = கொத்தாக அலர்ந்த வெற்றிமாலையைப் புனைந்த கோட்புலிநாயனருடைய; அடிவணங்கி= திருப்பாதங்களைப்பணிந்து; கூட்டத்தில் = திருக்கூட்டத்தவருள்ளே; 'பத்தராய்ப் பணிவார்தம்பரிசினை யாம்பகருவாம் = பத்தராய்ப்பணிபவர்களுடைய நிலைமையை யாம் கூறுவாம். எ-று.

ஆன்மாக்களை அசாஸ்திரப் பிரபஞ்சத்தின் வழிச்செல்லாதுதடுத்துச் சாஸ்திரப் பிரபஞ்சத்தின்வழி செலுத்தலின் பிதாவென்றும், உபதேசமொழிகளையூட்டி அறிவை வளர்த்தலின் அன்னையென்றும், உடற்குத்தன்பமணுகாது உயிர்காப்பது போல உயிர்க்குத்துன்பமணுகாது காத்தலின் ஆருயிரென்றும், அழிவின்றி நிரதிசய வின்பமார்ந்து வாழச்செய்தலின் அமிர்தென்றும், தம்பொருட்டன்றி இவற்றையெல்லாம் ஆன்மாக்களின் பயன்குறித்தே இயற்றும் முதற்கடவுளாகலின் முத்தனுமுதல் வனென்றும் கூறினர். (கஉ)

மேவரியபெருந்தவம்யான்முன்புவிளைத்தனவென்னே
யாவதுமோர்பொருளல்லாவென்மனத்துமன்றியே
நாவலர்காவலர்பெருகுநதிகிழியவழிநடந்த
சேவடிப்போதெப்போதுஞ்சென்னியினுமலர்ந்தனவால்.

(இ-ள்.) பெருகுநதி = பெருகிவந்த காவிரிநதி; கிழியவழிநடந்த = (திருவையாற்றிறைவரைத்தெரிசிக்கும்படி) இடையே வழிவிடச்சென்ற; நாவலர்காவலர் = நாவலர்பெருமானாகிய நம்பியாரூரரின்; சேவடிப்போது = திருவடித்தாமரைகள்; யாவதுமோர்பொருளல்லா = சிறிதும் ஒருபொருளாதற்றன்மையில்லாத; என்மனத்துமன்றி = அடியேனுடைய மனத்தின்கண்ணுமன்றி; சென்னியினுமெப்போது மலர்ந்தன = சிரசினும் எப்பொழுதும் மலர்ந்தன (இங்ஙனம் மலர்தற்கு); யான் முன்பு விளைத்தன மேவரிய பெருந்தவமென்னே = சிறியேன் பூர்வம் புரிந்தனவாகிய அடைதற்கரிய பெரியதவம் யாதோ அறியேன். எ-று.

சேவடிப்போது மனத்தும் சிரத்தும் மலர்தல் பெருந்தவம் புரியாவழிக் கிட்டாவென்பார், "மேவரியபெருந்தவம் யான் முன்புவிளைத்தன" என்றும், மலர்தற்குரிய தவம்புரிதற்கு அருகனல்லே னென்பார், "யாவதுமோர்பொருளல்லாஎன்" என்றும், இத்தகையேன்பால் ஈரிடத்தும் எப்பொழுதும் மலர்தல் அதிவியப்பென்பார், "என்னே" என்றும் கூறினர். யாவதுமென்பது சிறிதுமென்னும் பொருட்டு. உம்மை நான்கும் முறையே இழிவுசிறப்பும் எதிரதுதழீஇயதும் முற்றும் இறந்ததுதழீஇயதுமாகிய பொருளில் வந்தன. ஆல்-அசை. (கங)

கோட்புலிநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் - ககஉ.

கடல்சூழ்ந்தசருக்கம் முற்றிற்று.



(பத்தராய்ப்பணிவார்.)

(பரமனையேபாடுவார்.)

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பத்தராய்ப்பணிவார்சருக்கம்.

# பத்தராய்ப்பணிவார் புராணம்.

ஈசருக்கேயன்பானார்யாவரையுந்தாங்கண்டாற்
கூசிமிகக்குதுகுதுத்துக்கொண்டாடிமனமகிழ்வுற்
றாசையினாலாவின்பின்கன்றணைந்தாற்போலணைந்து
பேசுவனபணிந்தமொழியினியனவேபேசுவார்.

(இ-ள்.) ஈசருக்கே யன்பானார்யாவரையுந் தாங்கண்டால் = சிவபெருமானுக்கே அன்பாயினவர்பலரையுங் காணின்; கூசிமிகக்குதுகுதுத்து = கூசுதலுடனே மிகவும் பெருவிருப்புற்று; கொண்டாடி மனமகிழ்வுற்று = அவ்வன்பரைப் புகழ்ந்து அகங்களிப்படைந்து; ஆசையினால் = அவர்பால்வைத்தகாதலால்; ஆவின்பின் கன்றணைந்தாற்போலணைந்து = பசுவின்பின் கன்றுசெல்லுமாறு போலப் பரிந்து சென்று; பேசுவன = அவர்பாற்கூறுவனவாகிய மொழிகளை; பணிந்தமொழியினியனவே பேசுவார் = வணக்கமாகவும் இனியனவாகவும் வாய்ந்தமொழிகளாகவே கூறுவார். எ-று.

ஏகாரம் இரண்டும் பிரிநிலை. கூசுதலாவது அடியவர்பெருமையும் தம்முடைச்சிறுமையும் நோக்கி, அவர்பாற் றாழ்ந்தொழுகுதலிற் றவறுவருங்கொல்லோ வென அஞ்சுதல். (௧)

தாவரியவன்பினாற்சம்புவினையெவ்விடத்தும்
யாவர்களுமர்ச்சிக்கும்படிகண்டாலினிதுவந்து
பாவனையாற்நோக்கினாற்பலர்காணப்பயன்பெறுவார்
மேவரியவன்பினான்மேலவர்க்குமேலானார்.

(இ-ள்.) தாவரியவன்பினால் = குன்றுதலில்லாத பத்தியினாலே; சம்புவினையெவ்விடத்தும் யாவர்களு மர்ச்சிக்கும்படிகண்டால் = சிவபெருமானை எவ்விடங்களினும் எவரும் பூசிக்கும் நிலைமையை நோக்கினால்; இனிதுவந்து = இன்பத்தோடுமகிழ்ந்து; பாவனையானோக்கினால் = அவ்வடியவர்களைச் சிவபெருமானெனப் பாவித்தலாலும் தரிசித்தலாலும்; பலர்காண = யாவரும் கண்கூடாகக் காணும்படி; பயன்பெறுவார் = வேண்டியசித்திகளைப் பெறுவார்; மேவரிய வன்பினால் = அடைதற்கரிய அன்பினாலே; மேலவர்க்கு மேலானார் = மேன்மையையுடையவர்க்கும் மேன்மையையுடையவராயினார். எ—று.

உம்மைகளுள்முந்தியவிரண்டும் முற்றும் பிந்தியது உயர்வுசிறப்புமாம். நோக்கு முதனிலைத்தொழிற்பெயர். அடியவர்வழிபாட்டால் இஷ்டசித்திகளையடைதல் ஒருதலையென்பார், "பலர்காணப் பயன்பெறுவார்" என்றும், மேவுதற்கரிய அன்புடையவரே யாவரினு மிக்கா ரென்பார், "மேலவர்க்கு மேலானார்." என்றும், கூறினார். (உ)

அங்கணனையடியாரையாராதகாதலினாற்
பொங்கிவருமுவகையுடன்றாம்விரும்பிப்பூசிப்பார்
பங்கயமாமலர்மேலான்பாம்பணையானென்றிவர்க
டங்களுக்குஞ்சார்வரியசரண்சாருந்தவமுடையார்.

(இ-ள்.) அங்கணனை யடியாரை = சிவபெருமானையும் சிவனடியவர்களையும்; ஆராதகாதலினாற் பொங்கிவரு முவகையுடன்=அளவுகடந்த பத்தியினால் ஓங்கிவளராநின்ற உவகையோடு; தாம்விரும்பிப்பூசிப்பார் = தாம் காதலித்து அர்ச்சிப்பார்; பங்கயமாமலர்மேலான் = தாமரையாசனத்தராகிய பிரமதேவரும்; பாம்பணையானென்றிவர்கடங்களுக்கும் = அரவசயனத்தராகிய விஷ்ணுமூர்த்தியுமாகிய இவர்களுக்கும்; சார்வரிய சரண்சாருந் தவமுடையார் = அடைதற்கரிய திருவடிகளையடையும் அருந்தவமுடையவர். எ—று.

உம்மை - உயர்வுசிறப்பு. அவ்விருவர்க்கும் அடைதற்கரியவேனும் அன்பர்க்கு எளிய வென்பார், "சார்வரிய சரண்சாருந் தவமுடையார்" என்றார். (ங)

யாதானுமிவ்வுடம்பாற்செய்வினைகளேறுயர்த்தார்
பாதாரவிந்தத்தின்பாலாகவெனும்பரிவாற்
காதார்வெண்குழையவர்க்காம்பணிசெய்வார்கருக்குழியிற்
போதார்களவர்புகழ்க்குப்புவனமெலாம்போதாவால்.

(இ-ள்.) இவ்வுடம்பாற்செய்வினைகள்யாதானும் = இச்சரீரத்தினா லியற்றும் தொழில்கள் எவையாயினும்; ஏறுயர்த்தார் = இடபத்தைக் கொடியாகவேந்திய இறைவருடைய; பாதாரவிந்தத்தின்பாலாகவெனும்பரிவால் = திருவடித்தாமரைகளினிடத்தே சேருகவென்னும் அன்பினால்; காதார்வெண்குழையவர்க்கு = திருக்காதிற்பொருந்திய சங்ககுண்டலத்தையுடைய சிவபிரானுக்கு ; ஆம்பணிசெய்வார் = இயைந்ததொண்டுகளை இயற்றுவார்; கருக்குழியிற்போதார்கள் = பிறவியென்னுங் குழியிலேவீழார்; அவர்புகழ்க்குப் புவனமெல்லாம்போதா = அவர்களுடைய புகழ் நிரம்புதற்கு எவ்வுலகங்களும்போதா. எ-று.

யாதாயினுமென்பது யாதானுமெனத் திரிந்தது. உம்மை முற்றும்மை. செய்யுந் தொழில்களெல்லாம் திருவடித்தொண்டே ஆகவேண்டுமென்னும் பிரார்த்தனையுடையராய்ச் செய்பவரென்பது கருத்து. சங்கக்குழையராகலின் "வெண்குழையவர்" என்றும், வீழ்ந்தோர்கரையேறுமையின் "கருக்குழி" என்றும், புகழ்க்கு அளவின்மையின், "புவனமெலாம்போதா" என்றும் கூறினார். அவர்புகழ்க்குப் புவனமுற்றும் நிறையில் ஒவ்வா என்னலும் ஒன்று. (ச)

சங்கரனைச்சார்ந்தகதைதான்கேட்குந்தன்மையரா
யங்கணனைமிகவிரும்பியயலறியாவன்பினால்
கங்கைநதிமதியிதழிகாதலிக்குந்திருமுடியார்
செங்கமலமலர்ப்பாதஞ்சேர்வதனுக்குரியார்கள்.

(இ-ள்.) கங்கைநதிமதியிதழிகாதலிக்குந்திருமுடியார் = கங்காநதியையும் சந்திரனையும் கொன்றைமாலிகையையும் விரும்பிய திருமுடியையுடையவரும்; சங்கரனை = சுகஞ்செய்பவரும்; அங்கணனைச்சார்ந்தகதை = அருட்கண்ணருமாகிய அப்பெருமானுக்குரிய சரித்திரங்களை; தாங்கேட்குந்தன்மையராய் = தாம்கேட்டுவக்கும் தகுதியராகி; அயலறியாவன்பினால் மிகவிரும்பி=அன்னியரால் மதித்தற்கரிய

அன்பினால் மிகவுங்காதலித்து வழிபட்டு; செங்கமலமலர்ப்பாதம் = அக்கடவுளின் செந்தாமரைமலர்போலும் திருவடிகளை; சேர்வதனுக்குரியார்கள் = அணுகுதற்குரியவர்கள். எ-று. (௫)

ஈசனையேபணிந்துருகியின்பமிகக்களிப்பெய்திப்
பேசினவாய்தழுதழுப்பக்கண்ணீரின்பெருந்தாரை
மாசிலாநீறழித்தங்கருவிதரமயிர்சிலிர்ப்பக்
கூசியேயுடல்கம்பித்திடுவார்மெய்க்குணமிக்கார்.

(இ-ள்.) ஈசனையேபணிந்துருகி = சிவபெருமானையே வணங்கியுருகி; இன்பமிகக்களிப்பெய்தி = இன்பம் ஓங்கக் களிப்புற்று; பேசினவாய்தழுதழுப்ப = துதித்தவாய்தடுமாற்றத்தையடைய; கண்ணீரின் பெருந்தாரை = கண்ணீரிற்பெருகிய நீர்ப்பெருக்கு; மாசிலாநீறழித்தங்கருவிதர = ஆசகன்ற விபூதியையழித்து அருவிபோலொழுக; மயிர்சிலிர்ப்பக் கூசியேயுடல்கம்பித்திடுவார் = உரோமஞ்சிலிர்க்க நாணுதலுடையராய் உடலம்விதிர்ப்பவர்; மெய்க்குணமிக்கார் = உண்மைக்குணத்தில் மேம்பட்டவர். எ-று.

ஏகாரங்கள் முறையே பிரிநிலையும் அசையுமாம், உருகுதலாவது - சிவபிரான் அருட்குணங்களைச் சிந்தித்தலாலுண்டாகும் சித்தநெகிழ்ச்சி. தழுதழுத்தல் - குளறுதல். ஈண்டுக்கூறியவை அன்பின்பெருக்கால் நிகழும் அற்புதச்செயல்கள். அங்கு - அசை. (௬)

நின்றாலுமிருந்தாலுங்கிடந்தாலுநடந்தாலு
மென்றாலுந்துயின்றாலும்விழித்தாலுமிமைத்தாலு
மன்றாடுமலர்ப்பாதமொருகாலுமறவாமை
குன்றாதவுணர்வுடையார்தொண்டராங்குணமிக்கார்.

(இ-ள்.) நின்றாலுமிருந்தாலுங் கிடந்தாலுநடந்தாலும் = நிற்பினும் இருப்பினும் கிடப்பினும் நடப்பினும்; மென்றாலுந்துயின்றாலும்விழித்தாலுமிமைத்தாலும் = உண்ணினும் உறங்கினும் விழிப்பினும் இமைப்பினும்; மன்றாடுமலர்ப்பாதம் = சிற்சபையிலேநடிக்கும் செந்தாமரையையொக்கும் திருவடிகளை; ஒருகாலுமறவாமை குன்றாதவுணர்வுடையார் = ஒருகாலத்திலும் மறவாதிருத்தல் அகலாத உணர்ச்சியையுடையவர்; தொண்டராங்குணமிக்கார் = திருத்தொண்டையுடையராகுங்குணத்திலே சிறந்தவர். எ-று.

ஒருகாலும் மறவாமை குன்றாமையாவது - எப்பொழுதுஞ் சிந்தித்திருத்தல் அகலாமை. (எ)

சங்கரனுக்காளானதவங்காட்டித்தாமதனாற்
பங்கமறப்பயன்றுய்ப்பார்படிவிளக்கும்பெருமையினா
ரங்கணனைத்திருவாரூராள்வானையடிவணங்கிப்
பொங்கியெழுஞ்சித்தமுடன்பத்தராய்ப்போற்றுவார்.

(இ-ள்.) சங்கரனுக்காளானதவங்காட்டி = சுகஞ்செய்வாராகிய பிரானுக்கு அடிமையாகிய தவத்தைத் திருவுருவத்தால்விளக்கி; அதனாற்பங்கமறப்பயன்றுய்ப்பார் = அதனால் உத்தேசித்தபயனைப் பழுதகல அநுபவிப்பவர்; படிவிளக்கும்பெருமையினார் = உலகைவிளக்கும் பெருமையையுடையவர்; அங்கணனைத் திருவாரூராள்வானையடிவணங்கி = அருட்கண்ணரும் திருவாரூராண்டவருமாகிய பெருமானைத்

திருவடிகளில்வணங்கி; பொங்கியெழுஞ்சித்தமுடன்பத்தராய்ப்போற்றுவார் = குதூகலித்தெழுஞ் சித்தத்தோடு பத்தராய்ப்பணிவாரெனப்படுவோர். எ-று.

தவமுடையவரென்பதை அவர்திருவேடங்காட்டலின், "தவங்காட்டி" என்றும், அத்தவத்தால் வேண்டியபேரின்பப்பயனை வேண்டியாங்கேபெறுதலின், "பங்கமறப்பயன்றுய்ப்பார்" என்றும், அவரொழுக்கங்கண்டவுலகினரும் அவ்வாறொழுகியுய்தலின், "படிவிளக்கும்பெருமையினர்" என்றும் கூறினர். படிவிளக்கல்-உலகினரைத் திருத்தொண்டினல் விளக்கமுறப்புரிதல். தாம்-அசை.

பத்தராய்ப்போற்றுவார் மேற்கூறியவியல்பினரேயென்பது. (அ)

## பத்தராய்ப்பணிவார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் - ௪௦௦௦.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பரமனையேபாடுவார்புராணம்.

புரமூன்றுஞ்செற்றானைப் பூணாகமணிந்தானை
யுரனில்வருமொருபொருளையுலகனைத்துமானானைக்
கரணங்கள்காணாமற்கண்ணார்ந்துநிறைந்தானைப்
பரமனையேபாடுவார்தம்பெருமைபாடுவாம்.

(இ-ள்.) புரமூன்றுஞ்செற்றானை = முப்புரங்களையும் நூருக்கியவரும்; பூணாகமணிந்தானை = அரவை ஆபரணமாக அணிந்தவரும்; உரனில்வருமொருபொருளை = ஞானமுதிர்ந்துழி நணுகும் ஒப்பற்றபொருளாயுள்ளவரும்; உலகனைத்துமானானை = உலகமுற்றும் தமதுசொரூபமாயுள்ளவரும்; கரணங்கள்காணாமல் = தேவர்முதலியோர்க்கு மனமொழிமெய்யென்னும் முக்கரணங்களுக்கும் தோற்றமின்றி நிகழ்ந்தும்; கண்ணார்ந்துநிறைந்தானை = அன்பர்பிரார்த்தனைக்கிரங்கி அவர்கண்களுக்குத் தோற்றமுடையவராய் வியாபித்தவருமாகிய; பரமனையேபாடுவார்தம்பெருமைபாடுவாம் = பரமனையே துதிப்பவருடையபெருமையைக் கூறுவாம். எ-று.

உரன்-ஞானம். "உரனென்னுந்தோட்டி" என்றார் தெய்வப்புலவரும். உரனில்வருமொருபொருளென்பதனை "விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போன் - மறையநின்றுளன் மாமணிச் சோதியா - னுறவு கோனட் டுணர்வு கயிற்றினான் - முறுகவாங்கிக் கடையமுன் னிற்குமே" என்னும் திருநாவுக்கரசுநாயனார் தேவாரத்தானும், அன்பர்க்கெளியராய் அல்லார்க்குஅரியராதலே "கனவிலுந் தேவர்க் கரியாய் போற்றி-நனவிலு நாயேற் கருளினை போற்றி." என்னும் திருவாசகத்தானும் தெளிக. நித்தம் அநித்துமாகிய பிரபஞ்சமனைத்தும் வியாபித்தவனென்பார் "உலகனைத்துமானான்" என்றார். ஏகாரம்-பிரிநிலை. (க)

தென்றமிழும்வடகலையுந்தேசிகமும்பேசுவன
மன்றினிடைநடம்புரியும்வள்ளலையேபொருளாக
வொன்றியமெய்யுணர்வோடுமுள்ளுருகிப்பாடுவார்
பன்றியுடன்புட்காணாப்பரமனையேபாடுவார்.

(இ-ள்.) தென்றமிழும்வடகலையுந்தேசிகமும் = தென்மொழியாகிய தமிழும் வடமொழியாகிய ஆரியமும் ஏனைத்தேசபாஷைகளும்; மன்றினிடைநடம்புரியும் வள்ளலையேபொருளாகப்பேசுவன = சிற்சபையிலே திருநிருத்தம்புரிந்தருளும் சிவ் பெருமானையே பரம்பொருளெனப் பகர்கின்றனவாகலின்; ஒன்றியமெய்யுணர்வோடும்=(அப்பெருமானை அந்நூல்களினுணர்ச்சியால்) ஒற்றுமைப்பட்டதத்துவஞானத்தோடும்; உள்ளுருகிப்பாடுவார்=சித்தமுருகித்துதிப்பவரே; பன்றியுடன்புட்காணா= வராகத்தினாலும் அன்னத்தினாலும் காணப்படாத; பரமனையேபாடுவார் = பரமனை யேபாடுவாரெனப் பெயர்பெறுவர். எ-று.

தென்றமிழ்முதலியவை திருமாலாதிதேவர்களையும் பரம்பொருளாகக் கூறியது சொல்லளவாகிய துதிபரமன்றிப் பொருளளவன்றென்பார், "நடம்புரியும்வள்ளலையேபொருளாக" என்றும்; பலவுணர்வும் ஒற்றுமைப்பட்டவுணர்வே மெய்யுணர்வென்பார், "ஒன்றியமெய்யுணர்வு" என்றும், அவ்வுணர்வுபெறினும் அன்பாற் சித்த நெகிழ்ந்து பாடாவழிச் சிறிதும்பயனில்லையென்பார், "உள்ளுருகிப்பாடுவார்" என்றும், திருமாலும் பிரமதேவரும் பன்றியும் அன்னமுமாயுருமாறிக் காணுதற்கரிய சிவபெருமானொருவரே சுதந்திரரும் அவ்விருவரும் பரதந்திரருமாகலின் அவர்புகழ்வினைநாடி அவரைப்பாடாது அப்பெருமானையேபாடுவாரென்பார், "பன்றியுடன் புட்காணாப்பரமனையேபாடுவார்" என்றும் கூறினார். தேசிகம்-தேசபாஷைகள். மன்றினிடைநடம்புரியும்வள்ளலையே பொருளாகவென்னுந்தொடர் பேசுவனவென் பதனோடும் பாடுவாரென்பதனோடும் சென்றியைதலின் தாப்பிசை. தாம்பிசை தாப் பிசையெனவலித்தது. ஊசல்போல இடைநின்று இருமருங்குஞ்செல்லுஞ்சொல் என்பதுபொருள். தாம்பு-ஊசல். இசை-சொல். ஏகாரம்-பிரிநிலை. (உ)

பரமனையேபாடுவார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் - ௪௦௦௨.

---

திருச்சிற்றம்பலம்.

# சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்புராணம்.

காரணபங்கயமைந்தின்கடவுளர்தம்பதங்கடந்து
பூரணமெய்ப்பரஞ்சோதிபொலிந்திலங்குநாதாந்த
தாரணையாற்சிவத்தடைந்தசித்தத்தார்தனிமன்று
ளாரணகாரணக்கூத்தரடித்தொண்டினவழியடைந்தார்.

(இ-ள்.) காரணபங்கயமைந்தின் கடவுளர்தம்பதங்கடந்து = பிரமதேவர்முதலிய காரணக்கடவுளர்க்குரிய ஐவகைக்கமலங்களோடாகும் இதயமுதலிய தானங்களைவிட்டகன்று (அப்பால்); பூரணமெய்ப்பரஞ்சோதி பொலிந்திலங்கு நாதாந்தத் தாரணையால் = வியாபகமாய்ச் சத்தாய் சுயஞ்சோதியாயுள்ள சிவம் ஒளிவிட்டு விளங்கும் நாதாந்தமுடிவிலே (சித்தத்தைத்) தரித்தலால்; சிவத்தடைந்த சித்தத்தார் =

அந்தச்சிவத்தையெய்திச் சித்தத்தைச் சிவன்பால்வைத்தவர் எனப்படுபவரே; தனி மன்று ளாரணகாரணக்கூத்தர் = இணையற்ற சிற்சபையிலே இயற்றியருளும் வேத காரண நடனராகிய விமலருடைய; அடித்தொண்டின்வழியடைந்தார் = திருவடித் தொண்டின் முறைமையைச் சேர்ந்தவரென்னத்தக்கவர். எ-று.

அன்றி, சரியைகிரியைகளின் முதிர்ந்தோரே சிவயோகநெறிப்பட்டுச் சிவத்தை யெய்துதற்கு உரியராகலின் நாதாந்தத்தாரணையாற் சிவத்தடைந்தோரெல்லவரும் பூர்வம் அடித்தொண்டின்வழி அடைந்தவரே என்னலும் ஒன்று.

இதில் காரணக்கடவுளரமர்வது பங்கயமைந்தின்பதமென்று ஆதாரகமலமா கக்கூறவே பரஞ்சோதியமர்வது ஆயிரந்தோட்டு அமலநிராதாரகமலமெனவும், பர சிவத்தைப் பூரணமெய்ப்பரஞ்சோதியெனவே பஞ்சகிர்த்திய காரணகர்த்தராகிய ஐவரும் அச்சிவத்தின் அம்சத்திலேதத்தம் தகுதிக்கியைந்த ஏற்றத்தாழ்வுடையரெ னவும், நாதாந்தத்தாரணையாற் சிவத்தடைந்தவெனவே பூததாரணையாற் கடவுளர் தம்பதங்கடந்தெனவும், சிவத்தடைந்தோர் தொண்டின்வழி யடைந்தாரெனவே அடையாதார் தொண்டின்வழி யடைந்தாரல்லரெனவும் கொள்ளக்கிடப்பதுணர்க. பூததாரணையாற் கடவுளர் பதங்கடந்து சிவத்தடைதலாவது - இயம நியமங்களும் ஆசனத்திறங்களும் சித்தித்தபின், பிராணாயாம பிரத்தியாகாரங்களிற்பயின்று, பின்பு அகத்தே நாற்கோணமாய்ப் பொன்னிறமாய் லகாரவக்ஷரமுடையதாய் விளங்கும் பிருதிவியை இதயத்தமைத்து அதனதிதெய்வமாகிய பிரமதேவரைத்தியானித்தும், இருகோணமாய் வெண்ணிறமாய் வகாரவக்ஷரமுடையதாய் விளங்கும் அப்புவைக் கண்டத்தமைத்து அதனதிதெய்வமாகிய திருமாலைத்தியானித்தும், முக்கோணமாய்ச் செந்நிறமாய் ரகாரவக்ஷரமுடையதாய்விளங்கும் தேயுவை உண்ணாக்கினிடையே யமைத்து அதனதிதெய்வமாகிய உருத்திரமூர்த்தியைத் தியானித்தும், அறுகோண மாய்க் கருநிறமாய் யகாரவக்ஷரமுடையதாய் விளங்கும் வாயுவைப் புருவமத்தியின மைத்து மகேச்சுரமூர்த்தியைத் தியானித்தும், வட்டவடிவாய்ப் புகைநிறமாய் அகாரவக்ஷரமுடையதாய் விளங்கும் ஆகாயத்தைப் பிரமரந்தரத்தினமைத்து அத னதிதெய்வமாகிய சதாசிவமூர்த்தியைத் தியானித்தும் அம்மூர்த்திகளை ஆங்காங்கு த்தரிசித்து, தியானத்தில் அசைவற்றிருந்து முத்திக்கபாடந்திறக்க நாதாந்தத்தினெ ய்திச் சிவத்தையுணர்ந்து கலந்து தன்னைமறந்திருத்தலாம். இதுவே சிவயோகசமா தியெனப்படும். இதன்விரிவைச் சித்தாந்த சாத்திரங்களினும் காசிகாண்டம் வாயு சங்கிதைமுதலியவற்றினும் உணர்க. (க)

சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் - சுOOரு.

---

திருச்சிற்றம்பலம்.

# திருவாரூர்ப்பிறந்தார்புராணம்.

அருவாகியுருவாகியனைத்துமாய்நின்றபிரான்
மருவாருங்குழலுமையாண்மணவாளன்மகிழ்ந்தருளுந்
திருவாரூர்ப்பிறந்தார்கடிருத்தொண்டுதெரிந்துரைக்க
வொருவாயாற்சிறியேனாலுரைக்கலாந்தன்மையதோ.

(இ-ள்.) அருவாகியுருவாகியனைத்துமாய்நின்றபிரான் = அருவமாகியும் உருவமாகியும் யாவுமாய்நின்ற தலைவரும்; மருவாருங்குழலுமையாண்மணவாளன்மகிழ்ந்தருளும் = நறுமணநிரம்பிய கூந்தலையுடைய உமாபதியுமாகிய நம்பெருமான்விரும்பிய; திருவாரூர்ப்பிறந்தார்கடிருத்தொண்டைத்தெரிந்துரைக்க = திருவாரூரிலே அவதரித்தவர்களுடைய திருத்தொண்டைத் தேர்ந்து கூறின்; சிறியேனாலொருவாயாலுரைக்கலாந்தகைமையதோ = சிறியேனால் ஒருவாயைக்கொண்டு செப்பலாகுந்தன்மையதோ. எ-று.

யாவும் அருவமும்உருவமுமன்றிப் பிறிதின்றென்பார், "அருவாகியுருவாகியனைத்துமாய்நின்றபிரான்" என்றும், ஆயிரம்வாய்களையுடைய ஆதிசேடனாலும் ஆய்ந்துரைத்தல் ஆகாதென்பார், "ஒருவாயால்" என்றும், தெரிந்தமட்டும் உரைத்தற்கும் திறமையில்லேனென்பார், "சிறியேன்" என்றும், திருத்தொண்டு அளவின்றிப்பெருகியதென்பார், "உரைக்கலாந்தகைமையதோ" என்றும் கூறினாரென்க. (க)

திருக்கயிலைவீற்றிருந்தசிவபெருமான்றிருக்கணத்தார்
பெருக்கியசீர்த்திருவாரூர்ப்பிறந்தார்களாதலினாற்
றருக்கியவைம்பொறியடக்கிமற்றவர்தந்தாள்வணங்கி
யொருக்கியநெஞ்சுடையவர்க்கேயணித்தாகுமுயர்நெறியே.

(இ-ள்.) திருக்கயிலைவீற்றிருந்தசிவபெருமான்றிருக்கணத்தார் = திருக்கைலையில்வீற்றிருந்தருளும் சிவபெருமானுக்குரிய திருக்கணத்தலைவர்களே; பெருக்கியசீர்த்திருவாரூர்ப்பிறந்தார்களாதலினால் = யாண்டும்பரப்பிய சீர்த்தியையுடைய திருவாரூரிலே அவதரித்தார்களாகையால்; தருக்கியவைம்பொறியடக்கியவர்தந்தாள்வணங்கி = செருக்கியபஞ்சேந்திரியங்களையும் ஒடுக்கி அவர்களுடைய திருவடிகளைத்தொழுது (அதனால்); ஒருக்கியநெஞ்சுடையவர்க்கேயுயர்நெறியணித்தாகும் = ஒற்றுமைப்படுத்திய சித்தத்தையுடையவர்க்கே பரகதி அண்மையதாகும். எ-று.

ஒருக்கியசித்தம்பெறாற்கு உயர்கதிப்பேறின்றாகலின், "ஒருக்கியநெஞ்சுடையவர்க்கேயுயர்நெறியணித்தாகும்." என்றார். ஏகாரமிரண்டனுள் முன்னையது பிரிநிலை; பின்னையதும் மற்றும் அசைகள். திருவாரூர்ப்பிறந்தார்களெல்லாம் சிவகணத்தாரென்பதனை நமிநந்தியடிகணாயனார்புராணத்தும் உணர்க. (உ)

திருவாரூர்ப்பிறந்தார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம். கூ௦௫.

---

திருச்சிற்றம்பலம்.

# முப்போதுந்திருமேனிதீண்டுவார்புராணம்.

எப்போதுமினியபிரானின்னருளாலதிகரித்து
மெய்ப்போதநெறிவந்தவிதிமுறைமைவழுவாமே
யப்போதைக்கப்போதுமார்வமிகுமன்பினராய்
முப்போதுமர்ச்சிப்பார்முதற்சைவராமுனிவர்.

(இ-ள்.) எப்போதுமினியபிரானின்னருளாலதிகரித்து = எக்காலமும் ஆன்மாக்களுக்கு இனியபெருமானது இனியதிருவருளினால் அபிவிர்த்தியடைந்து; மெய்ப்போதநெறிவந்தவிதிமுறைமைவழுவாமே = உண்மையாகிய ஆகமவிதிப்படி அநுட்டிக்கப்பட்டுவந்த ஒழுக்கமுறைமைதவறாமல்; அப்போதைக்கப்போது மார்வமிகு மன்பினராய் = அவ்வக்காலத்தினும் ஆசைமிக்க பத்தியுடையராகி; முப்போதுமர்ச்சிப்பார்முதற்சைவராமுனிவர் = முக்காலமும் முதல்வர்திருமேனிதீண்டி அருச்சித்தற்குரியவர் ஆதிசைவராகியமுனிவர். எ-று.

உம்மைமூன்றும் முற்றும்மைகள். விதி விதிக்கப்படுவது. மலத்திற் பிணிப்புண்டுகிடக்கும் ஆன்மாக்களையெடுத்துத தனுகரணபுவனபோகங்களைத்தந்து அறிவுக்கறிவாய்நின்று வேதசிவாகமப்பொருள்களை விளக்கி அவ்வழிநிறுவி இருவினையொப்பாக்கி மலபரிபாகம்வருவித்துத் திருவடிப்பேறளிப்பான் இங்ஙனம் அநாதிதொடங்கி உபகரித்துநிற்கும் அருட்பெருந்தகையராகலின், "எப்போது மினியபிரான்." என்றும், இம்முனிவர் பிரதமமகாசிருட்டியிலே அநாதிசைவராகிய சதாசிவமூர்த்தியின் சத்தியோசாதம் வாமதேவம் அகோரம் தற்புருடம் ஈசானமென்னும் ஐந்து திருமுகங்களினின்றும் முறையேயுதித்து அம்மூர்த்தியால் உபதேசம்பெற்ற கௌசிகர் காசிபர் பாரத்துவாசர் கௌதமர் அகத்தியரென்னும் பஞ்சரிஷிகோத்திரத்திலே சிவபெருமான்றிருவருளாற்சனித்து விர்த்தித்தவராகலின், "இன்னருளாலதிகரித்து" என்றும், சத்தியப்பொருட்டெளிவைத்தந்திரட்டிச் சத்திநிபாதர்க்குணர்த்தியது ஆகமமாகலின், அவற்றை, "மெய்ப்போதநெறி" என்றும், அவற்றில் விதிக்கப்படுவனவற்றை மந்திரம் பாவனை கிரியையென்னும் மூன்றினும் வழுவாதியற்றவேண்டுமாகலின், "விதிமுறைமைவழுவாமே." என்றும், ஆர்வமும் அன்புமின்றியவழிபாடு அபலமாமாகலின், "ஆர்வமிகுமன்பினராய்" என்றும், முக்கியமாக வழிபடற்குரியவை காலை உச்சி மாலையென்னும் முக்காலங்களுமேயாகலின், "முப்போதுமருச்சிப்பார்" என்றும், இவர், ஆதியிலே சிவதீக்ஷைசெய்யப்பெற்றமரபினராகலின், "முதற்சைவராமுனிவர்." என்றும், கூறினார். எப்போதுமினியபிரானுதலை, "என்னிலாரு மெனக்கினி யாரில்லை-யென்னி லும்மினி யானொரு வன்னுள-னென்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்-கென்னு ளேநிற்கு மின்னம்ப ரீசனே." என்னும் தேவாரத்தானும் உணர்க. (௧)

தெரிந்துணரின்முப்போதுஞ்செல்காலநிகழ்காலம்
வருங்காலமானவற்றின்வழிவழியேதிருத்தொண்டின்
விரும்பியவர்ச்சனைகள்சிவவேதியர்க்கேயுரியனவப்
பெருந்தகையார்குலப்பெருமையாம்புகழும்பெற்றியதோ.

(இ-ள்) தெரிந்துணரின் = ஆராய்ந்துதெளியின்; செல்காலநிகழ்காலம்வருங்காலமானவற்றின்முப்போதும் = இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலமென்னும் முக்காலங்களினும் மூன்றுவேளையும்; வழிவழியேதிருத்தொண்டின்விரும்பியவர்ச்சனைகள் = பரம்பரையாகவே திருத்தொண்டாகவிரும்பிய சிவார்ச்சனைகள்; சிவவேதியர்க்கேயுரியன = சிவப்பிராமணர்களாகிய ஆதிசைவர்கட்கே உரியன ஆயின்; அப்பெருந்தகையார்குலப்பெருமையாம்புகழும் பெற்றியதோ = அப்படிப்பட்டபெருஞ்சிறப்பினையுடைய அவர்கள்மரபின்பெருமை யாம்புகழ்ந்துகூறும் அளவினதோ கூறுதற்கரியது. எ-று.

உம்மை முற்றும்மை. ஏகாரமிரண்டனுள் முன்னையது தேற்றம், பின்னையது பிரிநிலை. ஓகாரம் வினாவின்கணின்ற எதிர்மறை. சிவார்ச்சனை இவர்க்குப் பரம்பரைத்

தொண்டாகவாய்த்ததன்றி இடையில் வந்ததன்றாகலின் "வழிவழியேதிருதமதாண டின்விரும்பியவர்ச்சனை" என்றும், அது நித்தியம் நித்தியாங்கம் நைமித்திகம் நைமித்திகாங்கம் காமியம் காமியாங்கம் என அறுவகைப்படுதலின் அர்ச்சனையென் றொது; "அர்ச்சனைகள்" என்றும், பிராமணர் சிவதீக்ஷையுடையராய் 'மகாசைவரெ னப்பெயர்பெறினும், ஆன்மார்த்தபூசைக்கன்றிப் பரார்த்தபூசைக் குரியரல்லராக லின், "சிவவேதியர்க்கேயுரியன" என்றும், அத்தகைய அவர்மரபின்பெருமை அள விடற்கரியதாகலின், "யாம்புகழும்பெற்றியதோ." என்றும் கூறினாரென்க. அர்ச் சனை சிவவேதியர்க்கே உரியதாதலை "பேர்கொண்ட பார்ப்பான் பிரான்றன்னை யர்ச்சித்தாற் - போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம் - பார்கொண்ட நாட்டுக்கும் பஞ்சமு மாமென்றே - சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே." என் னும் திருமந்திரத்தானும், "சிவன்முகத்தி லேசெனித்த விப்பிர சைவ - ரிவரே யருச்சனைக்கென் றெண்." அயன்முகத்திற் றோன்றிய வந்தணரர்ச் சித்துப் - பய னடைதற் கிட்டலிங்கம் பாங்கு." "பாங்கில்லை தீண்டப் பரார்த்த மிவர் தீண்டிற் - றீங்குலகுக் காமென்று தேறு." என்னும் சைவசமயநெறியானும் உணர்க. (௨)

வேறு.

நாரணற்குநான்முகற்குமறியவொண்ணு நாதனையெம்பெருமானை ஞா னமான, வாரணத்தினுட்பொருள்களனைத்துமாகு மண்ணலையெண்ணியகா லமூன்றுமன்பின், காரணத்தாலருச்சிக்குமறையோர்தங்கள் கமலமலர்க்க ழல்வணங்கிக்கசிந்துசிந்தைப், பூரணத்தான்முழுநீறுபூசிவாழும் புனிதர் செயலறிந்தவாபுகலலுற்றேன்.

(இ-ள்.) நாரணற்குநான்முகற்குமறியவொண்ணுநாதனை = அச்சுதமூர்த்திக் கும் பிரமதேவருக்கும் அறிதற்கரியதலைவரும்; எம்பெருமானை = எமதுஇறைவரும்; ஞானமானவாரணத்தினுட்பொருள்களனைத்துமாகுமண்ணலை = ஞானரூபமாகிய வேதத்தின் உட்பொருள்யாவுமாய்விளங்கும் நாதருமாகிய சிவபெருமானை; எண் ணியகாலமூன்றும் = விதித்தமுக்காலங்களினும்; அன்பின்காரணத்தாலர்ச்சிக்குமறை யோர்தங்கள் = அன்பின்வழிவாற்பூசிக்கும் ஆதிசைவர்களுடைய; கமலமலர்க்கழல் வணங்கி = தாமரைமலர்போலும் திருவடிகளை வணங்கிக்கொண்டு; கசிந்துசிந்தைப் பூரணத்தான்முழுநீறுபூசிவாழும் = உருக்கமுற்றுச் சித்தநிறைவோடு திருமேனி முழுமையும் திருநீற்றையணிந்துவாழும்; புனிதர்செயலறிந்தவாபுகலலுற்றேன் = முனிவரியல்பைத் தெரிந்தமட்டும் மொழியலுற்றேன். எ-று.

வேதம் விதிவிலக்குகளையுணர்த்தும் ஞானரூபமாகலின், "ஞானமானவார ணம்." என்றும், வாசகம் சத்திரூபமும் வாச்சியம் சிவரூபமுமாகலின், "உட்பொரு ளனைத்துமாகுமண்ணல்." என்றும். அன்பில்லாவழி உள்ளபடி அருச்சித்தலியலா வாகலின், "அன்பின்காரணததாலருச்சிக்குமறையோர்" என்றும், திருநீற்றினிய ல்பையுணர்ந்து சித்தநிறைவோடு அணிதலின, "சிந்தைப்பூரணத்தான்முழுநீறுபூசி வாழும்புனிதர்." என்றும் கூறினார். திருநீற்றினியல்பாவது - நிமலரது ஞானவடி வழலிற்பூத்து நித்தியமாய் அணிபவர்க்குவசிகரமாய் அருந்தினோர்க்கு ஆரமுதாய்ப் பசுமலத்தைநீற்றலின் திருநீறெனப்பெயர்பூண்டு எவர்க்கும் பேரின்பம்பயத்தல். முழுமையும்நீறுபூசியமுனிவர் எனற்பாலது முழுநீறுபூசியமுனிவர் எனநின்றது.

இப்பாடல் சில ஏட்டுப்பிரதிகளிலில்லை. (௩)

## முப்போதுந்திருமேனிதீண்டுவார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம். ௧௦௦௮.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முழுநீறுபூசியமுனிவர்புராணம்.

ஆதாரமாயனைத்துமாகிநின்றவங்கணனெம்பெருமானீரணிந்தவேணிக்
காதார்வெண்டிருக்குழையானருளிச்செய்தகற்பமநுகற்பமுபகற்பந்தானு
மாகாதென்றங்குரைத்தவகற்பநீக்கியாமென்றுமுன்மொழிந்தமூன்றுபேத
மோகாதிகுற்றங்களறுக்குநீற்றைமொழிகுதுநம்மிருவினைகள்கழிவதாக.

(இ-ள்.) ஆதாரமாயனைத்துமாகிநின்றவங்கணன் = ஆதாரமாகியும் ஆதேயமாகியும் நிலைபெற்ற அருட்கண்ணரும்; எம்பெருமானீரணிந்தவேணி = எமது இறைவரும் கங்கையைத்தரித்த சடைமுடியரும்; காதார்வெண்டிருக்குழையானருளிச்செய்த = திருக்காதிலணியப்பட்ட வெள்ளிய சங்ககுண்டலத்தையுடையவருமாகிய சிவபெருமானருளிய திருநீறு; கற்பமநுகற்பமுபகற்பமாம் = கற்பம் அநுகற்பம் உபகற்பம் என மூவகையாகும்; ஆகாதென்றுரைத்தவகற்பநீக்கி = உரியதன்றென நீக்கிய அகற்பத்தையொழித்து; ஆமென்றுமுன்மொழிந்தமூன்றுபேதம் = உரியவென முற்கூறிய மூன்றுபேதமாகிய; மோகாதிகுற்றங்களறுக்குநீற்றை = மோக முதலிய குற்றங்களையொழிக்கும் திருநீற்றை; நம்மிருவினைகள்கழிவதாகமொழிகுதும் = நம்முடைய நல்வினைதீவினையென்னும் இருவினைகளுங்கழியும்படி இயம்புதும். எ-று.

ஆதேயம் ஆதாரத்தாற்றாங்கப்படுவது. எவையும் அக்கடவுள்சொரூபம் என்றபடி. அனைத்துமென்னும் உம்மை முற்றும்மை. அருளிச்செய்தவென்பது அஃறிணைப் பன்மைவினைப்பெயர். தான் - அங்கு அசைகள். மூன்றுபேத நீற்றையென இயையும். மோகாதி - காமாதிமுக்குற்றங்கள். (க)

அம்பலத்தேயுலகுய்யவாடுமண்ணலுவந்தாடுமஞ்சினையுமளித்தவாக்க,
ளிம்பர்மிசையநாமயமாயிருந்தபோதிலீன்றணியகோமயமந்திரத்தினாலேற்,
றும்பர்தொழவெழுஞ்சிவமந்திரவோமத்தாலுற்பவித்தசிவாங்கிதனிலுணர்
வுக்கெட்டா, வெம்பெருமான்கழனினைந்திட்டதூநீறிதுகற்பமென்றெ
டுத்திங்கேத்தலாகும்.

(இ-ள்.) இம்பர்மிசையுலகுய்யவம்பலத்தேயாடுமண்ணல் = இவ்வுலகத்திலே ஆன்மாக்களுய்யத் திருச்சிற்றம்பலத்திலே திருநடனம்புரியும் சிவபெருமான்; உவந்தாடுமஞ்சினையுமளித்தவாக்கள் = திருவுளமகிழ்ந்து அபிஷேகங்கொள்ளும் பஞ்சகௌவியங்களையும் தரும்பசுக்கள்; அநாமயமாயிருந்தபோதில் = நோயில்லாதனவா யிருந்தகாலத்திலே; ஈன்றணியகோமயமந்திரத்தினாலேற்று = கன்றீன்று சமீபித்த கோமயத்தைச் சத்தியோசாத மந்திரத்தினாலேற்று; உம்பர்தொழவெழுஞ்சிவமந்திரவோமத்தாலுற்பவித்த = தேவர்வணங்கச் சுவாலித்தெழுகின்ற சிவமந்திர ஓமத்தினாலே உண்டாகிய; சிவாங்கிதனில் = சிவாக்கினியிலே; உணர்வுக்கெட்டாவெம்பெருமான்கழனினைந்திட்ட = அறிவுக்கெட்டாத இறைவர் திருவடிகளைச் சிந்தித்து இட்டெடுத்த; தூநீறிதுகற்பமென்றெடுத்தியம்பலாகும் = சுத்தமாகிய இவ்விபூதியைக் கற்பமென்றெடுத்துக் கூறலாகும். எ-று.

கோமயத்தை இவ்வாறேற்கவென்றுமையின் சாந்திகம் பௌட்டிகம் காமதமென்னும் மூவகையுங்கொள்க. சாந்திகமாவது-கோமயமிடும்போது பசுவின் பிற்றட்டிலே கைவைத்தேற்பது. பௌட்டிகமாவது - பூமியில்விழுமுன் தாமரையிலையிலேற்பது. காமதமாவது - பூமியில்விழுந்தபின் எடுப்பது. நோயின்றி ஈன்றணிய கோவின்மயமே உரித்தாகலின். "ஈன்றணியகோமயம்" என்றார். அநாமயம்-நோயின்மை. அங்கு இங்கு அசைகள். (௨)

ஆரணியத்துலர்ந்தகோமயத்தைக்கைக்கொண்டழகுறநுண்பொடியாக்கியாவின்சுத்த, நீரணிவித்தத்திரமந்திரத்தினாலே நிசயமுறப்பிடித்தோமநெருப்பிலிட்டுச், சீரணியும்படிவெந்துகொண்டசெல்வத் திருநீறுமநுகற்பந்தில்லைமன்றுள், வாரணியுமுலையுமையாள்காணவாடுமாணிக்கக்கூத்தர்மொழிவாய்மையாலே.

(இ-ள்.) வாரணியுமுலையுமையாள்காண = கச்சணிந்த தனங்களையுடைய உமாதேவியார் கண்டுதரிசிக்க; தில்லைமன்றுள்ஆடும் = தில்லைச்சிற்றம்பலத்திலே திருநடம்புரியும்; மாணிக்கக்கூத்தர்மொழிவாய்மையால் = மாணிக்கம்போலும் நடராஜப்பெருமானருளிய சிவாகமவிதிப்படி; ஆரணியத்துலர்ந்தகோமயத்தைக்கைக்கொண்டு = வனங்களிலே யுலர்ந்த கோமயத்தைக் கொண்டுவந்து; அழகுறநுண்பொடியாக்கி = சிறக்கநுண்ணிய பொடியாகச்செய்து; ஆவின்சுத்தநீரணிவித்து = சுத்தமாகிய கோசலம்விட்டுப் பிசைந்து; அத்திரமந்திரத்தினாலேநிசயமுறப்பிடித்தோமநெருப்பிலிட்டு = அத்திரமந்திரத்தினாலே திரட்சியுறப்பிடித்து ஓமாக்கினியிலிட்டு; சீரணியும்படிவெந்துகொண்ட = சிறப்பமையும்படி வெந்தபின்கொண்ட; செல்வத்திருநீறுஅநுகற்பமாம் = ஐஸ்வரியம்போலும் திருநீறு அநுகற்பமாம். எ-று.

நிசயம் - திரட்சி. வெந்து-வினையெச்சத் திரிபு. மொழி ஆகமத்தை யுணர்த்தலின் ஆகுபெயர். விதி-சத்தியமாகலின் வாய்மையென்றார். மொழிந்தவாக்கின்படியெனினும் பொருந்தும். (௩)

அடவிபடுமங்கியினால்வெந்தநீறுமானிலைகளனைத்துடக்கவெந்தநீறு,மிடவகைகளெரிகொளுவவெந்தநீறுமிட்டிகைகள்சுட்டவெரிபட்டநீறு, முடனன்றிவெவ்வேறேயாவினீராலுரைதிகழுமந்திரங்கொண்டுண்டையாக்கி,மடமதனிற்பொலிந்திருந்தசிவாங்கிதன்னால்வெந்ததுமற்றுபகற்பமாகும்.

(இ-ள்.) அடவிபடுமங்கியினால்வெந்தநீறும் = காடானது தன்னிடத்துண்டாகிய அக்கினியினாலே வெந்தநீறும்; ஆனிலைகளனைத்துடக்கவெந்தநீறும் = பசுக்களிருக்குமிடங்கள் அக்கினிபற்றிக்கொள்ள வெந்தநீறும்; இடவகைகளெரிகொளுவவெந்தநீறும் = பலஇடங்கள் அக்கினிமூள வெந்தநீறும்; இட்டிகைகள்சுட்டவெரிபட்டநீறும் = செங்கற்கள்சுட்ட அக்கினியிலே உண்டாகியநீறும் (ஆகிய இவற்றை); உடனன்றிவெவ்வேறே = ஒருங்குசேர்க்காமல் தனித்தனியே; உரைதிகழுமந்திரங்கொண்டாவினீராலுண்டையாக்கி = சிவாகமங்களிற்கூறும் மந்திரங்களைக்கொண்டு கோசலத்தினாலே உண்டைசெய்து; மடமதனிற்பொலிந்திருந்தசிவாங்கிதன்னால் = மடாலயத்திலே விளக்கமுற்றிருந்த சிவாக்கினியினால்; மரபின்வெந்தது உபகற்பமாகும் = விதிப்படிநீற்றியது உபகற்பமாகும். எ-று.

படுதல் - மூங்கில்முதலியவற்றிலுண்டாதல். வேகுதலாலுண்டாகும் நீறுகளை வெந்தநீறென்றார். மற்று - அசை. (௪)

இந்தவகையாலமைத்தநீறுகொண்டே யிருதிறமுஞ்சுத்திவரத்தெறித்
தபின்ன, ரந்தமிலாவரனங்கியாறுமெய்ம்மை யறிவித்தகுருநன்மையல்லா
ப்பூமி, முந்தவெதிரணியாதேயணியும்போதுமுழுவதுமெய்புண்டரஞ்சந்தி
ரனிற்பாதி, நந்தியெரிதீபநிகழ்வட்டமாகநாதரடியாரணிவர்நன்மையாலே.

(இ-ள்.) இந்தவகையாலமைத்தநீறுகொண்டு = இவ்வாறுவிளைவித்தெடுக்கப்
பட்ட விபூதியைக்கொண்டு; இருதிறமுஞ்சுத்திவரத்தெறித்தபின்னர் = அகத்தும்
புறத்தும் அசுரபீடையணுகாதபடி நிருதிமூலையிலே ஒருசிறிது தெறித்தபின்பு;
அந்தமிலாவரனெதிர் = அழிவில்லாத சிவபெருமான் முன்னும்; அங்கியெதிர் = அக்
கினிமுன்னும்; மெய்ம்மையறிவித்தகுருவெதிர் = உண்மைப்பொருளை யுணர்த்திய
ஆசிரியர்முன்னும்; ஆறுநன்மையல்லாப்பூமிமுந்தவணியாது = வழிநடக்கும்போதும்
அசுத்தநிலத்தும் முற்பட அணியாமல்; அணியும்போது = விதிப்படியணியுங்கால்;
முழுவதுமெய் = சர்வாங்க உத்தூளனம்; புண்டரம் = திரிபுண்டரம்; சந்திரனிற்
பாதி = பிறைவடிவம்; நந்தியெரிதீபம் = சுவாலித்தெரிகின்ற தீபவடிவாகிய முக்
கோணம்; நிகழ்வட்டமாக = விளங்குகின்றவட்டம் ஆகிய இவற்றைப்போல; நாத
ரடியார்நன்மையாலணிவர் = சிவனடியவர் விதிப்படியணிவார். எ-று.

ஆதாரமாயென்பதுமுதலிய இவ்வைந்துசெய்யுட்களும் சில பிரதிகளிலில்லை. (௫)

சாதியினிற்றலையானதருமசீலர் தத்துவத்தினெறியுணர்ந்தோர்தங்கள்
கொள்கை, நீதியினிற்பிழையாதுநெறியினிற்பார் நித்தநியமத்துநிகழங்கி
தன்னிற், பூதியினைப்புதியபாசனத்துக்கொண்டு புலியதளினுடையானை
ப்போற்றிநீற்றை, யாதிவருமும்மலமுமறுத்தவாய்மை யருமுனிவர்முழுவ
துமெய்யணிவரன்றே.

(இ-ள்.) சாதியினிற்றலையானதருமசீலர் = சாதியிலே தலைமைபெற்ற தருமசீல
த்தையுடையவரும்; தத்துவத்தினெறியுணர்ந்தோர் = உண்மைநெறியை யுணர்ந்த
வரும்; தங்கள்கொள்கைநீதியினிற்பிழையாதுநெறியினிற்பார் = தங்களுடையநியம
வொழுக்கத்திலே தவறாது அந்நெறியிலே நிற்பவருமாகி; ஆதிவருமும்மலமுமறுத்த
வாய்மையருமுனிவர் = தொன்றுதொட்டுவரும் மும்மலங்களையும் சேதித்த சத்திய
முடைய அரியமுனிவர்; நியமத்துநிகழ்நித்தவங்கிதன்னிற்பூதியினை = நியமத்தோடு
வளர்க்கப்படும் நித்தியாக்கினியிலெடுத்த விபூதியை; புதியபாசனத்துக்கொண்டு =
புதியபாத்திரத்தில் வைத்துக்கொண்டு; புலியதளினுடையானைப்போற்றி = புலித
தோலை ஆடையாகப்புனைந்த பரமரை வணங்கி; நீற்றைமெய்முழுவதுமணிவர் =
அவ்விபூதியைத் திருமேனிமுழுவதும்பூசுவர் ஆகலின், இவரே முழுநீறுபூசிய முனி
வரெனப்படுவார். எ-று.

இறுதியில்வருவித்தது இசையெச்சம். தருமசீலம்-அவரவர்க்குரிய வருண
வொழுக்கம். கொள்கை - மேற்கொண்ட ஆச்சிரமவொழுக்கம். பாசனமெனக்கூறி
னும் விபூதிவைத்தற்குப் புலித்தோல் மான்றோல் முதலியவற்றினமைத்த பைகள்
வில்வக்குடுக்கை சுரைக்குடுக்கை முதலியவும் கொள்க. (௬)

முழுநீறுபூசியமுனிவர்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் - ௧௦௧௪.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அப்பாலுமடிச்சார்ந்தார்புராணம்.

மூவேந்தர்தமிழ்வழங்கு நாட்டுக்கப்பான் முதல்வனாரடிச்சார்ந்த முறைமையோரு, நாவேய்ந்ததிருத்தொண்டத் தொகையிற்கூறு நற்றொண்டர்காலத்து முன்னும்பின்னும், பூவேய்ந்தநெடுஞ்சடைமேலடம்புதும்பை புதியமதிநதியிதழி பொருந்தவைத்த, சேவேந்துவெல்கொடியா னடிச்சார்ந்தாருஞ் செப்பியவப்பாலுமடிச்சார்ந்தார்தாமே.

(இ-ள்.) மூவேந்தர்தமிழ்வழங்குநாட்டுக்கப்பால் = சேரசோழபாண்டியரென்னும் மூவேந்தருக்கும் உரிய செந்தமிழ்நாட்டினுக்கு அப்புறத்திலே; முதல்வனாரடிச்சார்ந்தமுறைமையோரும் = இறைவனடிகளையடைந்த இயல்பினரும்; நாவேய்ந்த திருத்தொண்டத்தொகையிற்கூறும் = (சுந்தரமூர்த்திநாயனார்தமது) திருவாக்காலருளிய திருத்தொண்டத்தொகையிலே செப்பிய; நற்றொண்டர்காலத்துமுன்னும்பின்னும் = திருத்தொண்டர்களுடைய காலத்திற்கு முன்னரும் பின்னரும்; பூவேய்ந்த நெடுஞ்சடைமேல் = பொலிவுபெற்ற நெடிய சடைமுடியின்மீது; அடம்புதும்பை புதியமதிநதியிதழிபொருந்தவைத்த = அடம்பும் தும்பையும் இளமதியும் கங்கையும் கொன்றையும் அமையச்சூடிய; சேவேந்துவெல்கொடியானடிச்சார்ந்தாரும் = இடபத்தையேந்திய வெற்றிக்கொடியையுடைய இறைவர் திருவடியை யடைந்தவர்களும்; செப்பியவப்பாலுமடிச்சார்ந்தார்தாமே = அப்பாலுமடிச்சார்ந்தாரென்று கூறப்பட்டவர்களேயாம். எ-று.

முறைமையோரும் முன்னும்பின்னும் அடிச்சார்ந்தாரும் அப்பாலுமடிச்சார்ந்தார்தாமே எனக்கூட்டுக. தாமேயென்பதுதேற்றப்பொருட்டு.

செற்றார்தம்புரமெரித்த சிலையார்செல்வத் திருமுருகன்பூண்டியினிற் செல்லும்போதிற், சுற்றாருஞ்சிலைவேடர்கவர்ந்துகொண்ட தொகுநிதியின் பரப்பெல்லாஞ்சுமந்துகொண்டு, முற்றாதமுலையுமையாள்பாகன்பூத முதற்கணமேயுடன்செல்லமுடியாப்பேறு, பெற்றார்தங்கழல்பரவவடியேன்முன்னைப் பிறவியினிற்செய்ததவம்பெரியவாமே.

(இ-ள்.) செற்றார்தம்புரமெரித்தசிலையார் = பகைவர் முப்புரங்களையுந்தகித்த மேருவில்லையுடையபரமரது; செல்வத்திருமுருகன்பூண்டியினிற்செல்லும்போதில் = செல்வமிக்கதிருமுருகன்பூண்டிவழியே செல்லுங்கால்; முற்றாதமுலையுமையாள்பாகன்பூதமுதற்கணமே = இளமைமிக்கதனங்களைவாய்ந்த உமாதேவிபாகராகிய இறைவருடைய முதன்மைபெற்ற பூதகணங்களே; சுற்றாருஞ்சிலைவேடர்கவர்ந்துகொண்ட = கட்டார்ந்தவில்லையுடையவேடராய்வந்து கவர்ந்துகொண்ட; தொகுநிதியின்பரப்பெல்லாம் = திரண்டதிரவியக்குவியல்களையெல்லாம்; உடன்சுமந்துகொண்டுசெல்ல = உடனே மீட்டும் சுமந்து வந்து குவிக்கும்படி; முடியாப்பேறுபெற்றார் தங்கழல்பரவ = அழிவில்லாத திருவருட்பேற்றையடைந்த ஆளுடைய நம்பிகளின் திருவடிகளைவழிபட; அடியேன்முன்னைப்பிறவியினிற்செய்ததவம்பெரியவாம் = அடியேன் பூர்வசன்மத்திலேபுரிந்ததவம் மிக்கவாகும். எ-று.

ஏகாரம் இரண்டனுள் முந்தியதுபிரிநிலை பிந்தியது அசை. பெரியவாறே என்பதும் பாடம். (௨)

## அப்பாலுமடிச்சார்ந்தார்புராணம் முற்றிற்று.

பத்தராய்ப்பணிவார்சருக்கம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம்.௩0௧௬.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## மன்னியசீர்ச்சருக்கம்.

# பூசலார் நாயனார் புராணம்.

அன்றினார்புரமெரித்தார்க்காலயமெடுக்கவெண்ணி
யொன்றுமங்குதவாதாகவுணர்வினாலெடுக்குந்தன்மை
நன்றெனமனத்தினாலேநல்லவாலயந்தான்செய்த
நின்றவூர்ப்பூசலார்தநினைவினையுரைக்கலுற்றாம்.

(இ-ள்.) அன்றினார்புரமெரித்தார்க்கு = பகைவராகும்முப்புரங்களையுந்தகித்த பரமருக்கு; ஆலயமெடுக்கவெண்ணி = கோயில்கட்டுவிக்கக்குறித்து; ஒன்றுமிங்குதவாதாக = ஒருபொருளுங்கிட்டாதாகலும்; உணர்வினாலெடுக்குந்தன்மைநன்றென = அறிவினாலே அமைக்குநிலைமை நன்றெனக்கருதி; மனத்தினாலேநல்லவாலயஞ்செய்த = சித்தத்தினாலே செவ்விய ஆலயமியற்றிய; நின்றவூர்ப்பூசலார்தநினைவினையுரைக்கலுற்றாம் = திருநின்றவூரிலவதரித்த பூசலார்நாயனாரின் சிந்தனையைச் செப்பலுற்றாம். எ-று. தான் - அசை. (க)

உலகினிலொழுக்கமென்றுமுயர்பெருந்தொண்டைநாட்டு
நலமிகுசிறப்பின்மிக்கநான்மறைவிளங்குமூதூர்
குலமுதற்சீலமென்றுங்குறைவிலாமறையோர்கொள்கை
நிலவியசெல்வமல்கிநிகழ்திருநின்றவூராம்.

(இ-ள்.) உலகினிலொழுக்கமென்றுமுயர் = உலகத்திலே வருணாச்சிரம ஒழுக்கங்கள் எக்காலத்தும் ஓங்கப்பெற்ற; பெருந்தொண்டைநாட்டு = சிறந்ததொண்டைநாட்டிலே; நலமிகுசிறப்பின்மிக்கநான்மறை = நன்மைமிக்க சிறப்போடோங்கிய நான்குவேதங்களும்; விளங்குமூதூர் = விளங்கப்பெற்ற பழையநகரம் யாதெனில்; என்றுமுதற்குலச்சீலங்குறைவிலா = எப்பொழுதும் முதன்மைபெற்ற தம்முடைய குலவொழுக்கம் எஞ்சுதலில்லாத; மறையோர்கொள்கைநிலவிய = அந்தணருடைய நியமங்கள் அமைதிபெறலால்; செல்வமல்கிநிகழ்திருநின்றவூராம் = செல்வம்நிரம்பி விளங்குகின்ற திருநின்றவூராகும். எ-று.

தொண்டைநன்னாடு சான்றோருடைத்தென்பார் "ஒழுக்கமென்று முயர்பெருந்தொண்டைநாடு" என்றும், அதனுள் திருநின்றவூர்வேதவொழுக்கமிக்கதென்பார், "நான்மறைவிளங்குமூதூர்" என்றும், மறையவர்க்குரிய யாகாதிகன்மநிலவுதலால் மழை காலம் வழுவாதுபொழிய அதனாற் செல்வவிர்த்தியுடைத்தென்பார், "மறையோர்கொள்கை நிலவியசெல்வமல்கி நிகழ்திருநின்றவூர்" என்றும் கூறினார். நிலவிய - வினையெச்சத்திரிபு. (உ)

அருமறைமரபுவாழவப்பதிவந்துசிந்தை
தருமுணர்வானவெல்லாந்தம்பிரான்கழன்மேற்சார
வருநெறிமாறாவன்புவளர்ந்தெழவளர்ந்துவாய்மைப்
பொருள்பெறுவேதநீதிக்கலையுணர்பொலிவின்மிக்கார்.

(இ-ள்.) அருமறைமரபுவாழவப்பதிவந்து = அரியவைதிகமரபுஓங்க அப்பதியிலே அம்மரபிலவதரித்து; சிந்தைதருமுணர்வானவெல்லாந்தம்பிரான்கழன்மேற்சார = சித்தத்திலேநிகழும் சிந்தனையெல்லாம் சிவபெருமான்றிருவடியிலே செறியும்படி; வருநெறிமாறுவன்புவளர்ந்தெழவளர்ந்து = வளருமியல்புகுன்றுதலில்லாதஅன்பு நாளுக்குநாள்வளரத் தாமும்வளர்ந்து; வாய்மைப்பொருள்பெறுவேதநீதிக்கலை = உண்மைப்பொருளமைந்த வேதநீதியையுடையகலைகளை; உணர்பொலிவின்மிக்கார் = தேர்ந்தமையால்மிக்க விளக்கத்திலே சிறந்தார். எ-று.

உதிக்கும்போதே சிவசிந்தனையேநிகழ அன்பும் உடனுதித்து வளர்ந்தோங்கியதென்பார், "அன்பும் வளர்ந்தெழவளர்ந்து" என்றார். இதனைப் பூசலாரென்னும் பெயருடைமையானும் அறிக. பூசல் - அன்பு. உணர்பொலிவு - உணர்தலான்மிக்க பொலிவு. (௩)

அடுப்பதுசிவன்பாலன்பர்க்காம்பணிசெய்தலென்றே
கொடுப்பதெவ்வகையுந்தேடியவர்கொளக்கொடுத்துக்கங்கை
மடுப்பொதிவேணியயர்மகிழ்ந்துறைவதற்கோர்கோயி
லெடுப்பதுமனத்துக்கொண்டாரிருநிதியின்மையெண்ணார்.

(இ-ள்.) அடுப்பது = இந்நூலுணர்ச்சியால் அநுட்டிக்கற்பாலது; சிவன்பாலன்பர்க்காம்பணிசெய்தலென்றே = சிவபெருமானிடத்தே பத்தியுடையார்க்குத் தக்கதொண்டைஇயற்றலேயென்றுதேர்ந்து; கொடுப்பதெவ்வகையுந்தேடி = அவர்க்குஈதற்கு உரியபொருள்களை எவ்வகையானுஞ்சேகரித்து; அவர்கொளக்கொடுத்து = அவரேற்றுக்கொள்ளும்படி அளித்து; இருநிதியின்மையெண்ணார் = தமக்குப்பெருந்திரவியமின்மையைச் சிந்தியாராய்; கங்கைமடுப்பொதிவேணியயர்மகிழ்ந்துறைவதற்கு = கங்காநதிசெறிந்தசடையையுடைய கடவுள்விரும்பிவீற்றிருத்தற்கு; ஓர்கோயிலெடுப்பதுமனத்துக்கொண்டார் = ஒரு ஆலயங்கட்டுவித்தலைமனதிலே உன்னினார். எ-று. ()

மனத்தினாற்கருதியெங்குமாநிதிவருந்தித்தேடி
யெனைத்துமோர்பொருட்பேறின்றியென்செய்கேனென்றுநைவார்
நினைப்பினாலெடுக்கநேர்ந்துநிகழ்வுறுநிதியமெல்லாந்
தினைத்துணைமுதலாத்தேடிச்சிந்தையாற்றிரட்டிக்கொண்டார்.

(இ-ள்.) மனத்தினாற்கருதி = சித்தத்தினாலே இங்ஙனஞ்சிந்தித்து; மாநிதிவருந்தியெங்குந்தேடி = மிக்கதிரவியத்தை மிகமுயன்று எங்குந்தேடியும்; ஓர்பொருளெனைத்தும்பேறின்றி = ஒருபொருளும் சிறிதும்பெறாது; என்செய்கேனென்றுநைவார் = என்னசெய்யக்கடவேனென்று வருந்துவாராகிய அந்நாயனார்; நினைப்பினாலெடுக்கநேர்ந்து = நினைவினாலே ஆலயமெடுக்கநேசித்து; நிகழ்வுறுநிதியமெல்லாம் = விளங்குந்திரவியமனைத்தும்; தினைத்துணைமுதலாச்சிந்தையாற்றேடித்திரட்டிக்கொண்டார் = தினையளவுமுதலாகச் சித்தத்தாற்சேகரித்துப் பெருக்கிக்கொண்டார். எ-று.

எனைத்துமென்பது சிறிதுமென்னும்பொருட்டு. ஆலயமெடுத்தற்குரிய பொருள்பலவற்றுள் ஒருபொருளேனும் சிறிதும்பெறாமையான், நினைவினாலெடுக்கநேர்ந்தாரென்க. (௫)

சாதனத்தோடுதச்சர்தம்மையுமனத்தாற்றேடி
நாதனுக்காலயஞ்செய்நலம்பெறுநன்னாட்கொண்டே
யாதரித்தாகமத்தாலடிநிலைபாரித்தன்பாற்
காதலிற்கங்குற்போதுங்கண்படாதெடுக்கலுற்றார்.

(இ-ள்.) சாதனத்தோடுதச்சர்தம்மையுமனத்தாற்றேடி = வேண்டும்உபகரணங்களோடுதச்சர்களையும் மனதினாலேசேகரித்து; காதலுக்காலயஞ்செய்நலம்பெறுநன்னாட்கொண்டு = இறைவருக்கு ஆலயமெடுத்தற்கியைந்த சுபதினத்திலே தொடங்கி; ஆதரித்தாகமத்தாலடிநிலைபாரித்து = விரும்பி ஆகமத்திற்கூறியபடி அடிப்படையமைத்து; அன்பாற்காதலிற்கங்குற்போதுங்கண்படாதெடுக்கலுற்றார் = அன்போடும் ஆர்வத்தினால் இரவினும் நித்திரையின்றி ஆலயமெடுப்பாராயினார். எ-று.

கங்குற்போதுமென்னும் உம்மை உயர்வு சிறப்பு. பகலைத்தழுவிநிற்றலின் எச்சவும்மையுமாம். (௬)

அடிமுதலுபானமாதியாகியபடைகளெல்லாம்
வடிவுறுந்தொழில்கண்முற்றமனத்தினால்வகுத்துமான
முடிவுறுசிகரந்தானுமுன்னியமுழத்திற்கொண்டு
நெடிதுநாள்கூடக்கோயினிரம்பிடநினைவாற்செய்தார்.

(இ-ள்.) அடிமுதலுபானமாதியாகியபடைகளெல்லாம் = அடியிலே முந்தியதாகிய உபானமுதலிய அடுக்குகளையெல்லாம்; வடிவுறுந்தொழில்கண்முற்றமனத்தினால் வகுத்து = விம்பத்தோடுகூடிய சிற்பவேலைகளமைய மனதினாலேயுண்டாக்கி; மானமுடிவுறுசிகரமுமுன்னியமுழத்திற்கொண்டு = மாட்சிமைப்பட்ட முடிவிலேவைக்கும் சிகரமும் சிற்பத்திற்கூறிய முழவளவிலேவகுத்து; நெடிதுநாள்கூட = நெடுங்காலஞ்செல்ல; நினைவாற்கோயினிரம்பிடச்செய்தார் = சிந்தனையினால் ஆலயம்பூர்த்தியாகச் செய்தார். எ-று.

உபானம் - கீழமைக்குஞ் சித்திரவரி. தான் - அசை. முன்னுதல் - சிந்தித்தல்; அது அதன்காரியமாகிய அறைதலையுணர்த்திற்று. (௭)

தூபியுநட்டுமிக்கசுதையுநல்வினையுஞ்செய்து
கூவலுமமைத்துமாடுகோயில்சூழ்மதிலும்போக்கி
வாவியுந்தொட்டுமற்றும்வேண்டுவவகுத்துமன்னுந்
தாபரஞ்சிவனுக்கேற்கவிதித்தநாள்சாருநாளில்.

(இ-ள்.) தூபியுநட்டு = சிகரமும்வைத்து; மிக்கசுதையுநல்வினையுஞ்செய்து = சிறந்த சுதைதீற்றலும் சித்திரம்வரைதலும்புரிந்து; கூவலுமமைத்து = கிணறுமுண்டாக்கி; மாடுகோயில்சூழ்மதிலும்போக்கி = அருகிலே ஆலயத்தைச்சூழ்ந்த புறமதிலுமமைத்து; வாவியுந்தொட்டு = தீர்த்தக்குளமும்வெட்டி; மற்றும்வேண்டுவவகுத்து = இன்னும்வேண்டுவனவெல்லாம் இயற்றி; சிவனுக்கேற்கமன்னுந்தாபரம்விதித்தநாள் சாருநாளில் = நிமலருக்குத்தக்கபடி நிலைபெறும்பிரதிஷ்டைக்கு நிச்சயித்த சுபதினம் சேர்ந்தகாலத்தில். எ-று. (௮)

காடவர்கோமான்கச்சிக்கற்றளியெடுத்துமுற்ற
மாடெலாஞ்சிவனுக்காகப்பெருஞ்செல்வம்வகுத்தல்செய்வா
னாடமாலறியாதாரைத்தாபிக்குமந்நாண்முன்னா
ளேடலர்கொன்றைவேய்ந்தாரிரவிடைக்கனவிலெய்தி.

(இ-ள்.) காடவர்கோமான் = காடவவேந்தர்; கச்சிக்கற்றளியெடுத்துமுற்ற = காஞ்சியிலே கல்லினால் ஒருஆலயங்கட்டி அதுபூர்த்தியாயினமையால்; மாடெலாஞ் சிவனுக்காக = தமதுசெல்வமெல்லாம் சிவபெருமானுக்குரியவாகும்படி; பெருஞ்செல்வம்வகுத்தல்செய்வான் = மிகுதிரவியத்தை ஏற்படுத்தி; நாடமாலறியாதாரை =

திருமாலுக்கும் தரிசித்தற்குப் பிரசன்னராகாத சிவபெருமானை; தாபிக்குமந்நாண் முன்னாளிரவிடை = தாபித்தற்குநிச்சயித்த அத்தினத்திற்கு முதற்றினத்து இரவிலே; ஏடலர்கொன்றைவேய்ந்தார்கனவிலெய்தி = இதழ்விரிந்த கொன்றைமலரையணிந்த இறைவர் அவர்சொப்பனத்திற்றோன்றி. எ-று.

தளி - ஆலயம். முற்றமாடு - ஆலயத்தின்புறம்பிலுள்ள நிலமுமாம். செய்வான்-முற்றெச்சம். மாலுமென்னும் உயர்வுசிறப்பும்மைதொக்கது. அறியப்படாதாரென்னும் எதிர்மறைச்செயப்பாட்டுவினை எதிர்மறைச்செய்வினையாய்நின்றது. (க)

நின்றவூர்ப்பூசலென்பானெடிதுநாணினைந்துசெய்த
நன்றுநீடாலயத்துநாளைநாம்புகுவோநீயிங்
கொன்றியசெயலைநாளையொழிந்துபின்கொள்வாயென்று　　[தார்.
கொன்றைவார்சடையார்தொண்டர்கோயில்கொண்டருளப் போந்

(இ-ள்.) நின்றவூர்ப்பூசலென்பான் = திருநின்றவூரிலுள்ள பூசலாரென்பவன்; நெடிதுநாணினைந்துசெய்தநன்றுநீடாலயத்து = அநேகநாளாகச் சிந்தித்துச்செய்த சிறப்புமிக்கஆலயத்திலே; நாளைநாம்புகுவோம் = நாளையதினம் யாம்செல்வோம்; நீயிங்கொன்றியசெயலை = நீ இங்கேதாபிக்க உத்தேசித்ததை; நாளையொழிந்துபின் கொள்வாயென்று = நாளையதினம்கழிய வேறொருதினம் வைத்துக்கொள்வாயென்று கட்டளையிட்டு; கொன்றைவார்சடையார் = கொன்றைமாலிகைசூடிய நெடிய சடைமுடியையுடையநிமலர்; தொண்டர்கோயில்கொண்டருளப்போந்தார் = அந்நாயனாரமைத்த ஆலயத்தை அங்கீகரிக்க எழுந்தருளினார். எ-று. (க0)

தொண்டரைவிளக்கத்தூயோனருள்செயத்துயிலைநீங்கித்
திண்டிறன்மன்னனந்தத்திருப்பணிசெய்தார்தம்மைக்
கண்டுநான்வணங்கவேண்டுமென்றெழுங்காதலோடுந்
தண்டலைச்சூழல்சூழ்ந்தநின்றவூர்வந்துசார்ந்தான்.

(இ-ள்.) தூயோன் = அநாதிமலமுத்தராகியபெருமான்; தொண்டரைவிளக்கவருள்செய = அந்நாயனார்பெருமையைவிளக்குதற்கு இங்ஙனம் அருளிச்செய்ய; திண்டிறன்மன்னன்றுயிலைநீங்கி = வலியவெற்றியையுடைய அவ்வரசர் நித்திரைவிட்டெழுந்து; அந்தத்திருப்பணிசெய்தார்தம்மை = அத்திருப்பணிசெய்த அத்தொண்டரை; நான்கண்டுவணங்கவேண்டுமென்று = யான்கண்டுதொழவேண்டுமென்றிசைத்து; தண்டலைச்சூழல்சூழ்ந்தநின்றவூர் = சோலைகளின்தொகுதிகள் செறிந்த திருநின்றவூரை; எழுங்காதலோடும்வந்துசார்ந்தான் = அதிகரித்த அவாவோடும் வந்தடைந்தார். எ-று. (கக)

அப்பதியணைந்துபூசலன்பரிங்கமைத்தகோயி
லெப்புடையதுவென்றங்கணெய்தினார்தம்மைக்கேட்கச்
செப்பியபூசல்கோயில்செய்ததொன்றில்லையென்றார்
மெய்ப்பெருமறையோரெல்லாம்வருகவென்றுரைத்தான்வேந்தன்.

(இ-ள்.) அப்பதியணைந்து = அந்நகரையடைந்து; பூசலன்பரிங்கமைத்தகோயில் = பூசலார்நாயனார் இங்குப்புரிந்த ஆலயம்; எப்புடையதுவென்றங்கணெய்தினார் தம்மைக்கேட்க = எப்பக்கத்திலுள்ளதென்று அங்குள்ளாரைவினவ; செப்பியபூசல்கோயில் செய்ததொன்றில்லையென்றார் = அவர் நீர்கூறியபூசலார் ஆலயம் ஒன்று அமைத்ததில்லை யென்றுரைத்தார்; வேந்தன் = அதுகேட்டஅரசர்; மெய்ப்பெருமறையோரெல்லாம் வருகவென்றுரைத்தான் = இந்நகரத்திலுள்ள உண்மைப்பெருமறையோரெல்லாம் ஒருங்குவருகவென்றுகூறினார். எ-று. (கஉ

பூசுரரெல்லாம்வந்துபுரவலன்றன்னைக்காண
மாசிலாப்பூசலார்தாமாரெனமறையோரெல்லா
மாசில்வேதியனிவ்வூரானென்றவரழைக்கவொட்டா
னீசனாரன்பர்தம்பாலெய்தினான்வெய்யவேலான்.

(இ-ள்.) பூசுரரெல்லாம்வந்து புரவலன்றன்னைக்காண = அந்தணரெல்லாம்வந்து அரசனைக்காணலும்; மாசில்சீர்ப்பூசலாராரென = குற்றமில்லாதசீர்த்தியையுடைய பூசலாரென்பவர் யாரென்றுவினவ; மறையோரெல்லாம் = அவ்வந்தணரெல்லாம்; ஆசில்வேதியனிவ்வூரானென்றவரழைக்க = குற்றமில்லாத அம்மறையவன் இவ்வூரிலிருக்கின்றானென்றுகூறி அழைக்கத்தொடங்க; வெய்யவேலானொட்டான் = வெற்றிபெற்றவேற்படையையுடையஅவ்வரசர் அதற்குடன்படாது; ஈசனாரன்பர் தம்பாலெய்தினான் = தாமே அச்சிவனடியார்பாலடைந்தார். எ-று. தாம் அசை.

தொண்டரைச்சென்றுகண்டமன்னவன்றொழுதுநீரிங்
கெண்டிசையோருமேத்தவெடுத்தவாலயந்தான்யாதிங்
கண்டர்நாயகரைத்தாபித்தருளுநாளின்றென்றும்மைக்
கண்டடிபணியவந்தேன்கண்ணுதலருள்பெற்றென்றான்.

(இ-ள்.) தொண்டரைச்சென்றுகண்டமன்னவன்றொழுது = ஆங்கடைந்து அந்நாயனாரைக்கண்ட அரசர்வணங்கி; எண்டிசையோருமேத்தநீரிங்கெடுத்தவாலயந்தான்யாது = எட்டுத்திக்கிலுள்ளாருந்துதிக்கும்படி தேவரீர் இங்கேகட்டியஆலயம் எது?; அண்டர்நாயகரையிங்குத்தாபித்தருளு நாளின்றென்று = தேவநாயகராகியசிவபெருமானை இங்கே பிரதிஷ்டைசெய்விக்குந்தினம் இத்தினமென்று; கண்ணுதலருள்பெற்று = நெற்றிக்கண்ணுடைய அந்நிமலரருளினாலறிந்து; உம்மைக்கண்டடிபணியவந்தேனென்றான் = தேவரீரைக்கண்டு திருவடிவணங்கவந்தேன் என்றார். எ-று. தான்...அசை. (கச)

மன்னவனுரைப்பக்கேட்டவன்பர்தாமருண்டுநோக்கி
யென்னையோர்பொருளாக்கொண்டேயெம்பிரானருள்செய்தாரேன்
முன்வருநிதியிலாமைமனத்தினான்முயன்றகோயி
லின்னதாமென்றுசிந்தித்தெடுத்தவாறெடுத்துச்சொன்னார்.

(இ-ள்.) மன்னவனுரைப்பக்கேட்டவன்பர்மருண்டுநோக்கி = அரசருரைக்கக்கேட்ட அவ்வன்பர் மயங்கிப்பார்த்து; என்னையோர்பொருளாக்கொண்டெம்பிரானருள்செய்தாரேல் = அடியேனை ஓர்பொருளாகத்திருவுளத்திற்கொண்டு எமதுபெருமான் இங்ஙனம் அருள்செய்தாராயின்; முன்வருநிதியிலாமைமனத்தினான்முயன்றகோயிலின்னதாமென்று = (அங்ஙனமருளியஆலயம்) காணப்படும்திரவியமில்லாமையால் மனதினாலேகட்டிய ஆலயமாகுமென்று; சிந்தித்தெடுத்தவாறெடுத்துச்சொன்னார் = எண்ணி ஆலயமமைத்தவகையை எடுத்துக்கூறினார். எ-று. தாம் - ஏ. அசைகள். (கரு)

அரசனுமதனைக்கேட்டங்கதிசயமெய்தியென்னே
புரையறுசிந்தையன்பர்பெருமையென்றவரைப்போற்றி
விரைசெறிமாலைதாழநிலமிசைவீழ்ந்துதாழ்ந்து
முரசெறிதானையோடுமீண்டுதன்மூதூர்ப்புக்கான்.

(இ-ள்.) அரசனுமதனைக்கேட்டதிசயமெய்தி = அரசரும் அதைக்கேட்டுவியந்து; புரையறுசிந்தையன்பர்பெருமை யென்னேயென்றவரைப்போற்றி = இணையற்றமனதையுடைய அன்பர்பெருமை இருந்தவாறு என்னேயென்று அவரைத்துதி

த்து; விண்செறிமாலைதாழநில்மிசைவீழ்ந்துதாழ்ந்து = வாசனைநிரம்பியமலர்மாலி கைதுயல்வரப் பூமியிலேவிழுந்துவணங்கி; முரசெறிதானையோடுமீண்டுதன்மூதூர்ப்புக்கான் = முரசவாத்தியமுழக்கும் சேனையோடுதிரும்பித் தமதுபழையநகரத்தை யடைந்தார். எ-று. அங்கு - அசை. என்னேயென்பது வியப்பிடைச்சொல். (கசு)

அன்பருமமைத்தசிந்தையாலயத்தரனார்தம்மை
நன்பெரும்பொழுதுசாரத்தாபித்துநலத்தினோடும்
பின்புபூசனைகளெல்லாம்பெருமையிற்பலநாட்பேணிப்
பொன்புனைமன்றுளாடும்பொற்கழனீழல்புக்கார்.

(இ-ள்.) அன்பரும்நன்பெரும்பொழுதுசார = பூசலார்நாயனாரும் குறித்தசுபலக்கினம்வந்தவுடனே; அமைத்தசிந்தையாலயத்தரனார்தம்மைத்தாபித்து = தாம் அமைத்த இருதயாலயத்திலே இறைவனைத்தாபித்து; பின்புபூசனைகளெல்லாம்பெருமையிற் பலநாணலத்தினோடும்பேணி = பின்னர் வழிபாடுகளெல்லாம் மேன்மையாகப்பலதினம் சிறப்போடுமியற்றி (வாழ்ந்து); பொன்புனைமன்றுளாடும்பொற்கழனீழல்புக்கார் = கனகசபையிலேநடித்தருளும் பொன்போலும் திருவடிநீழலையடைந்தார்.

நீண்டசெஞ்சடையினார்க்குநினைப்பினாற்கோயிலாக்கிப்
பூண்டவன்பிடையறாதபூசலார்பொற்றாள்போற்றி
யாண்டகைவளவர்கோமானுலகுய்யவளித்தசெல்வப்
பாண்டிமாதேவியார்தம்பாதங்கள்பரவலுற்றேன்.

(இ-ள்.) நீண்டசெஞ்சடையினார்க்கு = நெடுகிச்சிவந்த சடைமுடியையுடைய நிமலருக்கு; நினைப்பினாற்கோயிலாக்கி = சிந்தனையினாலே திருக்கோயிலமைத்து; பூண்டவன்பிடையறாதபூசலார்பொற்றாள்போற்றி = தாம்விரதமாகக்கொண்ட அன்பு இடையேதவிரப்பெறாத பூசலார்நாயனாருடைய பொன்போலுந் திருவடிகளைவணங்கி; ஆண்டகைவ்ளவர்கோமான் = ஆண்மையமைந்த சோழாகுலக்குரிசிலார்; உலகுய்யவளித்த = ஆன்மாக்களீடேறப்பெற்ற; செல்வப்பாண்டிமாதேவியார்தம்பாதங்கள்பரவலுற்றேன் = (அன்பர்க்கு அருஞ்) செல்வம்போலும் பாண்டிமாதேவியாரென்னும் மங்கையர்க்கரசியார் திருவடிகளைத் துதிக்கலுற்றேன். எ-று. ()

## பூசலார்நாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் - கஎ௬௪.

---

# மங்கையர்க்கரசியார்புராணம்.

மங்கையர்க்குத்தனியரசியெங்கடெய்வம் வளவர்திருக்குலக்கொழுந்துவளைக்கைமானி, செங்கமலத்திருமடந்தைகன்னிநாடாடென்னர்குலப்பழிதீர்த்ததெய்வப்பாவை, யெங்கள்பிரான்சண்பையர்கோனருளினாலேயிருந்தமிழ்நாடுற்றவிடர்நீக்கித்தங்கள், பொங்கொளிவெண்டிருநீறுபரப்பினாரைப் போற்றுவார்கழலெம்மாற்போற்றலாமே.

(இ-ள்.) மங்கையர்க்குத்தனியரசி = மங்கையர்க்கரசியாரும்; எங்கடெய்வம் = எங்கட்குத்தெய்வமும்; வளவர்திருக்குலக்கொழுந்து = சோழராஜாவின்திருக்

குலத்துதித்தவரும்; வளைக்கைமானி = வளையையணிந்ததிருக்கரத்தையுடைய மானியாரும்; செங்கமலத்திருமடந்தை = செந்தாமரைமலரில்வதியும் இலக்குமிபோல்பவரும்; கன்னிநாடாடென்னர்குலப்பழிதீர்த்ததெய்வப்பாவை = பாண்டிநாட்டையாண்ட பாண்டியர்குலத்துக்குநேர்ந்த பழியைநிவர்த்தித்த தெய்வீகம்பெற்றபாவையைநிகர்ப்பவரும்; எங்கள்பிரான்சண்பையர்கோனருளினாலே = எங்கட்குஇறைவராகிய ஆளுடையபிள்ளையாரருளினாலே; இருந்தமிழ்நாடுற்றவிடர்நீக்கி = பெருமைபெற்ற தமிழ்நாட்டினருற்றதுன்பத்தை அகற்றி ; தங்கள்பொங்கொளிவெண்டிருநீறுபரப்பினாரை = தம்மரபிற்குரிய பேரொளிதழைந்தவெள்ளியதிருநீற்றைத்தேசமெங்கும்பரவுவித்தவருமாகிய பாண்டிமாதேவியாரை ; போற்றுவார்கழலெம்மாற்போற்றலாம் = வணங்குவாருடையதிருவடிகள் எம்மால்வணங்கலாகும் எ-று.

இவரவதரித்தமையால்மங்கையர்க்கு மேன்மைவாய்ந்ததென்பார், "மங்கையர்க்குத்தனியரசி" என்றும், இவர் உலகிற்குச்செய்த உதவியைநோக்கின் தெய்வமாக வணங்கத்தக்கவரென்பார், "எங்கடெய்வம்" என்றும், சிவபத்தியிற்சிறந்த திருக்குலத்துதித்தவரென்பார், "வளவர்திருக்குலக்கொழுந்து" என்றும், இளம்பருவத்திலேயேஎவர்க்குமியலாதபெருந்தகைமைஇயைந்தவரென்பார, "வளைக்கைமானி" என்றும், இறைவர்வழிபாட்டால் எவ்வகைச்செல்வமும்எளிதில்நுகருமாறு எவர்க்கும்நல்கினவரென்பார், "செங்கமலத்திருமடந்தை" என்றும், பாண்டியர்மரபிலே கூன்பாண்டியரென்பவரொருவருதித்துச் சைவசமயப்பற்றகன்று சமண்சமயப்பற்றுடையராயினரென அக்குலத்துககுநேர்ந்த பழியையகற்றிய தெய்வீகமுடையரென்பார், "தென்னர்குலப்பழிதீர்த்ததெய்வப்பாவை" என்றும், அருந்தமிழ்நாடெங்கும்பரம்பிய சமண்சமயஅந்தகாரத்தை ஆளுடையபிள்ளையாரருளினாலோட்டித் திருநீற்றினொளியை எங்குந்திகழ்வித்தவரென்பார், "எங்கள்பிரான் சண்பையர்கோனருளினாலே இருந்தமிழ்நாடுற்றவிடர்நீக்கித்தங்கள் பொங்கொளிவெண்டிருநீறுபரப்பினார்" என்றும், இத்தகைய இவரைவணங்குபவர் எவரும்வணங்குமியல்பினரென்பார, "போற்றுவார்கழலெம்மாற்போற்றலாம்" என்றும்கூறினார். சந்தனப்பொதியச்செந்தமிழ்முனியுறையும்நாடேசெந்தமிழ்நாடாகலின், அதனை இருந்தமிழ்நாடென்றார்.

பூசுரர்சூளாமணியாம்புகலிவேந்தர்போனகஞானம்பொழிந்தபுனிதவாக்காற், றேசுடையபாடல்பெறுந்தவத்தினாரைச்செப்புவதியாமென்னறிந்துதென்னர்கோமான், மாசில்புகழ்நெடுமாறன்றனக்குச்சைவவழித்துணையாய்நெடுங்காலமன்னிப்பின்னை, யாசினெறியவரோடுங்கூடவீசரடிநிழற்கீழமர்ந்திருக்கவருளும்பெற்றார்.

(இ-ள்.) பூசுரர்சூளாமணியாம்புகலிவேந்தர் = அந்தணர்க்குச்சிரோமணியாகிய ஆளுடையபிள்ளையார்; போனகஞானம்பொழிந்த புனிதவாக்கால் = தாம் உண்டருளியஞானத்தையே திருப்பாடலாகப்பொழிந்த புனிதத்திருவாக்கினாலே; தேசுடையபாடல்பெறுந்தவத்தினா[illegible] = தெய்வீகம்வாய்ந்த திருப்பாடல்பெற்ற சிறந்த தவமுடைய அப்பாண்டிமாதேவியாரை; யாமென்னறிந்துசெப்புவது = யாம் யாதறிந்துபுகழ்வது; தென்னர்கோமான் மாசில்புகழ்நெடுமாறன்றனக்கு = பாண்டியர்தலைவராகியகுற்றமற்றசீர்த்திபரம்பிய நெடுமாறநாயனார்க்கு; சைவவழித்துணையாய் நெடுங்காலமன்னிப்பின்னை = சைவசமயப்பிரவேசத்துக்குத் தக்கதுணையாகி நெடுங்காலம்வாழ்ந்திருந்து பின்பு; ஆசினெறியவரோடுங்கூட = வழுவுதலில்லாதஒழுக்கத்தையுடைய அந்நாயனாரோடும் தாமும்; ஈசரடிநிழற்கீழமர்ந்திருக்க வருளும்பெற்றார் = சிவபெருமான் திருவடிநிழலின்கீழ் நிலைபெற்றிருக்கத் திருவருளையும்பெற்றார். எ-று.



மங்கையர்க்கரசியார்.

சண்பையர்கோனருள்பெற்றமையன்றி இத்திருவருளும்பெற்றாரெனப் பொருள்தருதலின் அருளுமென்னும் உம்மை இறந்ததுதழீஇய எச்சவும்மையாம். (உ)

வருநாளென்றும்பிழையாத்தெய்வப்பொன்னிவளம்பெருகவளவர்குலம்பெருக்குந்தங்க, டிருநாடுபோற்செழியர்தென்னாடுவிளக்குஞ்சீர்விளக்கின்செய்யசிறடிகள்போற்றி, யொருநாளுந்தஞ்செயலில்வழுவாதன்பர்க்குடைகீளுங்கோவணமுநெய்துநல்கும், பெருநாமச்சாலியர்தங்குலத்தில்வந்தபெருந்தகையார்நேசர்திறம்பேசலுற்றாம்.

(இ-ள்.) வருநாளென்றும்பிழையா = பெருகிவருங்காலங்களிலே தவறுதலின்றி எக்காலத்திலும் பெருகிவரும்; தெய்வப்பொன்னிவளம்பெருக = தெய்வத்தன்மையுடைய காவிரிநதியால் சகலவளங்களும் செழிக்கும்படி; வளவர்குலம்பெருக்குந் தங்கடிருநாடுபோல் = சோழவமிசத்தரால் விர்த்திசெய்யப்படுகின்ற தம்முடைய சோணாடுபோல; செழியர்தென்னாடுவிளக்கும் = பாண்டியர்களுக்குரிய தென்னாட்டைவிளக்கிய; சீர்விளக்கின்செய்யசிறடிகள்போற்றி = சிறப்புற்ற மங்கையர்க்கரசியாருடைய சிவந்தசிற்றடிகளைவணங்கி; ஒருநாளுந்தன்செயலில்வழுவாது = ஒருதினமும் தமதுதிருத்தொண்டிலே தவறாது; அன்பர்க்குடைகீளுங்கோவணமுநெய்து நல்கும் = அடியவர்களுக்கு ஆடையும் கீளும் கோவணமும் நெய்துகொடுக்கும்; பெருநாமச்சாலியர்தங்குலத்தில்வந்த = தழைந்தகீர்த்தியையுடைய சாலியர்மரபிலே அவதரித்த; பெருந்தகையார்நேசர்திறம்பேசலுற்றாம் = மிகுசிறப்புடையராகிய நேசநாயனார்திருத்தொண்டை விளம்புவாம் எ-று.

வழுவாதுநல்கும்நேசர் எனஇயையும். விளக்குதல் - சைவசமயத்தால்விளக்கமுறச்செய்தல். அமண்சமய அந்தகாரத்தை ஒழித்தமையின் மங்கையர்க்கரசியாரை விளக்கென்றார். கீள் - அரைஞாணுக்குப்பதிலாக உடுக்கப்படுவது; அது, சிறிதாகக் கிழிக்கப்படுவதாகலின் கீளெனப்பட்டது. (௩)

## மங்கையர்க்கரசியார்புராணம்முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் - ௩௦௯௭.

---

# நேசநாயனார்புராணம்.

சீர்வளர்சிறப்பின்மிக்கசெயன்முறையொழுக்கங்குன்றா
நார்வளர்சிந்தைவாய்மைநன்மையார்மன்னிவாழும்
பார்வளர்புகழின்மிக்கபழம்பதிமதிதோய்நெற்றிக்
கார்வளர்சிகரமாடக்காம்பீலியென்பதாகும்.

(இ-ள்.) சீர்வளர்சிறப்பின் = சீர்த்திவளர்கின்றசிறப்போடு; மிக்கசெயன்முறையொழுக்கங்குன்றா = தாம் முறைமையாகவநுட்டிக்கும் மேம்பட்ட ஒழுக்கச்செயலிற்றவறாத; நார்வளர்சிந்தைவாய்மைநன்மையார்மன்னிவாழும் = அன்புவளரப்பெற்ற உண்மைமனத்தையுடையநல்லோர் அமர்ந்துவாழ்கின்ற; பார்வளர்புகழின்மிக்க பழம்பதி = பூமியிலோங்கிய புகழிலுயர்ந்த பழையநகரம் யாதெனில்; மதிதோய் நெற்றிக்கார்வளர்சிகரமாடம் = சந்திரன்றவழும் உச்சியையும் மேகந்தவழும் சிகரத்

தையும்வாய்ந்த மாடங்களையுடைய; காம்பீலியென்பதாகும் = காம்பீலியென்னும் திருப்பதியாகும். எ-று.

குன்றாநன்மையார்வாழும்பதி காம்பீலி என இயையும். (க)

அங்கரதனில்வாழ்வாரறுவையர்குலத்துவந்தார்
மன்னியதொழிலிற்றங்கண்மரபின்மேம்பாடுபெற்றார்
பன்னகாபரணர்க்கன்பர்பணிதலைக்கொண்டுபாதஞ்
சென்னியிற்கொண்டுபோற்றுந்தேசினார்நேசரென்பார்.

(இ-ள்) அங்கரதனில்வாழ்வார் = அத்திருப்பதியிலேவாழ்பவர்; அறுவைய ர்குலத்துவந்தார் = சாலியர்குலத்திலே அவதரித்தவர்; மன்னியதொழிலிற்றங்க ண்மரபின்மேம்பாடுபெற்றார் = நிலைபெற்றதந்தொழிலிலே தங்கண்மரபினும் மேன் மைபெற்றவர்; பன்னகாபரணர்க்கன்பர்பணிதலைக்கொண்டு = நாகாபரணராகியநம் பருக்கு அன்பராயினருடையதிருத்தொண்டை மேற்கொண்டு; பாதஞ்சென்னியிற் கொண்டுபோற்றுந்தேசினார் = அவர்திருவடிகளைச்சிரமேற்புனைந்துவழிபடுகின்ற சீர் த்தியினர்; நேசரென்பார் = நேசநாயனாரென்னும் திருப்பெயருடையவர். எ-று.

மரபின்மேம்பாடுபெறல் - அவரினும் செல்வமிக்குடையராதல். (உ)

ஆங்கவர்மனத்தின்செய்கையரனடிப்போதுக்காக்கி
யோங்கியவாக்கின்செய்கையுயர்ந்தவஞ்செழுத்திற்காக்கித்
தாங்குகைத்தொழிலின்செய்கைதம்பிரானடியார்க்காகப்
பாங்குடையுடையுங்கீளும்பழுதில்கோவணமுநெய்வார்.

(இ-ள்) ஆங்கவர்மனத்தின்செய்கையரனடிப்போதுக்காக்கி = அவர் தம்மன த்தின்செயலை அமலர்திருவடிக்கே உரிமையாக்கி; ஓங்கியவாக்கின்செய்கையுயர்ந்தவ ஞ்செழுத்துக்காக்கி = உயர்ந்தவாக்கின்செயலைச் சிறந்தபஞ்சாக்கரத்துக்கு உரிமை யாக்கி; தாங்குகைத்தொழிலின்செய்கைதம்பிரானடியார்க்காக = மேற்கொண்டகை த்தொழிலின்செயல் விமலரடியவர்க்கே உரிமையாகும்படி; பாங்குடையுடையுங்கீ ளும்பழுதில்கோவணமுநெய்வார் = தகுதிபெற்றஆடையும் கீளும் தக்ககோவணமு ம் நெய்வார். எ-று.

மனத்தின்செய்கை - சிந்தனை. வாக்கின்செய்கை - வசனிப்பு. எனவே, எப் பொழுதும் இறைவரைச்சிந்தித்தலோடு பஞ்சாக்கர உச்சாரணமுடையராய்உடையு ங்கீளுங்கோவணமும்நெய்வாரென்க. ஆங்கு - அசை - ஆக நெய்வாரெனஇயையும்.

உடையொடுநல்லகீளுமொப்பில்கோவணமுநெய்து
விடையவரடியார்வந்துவேண்டுமாறீயுமாற்றா
லிடையறாதளித்துநாளுமவர்கழலிறைஞ்சியேத்தி
யடைவுறுநலத்தராகியரனடிநீழல்சேர்ந்தார்.

(இ-ள்,) ஒப்பினல்லவுடையொடுகீளுங்கோவணமுநெய்து = நிகரற்ற நல்லஆ டையோடு கீளுங்கோவணமும்நெய்து; விடையவரடியார்வந்துவேண்டுமாறு = இட பவாகனத்தையுடைய இறைவரடியவர்வந்து வேண்டியபடி; ஈயுமாற்றாலிடையறா தளித்து = கொடுக்கும்இயல்பினால் இடைவிடாதுகொடுத்து; நாளுமவர்கழலிறை ஞ்சியேத்தி = தினமும்அவர்திருவடிகளைத்தொழுதுதுதித்து; அடைவுறுநலத்தரா

சியரனடிநீழல்சேர்ந்தார் = செறிந்தசிவபுண்ணியமுடையராகிச் சிவபெருமான்திரு வடிநீழலை அடைந்தார். எ-று. (ச)

வேறு.

கற்றைவேணிமுடியார்தங்கழல்சேர்வதற்குக்கலந்தவினை
செற்றநேசர்கழல்வணங்கிச்சிறப்பான்முன்னைப்பிறப்புணர்ந்து
பெற்றமுயர்த்தார்க்காலயங்கள்பெருகவமைத்துமண்ணாண்ட
கொற்றவேந்தர்கோச்செங்கட்சோழர்பெருமைகூறுவாம்.

(இ-ள்.) கற்றைவேணிமுடியார்தங்கழல்சேர்வதற்கு = செறிந்தசடைமுடிகளையுடைய சிவபெருமான்றிருவடிகளையடைவதற்கு; கலந்தவினைசெற்ற = தொன்றுதொட்டவினையைத் தொலைத்த; நேசர்கழல்வணங்கி = நேசநாயனார்திருப்பாதங்களைவணங்கிக்கொண்டு; சிறப்பான்முன்னைப்பிறப்புணர்ந்து = சிறந்தஉணர்ச்சியால் பூர்வசன்மநிலைமையைத் தெளிந்து ; பெற்றமுயர்த்தார்க்கு=இடபத்தைத்துவசமாகவேந்திய இறைவர்க்கு ; ஆலயங்கள்பெருகவமைத்துமண்ணாண்ட=ஆலயங்கள்பல இயற்றி இப்பூமியையாண்ட; கொற்றவேந்தர்கோச்செங்கட்சோழர்பெருமைகூறுவாம் = வெற்றிபெற்ற அரசராகிய கோச்செங்கட்சோழநாயனார்சிறப்பை விளம்புவாம். எ-று.

சேர்வதற்குச்செற்றவென இயையும். சிறப்பு - ஈண்டுஉணர்ச்சியின்மேற்று. (ங)

நேசநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் - ௧0சஉ.

## கோச்செங்கட்சோழநாயனார் புராணம்.

துலையிற்புறவினிறையளித்தசோழருரிமைச்சோணாட்டி
லலையிற்றரளமகிலொடுசந்தணிநீர்ப்பொன்னிமணிகொழிக்குங்
குலையிற்பெருகுஞ்சந்திரதீர்த்தத்தின்மருங்குகுளிர்சோலை
நிலையிற்பெருகுந்தருமிடைந்தநெடுந்தண்கானமொன்றுளதால்.

(இ-ள்.) துலையிற்புறவினிறையளித்த = துலையிலே புறாவின்நிறைக்குஒப்பத்தனதுடலையளித்த; சோழருரிமைச்சோணாட்டில் = சிபிச்சக்கரவர்த்திக்கு உரிமையாகியசோணாட்டிலே; அலையிலகிலொடுசந்துதரளமணிகொழிக்கும் = அலைகளிலே அகிலோடு சந்தனமரங்களையும் முத்துக்களையும் அரதனங்களையும்ஒதுக்குகின்ற; அணிநீர்ப்பொன்னிகுலையில் = அழகியநீரையுடைய காவிரிநதிக்கரையிலே; பெருகுஞ்சந்திரதீர்த்தத்தின்மருங்கு = பெருகுகின்ற சந்திரதீர்த்தத்தினருகே ; குளிர்சோலைநிலையிற்பெருகுந்தருமிடைந்த = தண்ணியஇளமரக்காக்களோடு நிலையோடோங்கிய பருமரங்களுந்தழைந்த; நெடுந்தண்கானமொன்றுளது = நெடிய சீதளம்நிகழும் காடொன்றுள்ளது. எ-று.

சீகாழியில்அரியயாகமியற்றும் சிபிச்சக்கரவர்த்தியைச்சோதிக்கும்படி சிவபிரான்பணித்தவாறு அக்கினிதேவன்புறாவுருவாக இந்திரன்கழுகுருவாய்த்துரத்தலும், அப்புறவு தம்பாலடைக்கலம்புக அச்சக்கரவர்த்தியார்கண்டு தமதுடற்றசையை அப்

புறவின்நிறைக்கீடாக அரிந்திட்டும் நிரம்பாமையின், தாமே துலையிலேறிநிரப்பித்திருவருள்பெற்றாராகலின், "துலையிற்புறவினிறையளித்தசோழர்" என்றார். தக்கன்புதல்வியராகிய அசுவனிமுதலிய இருபத்தெழுவரைமணந்தசந்திரன்ஏனையவரைவெறுத்து உரோகணியால் ஆர்வமிக்கமையின் தக்கனாற் றனதுடற்கலைகுறையச்சாபமேற்று இத்தீர்த்தத்தினெய்திமுழுகி இதன்கரையிலே இருந்தவமியற்றி என்றும் ஒருகலைநிலைபேறாகவும் ஏனைப்பதினைந்துகலைகளும் வளர்தலும்குறைதலுமாகவும் வரமேற்றமையின் இத்தீர்த்தம் சந்திரதீர்த்தமெனப்பெயர்பெற்றதென்பது திருவானைக்காவென்னும் இத்தலமான்மியமென்க. (க)

அப்பூங்காவில்வெண்ணாவலதன்கீழ்முன்னாளரிதேடு
மெய்ப்பூங்கழலார்வெளிப்படலுமிக்கதவத்தோர்வெள்ளானை
கைப்பூம்புனலுமுகந்தாட்டிக்கமழ்பூங்கொத்துமணிந்திறைஞ்சி
மைப்பூங்குவளைக்களத்தாரைநாளும்வழிபட்டொழுகுமால்.

(இ-ள்.) அப்பூங்காவில்வெண்ணாவலதன்கீழ் = அந்தப்பூஞ்சோலையில் வெண்ணாவல்மரத்தினடியிலே; முன்னாளரிதேடும் = முற்காலத்திலே திருமால்தேடிய; மெய்ப்பூங்கழலார்வெளிப்படலும் = உண்மைப்பொலிவமைந்த திருவடிகளையுடைய பெருமான் தெரிசனமளித்தலும்: மிக்கதவத்தோர்வெள்ளானை = மேன்மையுற்றதவத்தையுடைய ஒருவெள்ளானையானது; கைப்பூம்புனலுமுகந்தாட்டி = புழைக்கையிலே தீர்த்தமுமுகந்து அபிஷேகித்து; கமழ்பூங்கொத்துமணிந்திறைஞ்சி = மணக்கின்றபூங்கொத்தையுந்தரித்து வணங்கி ; மைப்பூங்குவளைக்களத்தாரைநாளும்வழிபட்டொழுகும் = கருங்குவளைமலர்புரையும் கண்டத்தராகியகடவுளைத் தினமும் அருச்சித்துவரும். எ-று. ஆல் - அசை. (உ)

ஆனசெயலாற்றிருவானைக்காவென்றதற்குப்பெயராக
ஞானமுடையவொருசிலந்திநம்பர்செம்பொற்றிருமுடிமேற்
கானல்விரவுஞ்சருகுதிராவண்ணங்கலந்தவாய்நூலான்
மேனற்றிருமேற்கட்டியெனவிரிந்துசெறியப்புரிந்துளதால்.

(இ-ள்.) ஆனசெயலாற்றிருவானைக்காவென்றதற்குப்பெயராக = அங்ஙனம்வழிபடுதலால் திருவானைக்காவென்று அதற்குப்பெயருண்டாக; ஞானமுடையவொருசிலந்திநம்பர்செம்பொற்றிருமுடிமேல் = ஞானமுதிர்ந்த ஒருசிலந்தியானது நம்பெருமானுடைய செம்பொற்றிருமுடிமீது; கானல்விரவுஞ்சருகுதிராவண்ணம் = அக்காவிலுள்ளசருகு உதிராதபடி; மேனற்றிருமேற்கட்டியெனவிரிந்துசெறிய = மேலே திருமேற்கட்டிபோல விசாலமாகிச்செறிய; வாய்கலந்தநூலாற்புரிந்துளது = வாயிற்கலந்தநூலினாலே பின்னியது. எ-று. கானல் - காடு. (ங)

நன்றுமிழைத்தசிலம்பிவலைப்பரப்பைநாதனடிவணங்கச்
சென்றயானையநுசிதமென்றதனைச்சிதைக்கச்சிலம்பிதா
னின்றுகளிற்றின்கரஞ்சுலவிற்றென்றுமீளவிழைத்ததனை
யன்றுகழித்தபிற்றைநாளடல்வெள்ளானையழித்ததால்.

(இ-ள்.) சிலம்பிநன்றுமிழைத்தவலைப்பரப்பை = சிலந்தி நூலினாலே சிறக்கவமைத்தவலையின் பரப்பை; நாதனடிவணங்கச்சென்றயானை = சிவபிரானடிகளைவழிபடச் சென்றயானை; அநுசிதமென்றதனைச்சிதைக்க=அசுத்தமென்றுசிந்தித்து அதனை அழித்துவிட; சிலம்பியின்றுகளிற்றின்கரஞ்சுலவிற்றென்றுமீளவிழைத்ததனை =

அச்சிலம்பியானது இத்தினம் யானையின் துதிக்கை சிதைத்ததென்று பின்னரும் இழைத்ததை; அன்றுகழித்தபிற்றைநாளடல்வெள்ளானையழித்தது = அன்றுகழித்த மறுதினம் வலிய அவ்வெள்ளானை சிதைத்தது. எ-று.

நன்றும் என்பதிலுள்ள உம்மையும் தானும் ஆலும் அசைகள். அநுசிதம் - உசிதமல்லாதது. (௪)

எம்பிரான்றன்மேனியின்மேற்சருகுவிழாமையான்வருந்தி
யும்பரிழைத்தநூல்வலயமழிப்பதேயென்றுருத்தெழுந்து
வெம்பிச்சிலம்பிதுதிக்கைகயினிற்புக்குக்கடிப்பவேகத்தாற்
கும்பயானைகைநிலத்தின்மோதிக்குலைந்துவீழ்ந்ததால்.

(இ-ள்.) எம்பிரான்றன்மேனியின்மேற்சருகுவிழாமை = எம்பெருமான் திருமேனியின்மீது சருகுஉதிராமல்; யான்வருந்தியும்பரிழைத்தநூல்வலயமழிப்பதேயென்று = யான்வருத்தமுற்று மேலேபின்னிய நூற்பரப்பை அழிக்கலாமோவென்று; உருத்தெழுந்துவெம்பிச்சிலம்பி = சீறியெழுந்து மனம்புழுங்கிச் சிலம்பியானது; துதிக்கையினிற்புக்குக்கடிப்பவேகத்தால் = யானையின் துளைக்கையிற் புகுந்து கடிக்க அதன்கொடுமையினால்; கும்பயானைகைநிலத்தின்மோதிக்குலைந்துவீழ்ந்தது = மத்தகத்தையுடைய யானை கையை நிலத்திலேயடித்துக்கொண்டு நிலைகுலைந்து வீழ்ந்தது. எ-று. ஏகாரம்—வினாவின் கணின்ற எதிர்மறை. ஆல்-அசை. (௫)

தறையிற்புடைப்பக்கைபுக்கசிலம்பிதானுமுயிர்நீங்க
மறையிற்பொருளுந்தருமாற்றான்மதயானைக்கும்வரங்கொடுத்து
முறையிற்சிலம்பிதனைச்சோழர்குலத்துவந்துமுன்னுதித்து
நிறையிற்புவனங்காத்தளிக்கவருள்செய்தருளநிலத்தின்கண்.

(இ-ள்.) தறையிற்புடைப்பக்கைபுக்கசிலம்பியுமுயிர்நீங்க = பூமியிலே மோதலும் துளைக்கையிலே புக்கசிலம்பியும் உயிர்விட; மறையிற்பொருளும் = வேதப்பொருளாகிய விமலரும்; தருமாற்றான்மதயானைக்கும்வரங்கொடுத்து = வழக்குக்கிரமப்படி மதயானைக்கும் வரமளித்து; முறையினிலத்தின்கண்முன்சோழர்குலத்துவந்துதித்து = நியமப்படி நிலத்திலே முன்னர்ச் சோழகுலத்தில்வந்துதித்து; நிறையிற்புவனங்காத்தளிக்கச்சிலம்பிதனையருள்செய்தருள = முறையால் உலகைப்புரக்கும்படி சிலந்திக்குத் திருவருள்பாலிக்க. எ-று.

திருக்கைலையில்வதியுங் கணத்தவருள்ளே மாலியவான் புட்பதந்தனென்னும் இருவரும், இறைவர்திருத்தொண்டில் ஒருவரினொருவர் சிறத்தலாற் பொறாமையுற்றுப் பகைகொண்டு, ஓரிடத்திற் சந்தித்துச்சினக்குங்கால், மாலியவான் புட்பதந்தனை யானையாகெனச்சபிக்க; அவன் மாலியவானைச் சிலந்தியாகெனச் சபித்தனன். இருவரும் இறைவனையடைந்து முறையிட்டு, அக்கடவுளருளியவாறு இத்தலத்துதித்து, இங்ஙனம் வழிபட்டு உயிர்துறக்க; இறைவர்காட்சிதந்து, புட்பதந்தனுக்குச் சிவபதநல்கி, மாலியவான்பால் முந்திச்சபித்தகுற்றம் உடைமையின், பின்னர்ச் சிவபதமளிக்கும் திருவுள்ளத்தால் முன்னர்ச் சோழகுலத்துதிக்கத் திருவருள்புரிந்தாராகலின், "தருமாற்றான் மதயானைக்கும்வரங்கொடுத்துச் சிலம்பிதனைச் சோழர்குலத்து முன்னுதித்துப் புவனங்காத்தளிக்க வருள்செய்தருள" என்றுரைக்க. தான் அசை. சிலம்பிதனை-வேற்றுமைமயக்கம். நிறை-செங்கோல். (௬)

வேறு.

தொன்மைதருசோழர்குலத்தரசனுஞ்சுபதேவன்
றன்னுடையபெருந்தேவிகமலவதியுடன்சார்ந்து
மன்னுபுகழ்த்திருத்தில்லைமன்றுடுமலர்ப்பாதஞ்
சென்னியுறப்பணிந்தேத்தித்திருப்படிக்கீழ்வழிபடுநாள்.

(இ-ள்.) தொன்மைதருசோழர்குலத்தரசனுஞ்சுபதேவன் = தொன்றுதொட்டு வந்த சோழகுலாதிபராகிய சுபதேவரென்பவர் (புத்திரப்பேற்றைவிரும்பி); தன்னுடைய பெருந்தேவிகமலவதியுடன்சார்ந்து = தன்னுடைய பெரியமனைவியாகிய கமலவதியோடு அணுகி; மன்னுபுகழ்த்திருத்தில்லை = நிலைபெற்ற கீர்த்தியையுடைய சிதம்பரத்திலே; மன்றுடுமலர்ப்பாதம் = சிற்சபையிலே நடித்தருளும் செந்தாமரை மலர்போலும் திருவடிகளை; சென்னியுறப்பணிந்தேத்தி = சிரம்பொருந்தவணங்கித் துதித்து; திருப்படிக்கீழ்வழிபடுநாள் = திருவணுக்கன் திருவாயிற்படியின்கீழ்த் தினமும் வழிபட்டுவரும் நாளிலே. எ-று.

அணுக்கம் அணுக்கனென்றாயதுபோலி. அணுக்கம்-சமீபம். (எ)

மக்கட்பேறின்மையினன்மாதேவியார்தமக்குச்
செக்கர்நெடுஞ்சடைக்கூத்தர்திருவுள்ளஞ்செய்தலினால்
மிக்கதிருப்பணிசெய்தசிலம்பிகுலவேந்துமகி
ழக்கமலவதிவயிற்றினணிமகவாய்வந்தடைய.

(இ-ள்.) மக்கட்பேறின்மையினன்மாதேவியார்தமக்கு = புத்திரப்பேறின்மையால் (வரங்கிடந்த) கமலவதியாருக்கு; செக்கர்நெடுஞ்சடைக்கூத்தர்திருவுள்ளஞ்செய்தலினால் = செவ்வானம்போலும் நெடுஞ்சடையையுடைய சிற்சபேசர் திருவருள்பாலித்தமையால்; மிக்கதிருப்பணிசெய்தசிலம்பி = சிறந்ததிருப்பணிசெய்த அச்சிலந்தியானது; குலவேந்துமகிழக்கமலவதிவயிற்றினணிமகவாய்வந்தடைய = அவ்வரசர்விரும்பிய அக்கமலவதி திருவயிற்றிலே அழகியகுழந்தையாகிவந்தணுக. எ-று.

வேறு.

கழையார்தோளிகமலவதிதன்பாற்கருப்பநாணிரம்பி
விழைவார்மகவுபெறவடுத்தவேலையதனிற்காலமுணர்
பழையாரொருநாழிகைகழித்துப்பிறக்குமேலிப்பசுங்குழவி
யுழையார்புவனமொருமூன்றுமளிக்குமென்னவொள்ளிழையார்.

(இ-ள்.) கழையார்தோளிகமலவதிதன்பால் = மூங்கில்போலும் தோள்களையுடையவளாகிய கமலவதியினிடத்தே; கருப்பநாணிரம்பி = கருப்பகாலம் பூர்த்தியாகி; விழைவார்மகவுபெறவடுத்தவேலையதனில் = விருப்பமிரம்பிய குழந்தையைப் பெறுதற்குரிய சமயத்திலே; காலமுணர்பழையார் = காலநிலைமையையறிந்த சோதிடர்கள்; இப்பசுங்குழவியொருநாழிகைகழித்துப்பிறக்குமேல் = இக்குழந்தை ஒருநாழிகைநீங்கிப் பிறக்குமாயின்; உழையார்புவனமொருமூன்றுமளிக்குமென்ன = அகன்றமூவுலகங்களையும் புரக்குமென்று அறைய; ஒள்ளிழையார் = அழகிய ஆபரணத்தையணிந்த அக்கமலவதியென்பவள். எ-று.

நெடுநாள்அருந்தவம் புரிந்து பெறுதலின்விழைவார்மகவென்றார். உழை-இடம்.

பிறவாதொருநாழிகைகழித்தென்பிள்ளைபிறக்கும்பரிசென்கா
லுறவார்த்தெடுத்துத்தூக்குமெனவுற்றசெயன்மற்றதுமுற்றி
யறவாணர்கள்சொல்லியகாலமணையப்பிணிவிட்டருமணியை [ள்
யிறவாதொழிவாள்பெற்றெடுத்தென்கோச்செங்கண்ணனேயென்று

(இ-ள்.) பிறவாதொருநாழிகைகழித்தென்பிள்ளைபிறக்கும்பரிசு = இப்பொழுது பிறவாமல் ஒருநாழிகைநீங்கி என்குழந்தையுதிக்கும்படி; என்காலுறவார்த்தெடுத்துத்தூக்குமென = என்கால்களைப்பொருந்தப்பிணித்து எடுத்துத்தூக்கிவிடுமென்றுகூறலும்; உற்றசெயலதுமுற்றி = பொருத்தமாகிய அச்செயலைப்புரிந்து; அறவாணர்கள்சொல்லியகாலமணையப்பிணிவிட்டு = கணிதர்கள்கூறிய காலம்வருதலும் கட்டைவிடுவிக்க; இறவாதொழிவாள் = இங்ஙனம் தலைகீழாகத்தூக்கியவழியும் இறவாதிருந்த அக்கமலவதி; அருமணியைப்பெற்றெடுத்து = அரிய அரதனம்போலும் குழந்தையைப்பெற்றுக் கரத்திலேந்தி; என்கோச்செங்கண்ணனேயென்றாள் = எனது கோச்செங்கண்ணனேயென்று கூறினாள். எ-று. மற்று அசை.

விடுவிக்கவென்னும் பிறவினையெச்சம் விட்டெனத் தன்வினையெச்சமாய்த் திரிந்தது. காலந்தாழ்க்க உதித்தமையால் கண்கள்சிவப்பேறினமைகண்டு, "கோச்செங்கண்ணனே"என ஆர்வமேலீட்டால் அன்னையாருரைத்தஅப்பெயரேபெயராயிற்று.

தேவிபுதல்வற்பெற்றிறக்கச்செங்கோற்சோழன்சுபதேவ
னாவியனையவரும்புதல்வன்றன்னைவளர்த்தங்கணிமகுட
மேவுமுரிமைமுடிகவித்துத்தானும்விரும்புபெருந்தவத்தின்
றாவினெறியைச்சென்றடைந்துதலைவர்சிவலோகஞ்சார்ந்தான்.

(இ-ள்.) தேவிபுதல்வற்பெற்றிறக்க - மனைவி புதல்வனைப்பெற்றுத்தேகவியோகமடைய; செங்கோற்சுபதேவசோழன் = செங்கோலையுடைய சுபதேவனென்னும் சோழர்; ஆவியனையவரும்புதல்வன்றன்னைவளர்த்து = தம்முயிர்போலும் அரியதனயனைவளர்த்து; அணிமகுடமேவுமுரிமைமுடிகவித்து = அழகிய கிரீடத்தை அணிதற்குரிய சிரசிலணிந்து; தானும்விரும்புதாவில்பெருந்தவத்தினெறியைச்சென்றடைந்து = தாமும் காதலிக்கத்தக்க அழிவற்ற பெருமைபெற்ற தவநெறியைச்சார்ந்தடைந்து; தலைவர்சிவலோகஞ்சார்ந்தான் = சிவபெருமானுடைய சிவலோகத்தைச் சேர்ந்தார். எ-று.

அங்கு-அசை. உரியபருவத்தே புதல்வர்க்கு முடிசூட்டித் தவநெறியைமேற்கோடல் அரசநீதியாகலின், அந்நீதித் தாதைமுதலியோர்போன்று தாமும் மேற்கொண்டனரென்பார், "தானுந்தவநெறியைச்சென்றடைந்து."என்றார். இதில் உம்மை இறந்தது தழீஇயது. (௧௧)

கோதைவேலார்கோச்செங்கட்சோழர்தாமிக்குவலயத்தி
லாதிமூர்த்தியருளான்முன்னறிந்துபிறந்துமண்ணாள்வார்
பூதநாதன்றான்மகிழ்ந்துபொருந்தும்பெருந்தண்சிவாலயங்கள்
காதலோடும்பலவெடுக்குந்தொண்டுபுரியுங்கடன்பூண்டார்.

(இ-ள்.) ஆதிமூர்த்தியருளான்முன்னறிந்துபிறந்துமண்ணாள்வார் = இறைவர் திருவருளினாற் பூர்வசன்மவுணர்ச்சியோடுதித்து இவ்வுலகுபுரப்பாராகிய; கோதைவேலார்கோச்செங்கட்சோழரிக்குவலயத்தில் = வெற்றிமாலையையணிந்த வேற்ப

டையையுடைய கோச்செங்கட்சோழநாயனார் இப்பூமியிலே; பூதநாதன்றான்மகிழ்ந்துபொருந்தும் = பூதகணத்தலைவராகிய அப்பெருமான் தாம் காதலித்தமரும்; பெருந்தண்சிவாலயங்கள்பல = பெருமையும் குளிர்மையும்பெற்ற சிவாலயங்கள் பலவற்றை; காதலோடுமெடுக்குந்தொண்டு = ஆராமையோடும் அமைக்குந்திருத்தொண்டை; புரியுங்கடன்பூண்டார் = இயற்றும்முறைமையை மேற்கொண்டார். எ-று. தாம் அசை. (௧௨)

ஆனைக்காவிற்றான்முன்னமருள்பெற்றதனையறிந்தங்கு
மானைத்தரித்ததிருக்கரத்தார்மகிழுங்கோயில்செய்கின்றார்
ஞானச்சார்வாம்வெண்ணாவலுடனேகூடநலஞ்சிறக்கப்
பானற்களத்துத்தம்பெருமானமருங்கோயிற்பணிசமைத்தார்.

(இ-ள்.) முன்னமானைக்காவிற்றாமருள்பெற்றதனையறிந்து = முன்பு திருவானைக்காவிலே தாம் அருள்பெற்றதையுணர்ந்து; அங்குமானைத்தரித்ததிருக்கரத்தார்மகிழும் = அத்தலத்திலே மானையேந்திய திருக்கரத்தையுடைய அமலர் காதலிக்கும்; கோயில்செய்கின்றார் = ஆலயத்தை அமைப்பாராகிய அந்நாயனார்; ஞானச்சார்வாம்வெண்ணாவலுடனேகூட = ஞானசம்பந்தமாகிய வெண்ணாவன்மரத்தோடுபொருந்த; பானற்களத்துத்தம்பெருமானமருங்கோயிற்பணிநலஞ்சிறக்கச்சமைத்தார் = அப்பெருமானமரும் ஆலயப்பணியை அதிவிசித்திரந்திகழ அமைத்தார். எ-று.

இத்தலத்தோங்கிய வெண்ணாவல் வனத்திலே மிகுதவம்புரியும் சம்புமுனிவரொருநாள் நாவற்கனிவீழ; அது தாம்கண்டறியாத தெய்வக்கனியாக இருந்தமையின், கைக்கொண்டுதிருக் கைலையையடைந்து அதனையுண்டருளப் பெருமானைப்பிரார்த்தித்து, அக்கடவுளுண்டுமிழ்ந்த அப்புனித வித்தினைத் தாம் உண்ணலும், அது நினையுமுன்முளைத்து, சிரத்தின்வழிவெளிப்பட்டு, வேதங்களை மூலமாகவும், உபநிடதங்களை பராரையாகவும், ஆகமங்களை பணைகளாகவும், சரியைகிரியை யோகங்களை கிளை வளார் பூங்கொத்துக்களாகவும், ஐவகை ஞானங்களை அரும்பு மலர் காய்கனி கனிரசங்களாகவும் தழைத்து, அண்டமுகட்டையளாவி, எவர்க்கும் மலபரிபாகம் வருவித்து விளங்கிற்று, அம்முனிவர்வியந்து, அந்நீழலில், தாமேயன்றிப் பற்பலமுனிவரும் அருந்தவம் புரியப்பெற்றுச் சின்னாள்வசித்து, ஒருநாள் பெருமானைப்பணிந்து, அந்நீழலில் என்றும் அகலாதமர்ந்தருளப்பிரார்த்திக்க; பெருமான் அவரை அக்கனிகிடைத்த இந்த ஞானக்ஷேத்திர எல்லையினெய்தித் தவம்புரிந்திருக்கப்பணித்துத் தாமும் ஞானமயமாகிய அதனடியில்சாந்நித்தியராக விளங்குகின்றாராகலின் "ஞானச்சார்வாம் வெண்ணாவல்" என்றும்; இந்நாயனார் ஆலயம் அமைக்கத்துணிந்தவழி, அமலர் அடியவருருவாய்ச்சொப்பனத்தே தோன்றி, ஈண்டுநம்மைவழிபட்டு நிருமிதத்தொழிற்றலைமைபெற்ற தேவதச்சனால் முன்னரே நமக்குச்சாத்துதற்பொருட்டு கெண்டைமலைச்சாரலில் ஒரு அரிய விமானமமைத்து நாமருளியபடியே ஆங்குள்ள கெண்டைநதியிலே இடப்பட்டிருக்கின்றது; நீசென்று, அங்கே கோடியுருத்திராற்பூசிக்கப்பட்டு விளங்கும் அண்ணலைப்பணிந்து, அவர்கட்டளைப்படியேகொணர்ந்து சாத்துகவெனப்பணித்தலும், விழித்தெழுந்து, திருவருளைத்துதித்து, ஆங்குச்சென்று பணிந்து, அவ்விறைவரநுக்கிரகித்தபடியே, அவ்விமானத்தையெடுத்து கொக்கி அதிவியப்புற்று, அந்நதியிலிட்டு ஈங்கடைந்து, காவிரிநதியிலெழப்பெற்று, அதனைப் பெருமானுக்குச்சாத்தி, அதிவிசித்திரமாக ஆலயமுமமைத்தாராகலின், "கோயிற்பணிநலஞ்சிறக்கச்சமைத்தார்" என்றும், அத்தலமான்மியம் விளங்க விதந்தருளினாரென்க. பானற்களத்துத்தம்பெருமானமருங்கோயிற்பணியென்பது அதுவென்னுஞ்சுட்டளவாய் நின்றது. பானல் - கருங்குவளைமலர். (௧௩)

மந்திரிகடமையேவிவள்ளல்கொடையனபாயன்
முந்தைவருங்குலமுதலோராயமுதற்செங்கணா
ரந்தமில்சீர்ச்சோணாட்டிலகாடுதொறுமணியார்
சந்திரசேகரனமருந்தானங்கள்பலசமைத்தார்.

(இ-ள்.) கொடையனபாயவள்ளல்முந்தைவருங்குலமுதலோராய — ஈகையில் மிக்க அநபாய சோழவள்ளலுக்கு முந்தியகுலாதிபராகிய; முதற்செங்கணார்மந்திரி கடமையேவி — தலைமைபெற்றகோச்செங்கட்சோழநாயனார் மந்திரிகளை விடுத்து; அந்தமில்சீர்ச்சோணாட்டிலகாடுதொறும் — அளவிலாக்கீர்த்தியமைந்த சோழநாட்டிலே அதன் உள்ளிடந்தோறும்; சந்திரசேகரனமரும் — சந்திரசடாதாரராகிய சம்பு வீற்றிருக்கும்; அணியார்தானங்கள்பலசமைத்தார் — அழகார்ந்த ஆலயங்கள் பல கட்டுவித்தார். எ-று. காட்டினகமென்பது அககாடென்றாயது இலக்கணப்போலி. ()

அக்கோயிறொறுஞ்சிவனுக்கமுதுபடிமுதலான
மிக்கபெருஞ்செல்வங்கள்விருப்பினான்மிகவமைத்துத்
திக்கனைத்துந்தஞ்செங்கோன்முறைநிறுத்தித்தேர்வேந்தர்
முக்கண்முதனடமாடுமுதற்றில்லைமுன்னினார்.

(இ-ள்.) தேர்வேந்தரக்கோயிறொறும் — தேர்ப்படையையுடைய அந்நாயனார் அவ்வாலயங்கடோறும்; சிவனுக்கமுதுபடிமுதலானமிக்கபெருஞ்செல்வங்கள் — சிவ பெருமானுக்கு அமுதுபடிமுதலாகிய சிறந்தபெரிய செல்வங்களை; விருப்பினான்மிகவமைத்து — விருப்பத்தினால் மிகவும் ஏற்படுத்தி; திக்கனைத்துந்தஞ்செங்கோன்முறைநிறுத்தி — திக்குமுழுமையும் தமது செங்கோலைக் கிரமமாக நிலைபெறுவித்து; முக்கண்முதனடமாடுமுதற்றில்லைமுன்னினார் — மூன்று நேத்திரங்களையுடைய முதற்கடவுள் திருநிருத்தஞ்செய்தருளும் தலைமைபெற்ற சிதம்பரத்தைச்சார்ந்தார். எ-று

திருவார்ந்தசெம்பொன்னினம்பலத்தேநடஞ்செய்யும்
பெருமானையடிவணங்கிப்பேரன்புதலைசிறப்ப
வுருகாநின்றுளங்களிப்பத்தொழுதேத்தியுறையுநாள்
வருவாய்மைமறையவர்க்குமாளிகைகள்பலசமைத்தார்.

(இ-ள்.) திருவார்ந்தசெம்பொன்னினம்பலத்தேநடஞ்செய்யும் — சிறப்புமிக்க செம்பொனம்பலத்தே திருநிருத்தமியற்றியருளும்; பெருமானையடிவணங்கி — சிவ பெருமானைத்திருவடிகளில்வணங்கி; பேரன்புதலைசிறப்பவுருகாநின்று — பேரன்பு அதிகரிக்கஉருகி; உளங்களிப்பத்தொழுதேத்தியுறையுநாள் — மனமகிழவணங்கித் துதித்து வசிக்குந்நாளில்; வருவாய்மைமறையவர்க்கு — வராநின்றசத்தியத்தை யுடைய தில்லைவாழந்தணர்களுக்கு; மாளிகைகள் பலசமைத்தார் — திருமாளிகைகள்பல கட்டுவித்தார். எ-று. (கூ)

தேவர்பிரான்றிருத்தொண்டிற்கோச்செங்கட்செம்பியர்கோன்
பூவலயம்பொதுநீக்கியாண்டருளிப்புவனியின்மே
லேவியநற்றொண்டுபுரிந்திமையவர்களடிபோற்ற
மேவினார்திருத்தில்லைவேந்தர்திருவடிநீழற்கீழ்.

(இ-ள்) கோச்செங்கட்செம்பியர்கோன் = கோச்செங்கட்சோழநாயனார்; தேவர்பிரான்றிருத்தொண்டில் = தேவநாயகராகிய சிவபிரான்றிருத்தொண்டோடு; பூவலயம்பொதுநீக்கியாண்டருளி = பூமிமுழுமையும் தமக்குரிமையாகக்கொண்டு புரந்தருளி; புவனியின்மேலேவியநற்றொண்டுபுரிந்து = உலகத்திலே அப்பெருமான் திருவருளாலேவிய அரியதிருத்தொண்டுகளையுமியற்றி; அடியிமையவர்கள்போற்ற = தம்முடைய திருவடிகளைத் தேவரெல்லாம் வழிபடும்படி; திருத்தில்லைவேந்தர்திருவடிநிழற்கீழ்மேவினார் = சிதம்பரத்தில் வீற்றிருக்கும் சிற்சபாநாயகர் திருவடிநீழலின்கீழ் அடைந்தார். எ-று.

பொதுநீக்கல் - யாவர்க்கும்பொதுவாகாது தமக்கே உரிமையாகக்கோடல். இறைவர் இயக்கியவழியன்றி யாதொருசெயலும் நிகழாமையின், "ஏவியநற்றொண்டு." என்றும், சிவபதம்பெற்றோர் தேவரெலாம்வணங்கத்தக்காராகலின், "இமையவர்களடிபோற்றத்திருவடிக்கீழ்மேவினார்" என்றும் விதந்தாரென்க. (௪௭)

வேறு.

கருநீலமிடற்றார்செய்யகழலடிநீழல்சேர
வருநீர்மையுடையசெங்கட்சோழர்தமலர்த்தாள்வாழ்த்தித்
தருநீர்மையோசையாழின்றலைவராயுலகமேத்துந்
திருநீலகண்டப்பாணர்திறமினிச்செப்பலுற்றேன்.

(இ-ள்.) கருநீலமிடற்றார் = கரியநீலகண்டத்தாராகியகடவுளின்; செய்யகழலடிநீழல்சேரவருநீர்மையுடைய = சிவந்த திருவடிநீழலையடைய அவதரித்த சீர்மையையுடைய; செங்கட்சோழர்தமலர்த்தாள்வாழ்த்தி = கோச்செங்கட்சோழநாயனாரின் மலர்போலுந் திருவடிகளைப் புகழ்ந்து; நீர்மைதருமோசையாழின்றலைவராய் = இனிமை தங்கிய இசையையுடைய யாழிற்குத்தலைவராகி; உலகமேத்துந்திருநீலகண்டப்பாணர்திறம் = உயர்ந்தோராற்றுதிக்கப்பெற்ற திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார் திருத்தொண்டை; இனிச்செப்பலுற்றேன் = இனி இசைக்கலுற்றேன். எ-று.

பூர்வசன்மத்திற் சிலந்தியாய்வழிபட்ட புண்ணியப்பேற்றால் சிவபதம் பெறுவான் அவதரித்தமையின் "கழலடிநீழல்சேரவருநீர்மையுடையசெங்கட்சோழர்" என்றாரென்க. திருவடிநீழல் சேர்தற்கு உரிமைபெறவளரும் நீர்மை என்னலும் ஒன்று. (௪௮)

கோச்செங்கட்சோழநாயனார்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆகத்திருவிருத்தம் - ௧௦௬௦.

---

# திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்புராணம்.

எருக்கத்தம்புலியூர்மன்னிவாழ்பவரிறைவன்றன்சீர்
திருத்தகும்யாழிலிட்டுப்பரவுவார்செழுஞ்சோணாட்டில்
விருப்புறுதானமெல்லாம்பணிந்துபோய்விளங்குகூடற்
பருப்பதச்சிலையார்மன்னுமாலவாய்பணியச்சென்றார்.

(இ-ள்.) எருக்கத்தம்புலியூர்மன்னிவாழ்பவர் = திருஎருக்கத்தம்புலியூரிலே செ ல்வுற்றுவாழ்பவர்; இறைவன்றன்சீர்திருத்தகும்யாழிலிட்டுப்பாவுவார் = எம்பெரு மான்கருணைத்திறத்தைச் சிறப்புமிக்க யாழிலேதொடுத்துப் பாடுவார்; செழுஞ்சோ ணாட்டில்விருப்புறுதானமெல்லாம்பணிந்துபோய் = செழித்தசோழதேசத்திலே விரு ம்பியசிவதலங்கள்முற்றும் வணங்கிச்சென்று; விளங்குகூடல் = பிரகாசம்பெற்ற ம துரையிலே; பருப்பதச்சிலையார்மன்னுமாலவாய்பணியச்சென்றார் = மேருமலையை வில்லாகவுடைய விமலர் வீற்றிருக்கும் திருவாலவாயைத்தொழுதற்குச் சேர்ந்தார்.

ஆலவாயமர்ந்தார்கோயில்வாயிலையடைந்துநின்று
பாலையீரேழுகோத்தபண்ணினிற்கருவிவீக்கிக்
காலமாதரித்தபண்ணிற்கைபலமுறையுமாராய்ந்
தேலவார்குழலாள்பாகர்பாணிகள்யாழிலிட்டார்.




(இ-ள்.) ஆலவாயமர்ந்தார்கோயில்வாயிலையடைந்துநின்று = திருவ[illegible]யின் கண்ணே எழுந்தருளிவிளங்கும் சோமசுந்தரக்கடவுளின் திருக்கோயிற்றிரு[illegible]லை அணுகிநின்று; பாலையீரேழுகோத்தபண்ணினிற்கருவிவீக்கி = பாலையாய்நின்ற [illegible] ஞற்கோவையினிறுவிய பண்ணின்வழி நரம்புகளைப்பிணித்து; கைபலமுறையுமாரா ய்ந்து = அந்நரம்புகளைக் கைகளாற் றடவிப்பார்த்தலாதியவற்றைப்பலமுறையினும் சோதித்துப் (பின்பு); ஏலவார்குழலாள்பாகர்பாணிகள் = தகரம்பூட்டிய நீண்ட கூந்தலையுடைய அம்பிகைபாகராகிய அண்ணலார்க்குரிய இசைப்பாட்டுக்களை; கால மாதரித்தபண்ணில்யாழிலிட்டார் = காலத்திற்கியைந்த பண்ணொடுகலந்து யாழிலிட்டு வாசித்தார். எ-று.

பாலை "ஆயஞ் சதுரந் திரிகோணம் வட்டமெனப் - பாய நான்கும் பாலை யா கும்" என்ற சூத்திரப்படி ஆயப்பாலை சதுரப்பாலை திரிகோணப்பாலை வட்டப்பாலை யென நான்குவகைப்படுதலும், அவற்றுள் வட்டப்பாலையிலே பாலையாழ் குறிஞ்சி யாழ் மருதயாழ் நெய்தல்யாழ் என்னும் நான்குபண்களும் பிறத்தலும், இப்பாலையா முன்னே செம்பாலை படுமலைப்பாலை செவ்வழிப்பாலை அரும்பாலை கோடிப்பாலை விளரிப்பாலை மேற்செம்பாலை யென்னும் ஏழுபாலையிசைகளும் பிறத்தலும், இவை வலமுறைத்திரிபு இடமுறைத்திரிபு என இருதிறப்படுதலும், இடமுறைத்திரிபா ற்போந்த ஏழுபெரும்பாலையினையும் முதலடுத்து நூற்றுமூன்றுபண்கள் பிறத்தலும், இங்ஙனமே வலமுறைத்திரிபுப்பாலைகளும் பலதிறப்படுதலும், மற்றை மூன்றிய ஆயப்பாலை சதுரப்பாலை திரிகோணப்பாலையென்பனவைகளும் அங்ஙனமே பலவகை ப்படுதலும், பிறவும்நோக்கிக், கலைத்தொழில்களெட்டினுள்ளே, பாடநினைத்த பண் ணுக்கு இணை கிளை பகை நட்பான நரம்புகள் பெயருந்தன்மை மாத்திரையறிந்து வீக்குதலாகிய பண்ணலென்னுந்தொழிலை இயற்றினனென்பார். "பாலையீரேழுகோ த்த பண்ணினிற்கருவிவீக்கி" என்றும், அவ்வீக்கினநரம்பை அகவிரலாலும் புறவிர லாலும் கரணஞ்செய்து தடவிப்பார்த்தலாகிய பரிவட்டனையும், ஆரோகண அவ ரோகணவகையால் இசையைத்தெரிதலாகிய ஆராய்தலும், அநுசுருதி யேற்றலா கிய தைவரலும், ஆகிய நான்கனோடு, வார்தல் முதலிய எண்வகையிசைக்கரணங்க ளும் யாழ்வியற்றிநோக்கினனென்பார் "கைபலமுறையுமாராய்ந்து" என்றும், ஆளத் தியிலே நிரம்பப்பாடுதலாகிய செலவும், பாடநினைந்தவண்ணத்திற் சந்தத்தை விடு தலாகிய விளையாட்டும், வண்ணத்திற்செய்தபாடலெல்லாம் இன்பமாகப்பாடலாகிய கையூழும் குடகச்செலவும் அள்ளற்செலவும் பாடுதலான குறும்போக்கும், ஆகிய

வினைக் கலைத்தொழில் நான்கும் அமையவும், மிடற்றின்கண் எடுத்தல் படுத்தல் நலிதல் கம்பிதம் குடிலமென்னும் ஐந்தும் நிகழவும், இறைவர்க்குரிய இசைப்பாட்டுக்களைக் காலத்திற்கியைந்த பண்ணோடுகலந்து பாடினரென்பார் "ஏலவார்குழலாள்.பாகர் பாணிகள் காலமாதரித்தபண்ணில் யாழிலிட்டார்". என்றும் கூறினார்.

பாலையீரேழுகோத்தபண்ணென்றது—ஆயப்பாலையாய்நின்ற பதினாற்கோவையினிறுவிய செம்பாலைமுதலிய ஏழுபாலையினையும் என்பர்; "ஈரேழ்தொடுத்த செம்முறைக்கேள்வியி — னோரேழ்பாலை நிறுத்தல்வேண்டி — வலியக்கோத்த புலமையோன்" எனச் சிலப்பதிகாரநூலாரும் அரங்கேற்றுக்காதையில் யாழாசிரியனமைதியினுரைத்தாராகலின். இசைக்கரணம் எட்டாவன:—சுட்டுவிரலாற் றெறிதல்செய்தலாகிய வார்தலும், சுட்டுவிரலும் பெருவிரலுங்கூட்டி நரம்பை அகமும் புறமும் ஆராய்தலாகிய வடித்தலும், நரம்புகளைத்தெறித்து வலிவிற்பட்டதும் மெலிவிற்பட்டதும்நிரல்பட்டதும் அறிதலாகிய உந்தலும்,ஒன்றிடையிட்டும் இரண்டிடையிட்டும், நரம்புகளைத்தெறித்தலாகிய உறழ்தலும், இடக்கைச் சுட்டுவிரலுருட்டலும், வலக்கைச்சுட்டுவிரலுருட்டலும், சுட்டொடுபெருவிரற்கூட்டியுருட்டலும், இருபெருவிரலும் இயைந்துடனுருட்டலுமாகிய உருட்டலும்,திருந்தியநரம்பை மிகவுந்தொட்டுத்திருகிவிடுத்தலாகிய தெருட்டலும்,சுட்டுவிரலாலும் பெருவிரலாலும் அள்ளுதலாகிய அள்ளலும், நரம்புமுற்றும் விளிமுறையாற்பற்றி எழுப்புதலாகிய பட்டடையுமாம். ஈண்டுக்கூறியவற்றின்விரிவைக் கூர்மபுராணம்கண்ணன்மணம்புணர்ந்தவத்தியாயத்தும், சிலப்பதிகாரத்திலே, கானல்வரி, வேனிற்காதை, ஆய்ச்சியர் குரவை முதலியவற்றினும் உணர்க. (௨)

மற்றவர்கருவிப்பாடன்மதுரைநீடாலவாயிற்
கொற்றவன்றிருவுள்ளத்துக்கொண்டுதன்றொண்டர்க்கெல்லா
மற்றைநாட்கனவிலேவவருட்பெரும்பாணனாரைத்
தெற்றினார்புரங்கள்செற்றார்திருமுன்புகொண்டுபுக்கார்.

(இ-ள்.) அவர்கருவிப்பாடல்=அந்நாயனாருடைய யாழ்க்கருவியின் இசையோடு கூடியபாடலை; மதுரைநீடாலவாயில் = மதுரையிலே மேம்பட்டதிருவாலவாயின்கண் வதிந்தருளும்; கொற்றவன்றிருவுள்ளத்துக்கொண்டு=சிவபெருமான் திருவுள்ளத்திலே கொண்டருளி; தன்றொண்டர்க்கெல்லாம் = தம்முடையதிருத்தொண்டர்களுக்கெல்லாம்; அற்றைநாட்கனவிலேவ = அன்றையதினம் சொப்பனத்திலே (தோன்றி அவரைச் சந்நிதியிலே அழைத்துப்பாடுவிக்கும்படி) கட்டளையிட; அருட்பெரும்பாணனாரை = (அவர்கள்) திருவருட்பெருமைவாய்ந்த அப்பாணநாயனாரை; தெற்றினார்புரங்கள்செற்றார்திருமுன்பு கொண்டுபுக்கார் = பகைவர்முப்புரங்களையழித்த பரமர்சந்நிதிமுன்பு கொண்டணைந்தார். எ-று. மற்று-அசை. (௩)

அன்பர்கள்கொண்டுபுக்கபொழுதினிலரிவைபாகன்
றன்பெரும்பணியாமென்றுதமக்குமெய்யுணர்தலாலே
மன்பெரும்பாணனருமாமறைபாடவல்லார்
முன்பிருந்தியாழிற்கூடன்முதல்வரைப்பாடுகின்றார்.

(இ-ள்.) மன்பெரும்பாணனாரும் = நிலைபெற்றபெருமையையுடைய யாழ்ப்பாணநாயனாரும்; அன்பர்கள்கொண்டுபுக்கபொழுதினில் = அடியவர்கள் அழைத்துச்சென்றகாலையில்; அரிவைபாகன்றன்பெரும்பணியாமென்றுதமக்குமெய்யுணர்தலாலே = இது உமாபதியினுடைய கட்டளையாகுமென்று தமக்கு உண்மையாகவிள

ங்குதலால்; மாமறைபாடவல்லார் முன்பிருந்து = பெருமைவாய்ந்தவேதகீதத்தைப் பாடவல்லவராகிய விமலர்திருமுன்பு வதிந்து; யாழிற்கூடன்முதல்வரைப்பாடுகின்றார் = யாழ்க்கருவிகொண்டு ஆலவாயிலமரும் கடவுளைப்பாடுவோராயினார். எ-று.

அரிவைபாகர் கட்டளையிடாதவழிவாயிலின்நின்றே பாடுமியல்பராதலின் "அரிவைபாகன்பணியாமென்றுமெய்யுணர்தலால் முன்பிருந்துபாடுகின்றார்" என்றார். (௮)

திரிபுரமெரித்தவாறுந்தேர்மிசைநின்றவாறுங்
கரியினையுரித்தவாறுங்காமனைக்காய்ந்தவாறு
மரியயற்கரியவாறுமடியவர்க்கெளியவாறும்
பரிவினாற்பாடக்கேட்டபரமனாருளினாலே.

(இ - ள்.) திரிபுரமெரித்தவாறும் = திரிபுரத்தை நீறாக்கியசெய்கையும்; தேர்மிசைநின்றவாறும் = அப்பொழுது தேரின்மீது நின்றருளியதன்மையும்; கரியினையுரித்தவாறும் = யானையையுரித்த இயல்பும்; காமனைக்காய்ந்தவாறும் = மன்மதனையழித்தவகையும்; அரியயற்கரியவாறும் = அச்சுதமூர்த்திக்கும் பிரமதேவர்க்கும் காணுதற்கரிய நிலைமையும்; அடியவர்க்கெளியவாறும் = அடியவர்க்கெளியராய்விளங்கும் அமைதியும்; பரிவினாற்பாடக்கேட்டபரமனாருளினால் = அன்பினாலேபாடத் திருச்செவியேற்ற அமலர் பாலித்த திருவருளினால். எ - று. ஏ. அசை. (௯)

அந்தரத்தெழுந்தவோசையன்பினிற்பாணர்பாடுஞ்
சந்தயாழ்தரையிற்சீதந்தாக்கில்வீக்கழியுமின்று
சுந்தரப்பலகைமுன்னீரிடுமெனத்தொண்டரிட்டார்
செந்தமிழ்ப்பாணனாருந்திருவருள்பெற்றுச்சார்ந்தார்.

(இ - ள்.) அந்தரத்தெழுந்தவோசை = ஆகாயத்தெழுந்த அசரீரியாகிய ஒலியானது; அன்பினிற்பாணர்பாடுஞ்சந்தயாழ் = அன்பினாலே பாணர்பாடுதற்குக் கருவியாகிய செவ்வியயாழ்; தரையிற்சீதந்தாக்கில்வீக்கழியும் = பூமியிலுள்ள குளிர்மை தாக்கினால் நரம்பின்கட்டுக்கள் தளர்ந்துவிடுமாகையால்; இன்றுசுந்தரப்பலகைமுன்னீரிடுமென = இப்பொழுது அழகிய பொற்பலகை முந்தி நீவிர் இடுக என்றுகூற; தொண்டரிட்டார் = அங்ஙனமே திருத்தொண்டரிட்டனர்; செந்தமிழ்ப்பாணனாரும் = செந்தமிழில்வல்ல் பாணநாயனாரும்; திருவருள்பெற்றுச்சார்ந்தார் = இறைவர்திருவருளைப்பெற்றுக்கொண்டு அதிலிருந்தார். எ-று.

யாழியற்றற்குரிய கொன்றை கருங்காலி முருக்கு குமிழ் தணக்கென்னும் மரங்களுள்ளே, நீரிலேநின்றதும் வெந்ததும் தக்கநிலத்திற்பிறவாததும் இடிவீழ்ந்ததும் வெயிலும் காற்றும் நீரும் நிழலும் மிகுதலாகியநோயுற்றதுமாகிய மரங்கள், செம்பகை ஆர்ப்பு கூடம் அதிர்வு என்னும் குற்றங்கள்பிறத்தற்கு ஏதுவாதலைப்பற்றி, அக்குற்றமகன்றதாய், நால்வகைக்காற்றும் மயங்காநிலத்தில்வளர்ந்து, இளமையும் நெடும்பிராயமுமின்றி நடுத்தரமாகியதொருமரத்தினை அரிந்தெடுத்து விதிப்படிச்செய்த வீணாதண்டத்தினையுடையதாகலின், இன்னிசையுடைத்தென்பார், "சந்தயாழ்" என்றும், அதில் வெம்மையகலச் சீதந்தாக்கின் நரம்புகள்தளர்தலால் அவ்வின்னிசைகுன்றுமென்பார், "வீக்கழியும்" என்றும் விதந்தருளினாரென்பது. செம்பகையாவது - இன்பமின்றிய தாழ்ந்த இசை. ஆர்ப்பாவது - மாத்திரையிறந்து ஓங்கியிசைத்தல். கூடமாவது - தன்பகையாகிய ஆறும்நரம்பினிசையிற்குன்றித் தன்னோசை மழுங்கல். அதிர்வாவது - நரம்பைச்சிதறவுந்தல். (௰)

தமனியப்பலகையேறித்தந்திரிக்கருவிவாசித்
துமையொருபாகர்வண்மையுலகெலாமறியவேத்தி
யிமையவர்போற்றவேகியெண்ணிறானங்கள்கும்பிட்
டமரர்நாடாளாதாரூராண்டவராரூர்சேர்ந்தார்.

(இ - ள்.) தமனியப்பலகையேறித்தந்திரிக்கருவிவாசித்து = பொற்பலகையிலேறிவதிந்து நரம்புகளையுடைய யாழைவாசித்து; உமையொருபாகர்வண்மையுலகெலாமறியவேத்தி = உமாதேவிபாகராகிய பெருமானது கருணைத்திறத்தை உலகமுற்றுமறியத்துதித்து; இமையவர்போற்றவேகியெண்ணிறானங்கள்கும்பிட்டு = தேவரெல்லாம் புகழச்சென்று அளவில்லாத திவ்யதலங்களைத்தொழுது; அமரர்நாடாளாதாரூராண்டவராரூர்சேர்ந்தார் = தேவலோகத்தையாளாது திருவாரூரையாண்ட தியாகேசப்பெருமானுக்குரிய அத்தலத்தை யடைந்தார். எ-று.

திருமாலைவேண்டித் தேவேந்திரன்பெற்றவழி அவனுக்கருள்பாலித்துத் தேவலோகத்தமர்ந்த இப்பெருமான் முசுகுந்தச்சக்கரவர்த்தியின்பொருட்டுத் திருவாரூர்ப்புக்குத் திருவருள்சுரந்து விளங்கினாராகலின் "அமரர்நாடாளாதாரூராண்டவர்" என்றார். இச்சரித்திரவிரிவைக் கந்தபுராணம் கந்தவிரதப்படலத்துணர்க. (எ)

வேறு.

கோயில்வாயின்முன்னடைந்துகூற்றஞ்செற்றபெருந்திறலுந்
தாயினல்லபெருங்கருணையடியார்க்களிக்குந்தண்ணளியு
மேயுங்கருவியிற்றொடுத்தங்கிட்டுப்பாடக்கேட்டங்கண்
வாயில்வேறுவடதிசையில்வகுப்பப்புகுந்துவணங்கினார்.

(இ - ள்.) கோயில்வாயின்முன்னடைந்து = ஆலயத்திருவாயிலின்முன்னராகி; கூற்றஞ்செற்றபெருந்திறலும் = இயமனையுதைத்த பெரியவெற்றியையும்; தாயினல்லபெருங்கருணையடியார்க்களிக்குந்தண்ணளியும் = அன்னையினும் இனிய மிக்ககிருபையை அடியவர்க்குப்பாலிக்கும் குளிர்ந்தகருணைத்திறத்தையும்; ஏயுங்கருவியிற்றொடுத்திட்டுப்பாடக்கேட்டு = தம்பாலுள்ள யாழிலேதொடுத்துப் பாடக்கேட்டருளி; அங்கண்வாயில்வேறுவடதிசையில்வகுப்பப்புகுந்துவணங்கினார் = அங்கே வேறுதிருவாயில் வடதிசையில்வகுத்தருள அவ்வழி உட்புகுந்துதொழுதார். எ-று. ()

மூலத்தானத்தெழுந்தருளியிருந்தமுதல்வன்றனைவணங்கிச்
சாலக்காலமங்கிருந்துதம்பிரான்றன்றிருவருளாற்
சீலத்தார்கள்பிரியாததிருவாரூரினின்றுபோ
யாலத்தார்ந்தகண்டத்தாரமருந்தானம்பலவணங்கி.

(இ - ள்.) மூலத்தானத்தெழுந்தருளியிருந்தமுதல்வன்றனைவணங்கி = திருமூலத்தானத்திலே திகழ்ந்தருளும் முதற்கடவுளைத்தொழுது; தம்பிரான்றன்திருவருளாற்சாலக்காலமங்கிருந்து = தம்பெருமான் தமக்குப்பாலித்த திருவருளினால் நெடுங்காலம் அங்குவசித்து; சீலத்தார்கள்பிரியாததிருவாரூரினின்றுபோய் = ஒழுக்கமுடையவர்பிரிதற்கரியஅத்திருவாரூரினின்றுஞ்சென்று; ஆலத்தார்ந்தகண்டத்தாரமருந்தானம்பலவணங்கி = நஞ்சத்தோடுபொருந்திய கண்டத்தராகிய நம்பர்வீற்றிருக்கும் தலங்கள் பலவற்றைப்பணிந்து. எ-று. ஆலத்தோடு என மூன்றனுருபுவிரிக்க. ()

ஆழிசூழுந்திருத்தோணியமர்ந்தவம்மானருளாலே
யாழின்மொழியாளுமைஞானமூட்டவுண்டவெம்பெருமான்

காழிநாடன்கவுணியர்கோன்கமலபாதம்வணங்குதற்கு
வாழிமறையோர்புகலியினில்வந்தார்சந்தவிசைப்பாணர்.

(இ-ள்.) சந்தவிசைப்பாணர் = சந்தத்தையுடைய இசைக்குரிய யாழ்ப்பாணநாயனார்; ஆழிசூழ்ந்திருத்தோணியமர்ந்தவம்மானருளால் = பிரளயசாகரப்பெருக்கின்மிதந்த திருத்தோணிபுரத்திலமரும் சிவபெருமான்றிருவருளினாலே; யாழின்மொழியாளுமை ஞானமூட்டவுண்டவெம்பெருமான் = யாழிசையினும் இனிய மொழியையுடைய இறைவியார் ஞானப்பாலூட்ட உண்டருளிய எமதுபெருமானும்; காழிநாடன்கவுணியர்கோன்கமலபாதம்வணங்குதற்கு = காழிநாட்டுக்கதிபரும் கவுணியர் குலாதிபருமாகிய ஞானசம்பந்தப்பிரானுடைய திருவடித்தாமரைகளைத்தொழுதற்கு; மறையோர்புகலியினில்வந்தார் = அந்தணர்க்குரிய சீகாழியிலணுகினார். எ-று.

யாழ் - ஆகுபெயர். வாழி-மங்கல இடைச்சொல். சந்தம் - பெருவண்ணம் இடைவண்ணம் வனப்புவண்ணம்முதலிய வண்ணங்களெழுபத்தாறுமாம். (௧௦)

ஞானமுண்டார்கேட்டருளிநல்லிசையாழ்ப்பெரும்பாணர்க்
கானபடியாற்சிறப்பருளியமருநாளிலவர்பாடு
மேன்மைப்பதிகத்திசையாழிலிடப்பெற்றுடனேமேவியபின்
பானற்களத்தார்பெருமணத்திலுடனேபரமர்தாளடைந்தார்.

(இ-ள்.) ஞானமுண்டார்கேட்டருளி = ஞானப்பாலையருந்திய ஆளுடையபிள்ளையார்கேட்டருளி; நல்லிசையாழ்ப்பெரும்பாணர்க்கானபடியாற்சிறப்பருளி = நல்ல இசையமைந்த யாழையேந்திய பெரிய பாணநாயனார்க்குத் தக்கபடி சிறப்பளித்து; அமருநாளில் = உடன்வசிக்கும்நாளில்; அவர்பாடுமேன்மைப்பதிகத்திசை = அப்பெருமானருளிச்செய்யும் மேன்மைபெற்ற திருப்பதிக இசையை; யாழிலிடப்பெற்றுடனேமேவியபின் = யாழிலேஇட்டு வாசிக்கப்பெற்று அவருடனிருந்து சிலநாள்கழிந்தபின்; பானற்களத்தார்பெருமணத்தில் = கருங்குவளைமலரையொத்த கண்டத்தர் அமரும் திருப்பெருமணமென்னுந்தலத்திலே; உடனேபரமர்தாளடைந்தார் = அப்பிள்ளையாரோடு தாமும் அமலர்திருவடிநீழலையடைந்தார். எ-று. (௧௧)

வரும்பான்மையினிற்பெரும்பாணர்மலர்த்தாள்வணங்கிவயற்சாலிக்
கரும்பார்கழனித்திருநாவலூரிற்சைவக்கலைமறையோ
ரரும்பாகின்றவணிநிலவும்பணியுமணிந்தாரருள்பெற்ற
சுரும்பார்தொங்கற்சடையனார்பெருமைசொல்லலுறுகின்றாம்.

(இ-ள்.) வரும்பான்மையினிற்பெரும்பாணர்மலர்த்தாள்வணங்கி = வளரும் அன்பினாலே திருநீலகண்டயாழ்ப்பாணநாயனாருடைய திருவடித்தாமரைகளையிறைஞ்சி; வயற்சாலிக்கரும்பார்கழனித்திருநாவலூரில் = வயல்களில் நெற்பயிரும் கரும்பும் நிறைந்த மருதநிலஞ்சூழ்ந்த திருநாவலூரிலே; அரும்பாகின்றவணிநிலவும்பணியுமணிந்தாரருள்பெற்ற = அரும்புகின்ற இளஞ்சந்திரனையும் அரவையுமணிந்த அமலர் திருவருளைப்பெற்ற; சைவக்கலைமறையோர் = சிவாகமங்களை ஓதியுணர்ந்த சிவமறையோராகிய; சுரும்பார்தொங்கற்சடையனார்பெருமைசொல்லலுறுகின்றாம் = வண்டுகள் மொய்க்கும் மலர்மாலிகையணிந்த சடையநாயனார் பெருமையைச்சாற்றுவாம். எ-று.

பான்மை-ஈண்டு அன்பு. அருள்பெற்றமறையோர் சடையனாரெனக்கூட்டுக.()

## திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்புராணம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௦௪௧.

# சடையநாயனார்புராணம்.

தம்பிரானைத்தோழமைகொண்டருளித்தமதுதடம்புயஞ்சேர்
கொம்பனார்பாலொருதூதுசெல்லவேவிக்கொண்டருளு
மெம்பிரானைச்சேரமான்பெருமாளினையிற்றுணைவரா
நம்பியாரூரரைப்பயந்தார்ஞாலமெல்லாங்குடிவாழ.

(இ-ள்) தம்பிரானைத்தோழமைகொண்டருளி = ஆன்மநாயகராகிய சிவபெருமானைச் சினேகங்கொண்டருளி; தமதுதடம்புயஞ்சேர்கொம்பனார்பால் = தம்முடைய பருத்தபுயங்களையணையும் பரவைநாச்சியார்பால்; ஒருதூதுசெல்லவேவி = ஒப்பற்ற தூதுசெல்லவிடுத்து; கொண்டருளுமெம்பிரானை = உரிமைகொண்டருளும் எமது பெருமானும்; சேரமான்பெருமாளினையிற்றுணைவராம் = சேரமான்பெருமானுடைய ருடைய நிகரற்ற நட்பினருமாகிய; நம்பியாரூரரை = நம்பியாரூரரென்னும் சுந்தரமூர்த்திநாயனாரை; ஞாலமெல்லாங்குடிவாழப்பயந்தார் = உலகமுழுமையும் ஆன்மாக்களுய்யப் பெற்றளித்தார் இச்சடையநாயனார். எ-று. (௧)

சடையநாயனார்புராணம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௦௭௫.

# இசைஞானியார்புராணம்.

ஒழியாப்பெருமைச்சடையனாருரிமைச்செல்வத்திருமனையா
ரழியாப்புரங்களெய்தழித்தாராண்டநம்பிதனைப்பயந்தா
ரிழியாக்குலத்தினிசைஞானிப்பிராட்டியாரையென்சிறுபுன்
மொழியாற்புகழமுடியுமோமுடியாதெவர்க்குமுடியாதால்.

(இ-ள்.) ஒழியாப்பெருமைச்சடையனார் = தவிர்தலில்லாத மேன்மைகுலவிய சடையநாயனாருடைய; உரிமைச்செல்வத்திருமனையார் = உரிமைபெற்ற செல்வத் திருமனைவியாரும்; அழியாப்புரங்களெய்தழித்தார் = அழியாததிரிபுரங்களைப்பாணத்தைவிடுத்து அழித்தஅமலரால்; ஆண்டநம்பிதனைப்பயந்தார் = ஆட்கொள்ளப்பட்ட நம்பியாரூரரைப் புதல்வராகப்பெற்றவருமாகிய; இழியாக்குலத்தினிசைஞானிப்பிராட்டியாரை = உயர்குலத்துதித்த இசைஞானியாரென்னும் எமது இறைவியாரை; என்சிறுபுன்மொழியாற்புகழமுடியுமோமுடியாது = எனது சிறிய அற்பமாகியவார்த்தையாற் புகழமுடியுமோ முடியாது; எவர்க்குமுடியாது = என்னளவேயன்று மற்றையாவர்க்கும் புகழமுடியாது. எ-று. ஆல் - அசை.

இறைவர்திருப்புன்முறுவலாற் றிரிபுரம்நீறுருகுங்கால், திருக்கரத்திற்பாணமாயிருந்த திருமாலாதிதேவர்கள் தம்மையும் விடுத்தருளப்பிரார்த்தித்துச்சென்று அப்புன்முறுவலக்கினியோடு தாமுங்கலந்தழித்தாரென்பது புராணசரித்திரமென்பார், "அழியாப்புரங்க ளெய்தழித்தார்" என்றும், எண்ணிறந்த இசையினரென்பார், "புகழமுடியாது". என்றும் புகன்றாரென்க. ஆளப்பட்டவென்னும் செயப்பாட்டு வினைப்பெயரெச்சம் ஆண்டவெனச் செய்வினைப்பெயரெச்சமாய்நின்றது. (௧)

இசைஞானியார்புராணம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௦௭௬.

மன்னியசீர்ச்சருக்கம் முற்றுப்பெற்றது.

# வெள்ளானைச்சருக்கம்.

மூலமானதிருத்தொண்டத்தொகைக்குமுதல்வராயிந்த
ஞாலமுய்யவெழுந்தருணம்பிதம்பிரான்றோழர்
காலைமலர்ச்செங்கமலக்கட்கழறிற்றறிவாருடன்கூட
வாலமுண்டார்திருக்கயிலையணைந்ததறிந்தபடியுரைப்பாம்.

(இ-ள்.) மூலமானதிருத்தொண்டத்தொகைக்குமுதல்வராய் = திருத்தொண்டர் சரித்திரங்களை விளக்குதற்கு மூலமாகிய திருத்தொண்டத்தொகைக்குத் தலைவராய்; இந்தஞாலமுய்யவெழுந்தருணம்பி = இவ்வுலகமீடேற எழுந்தருளியநம்பியாரூரரும்; தம்பிரான்றோழர் = தம்பிரான்றோழருமாகியசுந்தரமூர்த்திநாயனார்; காலைமலர்ச்செங்கமலக்கட்கழறிற்றறிவாருடன்கூட = காலையிலலர்ந்த கமலமலரன்ன கண்களையுடைய சேரமான்பெருமாணாயனாரோடு; ஆலமுண்டார்திருக்கயிலையணைந்தது = ஆலத்தையருந்திய அண்ணலாரமரும் திருக்கயிலையடைந்ததை; அறிந்தபடியுரைப்பாம் = தெரிந்தமட்டும் செப்புவாம். எ-று. (௧)

படியினீடும்பத்திமுதலன்புநீரிற்பணைத்தோங்கி
வடிவுநம்பியாரூரர்செம்பொன்மேனிவனப்பாகக்
கடியவெய்யவிருவினையின்களைகட்டெழுந்துகதிர்பரப்பி
முடிவிலாதசிவபோகமுதிர்ந்துமுறுகிவிளைந்ததால்.

(இ-ள்.) படியினீடும்பத்திமுதல் = பூமியிலோங்கிய பத்தியென்னும் முதலானது; அன்புநீரிற்பணைத்தோங்கி = அன்பென்னும் நீரினாற் பருத்துவளர்ந்து; நம்பியாரூரர்செம்பொன்மேனிவனப்புவடிவாக = நம்பியாரூரருடையசெம்பொன்போலும் திருமேனிவனப்பே தனக்குரியவடிவமாக; கடியவெய்யவிருவினையின்களைகட்டெழுந்துகதிர்பரப்பி = கடிய வெவ்விய இருவினையென்னும் களைகளைந்தோங்கிக் கதிர்களைப்பரப்பி; முடிவிலாதசிவபோகமுதிர்ந்து = அழிவில்லாத சிவபோகமென்னும் பலம்முதிர்ந்து; முறுகிவிளைந்தது = மிகவும்விளைந்தது. எ-று.

ஆளுடையநம்பிகளவதரித்தமையால் சிவபத்தியானது, அன்பைத்துணைக்கருவியாகக்கொண்டு ஓங்கி, எவர்க்கும் இருவினைகளைக்களைந்து, ஞானத்தையுதிப்பித்து, சிவானந்தமிகுதியைத் தந்ததென்பார், பத்தியைமுதலென்பதற்கிணங்க அன்புமுதலியவற்றை நீர்முதலியவாக உருவகித்ததுமன்றி, அப்பத்தி அருவப்பொருளாதலின் இவ்வாளுடையநம்பிகளின் திருமேனிவனப்பையே அதற்கோர் நிலைக்களமாக்கினார். ஆக்கவே, அத்திருமேனிமயமாய்நின்று உலகிலோங்கிற்றென்பதுகருத்து. களையப்படும்பொருள்களாகிய இருவினைகளைப் பிறர்களைதலின்றித் தானே களைந்தெழுந்ததென்பது தோன்ற "இருவினையின்களைகட்டெழுந்து" என்றார். வினையினென்புழி இன் தவிர்வழிவந்த சாரியை. களை - களையப்படுவது. கட்டல் - களைதல். சிவபோகம் - சிவானந்தப்பெருக்கம். (௨)

ஆரூரகமணிந்தபிரானன்பாலுக்கவன்றொண்ட
ரீரமதுவார்மலர்ச்சோலையெழிலாரூரினிருக்குநாட்
சேரர்பெருமாடனைநினைந்துதெய்வப்பெருமான்கழல்வணங்கிச்
சாரன்மலைநாடணைவதற்குத்தவிராவிருப்பினுடன்போந்தார்.

(இ - ள்.) ஆரமுரகமணிந்தபிரானன்பராணுக்கவன்றொண்டர் — மாலையாக அரவையணிந்த அண்ணலாருடைய அணுக்கத்தொண்டராகிய வன்றொண்டப்பெருமான்; ஈரமதுவார்மலர்ச்சோலையெழிலாரூரிலிருக்குநாள் — தண்ணிய தேனொழுகும் பூஞ்சோலைகளையுடைய அழகிய திருவாரூரிலே தங்கியிருக்குங்காளில்; சேரர்பெருமாட்டினைநினைந்து = சேரமான்பெருமாணுயனாரைச் சிந்தித்துப் (பிரிவாற்றாமையால்); தெய்வப்பெருமான்கழல்வணங்கி = தேவநாயகராகிய தியாகேசப்பெருமான் திருப்பாதங்களைத் தொழுதுகொண்டு; சாரன்மலைநாட்டணைவதற்கு = சாரல்களையுடைய மலைநாட்டைச்சார்தற்கு; தவிராவிருப்பினுடன்போந்தார் = நீக்கமில்லாதகாதலோடு சென்றார். எ-று. (௩)

நன்னீர்ப்பொன்னித்திருநாட்டுநாதர்மகிழுந்திருப்பதிகண்
முன்னியிறைஞ்சியகன்றுபோய்முல்லைப்படப்பைக்கொல்லைமான்
றுன்னியுகைக்குங்குடக்கொங்கிலணைந்துதூயமதிவானீர் [ர்.
சென்னிமிசைவைத்தவர்செல்வத்திருப்புக்கொளியூர்சென்றடைந்தா

(இ - ள்.) நன்னீர்ப்பொன்னித்திருநாட்டு — செவ்விய நீர்வளமிக்க காவிரித்திருநாட்டிலே; நாதர்மகிழுந்திருப்பதிகண்முன்னியிறைஞ்சியகன்றுபோய் = இறைவர்விரும்பிய திருப்பதிகளைச் சிந்தித்துவணங்கி நீங்கிச்சென்று; முல்லைப்படப்பைக்கொல்லைமான் = முல்லைநிலத்தின் கொல்லைகளிலுள்ள மான்கள்; துன்னியுகைக்குங்குடக்கொங்கிலணைந்து = செறிந்து துள்ளிவிளையாடும் மேற்றிசையிலுள்ள கொங்கநாட்டிற்சேர்ந்து; தூயமதிவானீர்சென்னிமிசைவைத்தவர் = சுத்தமாகிய சந்திரனையும் ஆகாயகங்கையையும் திருமுடியிலேதரித்த சிவபிரானமரும்; செல்வத்திருப்புக்கொளியூர்சென்றடைந்தார் = செல்வம்மிக்க திருப்புக்கொளியூர் அவிநாசியென்னுந்தலத்தைச் சென்றுசேர்ந்தார். எ-று. (௪)

மறையோர்வாழுமப்பதியின்மாடவீதிமருங்கணைவார்
நிறையுஞ்செல்வத்தெதிர்மனைகளிரண்டினிகழ்மங்கலவியங்க
ளறையுமொலியொன்றினிலொன்றிலழுகையொலிவந்தெழுதலுமங்
குறையுமறையோர்களையிரண்டுமுடனேநிகழ்வதென்னென்றார்.

(இ - ள்.) அப்பதியின்மறையோர்வாழுமாடவீதிமருங்கணைவார் = அத்தலத்திலே அந்தணர்கள்வாழும் மாடங்களையுடைய வீதியிலெழுந்தருளும் அந்நாயனார்; நிறையுஞ்செல்வத்தெதிர்மனைகளிரண்டில் = நிறைகின்றசெல்வத்தையுடைய எதிர்த்த இருமனைகளுள்ளே; ஒன்றினினிகழ்மங்கலவியங்களறையுமொலி = ஒன்றில் மங்கலவாத்தியங்கள்முழங்கும் ஒலியும்; ஒன்றிலழுகையொலிவந்தெழுதலும் = மற்றொன்றிலே அழுகைமுழக்கமும் வந்து அதிகரித்தலும்; அங்குறையுமறையோர்களை = அங்கே வசிக்கும்பிராமணர்களை; இரண்டுமுடனேநிகழ்வதென்னென்றார் = இவ்விரண்டொலியும் ஏககாலத்திலே எழுவது என்னையென்று வினவினார். எ-று. (௫)

அந்தணாளர்வணங்கியருப்புதல்வரிருவரையாண்டு
வந்தபிராயத்தினர்குளித்தமடுவின்முதலையொருமகவை
முந்தவிழுங்கப்பிழைத்தவனை முந்நூலணியுங்கலியாண
மிந்தமனைமற்றந்தமனையிழந்தாரழுகையென்றுரைத்தார்.

(இ-ள்.) அந்தணாளர்வணங்கி — அப்பிராமணர்கள்பணிந்து; ஐயாண்டுவந்தபிராயத்தினரரும்புதல்வரிருவர் — ஐந்துவருடநிரம்பிய வயதினராகிய அரியபுத்திரரிரு

வர்: குளித்தமடுவின்முதலை=மூழ்கியமடுவிலேயுள்ள முதலையானது; ஒருமகனைமுன் தவிழுங்க = ஒருவனை முற்படவிழுங்க; இழந்தாரழுகையந்தமனை = அப்புதல்வனை யிழந்தார் அழுதலையுடையது அந்தக்கிருகம்; பிழைத்தவனைமுன்னாளணியுங்கலியாணம் இந்தமனையென்றுரைத்தார் = உயிர்பிழைத்தவனை உபவீதமணிவிக்கும் மங்கலத்தை யுடையது இந்தக்கிருகம் என்றுகூறினர். எ-று.

இப்பட்டுச்சினத்துள்ளது இப்பொன்கழஞ்சளவினது என்பவை இப்பட்டுச்சி னம் இப்பொன்கழஞ்சென இசையெச்சமாய் எஞ்சிநின்றாங்கு, உடையதென்னும் சொற்களெஞ்சிக் கலியாணம் இந்தமனை அழுகை அந்தமனையென நின்றன. (௬)

இத்தன்மையினைக்கேட்டருளியிரங்குந்திருவுள்ளத்தினரா
மொய்த்தமுகைத்தார்வன்றொண்டர்தம்மைமுன்னேகண்டிறைஞ்ச
வைத்தசிந்தைமறையோனுமனைவிதானுமகவிழந்த
சித்தசோகந்தெரியாமேவந்துதிருத்தாளிறைஞ்சினார்.

(இ-ள்.) இத்தன்மையினைக்கேட்டருளியிரங்குந்திருவுள்ளத்தினராம்=இந்நிலை மையைத்திருச்செவியேற்றுவருந்தும் திருவுள்ளத்தாராகிய; மொய்த்தமுகைத்தார் வன்றொண்டர்தம்மை = அடர்ந்த அரும்பாற்றொடுத்த மாலையையணிந்த நம்பியாரூ ரரை; கண்டிறைஞ்ச = தரிசித்துவணங்கவேண்டுமென்று; முன்னேவைத்தசிந்தைம றையோனுமனைவியும் = நெடுநாளாகச் சித்தத்திலேகொண்டிருந்த அந்தணனும் அவ ன்மனைவியும்; மகவிழந்தசித்தசோகந்தெரியாமேவந்து திருத்தாளிறைஞ்சினார்=புத ல்வனையிழந்த மனக்கலக்கந்தோன்றாதவராய்வந்து திருவடிகளிற்பணிந்தார். எ-று.

இன்பமும் துன்பமுமாகிய இரண்டனுள் ஒன்றுமிக்கவழி மற்றொன்று குறை யுமாகலின் ஆளுடையநம்பிகளைத்தரிசிக்கும் ஆர்வமைமேலிட்டபொழுது அரியபுத்தி ரசோகம் தெரியாதாயிற்றென்க. தான் - அசை. (௭)

துன்பமகலமுகமலர்ந்துதொழுவார்தம்மைநோக்கியந்த
வின்பமைந்தன்றனையிழந்தீர்நீரோவென்னவெதிர்வணங்கி
முன்புபுகுந்துபோனதுமுன்னேவணங்கமுயல்கின்றோ
மன்புபழுதாகாமலெழுந்தருளப்பெற்றேமெனத்தொழுதார்.

(இ-ள்.) துன்பமகலமுகமலர்ந்துதொழுவார்தம்மைநோக்கி = வருத்தம்நீங்க முகமலர்ச்சியுற்று வணங்குவாரைநோக்கி; அந்தவின்பமைந்தன்றனையிழந்தீர்நீரோ வென்ன = இன்பத்தைவிளைக்கும் அப்புதல்வனையிழந்தீர் நீவிரோவென்றுவினவ; எதிர்வணங்கி = எதிரேயிறைஞ்சி; அதுமுன்புபுகுந்துபோனது = அச்செயல் முன் னேநேர்ந்துபோனது (இப்பொழுதுசிந்திப்பதால் ஆவதென்னை? அதுநிற்க); முன் னேவணங்கமுயல்கின்றோம் = நெடுநாளாகத் தேவரீரைத்தொழுதற்கு முயல்கின் றயாங்கள்; அன்புபழுதாகாமலெழுந்தருளப்பெற்றேமெனத்தொழுதார் = எங்களு டைய அன்பு வீண்படாமல் தேவரீரெழுந்தருளப்பெற்றோம் (இதுவேபெறும்பேறு) என்றுவணங்கினர். எ-று. (௮)

மைந்தன்றன்னையிழந்ததுயர்மறந்துநான்வந்தணைந்ததற்கே
சிந்தைமகிழ்ந்தார்மறையோனுமனைவிதானுஞ்சிறுவனையா
னந்தமுதலைவாய்நின்றுமழைத்துக்கொடுத்தேயவிநாசி
யெந்தைபெருமான்கழல்பணிவேனென்றார்சென்றாரிடர்களைவார்.

(இ - ள்.) சென்றுரிடர்களைவார் = தம்மை அடைக்கலம்புக்காருடைய துன்பத்தை முற்றும் அகற்றவல்ல நம்பியாரூரர்; மறையோனுமனைவியுமைந்தன்றனையிழந்த துயர்மறந்து = இவ்வந்தணனும் இவன்மனைவியும் புதல்வனையிழந்த இடரைமறந்து; நான்வந்தணைந்ததற்கேசிந்தைமகிழ்ந்தார் = யாம்வந்ததற்கே உள்ளங்களித்தாராகலின்; யானந்தமுதலைவாய்நின்றுஞ்சிறுவனையழைத்துக்கொடுத்தே = யாம் அந்தமுதலைவாயினின்றும் இவர்புத்திரனை அழைத்துக்கொடுத்தபின்பே; அவிநாசியெந்தைபெருமான்கழல்பணிவேனென்றார் = அவிநாசியில்அமர்ந்தருளும் எமதுபிதாவாகிய கடவுளின் திருவடிகளை இறைஞ்சுவேம் என்றிசைத்தருளினர். எ-று.

மைந்தனையிழந்ததுயரைமறந்து தமதுவருகைக்கேமனமகிழ்தலின் அவரன்பினுறுதிநோக்கி, இத்தகையரது இடரைக்களைதலே இறைவர்க்கும்உவகைபயப்பதொன்றாகலின் இஃதியற்றியே இறைவரை இறைஞ்சுவலெனக்கொண்டனரென்பார், "சிறுவனையழைத்துக்கொடுத்தேபெருமான்கழல்பணிவேன்" என்றாரெனவிதந்தார்.

இவ்வாறருளிச்செய்தருளியிவர்கள்புதல்வன்றனைக்கொடிய
வெவ்வாய்முதலைவிழுங்குமடுவெங்கேயென்றுவினவிக்கேட்
டவ்வாழ்பொய்கைக்கரையிலெழுந்தருளியவனையன்றுகவர்
வைவ்வாளெயிற்றுமுதலைகொடுவருதற்கெடுத்தார்திருப்பதிகம்.

(இ - ள்.) இவ்வாறருளிச்செய்தருளி = இங்ஙனமருளிச்செய்து; இவர்கள்புதல்வன்றனை = இவ்விருவர்களுடையமைந்தனை; கொடியவெவ்வாய்முதலைவிழுங்குமடு = கொடிய வெய்யவாயினையுடைய முதலைவிழுங்கியமடு; எங்கேயென்றுவினவிக்கேட்டு = எவ்விடத்ததென்றுவினாவியறிந்துகொண்டு; அவ்வாழ்பொய்கைக்கரையிலெழுந்தருளி = அந்த ஆழமுள்ள மடுக்கரையிலே அடைந்தருளி; அன்றுகவர்வைவ்வாளெயிற்றுமுதலை = அக்காலத்திலேகவர்ந்த கூரியவாள்போலும் பற்களையுடைய முதலையானது; அவனைக்கொடுவருதற்குத்திருப்பதிகமெடுத்தார் = அப்புதல்வனைக் கொண்டுவருதற்குத் திருப்பதிகம் தொடங்கினர். எ-று.

மடுவெங்கேயென்று வினவிக்கேட்டாரென்றது - வினவிய அக்காலத்து அது மடுவெனுந்தோற்றம் இல்லையாயிற்றென்பது குறிப்பின்விளங்க வைத்தவாறு. எனவே, மடுவிலே நீரும்முதலையும் புதிதாகவுளவாக்கிப் புதல்வனையழைத்தாரென்பது. இதனை, "வறந்திடு பொய்கைமுன் னிரம்ப மற்றவ - ணுறைதரு முதலையுந் துதிப்ப வன்னதா - லிறந்திடு மகன்வளர்ந் தெய்தப் பாடலோன் - றறைந்திடு சுந்தர னடிகள் போற்றுவாம்" என்னும் கந்தபுராணத்திருவிருத்தத்தானுமறிக. (௪௦)

உரைப்பாருரையென்றெடுத்ததிருப்பாட்டுமுடியாமுன்னுயர்ந்த
வரைப்பான்மையினீடம்புயத்துமறலிமைந்தனுயிர்கொணர்ந்து
திரைப்பாய்புனலின்முதலைவயிற்றுடலிற்சென்றவாண்டுகளுந்
தரைப்பால்வளர்ந்ததெனநிரம்பமுதலைவாயிற்றருவித்தான்.

(இ - ள்.) உரைப்பாருரையென்றெடுத்ததிருப்பாட்டுமுடியாமுன் = "உரைப்பாருரை" எனத்தொடங்கிய நான்காவது திருப்பாட்டு முடியாதமுன்னரே; உயர்ந்தவரைப்பான்மையினீடம்புயத்துமறலி = ஓங்கிய மலையினியல்புபோல நீண்டபெருத்த தோள்களையுடைய இயமன்; மைந்தனுயிர்கொணர்ந்து = அப்புதல்வனுயிரைக்கொண்டுவந்து; திரைப்பாய்புனலின்முதலைவயிற்றுடலில் = அலைகள்பாய்கின்ற நீரிலிருக்கும் முதலைவயிற்றிலுள்ள உடலிலே; சென்றவாண்டுகளுந்தரைப்பால்வளர்ந்ததெனநிரம்ப



அவநாசியில் முதலைவாயினின்றும் பிராமணப்பிள்ளையை வரவழைத்தது.

கழிந்தவருடங்களினும் பூமியிலே வளர்ந்ததுபோல (வளர்ச்சி) நிரம்ப; முதலைவாயி ற்றருவித்தான் — அம்முதலைவாயின்கண்தோற்றுவித்தனன். எ-று.

முடியாமுன்கொணர்ந்து தருவித்தான் என இயையும். ஆண்டெல்[illegible] என்புழி யேழனுருபுவிரிக்க. (௧௧)

திருப்புக்கொளியூர்அவிநாசி - பண் குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

எற்றான்மறக்கேனெழுமைக்குமெம்பெருமானையே
யுற்றாயென்றுன்னையேயுள்குகின்றேனுணர்ந்துள்ளத்தாற்
புற்றாடரவாபுக்கொளியூரவிநாசியே
பற்றாகவாழ்வேன்பசுபதியேபரமேட்டியே.

வழிபோவார்தம்மோடும்வந்துடன்கூடியமாமணிநீ
யொழிவதழகோசொல்லாயருளோங்குசடையானே
பொழிலாருஞ்சோலைப்புக்கொளியூரிற்குளத்திடை
யிழியாக்குளித்தமாணியென்னைக்கிறிசெய்ததே.

எங்கேனும்போகினுமெம்பெருமானைநினைந்தக்காற்
கொங்கேபுகினுங்கூறைகொண்டாறலைப்பாரிலைப்
பொங்காடரவாபுக்கொளியூரவிநாசியே
யெங்கோனேயுனைவேண்டிக்கொள்வேன்பிறவாமையே.

உரைப்பாருரையுகந்துள்கவல்லார்தங்களுச்சியா
யரைக்காடரவாவாதியுமந்தமுமாயினாய்
புரைக்காடுசோலைப்புக்கொளியூரவிநாசியே
கரைக்கான்முதலையைப்பிள்ளைதரச்சொல்லுகாலனையே.

அரங்காவதெல்லாமாயிடுகாடதுவன்றியுஞ்
சரங்கோலைவாங்கிவரிசிலைநாணியிற்சந்தித்துப்
புரங்கோடவெய்தாய்புக்கொளியூரவிநாசியே
குரங்காடுசோலைக்கோயில்கொண்டகுழைக்காதனே.

நாத்தானுனைப்பாடலன்றிநவிலாதெனாச்
சோத்தென்றுதேவர்தொழநின்றசுந்தரச்சோதியாய்
பூத்தாழ்சடையாய்புக்கொளியூரவிநாசியே
கூத்தாவுனக்கென்னாட்பட்டகுற்றமுங்குற்றமே.

மந்திகடுவனுக்குண்பழநாடிமலைப்புறஞ்
சந்திகடோறுஞ்சலபுட்பமிட்டுவழிபடப்
புந்தியுறைவாய்புக்கொளியூரவிநாசியே
நந்தியுனைவேண்டிக்கொள்வேனரகம்புகாமையே.

பேணாதொழிந்தேனுன்னையல்லாற்பிறதேவரைக்
காணாதொழிந்தேன்காட்டுதியேலின்னுங்காண்பனான்

பூணாணரவாபுக்கொளியூரவிநாசியே
காணாதகண்கள்காட்டவல்லகறைக்கண்டனே.

நள்ளாறுதெள்ளாறரத்துறைவாயெங்கணம்பனே
வெள்ளாடைவேண்டாய்வேங்கையின்றோலைவிரும்பினாய்
புள்ளேறுசோலைப்புக்கொளியூரிற்குளத்திடை
யுள்ளாடப்புக்கமாணியென்னைக்கிறிசெய்ததே.

நீரேறவேறுநிமிர்புன்சடைநின்மலமூர்த்தியைப்
போரேறதேறியைப்புக்கொளியூரவிநாசியைக்
காரேறுகண்டனைத்தொண்டனாரூரன்கருதிய
சீரேறுபாடல்கள்செப்பவல்லார்க்கில்லைதுன்பமே.

திருச்சிற்றம்பலம்.

---

பெருவாய்முதலைகரையின்கட்கொடுவந்துமிழ்ந்தபிள்ளைதனை
யுருகாநின்றதாயோடியெடுத்துக்கொடுவந்துயிரளித்த
திருவாளன்றன்சேவடிக்கீழ்ச்சிலமறையோனொடுவீழ்ந்தாண்
மருவார்தருவின்மலர்மாரிபொழிந்தார்விசும்பின்வானோர்கள்.

(இ-ள்.) பெருவாய்முதலைகரையின்கட்கொடுவந்துமிழ்ந்தபிள்ளைதனை = பெருத்தவாயையுடைய முதலையானது கொண்டுவந்து கரையிலுமிழ்ந்த பிள்ளையை; உருகாநின்ற தாயோடியெடுத்துக்கொடுவந்து = உள்ளமுருகுந்தாய் ஓடித்தூக்கிக் கொணர்ந்து; உயிரளித்த திருவாளன்றன சேவடிக்கீழ் = அப்புதல்வனுக்கு உயிர் பாலித்த ஞானச்செல்வராகிய நம்பியாரூரருடைய சிவந்ததிருவடிகளின்கீழ்; சில மறையோனொடு வீழ்ந்தாள் = ஒழுக்கம் வாய்ந்த அந்தணனோடும் வணங்குவித்தாள்; வானோர்கள் விசும்பில் தருவின்மருவார்மலர் மாரிபொழிந்தார் = தேவர்கள் ஆகாயத்திலே பஞ்சதருக்களின் வாசனைநிறைந்த புஷ்பங்களை வருஷித்தார்கள். எ-று. ()

மண்ணிலுள்ளாரதிசயித்தார்மறையோரெல்லாமுத்தரியம்
விண்ணிலேறவிட்டார்த்தார்வேதநாதமிக்கெழுந்த
தண்ணலாருமவிநாசியரனார்தம்மையருமறையோன்
கண்ணின்மணியாம்புதல்வனையுங்கொண்டுபணிந்தார்காசினிமேல்.

(இ-ள்.) மண்ணிலுள்ளாரதிசயித்தார் = உலகிலுள்ளார் ஆச்சரியம் உற்றார்கள்; மறையோரெல்லாமுத்தரியம் விண்ணிலேறவிட்டார்த்தார் = அந்தணர்களெல்லாம் உத்தரீயங்களை ஆகாயத்திலெறிந்து ஆரவாரித்தார்கள், வேதநாதமிக்கெழுந்தது = வேதவொலியும் அதிகரித்தோங்கியது; அண்ணலாரும் = சுந்தரமூர்த்திசுவாமிகளும்; அருமறையோன்கண்ணின்மணியாம் புதல்வனையுங்கொண்டு = அரியபிராமணனது கண்மணிபோலும் புதல்வனையும் உடன்கொண்டு; அவிநாசியரனார்தம்மைக்காசினி மேற்பணிந்தார் = அவிநாசியிலமரும் அமலரைப் பூமியில்வீழ்ந்துவணங்கினார். எ-று.
சண்டுக்கூறியவை சந்தோஷமிகுதியினியற்றும் செயல்கள். (௧௬)

பாவும்பெருமைத்திருப்பதிகம்பாடிப்பணிந்துபோந்தன்பு
விரவுமறையோன்காதலனைவெண்ணூல்பூட்டியண்ணலார்

(இ-ள்.) செய்வதொன்றுமறியாது சிந்தைமகிழ்ந்து களிகூர்ந்து = செயற்பாலது யாதொன்று முணராது சித்தமுவந்து பெருங்களிப்பையடைந்து; என்னையணைந்தான் = எனது கடவுளணைந்தார்; எனையாளுமண்ணலணைந்தான் = என்னையடிமைகொள்ளும் எம்பிரானடைந்தார்; ஆரூரிற்சைவனணைந்தான் = திருவாரூரிலமரும் சிவசம்பந்தமுடையவரடைந்தார்; என்றனையாந்தலைவனணைந்தான் = எனக்குத்தோழராகிய இறைவரணைந்தார்; தரணியெலாமுய்ய வணைந்தானணைந்தானென்று = அவனியெல்லாம் ஈடேற அவதரித்த அண்ணலார் அடைந்தார் அடைந்தாரென்று; ஓகைமுரசஞ் சாற்றுவித்தார் = உவகைமுரசம் அறைவித்தார். எ-று. ()

பெருகுமதிநூலமைச்சர்களையழைத்துப்பெரியோரெழுந்தருளப்
பொருவினகரமலங்கரித்துப்பண்ணிப்பயணம்புறப்படுவித்
தருவிமதமால்யானையினையணைந்துமிசைகொண்டரசர்பெருந்
தெருவுகழியவெதிர்வந்தார்சேரர்குலமுய்ந்திடவந்தார்.

(இ-ள்) சேரர்குலமுய்ந்திடவந்தார் = சேரர்குலம் நற்கதிபெற அவதரித்த அந்நாயனார்; பெருகுமதிநூலமைச்சர்களையழைத்து = மிக்க அறிவைவளர்த்தற்குரிய நூல்களையாய்ந்த அமைச்சர்களையழைத்து; பெரியோரெழுந்தருளப்பொருவினகரமலங்கரித்து = வன்றொண்டப் பெருமானெழுந்தருள ஒப்பில்லாத நகரத்தை அலங்கரித்து; பயணம்பண்ணிப் புறப்படுவித்து = சேனைகளைப் பிரயாணப்படுத்திப் புறப்படச்செய்வித்து; அருவிமதமால் யானையினையணைந்து மிசைகொண்டு = அருவிபோன்று மதமொழுகும் பெருமைபெற்ற யானையை அணுகியேறிக்கொண்டு; அரசர்பெருந்தெருவுகழியவெதிர்வந்தார் = பெரிய அரசர்வீதியைக் கடந்து எதிரேவந்தார். எ-று.
கழிய-வினையெச்சத்திரிபு. (கஅ)

மலைநாட்டெல்லையுட்புகுதவந்தவன்றொண்டரைவரையிற்
சிலைநாட்டியவெல்கொடித்தானைச்சேரர்பெருமானெதிர்சென்று
தலைநாட்கமலப்போதனையசரணம்பணியத்தாவில்பல
கலைநாட்டமுதவாரூரர்தாமுந்தொழுதுகலந்தனரால்.

(இ-ள்.) வரையினாட்டிய வெஞ்சிலைக்கொடி = மேருமலையிலே நாட்டிய வெற்றிபெற்ற விற்கொடியையேந்திய; தானைச்சேரர்பெருமானெதிர் சென்று = சேனைகளையுடைய சேரமான் பெருமானாயனார் எதிரேசென்று; மலைநாட்டெல்லையுட் புகுதவந்த வன்றொண்டரை = மலைநாட்டெல்லையினுள்ளே அணுக எழுந்தருளிய வன்றொண்டப்பெருமானை; தலைநாட்கமலப்போதனைய சரணம்பணிய = அன்றுமலர்ந்த அம்புயமலர்போலும் திருவடிகளை வணங்க; தாவிலமுதப்பலகலைநாட்டாரூரர்தாமும் = அழிதலில்லாத அமுதமயமாகியபலகலைகளை நிலைபெறச்செய்த ஆரூரப்பெருமானும்; தொழுதுகலந்தனர் = இறைஞ்சி இன்புற்றார். எ-று.

வெற்றிக்கொடி நாட்டுதற்கு விதக்கப்பெற்றது மேருமலையாகலின் வரையென்றது ஈண்டு அதனமேற்று. எனவே, அதுகாறும் இவரானை சென்ற தென்றவாறு. அனைவரையும் நரைதிரை மூப்பின்றி அழிவிலராகச்செய்யும் கலைகளையே நாட்டினரென்பார், “தாவில்பலவமுதகலை நாட்டாரூரர்,” என்றார். நாட்டுதல் - அக்கலைப்பொருளனைத்தையும் தம்பதிகத்தமைத்தல். (க௯)

சிந்தைமகிழுஞ்சேரலனார்திருவாரூராரெனுமிவர்க
டந்தமணிமேனிகள்வேறுமெனிலுமொன்றுந்தன்மையராய்

முந்தவெழுங்காதலிற்றொழுதுமுயங்கியுதியர்முதல்வேந்த
ரெந்தைபெருமான்றிருவாரூர்ச்செல்வம்வினவியின்புற்றார்.

(இ-ள்.) சிந்தைமகிழுஞ் சேரலனார் திருவாரூரருமியவர்கள் = சித்தமுவந்த சேரமான் பெருமாளையாரும் திருமுனைப்பாடிநாட்டுத் தலைவருமாகிய இருவரும்; தந்தமணிமேனிகள் வேறாமெனினு மொன்றாந்தன்மையராய் = தம்முடைய அழகிய திருமேனிகள் வேறாயினும் ஒன்றாகிய நிலைமையாராக; உதியர் முதல்வேந்தர் = அவருள் சேரமான்பெருமாளையனார்; முந்தவெழுங்காதலிற்றொழுது முயங்கி = முற்பட ஓங்கிய ஆராமையாலிறைஞ்சி யணைந்து; எந்தைபெருமான்றிருவாரூர்ச் செல்வம் வினவி யின்புற்றார் = எம்பெருமான் வீற்றிருக்கும் திருவாரூர்ச் சிறப்பை வினவி இன்பமிக்கார். எ-று.

தன்மையரா யென்பது வினையெச்சத்திரிபு. (௨0)

ஒருவரொருவரிற்கலந்துகுறைபாடின்றியுயர்காத
லிருவர்நண்பின்செயல்கண்டேயிரண்டுதிறத்துமாந்தர்களும்
பெருகுமகிழ்ச்சிகலந்தார்த்தார்பெருமாடமிழின்பெருமானை
வருணைக்கவரையின்மிசையேற்றித்தாம்பின்மதிவெண்குடைகவித்தார்.

(இ-ள்.) ஒருவரொருவரிற்கலந்து = ஒருவர் மற்றொருவர்பாற்கலப்புற்று; குறைபாடின்றியுயர்காதலிருவர் = அதிற்குறைதலின்றி மிக்கவிருப்பமைந்த இவ்விருவர்களுடைய; நண்பின்செயல்கண்டே யிரண்டுதிறத்து மாந்தர்களும் = நட்பின் செய்கையை நாடிய இருபக்கத்துமுள்ளாயாவரும்; பெருகுமகிழ்ச்சிகலந்தார்த்தார் = ஓங்கிய மகிழ்ச்சியுடையாராய் ஒலித்தார்; பெருமாடமிழின் பெருமானை = சேரமான பெருமாணையார் செந்தமிழ்த்தலைவராகிய திருநாவலூரரை; வருணைக்கவரையின்மிசையேற்றி = தாழ்ந்த துளைக்கையையுடைய யானையல் ஆரோகணிப்பித்து; தாம் பின் மதிவெண்குடை கவித்தார் = தாம்பின்னிருந்து சந்திரன்போலும் வெண்கொற்றக்குடையைத் தாங்கினார். எ-று.

வருதல் - வளர்தல்; தாம வறிவருதலுமாம். (௨௧)

உதியர்பெருமான்பெருஞ்சேனையொங்கொலார்த்ததெனவார்ப்பக்
கதிர்வெண்டிருநீற்றன்பர்குழாங்கடல்காரொலிபோலொலிபெருக
வெதிர்வந்திறைஞ்சுமமைச்சர்குழாமேறுமிவுளித்துகளார்ப்ப
மதிதங்கியமஞ்சணியிஞ்சிவஞ்சிமணிவாயிலையணைந்தார்.

(இ-ள்.) உதியர்பெருமான் பெருஞ்சேனை = சேரமான்பெருமாளுடைய பெரியசேனை; ஒங்கொலார்த்த தெனவார்ப்ப = கடலொலியைக்காட்டிலும் மிக ஒலிக்க; கதிர்வெண்டிருநீற்றன்பர்குழாம் = வெள்ளொளிபரப்பும் விபூதியையணிந்த அடியவர்கூட்டங்கள்; கடல்காரொலிபோலொலிபெருக = கடலையும் மேகத்தையும் போலக் கலந்தொலிக்க; எதிர்வந்திறைஞ்சு மமைச்சர்குழாம் = எதிர்வந்து வணங்கும் மந்திரிகள்; ஏறுமிவுளித்துகளார்ப்ப = ஏறியகுதிரைகளின் கால்தூளிகள் (எங்கும் கலந்து) நிறைக்க; மதிதங்கிய மஞ்சணியிஞ்சி = சந்திரன் தவழுகின்ற மேகங்கள்படியும் மதில்களையுடைய; வஞ்சிமணிவாயிலையணைந்தார் = வஞ்சிநகரத்தின் மணிவாயிலையடைந்தார். எ-று.

வஞ்சி-கொடுங்கோளூர். (௨௨)

வேறு.

ஆரணமொழிகண்முழங்கிடவாடினர்குணலைகளந்தணர்
வாரணமதமழைசிந்தினவாசிகள்கிளரொளிபொங்கின
பூரணகலசமலிந்தனபூமழைமகளிர்பொழிந்திடுந்
தோரணமறுகுபுகுந்ததுதோழர்கணடவியகுஞ்சரம்.

(இ - ள்.) அந்தணராரணமொழிகள்முழங்கிடக்குணலைகளாடினர் = வேதியர்கள் வேதவாக்கியங்கள்முழங்கக் குணலைக்கூத்தாடினார்கள்; வாரணமதமழைசிந்தின = மதயானைகள் மதநீரை மழைபோற்சொரிந்தன; வாசிகள்கிளரொளிபொங்கின = குதிரைகளின் கனைப்பொலி எங்குங்குமுறின; பூரணகலசமலிந்தன = பூரணகும்பங்கள் எங்கும்பொலிந்தன; தோழர்கணடவியகுஞ்சரம் = தோழர்களாகிய இருநாயன்மார்களும் செலுத்தியயானை; மகளிர்பூமழைபொழிந்திடுந்தோரணமறுகுபுகுந்தது = தோகையர்கள் புட்பவருடஞ்சொரியும் தோரணம்நாட்டிய வீதியிற் சென்றது. எ-று. (௨௫)

அரிவையர்தெருவினடம்பயிலணிகிளர்தளிரடிதங்கிய
பரிபுரவொலிகள்கிளர்ந்தனபணைமுரசொலிகள்பரந்தன
சுரிவளைநிரைகண்முரன்றனதுணைவர்களிருவரும்வந்தணி
விரிதருபவனநெடுங்கடைவிறன்மதகரியினிழிந்தனர்.

(இ - ள்.) தெருவினடம்பயிலரிவையர்=தெருவிலே நிர்த்தனஞ்செய்கின்ற தெரிவையர்களின்; அணிகிளர்தளிரடிதங்கியபரிபுரவொலிகள்கிளர்ந்தன = சிறப்புமிக்க தளிர்போலும் சிற்றடிகளிற்றங்கிய சிலம்பொலிகள்மிக்கன; பணைமுரசொலிகள் பரந்தன = பறைமுழக்கமும் பேரிகைமுழக்கமும் பரம்பின; சுரிவளைநிரைகண்முரன்றன = சுரித்தமுகத்தையுடைய சங்குகள் தொனித்தன (இவ்வகைச்சிறப்புக்களோடு); துணைவர்களிருவரும்வந்து = தோழர்களிருவரும் எழுந்தருளி; அணிவிரிதருபவனநெடுங்கடை = அலங்காரம்மிக்க அரண்மனையின் நெடியவாயிலின்கண்; விறன்மதகரியினிழிந்தனர் = வெற்றிபெற்ற மதயானையினின்றும் இறங்கினூர். எ-து. ()

தூநறுமலர்தாளம்பொரிதூவிமுனிருபுடையின்கணு
நான்மறைமுனிவர்கணமங்கலநாமநன்மொழிகள்விளம்பிட
மேனிறைநிழல்செயவெண்குடைவீசியகவரிமருங்குற
வானவர்தலைவருநண்பருமாளிகைநடுவுபுகுந்தனர்.

(இ - ள்) நான்மறைமுனிவர்கள் = நான்குவேதங்களையுமுணர்ந்த அந்தணர்கள்; தூநறுமலர்தாளம்பொரிமுன்றூவி = சுத்தமாகிய மணநிரம்பிய மலர்களும் முத்துக்களும் பொரிகளுமாகிய இவற்றை முன்னர்த்தூவி; இருபுடையின்கணுநன் மங்கலநாமமொழிகள்விளம்பிட=இருபக்கத்தும்நின்று நல்ல சுவஸ்திவாக்கியங்களை ஓத; வெண்குடைமேனிறைநிழல்செய = வெண்கொற்றக்குடை மேலே நிரம்பிய நீழலைச் செய்ய; வீசியகவரிமருங்குற = வீசப்பட்ட வெண்சாமரைகள் இருபக்கத்தும் இயைய; வானவர்தலைவருநண்பருமாளிகைநடுவுபுகுந்தனர் = சேரமான்பெருமாணாயனாரும் அவர்தோழராகிய திருநாவலூர்த்தலைவரும் திருமாளிகையினடுவே சென்றூர். எ-று. வானவா - சேரகுலத்தார். (௨௫)

அரியணையதனின்விளங்கிடவடன்மழவிடையெனநம்பியை
வரிமலரமளியமர்ந்திடமலையர்கடலைவர்பணிந்துபி

னுரிமைநல்வினைகள்புரிந்தனவுரைமுடிவிலவெனமுன்செய்து
பரிசனமனமகிழும்படிபலபடிமணிநிதிசிந்தினர்.

(இ - ள்.) அரியணையதனின்வரிமலரமளி = சிங்காதனத்திலே வண்டுகள்செறியும் பூந்தவிசிலே; அடன்மழவிடையெனவிளங்கிடவமர்ந்திட நம்பியை = வெற்றிபெற்ற இளமைவாய்ந்த இடபம்போன்று விளக்கமுறவீற்றிருக்க அவ்வன்றொண்டப்பெருமானை; மலையர்கடலைவர்பணிந்தபின் = மலைநாட்டவர்க்கு இறைவராகிய கழறிற்றறிவார்நாயனார்வணங்கிப் பின்பு; புரிந்தனநல்லுரிமைவினைகள் = விரும்பினவாகிய நல்ல உபசாரத்தொழில்களை; உரைமுடிவிலவெனமுன்செய்து = சொல்லின்முடிவனவல்லவென்று எவருங்கூற முன்னரியற்றி; பரிசனமனமகிழும்படி பலபடிமணிநிதிசிந்தினர் = பரிசனத்தவர் உள்ளம் உவக்கும்படி பலவாறு இரத்தினங்களையும் பொன்களையும் இறைத்தார். எ-று. வரி - வண்டு; இரேகையுமாம். (உசு)

வேறு.

இன்னதன்மையிலுதியர்கடலைவர்தாமிடர்கெடமுனைப்பாடி
மன்னர்தம்முடன்மகிழ்ந்தினிதுறையுநாண்மலைநெடுநாட்டெங்கும்
பன்னகம்புனைபரமர்தந்திருப்பதிபலவுடன்பணிந்தேத்திப்
பொன்னெடுந்தடமூதெயின்மகோதையிற்புகுந்தனர்வன்றொண்டர்.

(இ - ள்.) இன்னதன்மையிலுதியர்கடலைவரிடர்கெட = இவ்வாறு சேரகுலாதிபர் இவ்வுலகமுற்றும் இடர்நீங்க; முனைப்பாடிமன்னர்தம்முடன்மகிழ்ந்தினிதுறையுநாள் = திருமுனைப்பாடிநாட்டுத் தலைவரோடு இன்புற்று இனிதுவசிக்குங்காலில்; வன்றொண்டர்மலைநெடுநாட்டெங்கும் = வன்றொண்டப்பெருமான் மலிந்தமலைநாட்டில் எவ்விடத்துமுள்ள; பன்னகம்புனைபரமர்தம்பலதிருப்பதி = அரவமணிந்த அண்ணலார் வீற்றிருக்கும் பலதிருத்தலங்களையும்; உடன்பணிந்தேத்தி = சேரமான் பெருமாணாயனாரோடு சென்றுவணங்கித் துதித்து; நெடுந்தடப்பொன்மூதெயின்மகோதையிற் புகுந்தனர் = நெடியவிசாலமாகிய முதிர்ந்தபொன்மதில்கள் நெருங்கிய மகோதை நகரத்தை அடைந்தார். எ-று. தாம் - அசை. (உஎ)

ஆயசெய்கையினுள்பலகழிந்தபினரசர்கண்முதற்சேரர்
தூயமஞ்சனத்தொழிலினிற்றொடங்கிடத்துணைவராம்வன்றொண்டர்
பாயகங்கைசூழ்நெடுஞ்சடைப்பரமனைப்பண்டுதாம்பிரிந்தெய்துஞ்
சேயநன்னெறிகுறுகிடக்குறுகினார்திருவஞ்சைக்களந்தன்னில்.

(இ - ள்-) ஆயசெய்கையினுள்பலகழிந்தபின் = அங்ஙனம்பலதினம் அகன்றபின்பு ஒருதினம்; அரசர்கண்முதற்சேரர் = சிறந்தசேரமான்பெருமாணாயனார்; தூயமஞ்சனத் தொழிலினிற்றொடங்கிட = சுத்தமாகிய நீராடுதற்றொழிலிலிருக்குந்தருணத்தில்; துணைவராம்வன்றொண்டர் = தோழராகிய சுந்தரமூர்த்திநாயனார்; பாயகங்கைசூழ் நெடுஞ்சடைப்பரமனை = நிரம்பிய கங்கைகுடிகொண்ட நீண்டசடையையுடைய சிவபெருமானை; பண்டுதாம்பிரிந்தெய்துஞ் சேயநன்னெறிகுறுகிடத்திருவஞ்சைக்களந்தன்னிற்குறுகினார் = முன்னர்ப் பிரிந்துவந்த தூரநிலைமைமுடிவெய்தலால் திருவஞ்சைக்களத்தில் எழுந்தருளினார். எ-று.

முந்தியகுறுகல்-ஈண்டு முடிவெய்தலின்மேற்று. (உஅ)

கரியகண்டர்தங்கோயிலைவலங்கொண்டுகாதலாற்பெருகன்பு
புரியுமுள்ளத்தருள்ளணைந்திறைவர்தம்பூங்கழலிணைபோற்றி

யரியசெய்கையிலவனியில்விழுந்தெழுந்தலைப்புறுமனைவாழ்க்கை
சரியவேதலைக்குத்தலைமாலையென்றெடுத்தனர்தமிழ்மாலை.

(இ - ள்.) காதலாற்பெருகன்புபுரியுமுள்ளத்தர் = ஆசையோடு மிக்கஅன்பைப் பொருந்திய சிந்தனையையுடைய நம்பியாரூரர்; கரியகண்டர்தங்கோயிலைவலங்கொண்டுள்ளணைந்து = நஞ்சத்தாற்கறுத்த கண்டத்தையுடைய நம்பராலயத்தை வலம்வந்து உள்ளெழுந்தருளி; இறைவர்தம்பூங்கழலிணைபோற்றி = எம்பெருமானுடைய இரண்டுதிருவடிக்கமலங்களையும் அஞ்சலித்து; அரியசெய்கையிலவனியில் விழுந்தெழுந்து=அரிய ஒழுக்கத்தோடு பூமியில்வணங்கியெழுந்து; அலைப்புறுமனைவாழ்க்கைசரியவே = இடர்ப்படுத்தும் இல்லறவாழ்க்கை நிலைகுலையும்படி; தலைக்குத்தலைமாலையென்றுதமிழ்மாலையெடுத்தனர் = "தலைக்குத்தலைமாலை" என்று தமிழ்ப்பதிகத்திருமாலையைத் தொடங்கினார். எ-று.

அரியசெய்கையாவன - மனமுருகல் கண்ணீர்பெருகல் நாத்தழும்பேறல் உடலம்விதிர்த்தல் மயிர்சிலிர்த்தல் முதலியவை. இத்திருப்பதிகங்காரணமாக இந்நாயனாருடைய இல்லறவாழ்க்கை நிலைகுலைதலின் "மனைவாழ்க்கைசரியவே தலைக்குத்தலைமாலை என்றெடுத்தனர்" என்றுணர்க. (௨௧)

திரு அஞ்சைக்களம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தலைக்குத்தலைமாலையணிந்ததென்னேசடைமேற்கங்கைவெள்ளந்தரித்ததென்னே, யலைக்கும்புலித்தோல்கொண்டசைத்ததென்னேயதன்மேற்கதநாகங்கச்சார்த்ததென்னே,மலைக்குநிகரொப்பனவன்றிரைகள்வலித்தெற்றிமுழங்கிவலம்புரிகொண், டலைக்குங்கடலங்கரைமேன்மகோதையணியார்பொழிலஞ்சைக்களத்தப்பனே.

எந்தம்மடிகளிமையோர்பெருமானெனக்கென்னுமளிக்குமணிமிடற்ற, னந்தண்கடலங்கரைமேன்மகோதை யணியார்பொழி லஞ்சைக்களத்தப்பனை,மந்தம்முழவுங்குழலுமியம்பும்வளநாவலர்கோனம்பியூரன்சொன்ன,சந்தம்மிகுதண்டமிழ்மாலைகள்கொண்டடிவீழவல்லார்தடுமாற்றிலரே.

திருச்சிற்றம்பலம்.

---

எடுத்தவத்திருப்பதிகத்தினுட்குறிப்பிவ்வுலகினிற்பாச
மடுத்தவாழ்க்கையையறுத்திடவேண்டுமென்றன்பரன்பினிற்பாடக்
கடுத்ததும்பியகண்டர்தங்கயிலையிற்கணத்தவருடன்கூடத்
தடுத்தசெய்கைதான்முடிந்திடத்தங்கழற்சார்புதந்தளிக்கின்றார்.

(இ - ள்.) அன்பர் = ஆளுடையநம்பிகள்; இவ்வுலகினிற்பாசமடுத்தவாழ்க்கையையறுத்திடவேண்டுமென்று = அடியேனுக்கு இப்பிரபஞ்சத்திலே பாசத்திற்பந்தித்த இவ்வாழ்வைச் சேதித்திடவேண்டுமென்று; எடுத்தவத்திருப்பதிகத்தினுட்குறிப்பு = தொடங்கிய அத்திருப்பதிகத்தின் உட்குறிப்பு அதுவாக; அன்பினிற்பாட = அன்பாற்பாடுதலும்; கடுத்ததும்பியகண்டர் = நஞ்சமிக்ககண்டத்தராகிய நம்பெருமான்; தங்கயிலையிற்கணத்தவருடன்கூட = தமதுதிருக்கைலையில் அவர்சிவகணங்க

ருடன் சேரும்படி; தடுத்தசெய்கைமுடிந்திட = திருவெண்ணெய்நல்லூரில் தடுத்தாட்கொண்டசெயல் இப்பொழுதுபூர்த்தியாக; தங்கழற்சார்புதந்தளிக்கின்றார் = தம்முடைய திருவடியடைதலைத் தந்தருளுகின்றார். எ-று. தான் - அசை. (௫௧)

மன்றலந்தருமிடைந்தபூங்கயிலையின்மலைவல்லியுடன்கூட
வென்றிவெள்விடைப்பாகர்தாம்வீற்றிருந்தருளியபொழுதின்க
ணொன்றுசிந்தைநம்மூரனையும்பர்வெள்ளானையினுடனேற்றிச் [ர்.
சென்றுகொண்டிங்குவாருமென்றயன்முதற்றேவர்கட்கருள்செய்தா

(இ - ள்.) வென்றிவெள்விடைப்பாகர் = வெற்றிபெற்ற வெள்ளிய இடபவாகனத்தையூர்ந்தருளும் எம்பெருமான்; மன்றலந்தருமிடைந்தபூங்கயிலையில் = வாசனைததும்பிய மலர்ச்சோலைகளடர்ந்த திருக்கயிலையிலே; மலைவல்லியுடன்கூடவீற்றிருந்தருளியபொழுதின்கண் = பார்வதிதேவியாரோடு பரிந்துவீற்றிருந்தருளும் தருணத்தில்; சென்றுஒன்றுசிந்தைநம்மூரனை = நீவிர்போய் ஒற்றுமைப்பட்ட சித்தத்தையுடைய நமது ஆரூரனை; வெள்ளானையினும்பருடனேற்றி = இங்குள்ளவெள்ளானையில் இப்பொழுதே ஏற்றிக்கொண்டு; இங்குவாருமென்றயன்முதற்றேவர்கட்கருள்செய்தார் = இங்குவருகவென்று அரிபிரமாதிதேவர்கட்கு ஆஞ்ஞாபித்தனர். எ-று.()

வானநாடர்களரியயன்முதலினோர்வணங்கிமுன்விடைகொண்டு
தூநலந்திகழ்சோதிவெள்ளானையுங்கொண்டுவன்றொண்டர்க்குத்
தேனலம்புதண்சோலைசூழ்ந்திருக்குமத்திருவஞ்சைக்களஞ்சேரக்
கானிலங்கொளவலங்கொண்டுமேவினார்கடிமதிற்றிருவாயில்.

(இ - ள்.) வானநாடர்களரியயன்முதலினோர்வணங்கிமுன்விடைகொண்டு = அரிபிரமாதிதேவர்கள் இறைவனைவணங்கி எதிர்விடைபெற்று; தூநலந்திகழ்சோதிவெள்ளானையும்வன்றொண்டர்க்குக்கொண்டு = சுத்தமாகிய இலக்கணமமைந்த சோதிமயமான வெள்ளானையையும் சுந்தரமூர்த்திசுவாமிகள்பொருட்டு உடன்கொண்டு; தேனலம்புதண்சோலைசூழ்மகோதையிற்றிருவஞ்சைக்களஞ்சேர = வண்டுகளொலிக்கும் சீதளச்சோலைகள்மலிந்த மகோதையிலுள்ள திருவஞ்சைக்களத்தையடைய; கானிலங்கொளவலங்கொண்டு = அந்நாயனாரும் திருவடிகள் நிலந்தோயப் பிரதக்ஷிணஞ்செய்துகொண்டு; கடிமதிற்றிருவாயில்மேவினார் = காவல்பெற்ற மதிலின்திருவாயிலிற் சேர்ந்தார். எ-று. கால்நிலங்கொள வலம்வருதலாவது - பாதமுற்றும்படியமெல்ல வலம்வருதல். (௫௨)

தேவர்தங்குழாநெருங்கியவாய்தலிற்றிருநாவலூரார்தங்
காவன்மன்னரும்புறப்படவெதிர்கொண்டுகயிலைவீற்றிருக்கின்ற
பூவலம்புதண்புனற்சடைமுடியவராருளிப்பாடெனப்போற்றி
யேவலென்றபின்செய்வதொன்றிலாதவர்பணிந்தெழுந்தெதிரோற்றா.

(இ-ள்.) திருநாவலூரார்தங்காவன்மன்னரும் = திருநாவலூரார்க்குத் தலைவராகிய சுந்தரமூர்த்திநாயனாரும்; தேவர்தங்குழாநெருங்கியவாய்தலிற்புறப்பட = தேவர்கூட்டங்கள்செறிந்த திருவாயிலின்கண்ணே வெளிப்பட; எதிர்கொண்டுபோற்றி = அத்தேவரெல்லாம் எதிர்கொண்டிறைஞ்சி; கயிலைவீற்றிருக்கின்றபூவலம்புதண்புனற்சடைமுடியவராருளிப்பாடென = திருக்கயிலையில்வீற்றிருக்கும் சிவபெருமானுடைய ஆஞ்ஞையெனத்தெரிவிக்க; ஏவலென்றபின்செய்வதொன்றிலாதவர் = ஆஞ்ஞையெ

ன்றபின்பு செயற்பாலதொன்றுமில்லாத அந்நாயனுர்; பணிந்தெழுந்தெதிரேற்ருர் = இறைவரைத்துதித்துவணங்கி எதிரே அதனை அங்கீகரித்தார். எ-று.

கொன்றைமலர்முதலிய மலர்களோடு ததும்பும் குளிர்ந்த கங்கையைத்தரித்த சடைமுடியையுடையசம்புவின் ஆஞ்ஞையென்னலும எதிர்மொழிதலின்றி ஏற்ருரெ ன்பது. அருளிப்பாடு - ஆஞ்ஞை. (௫௩)

ஏற்றதொண்டரையண்டர்வெள்ளானையினெதிர்வலங்கொண்டேற்ற
நாற்றடங்கடன்முழக்கெனவைவகநாதமீதெழுந்தார்ப்பப்
போற்றிவானவர்பூமழைபொழிந்திடப்போதுவாருயிரெல்லாஞ் [ர்.
சாற்றுமாற்றங்களுணர்பெருந்துணைவரைமனத்தினிற்கொடுசார்ந்தா

(இ-ள்.) ஏற்றதொண்டரையண்டரெதிர்வலங்கொண்டுவெள்ளானையினேற்ற = அங்கீகரித்த நம்பியாரூரரை இமையவர் எதிர்வலம்புரிந்து வெள்ளானையினேற்றுத லும்; நாற்றடங்கடன்முழக்கெனவைவகநாதமீதெழுந்தார்ப்ப = நாற்புறத்தும் பரந்தகடலொலிபோலப் பஞ்சவாத்தியங்களின்முழக்கம் விண்ணிற்பரவியொலிக்க; வானவர்போற்றிப்பூமழைபொழிந்திடப்போதுவார் = தேவர்களிறைஞ்சிப் புஷ்ப வருஷஞ்சொரியச் செல்வாராகியதிருநாவலூரர்; உயிரெல்லாஞ்சாற்றுமாற்றங்களு ணர்பெருந்துணைவரை = உயிரனைத்தும்வசனிக்கும் உரைகளையெல்லாம் உணரும் கழறிற்றறிவாரென்னும் உண்மைநட்பினரை; மனத்தினிற்கொடுசார்ந்தார் = திருவு ளத்திலே சிந்தித்துக்கொண்டு சென்ருர். எ-று. (௫௪)

சேரர்தம்பிரான்றம்பிரான்ருேழர்தஞ்செயலறிந்தப்போதே
சாரநின்றதோர்பரியினைமிசைக்கொண்டுதிருவஞ்சைக்களஞ்சார்வார்
வீரவெண்களிறுகைத்துவிண்மேற்செலுமெய்த்தொண்டர்தமைக்கண்டார்
பாரினின்றிலர்சென்றதம்மனத்தொடுபரியுமுன்செலவிட்டார்.

(இ-ள்.) சேரர்தம்பிரான்றம்பிரான்ருேழர்தஞ்செயலறிந்து = சேரமான்பெருமாணு யனுர்தம்பிரான்ருேழராகியதிருமுனைப்பாடிநாட்டுத்தலைவர செய்கையைத்தேர்ந்து; அப்போதேசாரநின்றதோர்பரியினைமிசைக்கொண்டு = அப்பொழுதேசமீபமாகநின் றதொருகுதிரையின்மீதிவர்ந்து; திருவஞ்சைக்களஞ்சார்வார் = திருவஞ்சைக்களத்தை அடைவாராகிவருங்கால்; வீரவெண்களிறுகைத்துவிண்மேற்செலுமெய்த்தொண்டர் தமைக்கண்டார் = வெற்றிபெற்றவெள்ளையானையையூர்ந்து ஆகாயத்திலேசெல்லும்நம் பியாரூரரைநோக்கினுர்; பாரினின்றிலர் = உடனே அவனியில்நில்லாதவராய்; சென்ற தம்மனத்தொடுபரியுமுன்செலவிட்டார் = அவ்வாரூரர்பாலடைந்த உள்ளத்தோடுஅ ரியபரியையும் முற்படவிடுத்தார். எ-று. சார்வார்கண்டாரென இயையும். (௫௫)

விட்டவெம்பரிச்செவியினிற்புவிமுதல்வேந்தர்தாம்விதியாலே
யிட்டமாஞ்சிவமந்திரமோதலினிருவிசும்பெழப்பாய்ந்து
மட்டலர்ந்தபைந்தெரியல்வன்ருெண்டர்மேல்கொண்டமாதங்கத்தை
முட்டவெய்திமுன்வலங்கொண்டுசென்றதுமற்றதன்முன்னுக.

(இ-ள்.) புவிமுதல்வேந்தர் = இப்பூமிக்குத்தலைமையெய்திய சேரகுலாதிபர் தாம்விட்டவெம்பரிச்செவியினில் = தாம்விடுத்த வேகத்தையுடைய குதிரையின்செ வியிலே; இட்டமாஞ்சிவமந்திரம்விதியாலேயோதலின் = இஷ்டசித்தியைப்பயக் கும் ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி உபதேசித்தமையால்;இருவிசும்பெழப்பாய்ந்து=

அது அகன்ற ஆகாயத்திலேபாய்ந்து; மட்டலர்ந்தபைந்தெரியல்வன்றொண்டர்மேல் கொண்டமாதங்கத்தை = வாசனைவிரிந்தமலர்மாலையணிந்த வன்றொண்டப்பெருமானூரும் யானையை; முட்டவெய்திமுன்வலங்கொண்டு = அணுக அடைந்து எதிரே வலம்வந்து; அதன்முன்னாகச்சென்றது = அதற்குமுற்படச் சென்றது. எ-று. மற்று- அசை.

இட்டமாஞ்சிவமந்திரமெனக் காரியத்தைக் காரணமாகவுபசரித்தார். இட்டம் பயத்தலை, "நல்லவர் தீய ரெனாது நச்சினர் - செல்லல் கெடச்சிவ முத்தி காட்டுவ - கொல்ல நமன்றமர் கொண்டுபோமிடத் - தல்லல் கெடுப்பன வஞ்செ ழுத்துமே." என்னும் தேவாரத்தானுமுணர்க. (ருகூ)

உதியர்மன்னவர்தம்பெருஞ்சேனையினுடன்சென்றபடைவீரர்
கதிகொள்வாசியிற்செல்பவர்தமையுடற்தங்கட்புலப்படுமெல்லை
யெதிர்விசும்பினிற்கண்டுபின்கண்டிலராதலினெல்லாரு
முதிருமன்பினிலுருவியசுரிகையான்முறைமுறையுடல்வீழ்த்தார்.

(இ-ள்.) உதியர்மன்னவர்தம்பெருஞ்சேனையினுடன்சென்றபடைவீரர் = சேரர்குலக்குரிசிலாரது சேனையோடுவந்த படைவீரர்கள்; கதிகொள்வாசியிற்செல்பவர் தம்மை = வேகத்தைவாய்ந்த வெம்பரியிற்செல்லும் தலைவரை; தங்கட்புலப்படுமெல்லை = தங்களுடையகண்களுக்குப்புலப்படுமளவும்; விசும்பினிலெதிர்கண்டுபின்கண்டிலராதலின் = ஆகாயத்திலே எதிர்நோக்கிப் பின்காணாமையால்; எல்லாருமுதிருமன்பினிலுருவியசுரிகையால் = அவரனைவரும் முதிர்ந்தஅன்பினாலே உடையினின்றும் உருவிய கத்தியால்; முறைமுறையுடல்வீழ்த்தார் = தங்கள் தங்களுடையதேகத்தைச்சேதித்து வீழ்வித்தார். எ-று. (ருஎ)

வீரயாக்கையைமேற்கொண்டுசென்றுபோய்வில்லவர்பெருமானைச்
சாரமுன்சென்றுசேவகமேற்றனர்தனித்தொண்டர்மேல்கொண்ட
வாருமும்மதத்தருவிவெள்ளானைக்குவயப்பரிமுன்வைதாச்
சேரர்வீரருஞ்சென்றனர்மன்றவர்திருமலைத்திசைநோக்கி.

(இ-ள்.) சேரர்வீரரும் = அங்ஙனஞ்சேதித்த அப்படைவீரரும்; வீரயாக்கையை மேற்கொண்டுசென்றுபோய் = வீரயாக்கையைப்பெற்று விரைந்துசென்று; வில்லவர்பெருமானைச்சாரமுன்சென்று சேவகமேற்றனர் = சேரர்குலாதிபனைச் சமீபிக்க எதிர்ந்து அவரேவலைமேற்கொண்டவராய்; தனித்தொண்டர்மேல் கொண்ட = சுந்தரமூர்த்திநாயனார் ஊருகின்ற; வாருமும்மதத்தருவிவெள்ளானைக்குவயப்பரி முன்வைத்து = பெருகும் மும்மதஅருவியையுடைய வெள்ளானைக்குமுற்செல்லும் வெற்றி பெற்றகுதிரைக்குத் தாம்முற்பட்டு; மன்றவர்திருமலைத்திசைநோக்கிச்சென்றனர் = சிற்றம்பலமுடையாரது திருக்கயிலைமலைத்திசையைநோக்கிச்சென்றார். எ-று.

வீரத்தாலுடல்வீழ்ப்பவர் வீரயாக்கைபெறுதல் ஒருதலையாகலின், இவரும் அவ்வாறே உடல்வீழ்த்து வீரயாக்கைபெறுத்தேவராய்ச் சேரர்குலாதிபர்முன் சென்றாரென்க. சேரர்குலத்தார் விற்கொடியுடையாராகலின வில்லவரெனப் பெயர்பெற்றனர். (ருஅ)

யானைமேல்கொண்டுசெல்கின்றபொழுதினிமையவர்குழாமென்னுந்
தானைமுன்செலத்தானெனைமுன்படைத்தானெனுந்தமிழ்மாலை

மானவன்றொண்டர்பாடிமுன்னணைந்தனர்மதிநதிபொதிவேணித்
தேனலம்புதண்கொன்றையார்திருமலைத்தென்றிசைத்திருவாயில்.

(இ - ள்.) மானவன்றொண்டர் = மாட்சிமைப்பட்ட வன்றொண்டப்பெருமான்; இமையவர்சூழாமென்னுந்தானைமுன்செல = தேவகூட்டமென்னும் சேனைகள் முற்படும்படி; யானைமேல்கொண்டுசெல்கின்றபொழுதினில் = யானையூர்ந்து செல்லும்போது; தானெனைமுன்படைத்தானெனுந்தமிழ்மாலைபாடி = "தானெனைமுன்படைத்தான்" என்னும் தமிழ்த்திருப்பாமாலையை அருளிச்செய்துகொண்டு; மதிநதிபொதிவேணி = சந்திரனும் கங்கையுந்தழைந்த சடைமுடியிலே; தேனலம்புதண்கொன்றையார் = வண்டுகளொலிக்கும் குளிர்ந்தகொன்றைமாலிகையணிந்த வள்ளலார் அமரும்; திருமலைத்தென்றிசைத்திருவாயில்முன்னணைந்தனர் = திருக்கயிலைமலைத் தென்றிசைத்திருவாயிலினெதிரே சேர்ந்தார். எ - று.

பொழுதினில் பாடியணைந்தார் என இயையும் (௩௯)

## * திருநொடித்தான்மலை-பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

தானெனைமுன்படைத்தானதறிந்துதன்பொன்னடிக்கே
நானெனபாடலந்தோநாயினேனைப்பொருட்படுத்து
வானெனைவந்தெதிர்கொண்மத்தயானையருள்புரிந்
தூனுயிர்வேறுசெய்தானொடித்தான்மலையுத்தமனே.

ஆனையுரித்தபகையடியேனொடுமீளக்கொலோ
ஊனையுயிர்வெருட்டியொள்ளியானைநினைந்திருந்தேன்
வானைமதித்தமரர்வலஞ்செய்தெனையேறவைக்க
வானையருள்புரிந்தானொடித்தான்மலையுத்தமனே.

மந்திரமொன்றறியேன்மனைவாழ்க்கைமகிழ்ந்தடியேன்
சுந்தரவேடங்களாற்றுரிசேசெயுந்தொண்டனெனை
யந்தரமால்விசும்பிலழகானையருள்புரிந்த
துந்தரமோநெஞ்சமேநொடித்தான்மலையுத்தமனே.

வாழ்வையுகந்தநெஞ்சமடவார்தங்கள்வல்வினைப்பட்
டாழமுகந்தவென்னையதுமாற்றியமரரெலாஞ்
சூழவருள்புரிந்துதொண்டனேன்பரமல்லதொரு
வேழமருள்புரிந்தானொடித்தான்மலையுத்தமனே.

மண்ணுலகிற்பிறந்துநும்மைவாழ்த்தும்வழியடியார்
பொன்னுலகம்பெறுதறொண்டனேனின்றுகண்டொழிந்தேன்
விண்ணுலகத்தவர்கள்விரும்பவெள்ளையானையின்மே
லென்னுடல்காட்டுவித்தானொடித்தான்மலையுத்தமனே.

அஞ்சினையொன்றிநின்றுவலர்கொண்டடிசேர்வறியா
வஞ்சனையென்மனமேவைகிவானநன்றொடர்முன்னே

* நொடித்தல் = சங்கரித்தல்.



சுந்தரமூர்த்திசுவாமிகள் திருக்கைலைக்குச்சென்று சிவபெருமானைத்தொழுது தனதுரிமைத்தொண்டடைந்தது

துஞ்சுதன்மாற்றுவித்துத்தொண்டனேன்பரமல்லதொரு
வெஞ்சினவானைதந்தானொடித்தான்மலையுத்தமனே.

நிலைகெடவிண்ணதிரநிலமெங்குமதிர்ந்தசைய
மலையிடையானையேறிவழியேவருவேனெதிரே
யலைகடலாலரையனலர்கொண்டுமுன்வந்திறைஞ்ச
வுலையணையாதவண்ணநொடித்தான்மலையுத்தமனே.

அரவொலியாகமங்களறிவாரறிதோத்திரங்கள்
விரவியவேதவொலிவிண்ணெலாம்வந்தெதிர்ந்திசைப்ப
வரமலிவாணன்வந்துவழிதந்தெனக்கேறுவதோர்
சிரமலியானைதந்தானொடித்தான்மலையுத்தமனே.

இந்திரன்மால்பிரமனெழிலார்மிகுதேவரெல்லாம்
வந்தெதிர்கொள்ளவென்னைமத்தயானையருள்புரிந்து
மந்திரமாமுனிவரிவனாரெனவெம்பெருமா
னந்தமரூரனென்றானொடித்தான்மலையுத்தமனே.

ஊழிதொறூழிமுற்றுமுயர்பொன்னொடித்தான்மலையைச்
சூழிசையின்கரும்பின்சுவைநாவலவூரன்சொன்ன
வேழிசையின்றமிழாலிசைந்தேத்தியபத்தினையு
மாழிகடலரையாவஞ்சையப்பர்க்கறிவிப்பதே.

திருச்சிற்றம்பலம்.

---

மாசில்வெண்மைசேர்பேரொளியுலகெலாமலர்ந்திடவளர்மெய்ம்மை
யாசிலன்பர்தஞ்சிந்தைபோல்விளங்கியவணிகிளர்மணிவாயிற்
றேசுதங்கியயானையும்புரவியுமிழிந்துசேணிடைச்செல்வா
ரீசர்வெள்ளிமாமலைத்தடம்பலகடந்தெய்தினர்மணிவாயில்.

(இ - ள்.) ஆசின்மெய்ம்மைவளர் அன்பர்தஞ்சிந்தைபோல் = ஆசகன்ற உண்மைவளரும் அன்பர்களுடைய இருதயம்போல; மாசில்வெண்மைசேர்பேரொளி = களங்கமற்றவெண்மைகலவியமிக்கவொளி; உலகெலாமலர்ந்திடவிளங்கி[illegible]ணிகிளர் மணிவாயில் = உலகமுற்றும்பரம்ப விளங்கிய அலங்காரம்பெற்ற அ[illegible]ருவாயிலில்; தேசுதங்கியயானையும்புரவியுமிழிந்துசேணிடைச்செல்வார் = ஒ[illegible]பெற்ற யானையினும் புரவியினும் இறங்கி நெடுந்தூரம்செல்வாராகி; ஈசர்வெள்ளிமாமலை = எவர்க்குந்திருவருள்புரியும் எம்பெருமானமரும்பெருமையெய்திய வெள்ளியங்கிரியிலுள்ள; தடம்பலகடந்துமணிவாயிலெய்தினர் = இடங்கள்பலவற்றைக்கடந்து சந்நிதித்திருவாயிலை அடைந்தார். எ-று.

யானையும் புரவியும் என்னும் இருமொழியினும் ஐந்தனுருபுகள்தொக்கன. (௬௦)

அங்கணெய்தியதிருவனுக்கன்றிருவாயிலினடற்சேரர்
தங்கள்காவலர்தடையுண்டுநின்றனர்தம்பிரானருளாலே
பொங்குமாமதம்பொழிந்தவெள்ளானையினும்பர்போற்றிடப்போந்த
நங்கள்காவலர்நாவலர்காவலர்நண்ணினார்திருமுன்பு.

(இ-ள்.) அங்கணைய்திய திருவணுக்கன் திருவாயிலின் = அங்கே பொருந்திய திருவணுக்கன் திருவாயிலிலே; அடற்சேரர் தங்கள் காவலர் தடையுண்டுநின்றனர் = வெற்றிபெற்ற சேரமான்பெருமாணாயனார் தடைப்பட்டுநின்றார்; தம்பிரானருளாலே = சிவபெருமான் திருவருளினாலே; பொங்குமாமதம்பொழிந்தவெள்ளானையின் = விரிந்த கருநிறம்பெற்ற மும்மதஞ்சொரியும் வெள்ளானையின்மீது; உம்பர்போற்றிடப்போந்த = தேவர்வணங்கும்படி வந்த; நங்கள்காவலர்நாவலர்காவலர் = நங்கட்குத் தலைவரும் நாவலர்பெருமானுமாகிய சுந்தரமூர்த்திநாயனார்; திருமுன்புநண்ணினார் = சிவபெருமான் சந்நிதிமுன்னர்ச் சேர்ந்தார். எ-று. (௪௧)

சென்றுகண்ணுதறிருமுன்புதாழ்ந்துவீழ்ந்தெழுந்துசேணிடைவிட்ட
கன்றுங்காவினைக்கண்டணைந்ததுவெனக்காதலின்விரைந்தெய்தி
நின்றுபோற்றியதனிப்பெருந்தொண்டரைநேரிழைவலப்பாகத்
தொன்றுமேனியரூரனேவந்தனையென்றனருலகுய்ய.

(இ - ள்.) கண்ணுதறிருமுன்புசென்று - கண்படைத்த நெற்றியையுடைய கடவுளின் சந்நிதிமுற்போந்து; தாழ்ந்துவீழ்ந்தெழுந்து = விழுந்து வணங்கியெழுந்து; சேணிடைவிட்டகன்றுகோவினைக்கண்டணைந்ததுவென = நெடுந்தூரத்திலே விடப்பட்ட கன்றானது பசுவைக்கண்டு விரைந்துவந்ததுபோல; காதலின்விரைந்தெய்தி = காதலோடுவிரைந்தணுகி; நின்றுபோற்றியதனிப்பெருந்தொண்டரை = நின்றுதுதித்த நிகரற்றபெரியதொண்டராகிய வன்றொண்டப்பெருமானை; நேரிழைவலப்பாகத் தொன்றுமேனியர் = உமாதேவியாருடைய வலப்பாகத்திருமேனியராய் ஒளிரும் பெருமான்; உலகுய்யவூரனேவந்தனையென்றனர் = உலகமெல்லாம் உய்யும்படி ஆரூரனே வந்தனையோவென வினவியருளினார். எ-று. (௪௨)

அடியனேன்பிழைபொறுத்தெனையாண்டுகொண்டத்தொடக்கினைநீக்கி
முடிவிலாநெறிதரும்பெருங்கருணையென்றரத்ததோவெனமுன்னர்ப்
படியுநெஞ்சொடும்பன்முறைபணிந்தெழும்பரம்பரையானந்த
வடிவுநின்றதுபோன்றின்பவெள்ளத்துமலர்ந்தனர்வன்றொண்டர்.

(இ - ள்.) அடியனேன்பிழைபொறுத்தெனையாண்டுகொண்டு = எளியேன்பிழையைப்பொறுத்தருளி என்னை வலிந்து அடிமைகொண்டு; அத்தொடக்கினைநீக்கி = அப்பாசத்தையறுத்து; முடிவிலாநெறிதரும்பெருங்கருணை = அழிவிலாத முத்திநெறியைத்தந்தருளிய இப்பேரருள்; என்றரத்ததோவென = என்னளவினதோவென்று; முன்னர்ப்படியுநெஞ்சொடும்பன்முறைபணிந்தெழும்பரம்பரை = சந்நிதிமுன்னர்த் தாழ்ந்த உள்ளத்தோடு பலகால்வணங்கியெழும் தொடர்ச்சியோடு; வன்றொண்டரானந்தவடிவுநின்றதுபோன்றின்பவெள்ளத்துமலர்ந்தனர் = வன்றொண்டப்பெருமான் ஆனந்தவுருவம் நின்றதுபோலச் சிவானந்தவெள்ளத்தழுந்தி நின்றார். எ-று.

இப்பேரருள் எனக்குப்பாலிக்கத்தக்க அளவிற்றன்று மிக்கது என்றவாறு. பரம்பரை என்புழி மூன்றனுருபுதொக்கது. மலர்தல்-ஈண்டுச் சிவானந்தவெள்ளத்திலமிழ்ந்து களித்தல். (௪௩)

நின்றவன்றொண்டர்நீரணிவேணியர்நிறைமலர்க்கழல்சாரச்
சென்றுசேரலன்றிருமணிவாயிலின்புறத்தினனெனச்செப்பக்
குன்றவில்லியார்பெரியதேவரைச்சென்றுகொணர்கெனவவரெய்தி
வென்றிவானவர்க்கருளிப்பாடெனவவர்கழறொழவிரைந்தெய்தி.

(இ - ள்.) நின்றவன்றொண்டர் = இங்ஙனம் எதிர்நின்ற நம்பியாரூரர்; நீரணி வேணியர்நிறைமலர்க்கழல்சாரச்சென்று = கங்கையைத்தரித்த சடைமுடியையுடைய கடவுளின் எங்கும்வியாபித்தமலர்போலும்திருவடிகளினருகேசேர்ந்து; சேரலன்றிருமணிவாயிலின்புறத்தினனெனச்செப்ப = சேரமான்பெருமாள் திருவணுக்கன்திருவாயிலின்புறத்தேநிற்கின்றானென்று விண்ணப்பித்தலும்; குன்றவில்லியார் = மேருமலைவில்லாகவுடைய விமலர்; பெரியதேவரைச்சென்றுகொணர்கென = மிக்கதேவரைநோக்கிக் கொண்டுவருகவென்று கட்டளையிட; அவரெய்திவென்றிவானவர்க்கருளிப்பாடென = அவர்சென்று வெற்றிபெற்ற சேரமான்பெருமாணாயனாருக்கு (வரும்படி) ஆஞ்ஞையென அறிவித்தவுடனே; அவர்கழறிற்றறிவார்நண்ணிடை — அவர்கழறிற்றறிவாரும் நண்ணி; அங்கணர் பெருமான்றிருவடிகளைவணங்க விரைவிலடைந்து. எ-று.

வானவர் - சேரர். கழல்வீழ்ந்தென்பது பாடமேல் திருவடிகளை அங்குநின்றும் வணங்கிக்கொண்டு எனப்பொருள்கொள்க. (௬௪)

மங்கைபாகர்தந்திருமுன்புசெய்த்தாகவந்தித்துமகிழ்வெய்திப்
பொங்குமன்பினிற்சேரலர்போற்றிடப்புதுமதியலைகின்ற
கங்கைவார்சடைக்கயிலைநாயகர்திருமுறுவலின்கதிர்காட்டி
யிங்குநாமழையாமைநீயெய்தியதென்னெனவருள்செய்தார்.

(இ - ள்.) மங்கைபாகர்தந்திருமுன்பு = இறைவியை வாமபாகத்துடைய இறைவர்திருமுன்னர்; செய்த்தாகவந்தித்துமகிழ்வெய்தி = தூரமாகநின்று தொழுதுகளித்து; பொங்குமன்பினிற்சேரலர்போற்றிட = பெருகும் அன்பினாற் சேரமான்பெருமாணாயனார் துதிக்க; புதுமதியலைகின்றகங்கைவார்சடைக்கயிலைநாயகர் = இளம்பிறையலையும் கங்கையேய்ந்த நீண்டசடையையுடைய திருக்கயிலைப்பெருமான்; திருமுறுவலின்கதிர்காட்டி = திருப்புன்முறுவலின் ஒளியைக்காட்டியருளி; நாமழையாமையிங்குநீயெய்தியதென்னெனவருள்செய்தார் = யாம் அழையாமலே இங்கு நீ வந்தது என்னையென வினவியருளினார். எ-று. (௬௫)

அரசரஞ்சலிகூப்பிநின்றடியனேனாரூரர்கழல்போற்றிப்
புரசையானைமுன்சேவித்துவந்தனன்பொழியுநின்கருணைத்தெண்[ண்
டிரைசெய்வெள்ளமுன்கொடுவந்துபுகுத்தலிற்றிருமுன்புவரப்பெற்றே
விரைசெய்கொன்றைசேர்வேணியாயினியொருவிண்ணப்பமுளதென்று.

(இ-ள்.) அரசரஞ்சலிகூப்பிநின்று = சேரர்குலாதிபர் அஞ்சலிசெய்துகொண்டு நின்று; அடியனேனாரூரர்கழல்போற்றி = சிறியேன் நம்பியாரூராருடைய திருவடிகளைவணங்கிக்கொண்டு; புரசையானைமுன்சேவித்துவந்தனன் = வெள்ளையானைக்கு முன்னே தொழுதுபோந்தேன்; பொழியுநின்கருணைத்தெண்டிரைசெய்வெள்ளம் = தேவரீர்பொழியும்தெள்ளியதிருவருட்பெருவெள்ளம்; முன்கொடுவந்துபுகுத்தலில் = முன்னரிழுத்துவந்து ஈண்டடைவித்தமையால்; திருமுன்புவரப்பெற்றேன் = சந்நிதி முன்னர் எய்தப்பெற்றேன்; விரைசெய்கொன்றைசேர்வேணியாய் = மணங்கமழும் கொன்றைமாலிகைதங்கிய சடைமுடியையுடைய தலைவரே; இனியொருவிண்ணப்பமுளதென்று = இப்பொழுது அடியேன் இரந்து கொள்ளும் ஒருவிண்ணப்பம் இருக்கின்றதென்று. எ-று.

புரசை - யானைக்கழுத்திற்செறித்தகயிறு. அளவிறந்தகருணையென்பார், "கருணைத்தெண்டிரைசெய்வெள்ளம்" என்றார். பெரும்பாலும் எதிர்காலம் பற்றிவரும்

இனியென்னும் இடைச்சொல் நிகழ்காலத்தில் வந்தது. "பண்டறியேன்கூற்றென்ப தனை யினியறிந்தேன்." என்னும் திருக்குறளினிற்போல. (௭௬)

பெருகுவேதமுமுனிவருந்துதிப்பரும்பெருமையாயுனைப்போற்றித்
திருவுலாப்புறம்பாடினேன்றிருச்செவிசாற்றிடப்பெறவேண்டு
மருவுபாசத்தைபகன்றிடவன்றொண்டர்கூட்டம்வைத்தாயென்ன
வருளுமீசருஞ்சொல்லுகவென்றனரன்பருங்கேட்பித்தார்.

(இ-ள்.) மருவுபாசத்தையகன்றிட=அநாதியாகத்தொடர்ந்தபாசத்தை அகல;வன்றொண்டர்கூட்டம்வைத்தாய்=அடியேனுக்கு வன்றொண்டப்பெருமானது நட்பை யருளியநாதரே; பெருகுவேதமுமுனிவருந்துதிப்பரும்பெருமையாய் = மிக்கவேதங்களும் முனிவர்களும் பரவுதற்கரிய மேன்மையையுடையபெருமானே; அன்பாலுனைத்திருவுலாப்புறம்பாடினேன் = அன்பினாலே தேவரீரைக்குறித்துப் புறப்பாட்டுத்திருவுலாப்பாடினேன்; திருச்செவிசாத்திடப்பெறவேண்டுமென்ன=திருச்செவிசாத்தியருளல்வேண்டுமென்று பிரார்த்திக்க; அருளுமீசருஞ்சொல்லுகவென்றனர்=அருள்பாலிக்கும்பெருமானும் சொல்லுகவென்று ஆஞ்ஞாபித்தார்; அன்பருங்கேட்பித்தார்=அந்நாயனாரும்திருச்செவிசார்வித்தார். எ-று.

புறத்தே திருவுலாவருதலைச்சுட்டி இயற்றலின் புறத்திருவுலாவென வழங்கற்பாலது உலாப்புறமெனவழங்கல் இலக்கணப்போலி. (௭௭)

# சேரமான்பெருமாநாயனார்

அருளிச்செய்த

## * திருக்கைலாச ஞானவுலா.

### கலிவெண்பா.

திருமாலு நான்முகனுந் தேர்ந்துணரா தன்றங்
கருமா லுற வழலாய் நின்ற—பெருமான்
பிறவாதே தோன்றினான் காணாதே காண்பான்
றுறவாதே யாக்கை துறந்தான்—முறைமையா
லாழாதே யாழ்ந்தா னகலாத கலியா
னூழா லுயராதே யோங்கினான்—சூழொளிநா
லோதா துணர்ந்தா னுணுகாது நுண்ணியான்
யாது மணுகா தணுகியா—னாதி
யரியாகிக் காப்பா னயனாய்ப் படைப்பா
னரனா யழிப்பவனுந் தானே—பரனாய
தேவரறியாத தோற்றத்தான் றேவனைத்தான்
மேவிய வாறே விதித்தமைத்தா—னேவாதே
யெவ்வுருவில் யாரொருவ ருள்குவா ருள்ளத்து
ளவ்வுருவாய்த் தோன்றி யருள்கொடுப்பா—னெவ்வுருவுந்
தானேயாய் நின்றளிப்பான் றன்னிற்பிறிதுருவ
மேனோர்க்குங் காண்பரிய வெம்பெருமா—னானை

* இத்திருவுலா ஆதியுலாவெனவும் பெயர் பெறும்.

சீரார் சிவலோகந் தன்னுட் சிவபுரத்தி
லேரார் திருக்கோயி லுள்ளிருப்ப—வாராய்ந்து
செங்க ணமரர் புறங்கடைக்கட் சென்றீண்டி
யெங்கட்குக் காட்சியரு ளென்றிரப்ப—வங்கொருநாட்
பூமங்கை பொய்தீர் தரணி புகழ்மங்கை
நாமங்கை யென்றிவர்க ணன்கமைத்த—சேமங்கொண்
ஞானக் கொழுந்து நகராசன் றன்மடந்தை
தேன்மொய்த்த குஞ்சியின்மேற் சிதறிப்ப—வூனமில்சீர்
நந்தா வனமலரு மந்தா கினித்தடஞ்சேர்
செந்தா மரைமலர்நூ றாயிரத்தா—னைந்தா
வயந்தன் றொடுத்தமைத்த வாசிகை சூட்டி
நயந்திகழு நல்லுவப்புக் கூட்டிப்—பயன்கொள்
குலமகளிர் செய்த கொழுஞ்சாந்தங் கொண்டு
நலமலிய வாகந் தழீஇக்—கலைமலிந்த
கற்பக மீன்ற கமழ்பட் டினையுடுத்துப்
பொற்கழல்கள் கான்மேற் பொலிவித்து—விற்பகருஞ்
சூளா மணிசேர் முடிகவித்துச் சூட்டிசேர்
வாளார் நுதற்பட்ட மன்னுவித்துத்—தோளா
மணிமகர குண்டலங்கள் காதுக் கணிந்தாங்
கணிவயிரக் கண்டிகை பொன்ஞாண்—பணிபெரிய
வார மவைபூண் டணிதிகழும் பொற்சன்ன
வீரந் திருமார்பில் வில்லிலக—வேருடைய
வெண்டோட்டுக் கேயூரம் பெய்தாதர பந்தனமுங்
கண்டோர் மனமகிழக் கட்டுறீஇக்—கொண்டு
கடிசூத் திரம்புனைந்து கங்கணங்கைப் பெய்து
வடிவுடைய கோலம் புனைந்தாங்—கடிநிலைமே
னந்திமா காளர் கடைகழிந்து போந்தத்து
வந்து வசுக்க ளிருக்குரைப்ப—வந்தமில்சீ
ரெண்ணருங் கீர்த்தி யெழுவ ரிருடிகளு
மண்ணன்மே லாசிக ளாமுணர்த்த—வொண்ணிறத்த
பன்னிருவ ராதித்தர் பல்லாண் டெடுத்திசைப்ப
மன்னு மகதியன்யாழ் வாசிப்பப்—பொன்னியலு
மங்கி கமழ்தூப மேந்த யமன்வந்து
மங்கல வாசகத்தால் வாழ்த்துரைப்பச்—செங்க
ணிருதி முதலோர் நிழற்கலனை யேந்த
வருணன் மணிக்கலசந் தாங்கத்—தெருவெலாம
வாயு நனிவிளக்க மாமழைநீர்தெளிப்பத்
தூயசீர்ச் சோமன் குடையெடுப்ப—மேயசீ
ரீசானன் வந்தடைப்பை கைக்கொள்ள வச்சுனிகள்
வாயார்ந்த மந்திரத்தால் வாழ்த்துரைப்பத்—தூய
வுருத்திரர்க டோத்திரங்கள் சொல்லக் குபேர
னிருத்தகு மாநிதியஞ் சிந்தக்—கருத்தமைந்த

கங்கா நதியமுனை யுள்ளுறுத்த தீர்த்தங்கள்
பொங்கு கவரி புடையிரட்டத் — தங்கிய
பைந்நாக மெட்டுஞ் சுடரொடுப்பப் பைந்தறுகட்
கைந்நாக மெட்டுங் கழல்வணங்க — மெய்ந்நாக
மேகம் விதானமாய் மின்னெலாஞ் சூழ்கொடியாய்
மேகத் துருமு முரசறையப் — போகஞ்சேர்
தும்புரு நாரதர்கள் பாடத் தொடர்ந்தெங்குங்
கொம்புருவ நுண்ணிடையார் கூத்தாட — வெம்பெருமான்
விண்ணோர் பணிய வுயர்ந்த விளங்கொளிசேர்
வெண்ணார் மழவிடையை மேல்கொண்டாங் — கெண்ணார்
கருத்துடைய பாரிடங்கள் காப்பொத்துச் செய்யத்
திருக்கடைக ளேழ்கழிந்த போதிற் — செருக்குடைய
சேனா பதிமயின்மேன் முன்செல்ல யானைமே
லானைப்போ ரிந்திரன் பின்படர — வானாத
வன்னத்தே யேறி யயன்வலப்பால் கைபோதக்
கன்னவிலுந் திண்டோட் கருடன்மேன் — மன்னிய
மாலிடப்பாற் செல்ல மலரார் கணையைந்து
மேலிடப்பான் மென்கருப்பு வில்லிடப்பா — லெல்வுடைய
சங்கணையு முன்கைத் தடமுலையார் மேலெய்வான்
கொங்கணையும் பூவாளி கோத்தமைத்த — வைங்கணையான்
காமன் கொடிப்படைமுன் போதக் கதக்காரி
வாமன் புரவிமேல் வந்தணைய — நாமஞ்சேர்
வேழ முகத்து விநாயகனை யுள்ளுறுத்துச்
சூழ்வளைக்கைத் தொண்டைவாய்க் கெண்டையொண்கட் — டாழ்கூந்தன்
மங்கை யெழுவருஞ் சூழ மடநீலி
சிங்க வடலேற்றின் மேற்செல்லத் — தங்கிய
விச்சா தரரியக்கர் கின்னரர் கிம்புருட
ரச்சா ரணரரக்க ரோடசுர — ரச்சார்வுஞ்
சல்லரி தாளந் தகுணிதந் தத்தளகங்
கல்லலகு கல்ல வடமொந்தை — நல்லியத்
தட்டழி சங்கஞ் சலஞ்சலந் தண்ணுமை
கட்டழியாய் பேரி கரதாளங் — கொட்டுங்
குடமுழவங் கொக்கரை வீணை குழல்யா
ழிடமாந் தடாரி படக — மிடவிய
மத்தளந் துந்துபி வாய்ந்த முருடிவற்று
லெத்திசை தோறு மெழுந்தியம்ப — வொத்துடனே
மங்கலம் பாடுவார் வந்திறைஞ்ச மல்லருங்
கிங்கரரு மெங்குங் கிலுகிலுப்பத் — தங்கிய
வாறு மிருதுவும் யோகு மருந்தவமு
மாறாத முத்திரையு மந்திரமு — மீறார்ந்த
காலங்கண் மூன்றுங் கணமுங் குணங்களும்
வால கிலியரும் வந்தீண்டி — யேலை

யிமையோர் பெருமானே போற்றி யெழில்சே
ருமையாண் மணவாளா போற்றி—யெமையாளுந்
தீயாடி போற்றி சிவனே யடிபோற்றி
யீசனே யெந்தா யிறைபோற்றி—தூயசீரச்
சங்கரனே போற்றி சடாமகுடத் தாய்போற்றி
பொங்கரவா பொன்னங் கழல்போற்றி—யங்கொருநா
ளாய விழுப்போ ரருச்சுனன தாற்றற்குப்
பாசுபத மீந்த பதம்போற்றி—தூய
மலைமேலாய் போற்றி மயானத்தாய் வானோர்
தலைமேலாய் போற்றிதாள் போற்றி—நிலைபோற்றி
போற்றியெனப் பூமாரி பெய்து புலன்கலங்க
நாற்றிசையு மெங்கு நலம்பெருக—வேற்றுக்
கொடியும் பதாகையுங் கொற்றக் குடையும்
வடிவுடைய தொங்கலுஞ் சூழக்—கடிகமழும்
பூமாண் கருங்குழலா ருள்ளம புதிதுண்பான
வாமான வீசன் வருமபோழ்திற்—சேமேல

குழாங்கள்.

வாமான வீசன் மறுவில்சீர் வானவர்தங்
கோமான படைமுழக்கங் கேட்டலுமே—தூமாண்பில்
வானநீர் தாங்கி மறையோம்பி வான்பிறையோ
டூனமில் சூல முடையவா—யீனமிலா
வெள்ளை யணிதலால் வேழத் துரிபோர்த்த
வள்ளலே போலும் வடிவுடைய—வொளிய
மாட நவின் மலரா ரமளியே
கூடிய போர்க்கள மாக்குறித்துக்—கேழில்
சிலம்பு பறையாகச் சேயரிக்க ணம்பா
விலங்கு கொடும்புருவம் வில்லா—கலந்திகழுங்
கூழையின் றாழ வளையார்ப்பக் கைபோந்து
கேழ்கிளரு மல்குலாந் தேருந்திச்—சூழொளிய
கொங்கைமாப் பொங்கக் கொழுநர் மனங்கவர
வங்கம் பொருதசைந்த வாயிழையார்—செங்கேழற்
பொற்கலசத் துள்ளான் மணிநீர் முகஞ்சேர்த்தி
நற்பெருங் கோல மிகப்புனைந்து—பொற்புடைய
பேதை முதலாகப் பேரிளம்பெண் ணீறாக
மாதரவா சேர மகிழ்ந்தீண்டிச்—சோதிசேர்
குளிகையுஞ் சூட்டுஞ் சுளிகையுஞ் சுட்டிகையும்
வாளிகையும் பொற்றோடு மின்விலக—மாளிகையின்
மேலேறி நின்று தொழுவார் துயர்கொண்டு
மாலேறி நின்று மயங்குவார்—நூலேறு
தாமமே தந்து சடாதாரி நல்கானேல்
யாமமே லெம்மை யடுமென்பார்—காமவே
ளாமென்பா ரன்றென்பா ரையுறுவார் கையெறிவாா
தாமுன்னை நாணொடு சங்கிழப்பார்—பூமன்னும்

பொன்னரி மாலையைப் பூண்பாரப் பூண்கொண்டு
துன்னரி மாலையாச் சூட்டுவார் — முன்ன
மொருக ணெழுதிவிட் டொன்றெழுதா தோடித்
தெருவம் புகுவார் திகைப்பா — ரருகிருந்த
கண்ணாடி மேற்பஞ்சு பெய்வார் கிளியென்று
பண்ணாடிச் சொற்பந்துக் குற்றனைப்பா — ரண்ணன்மேற்
கண்ணென்னு மாசாலங் சோலிக் கருங்குழலார்
திண்ண நிறைத்தா டிறந்திட்டா — ரொண்ணிறத்து

## பேதை.

பேதைப் பருவம் பிழையாதா ளெண்மணலாற்
றாதைச் சிறுசோ றடுதொழிலா — ளோதி
விடையாலு மெக்கழுத்த மாட்டா ணலஞ்சே
ருடையாலு முள்ளுருக்க கில்லா — ணடையாலுங்
கௌவைநோய் காளையரைச் செய்யாள் கதிர்முலைக
ளெவ்வநோய் செய்யுந் தொழில்பூணா — ளெவ்வனோர்
நோக்கிலு நோய்நோக்க நோக்காடன் செவ்வாயின்
வாக்கும் பிறர்மனத்தை வஞ்சியா — ளூக்குழலும்
பாடவந் தோன்ற முடியா விளைவெய்த்தோ
ளாடவர் தம்மை யயர்வுசெய்யா — ணாடோறு
மொன்றுரைத் தொன்றுணரி யொன்றுசெய் தொன்றின்கட்
சென்ற மனத்தனளாஞ் சேயிழையா — ணன்குகத்
தாலி கழுத்தணிந்து சந்தனத்தான் மெய்பூசி
நீல வறுவை விரித்துடுத்துக் — கோலஞ்சேர்
பந்தலிற் பாவைகொண் டாடுமிப் பாவைக்குத்
தந்தையா ரென்றொருத்தி தான்வினவ — வந்தமில்சீ
ரீச னெரியாடி யென்ன வவனையோர்
காய்சின மால்விடைமேற் கண்ணுற்றுத் — தாய்சொன்ன
விக்கணக்கு நோக்கா ளிவள்போல்வாள் காமனூ
னற்கணைக்கின் மேற்சிறிதே நாட்செய்தாள் — பொற்புடைய

## பெதும்பை.

பேரொளிசேர் காட்சிப் பெதும்பைப் பிராயத்தாள
காரொளிசேர் மஞ்ஞைக் கவினியலாள் — சீரொளிய
தாமரை யொன்றி னிரண்டு குழையிரண்டு
காமருவு கெண்டையோர் செந்தொண்டை — தூமருவு
மூத்த முரிவெஞ் சிலைசுட்டி செம்பவளம்
வைத்தது போலு மதிமுகத்தா — ளொத்தமைந்த
கங்கணஞ் சோந்திலங்கு கையாள் கதிர்மணியின்
கிங்கிணி சேர்ந்த திருந்தடியா — ளொண்கேழ
லந்துகில் சூழ்ந்தசைந்த வல்குலா ளாய்பொதியிற்
சந்தனந் தோய்ந்த தடந்தோளாள் — வந்து
இடரிட்ட திண்வரைக்கண் செய்த முலையாள்
கடல்பட்ட வின்னமுத மன்னாண் — மடல்பட்ட

மாலை வளாய குழலாண் மணநாறு
சோலை யிளங்கிளிபோற் றூமொழியாள்—சாலவும
வஞ்சனை செய்து மனங்கவரும் வாட்கண்ணுக்
கஞ்சனத்தை யிட்டங் கழகாக்கி—யெஞ்சா
மணியாரம் பூண்டாழி மெல்விரலிற் சேர்த்தி
யணியார் வளைதோண்மேன் மின்ன—மணியார்த்த
தூவெண் மணற்கொண்டு தோழியருந் தானுமாய்க்
காம னுருவம் வரவெழுதிக்—காமன்
கருப்புச் சிலையு மலரம்புந் தேரு
மொருப்பட் டெனெழுதும் போழ்தில்—விருப்பூருந்
தேனமருங் கொன்றையந்தார்த் தீர்த்தன் சிவலோகன்
வானமா லேற்றின்மேல் வந்தணையத்—தானமர
நன்றறிவார் சொன்ன நலந்தோற்று நாண்டோற்று
நின்றறிவு தோற்று நிறைதோற்று—நன்றாகக்
கைவண்டுங் கண்வண்டு மோடக் கலையோட
நெய்விண்ட பூங்குழலா ணின்றொழிந்தாண்—மெய்கொண்ட

## மங்கை.

மங்கை யிடங்கடவா மாண்பினுள் வானிழிந்த
கங்கைச் சுழியனைய வுந்தியா—டங்கிய
வங்கை கமல மடிகமல மானோக்கி
கொங்கை கமல முகங்கமலம்—பொங்கெழிலா
ரிட்டிடையும் வஞ்சி யிரும்பணைத்தோள் வேயெழிலார்
பட்டுடைய வல்குலுந் தேர்த்தட்டு—மட்டுவிரி
கூந்த லறல்பவளஞ் செய்யவா யவ்வாயி
லேய்ந்த மணிமுறுவ லின்முத்தம்—வாய்ந்தசீர்
வண்டு வளாய வளர்வா சிகைசூட்டிக்
கண்டி கழுத்திற் கவின்சேர்த்திக்—குண்டலங்கள்
காதுக் கணிந்து கனமே கலைதிருத்தித
தீதில் செழுங்கோலஞ் சித்திரித்து—மாதரார்
பொற்கூட்டிற் பூவையை வாங்கி யதனோடுஞ்
சொற்கோட்டிக் கொண்டிருந்த வேல்வைக்க—ணற்கோட்டு
வெள்ளி விலங்கன்மேல் வீற்றிருந்த ஞாயிறுபோ
லொள்ளிய மால்விடையை மேல்கொண்டு—தெள்ளியநீர்
தாழுஞ் சடையான் சடாமகுடந் தோன்றுதலும
வாழுமே மம்மர் மனத்தளாய்ச்—சூழொளியான்
றார்நோக்குந் தன்றாரு நோக்கு மவனுடைய
வேர்நோக்குந் தன்ன தெழினோக்கும்—பேரருளான்
றோணோக்குந் தன்றோளு நோக்கு மவன்மார்பி
னீணோக்கம் வைத்து நெடிதுயிர்த்து—நாணோக்கா
துள்ள முருக வொழியாத வேட்கையாம்
வெள்ளத் திடையழுந்தி வெய்துயிர்த்தா—ளொள்ளிய

மடந்தை.

தீந்தமிழின் றெய்வ வடிவா டிருந்தியசீர்
வாய்ந்த மடந்தைப் பிராயத்தா—ளேய்ந்தசி
ரீசன் சிலையு மெழில்வான் பவளமுஞ்
சேய்வலங்கை வேலுந் திரண்முத்தும்—பாசிலைய
வஞ்சியும் வேயும் வளர்தா மரைமொட்டு
மஞ்சில்வரு மாமதிபோன் மண்டலமு—மெஞ்சாப்
புருவமுஞ் செவ்வாயுங் கண்ணு மெயிறு
முருவ நுசுப்புமென் றோளு—மருவினிய
கொங்கையும் வாண்முகமு மாக்கொண்டாள் கோலஞ்சேர்
பங்கயப் போதனைய சேவடியா—ளொண்கேழல்
வாழைத்தண் டன்ன குறங்கினாள் வாய்ந்தசீ
ராழித்தேர்த் தட்டனைய வல்குலா—ளூழித்
திருமதிய மற்றொன்றா மென்று முகத்தை
யுருவுடைய நாண்மீன்சூழ்ந் தாற்போற்—பெருகொளிய
முத்தார கண்டத் தணிந்தா ளணிகலங்கண்
மொய்த்தார வார மிகப்பெருகி—வித்தகத்தாற்
கள்ளுங் கடாமுங் கலவையுங் கைபோந்திட்
டுள்ளும் புறமுஞ் செறிவமைத்துத்—தெள்ளொளிய
காளிங்கஞ் சோதி கிடப்பத் தொடுத்தமைத்த
தாளிம்பத் தாம நுதல்சேர்த்தித்—தோளெங்குந்
தண்ணறுஞ் சந்தனங்கொண் டப்பிச் சதிர்சாந்தை
வண்ணம் பெறமிசையே மட்டித்தாங்—கொண்ணுதலா
டன்னமர் தோழியர்கள் சூழத் தவிசேறிப்
பின்னுமோர் காமரம் யாழமைத்து—மன்னு
விடவண்ணக் கண்டத்து வேதியன்மே லிட்ட
மடல்வண்ணம் பாடும் பொழுதீண்—டடல்வல்ல
வேல்வல்லான் வில்வல்லான் மெல்லியலார்க் கெஞ்ஞான்று
மால்வல்லா னூர்கின்ற மால்விடையின்—கோல
மணியோசை கேட்டாங்கு நோக்குவாள் சால
வணிபெறு தோளானைக் கண்டாங்—கணியார்ந்த
கோட்டி யொழிய வெழுந்து குழைமுகத்தைக்
கோட்டி நுதல்சிவப்ப வாய்துலக்கி—நாட்டார்க
ளெல்லாருங் கண்டா ரெனக்கடவு ளிங்கரிய
நல்லாய் படுமேற் படுமென்று—மெல்லவே
செல்ல லுறுஞ்சரணங் கம்பிக்குந் தன்னுறுநோய்
சொல்ல லுறுஞ் சொல்லி முடைசெறிக்கு—நல்லாகங்
காண லுறுங்கண்க ணீர்மல்குங் காண்பார்முன்
னாண லுறுநெஞ்ச மொட்டாது—பூணாகம்
புல்ல லுறு மன்னல்கை வாராதென் றிவ்வகையே
யல்ல லுறுமழுந்து மாழ்துயரான்—மெல்லியலா
டன்னுருவம் பூங்கொன்றைத் தார்கொள்ளத் தான்கொன்றைப்
பொன்னுருவங் கொண்டு புலம்புற்றாள்—பின்னொருத்தி

அரிவை.

செங்கேழற் றாமரைபோற் சீறடியா மாதிலா
வங்கே ழரிவைப் பிராயத்தா—ளொண்கேழற்
றிங்களுந் தாரகையும் வில்லுஞ் செழும்புயலுந்
தங்கொளிசேர் செவ்வாயு முண்மையாற்—பொங்கொளிசேர்
மீனார்வான் காட்டு முகவொளியாண் மெய்ம்மையே
தன்னாவா ரில்லாத் தகைமையா—ளெந்நாளு
மில்லாளை யெல்லாரு மெள்குவார் செல்வனை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பென்னுஞ்—சொல்லாலே
யல்குற்கு மேகலையைச் சூழ்ந்தா ளணிமுலைமேன்
மல்கிய சாந்தொடு பூண்புனைந்து—நல்கூ
ரிடையிடையே யுள்ளுருகக் கண்டா ளெழிலார்
நடைபெடை யன்னத்தை வென்றா—ளடியிணைமேற்
பாடகங் கொண்டு பரிசமைத்தாள் பன்மணிசேர்
சூடக முன்கை தொடர்வித்தாள்—கேடில்சீர்ப்
பொன்னரி மாலை தலைக்கணிந்து பூண்கொண்டு
மன்னுங் கழுத்தை மகிழ்வித்தாள்—பொன்னரு
ளின்னிசை வீணையை வாங்கி யிமையவர்த
மண்ணன்மேற் றானிட்ட வாசையான்—முன்னமே
பாட றொடங்கும் பொழுதிற் பரஞ்சோதி
கேடிலா மால்விடைமேற் றோன்றுதலுங்—கூடிய
வின்னிசையு மிப்பிறப்பும் பேறு மிருந்தமிழு
மன்னிய வீணையையுங் கைவிட்டுப்—பொன்னனையீ
ரின்றன்றே காண்ப தெழினலங் கொள்ளேனே
னன்றன்றே பெண்மை நமக்கென்று—சென்றவன்ற
னொண்களப மாடு மொளிவாண் முகத்திரண்டு
கண்களப மாடுவபோற் கட்டுரைத்து—மொண்கேழற்
கூந்த லவிழ்க்கு முடிக்குங் கலைதிருத்துஞ்
சாந்தந் திமிரு முலையார்க்கும்—பூந்துகிலைச்
சூழு மவிழ்க்குந் தொழுமழுஞ் சோர்துயருற்
றாழு மழுந்து மயர்வுயிர்க்குஞ்—சூழொளிய
வங்கை வளைதொழுது காத்தாள் கலைசாவா
ணங்கை யிவளு நலந்தோற்றா—ளங்கொருத்தி

தெரிவை.

யாரா வமுத மவயவம் பெற்றனைய
சீரார் தெரிவைப் பிராயத்தா—ளோரா
மருளோசை யின்மழலை வாய்ச்சொலா லென்று
மிருடீர் பு[illegible]யே யொப்பா—ளருளாலே
வெப்ப மிளையவர்கட் காக்குதலா லுச்சிபோ
டொப்பமையக் கொள்ளு முருவத்தாள்—வெப்பந்தீர்ந்
தந்தளிர்போற் சேவடிய மங்கையுஞ் செம்மையா
லந்தியான் காட்டு மழகினா—ளந்தமில்

சீரார் முகமதிய மாதலாற் சேயிழையா
ளோரா திரவி னெழில்கொண்டாள்—சீராருங்
கண்ணார் பயோதரமு நுண்ணிடையு முண்மையாற்
றண்ணிளங் காரின் சவிகொண்டாள்—வண்ணஞ்சேர்
மாந்தளிர் மேனி முருக்கிதழ்வா யாதலால்
வாய்ந்த விளவேனில வண்மையாண்—மாந்த
ரறிவுடையீர் நின்மின்க ளல்லார்போ மென்று
பறையறைவ போலுஞ் சிலம்பு—முறைமையார்
சீரார் திருந்தடிமேற் சேர்த்திரு டேரல்கு
லோரா தகல லுறுதென்று—சீராலே
யந்துகிலு மேகலையுஞ் சூழ்ந்தா ளணிமுலைகண்
மைந்தர் மனங்கவரு மென்பதனுன்—முந்துறவே
பூங்கச்சி னாலடையப் பூட்டிநீஇப் பொற்றொடியாற்
கசும்பொத்த தோளிணையைக் காப்பேவி—வாய்ந்தசீர்
நற்கழுத்தை நல்லாரத் தான்மறைத்துக் காதுக்கு
விற்பகருங் குண்டலங்கண் மேவுவித்து—மைப்பகருங்
காவியங் கண்ணைக் கதந்தணிப்பாள் போலத்தன்
றூவிய வஞ்சனத்தை முன்னூட்டி—யாவரையு
மாகுல மாக்கு மழகினு ளன்னமுங்
கோகிலமும் போலுங் குணத்தினு—ளாகிப்
பலகருகிக் கட்டிக் கரியவாய்க் கோடி
யலர்சுமந்து கூழைய வாகிக்—கலைகரந்
துள்யாது மின்றிப் புறங்கமழ்ந்து கீழ்தாழ்ந்து
கள்ளாவி காறுங் கருங்குழலா—டெள்ளொளிய
செங்கழுநீர்ப் பட்டுடுத்துச் செங்குங் குமமெழுதி
யங்கழுநீர்த் தாம நுதல்சேர்த்திப்—பொங்கெழிலார்
பொற்கவற்றின் வெள்ளிப் பலகை மணிச்சூது
நற்கமைய நாட்டிப் பொரும்பொழுதில்—விற்பகிருந்
தோளா ணிலைபேறு தோற்றங்கே டாய்நின்ற
தாளான் சடாமகுடந் தோன்றுதலுங்—கேளாய
நாணார் நடக்க நலத்தார்க் கிடையில்லை
யேணு மொழிக வெழிலொழிக—பேணுங்
குலத்தா ரகன்றிடுக குற்றத்தார் வம்மி
னலத்தீர் நினைமினீ ரென்று—சொலற்கரிய
தேவாதி தேவன் சிவனுயிற் றேன்கொன்றைப்
பூவா ரலங்க லருளாது—போவானேற்
கண்டா லறிவ னெனச்சொல்லிச் கைசோர்ந்து
வண்டார்பூங் கோதை வளந்தோற்று—ளொண்டாய

பேரிளம்பெண்.

பெண்ணரசாய்த் தோன்றிய பேரிளம் பெண்மையாள்
பண்ணமரு மின்சொற் பணிமொழியாள்—மண்ணின்மேற்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுளவென்று—பண்டையோர்

கட்டுணையை மேம்படுத்தாள் கண்ணாடி மண்டலம்போல்
விட்டிலங்கு நல்லுகிர்சேர் மெல்விரலாள்—கட்டரவ
மஞ்சப் பரந்தகன்ற வல்குலா ளாய்நலத்த
வஞ்சிக் கொடிநுடங்கு நுண்ணிடையா—ளெஞ்சாத
பொற்செப் பிரண்டு முகடு மணியழுத்தி
வைத்தன போல வளர்ந்தேந்தி—யொத்துச்
சுணங்குந் திதலையுஞ் சூழ்போந்து கண்டார்க்
கணங்கு மமுதமுமாய்த் தோன்றி—யிணங்கொத்த
கொங்கையாள் கோலங்கட் கெல்லாமோர் கோலமா
நங்கையா ளாகிளவேய்த் தோளினா—ளங்கையாற்
காந்தட் குலம்பழித்தாள் காமவேள் காதலாள்
சாந்த மிலங்கு மகலத்தாள்—வாய்ந்துடனே
யேய்ந்து குவிந்து திரண்டு மறிந்திருபாற்
றேய்ந்து துடித்த செழும்பவளங்—காய்ந்திலங்கி
முத்தமுந் தேனும் பொதிந்து முனிவரையுஞ்
சித்தந் திறைகொள்ளுஞ் செவ்வாயா—ளொத்து
வரிகிடந் தஞ்சன மாடி மணிக
ளுருவ நடுவுடைய வாகிப்—பெருகிய
தண்ணங் கயலுஞ் சலஞ்சலமுந் தோன்றுதலால்
வண்ணங் கடலனைய வாட்கண்ணா—ளொண்ணிறத்த
குண்டலஞ்சேர் காதினாள் கோலக் குளிர்மதிய
மண்டலமே போலு மதிமுகத்தாள்—வண்டலம்ப
யோசனை நாறு குழலா ளொளிநுதன்மேல்
வாசிகை கொண்டு வடிவமைத்தாள்—மாசில்சீர்ப்
பாதாதி கேசம் பழிப்பிலாள் பாங்கமைந்த
சிதாரி கொண்டுதன் மெய்புகைத்தாள்—மாதார்ந்த
பண்கவருஞ் சொல்லார்பல் லாண்டேத்தப் பாயொளிசேர்
வெண்கவரி வெள்ளத் திடையிருந்—தொண்கேழற்
கண்ணவனை யல்லது காணா செவியவன
தெண்ணருஞ்சீ ரல்ல திசைகொள்ளா—வண்ணல்
கழலடி யல்லது கைதொழா வஃதான்
றழலங்கைக் கொண்டான்மாட் டன்பென்—றெழிலுடைய
வெண்பா விரித்துரைக்கும் போழ்தில் விளங்கொளிசேர்
கண்பாவு நெற்றிக் கறைக்கண்டன்—விண்பா
லரியரணஞ் செற்றுங் கலைபுனலும் பாம்பும்
புரிசடைமேல் வைத்த புராண—னெரியிரவி
லாடு மிறைவ னமரர்குழாந் தற்சூழ
மாட மறுகில் வரக்கண்டு—சேடில்சீர்
வண்ணச் சிலம்படி மாதரார் தாமுண்ட
கண்ணெச்சி லெம்மையே யூட்டுவா—ளண்ணலே
வந்தாய் வளைகவர்ந்தாய் மாலு மருந்துயருந்
தந்தா யிதுவோ தகவென்று—நொந்தான்போற்

கட்டுரைத்துக் கைசோர்ந் தகமுருகி மெய்வெருத்து
மட்டிவரும் பூங்கோதை மால்கொண்டாள் கொட்டிமைசேர்
பண்ணாரு மின்சொற் பணைப்பெருந்தோட் செந்துவர்வாய்ப்
பெண்ணார வாரம் பெரிதன்றே—விண்ணோங்கி
மஞ்சடையு நீள்குடுமி வாணிலா வீற்றிருந்த
செஞ்சடையான் போந்த தெருவு. கண்ணிகள். க௬௭.

---

வெண்ணீர்மை காமின் பெருந்தோ ளிணைகாமி
னுண்ணீர்மை மேகலையு முள்படுமின்—றெண்ணீரக்
காரோறு பொன்றையந்தார்க் காபாலி சட்டங்க
ளூரோறு போந்த துலா.

ஆதியுலா என்கின்ற
திருக்கைலாச ஞானவுலா முற்றுப்பெற்றது.

---

சேரர்காவலர்பரிவுடன்கேட்பித்ததிருவுலாப்புறங்கொண்டு
நாரிபாகருநலமிகுதிருவருணயப்புடனருள்செய்வா
ரூரனாகியவாலாலசுந்தரனுடனமர்ந்திருவிருஞ்
சாரசங்கணநாதராந்தலைமையிற்றங்குமென்றருள்செய்தார்.

(இ-ள்.) நாரிபாகரும் = உமாதேவியை ஒருபாகத்திலுடைய பெருமானும்; சேரர்காவலர்பரிவுடன்கேட்பித்த = சேரமான்பெருமாணாயனார் அன்போடு திருச்செவிசார்வித்த; திருவுலாப்புறங்கொண்டு = திருவுலாவைத்திருச்செவியேற்றருளி; நயப்புடனலமிகுதிருவருளருள்செய்வார் = வியப்போடு நன்மைமிக்க திருவருள்பாலிப்பாராகி, ஊரனாகியவாலாலசுந்தரனுடனமர்ந்திருவிரும் = நீ ஆரூரனாகிய ஆலாலசுந்தரனோடுகூடி நீவிர் இருவிரும்; சாரசங்கணநாதராந்தலைமையில் = ஒருங்குராமுடையகணத்தலைவராயுறையும் மேன்மையால்; தங்குமென்றருள்செய்தார் = நிலைபெறுவீராகவென்று அநுக்கிரகித்தார் எ-று. (௪௮)

அன்னதன்மையிலிருவருமபணிந்தெழுந்தருடலைமேற்கொண்டு
மன்னுமவன்றொண்டராலாலசுந்தரராகித்தாம்வழுவாத
முன்னைநல்வினைத்தொழிற்றலைநின்றனர்முதற்சேரர்பெருமானு
நன்மைசேர்கணநாதராயவர்செயுநயப்புறுதொழில்பூண்டார்.

(இ-ள்.) அன்னதன்மையிலிருவரும்பணிந்தெழுந்தருடலைமேற்கொண்டு = அக்கட்டளையின்படியே அவ்விருவரும் வணங்கியெழுந்து அத்திருவருளைச்சிரமேற்கொண்டு; மன்னும்வன்றொண்டராலாலசுந்தரராகி = நிலைபெற்ற வன்றொண்டப்பெருமான் ஆலாலசுந்தரராகி; தாம்வழுவாதமுன்னைநல்வினைத்தொழிற்றலைநின்றனர் = பூர்வம் தாம் தவறாதுபூண்ட நற்செயலாகிய திருத்தொண்டிலே நிலைபெற்றனர்; முதற்சேரர்பெருமானும் = தலைமைபெற்ற சேரமான்பெருமாணாயனாரும்; நன்மைசேர்கணநாதராய் = சால்பமைந்தகணத்தலைவராகி; அவர்செயுநயப்புறுதொழில்பூண்டார் = அவரநுட்டிக்கும் வியப்பமைந்ததிருத்தொண்டைமேற்கொண்டார். எ-று.

வன்றொண்டர் சேரர்பெருமானென்னும் எழுவாய்கட்கு உரிய பணிந்தெழுந்து அருடலைமேற்கொண்டு என்னும் எச்சங்களும் முறையே நின்றனர் பூண்டாரென்னும் முற்றைக்கொண்டன. (௪௯)

தலத்துவந்துமுன்னுதயஞ்செய்பரவைபார்சங்கிலியாரென்னு
நலத்தின்மிக்கவர்வல்வினைத்தொடக்கறநாயகியருளாலே

